

# கலைமகள்

## ஆங்கிரஸ ௵ தை௴ முதல்
## ஸ்ரீமுக ௵ ஆனி௴ வரை

---

### தொகுதி ௩

(பகுதி ௧௩—௧[illegible])




---



கௌரவப் பத்திரிகாசிரியர்கள்

பி. என். அப்புஸ்வாமி ஐயர்.
எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை.
மு. இராகவையங்கார்.
கே. வி. கிருஷ்ணஸ்வாமி ஐயர்.
டி. கே. சிதம்பரநாத முதலியார்.
தி. சிவராமசேதுப்பிள்ளை.
க. அ. நீலகண்ட சாஸ்திரி.
எம். லக்ஷ்மி அம்மாள்.
எஸ். வையாபுரிப் பிள்ளை.
டி. எஸ். இராமச்சந்திர ஐயர் (நிர்வாகப் பத்திரிகாசிரியர்.)

1933

வருஷ சந்தா

உள்நாடு ரூ. 4. வெளி நாடு ரூ. 6.

# மூன்றாந் தொகுதியின் பொருளடக்கம்

அநுபந்தம்:



இலக்கியம்:



உபாத்தியாயர் பகுதி:

கதைகள்:



கவி:

குறிப்புந்திரட்டும்:



சரித்திரம்:

## கட்டுரை எழுதியவர்கள்



அகலிகை சாப விமோசனம்

க. ராமமோஹன் சாஸ்திரி




# அகலிகை சாப விமோசனம்

டி. எஸ். இராமச்சந்திர ஐயர்

தவத்திற் சிறந்த விசுவாமித்திர முனிவர், தசரதன் தனயர்களாகிய இராமலக்ஷ்மணர்களால் தாமியற்றும் வேள்விக்கிடையூறியற்றும் அரக்கர்களை அழித்து யாகத்தை முடித்த பிறகு அக்குமரர்களுடன் மிதிலையில் ஜனக மகாராஜன் செய்யும் வேள்வியைக் காணவேண்டி அந்நகரத்தின் உபவனத்தை அடைந்தார். அங்கிருந்த பழமையான ஆசிரமம் சூன்யமாயிருப்பதைக் கண்ணுற்று, "இது யாருடையது? ஏன் பாழாயிருக்கிறது? என்பதைக் கேட்க விரும்புகிறேன்" என்று இராமன் சொல்லவும் விசுவாமித்திரர் கூறுகிறார்:

"மகாத்மாவாகிய கௌதமர் தமது பத்தினியாகிய அகலிகையுடன் இந்த ஆசிரமத்தில் அநேக வருஷங்கள் தவமியற்றிவரும் நாளில் தேவேந்திரன் முனிவரில்லாத சமயத்தில் அவருருவு கொண்டு அகலிகையைச் சேரவும் அவளும் தேவராஜனென்று எண்ணி உற்சாகத்தோடு இணங்கினள். முனியும் சந்தேகங்கொண்டு விரைவில் திரும்பி வந்து ஆசிரமத்தினின்று வெளியேறும் இந்திரனைக் கண்டு அவனை விபலனாகக் கடவா யென்று சபித்து விட்டுத் தம் மனைவியை நோக்கி, 'நீ அநேகமாயிரம் வருஷ காலம் ஆகாரமின்றிக் காற்றைப் புசித்துத் தாபத்தோடு தரையில் கிடந்து ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமல் இருக்கக்கடவாய்; தசரத மகாராஜாவின் குமாரனான இராமன் இவ்வனத்தை யடையும்பொழுது அவனால் நீ பரிசுத்தையாய் அவனைப் பூஜித்து உன் நிஜ உருவத்தோடு என்னை யடைவாய்' எனக் கடுஞ்சாபமிட்டனர். ஆகையினால் அம்மகரிஷியின் ஆசிரமத்தில் புகுந்து அழகிற் சிறந்த அகலிகையைச் சாபத்தினின்றும் விடுவிப்பாய்."

இம்மொழிகளைக் கேட்ட இராம லக்ஷ்மணர்கள் முனிவருடன் ஆசிரமத்துள் சென்று யாவர் கண்ணுக்கும் புலப்படாதவளும் மகாதபஸ்வினியுமாகிய அகலிகையைக் கண்ணுற்று அவள் பாதங்களில் வணங்கினர்கள். அகலிகையும் தனது பர்த்தாவாகிய மகா முனியின் வசனத்தை நினைந்து வந்தவன்தான் இராமனெனக் கருதி அவனடிகளைப் பற்றி வணங்கினள்.*

வால்மீகி இராமாயணத்திற் கூறிய வரலாறு இவ்வாறுயிருக்க, கம்பர் பத்ம புராணத்தில் இவ்வுபாக்கியானம் கூறியிருக்கும் முறையைத் தழுவிப் பின் வருமாறு கூறியிருக்கிறார் :

மிதிலையின் வெளிப்புறத்திற்கு விசுவாமித்திரரும் குமரர்களிருவரும் வந்தவுடன் அங்கு,

"மனையின் மாட்சியை யழித்திழி மாதவப் பன்னி
கனையு மேட்டுயர் கருங்கலோர் வெள்ளிடைக் கண்டார்."

கண்ட அக் கல்மீது இராமனது பாததூளி படவும், அகலிகையும் கௌதமருடைய சாபத்தின்படி தன்னுடைய பழைய உருவோடு நின்றனள். அவ்வாறு நின்றவளை நோக்கி இராமன் வியப்படையவும் விசுவாமித்திரர், "இவள்தான் தீவினை நயந்து செய்த தேவர் கோன் தனக்குச் செங்கண் ஆயிரமளித் தோனுகிய கௌதமரின் பத்தினி அகலிகை யாகும்" என்றார். அது கேட்ட இராமன் "என்ன ஆச்சரியம்! அன்னையே யனையாட்கிவ்வாறடுத்த தன்மை அருளவேண்டும்" எனக் கேட்கவும், முன்னர்த் தேவேந்திரன் செய்த பிழையைப் பின் வருமாறு கூறினர் :

"தய்யலா ணயன வேலும் மன்மதன் சரமும் பாய
உய்யலா முறுதி நாடி யுழல்பவ னொருநா ளுற்ற
மய்யலா லறிவு நீங்கி மாமுனிக் கற்றஞ் செய்து
பொய்யிலா வுள்ளத் தான்ற னுருவமேற் கொண்டு புக்கான்.

புக்கவ ளோடுங் காமப் புதுமண மதுவின் தேறல்
ஒக்கவுண் டிருத்த லோடு முணர்ந்தன ளுணர்ந்த பின்னும்
தக்கதன் றென்ன வோராள் தாழ்ந்தன ளிருப்பத் தாழா
முக்கணு னனைய வாற்றன் முனிவனு முடுகி வந்தான்."

இந்திரன் அகலிகையின் பேரழகி லீடுபட்டு அறிவழிந்து, மாமுனி அவளை விட்டு நீங்கும்படி உபாயஞ்செய்து அம்முனியுருவு கொண்டு அவளைச் சேரவும் அவன் இந்திரனென்பதை யுணர்ந்தும் அவள் தக்கதன்று எனக் கருதாது இணங்கினளென இங்குக் கூறப்

* திலக வியாக்கியானத்திற் கண்ட பொருள் இது.

பட்டிருக்கிறது. வால்மீகி, அகலிகை தேவராஜனையடைந்த உற்சாகத்தோடிருந்தாளென்று கூறியது, அகலிகையின் கற்பிற்குக் குறைவு என நினைந்து கம்பர் இவ்வாறு கூறினர் போலும். அச்சமயத்தில் முக்கண்ணனனைய ஆற்றலுடைய கௌதம முனிவர் கோபத்தோடு வந்து இந்திரனைக் கடுமையாய்ச் சபித்த பின்னர், 'மெல்லியலாளை நோக்கி விலைமகளனைய நீயும் கல்லிய லாதி யென்றான்.' அவளும் 'கருங்கலாய் மருங்கு வீழ்ந்தாள்'.

அகலிகை உடனே கௌதமரை நோக்கி இச்சாபத்திற்கு முடிவை அருளல்வேண்டுமென்று பிரார்த்திக்கவும் அவர் 'தழைத்து வண் டிமிருந் தண்தார்த் தசரத ராம னென்பான், கழற்றுகள் கதுவ விந்தக் கல்லுருத் தவிர்தி யென்றார்.'

பூர்வத்தில் நடந்த விருத்தாந்தத்தை இவ்வாறு கூறிய விசுவாமித்திரர் இராமனைப் புகழ்ந்து பின் வருமாறு சொல்லுகிறார்:

> "இவ்வண்ண நிகழ்ந்த வண்ண மினியிந்த வுலகுக் கெல்லாம்
> உய்வண்ண மன்றி மற்றோர் துயர்வண்ண முறுவ துண்டோ
> மைவண்ணத் தரக்கி போரில் மழைவண்ணத் தண்ணலேயுன்
> கைவண்ண மங்குக் கண்டேன் கால்வண்ண மிங்குக் கண்டேன்."

அதாவது: "இவ்வாறு நிகழ்ந்ததைக் கருதின், ஏ இராமா, இனி இந்த உலகத்திற் கெல்லாம் துயரமு முண்டோ? உன்னுடைய கையின் பெருமையைத் தாடகையின் போரில் கண்டேன்; உன் காலின் தன்மையை இங்கு அகலிகையினிடத்துக் கண்டேன். உன் கை வலியால் அகத்தியர் சாபத்தால் அரக்கி யுருவடைந்த தாடகையைச் சாபத்தினின்று விடுவித்து விண்ணுலகேற்றினாய். உன் கால் வலியால் கௌதமர் சாபத்தால் கல்லுருவாகிய அகலிகையைப் பெண்ணுருவாக்கினாய். ஆகவே உலகிலுள்ளவர் பாபத்தைத் தீர்த்துத் துயர்களைதற்குத் தோன்றியவன் நீயெனவே கருதுகின்றேன்."

இங்ஙன முரைத்த விசுவாமித்திருடைய வசனங்களைக் கேட்டு இராமன் அகலிகையை அடி வணங்கிக் கௌதமரிடம் ஏகும்படி சொன்னான். பிறகு விசுவாமித்திரர் இராமனோடும் தம்பியுடனும் கௌதமரிடத்திற் சென்று நெஞ்சினாற் பிழைப்பிலளாகிய அகலிகையைச் சேர்த்துக் கொள்ளும்படி வேண்ட அவர் அதற்கிசைந்தார்.




## விக்கிரமாதித்தன் கதை

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை

விக்கிரமாதித்தன்கதை யென்னும் பெயர் கொண்ட ஒரு கதை நெடுநாளாக வழங்கி வருகின்றது. அதுவே முப்பத்திரண்டு பதுமைகதை யென்னும் பெயராலும் வழங்கும். கதைகளில் அதிக பேதமில்லையாயினும் இரண்டும் வேறு வேறு புத்தகங்கள். முப்பத்திரண்டுபதுமைகதையே ஆதியில் வழங்கிய புத்தகமென்று தெரிகிறது. விக்கிரமாதித்தன்கதை இராமநாதபுரம் இரவுண் ஷாப்புக் கடை ப. வெ. முகம்மது இபுறுகீம் சாயபு அவர்கள் வசனரூபமாகச் செய்தது. இப்புத்தகத்தின் முதற் பதிப்பாகிய 1871-ம் வருஷப் பதிப்பின் தலையிதழில் ஆக்கியோர் இதனைப் பற்பல ஏட்டுப்பிரதிகளைக் கொண்டாராய்ந்து வசன ரூபமாகச் செய்தன ரென்றும், இதைக் களத்தூர்த் தமிழ்ப் புலவர் வேதகிரி முதலியார் குமாரர் ஆறுமுக முதலியார் பரிசோதித்தனரென்றும், திருநெல் வேலிப் பேட்டையிலிருக்கும் சேப்பு கா. காசீம்முகியித்தீன் ராவுத் தர், ஷ ஊரிலிருக்கும் மேத்தர் முகியித்தீன் ராவுத்தர் இவர்கள் முயற்சியால் இது புங்கத்தூர் ம. சபாபதி முதலியாரது கல்வி விளக்க அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டதென்றும், தமிழ்ப் பிரஜோத்பத்தி௵ சித்திரை௴ 1௳ வெளியிட்டதென்றும் விவரங்கள் காணப்படுகின்றன. இக்காலத்துப் பதிப்புக்களில் ஆக்கியோன் பெயரை யன்றி வேறு விவரங்கள் காணுமாறில்லை.

இனி, முகம்மது இபுறுகீம் சாகிபு தம் புத்தகத்திற்குப் பீடிகை யாக 'இந்நூலை இயற்றி அச்சிட்டவன் கருத்து' என்னும் தலைப்பின் கீழ்ச் சில விஷயங்கள் கூறியுள்ளார். அவற்றின் சாரம் வருமாறு:

விக்கிரமாதித்தமன்னனுக்கு இந்திரனால் அளிக்கப்பட்ட சிம்மா தனத்தின் முப்பத்திரண்டு பதுமைகளும் போஜராஜனுக்குக் கூறிய அற்புத சரித்திரங்களை முனிவர்கள் ஸம்ஸ்கிருதத்தில் எழுதி வைத் தனர். அவற்றைத் தமிழில் மொழிபெயர்த்தோர் தம் மனம் போன வாறு வாக்கியார்த்தங்களைக் கெடுத்துக் கதைகளை மாற்றினர்.

அவ்வாறன்றி வாக்கியார்த்தங்களை விடாது சொற்பொருளழகுற அமைத்ததாகும் இது. 'இதற்கு முன்னம் அச்சிட்டிருக்கிற முப்பத்திரண்டு பதுமைகதையென்று வழங்கிவருகிற சரித்திரத்தில் வேதாளக்கதை 24-ம் அதிற் பதுமை கதைகளும் விக்கிரமாதித்தன் பட்டி என்பவர்களின் சங்கதியில்லாமல் ஒருவாறாக முற்காலத்துச் சரித்திரத்தை நீக்கி இக்காலத்துச் சரித்திரத்தையும் போக்கி அச்சிட்டிருக்கிறார்களல்லவா ? அன்றியும் போஜராஜன் சரித்திரம் இங்கு ஒழுங்காக எழுதப்பட்டுளது. அரபி, இந்துஸ்தான், இங்கிலீஷ், தெலுங்கு, தமிழ், பாரிசு இப்பாஷைகளிலும் இப்பேர்ப்பட்ட நேர்த்தியான செவிக்கின்பமுள்ள சரித்திரங்களை நாம் கண்டறியமாட்டோம்.'

இப்புத்தகம் டெமி 8 பக்க அளவில் 'பைகா' எழுத்தில் 410 பக்கங்கள் கொண்டது. இக்காலத்துப் பதிப்புக்கள் அதே அளவில் 'இங்கிலீஷ் பாடி' யென்னும் பெரிய எழுத்தில் 600-க்கு மேலுள்ள பக்கங்கள் கொண்டன.

விக்கிரமாதித்தன் கதையை ஆக்கியோர் முப்பத்திரண்டு பதுமை கதையைப்பற்றிக் கூறுவது விளங்கவில்லை. இதன் 1928-ம் வருஷப் பதிப்பே அகப்பட்டது. இதற்கு முன்னர்த் தோன்றிய பதிப்புக்களாவது முதற் பதிப்பாவது அகப்படவில்லையாயினும் இதற்கும் அவற்றிற்கும் அதிக பேதமிருக்கக்கூடுமென்று நினைத்தற்கில்லை. இப்பதிப்பிலுள்ள வேதாளக் கதைகளுக்கும் விக்கிரமாதித்தன் கதையிலுள்ள வேதாளக் கதைகளுக்கும் அதிக பேதங் காணப்படவில்லை.

இன்னும் அவர் முப்பத்திரண்டு பதுமை கதையை யாக்கியோர் ஸம்ஸ்கிருத கதைகளைப் புரட்டினர் என்றும், தாம் அவற்றை உள்ளபடியே மொழிபெயர்த்ததாகவும் கூறினர். ஸம்ஸ்கிருத கதைகளை நோக்கின் இவையிரண்டும் அவற்றோடு பெயரளவிலேயே சம்பந்தமுடையன. ஸம்ஸ்கிருதத்திலுள்ள விக்கிரமார்க்க மஹாராஜ சரித்திரம் கிரௌன் 16 பக்க அளவில் 150 பக்கத்துக்கு மேற்படாத சிறிய நூல். அதில் முப்பத்திரண்டு பதுமைகள் சொல்லிய கதைகள் மாத்திரமே காணப்படுவன ; வேதாளக் கதைகள் காணப்படவில்லை. அவற்றிற்கும் தமிழ்க் கதைகளுக்கும் பேதம் பெரிதுமுண்மை வேறு விஷயம். தமிழ் நாட்டுப் பதிப்புக்களில் விக்கிரமார்க்க சரித்திரம் என்று வழங்கும் ஸம்ஸ்கிருத நூல் கல்கத்தாவில் ஜீவாநந்தவித்யாஸாகர பட்டாசாரியரால் 'த்வாத்ரிம்சத் புத்தலிகா' என்னும் பெயரால் கி. பி. 1881-ல் வெளியிடப்பட்டது. ஸம்ஸ்கிருத விக்ரம சரிதத்தை அங்கில மொழிபெயர்ப்போடும்,

தென்னாட்டுப் பாடம், செய்யுட் பாடம், சுருக்கப் பாடம், ஜைன பாடம் என்னும் நான்கு பாடங்களோடும் ஆராய்ச்சிக் குறிப்புக்களோடும் எட்கெர்ட்டன் பண்டிதர் 1926-ல் வெளியிட்டார்.

இனி, வேதாளக் கதைகள் தெலுங்கு மொழியில் தனிப் புத்தகமாக வேதம் வேங்கடராய சாஸ்திரிகளால் மொழிபெயர்க்கப்பட்டுப் பிரசுரமாயிற்று. அவரே பின்னர் 'கதாஸரித்ஸாகர' மென்னும் விரிந்த ஸம்ஸ்கிருத நூலை மொழிபெயர்க்குங்கால் அக் கதை வரலாற்றை மாற்றி யெழுதினர். இந்த ஸம்ஸ்கிருத நூலில் விக்கிரமாதித்தன் பிரஸ்தாபமே யில்லை. த்ரிவிக்ரமஸேநனென்னும் மன்னனையும் வேதாளத்தையும் பற்றிய கதைகளென 75-ம் அத்தியாயம் முதல் 98-ம் அத்தியாயம்வரை 24 கதைகள் கூறப்பட்டுள்ளன. 99-ம் அத்தியாயம் கதையை முடிக்கின்றது. இறுதியில் வேதாள பஞ்சவிம்சதி முடிந்ததென்றும் எழுதப்பட்டுளது. த்ரிவிக்ரமஸேநன் கோதாவரி தீரத்திலுள்ள பிரதிஷ்டானமென்னும் நகரத்து வேந்தன். விக்கிரமாதித்தன் உச்சயினிக்கு அரசன். இவன் கதை 120-ம் அத்தியாயமுதல் 124-ம் அத்தியாயம்வரை ஐந்து அத்தியாயங்களில் உரைக்கப்பட்டது. விக்கிரமாதித்தனுக்கு விஷமசீலனென்றும் ஒரு பெயர் வழங்கிற்று. 38-ம் அத்தியாயத்தில் பாடலிபுத்திரத்து மன்னன் விக்கிரமாதித்தனைப்பற்றி ஒரு கதை கூறப்பட்டது. அவன் மதனமாலை யென்னும் வேசையை வசமாக்கித் தன் பகைவனை வென்றான். அவளை வசமாக்குதற்கு ஏதுவாயிருந்தது குபேரனிடத்தில் அவன் பெற்றிருந்த வரம். பிரபஞ்சபுத்தி யென்னும் துறவி ஒரு வருஷ காலமாக நாடோறும் அரசனை வந்து கண்டு ஒரு பெட்டியை அவன் கையிற் கொடுத்துப் போனான். ஒருநாள் அவன் கொடுத்த பெட்டி கைதவறிக் கீழேவிழ அதிலிருந்த மணி தீச்சுடர்போல ஒளிவிட்டுப் புறப்பட்டது. அரசன் அதிசயித்து, பண்டாரத்தினின்றும் பெட்டிகளனைத்தையும் வரவழைத்து அவையனைத்திலும் மணிகளிருக்கக் கண்டான். பிரபஞ்சபுத்தி தான் செய்யும் மந்திரக்கிரியைக்கு வருமாறு அரசனை வேண்ட, அரசனும் இணங்கினான். பின் கனவில் ஹரியால் எச்சரிக்கப்பட்டு, பிரபஞ்சபுத்தியாற் கொல்லப்பட வேண்டியவன் அவனைக் கொன்று குபேரனிடத்தில் வானிற் பறக்கும் வரமும் வேண்டும்போது ஒரு வரங் கேட்கக் கட்டளையும் பெற்றான். இவ் வரத்தால் கைகால்களைத் தறிக்கினும் மேலும் மேலும் வளரும் ஐந்து பொற் பிரதிமைகளைப் பெற்று அவற்றை ஓரறையில் வைத்து மறைந்தான். மதனமாலை அவற்றை வெறுத்துக் கைகால் தறித்துப் பிராமணர்க்கீய அவை மீண்டும் மீண்டும் முழுப்பிரதிமைகளாயிருக்கக் கண்டாள். பின்

அவன் வந்து மதனமாலையைக் கொண்டே தன் பகைவனைத் தனக்கு வணங்கச் செய்தான்.

காஷ்மீர நாட்டுக் கதைகளிலொன்று விக்கிரமாதித்த மன்னன் புத்திரியைப் பற்றியது. கதைக்குப் பீடிகையாக ஐந்து வாக்கியங்கள் ஒருவனாற் சொல்லப்பட்டன. அவையாவன,

"பணம் பிரயாணத்திற்காம்.
பணமில்லாத பொழுது நண்பனும்.
பணமுள்ள பொழுது பந்துவாம்.
உன்னுடைய மனைவி உன்னோடிருக்கும் வரையே அவளை
நீ மனைவி யென்றழைக்கலாம்.
இரவில் விழித்திருப்பவனே விக்கிரமாதித்த மன்னன்
புத்திரியைப் பெறலாம்."

விக்கிரமாதித்தன் புத்திரி வயிற்றில் ஒரு பாம்பு இருந்ததென்பதும் அது அவளை மணமுடிக்க வந்து அவளருகிற் படுத்துறங்குவோரைக் கொன்று வந்ததென்பதும் கடைசியில் ஒருவன் விழித்திருந்து அதனைக் கொன்று அவளை மனைவியாகப் பெற்றானென்பதும் கதைச் சுருக்கம். இக்கதையை விக்கிரமாதித்தன் கதை வேறொரு பெண்ணை அவன் இவ்விதமாகப் பெற்றான் என்றுரைக்கும். ஒரு விக்கிரமாதித்தன் பராக்கிரமமுடையனா யிருந்தானாயின் அவன் பெயர் வகித்த பிறர்க்கும் அவன் பெருமைகளை யேற்றிக் கூறலும் மற்றையோர் பராக்கிரமங்களை விக்கிரமாதித்தன் என்னும் பெயருடையான்மேல் ஏற்றிக்கூறலும் மாந்தர்க்கியல்பு போலும்.

இனித் தமிழ்க் கதைகள் தமிழ்ப் புலவர்களால் விரிக்கப்பட்டனவென்றே சொல்லவேண்டி யிருக்கிறது. ஸம்ஸ்கிருத கதைகளின் ஒழுங்கு ஒருவாறு முப்பத்திரண்டு பதுமை கதையிற் காணப்படுகிறது. ஆயினும் அதிற் காணும் விஷயங்கள் சிங்காரச் சுவை மலிந்து வாசிப்போர் அருவருக்கத்தக்கவையா யிருக்கின்றன. ஸம்ஸ்கிருதத்தில் உள்ளபடி விக்ரம சரிதத்திற்கும் வேதாள பஞ்ச விம்சதிக்கும் தமிழில் மொழிபெயர்ப்புக்கள் தோன்றுமாயின் அவை பலர்க்கும் உபயோகமாகலாம்.

# சரித்திரம்

## பூர்விக இந்தியாவும் ஜாவா சுமாத்ராத் தீவுகளும்

ஓ. பி. தேசிகன்

பாரத நாட்டின் பண்டைச் சரித்திரத்தை யூன்றிக் கவனித்திருப்போருக்கு, வெகு காலம்வரையில் விந்திய மலைக்கு வடக்கே ஆரியாவர்த்தமென வழங்கும் கங்கைஸிந்து ஸமவெளிப் பிரதேசத்தில் சிறு சிறு இராஜ்யங்களை அமைத்துக்கொண்டு அவற்றை ஓரளவு திறமையுடன் ஆட்சி புரிந்து வந்த ஹிந்து மன்னர்கள் நாட்கள் செல்லச் செல்லத் தமது ஆண்மையும், ஆற்றலும், செல்வ நிலைமையும், ஸைங்ய பலமும் அதிகரிக்கத் தொடங்கியவுடன் மண்ணாசையும், பொருளாசையும் மேலிட்டவர்களாய், புதிய நாடுகளைக் கவர்ந்து அவைகளை மிகப் பரந்த ஸாம்ராஜ்யமொன்றின் உறுப்புக்களாய் இணைத்து, நாளடைவில் தாங்களும் ஸார்வபௌமர்களாய் விளங்கவேண்டுமென்ற ஆர்வங்கொண்டு, அவ் வுத்தேசத்தை நிறைவேற்றுவதன் பொருட்டு நாடெங்கும் எண்டிசைகளிலும் திக்கு விஜயம் செய்து வந்திருப்பதும் புலப்படும். சாமானிய நிலைமையிலிருந்த சாமந்த மன்னர்கள் ஏக சக்ராதிபதிகளாக முடிதரித்து ஆழி சூழவனி யெங்கும் தமது ஆஜ்ஞா சக்கரத்தைச் செலுத்துவதற்கு விருப்பமுற்றிருந்தது ஒரு புறமிருக்க, தைரியத்திற்கும் துணிவிற்கும் உறைவிடமாயிருந்த நமது தாய்நாட்டின் தீரப்புதல்வர்களில் பலர் முப்புறமும் கடல் சூழ்ந்திருந்த இத்தேசத்தின் குறுகிய எல்லைக்குள் அடங்கியிருப்பதில் திருப்தியுறாமல், கடல்களுக்கப்பாலுள்ள தூர நாடுகளிலும் குடியேறி இன்னும் 'விசாலமான பாரத தேசமொன்றை' (*Greater India*) சிருஷ்டித்துத் தமது தாய் நாட்டின் நாகரிகச் சிறப்பையும், கலைப் பெருக்கத்தையும், விளை பொருள்களையும், உற்பத்திப் பண்டங்களையும், ஆன்ம நெறியையும், அன்பு மதத்தையும் ஆங்கும் பரவச் செய்வதில் தமது கருத்தையும் கவனத்தையும் செலுத்தத் தலைப்பட்டனர். தாம் மேற்கொண்ட எவ்வித முயற்சிகளிலும் வெற்றி கிடைக்கும்வரையில்

தமது ஊக்கத்தைச் சிறிதும் தளரவிடாத அவர்கள், கலங்களேறிக் கடல் கடந்து அக்காலத்தில் நாகரிக உணர்ச்சி அரும்பப்பெற்ற பற்பல நாடுகளுடன் உறவு பூண்டு, பண்டமாற்றுதல்களைச் செய்து வந்ததோடமையாமல், அவர்களில் ஒரு பகுதியினர் சாசுவதமாகப் பிறநாடுகளிலேயே குடியேறியும் வருவாராயினர்.

பூர்விக ஹிந்துக்கள் தமது சுற்றுப்புற நிலைமைகளினின்றும், எழும்பிக் குறுகிய நோக்கங்களை உதறி யெறிந்துவிட்டுப் பரந்த திருஷ்டியுடன் புறநாடுகளில் குடியேறத் தொடங்கியது சிறப்பாக எக் காலம்முதல் நிகழ்ந்து வந்திருக்கின்றதென்பதைத் தற்காலம் நமக்குக் கிடைக்கும் மிகச் சுவல்ப ஆதாரங்களினின்றும் நிதானித்து அறியக்கூடவில்லை. எனினும் கிருஸ்து பிறப்பதற்கு 600 ஆண்டு களுக்கு முன்னிருந்தே இக்குடியேற்ற முயற்சிகள் நிகழ்ச்சி பெற்று வந்திருக்கவேண்டுமெனக் கருதுவதற் கிடமுண்டு. கி. மு. 600, கி. மு. 325-ம் ஆண்டுகளுக் கிடையிலுள்ள காலத்தில் அது மிகவும் மும்முரமாய் இருந்ததாகவும் கூறப்படுகிறது.

சுமார் 1500 வருடகாலத்திற்குள் ஆரிய மக்கள் இந்தியாவின் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிவரையில் பரவிவிட்டனர். அன்றியும் கி. மு. மூன்றாவது நூற்றாண்டிலேயே இலங்கைத் தீவி லும், சற்றேறக் குறைய அதே காலத்தில் பர்மாவிலும், ஸயாம் (*Siam*) தேசத்திலும் அவர்கள் குடியேறத் தொடங்கினார்கள். கிருஸ்து சகாப்தத்தின் ஆரம்ப காலத்தில், அதாவது கி. பி. 1-வது நூற்றாண்டில் தென் ஆனம் (*South Annam*) என்னு மிடத்தில் ஹிந்து இராஜ்யமொன்று ஸ்தாபிக்கப்பட்டது. அந்தப் புதிய இராஜ்யத்திற்கு வங்காளத்திலுள்ள சம்பா புரி யின் ஞாபகார்த்தமாகச் சம்பா (*Chamba*) என்ற பெய ரிடப்பட்டது. அன்றியும் அதே காலத்தில் மற்றொரு பிரி வினர் காம்போஜத்திலும் (*Combodia*) தமது கொடியை உயர்த்தித் தமது தாய் நாட்டின் உயர்தர நாகரிகத்தையும், பழக்க வழக்கங்களையும் ஆங்குள்ள மக்களுக்குப் புகட்டி வரலானார்கள். ஜாவா, சுமாத்ராத் தீவுகளும் இக்காலத்திலேதான் இந்திய நாகரிகத் தை மகிழ்ச்சியோடு வரவேற்றன ; ஆங்குள்ள 600-க்கு மேற்பட்ட கட்டடங்கள் இந்திய நாகரிகம் அந்நாடுகளில் எவ்வளவு ஆழமாக வேரூன்றியிருந்த தென்பதை யறிவிக்கும் சிறந்த ஞாபகச் சின்னங் களாக இன்றளவும் இலங்குகின்றன. மலேயா தீபகற்பம், போர் னியோ, சுமாத்ரா, பலித் தீவு முதலிய கீழ்த்திசை நாடுகள் ஒன்றி லாவது நமது நாட்டினர் அதுகாலை குடியேறாம லிருக்கவில்லை. ஹிந்துக்கள் சென்றவிடமெங்கும் தமது நாட்டு இலக்கியங்களையும்

சம்பிரதாயங்களையும், சமூக அமைப்பு முறைகளையும், உடன் கொண்டே சென்றனராதலின் அவர்கள் குடியேறிய இடங்களிலும் அவற்றின் அடையாளங்களும், தூண்டுதல்களும் பிரத்யக்ஷமாகக் காணப்படுகின்றன.

பூர்விக இந்திய சரித்திர ஆராய்ச்சியின் வாயிலாக நமது முன்னோர்கள் குறிப்பாக இன்ன காலத்தில்தான் ஜாவா, சுமாத்ராத் தீவுகளில் குடியேறியிருக்கவேண்டுமென்று வரையறுத்துக் கூறும் சான்றுகள் இதுகாறும் நமக்குக் கிடைத்தில; இறந்த காலமென்னும் இருள்திரையை விலக்கி வெளிச்சங்காண முயன்றுவரும் ஆராய்ச்சியாளர்களும், அறிவாளிகளும் அவ்வரிய முயற்சியில் சிறிதளவு முன்னேற்றமே யெய்தியுள்ளார்கள்.

ஜாவா தீவில் வசித்துவரும் மக்களிடையே வழங்கிவரும் ஒரு வரலாறு குறிப்பிடத்தக்கது. கி. பி. 75-ம் வருடத்திற்குச் சற்றேறக்குறையக் குஜராத்திலிருந்து 2000 ஹிந்துக்களடங்கிய ஒரு பெரிய கோஷ்டியினர் அந்நாட்டு இளவரசனான அஜி சாகா (*Aji Saka*) என்பவனது தலைமையின் கீழ் அத்தீவில் வந்திறங்கியதாக அது வழங்குகிறது. ஆனால் அக் கூற்றை யாதரிப்பதற்கேற்ற சரிதச் சான்று ஒன்றுமில்லை. வின்ஸெண்ட் ஸ்மித் (*Vincent Smith*) என்னும் சரித ஆசிரியர் சீனநூலொன்றிலிருந்து ஒரு மேற்கோளை யெடுத்துங் காட்டியிருக்கிறார்.* 'சீனதேசத்தில் க்வாங்-வு-டி (*Kwang-wu-Ti*) என்னும் சக்கரவர்த்தி அரசு செலுத்திய நாட்களில் ஹிந்துக்கள் திரள் திரளாக ஜாவாவில் குடியேறத் தொடங்கினார்கள் என்று அந்நூலில் கூறியிருப்பதை நம்புவதற்குப் போதிய காரணங்கள் உள' என்பதே அவரது கருத்தாகும்.

இன்னோரன்ன கூற்றுக்களின் தன்மை எவ்வாறாயினும், ஜாவாவில் முதன் முதலாகக் குடியேறியவர்கள் பிராம்மணீய மதத்தைச் சேர்ந்தவர்களே; பௌத்த சமயத்தினர் அக்குடியேற்றத்திற்கு நெடுநாட்களுக்குப் பிறகுதான் அங்குச் சென்றிருக்கவேண்டுமென்ற விஷயத்தைக் குறித்தமட்டில் யாதொரு அபிப்பிராயபேதமும் இருப்பதற்கில்லை.

ஜாவா, சுமாத்ராப் பிரதேசத்தின் சரித்திரம் முழுவதும் சமீப காலம் வரையில் ஒரே அந்தகாரமாய் இருந்துவந்தது. ஆனால் இவ்வாராய்ச்சியில் முதன் முதலாக ஈடுபட்ட பிரஞ்சுக்காரர்களும்

* History of Fine Arts. Vincent Smith p. 260.

டச்சுக்காரர்களும் செய்த அரிய முயற்சிகளின் பயனாக, ஆசியாவின் தென் கிழக்குப் பகுதியாகிய இப்பிரதேசங்களின் சரித்திர வரலாற்றைக் குறித்து நாம் ஒருவாறு அறிந்துகொள்வது ஸாத்யமாக இருக்கிறது. அத்தகைய ஆராய்ச்சியாளர்களிடையே ப்ரொபஸர் பால் பெல்லியட் (*Prof. Paul Pelliot*), எச்-கெர்ன் (*H. Kern*), ப்ரோபஸர் ஸில்வெயின் லெவீ (*Prof. Sylvain Levy*), ஸர். ஸ்டாம் போர்ட் ராபிள்ஸ் (*Sir Stamford Raffles*) முதலிய மேற்றிசைப் பண்டிதர்களின் அரிய ஆராய்ச்சிகளை நாம் பெரிதும் பாராட்டவேண்டும். முற்கூறிய ஆராய்ச்சியாளர்களால் புதிது புதிதாகக் கண்டுபிடித்து வெளியிடப்படும் செய்திகளெல்லாம் கி. பி. 13, 14-ம் நூற்றூண்டுகளில் இஸ்லாமிய மதத்தினரது ஆதிக்கத்திற்கு உட்படும் வரையில், இந்நாடுகளில் வசித்துவந்த குடிமக்களின் வாழ்க்கை முறையையும், லட்சியங்களையும் இந்திய நாகரிகமே பெரிதும் உருவகப்படுத்தி வந்திருக்கிறதென்பதைச் சந்தேகமற அறிவிக்கின்றன.

## இராமாயணத்தில் காணப்படும் குறிப்புக்கள்

ஜாவா, சுமாத்ராத் தீவுகளைப் பற்றி அயல் நாடுகளினின்றும் கிடைக்கும் ஆதாரங்களைத் தவிர, நமது தேசத்துப் பண்டைநூல்களில் ஆங்காங்குக் காணப்படும் குறிப்புக்களின் வாயிலாக இதைக் குறித்து ஒருவாறு ஆராய்வோம்.

நமது நாட்டுப் பூர்விக கிரந்தங்களில், ஜாவாவைப் பற்றிய குறிப்புக்கள் முதன் முதலாகக் காணப்படுவது ஸ்ரீமத் இராமாயணத்திலேயாகும். ஸ்ரீமத் இராமாயணத்தில் பூர்விக இந்தியாவை மட்டுமேயன்றி நமது தேசத்திற்கு மிகச் சமீபத்திலுள்ள பிற நாடுகளைக் குறித்த செய்திகள் பலவும் அறியக் கிடக்கின்றன. கிஷ்கிந்தா காண்டம் 40-வது ஸர்க்கம், 30-ம் சுலோகத்தில், வானர வேந்தனும் சுக்ரீவன், இராவணனால் அபகரித்துச் செல்லப்பட்ட சீதா தேவியைத் தேடிவருமாறு அஷ்டதிக்குகளிலும் தனது ஏவலாட்களை அனுப்புங் காலத்தில் வானரத் தலைவர்களுக்கு முக்கியமாகச் சில ஆஞ்ஞைகளை இடுகிறான். அவர்கள் ஒவ்வொருவருக்கும் பிரத்யேகமான சில சில ஆலோசனைகளை அவன் கூறி அனுப்புகிறான். சமுத்திரத்திலுள்ள பற்பல தீவுகளில் ஏதேனும் ஒன்றில்தான் இராவணன் சீதா பிராட்டியை ஒளித்துவைத்திருக்கக் கூடுமென்றும், ஆனதால் அவ்விடங்களிலேயே அவர்கள் தமது கூர்மையான திருஷ்டியைச் செலுத்தவேண்டுமென்றும் அவன் கருதுகிறான். இவ்வாறு ஆலோசனை யுரைக்கும் சுக்ரீவன் கிழக்குத் திக்கிலிருந்து அவர்கள்

தேடிப் பார்க்கவேண்டிய இடங்கள் யாவை யென்று வரிசையாகக் கூறிக்கொண்டுவருகிறான். கங்கை, யமுனை, பிரஹ்மபுத்ரா நதிகள் பாய்ந்து வளங்கொழிக்கும் பிரதேசங்களைக் கடந்த பின்னர், இப்போது இந்தோ-சைனு என்று வழங்கும் நிலப்பகுதியைப் பற்றி வருணிக்கிறான். "தங்க மதில்களாலும், வாயிற் புறங்களாலும் சூழப்பட்ட தீவினை (சுமாத்ரா ?)—ஸுவர்ணத் தீபத்தை—யடைந்ததும் ஸப்த ராஜ்யங்களால் அலங்கரிக்கப்பட்டதும், சுவர்ண ரஜிதத்வீபங்களையும் ஏராளமாகத் தங்கச் சுரங்களையுடையதுமான யவத்வீபத்தைப் பிரயாஸைப்பட்டு அடையுங்கள்; யவத்வீபத்திற்கப்பால் சிசிரபர்வத மிருக்கிறது. அதனுடைய உயர்ந்த சிகரங்கள் வானத்தையு மளாவியிருக்கின்றன. தைத்யர்களும் (தானவர்களும்) தேவர்களும் அதில் வசித்துவருகின்றனர்" என்று உரைக்கிறான்.

இராமாயணத்திலுள்ள இப்பகுதி பிற்காலத்திலுள்ள ஆசிரியர்களால் இடையில் புகுத்தப்பட்டதென்று சிலர் கருதுகிறார்கள். அதாவது, இராமாயண காவியத்திற் பழமையானவாகக் கருதப்படும் பகுதிகள் கிருஸ்து பிறப்பதற்கு 500 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் எழுதப்பட்டனவென்றும் வேறு சில பாகங்கள் கி. மு. 2-வது நூற்றாண்டிலும் அதற்குப் பிறகும்கூடச் சேர்க்கப்பட்டவைகளாயிருத்தல் வேண்டுமெனவும் அவர்கள் வாதிக்கிறார்கள். எனினும் இராமாயணத்தில் இலங்கையைப் பற்றிக் குறிப்பிடும் சுலோகங்களனைத்தும் மிகப் பழமைவாய்ந்தன வென்பதில் சிறிதளவேனும் சந்தேகமிருப்பதற் கில்லை யென்று ப்ரொபஸர் ஸில்வெயின் லெவீ என்னும் பிரெஞ்சு ஆராய்ச்சியாளர் உறுதியாகக் கூறுகிறார். அவர் இவ்வாறு நிச்சயிப்பதற்குக் காரணங்கள் வருமாறு :—

வடமொழியில் ஸத் தர்ம ஸ்ம்ருத் யுபஸ்தான ஸூத்ரம் என்ற பௌத்த நூல் உளது. அதில் ஜம்பூத்வீபத்தைப் பற்றிய வருணனையொன்றில் இராமாயணத்திற் காணப்படும் திசைவருணனை அப்படியே திருப்பிக் கூறப்பட்டுள்ளது. நாடுகள், ஆறுகள், மலைகள், கடல்கள் இவை யனைத்தும் சிறிதேனும் பிசகின்றி, மாறுதலின்றி அதே ஒழுங்கு முறையில் எழுதப்பட்டிருக்கின்றன. ஆனால் தங்க மதில்களால் சூழ்ந்த நாடென்ற பெயரைத் தவிர ஜாவா வென்னும் பெயர் மாத்திரம் காணப்படவில்லை.

ஸத் தர்ம ஸ்ம்ருத் யுபஸ்தான சூத்திரத்தை, கி. பி. 529-ம் ஆண்டில் காசிமா நகரத்திருந்த ஒரு பிராம்மண சிரேஷ்டர் சீன மொழியில் மொழிபெயர்த்திருந்தனராம். அசுவகோஷர் என்பவர்

இந்தச் சூத்திரத்திற்கு உரை யெழுதியிருப்பதாக சரச்சந்திர தாஸ் என்னும் அறிஞர் கூறுகிறார். அசுவகோஷர் கிருஸ்து சகாப்தம் முதலாவது நூற்றாண்டின் இறுதியிலேனும் அல்லது இரண்டாம் நூற்றாண்டின் ஆரம்பத்திலேனும் உயிர் வாழ்ந்திருக்கவேண்டு மென்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறார்கள்.

வியவகாரத்திற்காக இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தி லுள்ள இந்தப் பாகம் பிற்காலத்தில் சேர்க்கப்பட்டிருப்பதாக நாம் வைத்துக்கொண்டாலும்கூட யவத்வீபத்தைப் பற்றி அதில் காணப்படும் குறிப்புக்கள் கி. மு. 50-ம் ஆண்டிற்கும் பிந்தியதாக ஒருகாலும் இருக்கவே முடியா. கடல் கடந்த ஹிந்துக்கள் அதற்கு முன்னதாகவே யவத்வீப மென்ற பெயரை நன்கறிந்திருந் தனர். அந்தப் பெயரால் அத்தீவை வழங்குவதற்குச் சில காலத் திற்கு முன்னிருந்தாவது ஜாவாவுடன் போக்கு வரத்துக்களை அவர் கள் தொடங்கியிருக்கவேண்டும்.

மேலே கூறிய காரணங்களை உத்தேசிக்கையில் பூர்விக இந்தியா வுக்கும் யவத்வீபமென வழங்கிய ஜாவாத் தீவிற்கு மிடையில் கிருஸ்து சகாப்தத்தின் ஆரம்ப காலத்திற்கும் முந்தியிருந்தே போக்குவரத்தும் சம்பந்தமும் ஏற்பட்டிருக்கவேண்டு மென்பது ஒருவாறு விளங்கும். மேலும் கடைச் சங்க நூல்களிலும் சிறப்பாக மணிமேகலையிலும் தமிழ்நாட்டவர் அப் பண்டைக்காலத்திலேயே இவ்விரு நாட்டவர்களுடனும் உறவு பூண்டு பண்டமாற்றைச் செய்துவந்ததாகத் தெரியவருகிறது. பண்டைத் தமிழர் ஜாவாத் தீவை, 'சாவகம்' என்னும் பெயரால் அழைத்துவந்தனர்.

டாலெமி (*Ptolemy*) என்னும் கிரேக்க நூலாசிரியர் தமது பூகோள சாஸ்திரத்தில் ஜாவா வரையிலுமுள்ள பற் பல இடங் களுக்கு அக்காலத்தில் இந்தியாவில் வழங்கிவந்த பெயரையே அளித் திருக்கிறார். ஆதலின் இந்தியர்கள் யவத்வீபத்தைப் பற்றி அவரது காலத்திற்கு முந்தியே நன்கறிந்தவராயிருத்தல் வேண்டுமென்பது வெளிப்படை. டாலெமி தமது பூகோள நூலை எப்பொழுது இயற்றினார் என்பதைத் துணிவாக வரையறுத்துக்கூற முடிய வில்லையெனினும் அவர் கி. பி. 2-ம் நூற்றாண்டின் இடைக் காலத்தில்தான் தமது பிரசித்திபெற்ற நூலை வரைந்திருக்கவேண்டு மென்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

டாலெமி என்பவர் பண்டை அலெக்ஜாந்திரியா நகரில் வாழ்ந்த வானசாஸ்திரிகளில் ஒருவர். இப் பூமண்டலத்தின் பட

மொன்றை அக்ஷ நிரக்ஷ ரேகைகளுடன் வரையவேண்டுமென்பதே அவருடைய ஆதி உத்தேசமாயிருந்ததாயினும், தமது புத்தகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் நாடுகளைக் குறித்துத் தாமறிந்தவற்றையும், பிறர் சொல்லக் கேட்டிருப்பனவற்றையும் அவர் எழுதி வைத்திருக்கிறார். அதனின்றும் அவர் இவ்விடங்களை நேரில் பார்த்ததில்லையென்பதும், பிறர் மூலமாகத் தமக்கு எட்டிய செய்திகளையே தமது நூலில் பிரஸ்தாபித்திருக்கிறார் என்பதும் பெறப்படும். டாலெமி ஜாவாவை 'ஜாபாதியூ' (*Jabadieu*) என்ற பெயராலேயே அழைக்கிறார். அவர் மேலும் கூறுவதாவது:—

"யவத்வீப மென்ற பெயர் வாய்ந்த 'ஜாபாதியூ' மிகச் செழிப்புள்ள பிரதேசம்; அங்கே ஏராளமான தங்கம் உற்பத்தி செய்யப்படுகிறது. அதன் தலைநகர் அர்கிரா (*Arggra*)—அதாவது வெள்ளி நகரம்—என்ற பட்டணமேயாகும். அது அந்தத் தீவின் மேற்குக் கோடியிலிருக்கிறது.'' இந்தியாவுக்கும் யவத்வீபத்திற்குமிடையில் பற் பல சிறிய தீவுகளிருப்பதாகவும், அநாகரிகமும் காட்டுமிராண்டித் தன்மையும் வாய்ந்த ஜனங்கள் அந்தத் தீவுகளில் வசித்து வந்ததாகவும் டாலெமி எழுதியிருக்கிறார். இந்து-சைனு (சம்பா)வில் கண்டெடுக்கப்பட்ட பழமையான கல்வெட்டுக்கள் கி. பி. 2-ம் நூற்றாண்டில் அந்நாட்டை அரசு செலுத்திய மன்னர்களால் பொறிக்கப்பட்டனவாகும். அக்கல்வெட்டுக்களை யாராய்ச்சி செய்த அறிஞர்கள் அவை ஹிந்துமதக் கொள்கைகளையும் பௌத்த மதக் கொள்கைகளையுமே தழுவி யிருப்பதாக வெளியிட்டுள்ளார்கள்.

இப் பிரதேசத்தின் சரித்திர ஆராய்ச்சியில் ஈடுபட்டவர்களில் முதன்மை ஸ்தானத்தை வகிக்கும் ஆசிரியர் பால் பெல்லிபட் என்பவர் இந்தியாவிலிருந்து கடல் மார்க்கமாக மாத்திரமே யல்லாமல், தரை மார்க்கமாகவும்கூடப் பற்பல போக்கு வரத்து மார்க்கங்களிருந்தனவாகக் கூறுகிறார். இந்தியாவினின்றும் முதன் முதலாக அயல் நாடுகளில் குடியேறியவர்களைப் பற்றி நாமறியக் கூடிய செய்திகள் மிகவும் சுவல்பமாக இருந்தபோதிலும், அவர்களுடைய செல்வாக்கும் நாகரிகத்தின் வலிமையும் பெகுவிலும், சம்பாவிலும், சுமாத்ராவிலும், ஜாவாவிலும் வெகுதூரம் வியாபகமடைந்திருந்தனவென்பதையும் அவற்றினுடைய விளைவாக அந்நாடுகளில் ஏற்பட்ட மாறுதல் உணர்ச்சிகளைத் தெளிவாக அறிவிக்கும் சாட்சியங்கள் உளவென்பதையும் மறுப்பதற்கில்லை. சரித்திரத்திலே பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் தகுதியுள்ள ஹிந்துக்களின் இரண்டாவது

குடியேற்றம் கி. பி. ஐந்தாவது நூற்றுண்டிலே நிகழ்ந்தது. கி. பி. ஐந்தாவது நூற்றுண்டில் இந்தியா வெங்கும் சமாதான நிலைமை குடிகொண்டிருந்ததோடு, அறிவுக்கலைகளிலும், நாகரிகத்திற்குரிய நற்றெழில்களிலும் நமது தேசம் மிக முன்னேற்றமடைந்து இருந்தது. அதுபோழ்து இந்நாட்டில் குப்த மன்னர்கள் தனி யரசு செலுத்தி அளவிலாப் புகழ்படைத்திருந்தார்கள். இந்தக் காலத்தில் சம்பா, காம்போஜம் முதலிய நாடுகள் ஹிந்துமயமாக்கப் பட்டன. மலேயா தீபகற்பத்தில் குடியேறுவதற்குப் புதிய புதிய ஸ்தலங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. ஸயாம், சுமாத்ரா, ஜாவா முதலிய தீவுகளில் ஒவ்வொன்றிலும் ஹிந்துக்கள் திரள் திரளாக வந்து குழுமுவாராயினர்.

இந்தக் காலத்திலேதான் இந்தியாவில் ஆரியபட்டரும் (கி. பி. 476) ஆசாரிய வராஹமிஹிரரும் (கி. பி. 505-587) தங்களது அற்புதமான வான சாஸ்திர ஆராய்ச்சிகளைச் செய்துவந்தனர். குணவர்மன் என்னும் காச்மீர இளவரசன் ஜாவாத் தீவு முழுவதை யும் புத்த சமயத்திற்கு மாற்றுவித்ததும் இக் காலத்திலேயே. உலகப் பிரசித்திபெற்ற அஜந்தா சித்திரங்கள் இக் காலத்திலேதான் வரையப்பட்டன. குப்த மன்னர்களின் திறமைவாய்ந்த அரசாட்சி யின் விளைவாகத் தேசமெங்கும் தோன்றிய தேசீய மறுமலர்ச்சியி னுடைய எதிர்த்தாக்குதல்களில் ஜாவாக் குடியேற்றமும் ஒன்றாகும்.

கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் பிரசித்திபெற்ற சீன யாத்திரிக ரான பாஹியன் (*Fa-hien*) என்பவர் ஜாவாவிற்கும் விஜயம் செய்தார். ஜாவாவில் மூலஸர்வாஸ்திவாதப் பிரிவைச் சேர்ந்த பௌத்த மதத்தினரே பெரும்பான்மையாக இருப்பதாகப் பாஹி யன் கூறியிருக்கிறார்.

## குணவர்மன்

ஜாவாத் தீவு முழுவதும் பௌத்த சமயத்தைத் தழுவுமாறு செய்வித்த மகத்தான பெருமை குணவர்மன் என்பவனுக்கே உரிய தாகும். குணவர்மன் காச்மீர தேசத்தை யாண்டுவந்த அரச குடும் பத்திலுதித்தவன். மிகவும் உயர்ந்த க்ஷத்ரிய மரபினில் தோன்றிய வன். ஆனால் அவனுடைய மனம் ராஜ்ய நிர்வாகத்திலும், அரசர்க் குரிய போர்க்கலைகளிலும், மிருக வேட்டைகளிலும் ஈடுபடவில்லை. தனது பதினான்காம் பிராயத்திலேயே வனவிலங்குகளை இரக்கமின்றி வேட்டையாடி வதைத்துக் கொல்வதென்பது மிகவும் கொடுமை யான செய்கை யென்றும், அத்தகைய கொடிய செய்கைகளில் தான் ஒரு பொழுதும் இறங்கப்போவதில்லை யென்றும் தனது அன்னை

யிடம் தெரிவித்தானும். நாளடைவில் இத்தகைய சாத்விக குணமே அவனிடம் மேலிட்டது.

குணவர்மனுக்கு 30 ஆண்டுகள் நிறைந்தபோது, காச்மீர நாட்டரசன் தனக்குப் பின் இராஜ்யத்தைக் கட்டியாள்வதற்கு ஆண் ஸந்ததியின்றி இறந்தான். அமைச்சர்கள் தங்களுக்குள்ளே தீர்க்கமாகக் கலந்து ஆலோசித்த பின்பு, குணவர்மனே அரசர்க்கின்றியமையாத ஸகல இலக்ஷணங்களிலும் இராஜ குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களைவிடச் சிறந்தவனாக இருந்தமையால் அவனையே இராஜ்ய பாரத்தை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினார்கள். ஆனால் குணவர்மன் அவர்களது வேண்டுகோள்களுக்குச் சிறிதும் செவி சாய்க்கவில்லை. அவன் உலகபந்த மனைத்தையும் அடியோடு ஒழித்துவிட உறுதிகொண்டான். ஆதலின் அவன் புதியதாகத் தன் மீது வலிந்து சுமத்தப்பட்ட இவ்வுபத்திரவத்தினின்றும் விடுதலை பெறக் கருதி அன்றிரவே காச்மீர நாட்டைவிட்டு வெளியேறிச் சில நாட்களில் இலங்கைத் தீவையடைந்தான். அந்நாட்களில் இலங்கைத் தீவில் பௌத்த மதம் விசேஷமாகப் பரவியிருந்ததுமன்றி அதுவே அரசாங்க ஆதரவுபெற்ற மதமாகவும் விளங்கியது. குணவர்மனது சீலத்தையும் ஒழுக்கத்தையும் பற்றி முன்னரே கேள்வியுற்றிருந்த இலங்கை வாஸிகள், அவனது துறவு நெறியைப் பெரிதும் போற்றி அவனை மிக்க மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசரித்தார்கள்.

இலங்கையில் சிறிது காலம் தாமதித்த பின்னர் அவன் ஜாவாவிற்கு (யவத்வீபத்திற்கு)ப் பிரயாணமானான். அவன் மரக்கலத்தினின்றும் ஜாவாவில் அடி யெடுத்து வைப்பதற்கு முதல்நாளிரவு அந் நாட்டரசனது தாயார் ஒரு கனவு கண்டாள். சாந்தமும் சீலமும் ஓர் உருக்கொண்ட பெரியாரொருவர், மேகவாகனரூடராகத் தமது இராஜ்யத்தில் வந்திறங்கப் போவதாக ஒரு காட்சி அவளது கனவில் தோன்றியது.

குணவர்மன் அந் நாட்டில் இறங்கியதும் ராஜோபசாரங்கள் அவனுக்குச் செய்யப்பட்டன. மறுதினமே ஜாவா அரசனின் தாயார் புத்த மதத்தைத் தழுவினாள். அவள் வேண்டிக்கொண்டதன்பேரில் ஜாவாவின் அதிபனும் புதிய மதத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டான்.

சில நாட்களுக்குப் பின் அடுத்த இராஜ்யத்தின் அரசனொருவன் ஜாவா நாட்டதிபன்மீது போர் தொடுத்தான். யவத்வீபத்தின் மன்னன் குணவர்மனை யடுத்துப் பகைவனது படை யெடுப்பை யெதிர்த்து நின்று போர்புரிவது தர்மமாகுமா என வினவியதற்குப்

பகைவர்களை யெதிர்த்துப்போராடுவதே ஆண்மையுள்ள அரசர்களுக் கழகாகுமென்றும், அது அரசர்களுக்குரிய கடமையே யாகுமென் றும், ஆனல் பகைவரின் மீது யாதொரு தீய எண்ணத்தையும் வளர்த்துவரலாகாதென்றும் அவனுக்கு உபதேசித்தனனும்.

ஆனல் எதிர்பார்த்தவாறு யுத்தமொன்றும் நிகழவில்லை. அதற்குப் பதிலாகப் பகைவர்கள் தலைவிரிகோலமாகச் சிதறியோட லானர்கள். இவ்வதிசய சம்பவத்தின் ஞாபகார்த்தமாக ஜாவா நாட்டதிபன் குணவர்மனுக்காக ஒரு பெரிய பௌத்த விஹாரத் தைக் கட்டுவித்தான்.

ஆனல் புத்த மதப் பிரசாரமொன்றையே தனது வாழ்க்கையின் நோக்கமாகக் கருதிய குணவர்மன் இங்கிருந்து புறப்பட்டு, நந்தி என்னும் இந்திய வர்த்தகன் ஒருவனுக்குச் சொந்தமான மரக்கல மொன்றில் ஏறிச் சீன தேசத்திற்குப் பிரயாணமானன். குணவர்மன் கி. பி. 476-ஆம் ஆண்டில் சீன தேசத்திலுள்ள நான்கின் (*Nankin*) என்னுமிடத்தில் காலஞ் சென்ருன்.

ஆரியபடரும், வராஹமிஹிரரும் தமது பூகோள ககோள ஆராய்ச்சிகளை இக்காலத்தில் செய்து வந்ததாக இதற்கு முன் கூறி யுள்ளோம். உஜ்ஜயினிபுரியில் வசித்து வந்த ஆரியபடர் இலங்கைத் தீவில் சூரியோதயமாகும்போது, யவகோடியில் நண்பக லென்றும், உரோம ராஜ்யத்தில் நடுநிசி யென்றும் காலத்தைக் கவனித்திருக்கிருர். சூரிய சித்தாந்தமென்னும் வான சாஸ்திர கிரந்தத்தில், "இப்பூமண்டலத்தின் சுற்றளவில் நான்கிலொரு பாகத் திற்கு கிழக்கில் பத்ராசுவனது இராஜ்யத்தில் (பூமண்டலத்தின் கிழக்குப் பகுதியில்) பிரசித்திபெற்ற நகரி யவகோடி என்னுமிட மிருக்கிறது. அதனுடைய மதிற்சுவர்கள் தங்கத்தினலாயவை. அத னுடைய கோட்டை வாயில்களும் அவ்வாறே" என்ற ஒரு குறிப்பு காணப்படுகிறது.

சூரிய சித்தாந்தம் என்னும் நூல் கி. பி. ஐந்தாவது நூற்ருண் டில் எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்கள் கருது கிருர்கள்.

(தொடரும்)

# அரசியல் முறை

தி. சிவராம சேதுப்பிள்ளை

(1256-ம் பக்கத் தொடர்ச்சி)

நிர்வாக சபையார் பொருள் கேட்கவேண்டிய முறையும், அது சட்ட சபையில் நிறைவேற வேண்டிய முறையும் பின்வருமாறு: வருஷத்தில் ஒரு தரத்தில் வேண்டிய திட்டம் போட்டுவிடவேண்டும். ஏதோ சில சமயத்தில் முன்னரே எதிர்பார்க்க முடியாதவற்றில், பின்னர் உப திட்டம் (*Supplementary Estimates*) கொண்டுவரலாம். வருஷத்திட்டம் இரண்டு வரிசையில் கவனிக்கப்படும். முதலில் எல்லாத் திட்டமும் ஒரு விளக்கப் பத்திரிகையுடன் சபையின்முன் சமர்ப்பிக்கப்படும். அத்தருணம் அங்கத்தினர் தமக்குத் தோன்றியவற்றைக் கண்டித்தும், மெச்சியும், குறைகூறியும் பேசலாம். பின்னர், ஒவ்வொரு கிளைத் திட்டமும் (*Each Demand*) தனித் தனியே சபைக்கு முன் பிரேரணை செய்யப்படும். ஆனால் எந்த எந்தத் திட்டங்கள்தாம் சபையார் ஓட்டிற்குள் அகப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்று இவ்விடத்தில் ஊன்றிப் பார்க்க வேண்டும். ஓட்டுக்குள் அகப்படாத விஷயங்கள் பல உண்டு. அவை அகில இந்தியா சேவகர்கள் சம்பளம், பொதுக்கடன் வட்டி முதலியன. இம் மாதிரியுள்ளனவற்றை ஒதுக்கி விட்டு ஏனையவைதாம் சபையின் ஓட்டிற்கு விடப்படும். சபையாருக்கு அவைகளை ஒப்புக்கொள்ளவும், கேட்ட திட்டத்தைக் குறைக்கவும், முழுதும் மறுக்கவும் அதிகாரம் உண்டு. ஆனால் திட்டத்தை அதிகப்படுத்தக்கூடாது. மேலும் பணம் கேட்டது ஒதுக்கப்பட்ட இலாகாவைச் சேர்ந்ததானால், கவர்னர் முழுப்பணமும் வேண்டியதுதான் என்று முத்திரையிட்டபின் சபையார் குறைத்திருந்த சட்டத்தை மாற்றி எல்லாப் பணமும் எடுததுக்கொள்ளலாம். ஏதேனும் ஆபத்து நேரிடும் என்று ஏற்பட்டால் மந்திரி இலாகாவைச் சேர்ந்ததாயிருந்தால் கூடக் கவர்னர் இந்த அதிகாரத்தைச் செலுத்தலாம். வருஷாந்தரப் பொருள் ஆதாரத் திட்டம் வேலை முடிந்தால், சட்ட சபையின் பணச்சம்பந்தமான வேலை முற்றிற்று. பின்னர் வருஷக்கணக்கு முடிந்த பின், சபையார் தாம் பங்கிட்டபடி குறித்த விஷயங்களிற்

பணம் செலவிடப்பட்டிருக்கிறதா என்று கவனிக்கத் தங்களில் ஒரு கமிட்டி ஏற்படுத்தி யுள்ளார். அந்தக் கமிட்டியின்முன் வருஷக் கணக்கை விவரத்துடன் மாகாணக் கணக்கு நிபுணர் (*Accountant General*) முன் விளக்கிக்காட்டக் கடமைப்பட்டுள்ளார். கவர்ன் மெண்டார் ஒழுங்காய்ச் சிக்கனமாய்ச் செலவு பண்ணிக்கொண்டு வந்திருக்கிறார்களா என்று சோதிக்க இந்தக் கமிட்டியாருக்குச் சாதகங்கள் உண்டு.

வருஷச் செலவிற்கு வரவு போதாது என்றால் சபையாருக்கு முன்னமே குறித்த திட்டக் கட்டுப்பாடுகளுடன் வரிவிதிக்கும் அதி காரம் உண்டு. ஒதுக்கப்பட்ட இலாகாவிற்குப் பணம் வேண்டுமானல் கவர்னர் மூலமாய்ப் பெற்றுக்கொள்ள ஏதுக்கள் அமைக்கப்பட் டுள்ளன. கடன் தனியே வாங்கும் உரிமை கிடையாது; ஆனல் இந்தியா கவர்ன்மெண்டு அளித்த கடன் பணத்தை இன்ன இன்ன விஷயத்தில் செலவு பண்ணலாம் என்பதைத் தீர்மானிக்கலாம்.

இது வரைக்கும், சட்டப்படி சட்ட சபையின் அதிகாரம் இன்ன என்பதைச் சொல்லி வந்தோம். ஆனல் சட்ட நிபந்தனை களை மாத்திரம் நோக்கினல் ஆரம்பத்தில் சட்ட சபை செலுத்தி வந்த செல்வாக்குப் புலப்படாது. ஆகையால் எந்த எந்த வகையில் சட்ட சபையின் அபிப்பிராயத்தைக் கவர்ன்மெண்டார் கவனிக்க நேரிட்டது என்று கவனிக்கவேண்டும். முதலில், சட்டத்தில் கண்டிராத சபைகள் ஏற்படுத்தப்பட்டன. அவை ஒவ்வோர் இலா காவின் ஆட்சியிலும் தலையிட்டுத் தங்கள் அபிப்பிராயத்தை வெளி யிட்டன. அதைக் கவர்ன்மெண்டு ஒப்புக்கொள்ள வேண்டும் என்கிற நிபந்தனை இல்லாவிட்டாலும் கவனிக்கவேண்டி நேரிட்டது. மற்றும், பொருள் ஆதார இலாகா, பணப்பை இரண்டு இலாகாவிற் கும் பொதுவாகையால், மந்திரி இலாகா மற்றென்றைக் கூடிய வரைக்கும் தங்களுடைய கஷ்டங்களையும் கவனிக்கும்படி வற் புறுத்த ஏதுவாயிற்று. ஒதுக்கப்பட்ட இலாகா பார்லிமெண் டாருக்கே விடையளிக்கும் பொறுப்புவாய்ந்தது. மந்திரி இலாகா சட்ட சபைக்கு; ஆயினும் பணப்பை ஒன்றே. ஆனதால் ஒருவர் மற்றொருவருடைய நன்மையையும் கடமைகளையும் அநுசரித்துப் பணம் பங்கிட வேண்டி நேரிட்டது.

(தொடரும்)

# பெரிபுளூஸ்

## முன்னுரை

ச. சோமசுந்தர தேசிகர்

சில ஆண்டுகட்கு முன்வரையில் தமிழ்நாடு அல்லது தமிழகம் என்று ஒன்று உண்டென்றும், அதனில் மக்கள் வாழ்ந்து வருகின்றனரென்றும் அவர்கள் நாகரிகம் வாய்ந்தவர்கள் என்றும் ஒப்புக்கொள்வதே மிக்க அரிதாக இருந்தது. இவைகட்குக் காரணம் தென்னாடு வானரர்களால் நிறைந்திருந்தது; அவர்கள் கந்தமூல பலாதிகளை யுண்டு வாழ்ந்தனர் என்பதுபோன்ற தொடர்மொழிகளுக்கு உண்மைப் பொருள் காணமாட்டாமையும், பண்டை நூல்களையும் வழக்குக்களையும் அறியாமையுமேயாம்.

அச்சுவாகன முண்டாகிய இக்காலத்து மஹாமஹோபாத்யாய பிரம்மஸ்ரீ டாக்ட்டர் வே. சாமிநாதையரவர்கள், ராவ்பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை போன்ற பெரியோர் அநேகர் தோன்றிப் பழந்தமிழ் நூல்களைத் தோண்டி யெடுத்து உலகினர்க்குப் பயன்படுமாறு அளித்து வருவது யாவரு மறிந்ததே யாயினும் இவர்கள் தமிழ்ப் பாஷையிலேயே பெரும் புகழ் பெற்றிருப்பதாலும், நூல்களை வெளியிடுவதாலும், ராஜ பாஷையாகவும் உலக முழுதும் பரவியுள்ள பாஷையாகவுமுள்ள ஆங்கில பாஷையில் அவைகளோ அவற்றின் பொருளோ வெளிப்படாமையாலும், சிறிது தமிழ் கற்ற பெரிய ஆங்கில விற்பன்னர்களான தமிழர்களும் தமிழ் மொழியைப் புறக்கணித்தலினாலும் தமிழ் நாட்டின் பெருமை வெளிப்படாமலிருக்கிறது; எனினும் காலஞ்சென்ற ராவ்பகதூர் பி. சுந்தரம் பிள்ளை, வே. கனகசபைப் பிள்ளை, டாக்ட்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார் போன்றோர் முன் வந்து தம்மாலியன்ற உதவி புரிந்ததனாற்றான் தமிழிலும் நூல்களிருக்கின்றன, தமிழரும் நாகரிகமுடைய மக்கள் என்று கருத இடம் தந்தது. இவ்வழியில் அதிகமாக உழைத்த ஒலை நாயகரான (*Postal Superintendent*) வே. கனகசபைப் பிள்ளையவர்களை உள்ளளவும் நினைவு கூருது எள்ளளவும் மறப்போமானால் செய்ந்நன்றி கொன்ற மகாராவோம். அவர்கள்தாம் முதன் முதலாக மேனாட்டு யவனாசிரியர்கள் எழுதிய நூல்களிலிருந்து தமிழகத்தைச் சார்ந்த விடயங்களைத் தமது 1800 வருடங்கட்கு முந்திய தமிழர் என்னும் நூலில் வெளியிட்டார்கள்.

அதுமுதல் இதுவரை அவர்களைப்போன்று மற்றும் யாராவது செய்துளார் என்று சொல்ல என் சிற்றறிவிற்குப் புலப்படவில்லை.* ஈண்டு யவனர்களென்றது கிரேக்க உரோமர்களையேயாம். இந் நாட்டைப்பற்றி எழுதியோர் எரதோத்தஸ், பெரிபுளூஸ், பிளினி, தாலமி, ஸ்டிராபோ, அரியேன் முதலியோராவர். தமிழராயுள்ள நாம் அவர்கள் நம்மைப்பற்றி என்ன எழுதி யிருக்கின்றனர் என்று தெரிந்துகொள்ள வேண்டுவது நமது முக்கிய கடமைகளி லொன்று என்பதை நம் நாட்டினர் ஒருபொழுதும் கருதுவதே கிடையாது. 'ராமனுண்டா லென்ன ராவண னுண்டாலென்ன' என்ற பழஞ்சொல்லைப் பொன்னேபோற் போற்றி வருகின்றோம்.

யவன பாஷைகளில் எழுதியவர்களில் பேரிபுளூஸ் என்னும் நூலை எழுதியவர்தாம் முதன் முதலில் இந்நாடு வந்து சென்றன ரென்று மேனாட்டு ஆசிரியர்கள் கருதுகின்றனர். அதற்கு முன் னெல்லாம் தமிழரைப் பற்றி அரேபியர்களும் எகிப்தியர்களும் நன்கறிந்து வாணிகஞ் செய்தும், மற்றையோர் அறியாதபடி மறைத் தும் வைத்திருந்தனராம். இவைகளை உட்புகுந்து வெளியிட்டவர் இப்பாலஸ் என்னும் கிரேக்க எகிப்தியராவர். இதனைக் கண்ட வுடன் ஊரும் பேரும் வெளியிடாத ஒருவர் மரக்கல மிவர்ந்து தென்னாட்டில் மேற்குக் கரை வந்து, தாம் நேரிற்கண்டவற்றைக் குறித்துச் சென்று, உரோமதேசத்தில் வெளியிட்டார். கடலிற் பயணம் போய் வருவதற்குற்ற அடையாளங்களைக் குறிக்கும் கைபேட்டிற்குப் பேரிபுளூஸ் என்று கிரேக்க பாஷையில் பெயர். கிரேக்கர்கள் இந்துமகாசமுத்திரத்தைச் செங்கடல் என்றே பெய ரிட்டிருப்பதால் அவர் எழுதிய நூலுக்கு பேரிபுளூஸ் ஆவ் தி எரித் திரியன் ஸீ (*Periplus of the Erythraen Sea*) என்று பெயர். செங்கடல் அரபிக் கடலுக்கு மேற்புற மிருப்பதாலும் செங்கடல் புகுந்தே ஈண்டு வரவேண்டி யிருப்பதாலும் இப்பெயரிட்டனர் போலும். இதுவே முதன்முதலாக இந்தியாவைப் பற்றி நேரிற் கண்டபின் எழுதிய நூலாகும். இது முதலில் கிரேக்க பாஷையில் எழுதப்பட்டுப் பின்னர் லத்தீன் இத்தாலிய பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டது. வெகு காலங்கழித்து இதனை ஜர்மானியர் தங்கள் மொழியிலாக்கிக் கொண்டனர். முதன்முதலாக ஆங்கிலத் தில் 1800-ம் ஆண்டில் உவில்லியம் வின்சென்டு என்பார் மொழி பெயர்த்து இலண்டனில் பிரசுரித்தார். 1879-ம் ஆண்டில் மாக்கிரின் டில் என்பார் மொழிபெயர்த்துக் கல்கத்தாவில் வெளிப்படுத்தினர்.

---

* இதுபொழுது திரு. கே. என். சிவராஜ பிள்ளையவர்கள், பழந்தமிழர் கால அட்டவணை என்ற நூல் வெளியிட்டுள்ளார்.

1912-ல் உவில்பிரடு எச். ஷாப் (*W. H. Schoff*) என்ற அமெரிக்கர் கிரேக்க பாஷையிலிருந்து புதிதாக நேரே மொழிபெயர்த்ததோடு நில்லாமல் வேண்டிய குறிப்புக்களையும் எழுதி பிலாடேல்பியா நகரத்தில் வெளியிட்டனர். அவர்கள் அநுமதி பெற்றே இப்பொழுது இந்நூல் என்னால் மொழிபெயர்க்கப்படுகின்றது. இந்நூலின் மூலம் 66 பகுதிகளை யுடையது. ஆயினும் அதனை யறிந்து கொள்ள எழுதப்படும் குறிப்புக்கள் முக்கியமானவை. தமிழருக்கு அவசியமான குறிப்புக்கள்மாத்திரம் வேண்டிய அளவு எழுதப்படுகின்றன.

இவ் வேலைக்கு யான் எள்ளளவாவது தகுதியற்றவனாயினும் ஆங்கிலத்திலும் தமிழிலும் தக்க புலமையுடையார் பலர் இதனைக் கண்ணுற்ற பிறகாவது இதுபோன்று தென்னாடு சம்பந்தப் பட்டுள்ள மற்றைய நூல்களை வெளிப்படுத்த முன்வருவார்க ளென் றெண்ணி இக் காரியத்தில் தலையிட்டேன். இதனில் காணப்படும் குற்றங் குறைகளை விடுத்து விஷயத்தையே பெரிதாகக் கொள்ளும் படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

# எரித்திரேயன்கடலைச் சுற்றிய யாத்திரை

1. எரித்திரேயன்[1] கடலில் ஸ்தாபிக்கப்பட்ட[2] துறைமுகங்களிலும் அதனைச் சார்ந்த நாளங்காடிப் பட்டினங்களிலும்[3] முசல்[4] துறைமுகந்தான் முதலானது. அதனில் எகிப்தியர் வாணிகஞ் செய்கின்றனர். அங்கிருந்து வலது பக்கமாகப் போகிறவர்களுக்கு 1800 ஸ்டேடியாவில்[5] பெரனிஸ்[6] என்ற துறைமுகம் தென்படும். இந்த இரண்டு துறைமுகங்களும் எரித்திரேயன் கடலில் எகிப்திய நாட்டு எல்லைக்கரையிலுள்ளவை. இவை யிரண்டும் கப்பல் தங்குதற்குத் தகுதியானவை.

2. பெரனிஸுக்குக் கீழே வலது பக்கமாகப் பெர்பர் தேச[1] மிருக்கிறது. அந்நாட்டில் கடற்கரையோரத்திலுள்ள ஜனங்கள் மீன்களையுண்டு குறுகின பள்ளத்தாக்குகளில் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படும் மலைக் குடைவுகளில் வாழ்கின்றனர். உள்நாட்டிலே பெர்பர் ஜாதியார் இருக்கின்றனர். அவர்களை யடுத்துப்

---

1. (1) எரித்திரேயன் என்ற சொல் உரோம கிரேக்கர்களால் இந்து மகா சமுத்திரத்துக்கும், அதனோடு சேர்ந்த செங்கடல் பாரசீக வளைகுடாவிற்கும் ஏற்படுத்தப்பட்ட பெயர். எரித்திரா என்ற சொல்லுக்குச் சிவப்பு என்பது பொருள். தெலுங்கில் எர்ர என்ற சொல் சிவப்பைக் குறிக்கும். அகதார்க்கிடஸ் என்பவர் எரித்திர அரசன் கடல் என்று கொண்டு அதற்கு கதையும் கூறுவர்.

(2) சட்டப்படி ஸ்தாபிக்கப்பட்டது என்று பொருள். இவைகள் அரசனால் ஏற்படுத்தப்பட்டுச் சுங்கங்களையுடையனவாய், தண்டத்தலைவர்களாற் காக்கப்பட்டு வந்தன. (3) Market towns.

(4) Mussel harbour:—இதுபொழுது Ras Abu-Somer என்றழைக்கப்படுகிறது.

(5) உரோம நீட்டலளவை. பெரிபுளூஸுக்குப் பத்து ஸ்டேடியா 5280 ஜாதியடி கொண்ட ஓர் ஆங்கில மைல் எனக் கொள்ளலாம்.

(6) Berenice. இதுபொழுது Umm-el-Ketef bay என்பர். இத்துறைமுகத்தில் இயற்கையான மரக்கலச் சாலையுண்டு. கோப்டோஸ் (Coptos) என்ற ஊரிலிருந்து குறுக்கே பாலை நிலத்தின் வழியே பதினொரு நாட்பயணத்தில் இருக்கின்றது. இந்நகர் பாழடைந்திருப்பதை இன்றுங் காணலாம். இந்நகர் பெரிபுளூஸ் காலத்தில் எகிப்தியர் கீழ்நாட்டு வியாபாரஞ் செய்ய முக்கிய துறைமுகமாகக் கொண்டிருக்கவேண்டுமென்று தெரிகிறது.

2. (1) Berber Country என்பது ஆங்கிலச்சொல். காட்டு முரண்டிகள் நாடு என்பது பொருள். இது வட ஆபிரிக்காவில் இன்றும் வழங்குமொரு பெயர். ஆதியில் எகிப்தியர் மிருகத்தன்மை வாய்ந்தவர்களையும், புறநாட்டாரையும் குறிக்க இச்சொல்லை வழங்கினர். கிரேக்கர் எகிப்தியரைப் பின்பற்றி அப்பெயராலே அவர்களை அழைக்கலாயினர். பெர்பர் சாதியார் நீல நதிக்கும் செங்கடலுக்கும் நடுவிலுள்ள பிரதேசமான அபிஸினியா, சோமாலி, கல்லாஸ் (Callas) முதலான நாடுகளில் வாழ்பவரென ஷாப் அபிப்பிராயப்படுகிறார்.

பச்சை யிறைச்சிகளை[2] யுண்டு வாழ்நரும், சாக பக்ஷிணிகளும் தங்கள் தங்கள் தலைவரின்கீழ் வாழ்கின்றனர். இவர்களையும் கடந்து உள் நாட்டில் மேற்புறமாகச் சென்றால் மெரோயி[3] என்றொரு பட்டண மிருக்கிறது.

3. (முற்கூறிய) சாகபக்ஷிணிகள் நாட்டுக்குத் தெற்கில் 4000 ஸ்டேடியா கடற்பிரயாணஞ் செய்தால் வேடர்களிருப்பிடமும் அங்காடிப்பட்டினமுமான தாலமே[1] இருக்கிறது. அங்குள்ள வேடர்கள் உள் நாட்டுக்குச் செல்கின்றனர். இங்கே தான் சிறிதளவு நாட்டு ஆமையோடு கிடைக்கின்றது; அவ் வோடுகள் வெண்மையாயும் சிறியவையாயுமிருக்கும். அடுலிஸைப்போலச் சிறிதளவு யானை மருப்பும் கிடைக்கின்றது. எனினும் இவ்வூரில் நல்லதொரு மரக்கலச்சாலை யில்லாததால் சிறிய படகுகளில் இவ்வூருக்கு வரவேண்டியிருக்கின்றது.

4. வேடர்களின் தாலமே பட்டினத்துக்குக்கீழ் 3000 ஸ்டேடியா அளவில் அடுலிஸ் என்று நிர்மாணிக்கப்பட்ட துறைமுகமிருக்கிறது.[1] இது நாட்டினுள்ளே தென்புறமாகச் சென்று விசாலமாகும் ஒரு விரிகுடாவின் கடைக்கோடியிலிருக்கிறது. முகத்துவாரத்தின் முன்னே இருநூறு ஸ்டேடியா அளவில் மலைத்தீவு என்ற தீவு இருக்கின்றது. நாட்டின் கரை இந்தத் தீவை வளைந்து ஓடுகிறது. அடுலிஸுக்கு வரும் கப்பல்கள் திருடருக்கு அஞ்சி இந்தத் தீவில் தங்குகின்றன. முற்காலத்தில் விரிகுடாவின் வாயிலில் கரையோரமாக விருக்கும் டியோடோரஸ் என்ற தீவில் தங்குவது வழக்கம்; இதற்குத் தரைப் பாதையும் உண்டு. இவ்வழியாக முரடரான அந் நாட்டினர் வந்து

---

(2) Wild-Flesh-Eaters and Calf-Eaters. இவைகள் கிரேக்கர்களால் இடப்பட்ட பெயரென்று கருதப்படுகின்றன. இவர்களைப் பற்றிய விவரம் ஒன்றும் அறிவதற்கில்லை.

(3) Meroe:—நியூபியா நாட்டின் தலை நகரம். கி. மு. 650-ல் ஸ்தாபிக்கப்பட்டுப் பெரிபுளூஸ் காலத்திற்குப் பின்னுமிருந்தது. இது நீல நதிக்கரையிலிருந்தது.

3. (1) Ptolemais. இது இப்பொழுது எர்றீ (Er-rih) என்று வழங்குகிற தீவு. 18° 29′ N., 38° 27′ E. கி. மு. 285 முதல் 246 வரை (கலி 2777 முதல் 2816 வரை) அரசாண்ட தாலமி பிடால்பஸ் என்பவனால் அரண் செய்யப்பட்டது. யானை வியாபாரம் அதிகமாக விருந்தது. முற்காலத்தில் எகிப்தியர் இந்தியாவிலிருந்து யானைகளைக் கொண்டுவந்து வர்த்தகஞ்செய்தனர். அவை விலை அதிகமாக விருந்தமையால் தாலமி பிடால்பஸ் நாட்டாருக்கு விரோதமாகத் தன் ஆட்களை யனுப்பிக் காடுகளில் யானை பிடிக்கச் செய்தனன்.

4. (1) இது இப்பொழுது ஸூலா (Zula) என்ற ஊராக மாறியிருக்கிறது. இங்கே ஊர் இருந்து அழிந்து போன சின்னங்கள் காணப்படுகின்றன. தற்பொழுது துறைமுகமாக விருப்பது மாஸோவா என்ற பட்டினம்.

தின்புறத்துவர். மலேத்தீவுக்கு எதிரில் நாட்டுக்குள் இருபது ஸ்டேடியா அளவில் அடுலிஸ் என்ற நடுத்தரக் கிராமம் இருக்கிறது; அங்கிருந்து மூன்று நாட்பயணம் உள்நாட்டிற் சென்றால் கொலொயி (Coloe)[2] என்ற ஊரை யடையலாம். இதுதான் யானை மருப்புக்கு[3] முதல் வியாபார ஸ்தலம். அக்ஸூமைட்ஸ் ஜாதியார் வசிக்கும் பட்டினத்திற்குச்[4] செல்ல ஐந்துநாள் வேண்டும்; நீல நதிக்கு அப்பாலுள்ள பிரதேசத்திற் கிடைக்கும் யானைமருப்பு முழுவதும் கெய்னியம்[5] என்ற நகரின் வழியாக இங்கே கொண்டு வரப்படுகிறது; பின்னர் அடுலிஸூக்குக் கொண்டுபோகப்படுகிறது.

---

(2) கோலோயி அழிந்துபோன பட்டினமாகக் கோகேதோ (Kohaito) என்ற இடத்தில் இருக்க, பென்ட் (Bent) கண்டனர். சுற்றிலுமுள்ள நாடுகளுக்கு மேலாக இப்பட்டினம் 7000 அடி உயரமுள்ள சமபூமியாக விருப்பதால் வாசயோக்கியமுள்ளதாக விருக்கிறது. இது முக்கிய பட்டினமாயும் இதற்கு அடுலிஸ் துறைமுகமாயு மிருந்திருக்கவேண்டும்.

(3) யானை மருப்பு. கி. மு. 2600-ல் (கலி 1500) எகிப்தை யாண்ட மெர்நெறியரசன் காலத்துக் கல்வெட்டொன்றில் ஓர் அசுவப்பெருமகனார் (Assuan noble) யானை மருப்பில் வாணிகஞ் செய்ததாகக் காணப்படுகின்றது. அவர் தாம் தென் நியூபியாவிலுள்ள யாம் நாட்டினின்றும் சாம்பிராணி, கருங்காலி, தானியம், புலித்தோல், தந்தம் முதலியன 300 கழுதைப் பொதிகளிற் கொண்டு வந்ததாகக் கூறுகின்றனர். தந்தங்கள் அக்காலத்து நடந்த வியாபாரப் பொருள்களில் ஒன்றென்பதற்கு அநேக ஆதாரங்களிருக்கின்றன.

(4) அக்ஸூமைடரின்பட்டினம்:—இது இப்பொழுது ஆபிரிக்காவிலுள்ள அபிசீனியா வென்னும் நாட்டின் தலைநகர். அபிசீனியாவென்பது ஹாபாஷ் என்பதன் உரோம மொழிபெயர்ப்பு. இவர்கள் தங்களை இதியோப்பியவன் என்று சொல்லிக்கொள்ளுகின்றனர். அந்நாட்டு மொழியில் ஹாபாஷ் என்பதற்குச் சேர்ப்போரென்று பொருள். சாம்பிராணிப் பாலைச் சேர்ப்பதால் இவர்கட்கு இப்பெயர் வந்தது போலும். இவர்கள் கி. பி. 330-ல் (கலி 3430) கிறிஸ்தவர்களாக்கப்பட்டனர். அதற்கு முன்னர் இவர்கள் பௌத்தர்களாக இருந்திருக்க வேண்டும். அக்ஸம் என்ற பட்டினத்தில் கருடகம்பம்போன்ற ஒரே கல்லாலான கம்பங்கள் காணப்படுகின்றன. ஜேம்ஸ் பேர்குஸன் என்னும் ஓவியக்கலைஞர் தமது சிற்ப நூலில் (i, 142-3) "அக்ஸத்திலுள்ள அப்பெரிய கற்கம்பம் இந்தியக் கூட்டுறவால் ஏற்பட்டது; ஒன்பது தளங்களோடு கூடிய கோபுரமமைந்த இந்தியர் கோயில் கி. பி. முதல் நூற்றாண்டில் எகிப்தில் கட்டப்பட்டிருக்கிறது" என்பர். இவைகளெல்லாம் இந்திய வாணிகத்திற்கு அநுகூலமாகவிருந்தன.

(5) கெய்னியம் (Cyeneum) என்பது கிழக்குச் சூடானிலுள்ள (Eastern Sudan) தற்போதைய சென்னார் (Sennaar) என்ற ஊர்.

சில காலங்களில் கடற்கரையோரமாய் அடுலிஸுக்கு அருகில் யானைகளும் காண்டாமிருகங்களும் வேட்டையாடப்பட்டபோதிலும் பெரும்பாலன உள்நாட்டிலேயே வேட்டையாடப்படுகின்றன. அடுலிஸ் முகத்துவாரத்துக்கு வலது பக்கமாகக் கடலில் அலலை[6] என்ற பேருடைய பல மணல் திட்டுகள் இருக்கின்றன. அவற்றி லொதுங்கும் ஆமைகளைக் கரையார்கள்[7] கொன்று அவற்றின் ஓடுகளைச் சந்தைக்கு விற்பனைக்குக் கொண்டுவருகின்றனர்.

5. மேற்கூறிய துறைமுகத்துக்குக் கீழே எண்ணூறு ஸ்டேடியா அளவில் ஓர் ஆழமான துறையிருக்கின்றது[1]. இதன் முகத்துவாரத்தின் வலப்புறத்தில் ஒரு பெரிய மணற் குன்று இருக்கிறது. இங்கே ஆப்ஸியன் (*Opsian*) கற்கள்[2] அகப்படுகின்றன. சாக பக்ஷிணிகள் நாட்டிலிருந்து பெர்பர் நாடுவரையிலுள்ள நிலப் பரப்பை, சொஸ்கலஸ் (Zoscales) என்ற அரசன் ஆளுகிறான். இவன் மிகுந்த உலோபி; ஆசை யதிகமுடையவன்; எனினும் நீதி நெறி வழுவாதவனும் யவனக்கலையில் வல்லுநனு மாவான்.

---

(6) அலலைத்தீவுகள் (Alalæi) :—இவைகள் இன்றும் இவ்வாறே பெயர் பெறுகின்றனவாயினும் நகலக் (Dahalak) என்று பொதுவாகக் கூறுவர். அன்னஸ்லி குடாவிற்கு நுழையும் முகத்துவாரத்திலுள்ளன.

7. கரையார் - (Fish-eaters).

(5) 1. இந்த இடத்தை ஹௌாகில் குடா (Hauakil) என்கின்றனர். இது 14°44' N., 40° 49° E.-ல் உள்ள ராஸ் ஹான்பிலாவுக்கு வடக்கேயிருக்கின்றது. ஹான்பிலாவை அர்டிமிடோரஸின் (Artemidorus) ஆண்டிபிலி போர்டஸ் (Antiphili Portus) என்பர்.

(2) ஆப்ஸியன் கற்கள் (Opsian) கடுங் கருநிறமும், பின் புறம் தெரியக் கூடியனவும், நிழலாகக்கூடியனவுமானவை யென்றும், ஆபரணங்களாகவும், பிரதிமைகளாகவும், பிரார்த்தனைப் பண்டங்களாகவும் உபயோகப்படுகின்றன வென்றும் பிளினி கூறுகிறார். டாமிஷியன் சக்கரவர்த்தி தாம் உட்காருமிடத்தில் பின்னிருந்து வருபவர்களைத் தெரிந்து கொள்வதற்காக ஆப்ஸியன் கற்களால் ஒரு முகப்புக்கட்டியிருந்தார். இப்பொழுது 'ஆப்ஸிடியன் கற்கள்' என்பதும் இதுவும் ஒன்றாக இருக்கலாமென்று தோற்றுகிறது. 'அபிஸினியாவில் யாத்திரை' என்றநூலில் ஹென்றி ஸால்ட் என்பவர் தாம் ஆப்ஸியன் துறைக்குச் சென்றதாகவும் அங்கே காணப்படும் மலையின் அடிவாரத்தில் பல கற்களைக் கண்டதாகவும் அவை கண்ணாடியைப் போல் மிக்க பளபளப்புடையனவாக இருந்ததாகவும் கூறுகின்றார். அவ்விடத்து ஜனங்கள் உள் நாட்டிற் சென்றால் இன்னும் பெரிய கற்களைக் காணல் கூடுமென்று கூறினதாகவும் எழுதுகின்றனர்.

6. இவ்விடங்களில் எகிப்திய நாட்டில் செய்த முரட்டுத் துணிகள்[1] பெர்பர் நாட்டுமக்கள் உபயோகத்துக்காக இறக்குமதியாகின்றன. அர்சிநாய்[2] என்ற இடத்திலிருந்து விலையுள்ள உடைகள், சாயந் தோய்த்த கீழ்த்தரமான அங்கி, இரண்டு பக்கமும் அருகுகளமைந்த முட்டாக்கு, அழுத்தமான கண்ணாடியாற் செய்த பல படங்கள், வர்ணக் கண்ணாடிகள் முதலாயின டயஸ்போலிஸிலிருந்து[3] வருகின்றன. ஆபரணமாகவும் வெட்டி நாணயமாகவும் உபயோகிக்கவும், பித்தளைப்பாத்திரங்களுக்கும் மாதர் கைவளை கால்வளைகளுக்கும் உதவவும் நயமான செப்புத் தகடுகள்[4], யானைகளைக் கொல்லவும் போரிடவும் உதவும்படி வேல்களைச் செய்ய இரும்பு[5] முதலியன வருகின்றன. இவைகளை யன்றிச் சிறு கைக்கோடரி, வாய்ச்சி, கத்தி முதலியனவும் வருகின்றன. குடிக்க உதவும் வட்டமான பெரிய குவளைகளும், சந்தை வியாபாரத்திற்குச் சில்லரை நாணயங்களும், லவோடிசியா இத்தலி யிவற்றிலிருந்து சிறிதளவு சாராயமும், மட்டாக ஒலிவை யெண்ணெயும், அரசர்க்காக அந்நாட்டுத் தாம்பாளங்களைப்போலப் பொன் வெள்ளித் தாம்பாளங்களும், விலை அதிகமில்லாத போருடைகளும் மெல்லிய தோலுடைகளும்[6] வருகின்றன. கடலுக்கு எதிர்ப்

6. (1) முரட்டுத்துணி:—புளிச்சை நாரினாற் செய்யப்படும் துணிகள்.

(2) Arsinoe. சுவேஸ் பட்டினத்திற்கு அருகிலுள்ள ஓர் ஊர். இவ்வூர் ஒரு காலத்தில் வாணிகத்திற் சிறந்திருந்தது; பிற்காலத்தில் ஆடைகளுக்குப் பேர்போனதாயிற்று.

(3) Diospolis. இப்பெயர்க்குத் தேவநகர் என்று பொருள். தீபிஸ் (Thebes) என்ற நகராக விருத்தல் கூடுமென்றெண்ணுகின்றனர். நீல நதி தீராரம்பத்தில் ஒரு டயஸ்போலிஸ் உண்டென்று ஸ்டிராபோ கூறுகின்றார். ஆனால் அது அவ்வளவு பிரசித்த முடையதன்று. எகிப்தில் செய்யப்பட்ட கண்ணாடிப் பண்டங்கள் வந்து பொனிஸுக்குப் போவதற்கு இதுவே ஏற்ற பட்டணம்.

(4) செப்புத்தகடு:—இதனை மூல ஏடு, தேன்செம்பு என்று கூறுகிறது. பலர் பலவிதம் பொருள் கொண்டுள்ளார். நம் நாட்டில் நீட்டியடிக்க உதவும் இரும்பைத் தேனிரும்பு என்று சொல்லுகின்றோம். அஃதே போன்று வேலைக்கு உதவும் நயத்த செம்பைத் தேன்செம்பு என்றனர் போலும்.

(5) இரும்பு:—இஃது உலகத்தில் எப்பாகத்தினும் அகப்படுவதாயினும் சேர நாட்டிலிருந்து வருவதே மேலானதெனப் பிளைநி நினைக்கின்றார். சேர்வராயன் மலையடியி லகப்படும் இரும்பை மேலானதாக இன்றும் அறிஞர் கருதுவர்.

(6) தோலுடைகள்:—முற்காலத்தில் உரோமங்களோடு கூடிய தோலுடைகள் இருந்தன. அவைகளின் மேலுள்ள மயிர்கள் நீக்கப்படாமலே உபயோகப்பட்டுவந்தன. புறநானூற்றில் மயிர்க்கண் முரசங்கள் வெற்றிவேல் வேந்தரிடம் இருந்தனவாகப் படிக்கின்றோம். சிலப்பதிகாரம் எலி மயிர் உடை யுண்டென்று கூறுகின்றது.

புறத்திலுள்ள ஆரியகத்திலிருந்து[7] இந்திய இரும்பு எஃகு[8], இந்தியப் பருத்தி ஆடை, மனேக்கியை, சகமதோகினி[9] யென்னுஞ் சகலாத்து, அரைக்கச்சு, தோலாடை, தோம்பு, கலிங்கம், செம்பஞ்சு[10] முதலாயின வருகின்றன. இந்நாடுகளிலிருந்து தந்தம், ஆமையோடு[11], காண்டாமிருகத்தின் கொம்பு இவைகள் ஏற்றுமதியாகின்றன. எகிப்திலிருந்து வரும் பண்டங்கள் திபியென்ற மார்கழி தைமாத முதல் தோத் என்ற ஆவணிமாதம்வரை வருகின்றன. ஆவணிமாதத்தில் வணிகர் வழக்கமாகத் தங்கள் தேசம் செல்லுகின்றனர்.

---

(7) ஆரியகம்:—தமிழகத்தின் வடக்கிலுள்ள நாடுகள் ; விந்திய மலைப் பக்கமுள்ள நாடுகள். தற்காலக் கச், காம்பே, கத்திவார் நாடுகள் ; மகாராட்டிரப் பிரதேசமென்பர் சிவராஜ பிள்ளை.

(8) இந்திய இரும்பும் எஃகும்:—இவைகள் இந்தியாவிலிருந்து ஏற்றுமதியாகி வந்தன. சேர தேசத்து எஃகு நயமானதும் உறுதியுள்ளதுமெனப் பிளைநி கூறியிருக்கிறதாகக் காட்டினேம். மார்க்கம் அரிலியஸ், கம்மோடஸ் என்னும் உரோமர்கள் அரசாண்ட காலத்தில் இவைகட்கு உரோமில் இறக்குமதி வரி உண்டு. பைபிளில் எலீகல் XXVIII—19-ல் கூறப்பட்டதும் எஃகே. எதிரிசி என்பார் 'இந்துக்கள் இரும்பு வேலையில் திறமையுள்ளவர்கள். உலகத்தில் அதிக உறுதியுள்ளவை அவர்களால் செய்யப்படுகின்றன. இந்திய எஃகினல் வடிக்கப்பட்ட கூரின்முன் உலகத்தின் மற்றப் பாகங்களிலிருந்து வருவன எதிர் நில்லா' என்றெழுதுகிறார்.

(9) மனேக்கியை (Monache) என்பதற்கு 'மிக நேர்த்தியானது' என்றும் சகமதோகினி என்பதற்கு 'அடைக்க உதவும் பண்டம்' என்றும் பொருளெனக்கூறுவர் வின்செண்டு. பின்னது இலவம் பஞ்சாகவிருக்கலாமென்பதும் அவர் அபிப்பிராயம். இவை வியாபாரப் பண்டப்பெயர் (Trade name) என்பது ஷாப் என்பவர் அபிப்பிராயம். 'சகலாத்து 8 முழ நீளம் இரண்டு முழ அகலமுள்ளது. இரண்டாக இணைக்கப்பட்டிருக்கும். சோமாலியர் இதனை இடதுதோளிலிட்டு வலதுதோளை வெளியில் விட்டு உடலை மூடிக் கொள்வர். மழைக்காலத்தில் உடல் முழுவதும் மூடிக்கொள்வர். பெண்கள் தோட்புறம் முடிபோல் உடுத்துவர். இடுப்பைச் சுற்றிக் கட்டுவர். இடுப்பின்கீழ் மூன்றுனை தொங்கும்; அதனைக்கொண்டு தலையை மூடுவர்' என்று பர்ட்டன் எழுதுவர்.

(10) செம்பஞ்சு:—பெண்டிர் முற்காலத்தில் செம்பஞ்சுக்குழம்பு தீட்டிக்கொள்வது யாவருமறிந்ததொரு செய்தியாம். இந்த வழக்கம் இந்நாட்டிலிருந்து மேல் நாட்டுக்குச் செல்ல இப்பொருளும் உடன் சென்றது. இப்பொருளை இன்னதென அறியாத மேல் நாட்டு மொழிபெயர்ப்பாளர் அரக்கு என்று பொருள் படும் 'Lac' என்ற சொல்லால் மொழிபெயர்த்தனர்.

(11) ஆமையோடுகளில் பெட்டி முதலியவைகளும் அணிகலன்களும் செய்து உரோம நாட்டுப் பெண்டிராணிவது மரபு.

(தொடரும்)




# எல்லோராக் குகைகள்

எஸ். ஆர். வேங்கடராமன்

ஆதி காலத்தில், மலைகளை வெட்டி அவற்றினின்றும் கோபுரங்களையும் மடங்களையும் குடைந்து எடுப்பது நம் நாட்டினரது வழக்கம். அங்ஙனம் மிகவும் கைத்திறம் வாய்ந்த சிற்பிகள் செய்திருக்கும் வியக்கத்தக்க செயல்களின் மாட்சியை நாம் எல்லோரா என்னும் ஊரிற் காணலாம். அங்கே ஹிந்து ஜைன புத்த மதமெனும் மூன்று மதஸ்தர்களால் வெட்டி யெடுக்கப்பட்ட குகைகள் முப்பத்து நான்கு இருக்கின்றன. அக் குகைகள் எல்லாம் ஒரு மலைச் சரிவில் தெற்கு வடக்காக ஒன்றரை மைல் தூரம் பரவியிருக்கின்றன. அவற்றின் அமைப்பு ஓர் அர்த்த சந்திரனைப் போன்று வளைந்து இரண்டு கொம்புகளும் தெற்கு நோக்கி இருக்கின்றன. புத்த மதத்தினர் குகைகள் பன்னிரண்டும் அர்த்த சந்திரனின் தெற்குப் பாகத்திலிருக்கின்றன. ஜைன மதத்தினருக்குரிய ஐந்தும் வடபாகத்திலிருக்கின்றன. இவ் விரண்டிற்கும் மத்தியில் இருக்கும் பதினேழு குகைகளும் ஹிந்து மதத்தைச் சார்ந்தவை. இக் குகைகளெல்லாம் கி. பி. மூன்றும் நூற்றுண்டு முதல் ஒன்பதாம் நூற்றுண்டுவரை வெட்டி யெடுக்கப்பட்டவை யென்று அக்குகைகளிலிருக்கும் சாசனங்களைக் கொண்டு சரித்திராசிரியர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள்.

எல்லோரா என்னும் கிராமம், ஐதராபாத் ராஜ்யத்தில் அவுரங்காபாத் ரயில் நிலயத்திலிருந்து 16 மைல் தூரத்திலுள்ளது. அவுரங்காபாத்திலிருந்து எல்லோராவிற்குப் போய்வர மோட்டார் வண்டிகள் 15 ரூபாய் வாடகைக்குக் கிடைக்கும். காலை ஆறு மணிக்குப் புறப்பட்டு வழியில் தேவகிரி என்னும் தௌலதாபாத் கோட்டையைப் பார்த்துவிட்டு எல்லோராவுக்குப் பத்து மணிக்குப் போய்ச் சேரலாம். உணவுக்குரியவைகளை அவுரங்காபாத்திலேயே எடுத்துக்கொண்டு எல்லோராவுக்குச் செல்வது உசிதம். நாங்கள் ஆறு

மணிக்குப் புறப்பட்டு மூன்று மணிக்குத் திரும்பி வருவதாக ஏற்பாடு செய்து கொண்டு புறப்பட்டதால் கையில் சாப்பாடு கொண்டு போகவில்லை. ஆனால் எல்லோராவில், அஹல்யாபாய் கட்டி வைத்திருக்கும் ஒரு சிவன் கோவில் பூசாரியைக் கொண்டு, நாங்கள் கொஞ்சம் சப்பாத்தியும் தேத்தண்ணீரும் செய்யச் சொல்லிச் சாப்பிட்டோம். எல்லோராக் குகைகளைப் பற்றிய செய்திகளைத் தெரிவிக்கும் ஒரு புத்தகமும், கார்டு அளவிலுள்ள அழகான படங்களும் ஐதராபாத் அரசாங்கத்தார் பிரசுரித்திருக்கிறார்கள். இவற்றை வைத்துக்கொண்டு நாம் எளிதில், ஒவ்வொரு குகையைப்பற்றியும் உள்ள விஷயங்களை அறிந்து கொள்ளலாம். மேலும் எல்லோராவிலேயே எல்லா விஷயங்களையும் எடுத்துரைக்க ஆட்கள் இருக்கின்றனர்.

அவுரங்காபாத்திலிருந்து எல்லோராவுக்குப் புதிதாக நல்ல ரஸ்தா ஒன்று 1925-ம் வருஷத்தில் ரீடிங் பிரபுவும் அவரது மனைவியும் வருவதை உத்தேசித்து நிஜாம் ராஜ்யத்து அரசாங்கத்தார் போட்டிருக்கிறார்கள். எல்லோராவில் ராத்திரியில் தங்குவதற்கும் ஒரு முசாபரி பங்களா இருக்கிறது.

எல்லோராக் குகைகளிலிருந்து அரை மைல் தூரத்தில் எல்லோரா என்னும் கிராமம் இருக்கிறது. அங்கே அஹல்யாபாய் கட்டிய ஓர் அழகிய கோபுரம் இருக்கிறது. அக்கோவில் பதினெட்டாம் நூற்றாண்டில் கட்டப்பட்டதென்றும், அந்தப் பிராந்தியத்தை அஹல்யாபாய் 1765 முதல் 1795 வரை அரசாண்டாளென்றும் சொல்கிறார்கள். அக் கோவிலின் சிற்ப வேலையெல்லாம் இந்திய சிற்ப சாஸ்திரத்தை ஒட்டியிருக்கிறதென்றும், அது அயல்நாட்டுச் சிற்ப சாஸ்திரச் சாயல்கள் கலவாதது என்றும் சொல்லப்படுகிறது.

நாங்களும் எல்லோராவிலிருந்து திரும்பும்போது அஹல்யாபாய் கட்டுவித்த கோவிலுக்குச் சென்றிருந்தோம். அங்கே கிருஷ்ண லிங்கத்தை வைத்துப் பூஜை செய்கிறார்கள். லிங்கத்துக்கு அநேகர் நெய்யினால் அபிஷேகம் செய்கிறார்கள். பிரதிதினமும் அந்த அபிஷேகம் சரியாய் நடந்து வருவதற்காக நிஜாம் அரசர் தினம் ஒன்றுக்கு 5 ரூபாய் கொடுத்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

அந்தச் சிவன் கோவில், சிவப்புச் சந்தனக் கற்களால் கட்டப்பட்டது; அழகிய வேலைப்பாடமைந்துள்ளது. கோபுரத்தைச்சுற்றி ஒரு விசாலமான திண்ணை போடப்பட்டிருக்கின்றது. கோபுரத்தின் ஒவ்வொரு படியைச் சுற்றிலும் நமது இதிகாச புராணங்களிலுள்ள கதைகளெல்லாம் சிற்ப ரூபமாய் வெட்டப்பட்டிருக்கின்றன.

கோவில் சிறியதாயிருந்தாலும் சொல்லமுடியாத அளவு அழகும் அமைப்பும் பெற்றதாயிருக்கிறது. எல்லோராப் போவோர்கள் யாவரும் அஹல்யாபாயின் கோவிலை அவசியம் பார்க்கவேண்டும்.

எல்லோராக் குகைகளை உலகத்திலுள்ள எட்டாவது அதிசயமாகச் சேர்க்கவேண்டும். எல்லோராவிலுள்ள கைலாசம் (படம், 1.) என்னும் கோவிலைப் பற்றி எவ்வளவு கூறினும் அக்கோவிலின் சிற்ப வேலையின் மேன்மைக்கும், அழகுக்கும், அமைப்பிற்கும், போதியதென்று கருதவொண்ணாது. அதன் முழு வைபவத்தையும் எடுத்துரைக்கத் தகுந்த வார்த்தைகள் இல்லை யென்றே சொல்ல வேண்டும்.



1. கைலாசம்.
நடுவிலுள்ள கோயிலும் தீபஸ்தம்பமும்.
(*Archaelogical Department—Hyderabad.*)

கைலாசம் ஒரு மலையின் மேலிருந்து அடிவரை நெட்டுக் குத்தலாகக் குடைந்தெடுக்கப்பட்டிருக்கிறது. இவ்வளவு வேலைப்பாடமைந்த ஒரு பெரிய கட்டடத்தை மானிடர்கள் செய்திருக்க முடியுமா என்ற ஒரு சந்தேகமும் நாம் அதை அண்ணாந்து பார்த்துப் பிரமித்து நிற்கும்போது தோன்றுகிறது. மனிதனுடைய திடவைராக்யமும் யூகமுமேதான் இவ்வரிய சிற்பரத்னத்திற்குக் காரணமாயிருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

தாதிகள் பயந்து ஓடும் பாவனையும் கல்லினால் செதுக்கப்பட்டிருக்கிறது. இந்தப் பிராகாரத்தின் கிழக்குக் கோடியில் மலையிற் குடைந்திருக்கும் கூடத்தினின்றும் பார்த்தால், கோவிலின் அஸ்திவார மேடைக்குமேல் கோவிலைச் சுற்றிலும் செதுக்கப்பட்டிருக்கும் யானைகள் நிற்கும் மாதிரியை நாம் நன்கு அறியலாம் (படம், 2.)



2. கைலாசம்.

யானைகளால் தாங்கப்பட்ட கர்ப்பக்கிருஹம்.

(*Archaelogical Department—Hyderabad.*)

மேற்கூறிய கூடத்திலும் கூடப் பல சிற்பங்கள் மிகவும் நுண்ணியனவாகவும், விதம் விதமாகவும் செதுக்கப்பட்டிருக்கின்றன. அங்கே செதுக்கப்பட்டிருக்கும் பெண் பூதங்களையும் நாம் கவனிக்கவேண்டியது அவசியம். அவர்களெல்லாம் பிரபஞ்ச மாதாக்கள் என்று கருதப்படுகின்றார்கள். இவ்விதமான கண்ணைக் கவரும்படியான பெண் சிலைகள் பல கைலாசக் கோவிலின் தென்

புறத்து யாக மண்டபத்தில் இருக்கின்றன. வாகீஸ்வரி தேவியின் உருவம் நான்கு கைகளுடனும் காலினடியில் உள்ள ஒரு புலியுடனும் அமைக்கப்பட்டிருக்கிறது. இம்மாதிரி, கைலாசக் கோவிலில் அநேகம் பிரதிமைகள் நமது இதிஹாச புராணங்களைப் பின்பற்றிச் செதுக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, நாம் புத்தகங்களைப் படியாமலே கைலாசக் கோவிலிலிருக்கும் சிற்பவேலையிலிருந்து இதிஹாச புராணச்செய்திகளை எளிதில் அறிந்து கொள்ளலாம்.

கைலாசத்திற்கு எங்மஹால் என்ற மற்றொரு பெயருமுண்டு. அதற்கு வர்ண மாளிகை யென்று பொருள் சொல்லலாம். வெகு நாட்களுக்குமுன், இக் கைலாசத்தின் சுவர்களிலும் கூரையிலும் அநேக விதமான சித்திரங்கள் எழுதப்பட்டிருந்தனவென்பதை இப்போதும் அங்கங்கே உள்ள வர்ணந் தீட்டிய துண்டுப் பாகங்களிலிருந்து நாம் அறிந்துகொள்ளலாம். நாகரிகமற்ற அன்னிய மதஸ்தர்கள் இதனையும் பிற மேன்மை வாய்ந்த சிற்பத்தையும் ஓவியத்தையும் கண்டு பொறாமை கொண்டு அழித்துவிட்டனர். கோவிலைச் சுற்றிச் செதுக்கப்பட்டிருக்கின்ற யானைகளின் தலை, தும்பிக்கை, கால் முதலியவற்றை அவர்கள் பார்த்துப் பொறாமை கொண்டு உடைத்துவிட்டனர். கூரையின் மீது மிகவும் அழகாகச் செதுக்கப்பட்டிருந்த பறவைகளின் கால் நகங்கள் மாத்திரம் இப்போது தெரிகின்றன. நல்ல ஸ்திதியில் அவையெல்லாம் இருந்திருப்பின் அவற்றின் அழகு இன்னும் எத்தனை மடங்கு அதிகமாயிருந்திருக்குமென்பதை அக் கைலாசபதிதாம் அறிவார்.

கி. பி. பத்தாவது நூற்றாண்டில் எல்லோரா ஒரு பெரிய க்ஷேத்திரமாயிருந்ததாகத் தெரியவருகிறது. மஸூதி (*Mahsudi*) என்ற அரபித் தேசத்துப் பூகோள சாஸ்திரியும் இதைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். பதினான்காவது நூற்றாண்டில் கூர்ஜரத்து ராஜாவின் மகள் துணையில்லாமல் ஒரு பெரிய மலையைப் பார்க்கச் சென்றபோது முந்நூறு சிப்பாய்களால் தேவகிரி (தௌலதாபாது)யில் கைது செய்யப்பட்டாள் என்று டௌ (*Dow*) என்ற சரித்திராசிரியர் தமது இந்து ஸ்தானத்துச் சரித்திரம் என்ற புத்தகத்தில் எழுதியிருக்கிறார். அந்தப் பெரிய மலை எல்லோராக் குகைகள் நிறைந்த மலைதான் என்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது. மேற்கூறிய சிப்பாய்கள் டில்லி சுல்தான் அலாவுதீனுடைய முகம்மதிய வீரர்கள். அவர்கள்தாம் கோவிலின் அலங்காரத்தை அழித்தவர்கள். 1667-ம் வருஷம் எல்லோராவுக்குச் சென்றிருந்த பிரஞ்சு யாத்ரி மான்

சர்த்திவினேட் என்பவர் அக் குகைகளைப் பற்றி விவரித்திருக்கிறார். அவர் எல்லோராக் கோவில்களைப் பார்த்துப் பிரமித்ததுமல்லாமல், அக்குகைகளெல்லாம் பூதங்களாலேயே கட்டபட்டனவென்று அவுரங்கபாத்தில் தமக்குச் சொல்லப்பட்டதென்றும் எழுதியிருக்கிறார்.

எல்லோராவிலிருக்கும் கைலாசக் கோவிலும் விருபாக்ஷம் என்ற விடத்திலிருக்கும் கோவிலும் ஒன்றை யொன்று எல்லாவிதத்திலும் ஒத்திருக்கின்றனவென்று சொல்லப்படுகிறது. மேற்கூறிய விருபாக்ஷம் என்பது பாதாமி ஜில்லாவில் பத்ததாக்கல் என்ற விடத்திலிருக்கிறது. எட்டாவது நூற்றாண்டில் தந்திதுர்க்கர் என்பவர் கி. பி. 725 முதல் 755 வரை தக்ஷிணத்தில் அரசாண்டார். அவர் தென்னாட்டின்மேல் படையெடுத்து அநேக நாடுகளைக் கைப்பற்றிக் கொண்டார். விருபாக்ஷத்தில் இருக்கும் கோவிலின் அழகைக் கண்டு, அதையே மறுபடியும் எல்லோராவில் அமைக்கும்படி சிற்பிகளுக்கு ஆஜ்ஞாபித்ததாகத் தெரியவருகிறது. அப்படி சிற்பிகள் அமைத்ததுதான் எல்லோராவிலுள்ள கைலாசம் என்பது. விருபாக்ஷத்திலிருக்கும் கோவிலில் எவ்விதமாக யானைகளும் மற்ற மிருகங்களும் செதுக்கப்பட்டிருக்கின்றனவோ அவ்வண்ணமே கைலாசத்திலும் செதுக்கப்பட்டிருக்கின்றன.

புத்த மதத்தினர்களின் குகைகள் பன்னிரண்டுள்ளன. முன் கூறிய மாதிரி இக் குகைகள் எல்லாம் தென்கோடியிலிருந்து ஆரம்பிக்கின்றன. இவைகளெல்லாம் கி. பி. நான்காம் நூற்றாண்டு முதல் எட்டாவது நூற்றாண்டுக்குள் செதுக்கப்பட்டிருக்க வேண்டுமென்று ஊகிக்கப்படுகின்றது.

குகை என்றால், இருள் நிறைந்ததாயும், பயங்கரமான வழியுள்ளதாயுமிருக்கும் என்று சாதாரணமாய் எல்லா ஜனங்களும் எண்ணுவார்கள். ஆனால் எல்லோராக் குகைகளை அப்படிப்பட்ட குகைகள் என்று சொல்லமுடியாது. அவைகளை யெல்லாம் கல் அரண்மனை, அல்லது மாளிகை யென்றே சொல்லவேண்டும். நிறைந்த வெளிச்சமும், விசாலமான கூடமும், சித்திர வேலைப்பாடுகள் அமைந்தனவும் ஓர் ஆள் தாவிக் கட்டமுடியாதனவுமாகிய தூண்களும் நிறைந்த ஒன்றைக் குகையென்று சொல்வது சற்றும் பொருந்தாதல்லவா? ஒவ்வொரு குகையிலும் சந்நியாசிகள் வசிப்பதெற்கென்று கூடத்தின் இருபக்கங்களிலும் சிறு சிறு அறைகள் இருக்கின்றன. அங்கே அவர்களுக்குப் படுத்துக்கொள்வதற்கென்று ஒவ்வொரு மேடையும் இருக்கிறது. இரவில் துஷ்ட மிருகங்கள் வரமுடியாதபடி தடுக்க ஒவ்வோர் அறைக்கும் கதவுகள் வைத்திருந்ததாகத்

தெரிகிறது. இம்மாதிரிச் சிறு அறைகள் நிறைந்துள்ள குகை ஐந்தாவது குகையாகும். அதற்குள்ளாக இருபது சிறு அறைகளும் நீண்ட இரண்டு கல் மேடைகளும் இருக்கின்றன. இது ஒரு சமயத்தில் பள்ளிக்கூடமாகவும் சந்நியாசிகள் மடமாகவும் இருந்திருக்கலாமென்றும் உத்தேசிக்கப்படுகிறது. புத்த மதத்துக் குகைகளுக்குள் பத்தாவது மிகவும் நேர்த்தியானது; பார்க்கத் தகுந்தது. கிறிஸ்தவர்கள் கோவில்களைப் போல் கூரை வட்டமாக இருக்கிறது. கூரையின் உயரம் ஏறக்குறைய 30 அடி இருக்கும். நடுவில் புத்தருடைய உருவம் செதுக்கப்பட்ட தாதுகர்ப்பம் ஒன்று, பூமியிலிருந்து சுமார் 25 அடி உயரம் உள்ளது ஒன்று இருக்கிறது. அந்தத் தாதுகர்ப்பத்தைச் சுற்றி ஜனங்கள் பிரதக்ஷிணம் செய்ய விசாலமான இடமும் இருக்கிறது. முன்கூறிய வளைவான கூரையை உருண்டை வடிவமுள்ள தூண்கள் அநேகம் தாங்கிக் கொண்டிருக்கின்றன. அத்தூணின் உச்சியில் சித்திரப் பதுமைகள் அநேகம் செதுக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் குகைக்கு விச்வகர்மா குகை அல்லது தச்சர்களின் குகை என்று பெயர். விச்வகர்மா என்பவன் தேவலோகத்துத் தச்சனுதலாலும் தச்சர்கள் வழிபடும் குல தெய்வமாதலாலும் புத்தரை அவர்கள் விச்வகர்மா வென்று கருதி வழிபடுகிறார்கள்.

மேலும் இக்குகையில் இன்னமொரு அதிசயம் இருக்கிறது. இக்குகைக்கு வெளியில் மேலே போகும்படியான படிகள் வெட்டப்பட்டிருக்கின்றன. மேலே சென்றதும் ஒரு பெரிய தாழ்வாரமும், தாழ்வாரத்திலிருந்து உள்ளே ஒரு வழியும் செல்லுகின்றன. உள்ளே சென்று பார்த்தால், நாம் முன் கீழே பார்த்த தாதுகர்ப்பம், வளைந்த கூரை இவற்றை ஓர் உள் மாடியிலிருந்து பார்ப்பதுபோல் காண்கிறது. அதாவது நாடகக் கொட்டகைளில் 'பால்கெனி' என்று சொல்லும்படியான உள்மாடியை ஒத்திருக்கிறது. இதுவும் இக்குகைகளை வெட்டிய சிற்பிகளின் சாதுர்யத்தை நன்கு விளக்குகிறது.

இவைகள் எல்லாவற்றிலும் 'தீன்தால்' அல்லது மூன்று மாடி என்ற குகையைக் கவனிக்கவேண்டியது அவசியம். மலையை வெட்டி அதிலிருந்து மூன்று மாடிகள் உள்ள ஒரு குகையை வெட்டியிருக்கும் சிற்பிகளின் வல்லமை நம்மால் எண்ணவும் அறியவும் கூடாததாயிருக்கிறது. இக் குகையில் கீழ் மாடியிலும் மற்ற மாடிகளிலும் புத்தருடைய ஜீவியசரித சம்பந்தமான கதைகளெல்லாம் வெகு அழகாக வெட்டப்பட்டிருக்கின்றன. அவர் சிஷ்யர்களுக்கு உபதே

சிப்பதும் அவர் மோட்சம் செல்வதும் நிர்வாணபதவியை அடைவதும் போன்ற காட்சிகள் அதில் செதுக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

தசாவதாரக் குகை என்று ஒன்றிருக்கிறது. அதுவும் இரண்டு மாடிகளுள்ளது. அதில் விஷ்ணுவின் பத்து அவதாரங்களும் சிவன் பிம்பகளும் இருக்கின்றன. அதில் மேல் மாடியில் சிவன் பைரவராகத் தோன்றும் பாவனையில் ஒரு விக்ரகம் செதுக்கப்பட்டிருக்கிறது. இது மிகவும் பயங்கரமாகவும் ஆச்சரியத்தை உண்டாக்கக் கூடியதுமான அத்தனை பெரியதாக இருக்கிறது.

கடைசியாக, சீதா ஸ்நானலயம் (*Sita's Bath*) என்ற ஒரு குகை மிகவும் குளிர்ச்சியுடையதும் விசாலமானதும் சிலைகளையுடையதுமாயிருக்கிறது (படம், 3.)



3. சீதாஸ்நானலயம்.

கோவிலின் முன்னுள்ள மண்டபம்

(*Archaelogical Department—Hyderabad.*)

இது ஜைனமதத்தைச் சார்ந்ததெனினும் இதிலும் சிவனுடைய ரூபங்கள் வெட்டப்பட்டிருக்கின்றன (படம், 4.) இதுதவிர சோடா கைலாஸ் என்றும் இந்திரசபா என்றும் சில குகைகள் இருக்கின்றன. இவை யெல்லாம் பார்க்கப் பார்க்க நமக்குச் சோர்வு உண்டாவதில்லை. நான் இவைகளையெல்லாம் பார்த்துவிட்டுத் திரும்பவே மனமில்லாதவனுப் இருந்தேன். இவற்றைப் பார்க்கப் பார்க்க, நம் நாட்டுப் பழைய சிற்பிகளின் வேலைப்பாடும், அரசர்களின்

ஆதாவும், மதப்பற்றும், பக்தியும் நன்கு அறியக்கூடியவையா யிருக்கின்றன.



4. சீதாஸ்நானலயம்.

பார்வதீ கல்யாணம்,

(*Archaelogical Department--Hyderabad.*)

இவற்றை நேராகச் சென்று ஒருதடவை பார்ப்பது, இவை களைப் பற்றி எழுதி யிருப்பவர் புத்தகங்களைப் படிப்பதையும் சென்று பார்த்தவர்கள் நமக்குச் சொல்வதையும்விட ஆயிரம் மடங்கு அதிக விவரமாக மறக்க வொண்ணுதபடி அக்காட்சிகள் நம் மனதில் பதியச்செய்கின்றது. இதனை நேரில் பார்த்தவர்கள்தாம் அறிவார்கள்.

இக் குகைகளெல்லாம் தற்போது நல்ல நிலைமையில் மேன்மை தங்கிய நிஜாம் அரசரால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

# தந்தையின்றிப் பிறக்கும் பிராணிகள்

வி. ஆர். துரைஸ்வாமி சாஸ்திரி

மனித ஜாதியில் கன்னிகைகளும் விதவைகளும் சாதாரணமாய்க் குழந்தைகளைப் பெறுவதில்லை. குழந்தைகள் இல்லாத சிலர் தெய்வங்களை வேண்டிக் கொள்வதுண்டு. சிலர் காசி, ராமேச்வரம் போன்ற புண்ய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போய்வருவதுண்டு. அவர்களில் சிலருக்குப் பிள்ளைகள் பிறப்பதுமுண்டு. தெய்வமோ தேவதையோ புருஷ ஸ்வரூபம் தரித்து, சில ஸ்திரீகளுக்குக் காணப்படுகிறதாகவும் அவை ஸ்திரீகள் தேகத்துள் பிரவேசித்துக் குழந்தைகளாகப் பிறப்பதாகவும் நம்மவர்களில் சிலர் நம்புகின்றனர். இது எப்படி இருந்தபோதிலும் சில பெண் பிராணிகள் ஆண் பிராணிகளின் உதவியின்றியே ஸந்ததியைப் பெறுகின்றன. மனிதனும் மற்றப் பிராணிகளும் ஒரே ஜீவவர்க்கத்தைச் சேர்ந்தவர்களாதலால் மானிட ஸ்திரீகள் புருஷனில்லாமல் ஏன் குழந்தைகளைப் பிரஸவிக்கக்கூடாது? இப்பொழுது பூமியில் பிராணிகள் ஏன் வமிச விருத்தி செய்கின்றனவென்று முதலில் கவனிப்போம்.

பிராணிகளின் சரீரம் அநித்தியம். மரணம் என்பது ஒரு காலத்தில் நேரிடும் என்பது நிச்சயம். ஆதலால் பிராணிகளுக்கெல்லாம் இயற்கையாகவே இரண்டு ஆசைகள் உண்டு. முதலாவது, ஆகாரத்தை உட்கொண்டு தம் உயிரை எப்படியாவது கூடும்வரையில் காப்பாற்ற வேண்டும் என்பது. இரண்டாவது, தாம் சாகுமுன் தம் வம்சத்தை விருத்தி செய்யும்பொருட்டுக் குட்டிகளோ குஞ்சுகளோ போடவேண்டும் என்பது. எல்லாப் பிராணிகளும் ஆகாரம் நிறுத்திவிட்டாலும் சரி, குட்டிகள் போடுவதை நிறுத்திவிட்டாலும் சரி, சில காலத்துக்கப்பால் தாய் தந்தைப் பிராணிகள் இறந்துவிடுவதால் பூமியில் பிராணிகளே இல்லாமல் போய்விடும். அதற்காகவே இவ்விரண்டு ஆசைகள் ஏற்பட்டிருக்கின்றன.

இப்பொழுது புதுப் பிராணிகள் எப்படி உண்டாகின்றனவென்று கவனிப்போம். அநேகமாய் எல்லாப் பிராணிகளிலும் ஆண் பெண் என்ற இரண்டு பிரிவுகள் உண்டு. பெண் சரீரத்தில் அண்டாசயமென்பதும் (*Ovary*) ஆண்களுக்குப் பீஜாசயம் (*Testis*)

என்பதும் உண்டு. பிராணிகள் தக்க வயது அடைந்ததும், பெண் பிராணிகளுக்கு அண்டாசயத்தினுள் ஒன்றோ, பத்தோ, நூறோ சிறு அண்டக் கருக்கள் (*Ova*) உண்டாகும். அதேமாதிரி பீஜாசயத்தில் நூற்றுக் கணக்காகப் பீஜக்கருக்கள் (*Sperms*) ஆண் பிராணிகளுக்கு உண்டாகும். அண்டக் கருக்களும் பீஜக்கருக்களும் கண்ணுக்குத் தெரியாத வெகு நுட்ப ஜீவாணுக்களாய் இருக்கும். பூதக்கண்ணாடி மூலமாகப் பார்த்தால் அண்டக் கருவானது சிறு கடுகுபோல் வட்டமாயிருக்கும். பீஜக்கருவுக்கு வட்டமான ஒரு சிறு தலையும் ரோமம் போன்ற ஒரு வாலும் உண்டு. இந்த வாலை ஆட்டிக்கொண்டு பீஜக்கரு பீஜ நீரில் நீந்திக்கொண்டிருக்கும்.

இப்பொழுது அண்டக் கருவானது தானாகவே புதுப் பிராணி யாகாது. அதுபோலவே பீஜக்கருவும் தானாகவே பிராணியாகாது. ஒரு பெண் நாயைச் சுற்றி அநேகம் ஆண் நாய்கள் எப்படிக் கூடவே சூழ்ந்துபோகுமோ அது போலவே ஓர் அண்டக்கருவைச் சுற்றி அநேகம் பீஜக்கருக்கள் சூழ்ந்து போகும். எல்லாப் பீஜக்கருக்களும் அண்டக்கருவோடு சேர முயலும். ஆனால் பலசாலியான ஒரு பீஜக்கரு மட்டுமே அண்டக்கருவினுள் நுழையும். மற்றப் பீஜக் கருக்கள் வேறு அண்டக்கருக்களைத் தேடியோ அல்லது இறந்தோ போய்விடும். உள் நுழைந்த பீஜக்கரு தன் வாலை இழந்து அண்டக்கருவோடு கலந்துவிடும். இப்படிக் கலந்ததற்குக் கர்ப்பமுட்டை (*Fertilised egg*) என்று பெயர். இவ்வாறு உண்டான கர்ப்ப முட்டைகள்தாம் சில காலத்திற்கப்பால் குட்டிகளாகவோ குஞ்சுகளாகவோ ஆகின்றன.



அண்டக் கருவும்
பீஜக் கருக்களும்.

அண்டக்கருவும் பீஜக்கருவும் சேருமிடம் வித்தியாசப்படும் சில பிராணிகளில் தாயின் வெளியிலும், சில வற்றில் தாயினுள்ளிலும் சேரும். ஜலத்தில் வாழும் மீன்களிலும் தவளைகளிலும் வெளியிலேயே சேர்க்கை நேரும். தாயானது தன் அண்டக் கருக்களை ஆயிரக் கணக்காக நீரில் இடும். அதே நோக்கில் தந்தையானது தன் பீஜக்கருக்




தவளையின் முட்டைகள்:—1. அண்ட முட்டைகள். 2. கர்ப்ப முட்டைகள்.
3. புழுவைப்போன்ற குஞ்சு.

களை அதன்மேல் பீச்சும். தாயும் தந்தையும் தம் கருக்களைப் பற்றிப் பிறகு யாதொரு கவலையும் எடுத்துக்கொள்ளாமல் போய் விடும். நீரிலுள்ள பீஜக்கருக்கள் அண்டக்கருக்களைத் தேடிச் சென்று அவற்றுள் புகுந்து கர்ப்ப முட்டைகளாகும். இம் முட்டைகள் தமக்குள்ளிருக்கும் ஆகாரத்தை உட்கொண்டு சூரிய வெப்பமடைந்து வளர்ந்து சில காலத்திற்கப்பால் முட்டைகளை உடைத்தால் தந்தைகளைப் போன்ற சிறு குஞ்சுகளாக வெளியாகும்.

அண்டக்கருவும் பீஜக்கருவும் சேருவதும் அவை மற்றெல்லாப் பிராணிகளிலும் கர்ப்ப முட்டைகளாவதும் தாயின் கர்ப்பப் பையின் உள் ஆகும். ஆனால் கர்ப்ப முட்டைகள் வளருவது சில பிராணிகளில் தாயின் வெளியிலும், மற்றுஞ் சிலவற்றில் தாயினுள்ளிலும் ஆகும். புழு, பூச்சி, நத்தை, நண்டு, பாம்பு, பல்லி, பறவை இப் பிராணிகள் கர்ப்ப முட்டைகளை வெளியில் இடும். இடுவதற்கு முன் அவற்றைச் சுற்றிச் சில போர்வைகளைச் செய்யும். முதலில் மஞ்சட் பிசினும், பிறகு வெள்ளைப் பிசினும், பிறகு கெட்டி ஓட்டாலும் கர்ப்ப முட்டையை மூடும். இப்படி மூடிய முட்டைகளை வெளியில் இடும். முட்டையிலுள்ள கரு மஞ்சட் பிசினை உண்டு வளர்ந்து, நாளுக்கு நாள் பெரியதாகி அப்பால் முட்டையை உடைத்துக் கொண்டு சிறு குஞ்சுகளாக வெளிப்படும். அவை ஆகாரத்தைத்தேடி உண்டு வளர்ந்து தாய் தந்தைகளைப் போலாகும். இப்பொழுது ஆடு, மாடு, புலி, பூனை, முயல், திமிங்கலம், வௌவால், குரங்கு, மனிதன் இவையெல்லாம் அவற்றின் குட்டி




உடைத்த கோழி முட்டை:—1. ஓடு. 2. வெண்பிசின். 3. மஞ்சட் பிசின். 4. கரு.




கோழியின் உற்பத்தி:— 1-6 முட்டையுள் வளர்ச்சி. 7. முட்டையை உடைத்து வெளிவந்த குஞ்சு.

களுக்குப் பாலூட்டும் பிராணிகளாகும் (*mammals*). இவற்றின் தாயானது கர்ப்ப முட்டையை வெளியில் இடுவதில்லை. அது கர்ப்பப் பையின் ஒரு பாகத்தில் பற்றிக்கொண்டு வளரும். கருவின் தேகத்திலிருந்து ஒரு தொப்புள்கொடி புறப்பட்டுத் தாயின் தேகத்தோடு சேரும். இதனுள் இருக்கும் இரத்தக் குழாய்கள் வழியாகத் தாயின் ஆகாரம் கருவிற்குச் செல்லும். கருவானது சில மாஸம் வளர்ந்த பிறகு தாய் பிரஸவிக்க, அது குஞ்சாக வெளிவரும். பிறகு தாயின் பாலுண்டு வளர்ந்து தாய் தந்தைகளைப்போல் ஆகும். தேள், விரியன் பாம்பு, சுறுமீன் இவைகளும் முட்டைகள் இடுவதில்லை. குஞ்சுகளையே பெறும்.




கர்ப்பத்தில் காணும் சிசு:—1. சிசு. 2. சிசுப்பை. 3. நீர். 4. தொப்புள்கொடி. 5. தாயோடு பற்றிய சதை. 6. தாயின் கர்ப்பப்பையின் ஒரு பாகம்.

இதுவரையிற் கவனித்த பிராணிகளில் சில ஆணாகவும் சில பெண்ணாகவும் இருந்தன. இப்பொழுது வேறுவிதப் பிராணிகளைக் கவனிப்போம். மண்புழு, அட்டை, நத்தை இப்பிராணிகளில் ஒரு விசேஷம் உண்டு. அவற்றில் ஆணென்றும் பெண் என்றும் தனியாக இல்லை. ஒவ்வொரு பிராணியும் ஆணுமாகும், பெண்ணுமாகும் (*Hermaphrodite*). ஒவ்வொன்றிலும் ஒரு பாகத்தில் பீஜாசயம் (*Spermary*) உண்டு; மற்றொரு பாகத்தில் அண்டாசயம் (*ovary*) உண்டு. ஆனால் ஒரே பிராணியின் அண்டக் கருவும் பீஜக்கருவும் சேரா; சேரவும் முடியாது. ஏனென்றால் அண்டாசயமும் பீஜாசயமும் வெவ்வேறு காலங்களில் முதிருவனவாம். ஒரு பிராணியில் அதன் அண்டாசயம் முதிர்ந்து அண்டக்கருக்கள் உண்டாகும்பொழுது அதன் பீஜாசயம் இளமையாயிருக்கும். அதில் பீஜக்கருக்கள் இரா. அதேமாதிரி மற்றொரு பிராணியில் பீஜக்கருக்கள் முதிர்ந்து உண்டாகும்பொழுது அண்டக்கரு இளமையாயிருக்கும். ஆகையால் அண்டக்கரு முற்றிய ஒரு பிராணியும், பீஜக்கரு முற்றியுள்ள




இரண்டு மண் புழுக்கள் சேருவது.
1. பீஜாசய இடம். 2. அண்டாசய இடம்.
3. முட்டைகளைச்சுற்றிக் கூடு உண்டாகும் இடம்.

மற்றொரு பிராணியும் சேர நேரிடுகின்றது. அப்படி சேருவதைப் படத்தில் காணலாம். இவ்விரண்டில் அண்டாசயம் முதலில் உள்ள பிராணி கர்ப்பமடையும். பிறகு முட்டைகளை வெளியில் இடும். அவை வளர்ந்து பிறகு உடைந்து தாய் தந்தைகளைப் போன்ற குஞ்சுகள் வெளிவரும். புழுப் போன்ற தாழ்ந்த பிராணிகள் மற்றொரு விதத்தில் விருத்தியாகும். எப்படியென்றால், நாம் தரைகளையும் வயல்களையும் வெட்டும்பொழுது அவ்விடங்களில் வாழும் மண் புழுக்களும் கிருமிகளும் துண்டுகளாக வெட்டப்படுகின்றன. இந்தத் துண்டுகள் இறந்து போவதில்லை. தலைப்பாகம் இல்லாத துண்டுக்குத் தலைப்பாகமும், வால் பக்கம் இல்லாத துண்டுக்கு வால் பாகமும் சில நாட்களுக்கெல்லாம் முளைத்துவிடும். துண்டுபட்டதால் ஒரு புழு இரண்டாய் மாறிவிட்டது. உயர்ந்த பிராணிகளை இப்படி இரண்டாக வெட்டினால் அவை இறந்து போகும். ஆனால் சில பிராணிகளின் கையோ காலோ அறுபட்டால் அவை புதியனவாய் உண்டாகும். சத்துருக்கள் தம்மைப் பிடிக்க நெருங்கியதும் பல்லிகளும் அரணைகளும் தம் வால் அறுபடும்படி விட்டுத் தப்பி ஓடிப்போய்விடும். உயிருள்ள பிராணிபோல் அறுபட்ட வால் துள்ளும். அதை நோக்கிச் சத்துருப் பிராணி தங்கிப் பிறகு அதை உண்ணும். அறுபட்டவிடத்தில் சில நாட்களுக்கப்பால் புது வால் முளைக்கும். ஆனால் அது சற்றுச் சிறியதாயிருக்கும்.

இதுபோலப் பூரான் எதிரியோடு யுத்தம் செய்யும்பொழுது அதன் கால்கள் அறுந்துபோம்; புதுக் கால்கள் உண்டாகும். நண்டுகள் அகன்ற குறடுபோன்ற தம் முன் கால்களாலே சண்டை போடும்போது அக்கால்கள் அறுபட்டுப்போம். பிறகு வேறு கால்கள் உண்டாகும்.

இப்பொழுது பிதா இல்லாமல் பிறக்கும் பிராணிகளைக் கவனிப்போம். சாக்கடை, குட்டை இவைகளில் வெகு சிறிய ஜீவாணுக்கள் பல வசிக்கின்றன. அவற்றில் ஒருவகைக்கு அமீபா (*amoeba*) என்று பெயர். அவை ஜவ்வரிசி மாதிரி காணப்படும். அவை ஆண்களல்ல; பெண்கள் என்றும் சொல்ல முடியாது; ஆனால் எல்லாம் தாய்களாகும். அவை முட்டையுமிடா; குஞ்சுகளுமிடா. ஒவ்வோர் அமீபாவும் இரண்டு குட்டிகளாய்விடுகின்றது. எப்படி என்றால் ஓர் ஈரமான களிமண் உருண்டையைச் சுற்றி ஒரு நூலைக் கட்டி நூலை இறுகச்செய்தால் எப்படி அது சம அளவான இரண்டு சிறு களிமண் உருண்டைகள் ஆய்விடுகின்றனவோ, அது போலவே

ஒவ்வோர் அமீபாவும் நடுப் பாகத்தில் அறுபட்டு இரண்டு குட்டி அமீபாவாய்விடுகின்றது. இக் குட்டிகள் வளர்ந்ததும் ஒவ்வொன்றும் அறுபட்டு இரண்டு குட்டிகளாகின்றது. இப்படி ஒருமணி நேரத்தில் 10 தடவை குட்டிகள் பெறும். ஆகையால் ஒரு தாய் அமீபா ஒரு தினத்தில் 10,000,000 அமீபாக்களாய் மாறிவிடும். சாதாரணமாய் மற்ற எல்லாப் பிராணிகளிலும் தாயானது முட்டைகளையோ, குஞ்சுகளையோ இட்டு, சில காலத்திற்கெல்லாம் மரணமடைகின்றது. ஆனால் அமீபாவில் தாய்களுக்கு மரணமென்பதில்லை. தாய்களின் தேகம் முழுவதுமே இரண்டு குஞ்சு அமீபாக்களாக மாறிவிடுவதால் மரணமடைவனவாயில்லை. ஏதாவது அபாயத்தால் சாகலாம். அல்லது மற்றப் பிராணிகளுக்கு இரையாய்ப் போகலாம். இவைகளிலிருந்து தப்பித்தால் அமீபாக்களின் சரீரத்திற்கு அழிவேயில்லை. சில காலம் இப்படித் தாய் இரண்டு இரண்டாக ஆவதால் குட்டி அமீபாக்களுக்குப் பலஹீனம் உண்டாகி வருகிறது. ஆதலால் அவை செய்வது என்னவென்றால் அடிக்கடி இரண்டு தாய் அமீபாக்கள் கட்டிக் கொள்ளும் (*conjugation*). அப்பொழுது ஒன்றிலிருந்து மற்றொன்றிற்குச் சில தேகசத்துப் போகும்; தேகத்தோடு கலக்கும். பிறகு இரண்டும் பிரிந்து போகும். ஒவ்வொன்றும் அப்பால் இரண்டு இரண்டாகக் குட்டிகளாகும். இவற்றிற்கு வலிமை அதிகமாயுண்டு; ஆதலால் இரண்டு ஜீவிகள் கட்டிக் கொள்ளுவது குட்டிகளுக்குத் தேகவன்மை உண்டாவதற்கே யாகும் (*rejuvenation*). மனிதர்களில் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஆண் பெண் மணம் புரிந்தால் பிறக்கும் குழந்தைகள் வலிமையில்லாமலோ விகாரமாகவோ பிறப்பதால்தான் நாம் நம் பெண் பிள்ளைகளுக்கு வேறு குடும்பத்துப் பிள்ளை பெண்களைப் பார்த்துக் கல்யாணம் செய்கிறோம்.



தந்தையின்றிப் பிறப்பு:—A. அமீபா. B. பாக்டீரியா. C. ஹைட்ரா (பவழப்பூச்சி).



இரண்டு ஜீவாணுக்கள் கட்டிக்கொண்டு பிரிவது.
ஒவ்வொன்றின் தேக சத்தில் ஒரு பகுதி மற்றொன்றினுள்
போய்க் கலப்பது.

மற்றொருவிதப் பிராணிகளைக் கவனிப்போம். பல வியாதிகளுக்கு மூலகாரணமாயிருக்கும் பல கிருமிகள் (*Bacteria*), வயிற்றில் வாழும் மற்றுஞ் சில கிருமிகள் (*Infusoria*) இவைகளிலும் தந்தையென்பதில்லை. எல்லாம் தாயாகும். ஆனால் அமீபாவைப் போல் இரண்டே குட்டிகளாகப் போவதில்லை. ஒவ்வொன்றும் நூறு குட்டிகளோ ஆயிரம் குட்டிகளோ ஆகின்றன. எப்படி என்றால் ஒவ்வொரு கிருமியும் முதல்முதல் தன்னைச் சுற்றி ஒரு மெல்லிய தோலால் மூடிக்கொள்ளும் (*encysts*). உள்ளிருக்கும் பிராணி முதல்தடவை இரண்டாகப் பிளக்கும். இவை ஒவ்வொன்றும் இரண்டு இரண்டாகும். இப்படி இரண்டிரண்டாகப் பிளந்து தாயின் தேகமானது நூறு அல்லது ஆயிரம் ஆகிவிடும். மேல்தோல் மூடிக் கிழிந்து இந்தக் குஞ்சுகள் நூறோ ஆயிரமோ வெளிவரும். ஒவ்வொன்றும் வளர்ந்து தாய்க்கிருமியாகும். இப்படி ஒரு தாய் ஆயிரம் குஞ்சுகளாக மாறுவது அநேகம் பிளப்புப் பெருக்கம் (*spores*) என்று சொல்லப்படும்.

தந்தையில்லாப் பிறப்பில் இன்னுமொரு விதம் உண்டு. அது பலவிதப் பவளப் (*corals*) பூச்சிகளில் காணப்படும். பவளப்பூச்சி இனத்தைச் சேர்ந்ததாகிய உப்பில்லாத ஜலத்தில் வாழும் ஹைட்ரா (*hydra*) என்ற பூச்சியிலும் காணலாம். ஹைட்ரா என்பது ¼ நீளமும், பச்சை நிறமும் உள்ளது. பவளங்கள் பெரிதாகத் தெரிந்த போதிலும் அவற்றைச் செய்யும் பூச்சிகள் ஹைட்ராவைப்போல் சிறியவை. இப்பிராணிகள் பார்வைக்குச் சிறு செடிகள் போலிருக்

கும். செடிகளின் சிறு கிளைகளை ஒடித்துத் தரையில் ஊன்றினால் எப்படி வேர்களும் இலைகளும் கிளைகளும் உண்டாகிப் புதுச் செடிகள் உண்டாகின்றனவோ, அம்மாதிரியே இப்பிராணிகளிலும் புதுப் பிராணிகள் கிளைபோல் உண்டாகின்றன.

எப்படியென்றால், தாயின் தேகத்தில் பல மோழைகள் ஆதியில் தோன்றும். இம் மோழைகள் வளர்ந்து பூ மொட்டுகள் போலாகும். பின்னும் வளர்ந்து இந்த மொட்டுகள் தாயின் தேகம்போலாகும். அப்பொழுது இந்தக் குட்டிகள் தம் அடிப்பாகத்தால் தாயோடு ஒடிக்கொண்டிருக்கும். பிறகு ஒட்டிலிருக்கும் பாகம் அறுபட்டுத் தனித்தனியாக நீரில் நீந்தித் தாயைப்போல் வளரும். பவளப்பூச்சிக் குட்டிகள் தாயிலிருந்து பிரிவதில்லை. எல்லாம் ஓரே குடும்பமாக (*colony*) ஒட்டியேயிருக்கும். ஒரு பவளச் செடியில் **1,000,000** பூச்சிகள் இருக்கும். இப்படி மொட்டுகளாகக் கிளம்பிக் குட்டிகளாவதற்கு மொட்டுப் பிறப்பு (*budding*) என்று பெயர்.

மற்றொருவிதத் தந்தையில்லாப் பிறப்பு, தேனீ, பட்டைப் பேன் போன்ற சில பூச்சிகளில் காணப்படும். பட்டைப் பேன்கள் ஓர் உளுந்து அளவுதான் இருக்கும். அவை மரங்களின் பட்டைமேல் வசிக்கும். கொசுக்கள் நமது தேகத்தைத் தம் வாயால் குத்தி நமது இரத்தத்தை உறிஞ்சிக் குடிப்பதுபோல், இந்தப் பேன்கள் மரத்தின் பட்டையைக் குத்தி உள்ளிருக்கும் சத்தை உறிஞ்சிக் குடித்து வாழும். இவற்றில் தாயானது கர்ப்பமடைந்து முட்டைகளிடும். முட்டையுடைந்துவருவது அநேகமாய் ஆண்களாயிருக்கும். உண்ண ஆகாரம் அபரிமிதமாகக் கிடைக்கும் காலங்களில், பெண் பட்டைப் பேன்கள் தாமே முட்டைகளிடும். இதற்குக் 'கன்னிப் பிரசவம்' (*virgin birth*) என்று பெயர். இம்முட்டைகளோடு பீஜக்கருக்கள் சேருவதில்லை. இம்முட்டைகள் வளர்ந்து பொரிந்து வெளிவரும் குஞ்சுகளெல்லாம் பெண்களாகவேயிருக்கும். இக்குஞ்சுகளுக்குத் தந்தை யில்லை. தாய் உட்கொள்ளும் ஆகாரத்திற்கும், குஞ்சுகள் ஆண்களாகவோ பெண்களாகவோ பிறப்பதற்கும் ஏதோ சம்பந்தம் இருக்கின்றது. மனிதர்களிலும் கர்ப்ப ஸ்திரீகளுக்கு வெவ்வேறு ஆகாரம் கொடுத்து ஆணோ பெண்ணோ பிறப்பிக்கச் சில ஐரோப்பிய டாக்டர்களால் இயலுகிறதென்று தெரியவருகிறது.

சில தாய்ப் பட்டுப் பூச்சிகளும் தவளைகளும் தந்தையின் பீஜக்கரு சேராமலே முட்டைகளிடுகின்றன. அவை குஞ்சுகளாய்விடுகின்றன. இதைப் பரீக்ஷை செய்து பார்த்திருக்கிறார்கள். பெண் தவளைகள் கர்ப்பமாவதில்லை யென்று சொன்னோம். அவை அண்ட

முட்டைகளை ஜலத்தில் இடுமென்றும், ஆண்கள் தம் பீஜ முட்டைகளை அவற்றின்மேல் ஜலத்தில் பீச்சுமென்றும், இவை இரண்டும் சேருவது நீரிலேயே யாகுமென்றும் சொன்னோம். ஐரோப்பாவிலுள்ள சாஸ்திரிகளில் ஒருவர் ஒரு பெண் தவளையைமட்டும் ஒரு நீர்ஜாடியில் வளர்த்து வந்தார். சில நாட்களுக்கப்பால் அது அண்ட முட்டைகள் இட்டது. அவற்றில் பாதிமுட்டைகளை ஒரு நீர்ஜாடியிலும் மற்றவற்றை வேறொரு நீர்ஜாடியிலும் விட்டு வந்தார். ஒரு ஜாடி முட்டைகளை மெல்லிய ஊசி நுனியால் தொட்டுவந்தார். மற்ற ஜாடி முட்டைகளை ஒன்றும் செய்யவில்லை. ஒன்றும் செய்யாத முட்டைகள் மாஸம் ஒன்றான போதிலும் இட்டபடி அப்படியே இருந்தன. ஊசியால் குத்தின முட்டைகள் வளர்ந்து கரு உடைந்து நீரில் வந்து ஆகாரம் உட்கொண்டு கடைசியில் தவளைக் குஞ்சுகளாய்விட்டன. இவை தந்தையின் உதவி யில்லாமலே பிறந்தவைகள். அண்ட முட்டைகளைத் தொடாமலிருந்தால் முட்டைகள் பொரியாமல் இறந்துபோய் விட்டன. ஊசியால் குத்தியதால் ஏதோ ஒரு சக்தியை அவை அடைந்து குஞ்சுகளாயின.

இதைப்போல் நம்மில் கன்னிகைகளுக்கும் விதவைகளுக்கும் அண்ட முட்டைகள் கர்பப்பைகளில் மாஸந்தோறும் உண்டாவதுண்டு. தேக அதிர்ச்சி போன்ற ஒரு காரணத்தால் அவர்களின் அண்ட முட்டைகள், பீஜ முட்டைகளோடு சேராமலே தாய்களின் கர்ப்பப் பைகளில் வளர்ந்து ஏன் குழந்தையாகப் பிறக்கக் கூடாது?

# இந்தியா உண்டானது எப்படி?

டி. என். முத்துஸ்வாமி ஐயர்—பி. என். அப்புஸ்வாமி ஐயர்

இன்று நான் பேசுவதற்காக எடுத்துக்கொண்ட விஷயமானது "இந்தியாவின் பூகோள பரிணாமம்" என்பது; அதாவது இந்தியா உண்டானது எப்படி என்பது. அதைப்பற்றி நான் பேசுமுன் பூர்வ பீடிகையாகச் சில விஷயங்களைப் பற்றி விரிவாய்க் கூறவேண்டியது அவசியமாய் இருக்கிறது. அவ் விஷயங்களைப்பற்றி நான் விரிவாகக் கூறி விளக்கிச் சொல்லாவிட்டால் இந்தியாவின் பரிணாம சரித்திரத்தைப்பற்றி நான் சொல்லுவது இதுவரை வெளிவராத கட்டுக் கதைகளுள் ஒன்று என்றுதான் உங்களில் பெரும்பாலர் எண்ணும்படி இருக்கும்.

பரிணாமத்தைப் பற்றிய கொள்கைகளை நமது நாட்டிலே ஜனங்கள் அதிகமாக நம்பவில்லை என்று சொல்லுகிறார்கள். ஜந்துக்கள் தாவரங்கள் போன்ற உயிருள்ளனவற்றைப் பற்றியும் மலைகள் ஆறுகள் போன்ற உயிரில்லாதனவற்றைப் பற்றியும் உள்ள பரிணாமக் கொள்கைகளை நமது நாட்டினர் அவ்வளவாக ஒப்புக்கொள்ளத்தான் இல்லை. அவர்கள் எப்படி இலேசாக ஒப்புக்கொள்ளுவார்கள்? நமது குழந்தைப் பருவம் தொட்டே நம்மைச் சுற்றியுள்ள ஒவ்வொரு பொருளும் கடவுளது அருளால் தன்னந்தனியாகப் படைக்கப்பட்டது என்ற கொள்கையை நமக்குப் புகட்டிவிடுகிறார்கள். அவ்விதமான நம்பிக்கைகளுடனேயே நாம் சின்னஞ் சிறு வயது முதல் வளர்ந்து வருகிறோம். சிற்சில வேளைகளில் இத்தகைய நம்பிக்கை மாத்திரையை நமக்கு அளவுக்கு மிஞ்சி ஊட்டிவிடுகிறார்கள். வீட்டுக் குழந்தைகளுங்கூட இத்தகைய நம்பிக்கையை மேற்கொண்டு கடிகாரமும் மின்சார விசிறியுங் கூடக் கடவுளின் பிரத்தியேக சிருஷ்டிகள்தாம் என்று நம்பி வருகிறார்கள். பரிகாசத்துக்கு இடமாகிய இத்தகைய மூடக் கொள்கைகளைத் தமது குழந்தைகள் கையாளவேண்டுமென்று நம்மவர் யாரும் விரும்பமாட்டார் என்பது திண்ணம்.

ஆயினும், இதிலிருந்து, விஞ்ஞான சாஸ்திர நிபுணன் நாஸ்திகன்தான் போலிருக்கிறதே என்று சொல்லலாகாது. அவன் நாஸ்திகன் அல்லன். பல வடிவமாயுள்ள வஸ்துக்கள் நம்மைச் சுற்றி

யெங்கும் இருக்கின்றன. அவற்றின் அந்தரங்க நியதியை—இரகசியத்தை—அறிய அவன் தன்னுடைய முழுத்திறமையோடும் ஆராய்ந்து பாடுபடுகிறான். 'ஆச்சரியப்படத்தகும் அளவில், ஒன்றையொன்று மிகவும் ஒத்திருக்கின்ற இரண்டு ஜந்துக்களோ அல்லது செடிகளோ பளிச்சென்று தோன்றும் சிற்சில வித்தியாசங்களை உடையனவாகித் தம்முள் மாறுபட்டுப் பிரிந்து தோன்றுவது ஏன்?' என்பதை ஆராயப் புகுந்த இயற்கைச் சாஸ்திர நிபுணர் 'பரிணமம் என்பதுதான் அதற்குக் காரணம்' என்ற புதியதொரு கொள்கையை எடுத்துக்கூற வேண்டியதாயிற்று. மிகச் சிக்கலான முறையில் அணுக்களின் இசைப்பையுடைய மேல்தர மனிதன் முன்னொரு காலத்தில் வாழ்ந்து வந்த, அவ்வளவு சிக்கலான இசைப்பில்லாத, மனித வகுப்பினின்று பரிணமித்தவன் என்றும்; அம்மனிதனும் அவ்வாறு அமைப்பு முறையில் அவனைக் காட்டிலும் சிக்கலிற் குறைந்த ஓர் உயிர் வகுப்பினின்று பரிணமித்தவனென்றும்; அவ்வாறேதான் படிப்படியாகக் கடைசிப்படி வரையிலும் இருந்தது என்றும் இயற்கைச் சாஸ்திர விற்பன்னர் கண்டு பிடித்திருக்கின்றனர். இவ்வாறு அவர் படிப்படியாக ஆராய்ச்சி செய்துவரும் போது, ஒரு படியில் 'உயிர் என்பது என்ன?' என்னும் வினாவானது தானாகவே முன் வந்து நிற்கின்றது. அச்சமயத்தில் 'இயற்கைச் சக்திகள்' என்பனவற்றை ஆராய்ந்து அவ்வினாவுக்கு விடை அளிக்க முடியுமா என்பதை அவர் ஆராய்கின்றனர். அப்பொழுது அவற்றைப்பற்றி அவர் கொள்ளும் அபிப்பிராயங்களுக்கும், அவர் மனத்தில் அவ்வேளையில் எழும் மன நிகழ்ச்சிகளுக்கும், கடவுள் என்று கூறப்படும் ஒரு மனோதத்துவத்துக்கும் அதிகமான பேதம் கிடையாது. ஆதலால் பரிணமக் கொள்கையின் மீதுள்ள நம்பிக்கைக்கும் கடவுளின் மீதுள்ள நம்பிக்கைக்கும் யாதொரு முரண்பாடும் இல்லை. அவை ஒன்றுக்கொன்று துவேஷமுள்ள கொள்கைகள் அல்ல.

நிலப்பிரதேசங்களின் உருவ சம்பந்தமான பரிணமமானது யாவரும் எளிதில் அறிந்துகொள்ளக்கூடிய விஷயம். இந்தியாவை ஒரு பெரிய பூ கண்டம் என்று சொல்லலாம். அவ்வளவு பெரிது அது. அதன் பரிணமம் என்று சொன்னால், பூமி பிறந்த நாள் முதல் இந்தியாவின் இயற்கை அமைப்புக்களின் தோற்றமானது சிறிது சிறிதாக மாறிக்கொண்டே வந்து இக்காலத்திலே இந்தியா பெற்றிருக்கும் தோற்றத்தை அடைந்திருக்கிறது என்பதைத்தான் நாம் குறிக்கிறோம். அதாவது, நமது தேசத்திலுள்ள மலைகள்,

ஆறுகள், கடல்கள் இவை யாவற்றுக்கும் பூர்வ சரிதைகள் உண்டு. ஆதலால் நமது இந்தியாவிலே வங்காளக் குடாக்கடல் இல்லாத காலம் ஒரு காலம் இருந்திருக்கலாம். ஹிமயமலையும் கங்காநதியும் இல்லாத காலம் ஒன்றும் இருந்திருக்கலாம். இதுபோலவே நமது நாட்டில் இப்பொழுது காணப்படும் பிற இயற்கை அமைப்புக்களில் பல இல்லாத காலம் ஒன்றும் இருந்திருக்கக் கூடும். பூர்வ சரிதத்தின் ஆதாரத்தைக் கொண்டு நாம் தீர்மானிப்போமாகில், இனிமேல் வரப்போகும் ஓர் எதிர் காலத்திலே இந்தியாவின் இயற்கை அமைப்புக்களின் தோற்றமானது இந்நாளில் இருப்பதுபோல இராமல் மிகவும் மாறுபட்டு, வேறு வகையாக இருக்கும் என்று கூறுவதில் யாதொரு பிசகும் கிடையாது.

நான் சொல்லும் இவ்விஷயத்தைப் பாமர ஜனங்கள், மாத்திரையை விழுங்குவதுபோல, கண்ணை மூடிக்கொண்டு ஒரே யடியாக விழுங்கமாட்டார்கள் என்று எண்ணுகிறேன். அவர்கள் ஒவ்வொன்றுக்கும் காரணம் கேட்பார்கள். வர்த்தமானப் பத்திரிகைகளை ஒழுங்காகப் படித்து வருவோர்களுக்கு ஒவ்வொரு தேசத்தின் இயற்கை அமைப்பும் மாறிக்கொண்டே வருகிறதென்பதை நம்புவதில் அதிகக் கஷ்டம் இருக்காது. ஏனென்றால், அநேகமாக ஒவ்வொரு நாளும் பத்திரிகையில் இங்கே பூமி அதிர்ந்தது, இங்கே எரிமலை வெடித்தது, இங்கே வெள்ளம் பெருகிற்று, இங்கே புயல் காற்று அடித்தது, இங்கே மலைச்சாரல் சரிந்தது என்பனவற்றை எல்லாம் அவர்கள் படிக்கிறார்கள். இவற்றுள் ஒவ்வொன்றும், அது அது நிகழும் இடங்களில் எல்லாம், மிக்க மாறுபாடுகளை விளைவிக்கத்தான் செய்கின்றது. உதாரணமாக, 1905-ம் வருஷத்தில் ஏற்பட்ட காங்க்ரா பூகம்பமானது டோரானேின் உயரத்துக்கும் முஸ்ஸாவிரியின் உயரத்துக்கும் உள்ள வித்தியாசத்தை ஓர் அடி அதிகப்படுத்தியது என்று கூறப்படுகிறது. தக்காணத்திலே புல்தானா ஜில்லாவிலே காணப்படும் மிக்க சிறப்பு வாய்ந்ததும் ஒரு மைல் குறுக்களவும் 300 அடி ஆழமும் உள்ளதுமாகிய லோனார் ஏரியை உண்டாக்கியது பூமியின் அதிர்ச்சியே தவிர வேறல்ல. ஆகையால் இயற்கைத்தாயின் தொழிலாளிகளாகிய இவை யாவும் தாம் விஜயம் செய்யும் பிரதேசங்கள் அனைத்தையும் ஆணித்தரமாகப் பாதிக்கின்றன. ஆயினும் இந்த இடங்களெல்லாம் பெரும் தேசத்தின் சிறு பகுதிகளாகவே இருந்து வருவதாலும், இம்மாறுபாடுகள் அனைத்தும் பெரும்பாலும் அவற்றின் மேல்மட்டத்தில் மட்டிலுமே நிகழ்ந்து வருவதாலும், அச்சிறு பிரதேசங்களை மட்டிலும் கருதும்போது இம்மாறுபாடுகள் யாவும் பெரியனவாகவே தோன்றுகின்றன. ஆயி

னும் தேசமுழுவதையும் ஓரே கண்ணுய்ப் பார்க்கும்போது இவற்றைக் கேவலம் கொசுக்கடிகளென்றே கூறவேண்டும். பூமி முழுவதையும் ஒரு கண்ணுல் பார்த்து விட்டாலோ, இவற்றின் அளவு இன்னும் சிறிதாகவே தோன்றும். ஆயினும் ஒரு தேசத்தில் பற்பல பிரதேசங்களில் இவ்வாறு லக்ஷக்கணக்காக நிகழும் நிகழ்ச்சிகளுள் ஒவ்வொன்றும் தனித்தனியாகப் பார்க்கும்பொழுது கொசுக்கடி போன்றதேயாயினும், நாளடைவில் அவற்ருல் உண்டாகும் மாறுபாடுகள் நமது கண்களுக்கு நன்கு புலனுகக் கூடிய அளவில் பெரிதாக அமைந்துவிடும். தேசத்தின் இயற்கை அமைப்பும் எளிதில் புலனுகக்கூடிய அளவில் மிகவும் மாறித் தோன்றும். 'எறும்பு ஊரக் கற் குழியும்' என்பது பழமொழி யல்லவா? அது போலவே சின்னஞ் சிறு அளவிலே உள்ளனவாயினும் மீண்டும் மீண்டும் நிகழ்ந்துவரும் இம் மாறுபாடுகளின் தொகுதியினுல் ஏற்படும் மொத்த அளவானது யாவர்க்கும் எளிதில் புலப்படத்தக்க பெரிய அளவைப் பெற்று விடுகிறதில் என்ன விந்தை?

இப்படிச் சற்று முரட்டுத்தனமாக நிகழும் நிகழ்ச்சிகளைப் போலவே, மெதுவாக நடந்தேறி வருவனவாயினும் இடையருது பன்னெடுங் காலமாக நடந்துவரும் சாதாரணக் காரியங்களும் பூகோள மாறுபாடுகளை விளைவிப்பதில் காரணபூதங்களாயிருந்து தம்மாலியன்ற அளவு அம் மாறுபாடுகளை உண்டாக்கி வருகின்றன. ஓடி ஓடி மண்ணையும் கல்லையுமே கரைத்து நதிகள் உண்டாக்கும் மிக்க ஆழமான கார்ஜ் எனப்படும் படுகைகளையும், அவ்வாறு கரைத்தெடுத்துக் கொண்டோடும் மண்ணுனது படிவதால் அவற்றின் முகத்துவாரப் பக்கங்களில் உண்டாகும் டெல்டாக்களையும் இவற்றுக்கு உதாரணமாகக் கூறலாம். ஆதலால் நமது பூமியின் வதனமாகிய மேற்பரப்பின் லக்ஷணமானது மணிக்கு மணி நிமிஷத்துக்கு நிமிஷம் மாறிக்கொண்டே வருகிறது. ஆயினும் இவ்வகை மாறுதலானது நமது மனத்தாலும் நாம் கிரகிக்க இயலாத சின்னஞ் சிறு அளவிலேயே நடந்து வருவதால் அப்போதைக்கப்போதே இம் மாறுதல் நமக்குப் புலனுவதில்லை. ஆயினும் சென்ற பத்து லக்ஷம் வருஷங்களாக எவ்வளவு மாறுபாடுகள் உண்டாயிருக்கின்றன வென்று ஓரே மொத்தமாக நாம் பின்னேக்கிப் பார்ப்போமானுல் அப்பொழுது இயற்கைத் தாயின் காரியாதிகாரிகளுள் மிகவும் சாதுவானவை, அமைதியானவை, என்று நாம் கருதத்தகும் இவை செய்துவரும் வேலையின் அளவு ஒருவாறு புலனுகும். வாஸ்தவத்தில், நதிகளை ஒட்டிய மேட்டூர் சுக்கூர் போன்ற அணைக்கட்டு ஏற்பாடுகளும், பனமா கால்வாய் சூயெஸ் கால்வாய் போன்ற நீர்ப்போக்கு

வரவு சாதனங்களும், மலைகளைத் துளைத்து ஊடுருவிப் பாதைகள் போடுவதும், அவற்றைக் குடைந்து சுனைகளியற்றுவதும், சுரங்கங்களை வெட்டித் தோண்டுவதும், இவை போன்ற பிற யாவும் படாடோபமில்லாமல், நாட்டின் இயற்கையமைப்பை மாற்றும் தொழிலுக்கு உதவி புரிந்துகொண்டே வருகின்றன. கல்லையும் மண்ணையும் வெட்டி எடுப்பதும், அவற்றால் அக்கம் பக்கங்களிலுள்ள வீடுகளின் நிலைமைகளைக் கவனியாது பாதைகளை உயர்த்துவதும் நாம் மேற்கூறிய செயலுக்கு உதாரணமாக இருந்து வருகின்றன. இவ்வாறு நிகழும் நிகழ்ச்சிகளை நமது தலைநகராகிய சென்னையில் சாதாரணமாய்க் காணலாம். ஆதலால் பிற துறைகளில் அது செய்துவரும் தொழில் எக்குணத்ததாயினும் பூதத்துவ சாஸ்திரவிஷயத்தில் நமது சென்னை நகரபரிபாலன சபை செய்துவரும் வேலையை நாம் குறைத்துக் கூறமுடியாது.

இப்படி மிகவும் மெதுவாகக் கொஞ்சம் கொஞ்சமாக நிகழ்ந்து வரும் நிகழ்ச்சிகளும்கூடக் கவனிக்கத்தக்க அளவிலே மாறுபாடுகளை நிகழ்த்தி விடுகின்றன என்று கூறுவது சற்றுப் பயித்தியக்காரத்தனமாகவே தோன்றும். உண்மையில் அப்படி அல்ல. உதாரணமாக ஒரு மனிதனுடைய வளர்ச்சியைக் கவனிப்போம். அவன் கண் ஒன்று தோண்டி யெடுக்கப்படுவதும், கையோ காலோ வெட்டித் தள்ளப்படுவதும், க்ஷயரோகம் போன்ற கெட்ட நோய் வாய்ப்படுவதும் ஒருவனது தோற்றத்தில் நன்கு தெரியக் கூடிய மாறுபாடுகளைத் திடீரென்று விளைவிக்கவல்லன, விளைவிக்கவும் செய்கின்றன. இவற்றைப் பூகம்பங்கள் எரிமலை வெடிப்புக்கள் போலத் திடீரென்று நிகழும் முரட்டு நிகழ்ச்சிகளோடு ஒருவாறு ஒப்பிடலாம். தலைமயிரை வெட்டிக்கொள்ளல் முதற்கொண்டு ஒருவனுடைய லக்ஷணத்தை மாற்றிவிடுகிறதல்லவா? திடீரென்று உண்டாகிய இப்படிப்பட்ட தாக்குகளுக்கு உள்ளாகாத மனிதருக்கும் கூடக் குழந்தைப் பருவத்தில் உள்ள முக ஜாடையானது யௌவனப் பருவத்தில் மாறிவிடுவதும், யௌவனப் பருவத் தோற்றமானது வயோதிக தசையில் மாறிவிடுவதும் நாம் யாவரும் நன்கு அறிந்த உண்மைகள். பிராயத்துக்குப் பிராயம் வேறாகக் காண்கிற இப்படிப்பட்ட தோற்ற மாறுபாடானது நிகழும்போது நமது கண்களுக்குப் புலனாகாத சிறு அளவில் உள்ளதாய் இடைவிடாது தொடர்ச்சியாக ஒவ்வொரு நிமிஷமும் வினாடியும் நடந்து கொண்டிருப்பதாய்த்தானே இருக்கிறது. இதுபோலவே காற்றும், நதிகளும், பனியாறுகளும் பிரதி நிமிஷமும் நில மாறுபாட்டைத் தம்மாலியன்ற அளவு இயற்றிக் கொண்டேயிருக்கின்றன. ஆனால் இம் மாறுபா

டானது அநேக லக்ஷ வருஷங்களுக்குப் பின்புதான் கண்ணுக்குத் தட்டுப்படக் கூடிய ஒரு பேரளவைப் பெறும்.

இதிலிருந்து நாம் அறிந்து கொள்ளுவது என்ன வென்றால், 'ஒரு தேசத்தின் பரிணாமத்தை ஒரு பத்தாண்டின் இறுதியிலோ ஒரு நூற்றாண்டின் இறுதியிலோ கணக்கிட்டுப் பார்க்க முடியாது, அச் சிறு காலத்துக்குள் புலனாகக் கூடிய ஓர் அளவில் அது நடந்து விடாது. லக்ஷக்கணக்கான வருஷங்களுக்குப் பின்போ, அல்லது கோடிக் கணக்கான வருஷங்களுக்குப் பின்போ தான் அது கண்ணுக்கு நன்கு தெரியக் கூடிய அளவில் நடந்தேறும்' என்பது தான். மில்லியன் மில்லியன் வருஷமாகக் (மில்லியன் என்பது பத்து லக்ஷம்) காலத்தைப் பிரித்து வைத்துக்கொண்டு அப்படியுள்ள ஒவ்வொரு நீண்ட காலத்தின் இறுதியிலும் அத்தனை காலமாக ஏற்பட்டுள்ள பேதங்களை ஒப்பிட்டு நோக்கினால் அப்பொழுதுதான் ஒரு தேசத்தின் இயற்கை அமைப்பானது எப்படிப் பரிணமித்து வருகிறதென்பது விளங்கும். ஆதலால் மேற்கூறியபடி பத்து லக்ஷம் ஆண்டுகள் கொண்டுள்ள பென்னம் பெரிய கால அளவை ஒன்றை நாம் ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். அந்தக் கால அளவையைக் கிரகிக்கும் அறிவு உணர்ச்சியைப் பெறவேண்டும். அவ்வுணர்ச்சியைப் பெற்றாலன்றி உலகம் தோன்றிய நாள் தொட்டு இன்றுவரை உலகத்திலே உண்டாகிவந்திருக்கிற மாறுபாடுகளின் தன்மைகளை நாம் சரிவர உணரமுடியாது.

இந்துதேச சரித்திரத்திலே ஹிந்து காலம் என்றும், முகம்மதிய காலம் என்றும், பிரிட்டிஷ் காலம் என்றும் வெவ்வேறு காலங்களைக் குறிப்பிட்டுச் சொல்லுகிறார்கள் அல்லவா? அவ்வக் காலத்தில் அரசு புரிந்து ஆதிக்கியம் பெற்று மேன்மை யடைந்திருந்தவரைக் கொண்டுதானே இவ்வாறு வகுத்திருக்கிறார்கள்? அது போலவே இந்த உலகத்தின் ஜீவிய சரிதத்தைப் பற்றிப் பேசும்போது உலகத்திலே நெடுங்காலம் நீடித்திருந்த சிற்சில யுகங்களிலே தலைசிறந்து எங்கும் பரவியிருந்த சிற்சில உயிர்வகைகளைக் கொண்டு பல்வேறு காலப் பிரிவினைகளாகப் பிரித்துக் கூறுவது இயலுகிறது. ஆதலால் அவ்வாறு கூறுகிறார்கள். உதாரணமாக, இப்பொழுது நடந்து வரும் காலத்தை **மானுட யுகம்** என்று குறிப்பிட்டுக் கூறுகிறார்கள். ஏனெனில், இப்பொழுது இப் பூமியில் வாழ்ந்துவரும் பிராணிகளுள் மானுட இனத்தைச் சேர்ந்த மனிதன் என்னும் ஜந்துவே தன்னுடைய தோல்வியறியா விடாமுயற்சியாலும், மிகுந்த ஊக்கத்தாலும், கூரிய அறிவாலும், திண்ணிய மனோ திடத்தாலும், இவை யாவற்றினும் சிறந்ததெனக் கருதத் தரும் பேசும்

திறமையாலும் மற்றெல்லாப் பிராணிகளினின்றும் வேறுபட்டுப் பிரிந்து தலைசிறந்து விளங்குகிறான். (இவன் இப் பூமியில் தோன்றி இரண்டரைக்கோடி வருஷ மிருக்கலாம், அல்லது மூன்று கோடி வருஷம் இருக்கலாம்.) புராதன காலத்துள்ள மனிதன் இப்பொழு துள்ள மனிதனைப்போல நாகரிகமுள்ள பிராணி யல்ல. அவன் முற்றிலும் நாகரிகமற்ற வெறும் ஜடஜந்துவாய்த்தான் இருந்தான். சிறிது சிறிதாக மாறி முதிர்ந்து நாகரிகம் பெற்றான். 'அப்படியானால் பூமியில் மனிதனே இல்லாத காலமும் ஒன்று இருந்ததுபோல் தோன்றுகிறதே. அப்படி மனிதனே இல்லாத காலம் ஒன்று இருந்த துண்டா?' என்று நீங்கள் கேட்கலாம். ஆம்; மனிதனே இல்லாத காலம் ஒன்று இருக்கத்தான் இருந்தது. அப்பொழுது மனிதன் என்னும் பிராணியே இல்லை. ஆனால் அந்தக் காலத்துக்கேற்ற சிற்சில விந்தையான விபரீத வடிவங்களுள்ள ஜந்துக்கள் இருந்தன. மானுட யுகம் என்று ஒரு காலத்தைப் பிரித்துக் கூறுவதுபோலவே வேறு சில காலங்களையும் **ஸ்தன்னியபான ஜந்து யுகம்** என்றும், **பக்ஷி யுகம்** என்றும், **ஊரும் பிராணிகளின் யுகம்** என்றும், **முதுகெலும்பில்லாப் பிராணிகளின் யுகம்** என்றும் பிரித்துக் கூறுகிறார்கள். அக்காலங்களை யெல்லாம் பிரத்தியேகமான குணங்களையுடைய தனிக் காலங்களாகப் பிரித்துப் பாகுபடுத்திக் கொண்டிருக்கிறார்கள். மிகவும் நீண்ட காலவரையறையுள்ள இப் பெருங்காலங்களுள் ஒவ்வொன்றையும் சற்றுச் சிறிய பகுதிகளாகவும் பிரிக்க முடியும். ஆயினும் இக்காலங்களைக் குறிப்பிடும்போது பத்து லக்ஷம் வருஷம் கொண்ட ஒரு பெருங்கால அளவையாகிய மில்லியன் வருஷங்களையே அளவு மாத்திரையாக உபயோகிக்க வேண்டியதாகிறது. பரிணாமமானது அவ்வளவு நிதானமாய்த்தான் நிகழ்ந்து வருகின்றது.

'இப்படி எல்லாம் சொல்லுவதற்கு ஏதேனும் ஆதாரங்கள் உண்டா? அல்லது எல்லாம் கட்டுக் கதைதானா? ஏதோ சில லக்ஷக்கணக்கான வருஷங்களுக்கு முன்புள்ள ஒரு காலத்திலே வேறு விதமான பலவகைப்பட்ட ஜந்து வகைகளும் செடி கொடி வகைகளும் வாழ்ந்து வந்தன என்பதற்கு அத்தாட்சிகள் எங்கே? அவற்றின் வடிவத்தையும் அமைப்பையும் வழக்க ஒழுக்கங்களையும் நாம் அறிந்து கொள்ளுவது எப்படி இயலும்?' என்று நீங்கள் கேட்கக்கூடும். பூமியின் உடலாயிருந்து பூமியை எங்கும் நிர்மாணித்துவரும் பாறைகளிலிருந்தே இவற்றை விளக்கும் ஆதாரங்கள்—இவற்றை ஸ்தாபிக்கும் ருசுக்கள்—நமக்குக் கிடைக்கின்றன. கல்வகைகளிலே **கிரானிட்** எனப்படும் உருக்குப் பாறை, **ஸான்ட் ஸ்டோன்** (மணற் பாறைக்கல்) எனப்படும் **வண்டல் பாறை**

ஆகிய இரு வகைகளையாவது அறியாதார் இரார். மேல் சொன்ன உருக்குப் பாறையை நன்றாய்ப் பரிசோதித்துப் பார்த்தால், அது அநேக வகையான பொருள்களின் சேர்க்கையினால் ஆகிய தென்பதும், அப்பொருள்களில் சில கண்ணாடியைப்போலப் பளபளப்பாயும் சில பால்போல வெளுப்பாயும் இருக்கின்றன என்பதும், அதிலே அப்பிரகம் போன்ற வேறு சில பொருள்கள் இருக்கின்றன என்பதும் தெரியவரும். இவற்றுள் ஒன்றுக்காவது குறிப்பிட்ட கிரிஸ்டல் வடிவம்—படிக வடிவம்—ஒன்றும் இருப்பதாக வெளித் தோன்றுவதில்லை. மணற் பாறைக் கல்லிலோ வெனில், அதில் காணப்படும் மணல் ரவைகள் அடுக்கடுக்காக அடுக்கிவைக்கப்பட்டன போல் காணப்படுகின்றன. மணற் பாறையானது எவ்வளவு பெரிய அளவுள்ளதாயிருந்தாலும், அது தட்டுத் தட்டாய் அமைந்திருப்பது பார்ப்போர் யாவர்க்கும் எளிதில் புலனாகும். மேலும் அதில் சிப்பிகளின் முத்திரைகள் சிற்சில இருந்தாலும் இருக்கும்; அல்லது ஒன்றிரண்டு சிப்பிகள்கூட அகப்பட்டாலும் அகப்படும். இவற்றை யெல்லாம் நாம் எளிதில் பார்க்கலாம். மற்றொன்றோவெனில் உருகிய கற்பொருளால் உண்டாக்கப்பட்டது. ஆதலால் அதற்கு ஆக்கினேயப் பாறை என்ற பெயர் இடப்பட்டிருக்கிறது. மணற்பாறையானது நீரின் உதவியால் உண்டாக்கப்படுகிறது. ஆதலால் அதற்கு ஜலப்பாறை என்ற பெயர் கொடுத்திருக்கிறார்கள். அதற்கு வண்டல்பாறை என்று மற்றொரு பெயரும் உண்டு. மணற்கல் எப்படி உண்டாகிறது என்பதைச் சென்னையில் கடற்கரை ஓரத்திலே போனால் பார்க்க முடியும். அங்கே கடலின் ஓரத்திலே மணலை ஜாக்கிரதையாகத் தோண்டினால் மணலானது அடுக்கடுக்காகப் படிந்து வருகிறது என்பதைக் கவனிக்க முடியும். ஒவ்வோர் அலையும் கடலிலிருந்து கரையின்மீது தாக்கும்போது, தான் தான் தாங்கிய பொடி மணலைக் கரையின்மீது படியச் செய்துவிட்டுப் பின்வாங்குகிறது. அலையலையாய்ப் பொடி மணலானது கரையின்மீது படிந்து வருகிறது. கரையில் தாக்கி முறிந்து மடிந்து விழும் அலையானது பொடிமணலைத் தகடுபோல் இலேசாகப் பரப்புகிறது. அதனை அடுத்து வரும் மற்றோர் அலையானது அம் மெல்லிய இலேசான மணற் பரப்பின்மேல் தான் தாங்கிய மணலை இலேசாகப் பரப்புகிறது. இப்படியே ஒவ்வோர் அலையும் செய்துவருகிறது. இத்தகைய காரியமானது ஓயாது ஒழியாது நடந்துவருகிறது. ஆகையால் இதனால் 500 அடி கனமுள்ள வண்டல்கூடப் படிந்து விடக்கூடும். மேலே கனம் ஏற ஏற அடியிலே உள்ள மணல் பரப்புக்கள்

மேலுள்ள கனத்தினல் அழுத்தப்பட்டு இறுகிக் கட்டியாகி வருகின்றன. இவற்றினிடையே ஊடுருவிக் கசிந்து வரும் நீரில் இரும்போ அல்லது சுண்ணும்போ இருந்தால், அது இவ்வாறு இறுகிவரும் மணற்பொருளை நன்கு பிணைத்து ஒரே கட்டியாக்கி விடும். இவ்வாறு தான் இறுகிய, கட்டியான, மணற்கற்பாறை உண்டாகின்றது.

மணலை அடுக்கடுக்காகப் பரப்பும் அலைகள் கடல் நீரில் மிதந்தும் படிந்தும் கிடக்கும் பிற பொருள்களையும் மணலோடு மணலாய்க் கரையிலே கொண்டு ஒதுக்குகின்றன. இவ்வாறு கடல்வாழ் பிராணிகளின் எலும்புக்கூடுகளும், சிப்பிகளும், சிறு கட்டைத் துண்டுகளும், இவை போன்ற பிறவும் அலைகளால் அடித்துக் கொண்டுவரப்பட்டு, கரையின் மீது ஒதுக்கப்பட்டு, மணலோடு படிகின்றன. கடற்கரையைக் காதலிக்கும் மனிதர்களும், கடற்கரையில் உலாவிவரும் காதலர் காதலிகளும் தமது அடிச் சுவடுகளை இம் மணல் அடுக்கின்மேல் இடுகின்றனர். கடலோரமாய் சைகிள் ஒன்றைத் தள்ளிச் செல்லும் ஒருவனது சைகிளின் சக்கரத்திலுள்ள ரப்பர் டைரின் அடையாளமும் அம் மணலில் முத்திரை போல் பதிந்து விடுகிறது. இதுபோலவே கடற்பிராணிகளின் உடலின் கட்டிப் பாகங்களும் மேற்கூறிய பல் வகையான முத்திரைகளும் மணலில் அழகாய்ப்பதிந்து கெடாது நன்கு காப்பாற்றி வைக்கப்பட்டு வருகின்றன. ஆதலால் 500 அடி கனமுள்ள ஒரு பாறையை எடுத்துக் கொண்டால், அதிலே அடிப்புறமுள்ள அடுக்குக்களிலே காணப்படும் சிப்பிகளின் முத்திரைகளெல்லாம் அடி அடுக்குக்கள் படிப்படியாகப் படிந்து வந்த ஒரு பழைய காலத்திலே வாழ்ந்துவந்த பிராணிகளின் முத்திரைகளாகத்தாம் இருக்கவேண்டும் என்பது தெளிவு. அதுபோலவேதான் மேன்மட்டத்தில் பதிந்து தோன்றும் முத்திரைகள் என்பதும் தெளிவு. இதை இன்னும் ஓர் உதாரணத்தால் தெளிவாக்குகிறேன். மேற்கூறிய பாறையிலே மேன்மட்டத்திலிருந்து மூன்று அங்குல தூரத்துக்கு அடிப்புறத்தில் காணப்படும் ஓர் அடுக்கில் டன்லப் ரப்பர் டைரின் முத்திரையானது தெளிவாகக் காணப்படுமாயின், அதன் மேல்புறமுள்ள வண்டல் எல்லாம் டன்லப் டைர் கம்பெனி ஏற்பட்ட பிற்பாடேதான் உண்டாயிருக்கவேண்டும் என்பது உறுதியல்லவா? இவ்வாறு முடிவு கொள்வது, விஷயங்களை நேருக்கு நேராகப் பார்த்து ஒழுங்காக ஊகிக்கும் சர்வசாதாரணமான ஒரு முறை. குதர்க்கமேசெய்யும் சில வக்கீல்கள் பின்பற்றும் விபரீதமான கோணல் முறையல்ல.

இவ்வாறு பாறைகளினிடையில் காணப்படும் சிப்பிகளின் தன்மைகளிலிருந்தும், வேறுசில சேஷங்களின் குணுகுணங்களைக்

கொண்டும், பாறைகளின் வகைகளிலிருந்தும்—அதாவது அவற்றின் அமைப்புமுறை அமைப்புப் பொருள்கள் இவற்றிலிருந்தும்—சம காலத்தில் வாழ்ந்து வந்த பிராணிகளிலிருந்தும், அப்பிராணிகளின் கூட்டுறவிலிருந்தும் இவ்விஷயங்களை எல்லாம் ஆராய்ந்து முதிர்ச்சி பெற்ற அறிவாளிகள் சிலர் அக் காலத்தில் வாழ்ந்துவந்த ஜந்துக் களும் தாவரங்களும் இன்ன இன்ன வகைகளைச் சார்ந்தன என் பதையும், அவற்றின் வழக்க ஒழுக்கங்கள் யாவை என்பதையும், அவை உயிர் வாழ்க்கை புரிந்தது இவ்வாறு என்பதையும், அக் காலத்திலிருந்த சீதோஷ்ண நிலைமைகளும் பூமியின் ஸ்திதியும் இன்ன இன்னவாறு இருந்தன என்பதையும் கண்டுபிடித்து விடு கிறார்கள். மேற்கூறியபடி பாறைகளுள் பதிந்து காணும் சேஷங் களுக்குப் **பாசில்கள்** அல்லது சிலாபவங்கள் என்ற பெயரை இவர் கள் இட்டிருக்கின்றனர். பாசில்கள் செறிந்து காணும் பாறைகள் புராதன காலத்தை நாம் அறியாதபடி மூடுகின்ற கதவுகளைத் திறக் கும் சாவிகளாயிருக்கின்றன. அவற்றின் உதவியாலன்றோ நாம் புராதன காலத்தைப்பற்றிய விஷயங்களை நேராகப் பார்ப்பதுபோல் அறிந்து கொள்ள முடிகிறது ?

அத்தகைய அடுக்குப் பாறைகளை இயற்கைத்தாயின் போடோ கிராப் படங்கள் வைக்கும் புஸ்தகம் என்றும் கூறலாம். ராமன் வீட்டிலுள்ள போடோகிராப் படப்புத்தகம் ஒன்றைப் பார்த்தால் அதில் ராமன் படங்கள் சில இருக்கும். அவன் தகப்பனாரின் படங்கள் சில இருக்கும். அவன் பாட்டனாரின் படங்கள் சில இருக் கும். இவற்றை எல்லாம் நாம் நுணுகிப் பார்த்தால், முதல் பக்கங் களிலே காணப்படும் பாட்டனாரின் படங்களிருந்து அவர் மிகவும் வைதிகமான மதப்பற்றுள்ள பெரியவர் என்பது தெரியவரும். அவற்றிற்குப்பின் காணப்படும் தகப்பனாரின் படங்களைப் பார்க் கும்போது, அவரது உடைகள் முதலியவற்றாலும் பாட்டனாரிடத்து மிகுந்து விசேஷமாகக் காணப்படும் வைதிகச் சின்னங்களில் ஒன்றும் அவர்படங்களில் காணப்படாமையாலும் மேல்நாட்டு நாகரிகத்தில் அவர் அதிகமான பற்று உடையவராயிருந்திருக்க வேண்டும் என் பது விளங்கும். அதற்குப்பிறகு ராமனுடைய படங்களைப் பார்க்கும் போது அவன் முற்றிலும் மதப்பற்று அற்றவன், மதத்துவேஷியும் கூட ஆவான், அதனோடு மேலைய நாகரிகத்திலே முற்றிலும் மூழ்கி நடை உடைபாவனைகளிலே மேலைநாட்டினரைப் போலவே ஆகிவிட் டான், அதனால் அந்நாட்டிலிருந்தே தன் மனதிற்கிசைந்த காதலி யைத்தேடி மணந்து கொண்டான் என்பது மலை இலக்காக இருக் கும். ஒரு போடோகிராப் படப் புத்தகத்தினின்று ஒரு குடும்

பத்தில் ஏற்பட்ட மாறுதல்களை அறிந்து கொள்வது நமக்கே எளிதாக இருக்கிறதல்லவா ? அப்படியானால் இயற்கைத்தாயின் கற்பொருளினலாகிய போடோகிராப் படப்புத்தகத்தினின்று அறிவிலும் ஆராய்ச்சியிலும் ஊகத்திலும் சிறந்த சிற்சிலர் பூமியில் தோன்றியுள்ள ஜந்துக்களின் மாறுபாடுகளையும் தாவரங்களின் மாறுபாடுகளையும் அறிந்து கொள்ளக்கூடும், அறிந்து கொள்ளுகிறார்கள் என்பதை ஒப்புக்கொள்ளுவதில் என்ன தடை இருக்க முடியும் ?

ஆதலால் ஓரிடத்தில் கடல்வாழ் பிராணிகளின் சேஷங்கள் மலிந்து காணப்பட்டால், அந்த விஸ்தாரமான பூப்பிரதேசமானது




பூமி நசுங்கி மடிந்து உயர்ந்து கரைந்து குறைந்து அமைந்து வருகின்ற தோற்றம்.

இப்பொழுது தரையாயிருப்பினும் முன்னொரு காலத்தில் அது கடலாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று நாம் ஐயமறத்துணிந்து கூறலாம். திருச்சிராப்பள்ளிக்கு அடுத்த உதத்தூர் என்னும் ஊர் முன்னொரு காலத்தில் கடலுள் ஆழ்ந்த பிரதேசமாய்த்தான் இருந்திருக்க வேண்டுமென்பது திண்ணம். கடப்பை கர்னூல் ஜில்லாக்களில் உள்ள மலைத்தொடர்கள் ஜலப் பாறைகளால் ஆகியனவாய்க் காணப்படுகின்றன. ஆதலால் அந்தப் பிரதேசம் முழுவதும் முன்னொரு காலத்திலே நீரால் மூடப்பட்டிருக்க வேண்டும் என்பது

உறுதி. கற்பிரவாகமாகிய லாவாவினல் பம்பாய் மாகாணத்தின் பெரும் பகுதியானது மூடப்பட்டதாய்க் காணப்படுகிறது. ஆதலால் புராதன காலத்திலே அங்கே எரிமலைகள் இருந்திருக்க வேண்டும், எரிமலை வெடிப்புக்கள் அங்கே நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. இவற்றைப் போலவே பிற விஷயங்களையும் ஊகித்துக் கொள்வது எளிதாகும்.

எல்லையற்ற ஆகாயத்தின் கண்ணே, பூமியும் மற்றக் கிரகங்களும் இக்காலத்திலே சுழன்று வருகின்ற பிரதேசம் முழுவதும் மிகப் பழையதொரு காலத்திலே மிக மெல்லியதாயும், மனத்தாலும் நினைக்க இயலாத உஷ்ணத்தை உடையதாயும் இருந்த ஒரு வகைக் காற்றுப் பொருள் நிரம்பிக் கிடந்தது. காற்று நிலையிலுள்ள இந்தப் பொருளானது டென்னிஸ் பந்தைப் போல உருண்டையான வடிவத்தை உடையதாய் இருந்தது. ஆரம்பத்திலே இதன் அளவானது மிகவும் மனதிற் கெட்டாதபடி பெரியதாய் இருந்தது. இப்பொழுது நமது பூமி அடைத்துக் கொண்டிருக்கும் இடத்தை மட்டிலுமல்ல, சூரியன் சந்திரன் பிறகிரகங்கள் எல்லாம் இப்பொழுது ஆகாயத்தில் அடைத்துக் கொண்டிருக்கும் இடம் முழுவதையுமே இது அடைத்துக் கொண்டு மிகவும் விஸ்தாரமாகப் பரவி இருந்தது. இக்காற்று, பம்பரம் போல் அந்தரத்தில் சுழன்று கொண்டு இருந்தது. நாற்றிசைகளிலும் இதன் சூடு பரவிய காரணத்தால் இது சூட்டை வரவர இழந்து வந்தது. அதோடு அளவிலும் சுருங்கத் தொடங்கியது. இதன் அளவு வரவரச் சுருங்கி வந்தபடியால் இது சுழலும் சுழற்சியின் வேகமானது அதற்கேற்றபடி வரவர மிகுந்து அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. இவ்வாறு மிகுந்து வந்த வேகத்தின் பயனாகச் சுழலும் உருண்டையானது சுழற்சிக்கு ஆதாரமான இருகோடிகளிலும் சற்றுத் தட்டையாகியது; மையப் பிரதேசத்தில் மட்டிலும் சற்று உப்பத் தொடங்கிற்று. ஆகர்ஷண சக்தியானது இவ் வுருண்டையை இறுக்கி இதன் அளவைச் சுருக்க முயன்றது. சென்ட்ரி பியூகல் (நடுவிற் பிரியும்) சக்தியானது இதை விரித்து இதன் அளவைப் பெருக்க முயன்றது. இவ்விரண்டினுள் ஆகர்ஷண சக்திதான் வலியில் மிகுந்தது. ஆதலால் இந்த உருண்டையின் நடுவானது இறுகத் தொடங்கியது. அப்படி நடு இறுகி வரும்போது இதன் மத்தியப் பிரதேசத்தைச் சுற்றிக் காற்றுப் பட்டை ஒன்று இறுகாதபடி காற்ருகவே எஞ்சி நின்றது. இவ்வாறு உருண்டை இறுக இறுக அதன் மத்தியரேகையைச் சுற்றிய பிரதேசத்திலே வளையத்துள் வளையமாய்ப் பற்பல காற்று வளையங்கள் உண்டாய்க் கொண்டே வந்தன. ஒவ்வொரு வளையத்திலும் பல வகையான காற்றுக்கள் கலந்து காணப்பட்டன. அவற்றுள் சிற்சில

காற்றுக்கள் கனமும் இறக்கமும் மிகுந்தவை. சிற்சில இலே சானவை. ஆதலால் ஆகர்ஷண சக்தியின் விதிப்படி இறக்கம் மிகுந்த காற்றுக்கள் இலேசான காற்றுக்களைத் தம்மிடத்தில் ஆகர் ஷித்துக் கொண்டன. அதனால் வளையமானது விண்டு போய்ப் பிண்டமாயிற்று. இப்பிண்டமும் தன் வடமுனை தென் முனைகளை ஆதாரமாகக் கொண்டு சுழன்றது ; முன்னால் வளையம் கிடந்த இடத் தையே பாதையாகக் கொண்டு சுற்றி ஓடிக்கொண்டு இருந்தது ; காற்று நிலையிலுள்ள இந்தக் குட்டிப் பிண்டமும் நாளடைவில் ஒரு வளையத்தை ஈன்றது. அவ்வளையமும் காலக் கிரமத்தில் பிண்ட மாயிற்று. இதனிடையில் பழம் பெரும் பிண்டமும் மற்றொரு சந்ததியைப் பெற்றது. ஆகவே ஒரு காலத்தில் நான்கு பிண்டங்கள் காணப்பட்டன. பாட்டன் ஒன்று, பிள்ளைகள் இரண்டு, பேரன் ஒன்று ; இவற்றுள் இரண்டு சிறிய தகப்பன், பிள்ளை என்கிற முறை யில் உள்ளன. இவற்றின் உருவங்கள் எவ்வாறு மாறி வந்தா லும் பழைய சுழற்சி முறையையும் சுற்று முறையையும் இவை விடாது பின்பற்றி வந்தன. சிற்சில வேளைகளில் விபரீத கதிகளும் இவற்றுக்கு ஏற்படுவதுண்டு. சில குடும்பங்களில் விபரீதமான நடத்தையுள்ள சிற்சில குழந்தைகள் பிறப்பது போல, இதுவும் அசாதாரண சம்பவமேயொழிய வேறல்ல. பழைய உருண்டைப் பிண்டம் தான் சூரியன். அதைச் சுற்றி ஓடும் மற்ற உருண்டைகள் எல்லாம் அதன் வமிசத்தைச் சேர்ந்த கிரகங்களும் உபகிரகங்களும். கிரகங்கள் இருக்கும் இடங்களைப் பற்றியும் அவற்றின் கதிகளைப் பற்றியும் வான சாஸ்திரிகள் நுண்ணிய ஆராய்ச்சிகள் பலவற்றைச் செய்து இக்கொள்கையின் உண்மையை ஒருவாறு நிலை நிறுத்தியிருக் கின்றனர்.

(தொடரும்)

# சிற்றோடை

சூடாமணி



I

செங்கால் நாரை கருநாரை
சேருங் குன்றிற் பிறந்தேனே.
தங்கா துடனே குதித்திறங்கித்
தழைத்த பன்னைச் செடியூடே
பொங்கா நுரைத்துப் பளபளத்துப்
பொட்டென் றிறங்கி வருவேனே.
அங்கோர் பள்ளத் தாக்கினிலே
அலறி மண்டி வருவேனே.

II

காரார் மலைகள் அத்தனையும்
கடிதிற் கடந்தே இழிவேனே.
நீரார் பள்ளத் தாக்கினிலே
நெளிந்து நழுவி வருவேனே.
சீரார் சிற்றூர் பலபலவும்
சிறிய நகருங் கடந்தோடி

---

ஆங்கிலத்தினின்று மொழி பெயர்த்தது.



நேராய்ப் பாலம் ஒருநூறும்
நெருங்கி நுழைந்து வருவேனே.



III

கண்ணார் கந்தன் வாழ்கின்ற கழனி யருகே கரைபுரளும்
தண்ணார் நதியிற் கலந்திடவே தாவி யோடிச் செல்வேனே.
மண்மேல் நிலையா மானிடர்கள் வந்து வந்து போவார்கள் ;
மண்மேல் நானே என்றென்றும் மன்னி யோடிச் செல்வேனே.



# கண்ணெதிரே களவுபோன கடிதம்

பேஞ

காலம்: 18—ம் வருஷம். இலையுதிர் பருவம். அஸ்தமித்த தறுவாய். சூரியன் மேல் திசையில் மறைந்து விட்டான். இருள் மேன்மேலும் அதிகரித்து எங்கும் மூடிக்கொண்டு வருகிறது. காற்ருனது விட்டு விட்டு விர் விர்ரென்று அடித்துக் கொண்டிருக்கிறது. இடம்: பாரிஸ் நகரம், போபூர்க் ஸாந்த் ழெர்மென், தூனே வீதி, 33-ம் நிர் வீடு. அதன் பின் புறமாயுள்ள புத்தகங்கள் நிறைந்த ஒரு சிறு படிப்பறை. அதிலே என் நண்பன் சி. ஓகஸ்தெ தூபெனும் நானுமாகச் சாய்வு நாற்காலிகளில் சாய்ந்து கொண்டு, வாயில் 'பைப்' வைத்துக் கொண்டு புகையிலைப் புகையைக் குடித்துக் கொண்டும் மனக்கோட்டைகளைக் கட்டிக் கொண்டும் இரு வகையான சுகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தோம். ஒரு மணி நேரத்துக்கு மேலிருக்கும் நாங்கள் இருவரும் வாய் திறந்து பேசாமல் மௌனத்தில் ஆழ்ந்திருந்த நேரம். அப்பொழுது யாராவது ஒருவன் தற்செயலாய் எங்களைப் பார்த்திருந்தால், அறை முழுவதும் நிரம்பிக் கிடந்த புகை மண்டலத்தின் ஊடே எங்கள் வாயினின்று சுழன்று சுழன்று மேலே எழுகின்ற புகை வளையங்களைக் கவனிப்பதிலேயே நாங்கள் இருவரும் முற்றிலும் ஈடுபட்டு ஆழ்ந்து கிடந்தோமென்றும், எங்களுக்கு வேறெவ்விதமான நினைவும் அவ்வேளையில் இருந்திருக்க முடியாதென்றும்தான் எண்ணியிருப்பான். ஆனல் வாஸ்தவம் அப்படியல்ல. நான் சம்பந்தப்பட்ட மட்டில், அன்று சாயங்காலம், சிறிது நேரத்துக்கு முன்பாக, நாங்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்த சில விஷயங்களைப் பற்றி என் மனத்துக்குள்ளேயே ஆலோசனை செய்து கொண்டிருந்தேன். அவை என்னவெனில், மோர்க்யு வீதியில் நடந்த சம்பவமும், மாரி ரோஷேயின் கொலையின் இரகசியமும். நான் இவ்வாறு யோசனையில் ஆழ்ந்திருந்த போது எங்கள் அறைக் கதவு திடீரெனத் திறக்கப்பட்டது. முன்பே எங்களுக்குப் பழக்கமுள்ள ஜி...என்பவன் உள்ளே வந்தான். அவன் பாரிஸ் நகரத்துப் போலீஸ் படையின்

---

எட்கர் ஆல்லன் போ என்பவர் எழுதிய கதையின் மொழி பெயர்ப்பு.

தலைவன். அவன் அந்த வேளையில் வந்து சேர்ந்தது 'காக்கை இருந்ததும் பனம்பழம் விழுந்ததும்' என்பது போன்று தற்செயலாய் நிகழ்ந்த நிகழ்ச்சியென்று கருதினேனே தவிர என் யோசனைகளுக்கும் அவன் வருகைக்கும் வேறெவ்விதமான சம்பந்தமும் இருந்ததாக நான் எண்ணவில்லை.

அவனை நாங்கள் மனமார வரவேற்றோம். ஏனெனில் அவன் எவ்வளவு இகழத்தகுந்தவனாயிருந்தானோ அதில் பேர்பாதி அளவாவது எங்களுக்கு நகைச் சுவையைத் தருபவனாய் இருந்து வந்தான். மேலும் அவனை நாங்கள் பார்த்தும் சில வருஷங்களாய் விட்டன. நாங்கள் எங்கள் அறையில் இருட்டிலேயே உட்கார்ந்து கொண்டிருந்தோமாதலால், தூபென் எழுந்து விளக்கேற்றப் போனான். அப்பொழுது ஏகப்பட்ட குழப்பத்தை உண்டாக்கிக் கொண்டிருந்த ஒரு அரசாங்கக் காரியமாக எங்களோடு கலந்து யோசிப்பதற்காக (அதாவது என் நண்பனுடைய அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ளுவதற்காக) வந்தானென்பதை ஜி...தெரிவித்தான். உடனே தான் ஏற்றப் போன விளக்கை ஏற்றாமல் தூபென் திரும்பி வந்து தன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

"யோசித்துச் செய்யவேண்டிய காரியமானால், இருட்டில் யோசிப்பது தான் நல்லது" என்றான் விளக்குத் திரியைக் கொளுத்தாது மீண்ட தூபென்.

"அதுவும் உன்னுடைய விசித்திரமான கொள்கைகளுள் ஒன்று" என்றான் போலீஸ்தலைவன். எது எது எல்லாம் அவனுக்கு விளங்கவில்லையோ, அவன் புத்திக்கு எட்டவில்லையோ, அதை அதை யெல்லாம் 'விசித்திரம்' என்று சொல்லுவது அவனுடைய வழக்கம். ஆகவே லக்ஷக்கணக்கான 'விசித்திரங்களுக்கு' நடுவில் அவன் வாழ்ந்து வந்தான். "நிஜம் தான்" என்று சொல்லிக்கொண்டே தூபென் அவனுக்கு ஒரு 'பைப்' எடுத்து நீட்டினான். சௌகரியமான நாற்காலி ஒன்றை இழுத்துப் போட்டு அதில் உட்காரச் சொன்னான்.

"இப்பொழுது என்ன கஷ்டம் வந்து விட்டது? படுகொலை, கெடுகொலை ஒன்றும் நடக்கவில்லை யென்று நம்புகிறேன்" என்றேன் நான்.

"அதெல்லாம் ஒன்றும் இல்லை. அப்பேர்ப்பட்ட பெரிய காரியம் ஒன்றும் நடந்துவிடவில்லை. வாஸ்தவத்திலே, நான் வந்த காரியம் மிகவும் சாமானியமான காரியம்தான். எங்களால் நிர்வகிக்க முடியாத பெரிய காரியமுமில்லை அது. நாங்களே அதைச்

சரிவரக் கவனித்து நடத்தவும் கூடும். ஆனாலும் அது மிகவும் விசித்திரமாக இருக்கிறது. ஆகையால் தூபென் அந்த விஷயத்தைப்பற்றிய விவரங்களை யெல்லாம் கேட்க விரும்புவான் என்று எண்ணி வந்தேனே தவிர வேறல்ல''

''சாமானியக் காரியமாம், விசித்திரமாயிருக்கிறதாம்!'' என்றான் தூபென்.

''ஏன்? அப்படித்தானிருக்கிறது. ஊன்றிப் பார்த்தால் அப்படியுமில்லை. வாஸ்தவத்தில், விஷயம் மிகவும் அதிசாமானியமாயிருப்பதால் எங்கள் எல்லோருக்கும் இன்ன செய்வதென்று தெரியவில்லை. அது எங்கள் எல்லோரையும் மடக்கி விட்டது''

''ஒரு வேளை அது அவ்வளவு சாமானியமாய் இருப்பதனால்தான் நீங்கள் எல்லோரும் ஏமாந்து போனீர்களோ என்னவோ!'' என்றான் என் நண்பன்.

''என்ன? வெட்டியாய்ப் பொருளில்லாக் கல்விப் பேச்சுப் பேசுகிறாயே'' என்று பதில் உரைத்துக் கொண்டே, விழுந்து விழுந்து சிரித்தான் போலீஸ் தலைவன்.

''இரகஸ்யமானது அதிசாமானியமாய் இருந்தாலும் இருக்கலாம்'' என்று மீண்டும் தூபென் சொன்னான்.

''அட! சிவ! சிவ! இந்த மாதிரி யாராவது கேட்டதுண்டா?''

''சற்று அதிகமான அளவில் கண்ணுக்கெதிரே பிரத்தியக்ஷமாய் இருக்கும்.''

''ஹா! ஹா! ஹா!—ஹா! ஹா! ஹா!—ஹோ! ஹோ! ஹோ!'' என்று உருண்டு உருண்டு சிரித்தான் எங்கள் விருந்தாளி. அவனுக்குத் தூபென் சொன்னது மிகவும் வேடிக்கையாக இருந்தது. ''தூபென்! இப்படி நீ பேசினால் ஒரு நாளில்லா விட்டால் ஒரு நாள் சிரித்து வயிறு வெடித்துப் போகும்படி என்னைச் செய்து என் மரணத்துக்குக் காரணமாய் விடுவாய்'' என்றான்.

''அதெல்லாம் கிடக்கட்டும். வந்த சமாசாரம்தான் என்ன?'' என்று கேட்டேன்.

''ஏன்? சொல்லுகிறேன் கேளுங்கள்'' என்று சொல்லிவிட்டு, பைப்பின் வழியாக ''பூ. . . .வ்'' என்று நீண்ட புகைச் சுருளைச் சமமாய் வெளியே விட்டுக் கொண்டு, நாற்காலியில் ஆர அமர உட்கார்ந்து கொண்டு, சற்று யோசனையில் ஆழ்ந்து, தொண்டையைக் கனைத்துக் கொண்டு ஆரம்பித்தான்: ''நான் விஷயத்தை மிகவும் சுருக்கமாகச் சொல்லி விடுகிறேன். ஆனால் நான் தொடங்கு முன்

உங்களிடம் ஓர் எச்சரிக்கை செய்ய வேண்டும். விஷயத்தைப் பற்றி: இது மிகவும் அதிரகசியமாக வைத்துக் கொள்ளவேண்டிய விஷயம். இந்த விஷயத்தைப் பற்றி நான் வேறொருவரிடம் பிரஸ்தாபித்தே னென்பது வெளியில் தெரிந்து விட்டால் என் வேலையே போனாலும் போய் விடும். ஆகையால் உங்கள் நெஞ்சை விட்டு இதை வெளியே விடக்கூடாது''

"சொல்லு'' என்றேன் நான்.

"இல்லாவிட்டால் வேண்டாம்'' என்றான் தூபென்.

"சரி. கேளுங்கள். மிக்க உன்னதமான ஒரு பெரிய இடத்தி லிருந்து எனக்கு நேராகச் சமாசாரம் ஒன்று கிடைத்திருக்கிறது: அரசருடைய அரண்மனையிலிருந்து அதிமுக்கியமான ஒரு பத்திர மானது களவாடப்பட்டது என்று. அதைத் திருடிய ஆசாமி யாரென்பதும் தெரியும். இதைப் பற்றித் துளி கூடச் சந்தேகமே யில்லை. அவன் அதை எடுக்கும்போது நேருக்கு நேராகப் பார்க்கப் பட்டான். அது இன்னும் அவன் வசம்தான் இருக்கிறது என்பதும் நிச்சயமாகத் தெரியும்.''

"அது எப்படித் தெரியும்?'' என்றான் தூபென்.

"பத்திரத்தின் இயல்பினின்றும், அப்பத்திரமானது திருடிய வன் கையினின்று வெளியேறி விட்டால்—அவன் கருதியிருக்கிறபடி உபயோகிப்பானாயின்—நிச்சயமாய்த் தோன்றவேண்டிய சிற்சில நிகழ்ச்சிகள் நிகழாததாலும் அவன் கையை விட்டு இதுவரையில் அது வெளியேறிவிட வில்லை என்பதைத் தெளிவாகச் சந்தேக மின்றி ஊகிக்க இடமிருக்கிறது.''

"இன்னும் கொஞ்சம் பகிரங்கமாக விஷயங்களைச் சொல்லு கிறது தானே'' என்றேன் நான்.

"சரி. இது மட்டும் தைரியமாய் வாய்விட்டுச் சொல்லலா மென்று எண்ணுகிறேன். இந்தக் காகிதம் யார் கையில் இருக் கிறதோ அவன் ஓர் இடத்தில் ஒரு விதமான சக்தியை உடையவனா யிருப்பான். அந்த இடத்திலே அந்தச் சக்தியானது மிகவும் மதித் தற்குரியதா யிருக்கும்'' என்றான். இந்த மாதிரி ராஜ்யவியவகார சம்பந்தமான, பொருள் விளங்காத, பரிபாஷையில் பேசுவதில் பொலீஸ் தலைவனுக்கு மிகவும் திருப்தி.

"நீ இவ்வளவு சொல்லியும் எனக்கு விஷயம் முற்றிலும் விளங்கவில்லை'' என்றான் தூபென்.

"விளங்க வில்லையா? சரி. கேள். நாம் பேர் சொல்லப்போகாத மூன்றாம் மனிதன் ஒருவனிடம் இந்தப் பத்திரத்தைக் காட்டி விட்டால் மிகவும் உன்னத நிலையிலுள்ள ஒரு பேர்வழியின் மானவ

III—9

மானத்தைப்பற்றிப் பெரிய சந்தேகம் ஏற்பட்டு விடும். இந்த விஷயத்தில் அந்தக் கடிதம் யாரிடம் இருக்கிறதோ அவனுக்குப் பெரும் சக்தி ஒன்று உண்டாகி விட்டது. யாருடைய மானமும் மன அமைதியும் ஆபத்துக்கிடமான நிலையில் இருக்கின்றன என்று சொன்னேனோ அந்த அதிமேன்மையான நிலையிலுள்ள பேர்வழியின்மேல், கடிதத்தைத் திருடிய இந்த ஆளுக்கு, ஒரு பிடியும் ஏற்பட்டுவிட்டது.''

நான் சொன்னேன்:— ''ஆமாம் இந்தப் பிடியானது, கடிதம் பறிகொடுத்த பேர்வழி திருடனைப் பற்றி எத்தகைய அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் என்பதைத் திருடன் எவ்வளவு தூரம் உணர்ந்திருக்கிறான் என்னும் விஷயத்தைப் பொறுத்துத் தானே இருக்கும்? யார் தான் துணிந்து—''

ஜி...சொன்னான்: ''திருடன் யார் தெரியுமா? டி...தான் திருடன். அவன் துணிவுக்கு அளவே கிடையாது. இது தான் செய்பலாம் இது தான் செய்யக்கூடாது என்ற வரம்பாவது, இது உசிதம் இது அனுசிதம் என்ற வரம்பாவது அவனுக்குக் கிடையாது. திருடின மாதிரியும் மிகவும் துணிகரமானது, மிகவும் சாமர்த்தியமானது. நாம் பேசிக்கொண்டிருக்கும் பத்திரமானது—உங்களிடம் ஒளிப்பானேன்? அது ஒரு கடிதம்—ஒரு பெரியவர்கள் தனியாக அரண்மனையிலே அந்தரங்க அறையிலே இருக்கும் போது அவர்களிடம் கொடுக்கப்பட்டது. அதை அவர்கள் படித்துக் கொண்டிருக்கும்பொழுது, அதை மற்றெந்தப் பெரியவர்களிடமிருந்து மறைக்க வேண்டுமென்பது முக்கியம் என்று எண்ணினார்களோ அந்தப் பெரியவர்கள் திடீரென்று அங்கே வந்தார்கள். அதனால் அந்தக் கடிதத்தை அப்பொழுதே முற்றிலும் படிப்பதற்குத் தடை ஏற்பட்டு விட்டது. உடனே ஏதாவது ஒரு மேஜையின் அறைக்குள் அதைத் திணித்துவிடலாமென்று அவசர அவசரமாய் அவர்கள் முயன்றதும் பயன்படாது போயிற்று. ஆகவே அந்தக் கடிதத்தைப் பிரித்தபடியே மேஜையின் மேல் வைக்கும்படி நேர்ந்து விட்டது. மேல் விலாசம் எழுதிய பக்கம் நல்ல வேளையாக மேற்புறமாக இருந்தது. அதில் எழுதியிருந்த விஷயம் அடிப்புறமாகப் போய் விடவே அந்தக் கடிதத்தை அங்கே வந்த பெரியவர்கள் கவனிக்க வில்லை. இந்த நெருக்கடியான சமயத்தில் மந்திரியாகிய டி...என்பவன் உள்ளே வந்தான். அந்தக் கடிதம் இருப்பது உடனே அவன் கழுகுக் கண்ணிலே பட்டது. அதன் மேல்விலாசம் எழுதியது யாருடைய கையெழுத்து என்பதைப் பார்த்த உடனேயே அடையாளம் கண்டுபிடித்துவிட்டான். யாருக்கு அந்தக் கடிதம் எழுதப்பட்டிருந்ததோ அந்தப்

பெரியவர்கள் குழப்ப முற்றிருப்பதையும் கவனித்தான். அதிலிருந்து அவர்களுடைய இரகசியம் என்ன என்பதை எளிதில் ஊகித்து அறிந்து கொண்டான். இதர காரிய விஷயமாகச் சிற்சில நடவடிக்கைகளை அவன் சுறுசுறுப்பாகவும் ஊக்கத்துடனும் வழக்கம் போல் நடத்திய பின், மேஜை மேலிருந்த கடிதத்தை ஒத்திருந்த ஒரு கடிதத்தைத் தன் சொக்காய்ப் பையிலிருந்து எடுத்தான். அதைப் பிரித்துப் படிப்பது போல் பாவனை செய்தான். மேஜையின் மேலிருந்த கடிதத்துக்குப் பக்கத்தில் அதை ஒட்டினாற் போல் வைத்தான். மறுபடியும் அரசியல் விஷயமாகப் பத்துப் பதினைந்து நிமிஷம் போல் பேசிக்கொண்டிருந்தான். கடைசியாகப் போய் வருகிறேனென்று விடை பெற்றுக்கொள்ளும் போது மேஜையின் மேல் இருந்த, தனக்கு பாத்தியமில்லாத, கடிதத்தையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டான். அது வாஸ்தவத்தில் யாருக்குச் சொந்தமோ அவர்கள் அந்தத் துணிகரமான காரியத்தைக் கண்கூடாகக் கண்டார்கள். ஆனால் மூன்றாவது பேர்வழி அவர்கள் அருகில் நின்று கொண்டிருப்பதை உத்தேசித்து அந்த விஷயத்தைப் பற்றி எச்சரிக்கை செய்யவாவது தடை செய்யவாவது மனம் துணியவில்லை. மந்திரியும் ஒன்றுக்கும் உதவாத தன் கடிதத்தை மேஜையின்மேல் வைத்து விட்டு மற்றொரு கடிதத்தை எடுத்துக் கொண்டு சவாரி விட்டு விட்டான்.''

‘‘சரி. சரி. இதிலே பிடி சரியான பிடியாயிருப்பதற்கு முக்கியமென்று நீ அப்பொழுது கேட்டாயே—அதாவது பறிகொடுத்தவன் திருடனைப் பற்றி என்ன எண்ணங்கொண்டிருக்கிறானென்பது திருடனுக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்பது—அது முற்றிலும் நிரம்பியிருக்கிறது இவ்விஷயத்தில்'' என்று தூபென் என்னைப் பார்த்துச் சொன்னான்.

‘‘ஆம். வாஸ்தவம்தான். இந்தப் பிரகாரம் கிடைத்த சக்தியானது சில மாதகாலமாக அரசாங்க விஷயங்களிலே மிகவும் அபாயகரமான அளவிலே உபயோகிக்கப்பட்டு வருகிறது. கடிதத்தைப் பறிகொடுத்தவர்களுக்குத் தம் கடிதத்தை எப்படியாவது திரும்ப வாங்கிவிட வேண்டியது அவசியம் என்பது நாளுக்கு நாள் பிரத்தியக்ஷமாகிக் கொண்டு வருகிறது. ஆனாலோ இது பகிரங்கமாகச் செய்யக் கூடிய விஷயமல்ல. கடைசியில் வேறு வகையொன்றும் தெரியாமல் ஏக்க முற்றவர்களாய் என்னிடம் இந்த விஷயத்தை ஒப்புவித்து விட்டார்கள்'' என்று கூறி முடித்தான் பொலீஸ் தலைவன்.

தூபென் புகையின் சூறாவளியினிடையே இருந்தவனாய், "உன்னைக்காட்டிலும் புத்திசாலியான அதிகாரி யார் அவளுக்கு அகப்படப்போகிறார்கள்? மேலும் யார் தாம் இருக்கிறார்கள்?" என்றான்.

"நீ முகஸ்துதியாகப் பேசுகிறாய். ஆனாலும் என்னைப் பற்றி அப்பேர்ப்பட்ட அபிப்பிராயம் அவ்விடத்திலே கொண்டிருக்கிறார்கள் என்று எண்ணுவதற்கு இடமுண்டு" என்று பொலீஸ் தலைவன் சொன்னான்.

"நீ சொல்லியபடி, கடிதமானது இன்னும் அம் மந்திரியின் கைவசத்தில் தான் இருக்கிறது என்பது உறுதி. ஏனெனில் அவன் கைவசம் இருப்பதால் தான்—உபயோகப்படுத்துவதால் அல்ல—அவனுக்கு இத்தகைய சக்தி இருந்து கொண்டிருக்கிறது. அவன் அந்தக் கடிதத்தை உபயோகப்படுத்தி விட்டானானால் இந்தச் சக்தி போய் விடும்" என்று நான் சொன்னேன்.

"நிஜம் தான்" என்றான் ஜி....அந்த முடிவின் மேல் தான் நானும் நடந்து கொண்டேன். அம்மந்திரியின் வீட்டை நன்றாய் முழுக்கச் சோதிப்பதையே என் முதல் கவலையாகக் கொண்டேன். இதிலே எனக்கு ஏற்பட்ட சங்கடம் என்னவென்றால், மந்திரிக்குத் தெரியாதபடி, சோதனையை நடத்த வேண்டியிருந்தது தான். அவனுக்கு எது தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அந்தக் கடிதத்தை எப்படியாவது கைப்பற்றிக் கொள்வது தான் நம்முடைய முக்கிய நோக்கம் என்பதை மட்டும் அவன் கனவிலும் நினைக்கக் கூடாது. அவன் அதை அறிந்து கொள்ளுவானானால் அதனால் பேராபத்து விளையும் என்பதைப் பற்றி நான் எச்சரிக்கை செய்யப்பட்டிருந்தேன்."

"ஆமாம், நீ தான் இவ்வகை சோதனைகளில் புலியாயிற்றே. இம்மாதிரியான காரியங்கள் எத்தனையோ செய்திருக்கிறார்களே பாரிஸ் நகரத்துப் பொலீஸ் படையாளர்" என்றேன்.

"ஆமாம். ஆமாம். அதனால் தான் நான் முதலில் அதிகமாகக் கவலைப்படவில்லை. அக்காலத்திலே மந்திரியினுடைய நடவடிக்கைகளும் எனக்கு மிகவும் சௌகரியமாகவே இருந்து வந்தன. அவன் அடிக்கடி இராத்திரி வீட்டுக்கு வருவதே யில்லை. அவனுக்கு வேலைக்காரர்களும் அவ்வளவு அதிகமாகக் கிடையாது. உள்ளவர்களும் அவனுடைய அறைக்குச் சற்று தூரத்துக்கு அப்பாலேயே படுத்துக் கொள்ளுவார்கள். மேலும் அவர்கள் நேபில்ஸ் நகரத்தார்கள். ஆதலால் அவர்களுக்குக் குடிக்கக் கொடுத்து அவர்களைக் குடி மயக்கத்தில் ஆழ்த்தி விடுவதும் இலகுவாகவே இருந்தது. பாரிஸ் நகரத்

தில் எந்த அறையையும் பெட்டியையும் திறக்கக் கூடிய சாவிகள் என்னிடம் இருக்கின்றன என்பது உங்களுக்குத் தெரியுமே. சென்ற மூன்று மாதங்களாக டி...யின் வீட்டை நான் நேரில் சோதனை போடாத இராத்திரி பாக்கி என்றே சொல்லவேண்டும். அநேகமாக ஒவ்வோர் இரவிலும் பெரும் பகுதியை அவன் வீட்டைச் சோதனை செய்யும் காரியத்திலேயே நான் செலவழித்து வந்திருக்கிறேன். என் கியாதி அந்தரத்தில் நிற்கிறது. அதோடு இன்னொரு இரகசியம். அவர்கள் தருவதாக வாக்களித்திருக்கும் பரிசும் மிகப் பெரிய தொகையாக இருக்கிறது. திருடன் என்னை விடக் கைதேர்ந்த பேர்வழி என்பதை நான் நிச்சயமாய் அறிந்து கொள்ளும் வரையில் நான் தேடும் முயற்சியைக் கைவிடவில்லை. அவன் வீட்டிலே ஒரு மூலை முடுக்கு பாக்கியில்லை. எங்கெங்கெல்லாம் காகிதத்தைச் செருகமுடியுமோ அந்த இடம் அத்தனையும் சோதித்தாய் விட்டது. ஒரு ஈ கொசு நுழையக்கூடிய இடமெல்லாம் பார்த்தாய் விட்டது. ஓர் இடத்திலும் அக்கடிதம் அகப்படவில்லை.'' என்றான்.

"கடிதம் மந்திரி வசம்தான் இருக்கிறது என்பதோ உறுதி. அதைப் பற்றிச் சிறிதும் சந்தேகமில்லை. ஆகையால் அதைத் தன் வீட்டில் ஒளித்து வைக்காமல் வேறெங்காவது அவன் ஒளித்து வைத்திருக்கலாமல்லவா ?'' என்று நான் கேட்டேன்.

அதற்குத் தூபென், "அது அவ்வளவு சாத்தியமில்லை. ஏனென்றால் இப்பொழுது அரசாங்க விஷயங்கள் இருக்கும் நிலைமைகளையும், டி...யின் சம்பந்தம் உள்ளனவாக அறியப்பட்டிருக்கும் பற்பல சூழ்ச்சிகளையும் நினைத்துப் பார்த்தால், அந்தக் கடிதத்தை வைத்துக் கொண்டிருந்தால் மட்டிலும் போதாது, வேண்டிய போதெல்லாம் அது கைக்குக் கிடைக்கும்படி இருப்பதும் அவசியம் ; எந்த க்ஷணத்திலும் வேண்டுமானாலும் அதை உடனே கையாளும்படியான இடத்தில் அது இருக்கவேண்டும் என்பது தெரியவரும்'' என்றான்.

"அதை நினைத்த உடன் உபயோகஞ் செய்ய வேண்டியதா அவசியம்?'' என்றேன் நான்.

"இல்லை. கையாளவேண்டியது, அதை அழித்து விடுவதற்காக'' என்றான் தூபென்.

"அது வாஸ்தவம்தான்'' என்றேன் நான். "ஆகையால் அக்கடிதம் அவன் வீட்டிலேதான் இருக்கிறது. அது மந்திரியின் உடம்பின் மேலே இல்லை என்று நிச்சயம் பண்ணிக்கொள்ளலாமல்லவா ?''

“நிச்சயமாகத் தீர்மானித்துக் கொள்ளலாம். இரண்டு தடவை தெருவிலே வழிப்பறி செய்வோர் தாக்குவதுபோல அவனைத் தாக்கினோம். அவன் உடல் முழுவதையும் சட்டைகளையும் துருவித் துருவிச் சோதனை போட்டோம். நானே நேரில் இந்தச் சோதனையை மேல் பார்த்தேன்.” என்றான் பொலீஸ் அதிகாரி.

“இந்த வீண் சிரமம் நீ எடுத்துக்கொண்டிருக்கவே வேண்டாம். டி...என்பவன் முழு முட்டாள் அல்லவென்பதுதான் என் அபிப்பிராயம். அவன் முழு முட்டாளாய் இராவிட்டால், உங்கள் முறைப்படிக்கு இவ்வகையாய் அவனை வழிப்பறி செய்வீர்களென்பதைப் பற்றி, அவன் முன்எச்சரிக்கையாகவே இருந்திருப்பான். இது உறுதி.” என்றான் டூபென்.

“அவன் முழு முட்டாள் இல்லை தான். ஆனால் அவன் கவியாயிருப்பதால் முக்காலே அரைக்கால் முட்டாள் என்று வைத்துக்கொள்ளலாம்” என்றான் ஜி.... டூபென் மிகவும் ஆழ்ந்து யோசனை செய்து, வாயினின்று நிதானமாகப் புகையை விட்டுக்கொண்டு “நானும் ஒன்றிரண்டு பாட்டுப் பாடியிருக்கிறேன். இருந்தாலும் நீ சொல்லுவது வாஸ்தவம்தான்” என்றான்.

“நீ எங்கெங்கெல்லாம் தேடினாய் என்பதைப் பற்றிச் சற்று விரிவாய்ச் சொல்லலாமோ ?” என்றேன் நான்.

“அதனாலென்ன ? நாங்கள் நிதானமாகத் தேட ஆரம்பித்தோம். எங்கும் தேடினோம். ஓர் இடம் பாக்கியில்லை. இம்மாதிரி விஷயங்களில் எனக்கு வெகுகால அனுபவமுண்டு. அவன் இருந்த கட்டடம் முழுவதையும் எடுத்துக் கொண்டோம். அறை அறையாகப் பிரித்தோம். ஓர் அறைக்கு ஒரு வாரம் என்று வைத்துக் கொண்டோம். ஒவ்வொரு நாளிலும் இராத்திரியில் அந்த அறையை நன்றாகச் சோதித்தோம். முதன் முதலில் ஒவ்வொரு அறையிலுள்ள மேஜை நாற்காலிகள் முதலிய மரச் சாமான்களைச் சோதித்தோம். ஒவ்வொரு டிராவையும் திறந்து பார்த்தோம். சரியான பயிற்சியுள்ள பொலீஸ்காரனுக்கு இரகசிய அறை என்பதே கிடையாது. இது உங்களுக்குத் தெரிந்திருக்குமென்று எண்ணுகிறேன். இந்த மாதிரியான சோதனை நடத்தும் போது இரகசிய அறை ஒன்றிருப்பதைக் கவனியாது விட்டுவிடும் ஒருவனை முழு மடையன்சாம்பிராணி என்று தான் சொல்லவேண்டும். இந்த விஷயம் சாமானியமானது. ஒவ்வொரு பெட்டிக்கும் மொத்த அளவு—இடம்—உண்டு. அது அவ்வளவும்—முழுமையும்—கணக்கில் வந்துவிடவேண்டும். எங்களிடம் துல்லியமான அளவு கருவி

கள் இருக்கின்றன. ஒரு நாளில் ஐம்பதில் ஒரு பாகம்கூட எங்கள் கணக்கில் பிசகாது. பெட்டிகளைச் சோதித்தான பிறகு நாற்காலி களை எடுத்துக்கொண்டோம். அவைகளின் மேலுள்ள மெத்தைகளை எங்களிடமுள்ள மெல்லிய நீளமான ஊசிகளைக் கொண்டு குத்திப் பார்த்தோம். அந்த ஊசிகளை உங்களுக்குக் காட்டியிருக்கிறேன். மேஜைகளின் மேல்பலகைகளைத் தூக்கிப் பரிசோதித்தோம்.''

''அது என்னத்திற்கு ?''

''அது ஏனென்றால், சிற் சில வேளைகளில் சாமானை ஒளித்து வைக்க விரும்பும் ஒருவன் மேஜைபோன்ற மரச் சாமானின் மேல் பலகையைப் பேர்த்து எடுத்துப் பிறகு அதன் கால் ஒன்றை மேற் புறத்திலிருந்து குடைந்து குடைந்து குழியாக்கி, அந்தக் குழியில் ஒளித்து வைக்கவேண்டிய சாமானை ஒளித்துவைத்துப் பிறகு மேல் பலகையைப் போட்டு மூடிவிடுவதுண்டு. அதேமாதிரி கட்டிற் கால்களின் கீழ்ப் புறத்திலும் மேல் புறத்திலும் குடைந்து சாமான் களை ஒளித்துவைப்பது முண்டு.''

''தட்டிப் பார்த்தால் உள்ளே போலாயிருப்பது தெரியாதோ?'' என்றேன்.

''தெரியவே தெரியாது. சாமானை உள்ளே வைத்த பிறகு அதைச் சுற்றிப் பஞ்சை வைத்துப் பொதிந்துவிட்டால் தட்டிக் கொட்டிப் பார்த்தாலும் ஓசையில் வித்தியாசம் தெரியாது. அதுவும் தவிர, நாங்கள் அவ்வாறு தட்டிப் பார்ப்பதற்கில்லை. ஏனெனில், நாங்கள் சிறிதுகூட ஓசைப்படுத்தாமல் அல்லவோ காரியம் செய்ய வேண்டியிருந்தது.''

''நீங்கள் எல்லா மரச் சாமான்களையும் இந்த மாதிரிச் செய் திருக்கமுடியாதே. நீ சொன்னமாதிரி சாமான்களை ஒளித்துவைக் கக் கூடிய மரச்சாமான்கள் அத்தனையையும் நீங்கள் பிரித்துப் பிரித் துப் பார்ப்பது சாத்தியமில்லையே. ஒரு தடி ஊசிப்பருமனுக்கு மேல் படாமல் ஊசியைப்போலவே ஒரு கடிதத்தைச் சுருட்டிவிடலாமே. அம்மாதிரி அதைச் சுருட்டிவிட்டால் நாற்காலியின் குறுக்குச் சட்டத்தில் கூட அதை ஒளித்துவைத்துவிடலாமே. நீங்கள் எல்லா நாற்காலிகளையும் பிரிக்கவில்லையே ?''

''இல்லவே இல்லை. ஆனால் அதைவிட மேலான ஏற்பாடு ஒன்றைச் செய்தோம். மிகவும் சக்திபொருந்திய பூதக் கண்ணாடி யைக்கொண்டு அந்த வீட்டிலுள்ள ஒவ்வொரு நாற்காலியின் சட்டங்களையும் மிகவும் ஜாக்கிரதையாய்ச் சோதித்தோம் ; ஒவ் வொரு மரச் சாமானுடைய பொருத்துக்களை எல்லாம் மிகவும்

நுட்பமாய்க் கவனித்தோம். அவற்றுள் ஏதாவது ஒன்றைப் புதிதாகப் பிரித்திருந்தால் அது எங்கள் கண்ணில் உடனே பட்டிருக்கும். அதற்குச் சந்தேகமேயில்லை. துரப்பணத்தைக் கொண்டு திருகித் துளையிட்டிருந்தால், அப்பொழுது உண்டாகிய மரப்பொடியை நாங்கள் கட்டாயம் பார்த்திருப்போம். எங்கள் கண்ணுக்கு அது ஓர் ஆப்பிள் பழம்போல அவ்வளவு பெரிதாய்த் தெரியும். வஜ்ரம் போட்டிருப்பதில் ஏதாவது சிறிது ஒழுங்குப் பிசகாகத் தென்பட்டால் போதும். அதுவே எங்களுக்கு எல்லாவற்றையும் காட்டிக் கொடுத்துவிடும். எங்காவது விபரீதமாய் ஒரு பிளப்போ அல்லது வெடிப்போ இருந்தாலும் அதைக் கொண்டு எல்லாவற்றையும் கண்டுபிடித்துவிடுவோம்.''

"நீங்கள் கண்ணாடிகளை எல்லாம் கவனித்தீர்களல்லவோ? அவற்றின் பின்பலகைகளுக்கும் கண்ணாடித் தகட்டுக்கும் இடையில்? படுக்கைகள், மெத்தைகள், படுக்கை விரிப்புக்கள், கொசுவலைகள், படுக்கைத் திரைகள், ஜமக்காளங்கள் எல்லாவற்றையும் கவனித்திருப்பீர்களே?''

"அதற்கென்ன சந்தேகம். அவற்றையெல்லாம் மாமூல்படி சோதித்துவிட்டோம். வீட்டிலுள்ள மரச் சாமான்கள் எல்லாவற்றையும்—ஒரு துண்டு துணுக்குப் பாக்கியின்றி—இவ்வாறு சோதித்தபின், வீட்டை எடுத்துக் கொண்டோம். அதன் விஸ்தீர்ணம் முழுவதையும் துண்டுதுண்டாகப் பிரித்து, ஒன்றும் விட்டுப் போகாமலிருக்கும்படியாக, இலக்கமிட்டுக் கொண்டோம். பிறகு அந்த வீட்டிலே உள்ள இடம் முழுவதையும், ஒரு சதுர அங்குல விஸ்தீர்ணமுள்ள இடங்கூட விடாதபடி, பூதக்கண்ணாடியால் முன்னால் சொன்னபடி கூர்ந்து கவனித்தோம். அந்த வீட்டை ஒட்டியிருந்த அக்கம் பக்கத்திலுள்ள இரண்டு வீடுகளையும் அவ்வாறே கவனித்தோம்.''

"அக்கம் பக்கத்து வீடுகளையுமா?'' என்றேன் நான், ஆச்சரியத்துடன். "நீங்கள் கணக்கு வழக்கில்லாத சிரமம் எடுத்துக் கொண்டிருக்கவேண்டுமே!''

"ஆமாம், சிரமம் என்னவோ சிரமந்தான். ஆனால் அவர்கள் தருவதாக வாக்களித்திருக்கிற இனம் மிகப்பெரிய தொகையல்லவா?''

"வீட்டைச் சுற்றியுள்ள இடத்தையும் சோதித்தீர்களோ இல்லையோ?''

"வீட்டைச் சுற்றிலுமுள்ள இடமெங்கும் செங்கல் போட்டுப் பாவியிருக்கிறது. எங்களுக்கு அவற்றின் மூலமாக யாதொரு

சங்கடமும் இல்லை. செங்கல்களுக்கு இடுக்கிலுள்ள பாசியைச் சோதித்துப் பார்த்தோம். அது எவ்விதமாயும் அசைக்கப்படவில்லை.''

"டி...வைத்திருக்கிற பத்திரங்கள் கடிதங்கள் முதலியவற்றையும், அவனுடைய அலமாரிகளிலுள்ள புத்தகங்களையும் சோதித்துத்தான் இருப்பீர்கள். அதற்குச் சந்தேகமில்லையே?''

"சந்தேகமே வேண்டாம். ஒவ்வொரு மூட்டை முடிச்சையும் அவிழ்த்துப் பார்த்தோம். ஒவ்வொரு புத்தகத்தையும் திறந்து பார்த்தோம். அதோடு நிற்கவில்லை. சிலர் செய்கிறமாதிரி, புத்தகத்தைக் குலுக்கிப் பார்த்தால் மட்டும் போதாது என்று எண்ணிப் பக்கம் பக்கமாகப் புரட்டிப் பார்த்தோம். ஒவ்வொரு புத்தகத்தின் அட்டையின் கனத்தையும் மிகத் துல்லியமாய் அளந்து பார்த்தோம். ஒவ்வொன்றையும் பூதக் கண்ணாடியைக் கொண்டு மிகவும் நுட்பமாய்ச் சோதித்தோம். புத்தக அட்டை ஏதாவது ஒன்றைச் சமீபத்தில் பிரித்திருந்தால் அதுகூட எங்கள் கண்களுக்குத் தட்டுப்படாமல் இருந்திருக்க முடியாது. புதிதாகப் பைண்டு செய்யப்பட்டு வந்தனவாகத் தெரிந்த ஐந்தாறு புத்தகங்களை மெல்லிய நீளமான ஊசிகளைக் கொண்டு குத்திப் பார்த்தோம்.''

"ஜமக்காளத்துக்கு அடியிலே தளத்தைச் சோதித்தீர்கள் அல்லவோ?''

"சந்தேக மின்றி; ஒவ்வொரு ஜமக்காளத்தையும் எடுத்து, அதற்கு அடியிலுள்ள மரத் தளத்தைப் பூதக்கண்ணாடியை வைத்துக்கொண்டு சோதனை செய்தோம்.''

"சுவரில் ஒட்டியிருக்கிற வர்ணக் காகிதங்களையோ?''

"சோதித்தோம்.''

"நில வறைகளுக்குள் பார்த்தீர்களா?''

"பார்த்தோம்.''

"அப்படியானால் நீங்கள் எண்ணியதெல்லாம் தவறாயிருக்கும். நீங்கள் நினைக்கிறபடி அந்த வீட்டில் கடிதம் இல்லவே இல்லை'' என்றேன் நான்.

"நீ சொல்லுகிறபடிதான் இருக்குமென்று எனக்கும் சந்தேகம்'' என்று என்னைப் பார்த்துச் சொல்லிவிட்டு, என் நண்பனைப் பார்த்து, "உனக்கு என்ன தோன்றுகிறது? இனிமேல் என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?'' என்றான் பொலீஸ் அதிகாரி.

"அந்த வீட்டை இன்னொரு முறை பூரணமாகச் சோதிக்க வேண்டும் என்று சொல்வேன்.''

"அந்த வேலை துளிகூட அவசியம் இல்லையே. நான் மூச்சு விடுகிறேனா இல்லையா என்பதைப் பற்றி எனக்குச் சந்தேகம் இருந்தாலும் இருக்குமே தவிர, அந்தக் கடிதம் அந்த வீட்டில் இல்லை என்பதைப்பற்றி எனக்குக் கொஞ்சம்கூடச் சந்தேகம் கிடையாது" என்றான் ஜி....

"இதைத்தான் நான் மீண்டும் சொல்லுவேன். அதைவிடப் பிரயோஜன முள்ளதாக வேறொன்றும் எனக்குத் தெரியவில்லை" என்று சொல்லிவிட்டு, "அந்தக் கடிதம் பார்வைக்கு எப்படி யிருக்கும் என்பதைப்பற்றி நுட்பமான விவரம் உன்னிடம் இருக்கிறதோ இல்லையோ?" என்று கேட்டான் தூபென்.

"ஓ! இருக்கிறது" என்று சொல்லிக்கொண்டே ஒரு குறிப் புப் புத்தகத்தை எடுத்து அதிலிருந்து அந்தக் கடிதத்தில் கண்ட விஷயங்கள் இன்னவை யென்பதையும் கெட்டுப்போன அக் கடிதத் தின் தோற்றம் எப்படி யிருக்குமென்பதையும் படித்துக் காட்டி னான். இதைப் படித்து காட்டியபின் கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அவன் புறப்பட்டுப் போனான். அந்த ஸாதுப்பேர்வழி அன்று வாடித் தளர்ந்திருந்ததுபோல் வேறெந்த நாளும் இருந்ததை நான் பார்த்ததில்லை. அன்று அவ்வளவு ஏங்கிப்போயிருந்தான்.

அதற்கப்புறம், ஒரு மாதம் கழித்து, ஒருநாள் சாயங்காலம் அவன் மறுபடியும் அங்கே வந்தான். முன் தடவை அவன் வந்த போது நாங்கள் என்ன செய்துகொண்டிருந்தோமோ அதையே தான் அப்பொழுதும் செய்துகொண்டிருந்தோம். அவனும் ஒரு 'பைப்' கையிலெடுத்துக்கொண்டு ஒரு நாற்காலியில் அமர்ந்தான். எல்லாருமாக ஏதோ சாதாரணமாகப் பேசிக்கொண்டிருந்தோம். அப்பொழுது நான், "என்ன ஜி!...திருட்டுபோன கடிதம் என்ன வாயிற்று? அந்த மந்திரிக் கள்ளனைக் குள்ளன் பாய்வது என்பது முடியாது என்னும் விஷயத்தைத் தெளிவாய்த் தெரிந்துகொண்டு விட்டாயா?" என்றேன்.

"அவன் நாசமாய்ப்போக என்றுதான் நான் வாழ்த்துவேன். அவனை ஏமாற்றுவது என்பது முடியாது. தூபென் சொன்னபடி மறுபடியும் அந்த வீட்டை நன்றாக முழுக்கச் சோதித்தேன். எடுத்துக்கொண்ட சிரமம் முழுவதும் வீண்தான். அதுவும் எனக்கு முந்தியே தெரியும்."

"கொடுப்பதாகச் சொன்ன வெகுமதி எவ்வளவு என்று சொன்னாய்?" என்றான் தூபென்.

"ஏன்? மிகவும் அதிகமான தொகை; மிகவும் உதாரமான வெகுமதி. அது எவ்வளவு என்று குறிப்பிட்டுச் சொல்ல எனக்கு

இஷ்டமில்லை. ஆனால் இது மட்டிலும் நான் உறுதியாய்ச் சொல்லுவேன்: அந்தக் கடிதத்தை யாராவது என்னிடம் கொண்டு வந்து கொடுத்தால் அவர்களுக்கு ஐம்பதினாயிரம் பிரான்குக்கு என் சொந்தச் செக்குக் கொடுக்கத் தயங்கமாட்டேன். வாஸ்தவத்தில், நாளுக்கு நாள் அது மிகவும் முக்கியமான விஷயமாக ஆகிக் கொண்டு வருகிறது. முன்னால் கொடுப்பதாக வாக்களித்திருந்த வெகுமதித் தொகையைச் சமீபத்திலே ஒட்டிக்கு இரட்டியாக்கியிருக்கிறார்கள். அதை ஒன்றுக்கு மூன்று பங்கு ஆக்கினாலும் நான் இதுவரை செய்திருப்பதைவிட அதிகமாக ஒன்றும் என்னால் செய்ய முடியாது. என்னால் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் நான் செய்தாய் விட்டது.''

தூபென் 'பவ் பவ்' என்று புகையை விட்டுக்கொண்டே "ஆமாம் வாஸ்தவம் தான்—ஆனாலும் ஜி...—நான் நினைக்கிறேன்—நீ வந்து—பூராவாக—முயற்சி செய்யவில்லை—இந்த விஷயத்திலே—இன்னும் கொஞ்சம்—நீ முயற்சி செய்யலாம்—என்று எனக்குத் தோன்றுகிறது—என்ன?'' என்று இழுத்து இழுத்துச் சொன்னான்.

"எப்படி? எந்த வழியிலே இன்னும் நான் முயற்சி செய்கிறது?''

"என்''—பவ், பவ்—"நீ வந்து''—பவ், பவ்—"மற்றவர்களைக் கலந்து யோசிக்கலாம். என்ன?''—பவ், பவ், பவ். "அபெர்நெதியைப் பற்றிச் சொல்லுகிறார்களே அந்தக் கதையைக் கேட்டிருக்கிறாயா?''

"கேட்டதில்லை. அபெர்நெதியைப் போட்டுப் பொசுக்கு.''

"நிச்சயமாகவா? அபெர்நெதியை உன் மனம் போலப் பொசுக்கலாம். எனக்கு ஆக்ஷேபமில்லை. முன்னொரு காலத்திலே பெரிய உலோபி ஒருவன் இருந்தான். அவன் இந்த அபெர்நெதியிடம் போய் வைத்திய விஷயமாய்க் காசு கொடுக்காமல் அபிப்பிராயம் கேட்கவேண்டும் என்ற எண்ணங்கொண்டான். அதற்காக ஒரு யோசனை செய்தான். நாலு பேருக்கு நடுவில் எல்லாருமாக உட்கார்ந்து பொதுவாகப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது ஒரு விஷயத்தை மெதுவாகப் பேச்சுவாக்கில் கிளப்பினான். அந்த டாக்டரிடம் தன்னுடைய உடலின் ஸ்திதி யாரோ ஒருவனுக்கு இருப்பது போல் எடுத்துச் சொன்னான்.''

அந்த உலோபி சொன்னான்: "அந்த ஆசாமிக்கு இன்ன இன்ன வகையான நோய்க்குறிகள் இருக்கின்றன வென்று வைத்துக்

கொள்ளுவோமே. அப்படியிருந்தால், டாக்டர்! நீங்கள் அவனை என்ன செய்யச் சொல்லியிருப்பீர்கள்?''

“செய்யவா? டாக்டர் சொல்லுகிறபடி செய் என்று சொல்லியிருப்பேன். இதைப்பற்றி உனக்குச் சந்தேகமென்ன வந்து விட்டது?'' என்றான் அபெர்நெதி.

இந்தக் கதையைக் கேட்டதும் பொலீஸ் அதிகாரிக்குச் சற்று அசடு தட்டி விட்டது. “நான் அவனைப் போலல்லவே. நான் மனப்பூர்வமாகப் புத்திமதி கேட்கவும் தயாராயிருக்கிறேன். அதற்குப் பணம் கொடுக்கவும் தயாராய் இருக்கிறேன். இந்த விஷயத்தில் யார் எனக்கு ஒத்தாசை செய்கிறார்களோ அவர்களுக்கு நிஜமாக ஐம்பதினாயிரம் பிராங்குக் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்'' என்றான் அவன்.

தூபென் ஒரு டிராவைத் திறந்தான். அதிலிருந்து ஒரு செக்குப் புத்தகத்தை எடுத்தான். அதைப் பொலீஸ் தலைவனிடம் நீட்டி, “அப்படியானால், நீ சொன்ன தொகைக்கு ஒரு செக்கு எழுது. நீ செக்கு எழுதிக் கையெழுத்துப் போட்டதும் நான் அந்தக் கடிதத்தை உன்னிடம் கொடுத்துவிடுகிறேன்'' என்றான்.

நான் பிரமித்துப்போய்விட்டேன். பொலீஸ் தலைவன் இடி விழுந்தவனைப் போல இருந்தான். சற்று நேரம் அவன் பேச்சும் அசைவும் இல்லாமல் ஸ்தம்பித்துப்போய்விட்டான். அவனுடைய வாய் திறந்து விட்டது. கண்கள் வெளியே பிதுங்கின. சிறிதும் நம்பிக்கை யில்லாதவனாய் என் நண்பனைப் பார்த்துக் கொட்டுக் கொட்டென்று விழித்துக்கொண்டு திகைத்து நின்றான். பிறகு சற்று அமைதி ஏற்பட்டவனாய், சிறிது தன் வசம் அடைந்தவனாய், ஒரு பேனாவைச் சட்டென்று எடுத்தான். மறுபடியும் திகைத்துத் தயங்கினான். மிரள மிரளப் பலமுறை விழித்தான். கடைசியாக ஐம்பதினாயிரம் பிராங்குக்கு ஒரு செக்கு எழுதி முடித்தான். அதில் கையொப்பமிட்டான். மேஜைக்கு அப்புறமிருந்த என் நண்பனிடம் அதை எடுத்து நீட்டினான். தூபென் அதை வாங்கி வெகு ஜாக்கிரதையாக அதைப் படித்துப் பார்த்துத் தன் பணப்பையில் மடித்துவைத்துக் கொண்டான். பிறகு பூட்டியிருந்த ஒரு டிராவைத் திறந்து, அதிலிருந்து ஒரு கடிதத்தை எடுத்து பொலீஸ் தலைவனிடம் கொடுத்தான். அவ்வதிகாரி அதை மிகவும் ஆவலோடு பற்றி வாங்கிக் கொண்டான். அவ்வேளையில் அவன் அடைந்த சந்தோஷமானது வரம்பை மீறி அவனை வருத்தியது. அவன் கைகள் நடுங்கின. ஆடிய கைகளாலே

அதை ஒரு மட்டுக்குப் பிரித்தான். அவசர அவசரமாகப் படித்துப் பார்த்தான். உடனே மிகவும் பரபரப்பாக எழுந்து தட்டித் தடுமாறிக் கதவண்டை ஓடினன். அதைத் திறந்துகொண்டு எங்களிடம் கூடச் சொல்லிக்கொள்ளாமல் அவ்வறையை விட்டும் வீட்டை விட்டும் வெளியே ஓடினன். தூபென் செக்கை எழுது என்று சொன்ன நேரம் முதல் அவன் வாயிலிருந்து ஒரு வார்த்தை கூட வரவில்லை.

அவன் போன பிற்பாடு என் நண்பன் எனக்குச் சில விஷயங்களைப் பற்றி விளக்கிச் சொன்னன்.

அவன் சொன்னன்: "பாரிஸ் பொலீஸ்படைவீரர்கள், அவர்கள் அளவில், மிகவும் திறமையுள்ளவர்கள்தான். அவர்கள் விடாமுயற்சியுள்ளவர்கள். சாமர்த்திய முள்ளவர்கள். கபடம் தெரிந்தவர்கள். அவர்கள் தொழிலுக்கு இன்றியமையாதனவென்று தோன்றும் பல குணங்களும் அறிவும் நிரம்பப் பெற்றவர்கள். ஆகையால், டி...யின் மாளிகையை இப்படி யெல்லாம் சோதனை போட்டேன் என்று ஜி...விவரித்துச் சொல்லியபொழுது, அவன் வேலை செய்த அளவில், அவன் வேலையை மிகவும் திருப்திகரமாகவே செய்திருப்பான் என்பதில் எனக்குப் பூரணமான நம்பிக்கை இருந்தது."

"அவன் வேலை செய்த அளவிலா?" என்றேன் நான்.

"ஆம்" என்ருன் தூபென். "அவர்கள் பின்பற்றிய முறைகள் மிகவும் சரியான முறைகள்—மிகவும் ஒழுங்காகவும் நன்ருகவும் செய்யப்பட்டன. அதைவிட யாரும் மேலாகச் செய்யவே முடியாது. அவர்கள் தேடிய பிராந்தியத்தில் அந்தக் கடிதம் வைக்கப்பட்டு இருந்திருக்குமானல், அந்தப் பேர்வழிகள் சந்தேகமில்லாமல் அதைக் கண்டு பிடித்தே இருப்பார்கள்.

எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. நான் வெறுமனே சிரித்தேன். ஆனல் அவன் வேடிக்கையாகப் பேசுபவன் போல் பேசவில்லை. நிஜமாகப் பேசுவதுபோல்தான் பட்டது.

அவன் மேற்கொண்டு சொன்னன்: "அவர்கள் பின்பற்றிய முறைகள் என்னவோ நல்ல முறைகள்தாம். அவற்றை ஒழுங்காகவும் நன்ருகவும்தான் அவர்கள் செய்தார்கள். அதிலுள்ள தோஷம் எதில் என்ருல், இம்மாதிரியான் காரியத்துக்கு அவை பொருத்தமில்லை என்பதில்தான். இப்பேர்ப்பட்ட ஆசாமிக்கு ஏற்ற முறைகள் அவை அல்ல. மிகவும் சாமர்த்தியமாய் ஏற்படுத்தப்பட்ட சிற்சில முறைகளைப் பொலீஸ்தலைவன் தராதரம் தெரிந்துகொள்ளாமல்

'குயவனுக்குச் சட்டி யளவு' என்பதுபோல் உபயோகிக்கிறான். அவற்றைக் கொண்டே அவனுடைய யோசனைகளையும் ஏற்பாடு களையும் அமைத்துக்கொள்ளுகிறான். அவற்றின் யுக்தா யுக்தங் களை அவன் கவனிப்பதில்லை. அதனால் அவன் செய்வதெல்லாம் அநேகமாகத் தப்பாகவே முடிகிறது. சில வேளைகளில் எடுத்துக் கொண்ட விஷயத்துக்கு வேண்டிய அளவுக்குமேல் அதியுக்திசெய்து விடுகிறான். வேறு சில வேளைகளில் அவனுடைய யுக்தி போதாமல் போய்விடுகிறது. பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவன் யோசனை கூட அவன் யோசனைக்கு மேலானதாக இருக்கும். பள்ளிக்கூடத் தில் படித்துக்கொண்டிருந்த ஒரு பையனை எனக்குத் தெரியும். அவனுக்குச் சுமார் எட்டு வயதிருக்கும். 'ஒற்றையோ இரட் டையோ' என்று விளையாடும் விளையாட்டில் அவன் ஈடு இணை அற்றவன் என்று கியாதி பெற்றிருந்தான். இந்த விளையாட்டு மிக வும் சாமானியமானது. கோலிக் குண்டுகளை வைத்துக்கொண்டு விளை யாடலாம். ஒரு பையன் தன் கை ஒன்றில் சில கோலிக்குண்டுகளை வைத்து மூடிக்கொள்ளுவான். மற்றொருவனைப் பார்த்து 'என் கை யிலிருக்கும் கோலிகளின் தொகை ஒற்றைப்பட்டிருக்கிறதா? இரட் டைப் பட்டிருக்கிறதா? என்று சொல்' என்று பொருள்படும்படி யாக 'ஒற்றையா? இரட்டையா?' என்று கேட்பான். சொல்லுகிற வன் சரியாகச் சொல்லிவிட்டால் அவன் ஒரு பழம் கெலிப்பான். சரியாகச் சொல்லாவிட்டால் அவன் ஒரு பழம் தோற்பான். நான் சொன்னேனே அந்தப் பையன் பள்ளிக்கூடத்திலுள்ள கோலிகள் அத்தனையையும் கெலித்துவிட்டான். ஒற்றையா இரட்டையா என்று சரியாகச் சொல்லுவதற்கு அவன் ஒரு முறையை நியமித்துக் கொண்டிருக்கவேண்டும். இதற்காக அவனோடுகூட விளையாடு வோரின் சாமர்த்தியத்தை நன்றாய்க் கவனித்து அளந்து வைத்துக் கொண்டிருக்கவேண்டும். உதாரணமாய், மிகவும் சாமானியப் பேர் வழி ஒருவன் அவனோடு விளையாடுகிறானென்று வைத்துக்கொள்ளு வோம். அவன், மூடிய கையில் கோலிகளை வைத்துக் கொண்டு, 'ஒற் றையா? இரட்டையா?' என்று கேட்பான். நம்முடைய பையன் 'ஒற்றை' என்பான். அது ஒற்றையாயிராது. ஒரு பழம் தோற்று விடுவான். ஆனால் அடுத்த தடவை அவன் பதில் சொல்லும்போது அவன் கெலித்துவிடுவான்; ஏனென்றால் அவன் இவ்வாறு யோசனை செய்வான்: 'அந்த மடையன் கையில் முதல் தரம் இருந்தது இரட்டை. அவன் கபடமெல்லாம் இரண்டாம் தரம் ஒற்றையாக வைத்துக்கொள்ளச் செய்யும் அளவுதான் இருக்கிறது. ஆகையினால் நான் ஒற்றை என்று சொல்லிப் பார்ப்பேன்' என்று. இப்படி

யோசனை செய்து 'ஒற்றை' என்று சொல்லுவான். கெலித்துவிடுவான். இவ்வளவு மூடனாக இல்லாதபடி, இவனைக் காட்டிலும் சற்று அதிக சாமர்த்தியமுள்ள ஒரு சாமானியப் பையனோடு அவன் விளையாட நேர்ந்தால், அவன் இப்படி யோசனை செய்திருப்பான்: 'நான் முதலில் ஒற்றை என்று சொன்னேன் என்று இந்தப் பயலுக்குத் தெரியும். இரண்டாம் தரத்தில் என்ன செய்கிறது என்று அவன் யோசனை செய்யும்போது 'முதலிலே இரட்டையாக வைத்தோம், இப்பொழுது அதை மாற்றி ஒற்றையாக வைப்போம்' என்றுதான் அவன் எடுத்ததும் எண்ணுவான். உடனே மறுயோசனை தோன்றும். 'இது சாமானியமாய் யாருக்கும் தோன்றக் கூடிய மாறுபாடல்லவா? ஆகையால் மறுபடியும் இரட்டையாகவே வைக்கலாமே' என்று எண்ணுவான். அந்தப் பிரகாரமே முதல் தடவையைப் போலவே இரட்டையாகவே வைப்பான். ஆகையால் நான் இரட்டை என்றே சொல்லிப் பார்ப்பேன்' என்று யோசனை செய்து இரட்டை என்று சொல்லுவான்; கெலித்தும்விடுவான். இதைத்தான் அவனுடைய சிநேகிதர்களெல்லாம் அதிர்ஷ்டம் என்று சொன்னார்கள். இந்த வகையான யோசனை இருக்கிறதே அதை ஆராய்ந்து பார்த்தால் என்னமாகத் தோன்றுகிறது ?'' என்றான் தூபென்.

''அது வேறொன்றுமில்லை. யோசனை செய்பவன் தன்னுடைய எதிரியின் புத்தியோடு புத்தியாய்த் தன் புத்தியையும் ஏகோபித்து ஒத்திருக்கச் செய்வதுதான்'' என்றேன் நான்.

''அதுதான். அந்தப் பையனிடம் போய் 'நீ எப்படி உன் புத்தியையும் உன் எதிரியின் புத்தியையும் ஏகோபிக்கச் செய்து வெற்றி யடைந்தாய் ?' என்று கேட்டேன். அதற்கு அவன் சொன்னான்: 'ஒருவன் எவ்வளவு புத்திமான், அல்லது எவ்வளவு மடையன், அல்லது எவ்வளவு நல்லவன், அல்லது எவ்வளவு கெட்டவன், இப்பொழுது அவன் மனதிலுள்ள எண்ணங்கள் யாவை, என்று நான் கண்டுகொள்ள விரும்பினால், நான் என்னுடைய முகத்தையும் முகத்தின் தோற்றத்தையும் என்னால் கூடிய அளவில் அவனுடைய முகத்தைப்போல வைத்துக்கொள்ளுவேன். அதன் பின்பு அந்த முகத்திற்கு ஏற்றபடியோ, அதற்குப் பொருத்தமாயிருக்கும்படியோ, என் அறிவிலோ நெஞ்சிலோ என்ன என்ன எண்ணங்கள் விருப்பு வெறுப்புக்கள் தாமாக உதிக்கின்றன என்று பார்ப்பேன்.' இந்தப் பையன் சொன்ன பதிலிலுள்ள விஷயத்தைத் தான் ரோஷ்பூகோக்த்து, லா ப்ரூஷீவ், மாகியவெல்லி, காம்பனெல்லா முதலாயினோர் கண்டுபிடித்த ஆழ்ந்த தத்துவங்களென்று சொல்லுகின்றனர் சிலர்'' என்றான் தூபென்.

"யோசிப்பவனுடைய மூளையும் அவனுக்கு எதிரியாயுள்ளவனுடைய மூளையும் முற்றிலும் ஒத்து ஒன்றுபோல ஆகவேண்டுமானால், யோசிப்பவன் அவனுடைய எதிரியின் புத்திசாலித்தனத்தை மிகவும் துல்லியமாக நிர்ணயித்துக்கொள்ளவேண்டும். அப்படி எவ்வளவுக் கெவ்வளவு துல்லியமாய் நிறுத்துவைத்துக் கொள்ளுகிறானோ அவ்வளவுக் கவ்வளவு இரண்டு பேர்களுடைய யோசனையும் ஒன்றுபோல இருக்கும் என்றுதானே நீ சொல்லுகிறாய்?'' என்றேன்.

"ஆமாம். அதன் பிரயோசனமெல்லாம் இதைப் பொறுத்துத்தான் இருக்கும். பொலீஸ் அதிகாரியும் அவனுடைய பரிவாரங்களும் அடிக்கடி தப்பிப் போவதற்கெல்லாம் காரணம்,முதலாவது இம்மாதிரி மூளையைச் சமப்படுத்தச் செய்ய முயலாதது, இரண்டாவது அவர்கள் யாரை எதிரியாகக் கொள்ளுகிறார்களோ அந்த ஆசாமியின் மூளைத் திறமையைச் சரிவர அளந்து கொள்ளாதது—அவர்கள் இதை அளக்க முயலுவதுகூட இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். தங்களுடைய சொந்த புத்திக்கு எது சாமர்த்தியம் என்று படுகிறதோ அதைத் தான் அவர்கள் கவனிக்கிறார்கள். ஒளித்துவைக்கப்பட்டது ஏதாவது ஒன்றைத்தேட முயலும்போது தாங்களாயிருந்தால் அதை எப்படி எங்கே ஒளித்துவைத்திருப்பார்கள் என்பதை மட்டிலும் அவர்கள் யோசிக்கிறார்கள். அவர்கள் யோசிப்பதில் இது மட்டிலும் சரி. ஜனங்களில் பெரும்பான்மையோரை ஒட்டியவரையில் அவர்கள் நினைப்பது சரியாய்த்தான் இருக்கும். அவர்கள் புத்தியானது பொதுஜனபுத்திக்குச் சரியான பிரதிநிதிதான். ஆனால் குறிப்பிட்ட ஒரு திருடனுடைய கபடமானது அவர்களுடைய கபடத்தோடு ஒத்து இருக்காமல் மாறுபட்டு வேறுவகையாய் இருந்தால், திருடன் அவர்களை ஏமாற்றிவிடுவான் என்பதற்கு ஐயமில்லை. இந்தமாதிரி எப்பொழுது ஏற்படுமென்றால், திருடன் அவர்களைவிடக் கபடம் மிகுந்தவனாயிருந்தால் நிச்சயம் இம்மாதிரி நிகழும். திருடனது கபடம் இவர்களது கபடத்தைக் காட்டிலும் குறைவானதாயிருந்தாலும் இம்மாதிரி நிகழ்ந்துவிடும். அவர்கள் கையாளும் ஆராய்ச்சிகளுக்கு அடிப்படையான முறைகளெல்லாம் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். சமயத்துக்குத் தக்கபடி அவைகளை மாற்றிக்கொள்ளுகிறது என்பதே அவர்களுக்குத் தெரியாது. சிற்சில வேளைகளில் காரியம் பெரிய காரியமாய் இருப்பதாலோ,அல்லது கிடைக்கக்கூடிய இனாம் பெரும் தொகையாய் இருப்பதாலோ அவர்களுடைய ஊக்கம் அதிகரித்துக் காணும். அப்பொழுது அவர்கள் செய்வதெல்லாம்

அவர்கள் சாதாரணமாய்ப் பின்பற்றிவரும் ரீதிகளைச் சிறிது சிறிது நீட்டியோ பெருக்கியோ மும்முரமாக வேலை செய்வார்களே ஒழிய, அவற்றுக்கு மூலாதாரமான கொள்கைகளை மாற்றி அமைத்துக்கொள்ள மாட்டார்கள். இந்த டி...விஷயத்தை எடுத்துக் கொள். இந்த விஷயத்தில் அவர்கள் பத்ததியாகச் செய்துவரும் காரியங்களின் மூலாதாரக்கொள்கைகளிலே ஏதாவது ஒரு சிறு அளவாவது மாற்றிக்கொண்டிருக்கிறார்களா? பார்த்தாயா? இப்படிக் குடைந்து பார்ப்பதும், குத்திப்பார்ப்பதும், தட்டிக்கொட்டிப் பார்ப்பதும், பூதக்கண்ணாடியில் கண்ணை ஒட்டிக்கொண்டு பார்ப்பதும், விஸ்தீர்ணத்தையெல்லாம் சதுர அங்குலங்களாக அளவிட்டு இலக்கமிட்டுக் குறித்துவைப்பதும் ஆகிய எல்லாம் என்ன? பொலீஸ் தலைவனுக்கு அவன் உத்தியோகமுறையில் ஜனங்களுடைய சாமர்த்தியத்தைப்பற்றி ஒரே ஒரு வகையான அபிப்பிராயம் ஏற்பட்டுவிட்டது. அந்த அபிப்பிராயத்துக்கு ஏற்ப, கெட்டுப்போன சாமானைத் தேட வேண்டிய கிரமமான வழி இன்னதென்று ஒரு முறையை ஏற்படுத்திக்கொண்டான். அதையே வழக்கமாகச் செய்து வந்ததால் அது அவனுக்கு நன்றாய்ப் பழக்கமாய்விட்டது. அந்த முறையையே சற்று விஸ்தாரமாய் இந்தக் கேசிலும் கையாண்டிருக்கிறான். இவ்வளவு தானே? எல்லா மனிதர்களும் ஒரேமாதிரியாகத்தான் கடிதத்தை ஒளித்துவைப்பார்கள் என்ற அபிப்பிராயத்தை அவன் சந்தேகமற்ற கொள்கையாகக் கொண்டுவிட்டான். அவன் எண்ணுகிறான்: 'எல்லாரும் நாற்காலிக் காலில் துளையிட்டுக் கடிதத்தை அதற்குள் செருகவேண்டு மென்பது அவசியமில்லை. ஆனாலும் எந்த வகையான மனப்பான்மையானது ஒரு கடிதத்தை நாற்காலிக் காலுக்குள் ஓட்டையிட்டு ஒளித்துவைக்கச் செய்கிறதோ அதே வகையான மனப்போக்குத்தான் எல்லா மனிதர்களுக்கும் இருக்கும். அவர்களது யோசனை போகிற வழியெல்லாம் கண்ணுக்கு மறைவான ஏதாவது ஒரு மூலை முடுக்கில்தான் ஒளித்து வைக்கும்படி அவர்களைத் தூண்டும். இதற்குச் சந்தேகமில்லை.' ஒதுக்குப்புறமாயுள்ள, ஒளித்துவைப்பதற்குரிய, இம்மூலை முடுக்குக்களெல்லாம் சாதாரண சந்தர்ப்பங்களுக்குத்தான் பொருத்தமானவை என்பதும் சாதாரண மனிதர்களால் நாடுதற்குரியவை என்பதும் உனக்குத் தோன்றவில்லையா? ஏனென்றால், ஏதாவது ஒரு சாமானை யாராவது ஒருவன் ஒளித்து வைப்பானானால், அப்போதெல்லாம், இம்மாதிரி ஒதுக்குப்புறமான, கண்ணுக்குத் தென்படாத, இடத்தில்தான் ஒளித்து வைப்பானென்று முதன்முதலில் எல்லாருக்கும் தோன்றும். அப்படித் தோன்றுவதுதான் இயல்பு. ஆதலால், அதைக்கண்டுபிடிப்பது புத்தி

சாலித்தனத்தைப் பொறுத்ததே அல்ல; தேடுபவர்களுடைய ஜாக்கிரதையையும், கவனத்தையும், பொறுமையையும், விடாமுயற்சியையும், பிடிவாதத்தையும் பொறுத்ததாகவேதான் அது இருந்து கொண்டிருக்கிறது. 'விஷயம் முக்கியமான விஷயமாக இருந்தால் போதும், அல்லது வெகுமதி பெரிதாக இருக்குமானாலும் போதும்; இந்த இரண்டும் பொலீஸ் கண்களுக்கு ஒன்றாகத்தான் தோன்றும். அப்பொழுது ஜாக்கிரதை முதலிய குணங்களுக்கு ஒருநாளும் குறைவே இருக்காது. ஒளித்துவைத்த கடிதம் அதிகாரி தேடிய பிராந்தியத்தில் இருந்தால்—அதாவது அதிகாரி ஒளித்துவைப்பதற்குரிய வழிகளென்று எண்ணிய வழிப்படி அது ஒளித்துவைக்கப் பட்டிருந்தால்—திட்டமாகத் துளிகூடச் சந்தேகமில்லாமல் அதைக் கண்டுபிடித்திருப்பானென்பது நிச்சயம்' என்று சொன்னேனே, ஞாபகமிருக்கிறதா? என்ன எண்ணத்துடன் நான் அப்படிப் பேசினேனென்பது இப்பொழுது உனக்கு விளங்குகிறதா? இந்த அதிகாரி ஒன்றும் தெரியாமல் திகைத்துப்போய்விட்டான். அதற்கு மூலகாரணம் மிகவும் தொலைவாய் உள்ளது. அது என்னவென்றால் மந்திரி கவி இயற்றுகிறான். அதில் கியாதி அடைந்திருக்கிறான். ஆதலால் அவன் ஒரு முட்டாள் என்று எண்ணிக்கொண்டதுதான். 'முட்டாள்கள் எல்லாரும் கவிகளே' என்னும் இது உண்மையென்ற உணர்ச்சியை அதிகாரி பெற்றுவிட்டான். இதிலிருந்து 'கவிகள் எல்லாரும் முட்டாள்கள்' என்று முடிவு செய்துகொண்டது அவன் தர்க்கப்பிசகே தவிர வேறல்ல'' என்று பதில் சொன்னான் தூபென்.

"ஆமாம். இந்த ஆசாமிதானா கவி எழுதியவன்? அண்ணன் தம்பி இரண்டு பேருண்டு என்பது எனக்குத் தெரியும். இரண்டு பேரும் ஏதோ விஷயங்களைப்பற்றி எழுதிக் கியாதி பெற்றிருக்கிறார்கள் என்பதும் தெரியும். கணிதசாஸ்திர சம்பந்தமான விஷயம் ஏதோ ஒன்றைப்பற்றி எழுதினவன்தான் மந்திரி என்று எனக்கு ஞாபகம். அவன் கணிதசாஸ்திரியல்லவோ? கவி இல்லையே?'' என்று நான் கேட்டேன்.

"நீ தவறுதலாக எண்ணிக்கொண்டிருக்கிறாய். எனக்கு அவனை நன்றாகத் தெரியும். இரண்டும் அவனேதான். அவன் கவியும் கணிதசாஸ்திரியுமாதலால் அவன் நன்றாகக் காரியாகாரியங்களை விசாரணை செய்யக்கூடியவன். அவன் கேவலம் கணிதசாஸ்திரியாய் மட்டிலும் இருந்திருப்பானானால் அவனுக்கு இத்தகைய விசாரணைசக்தி இருந்திருக்காது. அப்பொழுது அவன் அதிகாரியின் கையில் எளிதில் அகப்பட்டுக்கொண்டு தவித்திருப்பான்.''

"நீ இப்படிச் சொல்லுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறதே! உலகத்தார் அனைவரும் கொண்டிருக்கும் அபிப்பிராயங்களுக்கு இவை நேர் மாறாக இருக்கின்றனவே. பல நூற்றாண்டுகளாக ஜனங்கள் நிதானமாய் யோசித்து அங்கீகரித்துக் கொண்டிருக்கும் கருத்துக்களை நீ அலக்ஷியமா செய்யப்போகிறாய்? கணிதசாஸ்திரியின் யுக்தியானது இணை ஈடு அற்றது என்றல்லவோ வெகுகாலமாகக் கருதிவருகிறார்கள்?'' என்றேன்.

"பொதுவாக யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கும் ஒவ்வொரு கொள்கையும் நம்பிக்கையும் முட்டாள்தனமாகத்தான் இருக்குமென்று அநேகமாகத் துணிந்து கூறலாம். ஏனென்றால் மிகுந்த ஜனங்கள் அதைப்பற்றி ஒரே வகையாய் எண்ணி ஒத்துக் கொண்டிருக்கிறார்கள் அல்லவா?'' என்று, ஷாம்போ சொல்லியிருப்பதைச் சொன்னான். "நீ சொல்லுகிறாயே அந்தத் தப்பான எண்ணத்தைத் தம்மாலியன்றவரை கணித சாஸ்திரிகள் பரப்பி வந்திருக்கிறார்கள் என்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். அது 'உண்மை உண்மை' என்று யார் யார் பகிரங்கப்படுத்தி வந்தாலும் அது தப்புத் தப்புத்தான் என்பதற்கு ஐயமேயில்லை. 'ஆராய்ச்சி' என்கிற வார்த்தையை அவர்கள் மெல்ல ஆல்ஜிபிராவிலே புகுத்தி விட்டார்கள். இந்தச் சாமர்த்தியத்தை வேறு ஏதாவது நல்ல காரியத்திலே செலவழித்திருக்கலாம். இந்தமாதிரி ஏமாற்றங்களை முதன் முதலில் தொடங்கியவர்கள் பிரெஞ்சுக்காரர்கள்தாம். வார்த்தை என்பதற்கு ஏதாவது ஒரு பொருள் உண்டானால் 'நெல்' என்பதற்கும் 'புல்' என்பதற்கும் எவ்வளவு பொருத்தமோ 'தன'த்துக்கும் 'சேதன'த்துக்கும் எவ்வளவு பொருத்தமோ அவ்வளவு பொருத்தந்தான் 'ஆராய்ச்சி'க்கும் 'ஆல்ஜிபிரா'வுக்கும் இருக்கும். இவ்விரண்டுக்கும் ஸ்நாநப்பிராப்திகூடக் கிடையாது'' என்றான்.

"உனக்கும் பாரிஸ் நகரத்திலுள்ள கணிதசாஸ்திரிகள் சில பேர்வழிகளுக்கும் ஏதோ சண்டை உண்டென்று தோன்றுகிறது. அது கிடக்கட்டும். இன்னும் மேற்கொண்டு சொல்'' என்றேன்.

"தர்க்கசாஸ்திர முறைப்படி, தர்க்கசாஸ்திர மூலமாய், ஒழுங்காகப் பயிற்சி செய்யப்பட்ட விவேகசக்தியைத் தவிர மற்றெந்த வகையான விசாரணாசக்தியும் பிரயோஜனமுள்ளதென்றே நான் ஒப்புக்கொள்ளவில்லை. அப்படிப் பயனுள்ளது என்பதை நான் ஒப்புக்கொண்டாலல்லவோ அதற்கு எவ்வளவு மதிப்பு உண்டு என்பதைப்பற்றி ஆராயவேண்டிவரும்? கணித சாஸ்திரத்தைப் படிப்பதால் ஏதோ ஒரு விசாரணாசக்தி முன்னுக்குக் கொண்டுவரப்படு

கிறது என்று சொல்லிக்கொள்ளுகிறார்களே, அவ்வகையான சக்தியே இல்லை யென்று நான் முக்கியமாய் ஆக்ஷேபிக்கிறேன். வடிவம் அளவு இவைகளை யொட்டியது கணிதசாஸ்திரம். வடிவம் அளவு ஆகிய இவ்விரண்டையும் பற்றிச் செய்த சோதனைகளால் கிடைக்கும் பயனைத் தர்க்க சாஸ்திரமுறையில் ஆராய்வதுதான் கணித சாஸ்திர விசாரம் எனப்படுவது. சுத்த ஆல்ஜிபிரா என்று சொல்லிக்கொள்ளுகிறார்களே அவ்விஷயத்தைப்பற்றிய உண்மைகளைப் பொதுப் படையான உண்மைகள் என்றும் ஆதிதத்துவங்கள் என்றும் எண்ணுவதுதான் பெரிய தப்பு. இது பொறுக்கி எடுத்த முட்டாள் தனமாயிருக்கிறது. இதை எப்படி உலகத்தார் எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் என்பதை நினைக்க நினைக்க எனக்கு ஆச்சரியமாயிருந்துகொண்டேயிருக்கிறது. கணித சாஸ்திர உண்மைகள் பொதுத் தத்துவங்கள் அல்ல, ஒன்றுக்கொன்று —அதாவது அவற்றின் வடிவத்துக்கும் அளவுக்கும்—உள்ள சம்பந்தத்தை ஒட்டிய தத்துவமெல்லாம் மற்றொரு விஷயத்துக்கு, உதாரணமாகக் குணகுண விசாரத்துக்கு, பொருத்தமாயிருக்காது ; தப்பாகவே முடியும். பகுதிகளை யெல்லாம் மொத்தமாகக் கூட்டினால் முழுமை ஏற்படும் என்பது கணிதசாஸ்திர உண்மை. இதைக் குணகுண விசாரத்தில் பிரயோகித்தால் அது முற்றிலும் தவறாகவே முடியும். இரசாயன சாஸ்திரத்திலும் இது சரியாயிருப்பதில்லை. ஏதாவது ஒரு காரியத்தைச்செய்யும்படி தூண்டிய அடிப்படையான உள்ளக்கருத்து என்னவென்று ஆராயும் போதும் இது சரியாயிருப்பதில்லை. தனித்தனியாக இரண்டு காரணங்கள் இருக்கின்றனவென்று வைத்துக்கொள்ளுவோம். அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மதிப்பு உண்டு. அவை இரண்டையும் தனித்தனியாகக் கூட்டினால் என்ன மதிப்பு ஏற்படுமோ அதைப்போல இருக்கவேண்டுமென்பதில்லை அவை இரண்டும் ஒன்றாகச்சேர்ந்து ஒரே இடத்தில் காணப்படும்பொழுது. ஒன்றுக்கொன்று உள்ள சம்பந்தத்தை ஒட்டிய உண்மைகள் யாவும் மற்ற விஷயங்களில் பொருத்தமாயிருக்கமாட்டா என்பதற்கு இந்தமாதிரி இன்னும் அநேகம் உதாரணங்களை எடுத்துக் காட்டலாம். வரம்புக்குள்ளடங்கிய தத்துவங்களை வைத்துக்கொண்டு, அவை யாவும் உலகம் முழுவதற்கும் பொருத்தமானவை என்று எண்ணிக் கொண்டு—உலகமும் அப்படியே எண்ணிக்கொண்டிருக்கிறது— வழக்காடுகிறான் கணித சாஸ்திரி. இது அவனுக்கு அப்பியாசத்தால் ஏற்பட்டது. ப்ரையன்ட் என்பவன் கடவுளர் சரிதை என்ற அரிய புத்தகம் ஒன்று எழுதியிருக்கிறான். அதில் இவ்வகையான தப்பு ஏற்படுகிற மற்றொரு முறையையும் எடுத்துக்காட்டுகிறான். நாம்

மிலேச்சருடைய பழம் புராணக் கதைகளை எல்லாம் நம்புவதில்லை. இருந்தாலும் இதை அடிக்கடி மறந்து விடுகிறோம். அவை வாஸ்தவமென்று எண்ணியிருந்தால் எவ்வகையான முடிவுகளைக் கொள்ளுவோமோ அம்முடிவுகளைக் கொள்ளுகிறோம். ஆல்ஜிபிராக்காரர்கள் எல்லாரும் மிலேச்சர்கள்தாம். ஆதலால் அவர்கள் மிலேச்சக் கதைகளை நம்புகிறார்கள் என்றே சொல்லவேண்டும். அவர்கள் ஞாபகப் பிசகால் முடிவுகளைக் கொள்வதில்லை. அவர்களுக்கு மூளை விபரீதமாகக் கெட்டுப் போய் விட்ட காரணத்தால் தான். சம மூலங்களில் கணித சாஸ்திரிகளை நம்பலாமேயொழிய, மற்ற விஷயங்களில் அவர்களை நம்புவதற்கில்லை. அப்படி நம்பக் கூடிய கணித சாஸ்திரியை நான் இதுவரை பார்த்ததில்லை. $x^2 + px$ என்பது $q$வுக்கு எக்காலத்திலும் எங்கும் நிரங்குசமாய்ச் சரிசமம்தான் என்ற திடமான நம்பிக்கையை அவன் மனதிற்குள் இரகசியமாய் வைத்துப் பூட்டி வைத்திருப்பான் என்பது உறுதி. இவ்வகையான பெரிய மனுஷ்யர்களிடம் போய் எப்பொழுதாவது '$x^2 + px$ எப்பொழுதும் $q$வுக்குச் சரிசமமாகவே இருந்து தீர வேண்டுமென்பது இல்லை போலிருக்கிறதே, சிற்சில வேளைகளில் அம்மாதிரி சமமாயில்லாமலும் இருக்கலாம் போலிருக்கிறதே' என்று உனக்கு இஷ்டமிருந்தால் சொல்லிப்பார். நீ சொல்லுகிறது இன்னது என்று அவனுக்கு அர்த்தம் ஆகிவிட்டதோ, அப்பொழுது அவன் கிட்ட நில்லாதே. எவ்வளவு சீக்கிரமாக ஒதுங்கிப்போக முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக ஒதுங்கிப்போய்விடு. இல்லாவிட்டால் அவன் உன்னை அடிக்க வந்து விடுவான்.''

இதைக் கேட்டு நான் சிரித்தேன். அதற்குமேல் தூபென் தொடர்ந்து சொல்லுவான்: "நான் என்ன சொல்ல வந்தேன் என்றால், மந்திரி கேவலம் கணித சாஸ்திரியாக மட்டிலும் இருந்திருந்தால் அதிகாரி இந்த மாதிரி எனக்குச் செக்குக் கொடுக்கும்படி நேர்ந்திருக்கவே நேர்ந்திராது. அந்த அவசியமே அவனுக்கு ஏற்பட்டிருக்காது. அவன் கணிதசாஸ்திரி யென்பதும் எனக்குத் தெரியும்; அவன் கவி என்பதும் எனக்குத் தெரியும். ஆதலால் அவனுடைய திறமைக்கு ஏற்றபடியும் அவனைச் சுற்றிலும் உள்ள சமாசாரங்களுக்கும் நிலைமைகளுக்கும் ஏற்றபடியும் நான் என்னுடைய பரிகாரங்களைத் தேடிக்கொண்டேன். அவன் ராஜ சபையிலுள்ள சபாசதர்களில் ஒருவன் என்பதும், மிகவும் துணிகரமான, அஞ்சாத நெஞ்சு படைத்த, விஷமக்காரனமான ஆசாமி என்பதும் தெரியும். ஆகையால், சாதாரணமாய்ப் பொலீஸ்காரர் என்ன என்ன செய்வார்கள் என்பதை அவன் நன்கு அறிந்தவனாகத்தான் இருப்

பானென்று நான் எண்ணினேன். வழியில் மடக்குவார்கள் என்பதைப்பற்றி அவன் நினைக்காமல் இருந்திருக்க மாட்டான். நடந்த காரியங்களிலிருந்து அவன் முன்எச்சரிக்கையாகத் தான் இருந்திருக்கிறனென்பது ருசுவாகி விட்டது. தன் வீட்டை இரகசியமாகச் சோதனை போடுவார்கள் என்பதும் அவனுக்கு முன்பே தெரியும். அவன் அடிக்கடி வீட்டை விட்டு வெளியே போய்க் கொண்டிருந்தானே—'இதெல்லாம் எனக்கு மிகவும் ஒத்தாசையாக இருக்கிறது, நான் திருட்டுச் சாமானைச் சீக்கிரம் கண்டு பிடித்து விடுவேன்' என்று அதிகாரி ஜம்பமாய்ப் பேசவில்லையா ?—அப்படிப் போனதெல்லாம் வெறும் வஞ்சகமாகத்தான். அது எதற்கு என்றால், பொலீசார் சௌகரியமாகவும் பூரணமாகவும் வீட்டை ஒரு முறை தேடிவிட்டார்களானல், அந்தக் கடிதம் அங்கே இல்லை என்ற முடிவுக்கு வந்து விடுவார்கள் என்ற நோக்கத்தின் பொருட்டுத் தான். ஜி...யும் தேடின பின் அப்பேர்ப்பட்ட முடிவுக்குத் தான் வந்து விட்டான். எனக்கு இதுவும் தோன்றிற்று: அதாவது இப்பொழுது உனக்குச் சற்றுச் சிரமப்பட்டு விவரமாய்ச் சொன்னேனே, பொலீஸ்காரர் திருட்டுச் சாமான்களைத் தேடும்போது இன்ன கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டு இன்ன வகையாகத் தேடுகிறார்கள் என்று. அந்த மாதிரி எனக்குத் தோன்றிய எண்ணங்களெல்லாம் அவனுக்கும் அதே கிரமத்தில் கட்டாயமாய்த் தோன்றியிருக்கும். ஆதலால் சாதாரணமாய் ஒளித்து வைக்கும் மூலைகளிலே அதை வைக்கவே கூடாதென்று அவன் உணர்ந்திருப்பான். தன் வீட்டிலே எவ்வளவு ஜாக்கிரதையாய் மிகவும் சிக்கலானதாயும் கண்மறைவில் உள்ளதாயுமுள்ள எந்த இடத்தைத் தேடிப் பிடித்து ஒளித்து வைத்தாலும், அவ்விடங்கள் யாவும் பொலீசாருக்குச் சர்வ சாதாரணமான திறந்த பெட்டிகளைப் போலத்தான் இருக்கும். பொலீசாருடைய கண்களுக்கும், குத்தூசிகளுக்கும், துரப்பணங்களுக்கும், பூதக்கண்ணாடிகளுக்கும் இவை தட்டுப்படாமல் இருக்க முடியாது என்னும் விஷயங்களை அறிந்து கொள்ளக்கூடாத மூடனல்லவே அவன் என்று நான் யோசித்தேன். சாதாரணமாகவே அவன் மிகவும் சாமானியமான வழியைக் கையாண்டிருப்பான் என்பதையும், அவனுக்கு வேறு வழியில்லாததால், யோசித்துப் பார்த்தாலும் அப்பேர்ப்பட்ட சாமானிய வழியையே தான் கையாள வேண்டியிருக்கும் என்பதையும் முடிவிலே நன்றாக உணர்ந்து கொண்டேன். 'அது அவ்வளவு சர்வ சாதாரணமாயிருந்து கண்ணுக்கு எதிரே இருப்பதால் தான் இந்த இரகசியம் உனக்கு இவ்வளவு தொந்திரவு கொடுக்கிறது' என்று நாம் முதல் தரம் சந்தித்த

போது அதிகாரியிடம் சொன்னேனே நினைவிருக்கிறதா? அப்பொழுது அவன் மூச்சுப் போய்விடும்படி சிரித்தானே உனக்கு ஞாபகமிருக்கிறதா?'' என்றான் தூபென்.

“ஆமாம். அவன் சிரித்தது எனக்கு நன்றாக ஞாபகமிருக்கிறது. எங்கே அவனுக்கு வலிப்புக் கிலிப்பு வந்து விடுமோவென்று கூட நான் நிஜமாகவே பயந்தேன்'' என்றேன்.

“ஸ்தூல உலகத்துக்கும் சூக்ஷ்ம உலகத்துக்கும் அநேக வகையான ஒப்புமைகள் இருக்கின்றன. ஆகையினாலே, பேசும்போது உபயோகிக்கும் உவமை முதலிய சிற்சில அணிகளைக் கொண்டு நாம் வழக்குக்கு ஆதரவு காட்டுவதும், ஒரு வருணனையை அழகு பெறச் செய்வதும் சகஜமாயிருந்து வருகின்றன. அவற்றை நாம் ஒருவாறு உண்மைகள் என்றே கருதி வருகிறோம். உதாரணமாக, ‘ஜடத்துவ சக்தி’ என்னும் தத்துவமானது பூதத்துவ சாஸ்திரத்துக்கும் மனோதத்துவ சாஸ்திரத்துக்கும் பொதுவாக உள்ளதாகவே தோன்றுகிறது. ‘ஒரு சிறு வஸ்துவை இயக்குவதைக் காட்டிலும் அதனினும் பெரிய வஸ்துவை இயக்குவது சற்று அதிகக் கஷ்டம். அதற்குப்பின் அது பெற்றிருக்கும் மொமெண்டமானது (வேக காதமானது) இந்தக் கஷ்டத்தின் அளவுக்கு ஏற்றபடியிருக்கும்’ என்னும் பூதத்துவ சாஸ்திர உண்மைகள், ‘பெரிய அளவுள்ள அறிவுகள் சாதாரணமான சிற்றறிவுகளைக் காட்டிலும் மிக்க வலியுடையனவாயிருப்பினும், ஸ்திரமான கொள்கைகளை உடையனவாயிருப்பினும், இயங்குங்கால் பயன் தருவனவாயிருப்பினும், அவ்வளவு இலேசாக அவை இயங்குவன அல்ல, முன்னேற்றத்தின் பொருட்டு அவை எடுத்து வைக்கும் அடிகளும் சந்தேகத்துடனும், தயங்கித் தயங்கியுமே எடுத்து வைக்கப்படுகின்றன’ என்னும் மனோதத்துவ உண்மைகளைக்காட்டிலும் அதிக வாஸ்தவமான உண்மைகள் அல்ல. இரண்டும் ஒரே வகையான உண்மைகள்தாம். இன்னொன்று: கடைத் தெருக்களிலே கடைகளின் வாயில்களுக்கு மேலே எழுதியிருக்கிற விலாசங்களைக் கவனித்திருக்கிறாயா, அவற்றுள் எவை எவை நமது கண்ணை அதிகம் கவர்கின்றன என்று?''

“அந்த விஷயத்தைப்பற்றி ஒரு க்ஷணநேரம்கூட யோசித்தது கிடையாது'' என்றேன்.

அவன் மறுபடியும் தொடங்கினான்: “படத்தை வைத்துக் கொண்டு விளையாடுகிற பிதிர் விளையாட்டு ஒன்று உண்டு. விளையாடுகிற ஒரு கக்ஷி இன்னொரு கக்ஷியைப் பார்த்து, ‘நான் ஒரு பேர் சொல்லப்போகிறேன் அதைப் படத்தில் காட்டு’ என்று ஒரு பெயரைச் சொல்லும். அந்தப் பேரானது கசா மொசா என்று சிக்க

லாய்க் கோணல்மாணலாக வரைந்திருக்கும் படத்தில் எழுதப்பட்டிருக்கும் பேராயிருக்கும். அது ஒரு நகரத்தின் பெயராயிருக்கலாம், ஒரு நதியின் பெயராயிருக்கலாம், ஒரு மாகாணத்தின் பெயராயிருக்கலாம், அல்லது ஓர் இராஜ்யத்தின் பெயராக இருந்தாலும் இருக்கலாம். அந்த விளையாட்டைப் புதிதாக விளையாடுபவன் என்ன செய்வானென்றால், எறும்புபோல் பொடிப் பொடியாய் எழுதியிருக்கிற பெயர்களைச் சொல்லி எதிர்க் கக்ஷியை விழிக்கச்செய்யப் பார்ப்பான். ஆனால் அந்த விளையாட்டில் தேர்ந்த கையோவெனில் பெரிது பெரிதாய்க் கொட்டை கொட்டையான எழுத்திலே படத்திலே ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிவரையில் எழுதப்பட்டிருக்கும் பெயர்களை எடுத்துக் கொடுப்பான். தெரு வீதிகளிலே அளவுக்கு மிஞ்சிய பெரிய அளவிலே எழுதப்பட்டுள்ள விலாசங்களைப்போல இவை மிகவும் அதிகப் பிரத்தியக்ஷமாயிருப்பதால் இவற்றை ஒருவரும் சரியாகக் கவனிக்கமாட்டார்கள். இங்கே ஸ்தூலமாக உள்ள பார்வைக் குறைவானது, நமக்கு நேர் எதிராக இருப்பதால் அதிகப் பிரத்தியக்ஷமாயிருக்கும் அறிவு விஷயங்களை நமது புத்தியானது எப்படி ஏற்றுக்கொள்ளாமல் திருஷ்டிக் குறைவு எப்படி ஏற்படுகிறதோ அதற்கு முற்றிலும் ஈடானது. இந்த விஷயம்தான் நமது அதிகாரியின் அறிவுக்கு எட்டவில்லை. இது அறிவுக்கு மேல்பட்டுவிட்ட காரணத்தால் எட்டவில்லையோ, அல்லது கீழ்ப்பட்டுவிட்டதால் எட்டவில்லையோ, அதைப்பற்றி நமக்கென்ன ? உலகத்தின் கண்ணுக்கு ஒரு விஷயம் படாமல் இருக்க வேண்டுமானால், அதை அதன் கண்ணுக்கு நேராக அதன் மூக்கின் கீழ் வைத்துவிடவேண்டும். உலகம் அதைக் கவனியாது தடுப்பதற்குச் சரியான உபாயம் அதுதான் என்று அறிந்து, அந்த மந்திரி அவ்வாறு செய்திருப்பானென்பதை இவன் கனவிலும் நினைக்கவில்லை.

"ஆனால் துணிகரமான, அஞ்சிப் பின்வாங்காத, தராதரமறிந்து செய்யவல்ல டி...யினுடைய சாமர்த்தியத்தையும், அந்தப் பத்திரத்தைச் சரியானபடி பயன்படுத்த வேண்டும், அது சதா சர்வகாலமும் கைக்கெட்டும் இடத்திலேயே இருக்க வேண்டும் என்னும் விஷயத்தையும், பொலீஸ் அதிகாரி முறைப்படி தேடிய பிரதேசத்திலெல்லாம் அது இல்லை என்று அவனே நமக்குக் கொடுத்த நிச்சயமான ருசுவையும் நான் நினைக்க நினைக்க, அந்தக் கடிதத்தை ஒளித்து வைக்கும் பொருட்டு, அதை ஒளித்து வைக்க முயலாததுதான், உலக நடவடிக்கையை அறிந்த, புத்திசாலித்தனமான, அந்த மந்திரி செய்த அரிய உபாயம் என்பது எனக்கு மேன்மேலும் தெளிவாகிக் கொண்டே வந்தது.

"இவ்வகையான எண்ணங்கள் நிறைந்தவனாய் நான் பச்சைக் கண்ணாடியைக் கண்ணில் போட்டுக்கொண்டு என்னைத் தயார் செய்துகொண்டேன். ஒரு நாள் காலையில்—அன்று நன்றாய் வெயில் காய்ந்துகொண்டிருந்தது—தற்செயலாய் வந்தவன்போல் மந்திரி மாளிகைக்குப் போனேன். டி...வீட்டிலிருந்தான். வழக்கம் போல் கொட்டாவி விட்டுக்கொண்டும், சாய்நாற்காலியில் சாய்ந்து கொண்டும் வீண்பொழுது போக்கிக்கொண்டும், 'இவ்வுலகத்திலே ஒன்றிலும் சாரம் இல்லை' என்று எண்ணுபவன்போல் நடித்துக் கொண்டும் பாசாங்கு பண்ணிக்கொண்டிருந்தான். இப்பொழுது உள்ள மனுஷ்யர்களில் அவனைப்போல் சுறுசுறுப்பு உள்ளவர்களே கிடையாது என்றுதான் நான் சொல்லுவேன். ஆனால் அவன் அப்படி இருப்பது மற்றப்பேர்கள் அவனைப் பார்க்காமல் இருக்கும் வேளையில் மட்டும்தான்.

"அவனுக்குச் சரியாய் நானும் நடந்துகொள்ளவேண்டுமென்று எண்ணி, என் கண் மிகவும் பலஹீனமாகி விட்டதென்று சொல்லி வருந்தினேன். எப்பொழுதும் கண்ணாடி போட்டுக்கொள்ளும்படி ஆகிவிட்டது என்றேன். அவனோடு முழுமனத்துடனும் முழுக்கவ னத்துடனும் பேசுபவன்போல் நான் பேசிவந்தாலும் கண்ணாடியின் மறைவு வழியாக வெகு ஜாக்கிரதையாய், அவனுக்குத் தெரியாமல், அவனிருந்த அறையை நன்றாகக் கவனித்துப் பார்த்துவந்தேன்.

"அவன் ஒரு பெரிய மேஜையின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அதன் மேலே தாறுமாறாய்ச் சிற்சில கடிதங் களும், வேறு சில காகிதங்களும், ஒன்றிரண்டு சங்கீதக்கருவிகளும், நாலைந்து புத்தகங்களும் இறைத்துக்கிடந்தன. அவற்றையெல்லாம் வெகுநேரம் ஜாக்கிரதையாய்ப் பார்த்தான பிறகு அவற்றினிடை யில் சந்தேகத்துக்கு இடமானது ஒன்றும் இல்லை என்று கண்டு கொண்டேன்.

"கடைசியாக, அவ்வறை முழுவதும் நான் இப்படிச் சோதித் துக்கொண்டு வரும்பொழுது, அட்டையால் செய்து பூப்போட்ட கார்டுவைக்கும் பெட்டி ஒன்று என் கண்ணிலே பட்டது. கணப் புப்போடும் சிம்னியின் அண்டையில் மான்டெல்பீசின் நடுவிலே ஒரு பித்தளை ஆணியிலிருந்து, அழுக்கடைந்த நீலநாடா ஒன்றில், அது தொங்கவிடப்பட்டிருந்தது. இந்தப்பெட்டியிலே மூன்று நான்கு அறைகள் இருந்தன. அவற்றுள்ளே ஐந்தாறு கார்டுகளும் ஒரே ஒரு கடிதமும் இருந்தன. அக்கடிதம் அழுக்கடைந்து கசங்கி யிருந்தது. அதன் நேர் நடுவிலே அது கிட்டத்தட்ட இரண்டாகக் கிழிந்து கிடந்தது. அதைப்பார்த்தால் அது ஒன்றுக்கும் உதவா தென்று யாரோ கிழித்து எறிய எண்ணினது போலும், பிற்பாடு, இப்பொழுது கிழித்தெறிய வேண்டாம் அப்புறம் பார்த்துக்

கொள்ளுவோம் என்று முதல் எண்ணத்தை மாற்றி நிறுத்திவிட்டது போலும் தோன்றிற்று. அதிலே ஒரு பெரிய கறுப்பு முத்திரையிருந்தது. அதிலே டி...யின் அடையாளம் நன்ருக மிகவும் பளிச் சென்று தெரிந்தது. சிறிய எழுத்தில் மந்திரியின் மேல் விலாசம் அதில் எழுதியிருந்தது. அந்த எழுத்தும் பெண்களின் எழுத்துப்போலிருந்தது. அதைப்பார்த்தால் மிகவும் அஜாக்கிரதையாகவும் லக்ஷியமில்லாமலும் அந்தக் கடிதத்தை அந்தப் பெட்டியின் மேலறை யொன்றில் எறிந்தது போலவே தோன்றிற்று. அப்படிக் கிடந்தது அந்தக் கடிதம்.

"அந்தக் கடிதத்தை நான் ஒரு பார்வை பார்த்ததுமே நான் தேடிவந்த கடிதந்தான் அது என்று தீர்மானித்துவிட்டேன். ஆனுல், நிச்சயமாக, பார்த்தவுடனே அதிகாரி நமக்கு விவரமாய் வருணித்த கடிதத்துக்கும் இதற்கும் எள்ளுக்கும் கொள்ளுக்குமுள்ள வித்தியாசம் இருப்பதுபோல்தான் தோன்றிற்று. அவ்வளவு மாறுபட்டுத்தான் இருந்தது அதன் தோற்றம். இதிலோ முத்திரை பெரிது: கறுப்பு: அதுவும் டி...யின் குடும்பத்தைச் சேர்ந்தது. அதிலோ முத்திரை சிறியது: சிவப்பு: எஸ்...வமிசத்துப் பிரபுக்களைச் சேர்ந்தது. இதன் மேல் விலாசம் பொடி எழுத்தில் ஒரு பெண்ணினுல் மந்திரிக்கு எழுதப்பட்டிருந்தது : அதிலோ ஒரு ராஜ வமிசப்பெரியவர்களுக்குப் பெரிய எழுத்துக்களில் தீரமாகத் திருத்தமாக எழுதப்பட்டிருந்தது. அளவு ஒன்றில்தான் இரண்டும் ஒத்திருந்தன. ஆனுல் மிகவும் அதிகமான அளவில் காணப்பட்ட, நேர் எதிரிடையாயுள்ள, இந்த வித்தியாசங்களும், அதிலுள்ள அழுக்கும், அது கசங்கிக் கிழிந்து கிடந்த நிலையும்—இவையாவும் டி...யினுடைய நிஜமான ஒழுங்காயுள்ள வழக்கங்களுக்குப் பொருத்தமில்லாதனவாயிருந்தன. ஆதலால் அக்கடிதம் ஒன்றுக்கும் உதவாதது என்று பார்ப்போர் அனைவரும் நினைக்கவேண்டும் என்பதற்கு எடுத்துக்கொண்ட முயற்சியின் அடையாளங்களாகத்தான் இவை தோன்றின. இவ்விஷயங்களும், அந்தக்கடிதம் வருபவன் எவனுக்கும் கண்ணில் படும்படி அவ்வளவு அதிகப்பிரத்தியக்ஷமான இடத்தில் வைக்கப்பட்டிருந்ததும் ஆகிய இவையாவும் நான் முன்பே கொண்டிருந்த அபிப்பிராயங்களோடு முற்றிலும் ஒத்துவந்தன. இவ்வளவும் சேர்ந்து, சந்தேகத்தோடு கூடிவந்த ஒருவனுக்குச் சந்தேகத்தை இன்னும் நன்ருய் உறுதிப்படுத்தக் கூடியனவாய் இருந்து வந்தன.

"நான் அங்கே எவ்வளவு நேரம் இருக்கமுடியுமோ அவ்வளவு நேரம் இருந்தேன். அம் மந்திரிக்கு ஒரு விஷயத்தில் மிகவும் ரசம் உண்டு. அவன் அதில் அதிக ஆத்திரமும் ஆசையும் உள்ளவன்

என்பது எனக்கு முன்பே தெரியும். அவனிடம் அவ்விஷயத்தைப் பற்றி மிகவும் குதூகலமாகப் பேசிக் கொண்டிருந்தேன். ஆயினும் வாஸ்தவமாக, என் கவனமெல்லாம் அந்தக் கடிதத்தின் மீது பாய்ந்து அதில் ஆழ்ந்துகிடந்தது. இப்படி நான் அதைக் கவனித்துக் கொண்டு வந்தபோது அதன் வெளித்தோற்றம் எப்படி இருக்கிறது, அது பெட்டியில் எப்படி வைக்கப்பட்டுக் கிடக்கிறது என்பனவற்றை மிகவும் ஜாக்கிரதையாய் ஞாபகத்தில் பதிவு செய்துகொண்டேன். கடைசியாக நான் தற்செயலாய்க் கவனித்துக் கண்டுபிடித்த விஷயத்தினால் எனக்கு ஏதாவது அற்பசொற்பம் சந்தேகம் இருந்தாலும் கூட அதுவும் நிவர்த்தியாய்விட்டது. அந்தக் காகிதத்தின் ஓரங்களைக் கூர்ந்து கவனித்து வரும்போது அவை இருக்க வேண்டிய அளவுக்குமேல் சுரசுரப்பாக வெடித்துத் தோன்றின. கட்டிக் காகிதத்தை ஒருமுறை மடக்கி நன்றாக அழுத்தி மடித்தபின்பு மறுமுறை அதற்கு எதிர்ப்புறமாக மீண்டும் ஒரு முறை அதே மடிப்பில்—அதாவது முதலில் மடிக்கும்போது உண்டான கோட்டின்வழி—மடித்தால் எப்படி அந்தக் காகிதம் மடிப்பில் சுரசுரப்பாகிவிடுமோ அப்படித் தான் வெடித்துப் போனதுபோல் அது தோன்றிற்று. இந்த விஷயம் ஒன்றே போதுமானது. அந்தக் கடிதத்தைக் கையுறையைத் திருப்புவதுபோல் திருப்பி, உட்புறத்தை வெளிப்புறமாக்கி, அதற்கு வேறு விலாசம் எழுதி, வேறு முத்திரை இடப்பட்டது என்பது எனக்குத் தெளிவாகிவிட்டது. அந்த மந்திரியினிடம் விடைபெற்றுக் கொண்டு அவன் மேஜையின்மேல் என்னுடைய தங்கப் பொடி டப்பியை வைத்துவிட்டு உடனே வெளியே வந்துவிட்டேன்.

"மறுநாள் காலையில் பொடி டப்பியை எடுத்துக்கொண்டு வருவதற்காக அங்கே போனேன். முந்திய நாள் பேசிய விஷயங்களைப் பற்றி அன்றும் நாங்கள் இருவரும் தொடர்ந்து பேசினோம். நாங்கள் இப்படிப் பேசிக்கொண்டிருக்கும்போது, வெளியில் அந்த மாளிகையின் ஜன்னல் புறத்தில் ஜன்னலுக்கு நேரே கீழாகத் துப்பாக்கி சுட்டதுபோல் 'டபார்' என்ற உரத்த ஓசை ஒன்று கேட்டது. உடனே யாரோ பயங்கரமாய் அலறி அழுவதும், பயந்துபோன ஜனக் கூட்டத்தின் அரவமும் காதில் பட்டன. டி....ஜன்னல் புறத்துக்கு ஓடினான். ஜன்னல் கதவைத் திறந்துகொண்டு வெளியே எட்டிப் பார்த்தான். அதே சமயத்தில் நான் அட்டைப் பெட்டியண்டை சென்றேன். கடிதத்தை எடுத்தேன். அதை என் சட்டைப்பையில் போட்டுக்கொண்டேன். நான் வெகு ஜாக்கிரதையாக வீட்டிலே தயாரித்திருந்த கடிதம் ஒன்றை அதற்குப் பதிலாக வைத்துவிட்டேன். நான் தயார் செய்த கடிதம் வெளித்தோற்றத்

திலே அந்தக் கடிதத்தை முற்றிலும் ஒத்திருந்தது அதிலே டி...யின் முத்திரைகூட இருந்தது. ரொட்டித் துண்டு ஒன்றைக் கொண்டு அந்த முத்திரையைத் தயார் செய்துவிட்டேன்.

"தெருவிலே ஏற்பட்ட குழப்பத்துக்குக் காரணம் துப்பாக்கி வைத்துக் கொண்டிருந்த ஓர் ஆசாமியின் பைத்தியக்காரச் செயல். பெண் பிள்ளைகளும் குழந்தைகளும் கூடியிருந்த ஒரு கூட்டத் தைப் பார்த்து அவன் துப்பாக்கியைச் சுட்டுவிட்டான். ஆனால் அதிலே ரவை ஒன்றும் இல்லை என்று தெரியவந்தபடியினலே அவன் ஏதோ பயித்தியக்காரன் அல்லது குடிகாரன் என்று அவனை விட்டு விட்டார்கள். அவன் போனதும் டி...யும் நானும் ஜன்னல் புற மிருந்து திரும்பி உள்ளே வந்தோம். என் காரியம் முடிந்த உடன் நானும் ஜன்னலண்டையில் போய்விட்டேன் என்று சொல்ல வேண்டியதில்லையே. வெகு சீக்கிரம் நான் அவனிடம் விடை பெற்றுக்கொண்டு வந்துவிட்டேன். பைத்தியக்காரன் மாதிரிப் பாசாங்கு செய்தவன் நான் கூலிக்கு அமர்த்திய ஓர் ஆள்."

"அந்தக் கடிதத்தை எடுத்துக்கொண்ட பிறகு அதைப் போன்ற மற்றொரு கடிதத்தை நீ அதற்குப் பதிலாக வைக்கவேண்டிய காரணமென்ன? எதற்காக அப்படிச் செய்தாய்? நீ முதல்தரம் அங்கே போனபொழுதே அந்தக் கடிதத்தைப் பகிரங்கமாய் எடுத்துக்கொண்டு புறப்பட்டுவந்தால் அது நன்றாயிருந்திருக்காதோ?" என்று நான் கேட்டேன்.

அதற்குத் தூபென் சொன்னான்: "டி...மிகத் துணிந்தபேர்வழி. அச்சமில்லாத வீரன். அவன் மாளிகையில் அவனிடம் அபிமானம் உள்ள வேலை ஆட்களும் இருக்கின்றனர். நீ சொல்லுகிற அடாச் செயலை நான் செய்யத் துணிந்திருந்தால் அம்மந்திரியிடமிருந்து நான் உயிரோடு தப்பித்துக் கொண்டு வந்திருப்பேன் என்று சொல்வதற்கில்லை. பாரிஸ் நகரத்து மகா ஜனங்கள் அதற்கப்புறம் என் பெயரையே கேட்கமுடியாது போயிருக்கும். இந்த யோசனை களைத் தவிர, எனக்கு வேறோர் உத்தேசமும் உண்டு. அரசாங்க விஷயங்களிலே என்னுடைய கொள்கைகள் என்னவென்பது உனக்குத்தெரியும். இந்த விஷயத்திலே, இதில் சம்பந்தப்பட்ட சீமாட்டி யின் கட்சி ஆளாகவே நான் நடந்து கொண்டேன். பதினெட்டு மாத காலமாக அவள் இந்த மந்திரியின் கையில் சிக்கிக்கொண்டு தத்தளித்தாள். இப்பொழுது அவன் அவள் கையில் அகப்பட்டுக் கொண்டு விட்டான். ஏனென்றால் கடிதம் தன்னிடம் இல்லை என் கிற விஷயம் அவனுக்குத் தெரியாது. ஆகையால் அவன் முன் போலவே, அது தன் கையிலிருந்தால் எப்படியோ அப்படியே, தன்

இஷ்டம் போலெல்லாம் 'அதைச் செய், இதைக் கொடு' என்று அவளைத் துன்புறுத்திக் கொண்டிருப்பான். அவ்வாறு செய்து கொண்டே வந்தால் அவனுடைய அரசாங்கப் பதவியானது அழிந்து விடும். அவன் பதவியை விட்டு நீங்கும்போது நீங்கிய வேகம் அதிகமா அல்லது அதனால் ஏற்படும் இகழ்ச்சி அதிகமா என்பது சொல்லவொண்ணாததாயிருக்கும். 'மலையினின் றிறங்குதல் மிக இனிதே' என்று சொல்லுவதெல்லாம் அழகாகத் தான் இருக்கிறது. காடலினி பாட்டைப் பற்றிச் சொல்லியது போல, எல்லா விஷயங்களிலும் அவரோகணத்தைக் காட்டிலும் ஆரோகணம் எவ்வளவோ எளிது. இப்பொழுது நடந்த காரியத்தில் இறங்குகிற ஆசாமியின் மேல் எனக்குக் கொஞ்சம் கூடப் பச்சாத்தாபம் கிடையாது. அவன் மேல் இரக்கம் நிச்சயமாக இல்லை. அவன் ஒரு மானுஷ ராக்ஷஸன்—அறிவிற் சிறந்த கடுங்கணாளன். எனக்கு ஒன்றே ஒன்று தெரிந்து கொள்ளவேண்டுமென்று நிரம்ப ஆசை. அது என்னவென்றால், அதிகாரி 'ஒரு பெரியவர்கள்' என்று சொன்னானே அவர்கள் டி...கேட்கிறதற்கு இணங்காமல் அவனை எதிர்க்கும் காலத்தில் அவன் அந்த அட்டைப் பெட்டியினண்டையில் போய் நான் அவனுக்கென்று வைத்திருக்கும் கடிதத்தைப் பிரித்துப் பார்க்கும்போது அவன் மனத்திலே என்ன எண்ணங்கள் உண்டாவன என்பது தான்.''

''எதற்காக? நீ அதிலே விசேஷமாக ஏதேனும் எழுதி வைத்திருக்கிறாயா?''

''ஏன்?—அதன் உட்புறத்தில் ஒன்றும் எழுதாதபடி காலியாய் விட்டு வைப்பதில் எனக்கு மனம் இல்லை—அது அவனை அவமரியாதை செய்ததாகும். வியென்னா நகரத்திலே ஒரு முறை டி... எனக்கு ஒரு கெடுதி செய்தான். அப்பொழுது நான் சிரித்துக் கொண்டே 'இதை நான் மறக்க மாட்டேன்' என்று சொல்லியிருந்தேன். தன்னை ஏமாற்றிவிட்ட ஆள் யாரென்று தெரிந்து கொள்ளச் சிறிது ஆவலுள்ளவனாகவே இருப்பான் என்பது எனக்குத் தெரியுமாதலால், அவனுக்கு ஓர் அடையாளமாவது கொடுக்காவிட்டால் அது நன்றாயிருக்காது என்று எண்ணினேன். என் கையெழுத்து அவனுக்கு நன்றாய்த் தெரியும். ஆதலால் அந்தக் காலிப்பக்கத்திலே நட்ட நடுவிலே க்ரேபியோங் எழுதிய அத்ரே என்பதில் உள்ள வார்த்தைகளாகிய சில வார்த்தைகளை எழுதினேன்.

'ஆபத்துக்கு இடமான இந்தத் தீரச்செயலை அத்ரே செய்திருப்பான், அவன் செய்யாவிட்டால் தியெஸ்தெயைத் தவிர வேறு யார் செய்யக்கூடும்?'

# சங்கரராவ் சர்க்கஸ்

ஆங்கிரஸர்

சென்ற மாதம் அமாவாசையன்று சுவேதபுரியில் பெரிய கடைவீதி வழியே போய்க்கொண்டிருக்கையில் அங்கொருவன் பல வர்ணங்களில் அச்சடிக்கப்பட்ட பெரிய விளம்பரம் ஒட்டிய ஒரு படத்தை ஏந்தி நின்றான். நான் அவனருகிற் சென்று பார்த்த பொழுது அதில் பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது:—

"சங்கராராவ் சர்க்கஸ். இன்றிரவு ஆட்டமுறை முற்றிலும் மாற்றப்பட்டிருக்கும். ஹரிசியாமளன் மிருகங்களை யாட்டுவது காணத்தகுந்தது. கோமாளி கொல்லிமலை விநோத விளையாடல் களிப்பளிக்கும். முன்னாட்டத்தில் மதங்கொண்டு உபத்திரவஞ் செய்த ஆனை கட்டப்பட்டிருக்கிறது; கவலைப்படவேண்டாம்."

இவ் விளம்பரத்தைப் பார்த்ததும் எனக்கு ஆட்டம் பார்க்க வேண்டுமென்ற ஆவலுண்டாயிற்று. அன்றிரவு சர்க்கஸ் கூடாரத்திற்குள் சென்றேன். அங்கு அக்கம் பக்கத்திய ஊர்களிலிருந்து ஜனங்கள் வந்து கூடியிருந்தார்கள். நான் போய் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தேன். சற்றுநேரத்திற்கெல்லாம் மணியடித்தது. வாத்தியம் வாசிக்கப்பட்டது. உடனே ஹரிசியாமளன் வலதுகையில் நீண்ட சவுக்கும் இடது கையில் ரிவால்வரும் எடுத்துக்கொண்டு வளைவிற்குள் வந்து நின்றான். உடனே அழகிய ஆட்டக் குதிரைகள் வளைவிற்குள் ஓடிவந்தன. அவைகளில் ஒன்றிரண்டு தவிர மற்றவைகளெல்லாம் சவாரிசெய்யும் ஆளில்லாமலிருந்தன. அவைகளைச் சியாமளன் ஆட்டுகையில் சில குதிரைகள் வளைவிலிருந்து வெளியேறப் பார்த்தன. அப்பொழுது சங்கர் என்பவன் உள்ளேவந்து அவைகளை முதுகில் தட்டிக்கொடுத்து, சமாதானப்படுத்தினான். அதன் பின் கொம்பில்லா மாடு, வாலில்லாக் குரங்கு, நாக்கில்லா நாய், சிறகில்லாக் கிளி, காதில்லாக் கழுதை, பல்லில்லாப் புலி இவைகள் முறையாக வந்து ஆடின. கடைசியில் இவையனைத்தையும் ஒருங்கே சேர்த்து நடுவில் ஒரு தொட்டியில் தண்ணீரருந்துவதாகச் சொல்லி இவைகளை வளைவில் செலுத்தினார்கள். அச்சமயத்தில் கோமாளி கொல்லிமலை என்பவன் தன் கையில் மரத்தினால் செய்த கத்தியை எடுத்துச் சுழற்றிக்கொண்டு வந்து அங்கிருந்த மிருகங்களை யெல்லாம் அங்கும்

இங்கும் ஓடச்செய்தான். அதைக்கண்ட சியாமளன் கொல்லிமலையை நோக்கிச் சினங்கொண்டவன்போல பேசவாரம்பித்தான்:

"நமது சர்க்கஸ் கூட்டத்தின் நன்மையைக் கொஞ்சங்கூடக் கவனியாது நமக்கு இலாபத்திற்கேதுவாகிய இவ்விலங்குகளனைத்தையும் வீணில் பயமுறுத்துகிறாய். இது சரியல்ல. இங்குப் பார்க்க வந்திருக்கும் கனவான்கள் என்ன நினைப்பார்கள் ? நாம் ஏதோ இந்த மிருகங்களைக் குரூரமாக நடத்துவதாக எண்ணுவார்களன்றோ ? ஆட்டத்தின் மகிமை குறைந்துவிடுமல்லவா ?" இது கேட்ட கொல்லிமலை இடி இடி யென்று சிரித்து இவை உரைக்கலானான்:

"உம் ஆட்டத்திற்கும் மகிமையுண்டோ? ஆனையில்லாத ஆட்டம் அழகாகுமா ? அதைக் கண்டு பயந்த உங்கள் ஆட்டத்தைப் பார்ப்பவர்களில் யார்தாம் இகழமாட்டார்கள் ? "

"அடே கொல்லிமலை ! யானை மதங்கொண்டதனால் அதைக் கட்டிவைக்க நேர்ந்தது. இல்லாவிட்டால் இப்பொழுது இங்கு வந்திருக்கும் இம் மிருகங்களை நீ பயப்படுத்திக் கலைத்ததுபோல் அதையும் கலைத்து விட்டிருப்பாய். அது இல்லாவிட்டாலும் ஆட்டத்தினழகு குறைந்ததா ? பெரும் புலியைப் பார்க்கவில்லையா ? "

"அடாடா ! பெரும்புலியா ? அதன் வாயைத் திறக்கச் சொல்லும். பார்ப்போம்." என்று கொல்லிமலை சொன்னவுடன் ஹரி கையிலிருந்த சவுக்கால் தட்டவும் புலி வாயைத் திறந்தது. அதைப் பார்த்த கொல்லிமலை, " ஆ ! நல்ல புலி ; வாயில் பல்லேயில்லை. வாணாய் மாதிரி யிருக்கிறது வாய். இதை வைத்துக்கொண்டுதான் இது வரையில் ஆட்டம் காட்டினீர். பேஷ் ! இதைப் பார்த்ததும் ஜனங்கள் மயங்கினார்களே ! என்ன ஆச்சரியம் !" என்றான்.

இவ்வாறு பேசிக்கொண்டிருக்கையில் வளைவிற்குள் வந்திருந்த மிருகங்களைக் கட்டிப்பிடித்திருந்தவர்கள் அவிழ்த்துத் தொட்டியருகில் விட்டார்கள். உடனே அவைகள் பலவிதமாகக் கூக்குரலிட்டுச் சுற்றிச் சுற்றி வந்தன. அச்சமயத்தில் என்னருகில் உட்கார்ந்திருந்த ஒரு பிராம்மணர் தம் கையிலிருந்த மடிசஞ்சியைத் தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு எழுந்து வெளியேபோக ஆரம்பித்தார். " ஏன் போகிறீர் ?" என்று நான் கேட்டதற்கு அவர், " ஐயோ ! இந்த மிருகங்களையெல்லாம் அவிழ்த்து விட்டு விட்டார்களே. அவைகள் இங்கு வந்து நம்மைச் சங்கடப்படுத்தும். அதல்லாமல் அந்த நாய் வந்து என் மடிசஞ்சியைத் தொட்டுவிடுமே ! என்செய்வது ? அதில் பூஜையிருக்கிறதே. அதற்காகத்தான் நான் ஓடிப்போகலாமென்று நினைக்கின்றேன் " என்றார்.

"ஐயா ! உமக்கு அந்தப் பயம் வேண்டாம். இம் மிருகங்களைக் கட்டவிழ்த்து விட்டதாகத் தோன்றினாலும் அங்குச் சவுக்கும் துப்பாக்கியும் வைத்துக்கொண்டு நிற்பவரிடத்திலுள்ள பயத்தினால் அவை அவ் வளைவை விட்டு வெளிக் கிளம்பாது. கிளம்பினால் அவர் சுட்டுவிடுவார். நீர் பயப்படவேண்டாம். சும்மா உட்காரும். இதெல்லாம் வேடிக்கையாட்டந்தான். இங்கு வந்திருக்கும் மிருகங்களெல்லாம் அதிகமாய்ப் பழக்கப்பட்டவைகள். சொன்னபடியெல்லாம் கேட்பவைகள். முந்திய நாள் ஆட்டத்தில் நடந்ததை நீர் பார்க்கவில்லையா? விஷமம் செய்ய யத்தனித்த யானையை இவ்வளைவை விட்டு வெளியேறினவுடன் சங்கிலியால் கட்டிக் கூட்டிலடைத்து விட்டார்கள். நமக்குக் கவலையில்லை. ஹரியும் சங்கரும் மிருகங்களைப் பழக்குவதில் கைதேர்ந்தவர்கள்." இவ்வாறு கூறிச் சமாதானப் படுத்திய பிறகு பிராமணர் பக்கத்தில் உட்கார்ந்தார்.

பிறகு நடுவிலிருந்த தொட்டியருகே சென்ற மிருகங்களனைத்தும் தலைகளை யுள்ளே செலுத்தி எட்டியமட்டும் பார்த்துத் தண்ணீரைக் காணாமல் வெறுந்தொட்டியை நக்கிப் பார்த்துக் கூச்சலிட்டன. குரங்கும் நாயும் தொட்டிக்குள் குதித்துச் சுற்றிவிட்டுத் தண்ணீரைக் காணாமல் வெளியேறின. இவ்வாறு சத்தமிட்ட மிருகங்களனைத்தையும் சங்கரன் தட்டிக்கொடுத்துத் தடவி விட்டுச் சமாதானப்படுத்தியழைத்து வளைவிற்கு வெளியே சென்று அவைகளுக்கேற்பட்ட கொட்டகைகளில் கொண்டுபோய்ச் சேர்த்தான். பிறகு ஹரி சியாமளன் சபையோரைப் பார்த்து, "அடுத்த ஆட்டத்திற்குள் யானையின் மதம் தீர்ந்துவிட்டால் அதைக் கொண்டுவந்து ஆட்டுவேன். அது இல்லையென்று குறை கூறிய கோமாளி கொல்லிமலையும் மனங் களிக்கும்படி யாட்டுகிறேன். அதனால் உங்களுக்கு யாதொரு சங்கடமும் நேராத வண்ணம் இந்த வளைவிற்கு பந்தோபஸ்தாக இரும்புவலை போட்டுவிடுகிறேன். நீங்களெல்லோரும் கவலையின்றி வேடிக்கைப் பார்க்கலாம்" என்றான்.

இத்துடன் ஆட்டம் முடிவாயிற்று. நான் ஆட்டுபவர்களின் புத்தி வன்மையையும் மிருகங்களின் அறிவின்மையையும் நினைந்து வியப்படைந்து வீடு சென்றேன்.

# உபாத்தியாயர் பகுதி

## குழந்தைப் பயிற்சியும் குழந்தையின் கல்வியும்

எஸ். ஜகந்நாதன்

குழந்தையின் வளர்ச்சியைப்பற்றிப் பேசும்பொழுது அவ் வளர்ச்சியை அனுசரித்துக் குழந்தைக்குச் சரியான பழக்கம், பயிற்சி, கல்வி இவைகளைக் கொடுக்கவேண்டுமென்று ஒருவாறு குறிப்பிட்டோம். "குருவில்லா வித்தை பாழ்" என்பதற்கிணங்கக் குழந்தைக்கு இக் கல்வியை ஊட்டக்கூடிய குரு யாவர்? எந்தத் தாய் குழந்தையை ஈன்றெடுத்துத் தேகத்தைப் போஷணை செய்து பால் ஊட்டுகிறாளோ, அந்தத் தாயே ஞானப்பாலை ஊட்டும் முதற் குரு ஆகிறாள். எந்தத் தகப்பனார் குழந்தையைக் கையி லெடுத்து உச்சி மோந்து அதன் பாலலீலையைக் குதூகலத்துடன் அனுபவிக்கிறாரோ, அவரும் குழந்தையின் முதற்கல்வியில் ஈடுபட்ட குருவாகிறார். கடவுளே அக்குழந்தைக்குப் போதுமான அறிவை யும் அளித்திருக்கிறார். மீன் குஞ்சுக்குக் கடவுளே நீந்தும் ஒரு பிறவிச் சுபாவத்தை உண்டுபண்ணி யிருக்கிறார் அல்லவா? ஆகவே கடவுளால் கொடுக்கப்பட்ட அறிவைச் செம்மைப்படுத்தி அக் குழந்தையை நன்மார்க்கத்தில் வளரவிடுவதே முதற்குருவின் முக்கிய காரியமாகும்.

இளங்குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பதில் நம் நாட்டாரும் சரி, பிற நாட்டாரும் சரி அநேக முறைகளைக் கையாண்டு வந்திருக்கிறார் கள். இக்காலத்திலும் சிலர் அத்துறையிலேயே தமது காலம் முழு வதையும் செலவழித்து வருகிறார்கள். நமது நாட்டிலுள்ள பிரதம பால போதம் என்னும் விஷயத்தைப்பற்றிய புஸ்தகம் ஒன்றும் கிடை யாது. நமக்கு இதைப்பற்றின விஷயங்கள் பரம்பரையாய்க் குடும்பங் களில் பரவியிருக்கின்றதைத் தவிர வேறில்லை. அனுபவம் மிகுந்த பெரியோர்கள் தமது குடும்பத்திலுள்ள பாலர்களை வளர்த்து வந்தனர். பிற நாட்டிலோ சிலர்மாத்திரம் இவ்விஷயத்தைத் தமது வாழ்நாட் கைங்கரியமாகவே எடுத்துக்கொண்டனர். அவர்களது முறைகளையும் நாம் கவனிப்பது அவசியமாகும். அவர்களது கொள்கைகள் நமக்குச் சரியாகத் தோன்றுமாயின் அவர்களது அனுபவங்களில் சிலவற்றை நாமும் கைக்கொள்வது உசிதமாகும்.

## கிண்டர்கார்டன் முறை

புரோபல் என்பவர் ஒரு ஜர்மானியர். முதன்முதலில் குழந்தையின் கல்விக்காகப் பாடுபட்ட உத்தமர் இவரே. தமது குடும்பத்துக் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பதே முதல் தர்மமாக மேற்கொண்டு பிறகு தாம் கண்டறிந்த விஷயங்களை ஊராருக்கும் தெரியப் படுத்தினர். குழந்தைகளோடு குழந்தையாய்த் தாமும் பழகி வந்ததனல் அவர் சில முக்கிய விஷயங்களைக் கண்டறிந்தார். குழந்தைக்குக் கற்பனுசக்தி யிருக்கிறது. ஒரு காரியத்தைத் தொடர்ந்து செய்ய அது யத்தனம் செய்கிறது. தனக்கு முன்னே தெரிந்த அனுபவத்துடன் ஒட்டிப் புது விஷயங்களைக் கற்றுக்கொள்ள முயலுகிறது. எதையும் கற்றுக்கொள்ள வேண்டுமென்ற ஆசையால் எதைப் பார்த்தாலும், "இது என்ன, இது என்ன? இது எப்படி" என்ற ஆச்சரியத்தைத் தெரிவிக்கிறது. குழந்தையின் கல்வி முறையானது இச் சுபாவங்களுக்கு ஏற்றதாய் இருக்கவேண்டுமென்று அவர் கண்டறிந்தார். குழந்தைகளின் கற்பனுசக்தியை ஓங்கச்செய்ய 'நன்கொடைகள்' என்ற சில உபகரணங்களையும் கண்டறியலானுர். பல வடிவமுள்ள கட்டைகள், அட்டைத்துண்டுகள், மணிகள், வர்ணப்பந்துகள், சித்திரம் வரைதலுக்கேற்ற சாதனங்கள், குச்சிகள் முதலியவை அவரது உபகரணங்கள் ஆகும். இவர் கண்டறிந்த முறையையே நாம் 'கிண்டர்கார்டன்' என்று சொல்லுகிறோம். ஆயினும் தற்காலத்திலுங்கூட அதை ஒரு பாலர் பாடமாக நினைத்துக் கால அட்டவணையில் அதற்கென்று ஒரு நேரமும் குறிப்பிட்டு வருகிறோம். அது தப்பே. பாலருக்குரிய எல்லாப் பாடங்களையுமே அம் முறைப்படி குழந்தைகளுக்குப் போதிக்க வேண்டும். குழந்தைகளுக்குக் கதை சொல்லி நடிப்பதும், வேடிக்கையாக வெளியில் அழைத்துச் சென்று இயற்கை அற்புதங்களைக் காட்டுவதும், களிக்கச் செய்வதும் இவரது முறையைத் தழுவியனவாகும்.

## மாண்டிஸாரி முறை

இத்தாலி தேசத்தில் மாண்டிஸாரி என்னும் பெருமாட்டியார் இக்காலத்திலும் குழந்தையின் கல்வியில் ஈடுபட்டு வேலை செய்வதைப்பற்றி யாவரும் கேட்டிருக்கலாம். அவரது முறைகளையும் ஆராய்ச்சிகளையும் கல்வி முறையில் உழைத்துவரும் பெரியோர்கள் ஆவலுடன் படித்துவருகிறார்கள். இம்முறையை அனுசரித்த பள்ளிக்கூடங்கள் நகரங்களில் சிற்சில காணப்படுகின்றன. இது நாட்டில் நன்கு பரவவில்லை. இப்பெரியார் குழந்தைகளைப் பழக்கு

வதிலும், அறிவைப் புகட்டுவதிலும் ஐந்து இந்திரியங்களுக்கும் தக்க பயிற்சி கொடுப்பதுவே முதலான கடமை என்று அறிந்து அந்த ஐம்புலன்களையும் சரியாய்ப் பழக்கத் தகுந்த சில உபகரணங்களையும் அமைத்திருக்கிறார். தான் செய்த தப்பிதத்தைத் தானே கண்டறியச் செய்யும்படி இவ் வம்மையார் தமது உபகரணங்களை அமைத்திருப்பது எல்லோராலும் பாராட்டத் தக்கதாகும். முதன்முதலில் வைத்தியம் செய்பவராய் இருந்து வந்த காலத்தில் போதுமான வளர்ச்சியில்லாத குழந்தைகளை இவர் கவனிக்க நேரிட்டது. அவர்களைத் தினசரி பார்த்து வருங்காலத்தில் அவர்களுக்குத் தக்க கல்வி புகட்டவேண்டுமென்று எண்ணி அந்த மேலான கைங்கரியத்தையே தமது வாழ்நாளின் வேலையென்று எடுத்துக்கொண்டார். குழந்தைகள் தங்களுடைய உடைகளைத் தாங்களே அணியவும், தாமும் தமது சகோதரர்களும் கூடிப் பழகவும், மரியாதைச் சொற்களைச் சொல்லவும், சற்று நேரமாவது ஓடியாடுவதை நிறுத்திப் பேசாமலிருக்கவும் ஏற்றபடி இவ்வம்மையார் தமது குழந்தைகளைப் பழக்கி வருகிறார். இம் முறைப்படி சாதாரணக் குழந்தைகளுக்கு ஆரம்பக்கல்வி புகட்டுவதைக் குறித்தும் சில பரீக்ஷைகள் செய்து வருகின்றனர்.

## மற்ற நாடுகளிலுள்ள குழந்தைக்கல்வி சம்பந்தமான அபிவிருத்திகள்

இங்கிலாந்தில் மைகல் மாக்மில்லன் என்னும் சீமாட்டியார் பாலர்களுக்கு 2 வயது முதல் பயிற்சி கொடுக்க நூதனப் பள்ளிக்கூடம் ஒன்றை ஏற்படுத்தினர். இவரது ஏற்பாடு இந்நாளிலும் நன்கு வேரூன்றிப் பரவி வருகின்றது. படிப்பிலும் செல்வத்திலும் மேலோங்கி விளங்கும் அமெரிக்கா ஐக்கிய நாடுகளில் குழந்தைகளின் கல்வியைக் குறித்துப் பலர் அரும்பாடுபட்டு வருகின்றனர். ருஷியா தேசத்தில் தற்காலத்தில் குழந்தைகளைக் கண்காணிக்க நூற்றுக்கணக்கான குழந்தைகளின் நந்தவனங்களை நிர்மாணம் செய்திருக்கின்றனர் என்று பத்திரிகைகள் மூலம் படித்து வருகிறோம்.

## நம் நாட்டிலுள்ள முறைகள்

நம் நாட்டில் ஒவ்வொரு குடும்பத்திலுமுள்ள பெரியோர்களே குழந்தைகளைப் பராமரித்து வந்தனர் என்றும், அவர்கள் கையாண்ட முறைகள் தொன்றுதொட்டு அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன வென்றும் தெரிவித்தோம். அவைகளில் முக்கியமானவை குழந்தைகளுக்கேற்ற கதைகளும் பாட்டுக்களுமாகும். அக்கதை

களும் பாட்டுக்களும் கலைமகள் வாயிலாக அனைவருக்கும் தெரிய வருவது நமது பாக்கியமே. பலர் இவைபோன்ற கதைகளைத் தற்காலத்தில் சொல்லிக்கொடுப்பதில்லை. இவைகள் குழந்தைகளின் இயற்கைக்கு ஏற்றனவாய் அமைக்கப்பட்டிருக்கின்றன வென்றே கருதுகிறேன். பாட்டுக்கள் பாடிக் கதைகளைத் தெரிந்து கொள்ளு வது, சுலபமாய் ஞாபகசக்தியை விருத்திசெய்யவும், பாஷையை அபிவிருத்தி செய்யவும் தகுந்தபடி அமைந்திருக்கின்றன. குழந்தை களின் முதற்குருவான பெற்றோர்கள் இம்முறையைப் பின்பற்று வார்களா ?

### சில உதாரணங்கள்:

### வழிநடைச் சம்பாஷணை

| | |
|---|---|
| எங்கே போகிறாய் ? | ஊருக்குப் போகிறேன். |
| என்ன ஊர் ? | மயிலாப்பூர். |
| என்ன மயில் ? | காட்டு மயில். |
| என்ன காடு ? | ஆற்காடு. |
| என்ன ஆறு ? | பாலாறு. |
| என்ன பால் ? | கள்ளிப் பால். |
| என்ன கள்ளி ? | இலைக்கள்ளி. |
| என்ன இலை ? | வாழை இலை. |
| என்ன வாழை ? | கர்ப்பூர வாழை. |
| என்ன கர்ப்பூரம் ? | ரச கர்ப்பூரம். |
| என்ன ரசம் ? | மிளகு ரசம். |
| என்ன மிளகு ? | வால் மிளகு. |
| என்ன வால் ? | நாய் வால். |
| என்ன நாய் ? | மர நாய். |
| என்ன மரம் ? | பலா மரம். |
| என்ன பலா ? | வேர்ப் பலா. |
| என்ன வேர் ? | வெட்டி வேர். |
| என்ன வெட்டி ? | பனை வெட்டி. |
| என்ன பனை ? | தாளிப் பனை. |
| என்ன தாளி ? | விருந்தாளி. |
| என்ன விருந்து ? | மண விருந்து. |
| என்ன மணம் ? | பூ மணம். |
| என்ன பூ ? | மாம் பூ. |
| என்ன மா ? | அம்மா ! |

இதேபோல்,

''பொங்கலோ பொங்கல்! என்ன பொங்கல் ? சர்க்கரைப் பொங்கல்'' என்று ஆரம்பித்தும் சம்பாஷிப்பது உண்டு. கேள்வி கேட்கும் முறையும் பதில் சொல்லும் வழிகளும் இதில் அடங்கி யிருக்கின்றன. இது காதுக்குக் கேட்க இனிமையைத் தருகிறது. நல்ல பொழுதுபோக்கும் ஆகிறது.

### விளையாட்டும் சம்பாஷணையும்

[கையை ஒளித்துக்கொண்டு பிறகு சம்பாஷணை செய்யும் விதம்]

| | |
|---|---|
| கை எங்கே ? | காக்கா கொண்டு போச்சு. |
| காக்கா எங்கே ? | புளியமரத்திலே. |
| புளியமரம் எங்கே ? | வெட்டிப் போட்டாச்சு. |
| வெட்டின கட்டை எங்கே? | புல் முளைத்துப்போச்சு. |
| புல் எங்கே ? | யானையும் குதிரையும் தின்றுவிட்டன. |
| குதிரை எங்கே ? | கோட்டை வாசலிலே. |
| யானை எங்கே ? | அரண்மனை வாசலிலே, |

''அதோ மஞ்சட்குருவி பறக்கிறது பார் பார்'' என்று சொல்லிக் குழந்தை உயரப் பார்க்கும்பொழுது, ''இதோ கை வந்துவிட்டது ! கை வந்துவிட்டது!!'' என்று ஒளித்து வைத்திருந்த கையைக் காட்டுவது அல்லது ஒளித்துவைத்து வேறு சாமான்களைக் காட்டுவது வழக்கம்.

### கதையும் பாட்டும்: ஈயின் கதை

கொழு கொழு கன்றே,
கன்றின் தாயே,
தாயை வளர்க்கும் ஆயா,
ஆயா கைக் கோலே,
கோலிருக்கும் கொடி மரமே,
கொடி மரத்திலிருக்கும் கொக்கே,
கொக்கு வரும் குளமே,
குளத்திலிருக்கும் மீனே,
மீன் பிடிக்கும் வலையே,
வலையன் கையிலிருக்கும் கலயமே,
கலயம் பண்ணும் குயவா,

குயவன் எடுக்கும் மண்ணே,
மண்மேல் இருக்கும் புல்லே,
புல்லைத் தின்னும் குதிரையே,
என் பேயர் என்ன?

குதிரை ஈ ஈ ஈ ஈ என்று கனைக்க, பெயர் மறந்த ஈ தன் பெயர் ஈ என்று ஞாபகப்படுத்திக்கொண்டு பறந்து சென்றது.

காக்கையும் குருவியும், என்ற ஒரு கதையில் சில வரிகள் திரும்பத் திரும்பச் சொல்லவேண்டியிருப்பது குழந்தைகளுக்குச் சந்தோஷத்தைக்கொடுக்கும். ஏனெனில் திரும்பத் திரும்பச் சொல்லி ஒரு விஷயத்தை ஞாபகம் வைப்பதுதான் குழந்தையின் சுபாவம்.

காக்கை குருவியிடம் சொல்லுகிற வரிகள்

காற்று அடிக்கிறது,
தூள் பறக்கிறது,
மழை சோரிகிறது,
கள்ளிமரம் கண்ணிலே குத்துகிறது;
அம்மா! கதவைத்திற.

மற்றும் ஒரு பாட்டு

உங்கள் அம்மா என்ன போட்டாள்?
பாலுஞ்சோறும் போட்டாள்.
ஈ விழுந்ததா? எறும்பு விழுந்ததா?
எறும்பு விழுந்தது.
எடுத்துவிட்டுக் குடித்தாயா? சும்மா குடித்தாயா?
எடுத்துவிட்டுக் குடித்தேன்.

குழந்தைகளைத் தொட்டிலில் போட்டுத் தாலாட்டுகள் பாடுவது குழந்தைகளுக்கு எவ்வளவோ சந்தோஷத்தைக் கொடுக்கிறது.

இவைபோன்ற கதைகள், விளையாட்டுகள், பாட்டுக்களைத் தமிழ் நாட்டார் முன்னுக்குக் கொண்டுவருவது அதிக அவசியமாகும்.




# அம்புலிமான் பாட்டு

அம்புலிமானே வா வா !
ஆட நீ இங்கு வா வா !
கொம்பில் தேனே வா வா !
கூடவே ஓடி வா வா !
சங்கிலி தருகிறேன் வா வா !
கட்டிக் கரும்பே வா வா !
வட்டத் தட்டே வா வா !
கான நிலவே வா வா !
வான மலரே வா வா !
வெண்ணெய்க் கட்டியே வா வா !
கண்ணன் கையிலே வா வா !   [சூடாமணி]



# குழந்தைப் பாட்டு



## டம்மாரம்

டம்மாரம் அடி டம்மாரம்.
டம் டம் அடி டம்மாரம்.



யானைமேலே டம்மாரம்.
குதிரைமேலே டம்மாரம்.
தேரின் முன்னே டம்மாரம்.



சேனை முன்னே டம்மாரம்.
வான வெளியே டம்மாரம்.
மாலையிடச்சே டம்மாரம்.
காட்டுக்குள்ளே டம்மாரம்.
கடலோரத்தே டம்மாரம்.
டம்மாரம் அடி டம்மாரம்.
டம் டம் அடி டம்மாரம். [சூடாமணி]

---

## நிலாவை அழைத்தல்

[குறிப்பு: இது சென்ற மாதம் வெளிவந்த 'நிலாவை அழைத்தல்' என்பதன் பாடபேதம்.]

நிலா நிலா வாவா !
நில்லாமல் ஓடி வா !
நல்ல துதி செய்யே !
வெள்ளிக் கிண்ணியில்
நல்ல பாலும் சோறும்
அள்ளி அள்ளி எடுத்து
என் அப்பன் வாயில்
கொஞ்சிக் கொஞ்சி ஊட்டு !
குழந்தைக்குச் சிரிப்புக் காட்டு !

# விடுகதைகள்













குழந்தாய்! மேலேயுள்ள படங்களைப் பார்த்து, பின் வரும் விடுகதைகளுக்குள் ஒவ்வொன்றுக்கும் எது சரியான பதில் என்று தெரிந்து கொள்.

1. கதிரவன் கிரணத்தைத் தாக்கும்; வானத்தைத் தடுக்கும்; காற்றைக் கண்டால் கவிழ்ந்து போகும்; மாட்டை வெருண்டு ஓடச் செய்யும்; கைத் தடியும் ஆகும்; அது என்ன?

2. சக்கரத்தில் சுழன்று செல்லும், தேர் அல்ல; வெயிலில் காயும், நெருப்பில் வேகும், செங்கல் அல்ல; கடைக்குச் செல்லும்; அடுப்பில் ஏறும்; கிணற்றில் இறங்கும்; பத்து நாள் செய்த வேலை ஒரு விநாடியில் ஒடுங்கிவிடும்; மண்ணிலே பிறந்து மண்ணோடு சேரும்; அது என்ன?

3. நாலுலக்கை குத்திவர, இரண்டு முறம் புடைத்துவர, துடைப்புத் துழாவிவர, வெண்சாமரம் வீசிவர, துரை மக்கள் ஏறிவர; அது என்ன?

4. உடம்பு எல்லாம் உரோமம் உண்டு, வால் அடர்ந்திருக்கும் கீரியல்ல; மரமேறிக் கிளைக்குக்கிளை தாவுவான், பழம் தின்பான், குரங்குமல்ல; உடம்பிலே வரிகள் உண்டு, ஸேது கட்ட ஸஹாயம் செய்த உத்தமன் இவனே; அவன் யார்?

5. மூக்கு இல்லாமல் மூச்சு விடுவான்; உயிரில்லாமல் உயிர்களைத் தூக்கிச் செல்லுவான்; வாயில்லாமல் கரியையும் விறகையும் தின்பான், தண்ணீரைக் குடிப்பான்; புதுக்கண் படைத்தவன்; விழியோ மூன்று மைல் பார்க்கும்; நாட்டிலே காதத்திற்குக் காதம் ஓடுவான்; காட்டிலும் மலையிலும் போவான்; ஆற்றைக் கடப்பான்; மார்க்கம் இரண்டு கோட்டிலே; அவன் பாதத்தில் பட்டால் பாதாளந்தான்; அவன் யார்?

6. ஓங்கி உயர்ந்து வளரும், மரமேயல்ல; இலையுண்டு கிளையில்லை, தென்னையல்ல; நடுநடுவே கணுக்கள் உண்டு, மூங்கிலுமல்ல; தோலைச் சீவி மென்றால் தித்திக்கும்; பொங்கல் அன்றைக்குக் கடையில் வந்து நிற்பான்; அவன் யார்? [எஸ். ஜகந்நாதன்]




# குழந்தைகள் கச்சேரி

வி. விசாலாக்ஷி அம்மாள்

கும்மி, கோலாட்டம், ஸ்ரீஜயந்தி, சிவராத்திரி, கூட்டாஞ்சோறு சமைத்தல், நவராத்திரி என்னும் பண்டிகைகளை முன்னிட்டு, கிராமத்தில் வசிக்கும் குழந்தைகள் கூடி விளையாடுவார்கள். அதிலும் கூட்டாஞ்சோறு சமைப்பதன்பொருட்டு இவர்கள் ஒரு மாதகாலம் முன்பாகவே தயாராவார்கள். மார்கழி மாதம் முழுவதும் 'நீ முன், நான் முன்' என்று போட்டி போட்டு, அதிகாலையில் எழுந்து, வாசலில் விதவிதமான கோலங்கள் போட்டு, அவைகளின் நடுவில் சிறிய சாணஉருண்டைகளில் பூசுணிப்பூக்களை நட்டுவைப்பார்கள். சாயங்காலம் பூக்களையும் சேர்த்துச் சாணியைச் சிறிய வரட்டிகளாகத் தட்டி வைப்பார்கள். நெல் அறுவடையானதும் ஒருமிக்கக் களத்திற்குச் சென்று கூட்டாஞ் சோற்றுக்கு நெல் தெண்டிக்கொண்டு வருவார்கள். இவ்விதம் சேகரித்த நெல்லில் ஒரு பாகத்திற்குப் பொங்கல் குழம்புக்கு வேண்டிய பொருள்களையும் பொங்கலுக்கு வேண்டிய பருப்பையும் வாங்கிக் கொள்ளுவார்கள். வேண்டிய நெல்லைக்குத்திக் கூட்டாஞ் சோறும் குழம்பும் செய்து கொள்ளுவார்கள். இதற்கு மார்கழி மாதம் முழுதும் தயாரித்த வரட்டியையே அடுப்பெரிக்கப் பிரதானமாக உபயோகிப்பார்கள். பொங்கலையும் குழம்பையும் ஆற்றங்கரைக்கு எடுத்துச் சென்று உல்லாசமாகக் குளித்துச் சாப்பிட்டுவிட்டு வீடு திரும்புவார்கள்.

நவீன வாழ்க்கையினால் பட்டணத்தில் வசிக்கும் குழந்தைகளுக்கு இவ்விதம் கூடி விளையாடுவதற்கு வசதிகள் இல்லை. ஆகையால் குழந்தைகள் 'கச்சேரிகள்' என்பவற்றை ஏற்படுத்துகிறார்கள். மேலும் 'கன்றை விட்டுக் கலியாணம்-போவதா' என்று நம் முன்

ஞேர்கள் தாங்கள் செல்லும் இடங்களுக்கு அநேகமாகக் குழந்தைகளையும் கூட அழைத்தே செல்லுவார்கள். தற்கால வாழ்க்கையில் குழந்தைகள் அழுது தொந்தரவு கொடுப்பார்கள் என்று 'கிளப்' முதலிய இடங்களுக்குச் செல்லும் தாய்மார்கள் அவர்களை வீட்டில் விட்டுவிட்டுச் செல்லும்படியாகவே இருக்கிறது. இதற்காக மாதர்கள் கிளப்புகளில் மாதம் ஒரு முறை 'குழந்தைகள் தினம்' என்று ஒரு தினத்தைக் கொண்டாடுகிறார்கள். அன்று கிளப்புக்குக் குழந்தைகள் சென்று ஒருமிக்கக் கூடி ஆடுவார்கள். பெரியவர்களும் அவர்களுக்கு வேண்டிய ஒத்தாசைகளைச் செய்வார்கள். பட்டணத்தில் உள்ள மாதர்கள் கிளப்பில் வருஷம் ஒரு தரம் 'குழந்தை கச்சேரி' என்று ஒரு பெரிய கச்சேரி வைக்கிறார்கள். 'கிளப்பைச் சேர்ந்தவர்கள் தங்கள் குழந்தைகளையும், இன்னும் இஷ்டப்படி பந்துக்கள் சிநேகிதர்கள் குழந்தைகளையும் அழைத்து வரலாம். ஆனால் ஒரு குழந்தைக்கு ஒரு ரூபாய் வீதம் பிரவேச கட்டணம் முன்னதாகவே கட்டிவிட வேண்டும். குழந்தைகளுக்குப் போட்டிப் பந்தயங்கள் வைப்பார்கள். டீ, காபி, தின்பண்டங்கள் கொடுப்பார்கள். எல்லாக் குழந்தைகளுக்கும் விளையாட்டுச் சாமான்களைப் பரிசாக அளிப்பார்கள். விளையாட்டுப் பந்தயங்களில் ஜயமடைந்த குழந்தைகளுக்கு விசேஷப் பரிசுகள் அளிப்பார்கள்.

இவ்விதம் வீடுகளிலும் குழந்தைகளுக்குச் கச்சேரிகள் வைப்பதுண்டு. வீட்டில் இருக்கும் குழந்தைகள் அன்று மற்றக் குழந்தைகளை வரவேற்று உபசாரம் செய்வார்கள். பெரியவர்கள் தங்களால் கூடியவரையில் உதவி செய்வார்கள். எல்லாரும் சேர்ந்து விளையாடக்கூடிய ஆட்டங்களை ஆடுவார்கள். பிதிர்கள் சொல்லி விடையளிக்கச் சொல்லல், ஏதாவது ஒரு சாமானை ஒளித்துவைத்துச் சில அடையாளங்களைக் கூறித் தேடி எடுக்கச் செய்தல் முதலிய ஆட்டங்களை ஆடச் சொல்லிப் பரிசு அளிக்கலாம். வீட்டில் குழந்தைகள் கச்சேரி ஒன்று நடத்துவதாக இருந்தால் முன் ஏற்பாடுகளைப் பெரியவர்கள் சரிவரச் செய்யவேண்டும். தங்கள் வீட்டுக் குழந்தைகளுக்கு அறிமுகமில்லாத மற்றொரு வீட்டுக் குழந்தையை அழைப்பதாக இருந்தால் வெகு ஜாக்கிரதையாகவே இருக்க வேண்டும். குழந்தைகள் மனது விநோதமானது. அவர்கள் அறிமுகமில்லாத மற்றொரு குழந்தையுடன் சீக்கிரத்தில் நட்புக்கொள்ளமாட்டார்கள். புதிதாக வந்திருக்கும் குழந்தையுடன் விளையாடும்படி கட்டாயப்படுத்துவதனாலும் பிரயோசனமில்லை. இரு குழந்தைகளும் மன உற்சாகமின்றி ஆடுவார்கள். ஆதலால் பெரிய கச்சேரியாக இருந்தால் அன்றி, குழந்தைகளுக்கு அறிமுகமில்லாத மற்றொரு

குழந்தையை அழைக்காமல் இருப்பதே நலம். குழந்தைகள் திடீ ரென்றுகோபித்து அழும் சுபாவம் உடையவர்கள். காரணத்தையும் எளிதில் கூறமாட்டார்கள். கூடியவரையில் கவனிக்காமல் விட்டு விட்டால் அவர்களே ஒருவருக்கு ஒருவர் சமாதானமாகிவிடுவார் கள். அப்படி இல்லாவிட்டால் ஏதோ சொல்லி மனதை மாற்றப் பார்க்கலாம். "ஏன் அழ விட்டாய்?" என்று வீட்டுக் குழந்தைகளை அதட்டினுல் அவர்களும் அழுவதைத் தவிர வேறு பிரயோசனம் உண்டாகாது. பிடிவாதமாக ஒரு குழந்தை அழுதால் அதை வீட்டுக்கு அனுப்பிவிடுவதே மேலானது. குழந்தைகளுக்கு இஷ்ட மான தின்பண்டங்களையும் பழங்களையும் கொடுக்கவேண்டும். சிர மத்தைப் பாராட்டாமல், பொறுமையாக நடத்தினுல் குழந்தைகள் கச்சேரி சிறப்பாக நடைபெறும். நவநாகரிக வாழ்க்கையில் ஏற்பட் டுள்ள புதிய வழக்கங்களில் இதுவும் ஒன்று. இதைச் செவ்வனே செய்து சிறிதளவு பொருட்செலவைப் பாராட்டாமல் குழந்தை களுக்கு விளையாட்டுச் சாமான்களைப் பரிசுகளாகவும் அளித்தால், அவர்கள் வீட்டுக் குழந்தைகள் கச்சேரி மிகவும் நன்ருக நடந்தது என்று சொல்லும்படி செய்யலாம். குழந்தைகளும் நவீன வாழ்க்கையினுல் ஒருவருக்கு ஒருவர் சந்தித்துக்கொள்ள முடியாமல் இருப்பது நீங்கி, உல்லாசமாகக் கூடி விளையாடுவார்கள்.




## வெள்ளணி

வெள்ளை நிறம் பண்டைக்காலத்தில் மங்கலகாமாகக் கருதப்பட்டது. ஒருத்திக்குப் பிள்ளை பிறந்தால் அச்செய்தியை அவள் நாயகனுக்கு அறிவிக்க வேண்டி ஒரு தோழி வெள்ளையுடைகளை அணிந்து கொண்டு அவன் முன் போவாள். அவன் உடனே தன் மனைவி கருவுயிர்த்தாளென்று அறிந்து கொள்வான். இந்தச் செய்தியைக் கோவைத்துறைகளுள் ஒன்று கூறும். தலைவன் பரத்தை வீட்டில் இருப்ப அவன்பால் வெள்ளணியணிந்த தோழி விடுக்கப்படுவாள். அதனைக் கண்ட தலைவன் உடனே தன் பிள்ளையைக் காணவருவான். குழந்தை பிறந்த நாளை வெள்ளணி நாளென்பர். அரசர்கள் தம்முடைய பிறந்த நாள் விழாவைப் பண்டை நாளிற் கொண்டாடுவதுண்டு. அப்பொழுது அவர் நாட்டிலுள்ளார் யாவரும் வெள்ளணி அணிந்து கொள்வார்கள்.

ச. தூ. க.

## எல்லாருக்கும் விஞ்ஞான சாஸ்திரம்

ஸர். ஸி. வி. ராமன் சொன்னதாவது : “விஞ்ஞான சாஸ்திரத்தைப் படிக்க வேண்டுமென்று எல்லாரையும் வற்புறுத்த வேண்டும். இந்தியாவுக்கு இன்றியமையாதனவாய் உள்ள முக்கிய விஷயங்களில் இதுவும் ஒன்று. நான் பம்பாயில் பேசியபோது இதை நினைத்துக்கொண்டுதான் பேசினேன். தற்காலத்திலே மிகச் சிலரின் வசத்திலேதான் விஞ்ஞான சாஸ்திரம் இருந்து வருகிறது. கல்வி முறைகளிலே இதற்குக் கொடுத்திருக்கிற பதவியும் இதை யொட்டிய ஊக்கமும் மிகக் குறைவாகவே இருந்துவருகின்றன. விஞ்ஞான சாஸ்திரத்துக்குத் தலைமை ஸ்தானம் கொடுக்க வேண்டுமென்று நான் சொல்லுவேன். விஞ்ஞான சாஸ்திர அறிவும், அதனை மானுடர்களுடைய நன்மையின் பொருட்டு உபயோகிக்கும் முறைகளும் சிலரிடமே இருத்தல் போதாது ; லக்ஷக்கணக்கான பேர்களிடம் இருக்க வேண்டும். அப்படி இருந்தாலன்றிப் பொருளாதார நிலைமையிலோ அல்லது பிற துறைகளிலோ நமது நாடானது முன்னேற்றம் அடையாது. எல்லாரையும் விஞ்ஞான சாஸ்திரத்தைப் படிக்கச் செய்யவேண்டுவது அவசியம் என்பதில் எனக்குப் பரிபூரணமான நம்பிக்கை உண்டு. அப்படித்தான் நடக்கப்போகிறது. மெள்ள மெள்ளவானாலும் அந்தநிலை வந்தே தீரும். இம்மாதிரியாக நான் பம்பாயில் பேசியது சரி யென்றுதான் நான் இன்றளவும் உறுதியுடனிருக்கிறேன்.”

ஹிந்துப் பத்திரிகை.




ஆழ்வார்கள் வைபவங்கள்: [வடிவழகிய நம்பிதாஸர் இயற்றியது; பதிப்பாசிரியர்: ஸ்ரீமான் பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார் அவர்கள், திருஞான முத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார்திருநகரி; விலை 6 அணா.]

ஆழ்வாருடைய வரலாற்றைச் சொல்லும் குரு பரம்பரை என்னும் தமிழ் நூலிலிருந்து முதலாழ்வார்கள், பெரியாழ்வார் என்பவர்கள் வைபவத்தைக் கூறும் பகுதிமட்டும் இந்நூலில் அடங்கியிருக்கிறது. இனிய செம்பாகமான நடையில் அமைந்துள்ள இந்நூல் ஆழ்வார் வரலாற்றைத் தமிழ்ச் சுவையோடு தெளிவுறுத்துகின்றது.

கோ ஸம்ரக்ஷண சாஸ்திரம்: [புலிவலம் ஸ்ரீமான் ஆர். கோபாலையர் அவர்கள் எழுதியது ; ஆசிரியரிடம் கிடைக்கும் ; விலை 1 ரூபா.]

பசுவைப் பாதுகாத்து அதனால் எய்தும் பலவகை நலங்களையும் அறிந்தது நம் நாடு. எல்லாவித வருணத்தாரும் பசுக்களையோம்பி வாழ்ந்துவந்தனர், இக்காலத்தில் அங்ஙனம் இல்லை.

இந்த நூல் பசுவின் பெருமை, அதனைப் பாதுகாக்கும் முறை, அதன் இலக்கணங்கள், அதனாலுண்டாகும் பயன்கள், அதற்கு வரும் நோய்கள், அவற்றிற்குரிய மருந்துகள் முதலிய பல அரிய விஷயங்களைத் தொகுத்து வெளியிடுகின்றது. வியவசாயிகளுக்கும் பசுக்களைப் பாதுகாப்பதில் சிரத்தையுடையவர்களுக்கும் இந்தப் புத்தகம் மிகப் பயன்படும் என்று நம்புகிறோம்.

இளைஞர் பாடல்கள்: [கோயம்புத்தூர் ஸ்ரீமான் ராவ் சாஹேப் இராமச்சந்திர செட்டியார், பி. ஏ., பி. எல்., அவர்கள் இயற்றியது.]

ஸ்ரீமான் செட்டியார் தாம் அவ்வக்காலத்தே எழுதிய பல செய்யுட்களிற் சிலவற்றைத் தொகுத்து இதன்கண் வெளியிட்டுள்ளார். புதிய கருத்துக்களும் பிறமொழியில் உள்ளவற்றின் மொழிபெயர்ப்புக்களும் இதில் உள்ளன.

ச. து. க.




## உபதேச காண்டம்

எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை

ஸ்காந்த மஹாபுராணத்துள்ள சங்கரஸம்ஹிதையின் ஒரு பகுதியாகிய சிவரஹஸ்ய கண்டம் ஏழு காண்டங்களாக அமைந்திருக்கின்றது. அவ்வேழுள் உற்பத்தி காண்ட முதலிய ஆறு காண்டங்கள் கந்தக் கடவுள் வரலாறுரைப்பனவாகும். இவ்வாறையும் தமிழில் கந்தபுராணமென்னும் பெயராற் செய்யுளாக மொழிபெயர்த்தார் காஞ்சிக் கச்சியப்ப சிவாசாரியர். ஏழாவது காண்டம் உபதேச காண்ட மெனப்படும். தமிழ்ச் செய்யுள் வடிவாக மொழிபெயர்க்கப்பட்ட உபதேச காண்டம் என்னும் நூலொன்று கி. பி. 1887-ல் ஊ. புஷ்பரதச் செட்டியாரால் அச்சிடப்பட்டது. அப்பதிப்பின் 'அறிவிப்'பில், 'உபதேச காண்டத்தை முத்தமிழ்க் கவிவாணரெனப் பெயர் பெற்ற கோனேரியப்ப முதலியார் சொல் நயமும் பொருட் பொலிவுந் தோன்ற 4348 திருவிருத்தங்களாகப் பாடியருளினர்....அதை இச் சென்னைமாநகரிற் கிடைத்த காகிதத்தில் வரையப்பட்டிருந்த ஒரு பிரதியையும், மதுரை, திருநெல்வேலி, திருவாவடுதுறை முதலிய இடங்களினின்று சில சிவநேசச் செல்வர்கள் அன்பு கூர்ந்தனுப்பிய ஐந்து பிரதிகளையும் உதவியாகக் கொண்டு ஒருவாறு சுத்தபாடமாகப் பரிசோதனை செய்வித்து அச்சிட்டனம்' என்று செட்டியார் எழுதினர். அவ்வறிவிப்பையடுத்துக் காணப்படும் 'நூலாசிரியர் வரலாறு' 'ஒரு சிவநேசரிடத்திலிருந்து கிடைத்தபடி அச்சிட்டு இங்குச்'சேர்த்தது. அவ் வரலாற்றால் கோனேரியப்ப முதலியார் 'தொண்டை மண்டலத்திலே காஞ்சிமாநகரின்கண்ணே ஏறக்குறைய ஆயிரத்தொரு நூறு வருடங்களுக்கு முன்னே செங்குந்தர் மரபிலே அவதரித்தவ' ரென்றும், தமது குலகுருவாகிய கச்சியப்ப சிவாசாரியரிடத்தே

சைவ தீக்ஷைகள் பெற்றுக் கல்வியறி வொழுக்கங்கள் நிரம்பிய வராய் விளங்கினரென்றும், 'அவ்வாசிரியர் கட்டளை பெற்ற... கோனேரியப்ப நாவலர்...உபதேச காண்டத்தைத் தமிழ் நாடு தழைத்தோங்கச் சொற் சுவையோடு பொருட் பொலிவு தோன்ற அருளிச் செய்து, குமர கோட்டத்திலே சுப்பிரமணியக் கடவுள் சந்நிதியிலே வேதாகம பண்டிதர்களும் புராண விற்பன்னர்களும் பிறரும் கேட்டுக் களிகூரும்படி ஆசிரியர் முன்னிலையில் அரங் கேற்றி'னரென்றும் தெரிகின்றது.

மூவர்தமிழ் வேத முதற்பொருளு மன்பெவையுந்
தேவர்தொழச் செப்பியபின் சேக்கிழார்—பூவலய
மாந்தர்க்கா றங்கமுற வந்தகோ னேரியெனத்
தீந்தமிழ்செய் தானுபதே சம்.

சதுமுகனிற் பழமறையோன் கும்ப யோனி
தலைசாய்க்குந் தமிழ்வாணர் தாணி தாங்கு
மதுவொழுகுந் தார்த்தடந்தோண் மன்னர் சேடன்
மன்பதையன் பொடுகுழைந்து செவியான் மாந்த
வுததிகடைந் தெடுத்தவமு தன்ன பாட
லுயர்தமிழ்ச்செந் தூரிலுப தேச காண்ட
மதுரியன்முத் தமிழ்க்குநாற் கவிக்கும் வேந்தன்
மகாபுலவன் கோனேரி வடித்திட் டானே

என்னும் இரண்டு செய்யுள்களும் 'தனியன்' எனப் பதிப்பிக்கப்பட் டுள்ளன. இரண்டாம் செய்யுளின் பொருள் தெளிவாயில்லை. உப தேச காண்டம் திருச்செந்தூரிற் செய்ததாகுமோ? கச்சியப்ப சிவா சாரியர் கந்தபுராணம் பாடிய வரலாறுரைத்த தொண்டைமண்டல சதகம் இதனைப்பற்றி யொன்றுங் கூறு தொழிந்தது இங்குக் கவனிக்கத்தக்கது.

இந்நூலே ஈக்காடு இரத்தினவேலு முதலியார் எழுதிய பொழிப்புரையோடு கி. பி. 1913-ல் வெளிவந்தது. இப் பதிப்பில் 'நூலாசிரியர் சரித்திர சங்கிரகம்' காணப்படுகின்றது. அதில் '... காஞ்சிநகரத்தில், இற்றைக்குச் சுமார் 1126 வருடங்கட்கு முன் னர்ச் செங்குந்தர் மரபில், சிவானந்த முதலியாரும் அவர் மனைவி அமுதாம்பிகையாரும் சிவபக்தி மிக்காராயிருந்தவர்கள் மகப் பேறின்றிக் குகாலயமொன்றமைத்து, அதனருகே ஒரு தீர்த்தங் கண்டு அதனைக் குகனேரியெனப் பெயரிட்டு வழிபாடியற்றிப் பன்னெடுநாட் பின்னர், தாம் பெற்ற புதல்வனுக்குக் குகனேரியப்ப னென நாமகரணஞ் செய்தார். குகனேரி யென்பது கோனேரி யெனப் பிற்காலத்து மருவியது போலும்.

'இவர் . . . தமது குலகுருவும் அக்காலத்திற் குமரகோட்டத் தருச்சகரும் குமாரக் கடவுளின் திருவருளுடையருமாகிய ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியர்பாற்' சிவ தீக்ஷைகள் பெற்றுச் சைவத் திருமுறைகளும் சைவ சாஸ்திரங்களும் ஓதி யுணர்ந்து சிவத்தியானபரராய் வீற்றிருக்கையில், 'இவரதாசிரியராகிய ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகளைக் குமரகோட்டத்திறைவர் "திகடசக்கரச் செம்முகமைந்துளான்" என முதலடி தந்தருள' அவர் ஸ்காந்த மஹா புராணத்துள்ள சங்கரஸம்ஹிதையி னொரு பகுதியாய சிவரஹஸ்ய கண்டத்துச் 'சப்த காண்டங்களில், உற்பத்தி காண்டம் அசுர காண்டம் மகேந்திர காண்டம் யுத்த காண்டம் தேவ காண்டம் தக்ஷ காண்டமென்னும் ஆறு காண்டங்களையும் தமிழ்ச் செய்யுட்களாகப் பாடி முடித்து, இறுதியதும் ஏழாவதுமாகிய இவ்வுபதேச காண்டத்தை அங்ஙனமே தமிழ்ப் பாக்களாற் பாடும்படி இவருக்குக் கட்டளை தந்தனர்.

'ஆசிரியர் கட்டளையைச் சிரமேற் றாங்கிய இவர் தமிழ் நாடு தழைத்தோங்க நவரசாலங்காரச் சொற் சுவை பொருட் சுவைகளோடு 4348 செய்யுட்களாகப் பாடி முடித்து, ஆசிரியர் விருப்பின்படி குமரகோட்டச் சந்நிதியில் வடமொழி தென்மொழிப் பண்டிதர்களும் பிறரும் நிரம்பிய பெருஞ் சபையில் அரங்கேற்றினர். . . .

கச்சியப்ப முனிவ ரருளிய வெண்பா

அன்றாழி நின்றுதித்த வாரமுதை யொப்பிடுவர்
பொன்றாமைக் கேயதுயாம் புந்திநினை—தொன்ற
வுகுநேரிற் றருவென லொக்குமலால் வேறென்
குகனேரி நாவலனுக் கு.

குகப் பெருமான் பிரமோற்சவ தினமொன்றிற் பெருமழை பெய்து உற்சவந் தடைபடுவது நோக்கி, இவர்

கார்க்கு மழைக்குங் கவலேங் கடுஞ்சிறையாற்
சூர்க்குடைந்த நின்னைச் சுகத்திருத்தி—யூர்க்குள்விடுங்
கந்தன் விழாவைக் கருதாது பெய்வித்த
லந்தமோ வாகண்ட லா

எனப் பாடித் தடுத்தனரென்றும், இன்னுஞ் சிற்சில அமையங்களில் சாதுரியமாகவும் அற்புதமாகவும் பல செய்யுள்க ளியற்றியுள்ளாரென்றுங் கூறுவர்.'

இன்னும் கந்தபுராண மூலத்தை நெடுநாண் முன்னர்ப் பதிப்பித்த ஆறுமுகநாவலர் அதற்கு அங்கமாகச் சிவபுராண படனவிதியும் கச்சியப்ப சிவாசாரியர் சரித்திரச் சுருக்கமும் எழுதிப் பதிப்பித்தனர். சிவபுராண படனவிதியின் இறுதியில் காந்தபுராணத்திலுள்ள

சங்கிதை விவரமும் சங்கர சங்கிதையிலுள்ள சிவரகசியகண்டத்திலுள்ள காண்டவிவரமும் கூறியவர் 'முதலாறு காண்டத்தையும் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் கந்தபுராணமெனப் பெயரிட்டுத் தமிழில் அருளிச் செய்தனர். ஏழாவதாகிய உபதேசகாண்டத்தைக் கோனேரியப்ப முதலியார் தமிழில் அருளிச் செய்தனர்' என்று முடித்தார். சிவபுராண படனவிதியில் அவர் மேற்கோளாக எடுத்துக் காட்டிய செய்யுள்களுட் பல இவ் வுபதேசகாண்டத்தில் உள்ளன.

இனி, நூன் முதலில் விநாயகருக்கு ஒரு காப்புச் செய்யுளும், பின் சிவம் சத்தி சுப்பிரமணியர் என்னும் கடவுளர்க்குத் துதியும், சமயகுரவர் நால்வருக்கும் தனித்தனியாகத் துதியும், அவையடக்கச் செய்யுளிரண்டும், வாழ்த்துச் செய்யு ளிரண்டும் பாயிரப்பகுதியிற் காணப்படுவன. கந்தபுராணத்துப் போலக் காஞ்சியிலுள்ள மூர்த்தங்களுக்காதல், ஆசாரியரும் நூல் செய்யுமாறு கோனேரியப்பரை யேவினருமென்று சொல்லும் கச்சியப்ப சிவாசாரியருக் காதல் துதியொன்றுங் காணப்படவில்லை. மற்று, கோனேரியைக் 'குகனேரி' யின் மரூஉவென்று கொள்வது பொருத்தமுடையதாகத் தோன்றவில்லை. கோனேரி திருப்பதிமலையிலுள்ள சுவாமி புஷ்கரிணி யென்னும் பொய்கையின் பெயர். திருப்பதிமலையையே சுப்பிரமணிய சுவாமியின் மலையாகக் கொள்வது முண்டாகலின் கோனேரியப்பன் அத் தெய்வத்தையே குறித்தல் கூடும். சுவாமி யென்னும் தனிச் சொல்லும் குமரக்கடவுளையே குறிக்கும்.

உபதேசகாண்ட மென்னும் பெயரிய வேறொரு நூல் ஏட்டுப் பிரதியாக உள்ளது. துரைத்தனக் கையெழுத்து நூனிலயத்து அத்தியக்ஷராக விருந்த எம். சேஷகிரிசாஸ்திரி, எம். ஏ. வெளியிட்ட 1896-97-ம் ஆண்டுக் கையெழுத்து நூல் விவரணத்தில் இதனைப்பற்றிக் கொஞ்சம் விரிவாகவே யெழுதியிருக்கிறது. அந் நூனிலயத்தில் இவ்வுபதேசகாண்டத்திற்கு இரண்டு ஏட்டுப் பிரதிகள் உள்ளன. ஒன்று பூர்த்தியானது, மற்றது முதற் பன்னிரண்டத்தியாயங்க ளில்லாதது. பூர்த்தியான ஏட்டில் காப்பை யடுத்து

சூதனருள் புராணமீ ரொன்பதும்நான் கிலக்கஞ்
    சோதிபுரா ணம்பத்து மூவிலக்கங் காந்த
மோதிலக்கஞ் சனற்குமா ரன்சூதன் பிரம
    னுலகளந்தோன் சங்கரன்வெய் யோன்பெயர்ச்சங் கிதையா
றீதடைவைம் பத்தஞ்சா றேர்மூன்றஞ் சையா
    றேகமிவை யாயிரமா யிரமாஞ்சங் காத்திற்
போதுசிவ ரகசியமோர் பதின்மூவா யிரத்தேழ்
    பொருந்துகண்டத் துபதேச காண்டவகை புகல்வாம்

என்னுஞ் செய்யுளும் அதற்கொரு குறிப்புரையும் காணப்படுகின்றன. குறிப்புரை வருமாறு :

'நைமிசாரணியத்து இருடிகளுக்குச் சூதமகாவிருடி அனுக்கிரகம் பண்ணின புராணம் பதினெட்டு. அவையாவன : சைவம், பவுடிகம், மார்க்கண்டம், லிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சம், கூர்மம், பிரமாண்டம் இவை பத்தும் சிவபுராணம்; காருடம் நாரதம், விண்டு, பாகவதம் இவை நான்கும் விஷ்ணுபுராணம்; பிரமம், பாத்மம் இவையிரண்டும் பிரமபுராணம் ; ஆக்நேயம் ஒன்றும் அக்கினிபுராணம்; கைவத்தம் ஒன்றும் சூரியபுராணம்; ஆகப் புராணம் பதினெட்டும் நான்கு லக்ஷங் கிரந்தம். இதில் சிவ புராணம் பத்தும் மூன்றுலக்ஷங் கிரந்தம். இதிற் காந்தபுராண மொன்றும் லக்ஷம். இதிற் சங்கரசங்கிதை 30,000-த்தில் அதிரகசிய கண்டம் 17,000, சிவரகசியகண்டம் 13,000. இந்தச் சிவரகசிய கண்டம் 13,000-மும் ஏழு காண்டமாக விருக்கும். அதில் உற்பத்தி காண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், உயுத்தகாண்டம் தேவகாண்டம், தெட்சகாண்டம் இந்த ஆறு காண்டமும் காஞ்சீபுரம் ஆயிரக்கால் மண்டபத்திலே எழுந்தருளியிருக்கும் ஆறுமுக சுவாமி உலகமுட்கொண் டுவப்ப "செந் தமிழ்க்கொரு சீர்வரம் பாகிய' என்று பாடச்சொல்லிக் கச்சியப்பருக்கு அனுக்கிரகம் பண்ண, அவர் ஆறு காண்டமும் 10,500 பாடினர். பின்பு உறையூருக்கு மேற்கே வயலூரி லெழுந்தருளியிருக்கும் ஆறுமுகசுவாமி "உலக முட்கொண்டுவப்ப முருகவேள்" என்று பாடச்சொல்ல, ஞானவரோதய பண்டாரம் ஏழாங்காண்டம் உபதேசகாண்ட மொன்றும் 2,600 ஆகப் பாடினர். சங்கரசங்கிதையில் சிவரகசிய கண்டம் 13,000 கிரந்தமும் ஏழு காண்டமாகத் தமிழ்ப்பண்ணின பாட்டு 13,221.'

இக் குறிப்பில் காஞ்சீபுரம் ஆயிரக்கால் மண்டபத்திலே எழுந்தருளியிருக்கும் ஆறுமுகசுவாமி கச்சியப்பருக்கு அனுக்கிரகம் பண்ணினரென்றது வழங்கிவரும் கதைக்கு முரணுவது. கச்சியப்பர் குமர கோட்டத்தருச்சகர். கந்தபுராணம் ஆறுமுக நாவலர் பதிப்பில் சரித்திரச் சுருக்கத்தில் 'கச்சியப்ப சிவாசாரியர் குமரகோட்டத்துச் சுப்பிரமணியக் கடவுளை மெய்யன்போடு பூசைசெய்துகொண்டு வந்தார். ஒருநாட் சுப்பிரமணியக்கடவுள் கச்சியப்ப சிவாசாரியருக்குச் சொப்பனத்திலே தோன்றி' என்பது முதலாக வரும் வரலாற்றிலும் ஆயிரக்கால் மண்டபத்து ஆறுமுகசுவாமியைப்பற்றி ஒன்றுஞ் சொல்லப்படவில்லை. 'உலகமுட்கொண்டுவப்ப' என்று முதலில் வந்தது தவறு. "செந்தமிழ்க்கொரு சீர்வரம்பாகிய" என்

பது கந்தபுராணம் அவையடக்கச் செய்யுள்கள் இருபதுள் பத்தொன்பதாவதின் முதலடி. "செந்த மிழ்க்கு வரம்பெனச் செப்பிய" என்பது ஆறுமுக நாவலர் கொண்ட பாடம். கச்சியப்ப சிவாசாரியர்க்கு முருகக்கடவுள் "திகடசக்கர" என்று அடியெடுத் துக்கொடுத்தாரென்பதே பிரசித்தமான கதை. உபதேசகாண்டத் தின் காப்புச்செய்யுள்

உலக முட்கொண் டுவப்ப முருகவேள்
பலக தைப்பொரு டென்சொற் படுத்தவு
மிலகு நாற்பொரு ளெய்தவு மோர்மருப்
பலகின் மாமதத் தைங்கரற் போற்றுவாம்

என்பது. இதன் முதலடி முருகப்பிரான் அனுக்கிரகித்ததாக இக் குறிப்புச் சொல்வதற்கேற்ப நூலாசிரியர் முருகக்கடவுள் வணக்கமாக

சங்குகுட வயிறுளைந்து தாள மீன்று
  தவழ்கழனி திகழ்வயலூ ரதனி லெந்தைக்
கெங்க ணுல கும்புகழ வுபதே சஞ்செய்
  தெளியேற்கு மவ்வழியென் றிரங்கிச் சீர்த்தி
பொங்குதமிழ் மொழியினுப தேச காண்டம்
  புகல்தியெனச் சிறிதருளும் புனிதன் செவ்வே
ளெங்கான்பின் னவன்கந்த னுமைகோன் மைந்த
  னமரர்பணி குமரனடி யகத்துள் வைப்பாம்

எனக் கூறிய பாட்டு அக் கடவுளாஞ்ஞையால் அவர் நூலியற்றிய தாகக் காட்டிற்று. 'சிறிதருளும்' என்றது முதலடி யெடுத்துக் கொடுத்ததைக் குறித்ததுபோலும். 'வயலூரில் எந்தைக்கு எங்க ணுலகும் புகழ உபதேசஞ்செய்து' என்பது என்ன கதையோ? இனி, ஸ்காந்த புராணத்திலுள்ள சங்கரஸம்ஹிதையைப்பற்றிக் குறிப்பி லுள்ளது ஸமஸ்கிருத மூல சங்கரஸம்ஹிதையிலுள்ள விவரணத்தை யொத்துள்ளதா? சங்கரஸம்ஹிதையில் சிவாஹஸ்ய கண்டத்தில் ஸம் பவகாண்டம் இரண்டாவதத்தியாயத்திறுதியில் 'ஸுகத்தை யளிப் பதும் உத்தமமானதும் ஸர்வவேதாந்த ஸாரத்தையுடையதும் 50 கண்டங்களால் அலங்கரிக்கப்பட்டது மாகிய ஸ்காந்தம் ஸநத்குமார ஸம்ஹிதை, ஸூத ஸம்ஹிதை, ப்ரஹ்ம ஸம்ஹிதை, விஷ்ணு ஸம்ஹிதை, சங்கர ஸம்ஹிதை, ஸௌர சம்ஹிதை என்னும் ஆறு ஸம்ஹிதைகளையுடையது, அவற்றின் சுலோகத் தொகை ஸநத் குமார ஸம்ஹிதை, 55,000 ; ஸூத ஸம்ஹிதை 6,000 ; ப்ரஹ்ம ஸம்ஹிதை 3,000 ; விஷ்ணு ஸம்ஹிதை 5,000 ; 12 கண்டங்கள் கொண்ட சங்கர ஸம்ஹிதை 30,000 ; ஸௌர ஸம்ஹிதை 1,000.

50 கண்டங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸ்காந்தம் 1,00,000 சுலோகங்களை யுடையது....முதலாவது சிவரஹஸ்ய கண்டம். ஏழு காண்டங்களால் அலங்கரிக்கப்பட்ட இது 13,000 சுலோகங்களை யுடையது. ஏழு காண்டங்களாவன: ஸம்பவ காண்டம், அஸுர காண்டம், மாஹேந்த்ர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தக்ஷ காண்டம், உபதேச காண்டம்' என்றுரைக்கப்பட்டது. சிவரஹஸ்ய கண்டத்துக்கு முன் அதிரஹஸ்ய கண்டமென வொன்று சங்கர ஸம்ஹிதையி லுள்ளதாக உரைத்தது தவறு. சிவரஹஸ்ய கண்டமட்டுமே கிரந்தலிபியில் திருவையாற்றில் கி. பி. 1890-ல் அச்சியற்றி வெளியிடப்பட்டது. இதற்குத் தமிழ் மொழிபெயர்ப்பும் பிரசுரமாயிற்று. அஷ்டாதச மஹாபுராணங் களுள் ஒன்ருகப் பம்பாய் நகரத்தில் அச்சாகி வெளிவந்திருக்கும் ஸ்காந்த மஹாபுராணத்திற்கு ஸம்ஹிதைப் பகுப்பு இல்லை. அது மாஹேசுவர கண்டம், வைஷ்ணவ கண்டம், ப்ராஹ்ம கண்டம், காசிகண்டம், அவந்திகா கண்டம், நாகா கண்டம், பிரபாஸ கண்டம் என ஏழு கண்டங்களும், 81,100 கிரந்த ஸங்கியையு முடையது. அப் பதிப்பிற்கு முகவுரை யெழுதியவர் ஆறு சங்கிதை களையுடைய ஸ்காந்தம் உபபுராணமென்றும் கண்டங்களையுடைய புராணமே மஹாபுராணமென்றும் பல நியாயங்கள் கொண்டு தாபிக்க முயன்றுளார்.

மற்று, 'கச்சியப்பர் ஆறு காண்டமும் 10,500 பாடினர்' என்றதும் கந்தபுராணப் பதிப்பிற் காணுந் தொகையோடு மாறுபடு கிறது. பாயிர முள்பட அந் நூலிற் காணுஞ் செய்யுள்கள் 10,345.

அந்தப் புரமு மறுநான்கு கோட்டகத் தாருமொன்ருய்க்
கந்தப் புராணம் பதினு யிரஞ்சொன்ன கச்சியப்பர்
தந்தப்பல் லக்குச் சிவிகையுந் தாங்கியச் சந்நிதிக்கே
வந்தப் புராண மரங்கேற்றி னுர்தொண்டை மண்டலமே [87]

என்ற தோண்டைமண்டல சதகத்தின்படி அச் செய்யுட்டொகை 10,000. இச் சதகம் சில்லறை யெண்களை யொழித்து மொத்தத் தொகையாகப் பதினுயிர மென்றுரைத்ததென்று கொள்ளலாம். 'கந்தப் புராணம்பன் னீரா யிரஞ்சொன்ன கச்சியப்பர்' என்ற பாட பேதமு முண்டு. குறிப்பை அவ்வாறு கொள்ளுதற்கில்லை. இன் னும், கந்தபுராணச் செய்யுள் 10,500 உபதேச காண்டம் 2,600, இரண்டுஞ் சேர்ந்து 13,100 ஆக, குறிப்பு 13,221 என்றது. உபதேச காண்டக் கையெழுத்துப் பிரதியின் இறுதியில், 'ஆக அத்தியாயம் எண்பத்து அஞ்சுக்கு விருத்தம் 2,713' என்றிருக் கிறது. அது சரியென்று கொண்டாலும் மொத்தத்தொகை 13,213

தானுகும். எட்டு வித்தியாசப்படுகிறது. அபூர்த்தியான பிரதியி னிறுதியில் கச்சியப்பர் பாட்டுத் தொகை 10,508 என்றெழுதப்பட் டிருக்கிறது. இதனை 2,713 உடன் கூட்டின் 13,221 கிடைக் கின்றது. ஆயினும், உபதேச காண்டத்திலுள்ள அத்தியாயங்களின் செய்யுள்களைக் கூட்டின் 2,713 அன்றி 2,597 தான் கிடைக் கின்றது. ஆனல் 27-ம் அத்தியாயத்தில் ஐந்து செய்யுட்களே எழுதப்பட்டுள்ளன. அகப்பட்ட இரண்டு பிரதிகளிலும் மற்றைச் செய்யுட்கள் காணப்படவில்லை. அவை கிடைக்கின் எழுதவேண்டு மென்று இடமும் விட்டிருக்கிறது. அவை இத்தனை செய்யுளென்று அறிதற்கேதுவில்லை.

இனி, கந்தபுராணவாசிரியர் கச்சியப்பரையும் உபதேச காண்ட வாசிரியர் ஞானவரோதயரையும் குறிப்புரை ஒருங்கு சேர்த் துரைத்ததற்கேற்ப, கோனேரியப்பர் உபதேச காண்டத்திற் போலாது ஞானவரோதயர் தம் நூலில் காஞ்சிக் கச்சியப்பரைத் துதித்துள்ளார்:

பருதியென வருசுத னுரைத்த காந்தப்
 பரவையருண் முகிலமுதம் பருகித் தென்னூற்
றருவுநன்காண் டப்பணியு [மாண்] படல மான
 சாகையுல வையும்விருத்தத் தழையு மோசை
வருதுணரு முன்வரமன் ஞிமிறு மோங்க
 வளரொளியாம் பொருட்கனியை வழங்குஞ் சீர்த்தி
கருதரிய காஞ்சிவளர் கச்சி யப்பக்
 கற்பகத்தா ருவையிறைஞ்சிக் கருத்துள் வைப்பாம்.

அதனல் இவர் அவர்க்கு மாணுக்கரென்று சிலர் சொல்லத் துணி வர். ஆயினும், கந்த புராணத்திற்கும் தாமியற்றப்புகும் உபதேச காண்டத்திற்கும் இயைபுண்மை யுணர்ந்தே இவர் கந்த புராணவாசிரி யரைத் துதித்தாரென்றலிற் றடையிராது.

மற்று, ஞானவரோதய ரென்னும் புலவரொருவர் காளமேகப் புலவர் காலத்திருந்தாரென்றும் இவர் மதுரைக்குப் போனபோது இவர் புலமையை மெச்சி அவர்,

முதிரத் தமிழ்தெரி நின்பாட றன்னை முறையறிந்தே
எதிரொக்கக் கோப்பதற் கேழெழு பேரில்லை யின்றமிழின்
பதரைத் தெரிந்தெறி கோவில்லை யேறப் பலகையில்லை
மதுரைக்கு நீசென்ற தெவ்வாறு ஞான வரோதயனே [204]

[ஏழெழு பேர்—சங்கப் புலவர் நாற்பத் தொன்மதின்மர். இன்ற மிழின் பதரைத் தெரிந்தெறி கோ—பிள்ளைப் பாண்டியன். பலகை—சங்கப்பலகை.]

என்னும் ஒரு கவிதையை எழுதியனுப்பினரென்றும் தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது. இந்த ஞானவரோதயரே உபதேச காண்டம் செய்தவரு மென்று துணிந்துரைத்தற்குத் தக்க ஆதார மில்லை. காளமேகப் புலவர் கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டி னிடைப் பகுதியில் தென்னாட்டை யாண்ட சாளுவத் திருமலைராயன் காலத் திருந்தாரென்றும், தாம் இளமையில் காஞ்சீபுரத்திலே படித்த போது கந்தபுராணங் கச்சியப்பரால்,

பொங்குதமி ழயோத்தியில் வாழ் தசரதனென் போனிடத்தும்
பூதூர் வேந்தன்
திங்கவடு கன்னிடத்தும் வீரரா கவரிருவர்
தோன்றி னரால்
அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய் வசைபெற்றா
னவனி பாலன்
இங்கொருவன் பலகலைமா னெய்திடப்போய்க் கவியினா
லிசைபெற் றானே [தமிழ் நாவலர் சரிதை, 242.]

என மெச்சப்பெற்ற அந்தகக்கவி வீரராகவ முதலியார் கி. பி. பதி னாறும் நூற்றாண்டி னிடைப்பகுதியில் இலங்கையி லரசுபுரிந்த பர ராசசிங்கன் காலத்திருந்தனரென்றும் ஏற்படுதலால், ஞானவரோ தயரைக் கச்சியப்பருடைய சீடராக்குதலில் இடையூறு சிறிதுண் டென்று சொல்லலாமாயினும் அன்னார் ஆயுட்கால முதலியன வரை யறுக்கப்பட்டிலவாகலின் அங்ஙனமன்றென்று அறுதியிட் டுரைத் தற்கில்லை.

இனி, கச்சியப்பர் கந்தபுராணத்தை யன்றி வேறொரு கந்த புராணம் அதற்கு முற்பட்டதாகக் கலியப்தம் 4286 (கி.பி. 1185)-ல் திருச்சேய்ஞலூர் நாவினால் மழுவெடுத்த ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகராற் செய்யப்பட்டது உண்டென்றும், அது பால காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டமென்னும் மூன்று பகுதியுடைய தென்றும், இன்னும் அது திருவேரகமலைச் சுவாமிநாதன் கட்டளைப் படி பாடப்பட்டதென்றும் செங்குந்தர் பிரபந்தத்திரட்டுப் பதிப் பாளர் ஒரு குறிப்பி லுரைத்தனர். வேறொரு ஏதுவின்றி நூலின் முப்பகுதி கொண்டே அது வடநூலின் சரியான மொழிபெயர்ப் பன்று என்று உரைக்கலாம்.

கச்சியப்பர் கந்தபுராணம் வட நூலில் உள்ளபடி ஆறு காண்டங்களையுடையது. நாட்டுச் சிறப்பு நகரச் சிறப்பு முதலியன வட நூலில் இல்லாதன. இவை 352 செய்யுள்க ளாகின்றன.

வடமொழிச் சங்கரசங்கிதையிலும் தமிழ்க் கந்தபுராணத்திலும் முறையே காணும் அத்தியாய சுலோகங்கள் படலச் செய்யுள்கள்

இவற்றின் தொகை:

| வடமொழி. | அத்தியாய எண். | சுலோக எண். | தமிழ்-படல எண். | செய்யு ளெண். |
|---|---|---|---|---|
| 1. சம்பவகாண்டம் | 50 | 2325 | 26 | 1431 |
| 2. ஆசுரகாண்டம் | 15 | 826 | 44 | 1929 |
| 3. வீரமாஹேந்திரகாண்டம் | 7 | 416 | 21 | 1178 |
| 4. யுத்தகாண்டம் | 35 | 2018 | 16 | 2967 |
| 5. தேவகாண்டம் | 7 | 486 | 5 | 421 |
| 6. தக்ஷகாண்டம் | 41 | 1662 | 24 | 2067 |

இப்பொழுது அச்சிட்டுக் காணும் சங்கர சங்கிதையே கச்சியப்பர் தமக்கு மூலமாகக் கொண்டதென்று உறுதியாக உரைக்கலாகா தாயினும் மூலத்துக்கும் மொழிபெயர்ப்புக்கும் ஒப்புமை அதிக முண்டென்பது தெளிவாயிருக்கின்றது. தமிழ் மரபையும் தமிழர் சுவையையும் அனுசரித்துக் கச்சியப்பர் பலவிடங்களில் மூலத்திற் சுருக்கமாயுள்ளதை விரித்திருப்பரென்று தோன்றுகின்றது.

இனி வடமொழி யுபதேச காண்டத்தை நோக்கின் அது 91 அத்தியாயங்களேயும் 4774 சுலோகங்களேயு முடையது. கோனேரி யப்பர் உபதேச காண்டம் 41 சருக்கங்களேயும் 4329 செய்யுட்களேயு முடையது. ஞானவரோதயர் உபதேச காண்டம் 81 அத்தியாயங் களேயும் 2584 செய்யுட்களேயுமுடையது. சுலோகம் மெய் நீக்கி முப்பத்திரண்டு எழுத்துக்கள் கொண்ட வடமொழி யாப்பு. இரண்டு தமிழ் மொழிபெயர்ப்புக்களும் விருத்தங்களா லாயின. வட மொழி அத்தியாயத்தைக் கச்சியப்பர் தமிழில் படலமென்ருர்; கோனேரியப்பர் சருக்கமென்ருர்.

இவற்றின் விரிவு வருமாறு:

| | வடமொழி | ஞானவரோதயர் | கோனேரியப்பர் |
|---|---|---|---|
| பாயிரம். | | 13 | 12 |
| கைலாயம் | 1, 2—77 | 1, 2—50 | 1—75 |
| சூரபத்மன் | 3-5—124 | 3—22 | 2—137 |
| மாயை | 6-8—93 | 4-8—113 | 3, 4—94 |
| விபூதி | 9-12—221 | 9-12—137 | 5—209 |
| உருத்திராக்கம் | 13-19—372 | 13-19—193 | 6—254 |
| பஞ்சாட்சரம் | 20-22—153 | 20-26—213 | 7—138 |
| சிவநாமம் | 23-26—236 | | 8—174 |
| சிவவிரதம் | 27-39—432 | 27-38—157 | 9—414 |
| சிவபுண்ணியம் | 40-47—516 | 39-47—336 | 10—426 |
| சிவபுராணம் | 48—118 | 48—79 | 11—57 |

| | | | |
|---|---|---|---|
| சிவத்துரோகம் | 49-60—650 | 49-60—356 | 12—504 |
| சிவபூசை | 61-86—1526 | 61-81—802 | 13-38—1669 |
| சரியையாதி | 87-89—112 | 82-84—73 | 39—50 |
| பஞ்சவிம்சதிமூர்த்தம் | 90—44 | 85—53 | 40—35 |
| சிவகாட்சி | 91—100 | | 41—93 |

வடமொழி மூலத்தோடு ஞானவரோதயர் நூலையும் கோனேரியப்பர் நூலையும் ஒப்பு நோக்கின், முந்தியது மூலத்தை யொட்டிச் செய்யப்பட்டதாகத் தோன்றும் ; வாக்கை நோக்கின் கந்தபுராணத்தோடு உடன் வைக்கத்தக்கது கோனேரியப்பர் மொழிபெயர்ப்பே. அன்றியும் ஞானவரோதயர் நூலுக்குச் சுத்தப் பிரதிகள் அகப்படுவது அருமையாயிருக்கிறது. அது காலத்தாற் கோனேரியப்பர் நூலுக்கு முற்பட்டதாயின் வழக்கு வீழ்தற்கான காரணம் புலப்படவில்லை; பிற்பட்டதாயின் தோன்றுதற்குக் காரணமும் விளங்கவில்லை. ஆயினும் தமிழபிமானமும் சைவசமயாபிமானமுமுடையோரால் அஃது ஆதரிக்கத்தக்கதென்பது நிச்சயம்.




# இலக்கியசாஸன வழக்காறுகள்

## மு. இராகவையங்கார்

### முன்னுரை

செந்தமிழறிஞர்களுக்கும் அபிமானிகளுக்கும் விநய பூர்வகமாகச் செய்துகொள்ளும் விஞ்ஞாபனம்.

சென்னைச் சருவகலாசங்கத்தார் இவ்வாண்டில் தமிழுபந்யாசங்கள் புரியும்படி எனக்குக் கட்டளை யிட்டிருப்பதுபற்றி முதலில் என் உள்ளார்ந்த நன்றியை அவர்கட்குத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன். இச் சிறப்பை அவர்கள் எனக்களித்திருப்பது பிரசங்கத்திறமை என்பாற் பெரிதுமுண்டு என்பதுபற்றி யன்று. நெடுங்காலமாகத் தமிழ்த் தொண்டு புரிந்துவருபவருள் யானும் ஒருவன் என்பது கருதியே இஃது அளிக்கப்பட்டதாதல் வேண்டும். நம் 'யூனிவர்ஸிடி' யாரது திருமுகத்தை நான் பெற்றபோது அவர்களிட்ட கட்டளையை ஏற்றுக் கொண்டேனாயினும், அதனை எவ்வாறு நிருவகிப்பது என்ற மலைப்பு என்னிடம் உண்டாகியது. அதனால் எனக்கு ஏற்றதோர்வழியில் என் உபந்யாசங்களை எழுதி வெளியிடலாம் எனத் துணியலானேன். துணிந்து, நான் சபையில் வெளியிடற்குரிய பொருளுரையொன்றைக் குறிப்பிட்டுத் தரும்படி பெரியோர்களையும் அன்பர்களையுங் கேட்டுக்கொண்டபோது இலக்கியங்களும் சாஸனங்களும் ஒன்றற்கொன்று உதவு முறைகளை விளக்கி ஒருவிரிவுரை நிகழ்த்தும்படி அவர்களிற் பெரும்பாலரும் நியமிக்கலாயினர். அவர்களது இந் நியமனத்தை யான் மறுத்திலனெனினும், அதுவும் நான் கொண்டுசெலுத்தற்கு அரியதென்றே தோற்றியது. என்னெனில், இலக்கியம் என்பது ஒரு பெருங் கடல். சாஸனங்கள் என்பனவோ மற்றொரு சாகரமாகும். அளப்பருங் கடல்களாகிய அவ்விரண்டையும் ஒருங்களந்து கூறுதற்கு என்ன உரிமை எனக்குண்டு? எனினும், கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பநாடரது அரியதொடரொன்று அச்சமயம் என் ஞாப

---

* இது 1929ஆ பிப்ரவரிமீ சென்னைச்சருவகலாசங்கத்தார் ஆதரவிற் செய்த உபந்யாசத் தொடராகும்.

கத்துக்கு வந்து இச்சாகஸ காரியத்தைச் செய்ய என்னைத் தூண்டியது. அஃதாவது —'கடல்கண்டோ மென்பர் யாவரே முடிவுறக் கண்டார்' என்ற அவர் கட்டுரையேயாம். 'கடலைக் கண்டோம்' என்று பெருமைகூறுவோரெல்லாம், அக்கடலின் அளவற்ற பிரதேசங்களிலே கண்கொண்ட மிகச் சிறியதொரு பகுதியையே கண்டு அவ்வாறு சொல்லிக்கொள்பவர் தாமே? அது போலவே, இலக்கியசாஸனக் கடல்களில் என் மனக் கண்ணிற்கு எட்டிய சிறுபகுதியுட் கண்டதைக் கூறிக் 'கடலைக் கண்டு சொல்லு கிறேன்' என்று யானும் பெருமை பாராட்டிக் கொள்ளத் தடையில்லையன்றோ? கம்பநாடாது இவ் வருமைவாக்கிலிருந்து உண்டாகிய ஒருவகைத் துணிவே, ஆப்தர்கள் எனக்குக் குறிப்பிட்ட இலக்கிய சாஸனக் கடல்களில் என்னை இழுத்தியது. அக்கடற்றுறைகளில் துணிவுடன் இழிந்து முழுகியபோது என் கைக்கெட்டிய முத்துச் சிப்பிகள் பலவாம். அவற்றையெல்லாம் வாரிக்கொண்டு உங்கள் திரு முன்பு வந்திருக்கிறேன். அச் சிப்பிகளுள் முதிர்ந்தனவும் முதிரா தனவுமான முத்துக்கள் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். நீங்களே அவற்றைச் சோதித்துக் கொள்ளுதற்கும் மதித்துக் கொள்ளுதற்கும் உரியவர்கள். நன்முத்துக்களிருந்தால், என்சொற் பொருட்குற்றங்களாகிய கசடுகளை நீங்கள் பெருட்படுத்தமாட்டீர் கள் என்பதை அறிவேன். இனி அதிகமான பீடிகையாற் காலத்தைப் போக்காது, தமிழ்த் தெய்வத்தின் வணக்கமான முன்னோர் பாட லொன்றை முகவுரையாகக் கொண்டு நான் குறித்த விரிவுரையைத் தொடங்குகிறேன்.

"பொருப்பிலே பிறந்து தென்னன் புகழிலே கிடந்து சங்கத்
திருப்பிலே யிருந்து வைகை யேட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று கற்றோர் நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை மருங்கிலே வளரு கின்றாள்"

வில்லிபாரதத்தின் பாயிரத்தலைப்பில் நின்றுவிளங்கும் தமிழ்த் தெய்வத்தின் வாழ்த்தாகிய இவ்வழகிய செய்யுள், வில்லிபுத்தூரார் மகனார் வரந்தருவாராற் பாடப் பெற்றதென்பது பலரும் அறிந்ததே. செந்தமிழாகிய தெய்வமகள் பிறந்ததுமுதல் பேதைப்பருவம் வரை அடைந்துள்ள நிலைகளை அழகாகக் கூறுவது இப்பாடல். பொதிய மலையில் வாழும் அகத்தியனால் ஆதியில் உண்டாக்கப் பெற்றமையால் அவராக்கிய தமிழை அவரது பொருப்பிற் பிறந்த தாகக் கவி இங்கே உபசரித்தனர். தமிழை அகத்தியனார் ஆக்கியவர் என்று இவரைப் போலவே, பலரும் கூறுவதுண்டு. இங்கு ஆக்கியவர் என்பது, நொய்யும் நுறுங்குங் களைந்த அரிசியமைத்

தாரை அரிசியாக்கினர் என்பது போன்றதே யன்றி வேறில்லை. அதனல், கடவுளருளால் தன்னடைவேயுண்டான தமிழ் மொழியை அத் தெய்வமுனிவர் சீர்திருத்தியளித்தவர் என்பதே அதன் கருத்தாகும். தானே உருவாதற்குரிய கருவையெல்லாம் தன்னுட்கொண்டதாய், ஈசனற் படைக்கப்பட்ட தமிழாகிய தெய்வ முட்டையை அடைகாத்துப் போற்றி அழகிய உருத்தோன்ற வெளிப்படுத்திய அவ்வளவே ஆசிரியர் அகத்தியனர்க்கு உரிய தாகும். இது பற்றியே, கம்பநாடரும்.

"தழற்புரை நிழற்கடவுள் தந்ததமிழ் தந்தான்"

என்பாராயினர். இதன் பொருள்—'செந்தீ வண்ணனை ஈசன் தந்த தமிழைத் தந்தவர் அகத்திய முனிவர்' என்பதாம். 'தந்த தமிழ் தந்தான்' எனவே, துவிசன்மங்களுள் ஒன்றான அண்டசம் போல, அகத்தியனரால் இரண்டாம் பிறவியெடுத்த தமிழின் பிறப்பு நிலை தோற்றும். இது பற்றியே ஆகஸ்தியம் என்ற பெயரால் தமிழ் மொழியை வழங்கலாயினர், எங்கள் ஆன்றோரும். இனி, பொருப் பிலே பிறந்த தமிழ்மகள் 'தென்னன் புகழிலே கிடந்தாள்' என்றார்; என்றது, பாண்டியரது புகழாகிய தொட்டிலிலே தமிழ்மகள் துயின்று வளர்ந்த தன்மையைக் குறித்தபடியாம். நற் றாயாகிய அகத்தியனர் ஆக்கிய தமிழ்மொழியை அவர் மாணக்கரான புலவர்பெருமக்கள் பாண்டிய ருதவிபெற்றுச் செவிலிபோல வளர்த் தனர் என்பது கருத்து. இவற்றால் தலையிடைச் சங்கங்களில் வளர்ச்சிபெற்ற தமிழ்மொழியின் ஆதிகாலநிலை கூறியவாறாயிற்று.

இவ்வாறு பிறந்துங்கிடந்தும் போந்த தமிழ்மகளைச் 'சங்கத் திருப்பிலே இருந்தாள்' என்றார், சங்கப்பலகையில் வீற்றிருந்த புலவர்களால் அது வளர்வுற்றபடியைக் குறிப்பதற்கு. எனவே, தமிழ் வளர்ச்சிக்கு அமைந்த கடைச்சங்கத்துச் சான்றோர் கால நிலை கூறிய வாறாயிற்று.

அங்ஙனம் இருப்பிலிருந்த தமிழ்மகவு தவழ்தலும் நிற்றலு மாகிய நிலைகளை வைகை நீரினிடத்தும் நெருப்பினிடத்தும் பெற்றாள் என்றார். சம்பந்தமூர்த்திகளது திருப்பாடலிதழ்கள் நீரில் எதிர்த்துச் சென்றும் நெருப்பில் அழியாது நின்றும் விளங்கிய சரித்திரம் பிரசித்தமானவை.

"யாரறிவார் தமிழருமை யென்கின் றேனென்
அறிவீன மன்றோவுன் மதுரை மூதூர்
நீரறியும் நெருப் பறியும்"

என்றார் ஒரு புலவர். இதனல் தெய்வத்தன்மை வாய்ந்த அடியார் கள் திருவாய்ப்பட்டுத் தானுந் தன் தெய்வத் தன்மை தோற்று

வித்த தமிழின் உயர்நிலை பெறப்படும். எனவே, சங்கத்தாரை யடுத்துத் தமிழ்வளர்த்த பிரசான்றோரான அடியார்கால நிலை கூறப் பட்டவாறாயிற்று.

'கற்றோர் நினைவிலே நடந்து' என்றார். கற்றோர் என்பார், கல்வி யிற் பெரியராகிய கம்பர், கூத்தர், செயங்கொண்டார்போன்ற கவிச் சக்கரவர்த்திகள் ஆவர். அன்னோரது, அரும் பெருங் கருத்துக்கள் அமைந்த நூல்களாகத் தமிழணங்கு பரிணமித்தமை தோன்ற அவரது 'நினைவிலே நடந்து' எனப்பட்டது. 'நடந்து' என்றத னால், நடையழகால் தமிழ் மகள் சிறப்புற்றதற்கு இம்மகாகவிகளே சிறந்த காரணமானவர் என்பது போதரும்.

"பாவரும் கிழமைத் தொன்மைப்
பருணிதர் பணித்த பத்தி
நாவருங் கிளவிச் செவ்வி
நடையன நடையள் நல்லோய்"

என்ற கம்பர் திருவாக்கின்படி, உயர்ந்த உவமைக் குரியதன்றோ அவ்வுத்தம கவிகளின் நடையழகு? இதனால், அப்புலவர் பெரு மக்கள்விளங்கித் தமிழ்வளர்த்த சோழர்கால நிலை கூறியவாறாயிற்று.

'ஏனமருப்பிலே பயின்ற பாவை' என்பதற்கு, ஆதிவராக மூர்த்தியால் தன் ஞானமாகிய கோட்டில் தாங்கப்பட்ட உலகம் என்பது பொருளாம். எனவே, நல்லறிஞர்களால் நாட்டிற் போற்றப் படுகின்றாள் தமிழணங்கு என்பது பெறலாகும். ஆதிவராகப் பெருமானை 'ஞானப் பிரான்' என்பர் பெரியார். 'ஞானப் பிரானை யல்லா லில்லைநான் கண்ட நல்லதுவே' என்பது திருவாய் மொழி.

'பாவை மருங்கிலே வளருகின்றாள்' என்றார்; மருங்கு என்பது இடை அல்லது உடலின் நடுவிடமாம். தென்றமிழ்ப் பாவைக்கு இடைபோன்ற திருமுனைப்பாடியுள்ள நடு நாட்டிற் சிறப்பாகத் தமிழ் வளர்தலை இது குறிப்பித்தபடி. "நான்காஞ் சங்கமென முச்சங்கத் தண்டமிழ் நூல் கலங்காமற் றலைகண்டானே" என்று வரந்தருவாரே கூறியவாறு, ஆட்கொண்டான் போன்ற அரசர்கள் தம்காலத்துத் தமிழ் வளர்த்துவருஞ் சிறப்பை உட்கொண்டு இவ் வாறு குறிப்பிக்கப்பட்டது.

'பேதை . . . வளருகின்றாள்' என்று பேதைப் பருவத்தோடு நிறுத்தினர். பெதும்பை முதலிய நிலைகள், தமிழ் மகட்கு இல்லை என்பது கருத்து. உண்டாயின், மேற்பட்ட பருவங்களும் முடிவுங் கூறுதல்வேண்டும். அதனால், பேதையேயாயினும் மேதையங் குறுமகளாய், என்றும் தன் எழினலங்குன்றாமல் விளங்குகின்றாள்

தமிழ்ப்பாவை என்பது போதரும். இது பற்றியன்றோ, 'கன்னித் தமிழ்' என்பர் முன்னோர். 'வளருகின்றாள்' என்று முடித்தா ராயினும், 'அவ்வளர்ச்சியை நாம் வாழ்த்துவோம்' என்பது முடிபாகக் கொள்ளத் தக்கது. 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என்பதுபோல, இதுவும் ஒருவகை வாழ்த்தாம். இவற்றால், தமிழ் வளர்ந்துவந்த பிற்கால நிலையுங் கூறியவாறாயிற்று.

'வளருகின்றாள்' என்ற, இவ்வரந்தருவார் கூற்றையே நாமும் வழிமொழிந்து தமிழ்மகளை என்றும் வாழ்த்துவோமாக. இங்ஙனம் தன் இளமைச் செவ்வி குன்றாமல் தமிழ் வளர்ந்துவருதற்குக் காரணம் யாது? அதன்கணுள்ள இனிமையே யன்றிப் பிறிதன்று. இதுபற்றியே இனிமைப்பொருளில் தமிழ்ச் சொல்லை வழங்க லாயினர் ஆன்றோர். "தமிழ் என்ற பதத்தை இடைவிடாமற் பல தடவை உச்சரித்துப் பாருங்கள்; அஃது அமிழ்து மயமாய் இனித் தலைக் காணலாம்" என்று நண்பரொருவர் ஒரு சமயம் கூறிய வார்த்தை இங்கு ஞாபகத்துக்கு வருகின்றது. இக்கூற்று விநோதம் போலத் தோற்றினும் உண்மையுடையதென்பதில் ஐயமில்லை.

இவ்வாறு அமிழ்தினும் இனிய தமிழ்மொழியின் சரித்திரத்தை வரந்தருவார் அழகாகவும் சுருக்கமாகவும் ஒரு செய்யுளிற் கூறி முடித்திருத்தல் நாம் அறியத்தக்கது. இத்தகைய தமிழ் வரலாற்றை விரிவாக அறியவேண்டும் என்பது இப்போது நம்மவரது பெருவிருப்பமாயுள்ளது. தமிழ்மொழியின் வரலாறென்பது அம் மொழியின் பழமை பெருமை சிறப்பியல்புகளும், அது வழங்கும் நாட்டின் அமைதி வழக்கவொழுக்கங்களும், அந்நாட்டின் மக்களது வாழ்க்கைச் செய்திகளுமாம். இவை, நூல்களின் பருப்பொருள்களை ஆராய்வதாற் பெறப்படக் கூடியன. இத்தகைய வரலாறுகளைத் தெரிதல் இன்றியமையாதது என்பதை நம்முன்னோர்கள் அறியா தவர்கள் என்றேனும் புறக்கணித்தவர்கள் என்றேனும் கொள்ளுதல் தகாததாம். ஒருநூலுக்கு முகவுரையாகிய பாயிரம் இன்றியமையா தது என்பது பலரும் அறிந்ததே.

"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"

என்பது இலக்கணம். பாயிரம், புறவுரை, முகவுரை, நூன்முகம் என்பன ஒரு பொருட்கிளவிகள். நூல்களுடையவும் நூலாசிரியர் களுடையவுமான வரலாறுகளும் பிறசெய்திகளும் அந்நூல்களை யொப்ப என்றும் நிலைநிற்கவேண்டும் என்ற கருத்துக்கொண்டே— ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூற் பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன், காலம், களன், காரணம் என்ற

பதினொரு செய்திகள் கொண்ட சிறப்புப்பாயிரத்தை ஒவ்வொரு நூலும் உடைத்தாயிருத்தல்வேண்டும் என்றும், இப்பருப் பொருள்களை அறிதலால் நுண்பொருளாகிய நூல் மாணுக்கர்க்கு எளிதின் அறிய இடமுண்டென்றும் நியமிக்கலாயினர் முன்னையோர். ஒரு நூற்குப் போலவே, அந் நூற்பரப்பையுடைய பாஷைக்கும் இத்தகைய பாயிரம் வேண்டத்தக்கதேயாம். திருவாய்மொழியை 'அருந்தமிழ்க்குப் பாயிரம்' என்றார் கம்பநாடரும். இங்ஙனம் அதனைத் தமிழ்க்குப் பாயிரமாகச் சிறப்பித்த அப்புலவர்பெருமான் கருத்து, பாஷைக்கும் பாயிரம் இன்றியமையாதது என்பதே யன்றோ? முன்னோர் விதித்துப்போந்த முறையில் ஒவ்வொரு நூலும் தன் பாயிரத்தைக் குறைவறக் கொண்டிருக்குமாயின், அவற்றின் தொகுதியே பாஷையின் சரித்திரமாகக் கூடியதாகும். அப்பாயிரச் செய்திகளை முக்கியமாகக் கொண்டு அறிஞர்கள் ஆராய்ந்தெழுதும் நூல்கள் 'கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறு போல'ப் பாஷையின் நுண்பொருள்களில் மக்கள்மனம் பற்றுதற்குப் பேருதவிபுரியத் தடையில்லை. ஆகவே, இக்காலத்தவரால் 'தமிழ்ச் சரித்திரம்' என்று சொல்லப்படுவது, தமிழ்ப்பாயிரவகையே என்பது விளங்கும். இப்பாயிரம், 'கருவமைந்த மாநகர்க்கு உருவமைந்த வாயின்மாடம் போலவும், தகைமாண்ட நெடுஞ் சுவர்க்கு வகைமாண்ட ஓவியம் போலவும்' பாஷைக்கு அலங்காரமாய் அதன் பெருமையைச் சிறப்பித்துக் காட்டவல்லது. அதனால் இக்காலத்தவரது அவாவானது, அத்தகைய தமிழ்ப் பாயிரத்தை அறிவதில் விசேடமாகச் செல்வது இயற்கையே. நாகரிகம் பெற்றுள்ள நாட்டினரெல்லாம், தங்கள் பாஷாசரிதங்களைப் பெரிதும் விரும்பிப் புதியபுதிய செய்திகளைக் கண்டெழுதித் தம் மொழிப்பெருமையை உயர்த்தி வருகின்றனர். அதனால், பழைமை பெருமைகளுடைய தமிழ் மக்கட்கும் அப்பேரவா இருப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை. தமிழின் பழைய வரலாறுகளையும் வழக்குக்களையும் அறிந்து மகிழ்தற்கு அதன்கணமைந்த நூற்றொகுதி இன்றியமையாத கருவி என்பது தெரிந்ததே. இதனைப் போல அவற்றை அறிதற்கு வேண்டத்தக்க வேறு கருவியொன்றும் உண்டு. அது, சிலாதாமிர சாஸனத் தொகுதியாகும். நாட்டின் மூலைமுடுக்குக்களில் அமைந்துள்ள சாஸனங்கள் அறிஞர்களாற் கண்டுபிடிக்கப்பெற்று ஆண்டுதோறும் இக்காலத்தே வெளிவந்துகொண்டிருக்கின்றன. பத்தித்திறம் வாய்ந்த உத்தம சீலர்களால் ஆலயங்கட்கும் மற்றத் தருமங்கட்கும் ஆசந்திரார்க்கமாகச் செய்யப்பட்ட அறச் செய்கைகளே இச்சாஸனங்களிற் பெரும்பான்மை காணப்படுஞ் செய்திகள்.

இவற்றினின்றும், தெய்வங்களிடத்து, அடியார்களிடத்தும் ஏனைச் சீவகோடிகளிடத்தும் பண்டையோர் கொண்டிருந்த மனப்போக்கின் பெருமை இத்தகைத் தென்பது நன்கறியப்படும். என்றும் நிலைக்க விரும்பிச் செய்யப்பட்ட அறங்களாதலின், அரசருடையவும் அதிகாரிகளுடையவும் அனுமதிபெற்றுப் பெரும்பாலும் கோயில் முதலிய பொதுவிடங்களிற் கல்லில் வெட்டிப் பலரும் அறியும்படி இவை பகிரங்கப்படுத்தப்பட்டுள்ளன. முன்னோர்களுடைய நிரதிசயமான அறச் செயல்களைக் குறிக்கும் இச்சாஸனங்களை ஒரு முகமாகத் தொகுத்துப் பேணிவருமாறு சாஸனவிலாகாக்களைத் தேசமெங்குந் தாபித்து நடத்தும் அரசாங்கத்தாரது பெருஞ்செயல், நம்மவரது போற்றற்கும் புகழ்ச்சிக்கும் உரியது. நம் முன்னோர்கள், ஆசந்திரார்க்கமாகப் புரிந்து போந்த அறப்புறங்கள், அரசியல் மாறுபாட்டாலும் பிறகாரணங்களாலும் பெரும்பான்மையும் சிதைவனவாயின. ஆயினும், அப்புண்ணிய மக்களின் செயல்களையும் வரலாறுகளையும் நாம் அறிந்து மகிழும்படி செய்துவரும் பேறம், இப்போது நம் அரசாங்கத்தாருடையன என்றே சொல்லத் தடையில்லை. இச்சாஸனங்கள் முன்னோரது அறச்செயல் முதலியவற்றை வெளிப்படையாக விளக்குதல்மட்டுமென்றி, தமிழ்மொழியின் வெளியீடான பருப்பொருள்களும் உள்ளீடான நுண்பொருள்களும் விளங்குதற்குப் பேருதவி புரிவனவுமாகும். அதனால், தமிழ் வரலாறுகளையும் வழக்குக்களையும் அறிதற்கு இவை பெருங்கருவிகளாகச் சொல்லத்தக்கவை.

25-ஆண்டுகட்கு முன்பு நான் மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திரிகையை நடத்திவந்தபோது, சரித்திரம் வல்லாராய்க் காலஞ் சென்ற ஸ்ரீ. து. அ. கோபிநாதராயர் அவர்கள, சாஸனங்களினின்று தாம் கண்ட அரிய பொருளுரைகள் பலவற்றை அதற்கு எழுதி உதவிவந்தனர். இராயரவர்களது சாஸனவாராய்ச்சிவன்மை இணையற்றது என்பது பலரும் அறிந்ததே. அவர்களது கட்டுரைகள் சிலவற்றில், சாஸனச் செய்திகளிலே அதிக மதிப்புக் காட்டியும் இலக்கியங்களில் அத்துணையின்றியும் எழுதப்பட்ட பகுதியும் உண்டு. அவ்விடங்களில் எனக்கும் அவர்கட்கும் அபிப்பிராயபேதம் ஏற்பட, அதுபற்றி இலக்கியப் பெருமையையே அதிகமாக நானெடுத்து எழுத நேர்ந்தது. ஆனல் நெடுங்காலம் இடைச் சென்றபின், நாங்களிருவேமும் சந்தித்தபோதெல்லாம் சம்பாஷித்துக் கொண்டது யாதெனின், இலக்கியமும் சாஸனமும் ஒன்றற் கொன்று உதவிபுரிவனவாதலின், அவ் விரண்டும் ஒப்ப மதித்துப் போற்றக்கூடியன என்பதேயாம். சாஸன வழக்குக்கள்

இலக்கியத்துடனும், இலக்கிய வழக்குக்கள் சாஸனங்களுடனும் ஒருங்கியைந்தும் ஒன்றனை யொன்று விளக்கியும் செல்வதாயின் இந்நம்பகம் கொள்ளத் தடையென்னை ? அதனால் அவ்விரண்டும் ஒன்றற் கொன்று இன்றியமையாததென்றே சொல்லத்தக்கன. தமிழ்மக்கள் அவ்வக்காலத்து வழங்கிய உலகவழக்கு முறையில் வாக்கிய ரூபமான சாஸனங்கள் அமைந்தனவாகும். அவை செய்யுள் வழக்கிற்கே உரிய சொற்களையேனும் மரபுகளையேனும் உடையனவல்ல. அவற்றிற் பயில்வனவெல்லாம் அவை எழுதப் பட்ட காலத்தோடு சம்பந்தமுடையனவேயன்றிப் பிறிதில்லை. இத்தன்மையைப் பழைய இலக்கியங்களும் கொண்டனவேயாம். செய்யுட்கேயுரிய சொற்பொருண்மரபுகளை அவ்விலக்கியங்கள் ஏற் பனவாயினும், தத்தங் காலத்துக்குரிய உலகியலான சொற்பொருள் களையும் அவை வழங்குவனவேயாம். ஆகச் சாஸனங்களும் இலக்கியங்களும் காலவியற்கைக்குற்ற வழக்குக்களைக் கொண்டுள் ளமையால், அவ்வக் காலங்கட்கு அமைந்த அவ்விரண்டும் பலவிடங் களில் ஒற்றுமைகொள்ள நேர்கின்றன. ஆயிரமாண்டுகட்கு முன் உலகவழக்காக அமைந்த சாஸனச் சொற்பொருள்கள் ஒரு நூலில் அருமையாகக் காணப்படுமாயின், அந்நூல் ஏறக் குறைய அச் சாஸனகாலத்தை ஒட்டியது என்று கருதத் தடையில்லையன்றோ ? இவ்வாறு, அவை இரண்டும் ஒற்றுமைப்படுதலால், உண்மைப் பொருளுணர்ச்சியை நாம் அவற்றினின்று கொள்ளக் கூடியதாகின் றது. சாஸனங்கள் பெரும்பாலும் அவையமைந்த காலநிலை தெரியக் கூடியனவாகவே உள்ளன. காலந் தெரியாதவற்றையும் ஆட்சியாண்டு முதலிய உள்ளீடுகொண்டும் எழுத்தமைதிகொண்டும் அவை இன்ன நூற்றாண்டின என்று சாஸன அறிஞர் கூறவல்லர். இவை போலவே, காலந் தெரியாத இலக்கியங்களும், அவற்றின் உள் ளீடான சொற்பொருள் வழக்குக்களையும் வரலாறுகளையும் சாஸனங் களுடன் ஒற்றுமைப்படுத்திக் கொண்டு, அவை இன்ன நூற் றாண்டுக்கு உரியன என்று நாம் மதிப்பிடக்கூடும். இங்ஙனம் சாஸனங்கள் இலக்கியவுணர்ச்சிக்கும் இலக்கியங்கள் சாஸனவுணர்ச் சிக்கும் உபகாரப்பட்டு, ஒன்றற் கொன்று இன்றியமையாதனவா யுள்ள நிலையே, என்னுபந்நியாசங்களில் விரித்துக்காட்டிய எண்ணிய விஷயமாகும். இப்பொருளுரையை—நான் முதலில் தோற்றுவாய் செய்துகொண்ட காலமுறைப்படி—ஆதிகாலம், கடைச்சங்ககாலம், பிறசான்றோர் காலம், சோழர் காலம், பிற்காலம் என ஐந்து பகுதி களாகக் கொண்டு இனி விளக்க முயல்வேன்.

# சங்கீத சரஸ்வதி

### பி. ஸ்ரீ. ஆசார்யா

டில்லியில் அரசாண்ட மொகலாய சக்கரவர்த்திகளில் ஔரங்கசீப் ஒருவர். அவருக்கு முன் இருந்தவர்களெல்லாம் சங்கீதத்தை விசேஷமாக ஆதரித்து வந்தார்கள். ஔரங்கசீபோ சங்கீத ஓசை சிறிதும் தம் காதில் விழாதபடி அதிஜாக்கிரதையாக இருந்தார். சங்கீத சுகத்தை அனுபவிப்பது ஆண்டவனுக்குத் துரோகம் செய்வதாகும் என்பது அவர் கருத்து. சங்கீதத்தை வெறுத்ததற்கு அவரது 'வைதிகம்' முக்கியமான காரணம்.

ஒரு நாள் அவர் அரண்மனை மேல்மாடத்தில் இருந்தார். இராஜ வீதியில் திடீரென்று ஓர் அழுகுரல் கேட்டது. சக்கரவர்த்தி ஜன்னல் வழியாகப் பார்த்தார். பெருங்கூட்டம்; கூட்டத்தின் இடையே சிலர் ஒரு பிணப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு போனார்கள். ஔரங்கசீப் கீழே போகிறவர்களில் சிலரைக் கூப்பிட்டு 'யார் இறந்து போனார் ?' என்று கேட்டார். அதற்கு அவர்கள் "சங்கீத சரஸ்வதி இறந்துபோனாள்; நாங்கள் புதைக்கப் போகிறோம்" என்று வருத்தத்தோடு பதில் சொன்னார்கள். இதனால் சக்கரவர்த்தி மனம் இரங்கி மீண்டும் சங்கீத வித்வான்களை ஆதரிக்கத் தொடங்குவார் என்று எதிர்பார்த்தார்கள். சக்கரவர்த்தியோ அப்படி ஒன்றும் செய்துவிடவில்லை. அவர் அவர்களை நோக்கி, "ஆழமான குழிவெட்டி, சங்கீத சரஸ்வதி மீண்டும் கிளம்பிவிடாதபடி புதைத்து விடுங்கள்.' என்றுக் கட்டளையிட்டார்.

தற்காலத்திலும் இச் சக்கரவர்த்தியைப் போன்ற ரஸிகர்கள் உண்டு. அவர்களுக்குச் சிங்காசனமும் மணி முடியும் அகப்படாவிட்டாலும், வேறு லௌகிக மரியாதைகளுக்குக் குறைவில்லை. அவர்கள் வைதிகத்திற்கு விரோதமானது என்ற காரணத்தால் சங்கீதத்தை வெறுக்காமல் இருக்கலாம். ஆனால் வாழ்க்கைக்குப் பேரின்பம் ஊட்டுவது சங்கீதம் என்ற உணர்ச்சி அவர்களிடத்திலும் காணப்படுவதில்லை. ஔரங்கசீப் சங்கீதத்தை வெறுத்ததுபோல் ஆடம்பர வாழ்வையும் சுகபோகங்களையும் வெறுத்தார். தற்காலச் சங்கீத விரோதிகளோ ஆடம்பரத்தின் பெயராலும் சுகபோகத்தின் பெயராலும் சங்கீத சரஸ்வதியைக் கொலை செய்ய முயல்கின்றார்.

ஔரங்கசீப் சங்கீதத்தைக் காட்டிலும் பக்தியே மேலானது என்று நினைத்தார். தற்காலத்தினரோ பொருளும் போகமும் ஆடம்பரமும் சங்கீதத்தைக் காட்டிலும் மேலானவை என்று மயங்கு கிறார்.

எல்லாம்வல்ல அல்லாவின் பெயரால் ஔரங்கசீப் சங்கீத சரஸ்வதியைத் துறந்தார் நாமோ வீண் பெருமைக்காக இனிமை யைத் துறக்க விரும்புகிறோம்.

சங்கீதம் ஒரு தெய்வக்கலை என்பதைச் சங்கீத சத்துருவான ஔரங்கசீப் அறிந்துகொள்ளவில்லை. அது தமக்கும் தெய்வத் திற்கும் இடையே வந்து அநாவசியமாகக் குறுக்கிட்டு நிற்கிற தென்று கருதினர். தற்காலத்தில் சங்கீதத்தை ஆதரிக்கிறவர்களும் கூட, அது ஒரு தெய்வக்கலை யென்பதை அறிந்து கொள்ளவில்லை. அறிந்து கொண்டால், நாடகமேடைகளிலும் 'கிராமபோன்' போன்ற கருவிகளிலும் சங்கீத சரஸ்வதியை இப்படிச் சிறை செய்து இம்சிக்கத் துணிவார்களா ?

நமது வாழ்க்கை ஒரு பெருங்கலை. இதில் எத்தனையோ இரக சியங்கள் இருக்கின்றன. இந்தக் கலையை ஒருவாறு கற்று இந்த இரகசியங்களை அறிவதற்குப் பல வேறு கலைகளும் துணை செய்து வழி காட்டுகின்றன. அவற்றுள் ஒன்று தேவகானமாகிய சங்கீதம். இது அதி சூட்சுமமாக வேலை செய்கிறது. பொருளிலும் போகத் திலும் அதிகாரத்திலும் ஆடம்பரத்திலும் ஸ்தூல சக்திகளிலும் மூழ்கியிருக்கும் உலகம், சூட்சும சக்திகளின் பொருளையும் மதிப் பையும் சரியாக உணர்ந்துகொள்வதில்லை.

நாம் பொருளைச் சேர்ப்பவர்களையும் அதிகாரம் செலுத்துகிற வர்களையும் பிரபுக்களென்றும் அதிகாரிகளென்றும் போற்றுகிறோம். பொருளுக்கும் அதிகாரத்திற்கும் வழி காட்டுவோம் என்று மார் தட்டும் அரசியல் வாதிகளை ஜனத்தலைவர்கள் என்று அழைக்கிறோம். வைத்தியர்களையும் வக்கீல்களையும் தகுந்த அந்தஸ்து உள்ளவர் களென்று மதிக்கிறோம். ஆனால் சங்கீத வித்வான்களுக்கு இவ் வளவு உயர்ந்த பதவி கொடுக்கிறோமா ?

இந்தக் கர்ம பூமியில்—செக்கு மாடுகள் போல் உழைத்து உழைத்துப் பலரும் ஜீவனம் செய்யவேண்டி யிருக்கும் இம்மண் ணுலகில்—ஓர் உயர்தர இன்பத்தைக் காட்டுவோர் யார் ? சங்கீதம் போன்ற அழகுக் கலைகளில் வல்லவராயிருப்பவரல்லவா ? இவர் களால் துன்பமும் இன்பமாகிறது ; மண்ணுலகமும் விண்ணுலகம்

ஆகிறது. வாழ்க்கையிருளும் ஒளியாகிறது. உழைப்பால் களைப் புற்ற இதயமும் சாந்தி பெறுகிறது.

வயிற்றுக்கு உணவு வேண்டும் ; அப்படியே செவிக்கும் உணவு வேண்டும் அல்லவா ? உடம்பில் பசி தாகம் ஏற்படுகின்றன. அப் படியே உள்ளத்தின் ஆழத்திலும் பசியும் தாகமும் ஏற்படுகின்றன. இப் பசியையும் தாகத்தையும் போக்கும் அமிர்தத்தை நமக்கு உதவும் மகோபகாரிகள் யார் ? சங்கீத வித்துவான்கள் போன்ற அழகுக் கலைஞர்கள் அல்லவா ? உண்மையான பிரபுக்கள் செவிக்கு உணவு தரும் இக்கலைஞர்களே ! பொருளாலும் போகத்தாலும் உயர்ந்தவர் கள் போலிப் பிரபுக்களே யாவர்.

தற்கால நாகரிகம், பொருளையும் போகத்தையும் வழிபடுவதோடு வேகத்தையும் விசேஷமாகப் போற்றுகிறது. பொருள் போகம் வேகம்—இவை தற்கால நாகரிக மும்மூர்த்திகள். பிரமா, விஷ்ணு, சிவன் என்ற மும் மூர்த்திகளை மகுடபங்கம் செய்து கீழே தள்ளி விட்டு நவ நாகரிகம் புதிய மும் மூர்த்திகளைப் படைத்து, விசேஷ பயபக்தியோடு வழிபாடு செய்து வருகிறது. இப் புதிய மூர்த்தி களில் ஒன்றான வேகம் நம்மை எப்படி ஆட்டிவைக்கிறது, பாருங் கள் ! தற்கால மனிதன் அவசர அவசரமாக வேலை பார்க்கிறான் ; அவசர அவசரமாகச் சாப்பிடுகிறான் ; அவசர அவசரமாகப் பொழுது போக்குகிறான் ; அவசர அவசரமாகச் சாகிறான் ! இந்த நாகரிகம் ஏன் இவ்வளவு வேகமாக ஓடிச் செல்லுகிறது ? எங்கே செல்லுகிறது ? இப்படி மோட்டார் வேகத்திலும் விமான வேகத் திலும் பறந்து கொண்டிருக்கும் நாகரிகத்திற்குச் சங்கீதத்தை உள்ளபடி அனுபவிக்கத் தக்க அமைதியும் அவகாசமும் எவ்விதமாக ஏற்படும் ?

பொருளும் போகமும் வேகமும் சேர்ந்து சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரம் என்னும் முத்தொழில்களையும் நடத்திவரும் உலகத் திலே, அழகு, உண்மை, நன்மை ஆகிய முப்பொருளே முழுச்செல்வம் என்னும் உயர்தர ஞானத்திற்கு இடம் ஏது ? பழைய தெய்வங்களை வேட்டையாடித் துரத்திவரும் புது நாகரிகத்தில், சரஸ்வதி வீணை யும் கையுமாக ஓட்டம் பிடிக்கிறாள் ! கிருஷ்ணபகவான் புல்லாங் குழலும் கையுமாக ஓடுகிறார் ! நாரதரும் கந்தர்வர்களும் தங்கள் கீத வாத்தியங்களோடு எங்கேயோ திசை தெரியாமல் முடுகி ஓடுகிறார்கள் !




## சுத்த ஜலம்

சுசி

(1235-ம் பக்கத்தொடர்ச்சி)

### 5. குடி நீரை ஏரிகளில் சேகரித்தல்

ஓர் ஊருக்குத் தண்ணீர் வசதிக்கு ஏற்பாடு செய்ய இயற்கையால் ஏரி யில்லாவிட்டால் சில சமயங்களில் கரைகள் போட்டு அணை கட்டி ஏரிகள் உண்டுபண்ணவேண்டியிருக்கிறது. பம்பாய்க்குக் குடி தண்ணீர் டன்ஸா (Tansa), வீஹார் (Vehar), பவாய் (pawai), துளஸீ (Tulsi) என்ற பெயர்களுள்ள நான்கு மகத்தான செயற்கை ஏரிகளிலிருந்து வருகிறது. சென்னைக்கு Red Hils ஏரியிலிருந்து ஜலம் வருகிறது. ஹைதராபாத்து நகருக்கு மவ்வாறே. இலங்கையில் கொழும்பு நகருக்கு லபூகாமா (Lebugama) என்றவிடத்திலுள்ளசெயற்கை ஏரியிலிருந்து ஜலம் வருகிறது. கொடைக்கானலுக்குத் தண்ணீர் நக்ஷத்திரசாலையினருகிலுள்ள செயற்கை ஏரியிலிருந்து வருகிறது.

மழை பொழி நிலத்தில் பெய்யும் மழை எப்போதும் ஒரே மட்டாயிராது. அதனால் அதிலுள்ள ஊற்றுக்களிலும் ஓடைகளிலும் சிலகாலம் தண்ணீர்மிகுதியாயும் சிலகாலம் குறைவாயுமிருக்கும். இதை எஞ்சினியர்கள் கணக்குப்பார்த்து எக்காலத்திலாவது அருங்கோடையில் ஊருக்கு வேண்டிய குடி தண்ணீர் அவ்வூற்றிலிருந்து கிடைக்காது என்று காணப்படுமாயின் ஏரி யுண்டாக்கி மழைகாலத்தில் வரும் அதிக ஜலத்தைச் சேகரித்துக் கோடை காலத்திற்கு உபயோகிப்பார்கள். வானத்தை மட்டும் எதிர் பாராமல் குளத்தில் ஜலத்தைப் பிடித்துக்கொள்வது கிருஷித் தொழிலுக்கு மட்டுமல்ல குடி தண்ணீர் வசதிகளுக்கும் வழக்கம்.

செயற்கை ஏரிகளுக்குப் பள்ளத்தாக்குகளில் கல், கான்கிரீட் இவற்றினல் அணைகள் கட்டிப் பள்ளத்தி லோடிவரும் தண்ணீரின் போக்கைத் தடுத்துவிடலாம். அல்லது இலகுவான

வாட்டமும் குழிவுமுள்ள நிலத்தில் கீழ்வரையில் மட்டும் மண்ணி னால் கரைகட்டி அதில் மழைநீரைப் பிடித்துக் குளமாக்கலாம். இதில் தமிழ்நாட்டார் இந்தியாவிலும் இலங்கையிலும் பண்டைக்கால முதல் அதிக சாமர்த்தியம் காட்டியிருக்கின்றனர்.

உலகில் மிகவும் பிரம்மாண்டமான அணை இப்போது காவிரி யாற்றின் குறுக்கே இரண்டு குன்றுகளினிடை மேட்டூரில் கட்டப்படு கிறது. இதன் நீளம் ஒரு மைல்; உயரம் நதி மட்டத்திலிருந்து 175 அடி, அடிவரையிலிருந்து 230 அடி. அடிப்படையில் அகலம்சுமார் 210 அடி. இது கட்டிமுடிந்தபின் ஏரி 56 சதுர மைல் பரப்புள்ள தாய், 45 மைலுக்கப்பாலுள்ள 'ஹோகனக்கல்' என்ற 60 அடிஉயர முள்ள நீர் வீழ்ச்சியில் 56 அடியை முழுக அடித்துவிடுமாம்! தண் ணீர் தேக்க ஆரம்பித்துவிட்டதாய்ச் சமீபத்தில் செய்தி வந்தது. இவ் விதச்சாகச வேலையின் மர்மங்களை யெடுத்துரைக்க இது அவகாச மல்ல. எவ்வளவு வர்ணித்தாலும் பார்ப்பது போலாகாது. இவ் வாவி தஞ்சை ஜில்லாப்பாசனத்துடன் தண்ணீர் வசதியையே கண்டறி யாத சேலம் நகருக்குக் குடி தண்ணீருக்கும் உபயோகப்படும் என் பது நமது நம்பிக்கை.

ஏரிகளில் வெள்ளம் கரைகளையுடைத்துக்கொண்டு போகாமல் சரியான மறுகால்கள் கட்டவேண்டும். சேகரித்த நீர் ஒழுகாமல் கரைகளையும் அணைகளையும் உறுதியாய்க் கட்டவேண்டும். ஏரி களுக்கு இடம் தேர்ந்தெடுத்து மட்டம்பார்த்து ஜலக்கணக்கெடுத்து சிக்கனமாகவும் போதிய பல முள்ளதாகவும் அணை, கரைகள், மறு கால் இவை கட்டுவது எஞ்சினியர்களின் கலையில் நுட்பமான வோர் பிரிவு. அதை நாம் விவரிப்பது அனுவசியம்.

குடி தண்ணீரை ஏரிகளில் சேகரித்தல் கோடையில் ஜலத் தட்டுக்கு உதவுவதுடன், ஜலத்தைச் சுத்தி செய்யவும் மிகப் பிரயோ ஜனப்படுகிறது.

எவ்வாறெனில், ஏரியில் நீர் தேங்கியிருக்கும்போது வண்டல் படிகிறது. படியும்போது மிகநுட்பமான மிதக்கும் அசுத்திகளையும் பல நுண்ணுயிர்களையும் மெதுவாய்ப் பஞ்சினால் ஒத்தி எடுப்பது போல் ஜலத்தினின்றும் துடைத்தெடுத்து விடுகிறது. ஜலத்தின் நிறம் சூரிய வொளி படுமிடத்தில் (துணிகளின் சாயம் வெயிலில் வெளுப் பதுபோல்) வெளுத்துப்போகிறது. (Bleaching) விஷக்கிருமிகள் தாமாகவே நாசமடைகின்றன. டைபாயிடுகிருமிகள் ஊற்று நீரை விட ஏரி குளங்களில்சீக்கிரமாய் மரிக்கின்றனவாம். குடற்பிராந்தியக் கிருமிகள் (Intestinal Bacteria) ஏரி குளங்களில் தேங்கிய நீரில்

ஒரு வாரத்துக்குள் 100 க்கு 95 வீதம் மடிகின்றனவாம். ஒரு மாதத்துக்குள் எல்லாம் சாகின்றனவாம்.

ஏரிகளின் மேல்மட்டத்து நீரில் பிராணவாயு அதிகமிருக்கும். நீரிலுள்ள பாசி, குளோரோபில் Chlorophyl) இவற்றில் இரும்பு இருக்கிறது. இது மேல்மட்டத்தில் பிராணவாயுவுடன் ஐக்கியப்பட்டு பஸ்மமாகமாறி நீரினின்றும் பிரிந்து படிந்து ஏரியினடிக்குப் போகிறது. (பிரிந்து படிதல்—Precipitation) அங்கே நீரில் பிராணவாயு குறைவு. சாக பதார்த்தகங்கள் அழுகி Hydrogen sulph என்ற கெட்டவாயு உற்பத்தியாகிறது. படியும் இரும்பு பஸ்மம் பிராணவாயுவிலிருந்து பிரிந்து இந்தக்கெட்டவாயுவிலுள்ள கந்தகத்துடன் ஐக்கியமடைந்து Ferrous Sulphide என்ற கரிய வஸ்துவாய்மாறுகிறது. இதனுல்தான் பெரிய ஏரிகளில் அடியிலுள்ள ஜலம் கரிய நிறமாய்க் காணப்படுகிறது. இங்குக் கரியமிலவாயுவும் Carbon dioxide), வேறு பல சாகாதி அமிலங்களும் Organic Acids) அழுகும் வஸ்துக்களிலிருந்து பிறக்கின்றன. இந்தஜலம் தண்ணீர்க்குழாய்களை அரித்துத்தின்றுவிடும் (Corrosive) தன்மையுடையது. பிராணவாயுவும் சுண்ணும்பும் சேர்க்கப்பட்டால் இத்தன்மை மாறும்.

ஆழமான ஏரிகளில் மேலுள்ள நீருக்கும் அடியிலுள்ளதற்கும் சீதோஷ்ண நிலை பேதங்கள் ஏற்பட்டுக்கொண்டே யிருக்கும். இம் மாறுபாடுகள் காலத்தையும் இடத்தையும் பொறுத்தவை. இவற்றினுல் அடியிலுள்ள நீர் வெப்ப மிகுதியால் கனம் குறைந்து மேற்போகலாம், மேலுள்ள நீர் குளிர்ச்சி மிகுதியால் கன மடைந்து கீழே போகலாம். பௌதிக சாஸ்திரத்தில் 4°C என்ற டெம்பரேச்சரில் தான் ஜலத்தின் கனம் மிகவதிகமென்பதையும், அதற்கு மேல் ஜலம் வெப்பமடைந்தாலும், குளிரால் பனியாக உறைந்தாலும் கனம் குறைந்து மேலே மிதக்கும் என்பதையும் வாசகர்கள் கற்றிருப்பார்கள்.

ஏரிகளில் மேல்மட்டத்திற்கு 3,4 அடிக்குக்கீழுள்ள நீர் மற்ற மட்டங்களிலிருப்பதைவிடச் சுத்தமாயிருக்கும். தெளிவாயும், மேல்மட்டத்திலுள்ள இலை, பாசி, தூசி முதலிய அசுத்திகளில்லாமலும் நுண்ணுயிர் குறைவாயும் அடியிலுள்ள அமிலங்கள், வாயுக்கள், துர்க்கந்தங்கள், படியும் பதார்த்தங்கள் இவை யில்லாமலுமிருக்கும். இதற்காக ஏரியில் நீர் பெருகினுலும் வற்றினுலும் மேல்மட்டத்திற்குச் சற்றுக் கீழுள்ள நீரையே குடிக்க எடுப்பதற்குச்சௌகரியமாகப் பல வெவ்வேறு மட்டங்களில் உள்வாய்களும் (Inlets) அடைப்புக்களும் (Valves) அமைப்பார்கள். சில ஏரிகளில் உள்வாய் நீர் மட்டத்துக்குச் சற்றுக் கீழே மிதந்து கொண்டேயிருக்கும்.

ஏரிகளில் குறைந்தது இரண்டு மாதத்துக்கு வேண்டிய நீரைத் தேக்கி வைத்து உபயோகித்தால் விஷக்கிருமிகள் அனேகமாய் இரா. இரண்டு மாதத் தேக்கத்துக்குக் குறைந்தால் தரைமேல் ஓடி வந்து அசுத்தியடைந்த நீரை வடிக்கட்டி யுபயோகிப்பதே நல்லது. தேக்குவதால் பாசி வளருவதைத் தடுக்க முடியாது. ஜலத்தில் உதிக்கும் வாயுக்கள் இவற்றை மேல்மட்டத்தில் தாங்கிக்கொண்டிருக்கும்.

புதிதாய்ச் செயற்கை ஏரிகளைக் குடி தண்ணீருக்காக உண்டாக்கும்போது அவ்விடத்திலுள்ள மரஞ் செடிகளையும் கோரை, புல் பூண்டுகளையும் பிடுங்கி வேரறுத்துக் கொளுத்திவிடுவது நல்லது. மேல்மட்டத்திலுள்ள மண்ணைச் செதுக்கி அப்புறப் படுத்திவிட்டு நல்ல மணலை விரிப்பது ஜலத்திற்கு நல்லது. இவ்விதம் நீர்மட்டத்துக்கு 10 அடிக்குக் கீழ் முதல் 3,4 அடிக்கு மேல் வரை வேர் பிடுங்கி மண்செதுக்குவார்கள். இதற்குக்கீழுள்ள மரங்களைவெட்டி விடுவார்கள். ஏரியில் இலை யுதிர்க்கக்கூடிய மரங்களை வெட்டவேண்டும். சாக்கடைகள் ஏரியை வந்தடையவிடக்கூடாது. ஏரியைச்சுற்றிலும் மழை பொழி நிலத்தில் சவுக்கு, குங்கிலியம் போன்றமரங்களை வளர்த்து அடர்ந்த வனமாக்குவது நன்று. அதில் ஆடு, மாடு, மனிதர் வரவிடாமல் அசுத்தியினின்றும் பாதுகாக்கவேண்டும்.

ஓர் ஏரி நீரை வடிக்கட்டிச் சுத்திசெய்வது அவசியமானால் மண்ணைச்செதுக்கி மணல் விரிக்கும் செலவு அனாவசியம்.

(தொடரும்)

# தேனீக்கள்

எம். ஏகாம்பரநாத ஐயர்

தேனீக்கள் என்னும் பதத்திற்குத் தேன் சேர்க்கும் ஈக்கள் என்று பொருள் பட்டாலும், இவைகளுக்கும் சாதாரணமாக நம்முடைய வீடுகளிலுள்ள ஈக்களுக்கும் அமைப்பு வாழ்க்கை முதலானவற்றில் வித்யாசங்கள் பல உள. வீடுகளிலுள்ள ஈக்கள் அழுகின பதார்த்தங்கள் மலம் முதலானவற்றில் தங்கி, அவற்றிலிருந்து ஆகாரத்தை உட்கொண்டு, சாணக்குழிகளிலும் குப்பைக் குழிகளிலும் முட்டைகளிடுகின்றன ; இம்முட்டைகளிலிருந்து ஈப் புழுக்கள் (maggots) வெளியே வந்து, தங்களைச் சுற்றிலுமுள்ள ஆகாரத்தை உட்கொண்டு, ஈக்களாக மாறுகின்றன. ஆனால் தேனீக்களோ வாசத்திற்கு பலவறைகளுள்ள தேன்கூடுகளைக் (honey-combs) கட்டிக்கொண்டு, அதிருசிகரமான தேனைப் புஷ்பங்களிலிருந்து ஆகாரத்தின்பொருட்டு சேகரித்து, அதிக முன்யோசனையுடன் மாரிகாலத்தில் உபயோகிப்பதற்கு, தங்கள் கூடுகளுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவைக்கின்றன. முட்டைகளைக் கண்ட விடங்களில் இடாமல், தேன்கூட்டிலேயே இட்டு, அம்முட்டைகளிலிருந்து வெளிவரும் தேனீப்புழுக்களை வெகு ஜாக்ரதையாகப் போஷித்துப் பாதுகாக்கின்றன. இவற்றைக் காட்டிலும், தேனீக்களின் வாழ்க்கையில் வியக்கத்தக்கன அவற்றின் ஐக்யபத்யமும், சுவயநலம் பாராட்டாமையும், சமூகவாழ்க்கையும் ஆகும். சமூக வாழ்க்கை விஷயத்தில் மனிதனும் கூட அவைகளிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டிய விஷயங்கள் அநேகம் உண்டு.

தேனீயின் தேகமானது, மற்ற ஷட்பாதப்பிராணி (Insects) களுக்குள்ள மாதிரி தலை, உரஸ் (thorax) உதரம் (abdomen) என்னு முப்பாகமாகப் பிரிந்துளது ; தலையில் இரண்டு ஸ்பர்சக் கொம்புகளும் (feelers), இரண்டு கலப்புக்கண்களும் (compound eyes), மூன்று ஏகாந்தக்கண்களும் (simple) இருக்கின்றன ; உரஸில் இரண்டு ஜோடி இரக்கைகளும் மூன்று ஜோடி கால்களும் இருக்கின்றன. தேனீக்கள் வெகு தூரங்களிலுள்ள புஷ்பத்

தோட்டங்களுக்கும், காடுகளுக்கும் பறந்து சென்று, அங்குள்ள புஷ்பங்களிலிருந்து தேனையும், மகரந்தத்தூளையும் (pollen) தங்கள் கூடுகளுக்கு எடுத்துச் செல்லும்; இவ்விதம் பறக்கவேண்டுமானால் இரக்கைகள் அவசியமல்லவா? ஆகவே, இவைகளுக்கு இரண்டு ஜோடி இரக்கைகள் இருக்கின்றன. முன் இரக்கைளின் பின்னோரத்திலும், பின் இரக்கைகளின் முன்னோரத்திலும் சில கொக்கிகள் இருக்கின்றன; தேனீ பறக்கும்போது இரக்கைகள் நன்றாக விரிந்து ஒரே பக்கத்து இரக்கைகள் இரண்டும் கொக்கிகளால் பூட்டப்பட்டு பறப்பதற்கேற்றபடி நன்றாகப் பொருந்தி யிருக்கின்றன.

புஷ்பங்கள் இருக்கும் இடங்களைப் பார்க்கக் கண்களும், புஷ்பங்களில் தேன் இருக்கும் இடத்தை உணர ஸ்பர்சக் கொம்புகளும் உதவுகின்றன. தேனீயின் வாயானது தேனை உரிஞ்சுவதற்கேற்றபடி நீண்ட குழல்போல் இருக்கிறது. புஷ்பத்திலிருந்து இக்குழல்வழியாக உரிஞ்சிய தேனானது, அன்னமார்க்கத்திலுள்ள தேன்பை (honey-stomach) என்கிற பாகத்தில் சேர்ந்து அங்கு ஒருவிதமான மாறுபாட்டை அடைகிறது; இந்த ஸ்திதியில்தான் தேன் கூண்டில் சேர்க்கப்படுகிறது. தேனீக்கள் புஷ்பங்களிலிருந்து மகரந்தத்



படம். 1. தேனீயின் வாயமைப்பு.

தூளையும் ஆகாரமாக உட்கொண்டு, அவற்றையும் கூண்டிற்கு கொண்டுபோகின்றன. இம்மகரந்தத்தூளைச் சேர்ப்பதற்கு ஏற்றபடி, கால்களில் ஏராளமாக உரோமங்கள் இருக்கின்றன; கடைசி ஜோடிக் கால்களில் சாதாரண உரோமங்கள் தவிர, சீப்புப் போன்ற இரண்டு அமைப்புக்கள் உண்டு. தவிர, கடைசி கால்களின் மேல்பாகமாக, ஒவ்வொரு காலிலும் ஒரு சிறு குழியும், அதன் வாயைச்சுற்றிலும் நீண்ட உரோமங்களும் இருக்கின்றன; இவ்வமைப்பை மகரந்தக்கூடை (pollen-basket) என்று கூறுகின்றனர்; ஏனெனில் இதில் தான் தேனீயானது மகரந்தத் தூளை வெளியே யிருந்து தன் கூண்டிற்குக் கொண்டு போகிறது.



படம். 2. தேனீயின் கால்கள்.

தேனீயானது தேனைப் பருகும்பொருட்டுப் புஷ்பத்தினுட் செல்லும்போது அதன் தேகம் முழுவதிலும் மகரந்தத்தூள் ஒட்டிக் கொள்ளும். புஷ்பத்திலிருந்து அது வெளியே வந்தவுடன், தன் பின்கால்களிலுள்ள சீப்புக்களினால் மகரந்தத் தூள்களை யெல்லாம் ஒன்று சேர்த்துத் திரட்டி, மகரந்தக்கூடையிலேயே போட்டுக் கொள்ளும். தேனீக்களுடைய இரக்ஷணத்திற்காக, அவற்றின் உதரபாகத்தில் பின்புறமாக ஒரு விஷப்பையும் அத்துடன் சம்பந்தப்பட்ட ஒரு விஷக்கொடுக்கும் இருக்கின்றன.

(தொடரும்)

# இந்தியா உண்டானது எப்படி?

டி. என். முத்துஸ்வாமி ஐயர்—பி. என். அப்புஸ்வாமி ஐயர்

(59-ம் பக்கத்தொடர்ச்சி)

இத்தகைய உருண்டை வடிவமான காற்றுப் பிண்டம் ஒன்றி லிருந்துதான் பூமியானது இறங்கித் தோன்றியது. மிகவும் அத்யுஷ்ணமான காற்றுப் படலமானது சிறிது சிறிதாய்ச் சூடு குறைந்து போயிற்று. பிறகு முதன் முதலில், அழுத்தமுள்ள காற்று உறையைப் பூண்ட, ஜ்வலிக்கின்ற, உருகிய உருண்டை வடிவத்தைப் பெற்றது. பின்பு உள்புறம் திரவப் பொருளேயும் மேலே கடினப் பொருளாலாகிய பொருக்கையும்—ஓட்டையும்—உடைய உருண்டையாயிற்று. இந்த மேல் ஓடானது ஆக்கினேயக் கற்பாறைத் தொகுதியாய்த்தான் இருந்திருக்க வேண்டும். இப்பொழுது உலகில் காணப்படும் பாறை அமைப்புக்கள் எல்லாவற்றுக்கும் ஆதாரமாவும் அஸ்திவாரமாகவும் இருப்பது இப்பாறைதான் என்று தோன்றுகிறது. பூமி இன்னும் சுருங்கியபோது, மேல்ஓட்டின் மேல்மட்டமானது சுருக்கு விழுந்து மேடு பள்ளமாகக் காணத் தொடங்கிற்று. சற்றேறக்குறைய இதே சமயத்தில், சுற்றிலுமுள்ள வாயு மண்டலத்திலிருந்த நீராவிச் செறிவானது இறங்கிக் காற்றென்னும் நிலைமையை இழந்து, அழுத்தமுள்ள காற்றினின்றும் வேருகப் பிரிந்து, நீரென்னும் நிலைமையைப் பெற்று, மேற்கூறிய சுருக்கல்களால் ஏற்பட்ட பள்ளங்களில் விழுந்து தங்கிற்று. முதலில் தோன்றிய ஆதிக் கடல்கள் யாவும் இவ்வாறுதான் உண்டாயின. மிகவும் பழைமையான அக்காலத்திலே, உலகமே குழந்தைப் பருவத்திலிருந்த பொழுது, இந்தியாவென்னும் பிரதேசமானது உலகத்தின் மற்றப் பாகங்களிலிருந்து வேருகப் பிரிந்து காணவில்லை என்பது உறுதி. அக்காலத்திலே பூமியானது ஆக்கினேயப் பாறையினல் அமைந்த மேலோடு ஒன்று உடையதாயிருந்தது. அதிலே இங்கும் அங்கும் சிற்சில கடல்கள் காணப் பட்டன. இதுதான் புராதன உலகம் அளித்த காட்சி. ஆதிக் கடலின் அலைகள் ஆக்கினேயப் பாறையாகிய நிலத்தை இடைவிடாது மோதித் தாக்கிப் புடைத்துத் தகர்த்து வந்தன. சூரியனது வெம்மையும் பாறையை உடைக்க முயன்றது. அவ்வாறு வெம்மையால் உடைபட்டுத் தகர்ந்து போன கற்களைப் பெரும் மழைப் பிரவாகங்கள் அடித்துக் கொண்டு போய்க் கடலெனும் பள்ளங்களில் தள்ளின. ஸெகண்டெரி

அல்லது இரண்டாந் தரப் பாறைகள் எனப்படும் ஜலப்பாறைகள் இவ்வாறுதான் உண்டாயின. உட்புறம் சூடுமிகுந்துள்ளதாயும் புதிதாய்ப் பிறந்ததுமான பூமியானது இந்த ஜலப்பாறைக்குள்ளே உருகிய கற்பிரவாகத்தை இஞ்செக்ஷன் செய்வதுபோல் செழிப்பாக பாய்ச்சிற்று. அதனால் அது ஜலப்பாறை என்னும் அடையாளமே தெரியாதபடி அவ்வளவு உருமாறிவிட்டது. இப்படி உரு மாறிய பாறைகளுக்கு மெடமார்பிக் பாறைகள் அல்லது உரு மாறிய பாறைகள் அல்லது வேற்றுருப் பாறைகள் என்று பெயர். இப்பேர்ப்பட்ட பாறைகள் இந்நாளிலும் இந்தியாவிலே அநேக இடங்களில் ஆதிப்பாறைகளாகிய ஆக்கினேயப் பாறைகளின் மீது கிடப்பதைப் பார்க்கலாம்.

ஆனால், இவை பூமிமட்டத்தோடு மட்டமாய்ச் சமமாய் இருப்பதில்லை. இவை அநேகமாக மடிந்து மடிந்து அலைபோல் சுருங்கிச் சுருண்டு தோன்றுகின்றன. மேலும் அந்தச் சுருக்கல்களின் உச்சிகளும் தலை சீவப்பட்டன போலத் தோன்றுகின்றன. பாறைத் தொகுதிகள் இலேசாக மடிந்துவிடமாட்டா. மிகவும் அதிகமான அளவில் உள்ள அழுத்தத்தினால் நசுக்குண்டால் மட்டிலுமே அவைகளில் மடிப்புக்கள் விழமுடியும். அம்மடிப்புக்களின் சிகரங்களும் காற்று மழை போன்ற இயற்கைத் தொழிலாளிகளின் வேலையாலன்றி மழுங்குவதில்லை. ஆகவே, ஆதிக்கடல்கள் நிலங்களாயின; நினைக்க இயலாத அழுத்தங்களுக்கு உட்பட்டன; உருகிய பாறையின் இஞ்ஜெக்ஷன்களைப் பெற்றன; பிறகு மேல்மட்டத்தில் அரிப்புண்டன; என்பனவெல்லாம் வெளிப்படை. பூதத்துவ கால நிருணயத்தில் ஆர்க்கேயியன் தார்வார் யுகம் என்று பெயரிடப்பட்ட ஒரு பெருங்காலப் பகுதியிலே இவை யாவும் நடந்திருக்கவேண்டும்.

இந்தியாவென்று அழைக்கப்படும் பிரதேசம் இப்பொழுது இருக்கிற இடமானது முன்னொரு காலத்தில் ஓரளவு நீருள் மூழ்கியும் ஓரளவு நிலமாக இருந்தும் வந்தது. அதில் நீருள் கிடந்த பிரதேசமானது பின் ஒரு காலத்தில் நீரை விட்டுக் கிளம்பி வெளியே தோன்றிற்று. அப்படித் தோன்றிய நிலமானது, அப்பண்டைக் காலத்திலே சீதோஷ்ண நிலைகளாலும் காற்றாலும் மழையாலும் தாக்குண்டபொழுது, கடலின் அடிப்புறத்தில் கிடந்த காலத்தில் திரட்டி வைத்திருந்த பொருளிற் பெரும்பான்மையை இழந்து விட்டது. இதன்பிறகு பண்டை நிலமும் புது நிலமும் ஆகிய இருவகை நிலங்களும் ஒன்றாகக் கடலுள் ஆழ்ந்து விட்டன. அடுத்ததாகிய புராண யுகத்திலே கடல்கள் தோன்றியது இதனால் தான். இக் கடல்களில் மேன் மேலும் வண்

டல்கள் படிந்தன. முன்னால் தலைகளை இழந்தன வென்று கூறப்பட்ட வண்டல் மடிப்புக்களின் மீது இவ்வண்டல்கள் படிந்து வந்தன. இப்படி நடந்தது அறுபது கோடி வருஷங்களுக்கு முன்பிருக்கலாம் என்று ஊகிக்கப் படுகிறது. அப்படி அக்காலத்தில் புதிதாய்ப் படிந்த வண்டல்கள்தாம் கடப்பை கர்நூல் திருப்பதி முதலிய மலைகள் யாவும். அண்டையிலுள்ள நகரி மலையும் கூட இவைதாம். ஆதலால் தென் தீபகற்பத்தின் கீழ்பக்கத்தின் நடுப் பாகமானது அக்காலத்திலே நீரினுள் மூழ்கியிருந்திருக்கவேண்டும். மத்திய இந்தியாவும் விந்திய மலைப் பிரதேசமும் இப்பேர்ப்பட்ட பாறைகளாலேயே உண்டாக்கப் பட்டனவாய்க் காணப்படுகின்றன.




புராண காலத்து இந்தியா.

இதனால், அந்த இரண்டு பிரதேசங்களிலும்கூடக் கடல்கள், பரவி யிருந்தன என்பது தெரியவருகிறது. இம்மூன்று முக்கியப் பிர

தேசங்களுக்கும் இடையேயுள்ள சிற்சில இடங்களில் இதேமாதிரியான பாறைத் திட்டுக்கள் காணப்படுகின்றன. ஹிமய மலைப் பிரதேசத்தில் சிற்சில இடங்களிலும் இதே மாதிரியான பாறை காணப்படுகிறது. இதிலிருந்து ஊகிக்கக்கூடிய தென்னவென்றால் நாட்டின் நடுவிலுள்ள இம்மூன்று கடல்களும், ஏதாவது ஒரு காலத்தில், ஒன்றாய்ச் சேர்ந்து ஒரே பெருங்கடலாக இருந்திருக்க வேண்டும் என்பதுதான். அக்கடலின் தென்கரையானது இப்போது சென்னையுள்ள இடம் வரையில் எட்டியிருக்கலாம். அதன் வட கரையோவெனில் இமயமலையின் உன்னத சிகரங்கள் இப்பொழுது தோன்றும் பிரதேசத்துக்கு அப்பால்வரை எட்டியிருக்கலாம். புராணயுகம் எனப்படும் பெருங்காலம் முழுவதிலும் சமுத்திரமானது ஒரே மாதிரியான கரையை உடையதாய்த்தான் இருந்து வந்தது என்று எண்ணக்கூடாது. இப்பெரும் காலத்தினிடையில் சில பிரதேசங்கள், வேறு சில பிரதேசங்களைக் காட்டிலும் சீக்கிரத்தில் நிலமாக ஆயின. இப்படி நிலமாக மாறிய பிரதேசங்களில் சில மீண்டும் தாழ்ந்துபோய்க் கடலுள் ஆழ்ந்து கடலாயின. புராண யுகத்திலே எரிமலைகளால் பலவகைக் குழப்பங்கள் உண்டாயின. இந்தக் காலத்திலே உண்டாகிய எரிமலை சம்பந்தமான பாறைகளினாலேதான் கியாதிபெற்ற கோல்கொண்டா வைரங்கள் படிக வடிவம் பெற்று உண்டாயின என்று ஊகிக்கப்படுகிறது. இதற்குப் பின் தோன்றிய யுகங்களிலே இந்தப் பாறையானது தகர்ந்து உதிர்ந்துபோனபொழுது வைரங்களும் இவற்றினிடையிலிருந்து தனியாகிப் பிரிந்து காலக்கிரமத்தில் உண்டாகிய வண்டல் பாறையில் போய்ப் படிந்து அந்தப் பாறையோடு பாறையாய் ஆகிவிட்டது.

அடுத்த சில மில்லியன் வருஷங்களிலே, இந்தப் புராணக்கடல் இருந்த இடத்திலே அதற்குப் பதிலாக ஓர் பெரும் நிலப்பரப்புத் தோன்றிற்று. கடலானது வடபுறமாகப் போய்விட்டது. ஹஸாரா காஷ்மீரம், ஸ்பீட், காட்வால், குமயூன், நேபாளம் என்னும் இவை யாவும் அதன் தென்கரையாக இருந்தன என்பதிலிருந்து அக்கடல் எவ்வளவு தூரம் வடக்கே போய்விட்டது என்பது தெரிய வரும்.

மேற்குத் திக்கிலே அக்கடலானது ஆப்கானிஸ்தானம் ஹிந்து குஷ் என்னுமிவை வரையில்தான் எட்டியிருந்தது. ஐரோப்பாக் கண்டத்துக் கடல்களோடு அது ஒட்டவில்லை. கீழ்ப்புறத்திலே அது சைனாவின் வழியாக வட அமெரிக்கா வரையில் நீண்டிருந்தது. ஸால்ட் ரேஞ்ஜ் எனப்படும் உப்புமலைத் தொடராக இப்பொழுது

இருக்கும் ஒரு பிரதேசத்திலே அது வளைகுடாவாகப் புகுந்திருந்தது. புராணக்கடல் எல்லை குறைந்து சுருங்கிய ஒரு காலத்திலே தான் முதன் முதலில் உயிர் என்பது தோன்றிற்று. இந்த பூதத்துவ கால நிர்ணயப்படி இவ்வாறு உதயமாகிய காலத்தைத் திராவிடயுகம்

திராவிட காலத்து இந்தியா.

என்று கூறலாம். இந்த யுகத்திலே தோன்றிய உயிர்ப்பிராணிகள் எல்லாம் முதுகெலும்பு இல்லாதவை என்பது இந்த யுகத்தை முக்கியமாகக் குறிக்கும் ஒரு விசேஷ அறிகுறியாக கருதப்படுகிறது.

கேம்ப்ரியன் என்று சொல்லப்படும் ஒரு யுகத்தில் மட்டிலும் தான் மேற்கூறிய முறையில் நிலமும் கடலும் பிரிந்து தோன்றின. காரணம் என்னெனில், மத்திய ஆசியாக் கடலானது மேற்கு முகமாகச் செல்லத் தொடங்கியதும் ஸால்ட் மலைத் தொடரினின்று வளைகுடாவானது பின்னிடத் தொடங்கிற்று. பிந்திய திராவிட காலங்களிலே மத்திய ஆசியக் கடலானது ஐரோப்பியக் கடல்களோடு ஒன்றுயச் சேர்ந்து விட்டதாகக் காணப்படுகிறது. இந்தக் கடலுக்குத் தென்புறத்திலே ஒரு பெரும் நிலப்பரப்பு நீண்டு கிடந்தது. அந்தப் பரப்பின் சிற்சில பகுதிகள்தாம் இக்காலத்திலே ஆப்பிரிக்காவாகவும், இந்தியாவாகவும் ஆஸ்ட்ரேலியாவாகவும் தென் அமெரிக்காவாகவும் தோன்றுகின்ற நிலங்கள் யாவும்.




பேர்மியன் காலத்து இந்தியா.

மத்திய கரிக்காலம் என்று செல்லப்படும் ஒரு பெருங்காலத்தினிடையில் நமது தேச அமைப்பிலே, பூகோள வடிவத்திலே, பிரம்மாண்டமான மாறுபாடுகள் உண்டாயின, அந்தக் காலம்தான்

இந்திய பூதத்துவ சரிதத்திலே அடுத்தது எனக் கருதத் தகும் ஆரிய யுகத்தின் உதய காலத்தைக் குறிக்கிறது என்று கூறலாம். மேற்குத் திக்கிலிருந்து பெருகிய பெரும் பிரவாகமானது வட இந்தியாவை யும், திபெத்தையும், சீன தேசத்தின் பெரும் பகுதியையும் நீரினுள் மூழ்கச் செய்தது. இதனால் மத்திய ஆசியக் கடலானது முன்னைக் காட்டிலும் அகன்றதாய்க் காணப்பட்டது. 'டெதிஸ் கடல்' என்பது உண்டாகத் தொடங்கியது. உலகத்தை வளையம் போல் சூழ்ந்து வட கண்டத்தைத் தென் கண்டத்தினின்று பிரித்த டெதிஸ் ஆனது வெகு காலமாக உள்ளது. அது மத்திய கார்பானிபெரஸ் காலம் முதல் கடைக் கிரெடேஷஸ் காலம் வரையில் இருந்தது. இப்பெரும் காலத்திலே உண்டாகிய வண்டல்கள் முழுவதும் அத னுள் வந்து வீழ்ந்து படிந்து தங்கின. அதனால் இந்த நெடுங்காலத் துள்ளே வாழ்ந்து வந்த பலவகைப் பிராணிகளின் சின்னங்களையும் தாவரங்களின் சின்னங்களையும் வெகு ஜாக்கிரதையாகவும் பத்திர மாகவும் அது வைத்துக் காப்பாற்றி வந்தது. கடல்வாழ் உயிரை நன்கு காட்டக்கூடிய அழகிய படப்புத்தகமாக அது ஆகி வந்தது.

மிகப் பெரிய தெற்குக் கண்டத்திலே ஒரு சிறு பகுதியாக இருந்தது இந்தியா. அந்தத் தெற்குக் கண்டத்திலிருந்துதான் பிற் காலத்திலே இந்தியா மட்டுமல்ல ஆப்பிரிக்காவும், ஆஸ்ட்ரேலியா வும், தென் அமெரிக்காவும் பிரிந்து தோன்றின. மேல் கார்பானி பெரஸ் என்று சொல்லப்படும் ஒரு காலத்திலே நாட்டின் முக்கிய மான அமைப்புக்கள் யாவையெனில் தக்காணத்திலிருந்து இமய மலைத்தொடருக்கு அப்புறம் வரை நீட்டிக் கொண்டிருந்த மிகச் சிறந்த ஒரு மலைத்தொடரும், உயர்ந்த பீடபூமிகளால் பிரிக்கப்பட்ட நான்கு மிகப் பெரிய பள்ள பூமிகளும்தான். அந்தப் பெரும் மலைத் தொடரின் ஒரு சிறு அமிசமே இப்பொழுது ஆரவல்லி மலைத் தொடராயிருக்கிறது. இப்பொழுது ஸாத்பூரா மலைத்தொடரா யிருக்கும் இடம் முழுவதும் அப்பொழுது ஒரு பெரும் விஸ்தீரண முள்ள பள்ள பூமியாயிருந்தது. இப்பொழுது வார்தா கோதாவரிப் பிரதேசமாயிருப்பது மற்றொரு பள்ள பூமியாயிருந்தது. இப் பொழுது மகாநதி பாய்ந்தோடும் பிரதேசம் மூன்றாவது பள்ள பூமி யாய் இருந்தது. இப்பொழுது லேபான் பள்ளத்தாக்கு, தாமுதா பள்ளத்தாக்கு, ராஜ்மகால் மலைகள், கிரிதீப் நிலக்கரிச் சுரங்கம் என் னும் இவை யாவும் கொண்ட ஒரு பெரும் பிரதேசம்தான் அக் காலத்திலே உள்ள நான்காவது பள்ள பூமி.

(தொடரும்)

# பெரிபுளூஸ்

ச. சோமசுந்தர தேசிகர்

(28-ம் பக்கத்தொடர்ச்சி)

7. அரபிக்குடா இந்த இடத்திலிருந்து கீழ்ப்புறமாகச் சென்று அவலிடஸ்குடா ஓரமாகக் குறுகுகிறது. அதேகரையோரமாகக் கிழக்கே 4000 ஸ்டேடியா சென்றால் பல சேய்மைத்துறைகள் (*Far-Side ports*) இருக்கின்றன. அவை பெர்பர் நாட்டு அங்காடிப் பட்டினங்கள்; நல்ல துறைமுகங்களல்லவாயினும் கப்பல் நிற்கவுதவுமிடங்களாகும். முன்னே யிருப்பது அவலிடஸ்[1] (*Avalites*); இந்த ஊருக்கு அரேபியாவிலிருந்து எளிதிற் பிரயாணஞ் செய்யலாம். இங்கே அவலிடஸ் என்ற பேருடைய ஒரு சிறிய சந்தையூர் உண்டு; இவ்வூருக்குத் தோணி தெப்பங்களிலேறிச் செல்ல வேண்டும். பலவிதமான கண்ணாடிகள், டயஸ்போலிஸிலிருந்து (*Dios-polis*) புளிப்புத் திராட்சை ரஸம்,[2] பெர்பர்களுக்காகப் பலவித பருத்தியுடை, கோதுமை,[3] சாராயம், சிறிதளவு தகரம்[4] இவை

---

7. (1) இதுபோது ஸெயிலா (Zeila) என்று பேர் பெறும். 11°20'N., 43°28' E. இது பாபல்மண்டப் ஜலசந்தியிலிருந்து 79 மைல் தூரத்திலிருக்கின்றது. பக்கத்திலுள்ள ஒரு கிராமத்துக்கு அபலிட் (Abalit) என்றே பேர்.

(2) மூல வட்டில் ஆம்பாகியோன் (Omphakion) என்று எழுதப்பட்டிருக்கிறது. 'ஆம்பாகியோன்' என்பது அமனியன் திராட்சை, ஒலிவைகளிலிருந்து வடிக்கப்படும் ஓர் எண்ணெய் என்றும் இது மண்ஜாடிகளில் சேமிக்கப்பட்டுப் பின்னர்ச் செப்புப் பானைகளில் வைக்கப்படுகிறது என்றும் பார்வைக்குச் சிவப்பாயும் உருசியற்ற உறைப்புடையதாயு மிருக்குமென்று பிளினி கூறுகிறார். இது வாய்ப்புண், வயிறு கடுப்பு, இரத்தக் கக்கல் முதலான நோய்கட்குத் தகுந்த மருந்து. பற்களை வெண்மையாக்கக்கூடியது.

(3) கோதுமை முதலில் காட்டுத் தானியமாக விருந்த ஒரு பழைய தானியம். கி. மு. 2700-ல் சீனர் பயிரிட்டனர். சுவிட்ஸர்லாந்தில் கி. மு. 1500ல் பயிரிடப்பட்டது. எகிப்திய கோபுரங்கள் ஒன்றில் காணப்பட்ட கோதுமையின் வயது கி. மு. 3350 எனக் கணிக்கப்படுகின்றது.

(4) தகரம் இது இங்கிலந்து தேசத்திலிருந்து வந்ததென்பர் சிலர். வடமொழி கஸ்திரா என்ற சொல்லுக்கும் கிரேக்க கஸ்ஸிதரோஸ் என்ற சொல்லுக்குமுள்ள ஒற்றுமையைக்கொண்டு லாஸன், ஆபர்ட் முதலாயினர் இந்தியாவைச் சார்ந்த மலாக்காவிலிருந்து வந்ததென்பர்.

இறக்குமதியாகின்றன. இங்கிருந்து வாசனைத் திரவியங்கள், சிறிதளவு யானைத் தந்தம், ஆமையோடு, உயர்ந்த குங்கிலியம், சாம்பிராணி இவை ஏற்றுமதியாகின்றன; இவற்றைப் பெர்பர்நாட்டினரே சில வேளைகளில் ஒகிலிஸ் (*Ocelis*) முசா (*Muza*) துறைமுகங்களுக்குத் தெப்பங்களிற் கொண்டுசெல்கின்றனர். இந்த இடத்தில் வசிக்கும் பெர்பர்கள் கட்டுக் கடங்கா முருடர்கள்.

8. அவலிடஸை யடுத்து எண்ணூறு ஸ்டேடியா பயணத்தில் அவ்வூரைவிட மேலானதும் மலவோ[1] என்ற பேருடையதுமான ஓர் அங்காடிப்பட்டின மிருக்கிறது. கப்பல் கடலிற்றான் தங்கவேண்டுமாயினும் கிழக்கில் நின்றோடும் ஒரு சிறுமுனை காப்பாக விருக்கின்றது.[2] இந்நாட்டினர் சாதுவான தன்மையினர். முற்கூறிய பண்டங்களோடு அர்சிநாயிலிருந்து தைத்ததும் சாயம் போட்டதுமான பலவகைத் துணிகளும், அங்கிகளும், மற்றும் குவளைகளும், சிறிது செப்புத் தகடுகளும், இரும்பும், பொன்வெள்ளி நாணயங்களும் வருகின்றன. குங்கிலியம், உள்நாட்டுச் சாம்பிராணி[3], கெட்டி இலவங்கம், டோகா,[4] இந்திய குங்கிலியத் தைலம்,[5] (*Indian Copal*) மாசிர்,[6] அடிமைகள் இவைகள் ஏற்றுமதியாகின்றன.

---

8. (1) மலவோ (Malao) என்பது இதுபொழுது பெர்பரா (Berbera) என்று வழங்குகிறது. 10°25' N., 45°5' E. இது பிரிட்டிஷ் சோமாலி நாட்டுத் தலைமைப் பட்டினம்.

(2) ஒரு பெரிய உப்பங்கழியை யுடையது. அது அதிக ஆழமில்லாததால் கப்பல் ஆழமான விடத்தில் நிற்கவேண்டி யிருக்கிறது.

(3) இந்தப் பண்டம்தான் உண்மையான சரக்கு எனத் தெரிகிறது. அரேபியாவிலுண்டாகும் சாம்பிராணி அவ்வளவு விசேஷமானதன்றெனக் கருதப்படுகிறது.

(4) Duaca. ஒருவகைச் சாம்பிராணி. இப்பொழுதும் டுகா (Duka) என்ற வணிகப் பெயரோடு ஏடன் நகரத்தில் ஒருவகைச் சாம்பிராணி விற்பதாகக் கிளாஸர் கூறுகின்றார். சாம்பிராணி மரங்கள் மலையில் 4000, 6000 அடி உயரத்தில் ஏராளமாக வளர்கின்றன என்று பர்ட்டன் கூறுகின்றார்.

(5) மூல ஏடு கங்கமோன் (Kankamon) என்று கூறுகிறது. இலவங்கம் உண்டாகிற தேசத்திலிருந்து வருவதாகப் பிளினி கருதுகிறார். டயோஸ்கோரிடஸ் குங்குலியம் போன்ற மரங்களிலிருந்து வடியும் பிசின் என்று எழுதுகிறார். தளகர்த்தர் யூல் இது இந்தியாவிலுள்ள வெள்ளைக் குங்கிலிய மரத்துக் 'கோபால்' என்று எழுதுகிறார். இது வார்னிஷிக்கு உபயோகப்படுகிறது.

(6) மாசிர் (Macir) என்பது ஒருவகை வாசனைப்பட்டை யென்று டயோஸ்கோரிடஸ் கூறுகின்றார். இந்தியாவினின்று கொண்டுவரப்பட்ட ஒரு சிவப்பு நிறமுள்ள பட்டை யென்பர் பிளினி. இந்தப் பட்டையைப் பொடிந்து தேனோடுகலந்து கொடுக்க வயிற்றுக் கடுப்பு நிற்குமாம். நம் நாட்டில் இதனைத் திரவியப்பட்டை யென்பர்.

9. இங்கிருந்து இரண்டு மூன்று நாட்பயணம் சென்றால் முண்டுஸ்[1] அங்காடிப்பட்டின மிருக்கிறது. ஊருக்கு முன் ஒரு தீவு இருப்பதால் அதன் பின்னே கப்பல்கள் தங்கத்தகுந்த வசதி யேற்பட்டிருக்கின்றது. முற்கூறிய பண்டங்களே இங்கும் இறக்கு மதியாகின்றன. முன்கண்ட ஏற்றமதிச் சரக்குகளோடு மொகரத்து[2] என்ற வாசனைப் பண்டமும் ஏற்றுமதியாகின்றது. இங்கு வாழும் வணிகர் சச்சரவிடும் குணமுடையவர்.

10. முண்டுஸை விட்டு இரண்டு மூன்று நாட்பயணம் கிழக்கே சென்றால் மோசிலம்[1] என்ற பட்டினமிருக்கிறது. இதனில் கடற்கரை (*Beach*) உண்டு; ஆனாலும் கப்பல் தங்க வசதியில்லை. முற்கூறியவைகளோடு வெள்ளித் தட்டுக்களும், சிறிது இரும்பும், கண்ணாடியும் இறக்குமதியாகின்றன. இங்கிருந்து இலவங்கம்,[2] வாசனைப் பிசினிகள், வாசனைத் திரவியங்கள், சிறிது ஆமையோடு, மொகரத்து, உள்நாட்டுச் சாம்பிராணி, மருப்பு, குங்கிலியம் இவை கள் வெளியேறுகின்றன.

---

9. (1) முண்டுஸ் (Mundus) என்பது 10°52'N., 46°50'E.லுள்ள பந்தர் ஹேய்ஸ் (Bandar Hais) என்ற ஊராக இருத்தல் கூடும்.

(2) Mocrotu. ஒருவகை உயர்ந்த சாம்பிராணி. அரபு பாஷையில் ம்கேரோத் Mghairot என்றும், மஹ்ரி mahri பாஷையில் ம்கர் mghār என்றும் பெயர். சோமாலி பாஷையில் மோகர் mokhr என்று பெயர். இது கிரேக்க பாஷையில் வந்தபோது மொக்ரத்து என்றாயிற்று.

10. (1) Mosyllum. இது 11°28'N.,49°39'Eல் உள்ள ராஸ் ஹன்டரா (Ras Hantara) என்ற ஊரென்பது பலர் கொள்கை. கிளாஸர் ராஸ்கம்ஸிர் (Ras khamzir) என்ற ஊராக விருக்கலாமென்கின்றனர். அட்லான்டிக் மகா சமுத்திரம் இங்கிருந்து ஆரம்பமாகிறதென்று பிளினி எழுதியது கவனிக்கத்தக்கது.

(2) இலவங்கம்: மூல ஏட்டில் காஸியா (Kasia) என்றிருக்கிறது. இது எபிரேய பாஷையில் கேஸியா (Kezia) என்று பேர் பெறும். உரோமர் காலத்தில் இச்சொல் நீட்டுப்போக்கில் உடைத்த மரத்தைக் குறிக்கும். பூங்கொழுந்தையும் இளம்பட்டைகளையும் சின்னமன் என்பர். எபிரேயம் கெனெஹ் (Kheneh)—குழாய் (pipe). சின்னமன், காஸியா (Cassia) என்ற இரு சொற்களும் இந்தியா, திபெத்து, பர்மா, சீனம் இந்த நாடுகளி லுள்ள லாரல் வகை மரங்களின் பூங்கொழுந்து, பட்டை, மரம் இவற்றைக் குறிக்கும். இவற்றை ஐரோப்பியர் பல பெயரிட்டு வழங்கினர். எகிப்தி யருக்கு கி. மு. 1,500லேயே இலவங்கம் தெரிந்ததொரு பண்டமாகும். கிரேக்க உரோமர்கள் இவற்றைத் தூபமாகவும் வாசனைப்பண்டமாகவும் உப யோகித்துவந்தனர். அவர்கட்கு இப் பண்டம் எங்கிருந்து வந்ததென்று தெரி யாது. மலையாளம், இலங்கைத் தீவுகளிலிருந்து ஏற்றுமதியானவை கருவா

11. மோவஸில்லத்திற்குக் கிழக்கே இரண்டு நாள் பயணம் போனால் சிறுநீலநதியை[1] யடைவோம்; நல்ல தண்ணீர் ஊற்றும், தோப்பும் கரிமுனையு[2] மிருக்கின்றன. இங்கிருந்து கரை வளைந்து குடாவாகிவிடுகிறது. கரியாறு என்ற ஓராறு வந்து கடலில் கலக்கின்றது. அங்கே அகன்னி[3] (*Acannæ*) என்ற தோப்பும் காணப்படும்; நல்ல முதற்றரமான சாம்பிராணி ஏராளமாகக் கிடைக்கின்றது.

12. இந்தத் துறைமுகத்துக்கப்பால் கரை தெற்கு முகமாகத் திரும்புகிறது. அவ்விடத்தில் பெர்பர் நாட்டின் எல்லைக் கோடியான முனையொன்று காணப்படும்; அதற்கு நறுமண முனை[1] (*Cape of spices*) யென்று பெயர். அருகே அங்காடிப்பட்டின[2] மொன்றும் இருக்கிறது. இந்த இடம் வடக்கு நோக்கி யிருப்பதால் கப்பல் நங்கூரம் பாய்ச்சிநிற்பது சில வேளைகளில் கஷ்டமாகிறது. புயல் அங்கே அதிகமாக வீசும்; அதனை முன்னறிவிக்கும் குறியாகக் கடல்

---

மரத்தின் பட்டையும் கொழுந்துமாகும். இவற்றை மென்றபோது இவை மதுரமும் உரைப்பும் நறுமணமும் உடையனவாயிருக்கும். இன்றும் தென்னாட்டில் கருவாய்ப்பட்டையான இலவங்கப்பட்டையை மாமிசத்தோடு கலந்துண்கின்றனர். உரோம கிரேக்கர்களும் அந்நாளில் இப் பண்டங்களை அதிக விலை கொடுத்து வாங்கி உபயோகித்து வந்தனர்.

11. (1) டோக்வினு (Tokwina) நதி யென்பர் முல்லர். மூல ஏட்டில் நீலபோதமியன் (Neilopotamion) என்றிருக்கிறது.

(2) கரிமுனை. Cape Elephant. Ras-el-Fil என்பது. 12°·o'N, 50°32'E. குவார்டாபியூ (Guardafui) முனைக்கு 40 மைல் மேற்கிலிருக்கிறது. முனை செல்வது யானையைப்போல் இருப்பதால் இப்பெயரிட்டனர் போலும்.

(3) அகன்னி யென்பது இப்பொழுது பந்தர் உலூலா (Bandar Ululah) வாகக் கருதப்படுகிறது. இந்தத் துறைமுகத்தில் கி.பி. 1611-ல் கப்பித்தான் சரிஸ் (Captain Saris) சென்றனரென்றும், அவ்விடம் கடலில் கலக்கும் ஆற்று முகத்துவாரத்தில் ஒரேசமயத்தில் மூன்று கப்பல்கள் நிற்க இடமிருக்கிறதென்றும், அங்கே பலவகை நறுந்தூபப் பண்டங்கள் இந்தியரால் வாங்கப்படுகின்றன வென்றும் எழுதியிருப்பதாக மக்கிரிண்டில் கூறுகிறார்.

12. (1) குவார்டாபியூ என்ற ராஸ் அஸிர் (Ras Asir). 11°·50'N., 51°16 E. இதனை ஸ்டிராபோ தென்கொம்பு (Southern-Horn) என்பர்.

(2) கிளாஸர் இதனை ஓலக் (Olok) என்ற ஊராகக் கருதுகிறார். இங்கே ஐவிஸ் நீலுஸ் என்ற நதிகள் ஓடுவதாயும், சாம்பிராணியும், குங்குலியமும் உண்டாவதாயும், அதனோடு இலவங்கமும் கிடைப்பதாயும் ஸ்டிராபோ எழுதியுள்ளார்.



பெரிபுளூஸில் கண்ட பட்டினங்கள்
ஐரோப்பா
கருங்கடல்
ஆசியதுருக்கி
மத்தியதரைக் கடல்
மெஸபொடோமியா
ருஷியா தேசம்
பார்ஸிகம்
அரேபியா
ஆபகானிஸதானம்
திபெத்
சீனு
பர்மா
சீயம்
அரபிக்கடல்
கங்கை நாடு
நருமதை
பங்காளக் குடா
சென்னை
இந்து மகா சமுத்திரம்
சிங்கபூர்
போரனியோ
ஜாவா
ஆஸதிரேலியா
சாந்தமகா சமுத்திரம்
(PACIFIC OCEAN)

கொந்தளித்து நிறம் மாறும். அக்காலங்களில் கப்பல்கள் டபீ[3] (*Tabæ*) என்ற முனைக்குச் சென்று காப்பாற்றிக்கொள்ளும். இங்கும் முற்கூறிய பண்டங்களே இறக்குமதியாகின்றன. இங்கிருந்து சாம்பிராணியும், இலவங்கமும் அதன் வகைகளான கிஸிர் (*Gizir*) அஸிபா (*Asypha*), அரபோ (*Arebo*). மக்லா (*Mugla*), மோடோ (*Moto*) என்பவைகளும் ஏற்றுமதியாகின்றன.

13. டபீக்குக் கீழ் நானூறு ஸ்டேடியா கழித்து பனோ[1] (*Pano*) என்ற ஊர் இருக்கிறது. அதற்குக்கீழ் கூராகச் செல்லும் ஒரு முனைபோரமாய் 400 ஸ்டேடியா சென்றால் ஓபோன்[2] (*Opone*) என்ற அங்காடிப்பட்டினமிருக்கிறது. இவ்விடங்களிலும் முற்கூறிய பண்டங்களே ஏற்றுமதியாகின்றன. ஓபோனில், அரபோ, மோடோ வகை இலவங்கம் ஏராளமாக உண்டாகின்றது. இங்கிருந்து எகிப்துக்கு நல்ல அடிமைகளும் கொண்டுபோகப்படுகின்றனர். மற்றவிடங்களிற் கிடைப்பதைவிட மேம்பட்டதான ஆமையோடும் கிடைக்கின்றது.

14. சேய்மையிலுள்ள இந்த வியாபாரஸ்தலங்களுக்கெல்லாம் எகிப்திலிருந்து எபிபி என்ற ஜூலை மாதத்தில் பயணம் போகின்றனர். கடலுக்கு அப்புறமுள்ள ஆரியகம்,[1] பாரிகஸா துறைமுகங்களிலிருந்து வழக்கமாகக் கப்பல்கள் வருகின்றன. அங்கிருந்து வரும் பண்டங்கள் கோதுமை, அரிசி, நெய், நல்லெண்ணெய், பருத்தியாடை, உடை, சர்க்கரைச் செடி[2] யிலிருந்து தேன்பாகு[3]

---

(3) இது முனைக்கு அருகிலுள்ளது.

13. (1) பனோ 11°12′ N., 51° 7′ E.ல் இருக்கிற ராஸ் பின்னு (Ras Binna) வாக இருக்கலாம்.

(2) ஓபோன் என்பது இப்பொழுது ராஸ் ஹாபூன் (Ras Haffun) என்று வழங்குகிறது.

14. (1) ஆரியகம். Ariaca. நம்நாட்டிற்கும் ஆபிரிக்கா தேசத்திற்கும் வெகுகாலமாக வியாபாரம் நடந்து வருவது உலகப் பிரசித்தம். நீலநதியும் அங்குள்ள பெரிய நீர்நிலைகளான விக்டோரியா நியான்சா முதலான இடங்களும் இந்தியப் பூர்விகர்களுக்குத் தெரிந்ததே.

(2) கரும்பை அவர்கள் அறியாததால் சர்க்கரைச்செடி யென்பர்.

(3) முற்காலத்தில் கருப்பஞ்சாற்றைக் காய்ச்சித் தேன்பாகாக வைத்துக் கொள்வது வழக்கம். இப்பண்டம் இந்நாட்டில் ஏராளமாக இருந்ததேயொழிய ஐரோப்பிய நாடுகளில் தெரியாதது. பிளினியே இது மருந்துப் பண்டமென்பர். அவர் காலத்திற்குப் பிறகுதான் ஐரோப்பிய நாடுகளில் தின்பண்ட மாயிற்று.

முதலியனவாம். [4]சிலர் இந்நாடுகளில் வியாபாரத்திற்காக வருகின்றனர். மற்றுஞ் சிலர் பண்டமாற்றலின் பொருட்டு வருகின்றனர். இந்தப் பட்டினங்களெல்லாம் ஓர் அரசனுக் குட்பட்டவை யல்லவாயினும் தனித்தனியான தலைவருக் குட்பட்டவை.

15. ஓபோனுக்கு அப்புறம் கடல் தென்புறமாக வளைகிறது; அங்கே முதலில் அஸனியா மணற்குன்றுகள் இருக்கின்றன; இந்தக் கடற்கரைப் பக்கம் கப்பல் தங்கக்கூடிய கப்பற் சாலைகள் இராவிடினும் கடல் ஆழமாக இருப்பதால் கப்பல் தங்கக்கூடும். இவற்றிற்குத் தென்மேற்கு முகமாக ஆறு நாள் பயணம் செல்லவேண்டும். பிறகு சிறிதும் பெரிதுமான கடற்கரைகள் ஓரமாக ஆறுநாள் பாய்விரித்தோடினால் முதலில் அஸனியா துறை முகங்கள் காணப்படும்; அவற்

---

(4) இந்நூலின் காலத்திற்கு 1800 ஆண்டுகட்குப் பின்னர், கி.பி. 1848-ல் சென்ற லெப்டினன்ட் கிரட்டன்டென் (Cruttenden) எழுதுவதாவது:—
'ஏப்பிரல் முதல் அக்டோபர் வரை இந்த இடம் பாழாகக் கிடக்கிறது. வியாபார காலம் தொடங்கியதும் நாட்டார் உள்நாட்டிலிருந்து கடற்கரையோரமாகச் செல்லுகின்றனர். யீமனிலிருந்து சிறு படகுகள் பிறர் வருவதன்முன் வியாபாரஞ் செய்ய விரைகின்றன. இரண்டு வாரத்திற்குப் பிறகு முஸ்கட், சுர், ராஸ்-எல்-கைமா, பஸோரா முதலான இடங்களிலிருந்து வியாபாரிகள் சரக்குகளை யேற்றிக்கொண்டு விரைந்தோடுகின்றனர். கடைசியாக போர்பந்தர், மாண்டவி, பம்பாய் நாடுகளிலிருந்து கொழுத்த பணக்காரரான பனியர்கள் தங்களுடைய கொடியா (kotias) என்ற மரக்கலங்களில் சரக்கேற்றி வந்து விற்றுவிட்டு, விற்றுப்போய்க் காலியான நெய் ஜாடிகளோடு திரும்புகின்றனர். இவர்களே வியாபாரத்தில் தங்களுடைய சாமர்த்தியத்தால் முன்னணியில் நிற்கின்றனர்.

'சந்தை மும்முரமாகவிருக்குங்கால் பல பாஷைகள் காதில்விழும். அங்கே தலைவர் ஒருவருமின்மையால் அந்நாட்டார் தங்கள் பலாபலங்களைக் கடற்கரை சென்று போரிட்டுத் தெரிந்துகொள்வர். சோமாலியும் கல்லனும் பஸ்ஸோரா, பக்தாது முதலிய பட்டணங்களிலிருந்து வரும் வியாபாரிகளோடு போரஞ் செய்வர். காட்டானன குடாபர்சி (Gudabarsi) தலையில் விசித்திரமான பாகை யணிந்து நெருப்புக்கோழி இறகுகளையும், சாம்பிராணி தூபவர்க்கங்களையும் பனிய வியாபாரிக்கு விற்பான். பனிய வியாபாரி தன் பண்டங்களைச் சிறுகச் சிறுகத்தான் வெளியில் காட்டுவான். மார்ச்சு முடிவில் கப்பல் இரண்டு மூன்று சேர்ந்து சேர்ந்து புறப்பட்டுவிடும். ஊரும் காலியாகிவிடும். இருபதினாயிரம் மக்கள் கூடியிருந்த ஓர் இடம் ஒருவன் கூட இல்லாமல் வெற்றிடமாகக் காணப்படுவது அதிசயமாக விருக்கும்.'

றுள் ஸராபியோன்[1] (*Sarapeon*) முதலாவது ; அடுத்தது நிக்கன்[2] (*Nicon*) ; அதன் பின்னர் பல நதி சங்கமங்களும் தங்குமிடங் களுமாக ஏழிடங்கள் காணப்படும் ; பின்னர் பிறலேயி[3] (*Pyralae*) என்ற தீவுகள் தென்படும். இதற்கப்பால் தென்மேற்குத் தெற்கு முகமாக ஒருபகலும் இரவும் ஓடினல் மெனுதியாஸ்[4] (*Menutheas*) என்ற தீவு காணப்படும் ; இது கரைக்கு 300 ஸ்டேடியா தூரத்திலிருக்கிறது ; இங்கே மரம் அடர்ந்திருக்கின்றது ; பல ஆறுகளும், பறவைகளும், மலையாமைகளும் இருக்கின்றன; முதலை களைத்தவிர்த்து வேறு காடுவாழ் விலங்குகளில்லை. முதலைகளும் மனிதரைத் துன்புறுத்துவதில்லை. இந்தத் தீவில் சந்துகளுக்கு நார் அடைக்கப்பட்ட தோணிகளும் ஒற்றை மரத்தில் தோண்டப்பட்ட சிறுபடகுகளும் உண்டு ; அவற்றி னுதவியால் நாட்டினர் மீனும் ஆமையும் பிடிக்கின்றனர். இங்கே அதிசயமான வகையில் கால்வா யில் கற்களுக்கிடையில் குச்சிகளால் கட்டிய கூடை யொன்றை வைத்து இவற்றைப் பிடிக்கின்றனர்.[5]

16. இரண்டு நாட் பயணத்துக்கப்பால் அஸனியா கண்டத்தின் கடைசித் துறைமுகமான ரப்தா[1] (*Rhapta*) இருக்கிறது. இந்தப் பெயர் அங்குள்ள படகுகளால் ஏற்பட்டது.[2] அந்த இடத்தில் யானை மருப்பும் ஆமையோடும் அதிகம். இந்தக் கரையோரமாக, கடற் கொள்ளைக்காரர் மிகுதி. அவர்கள் வலுத்த சரீரமுடையவர்கள் ஒவ்வொரு வகுப்புக்கும் தலைவர்களுண்டு. ஒரு பழைய வழக்கத்தை

---

15. (1) ஸிராபியோன் என்பது இதுபொழுது மொக்திஷு (Mogdishu) என்று வழங்குகிறது. 2°5'N., 45°25'E.

(2) நீக்கன் என்பது பராவா (Barawa)வாக விருக்கலாம். 11°.'N., 44°5'E.

(3) இவை பட்டா, மாண்டா, லமூ என்ற தீவுகள்.

(4) தெற்கே 8 டிகிரியிலுள்ள மொன்பியா (Monfiyeh) என்ற தீவாக இருக்கலாம். ஈண்டு குறிக்கப்பட்ட விஷயங்களை இந்நூலாசிரியர் நேரிற் காணாது பிறர் சொல்லக்கேட்டிருப்பர் என்று தோற்றுகிறது என்பர் ஷாப்.

(5) தமிழ்நாட்டில் மீன்பிடிப்பவர்கள் சாறுகுத்துதல், பறிவைத்தல் போன்று அவர்களும் மீன் பிடிக்கின்றனர்.

16. (1) இந்த ரப்தா என்ற ஊர் இதுதானென்று திட்டமாகக் கூறுவதிற் கில்லை. அது ராப்தாவாக இருந்தாலுமிருக்கலாம். ராப்தா என்ற சொல்லுக்கு வழக்கமாகச் செல்லும் ஊர் என்று பொருளாயிருக்கலாம்.

(2) கிரேக்கர் ரப்தா என்ற பெயர் அங்கு வழங்கிய இணைக்கப்பட்ட படகுகளால் (Sewed boats) வந்த பெயர் என்பர்.

யொட்டி மெபரிடிக்தலைவர்[3] அவர்களை ஆளுகின்றனர். இந்த மெபரிடிக் தலைவர்கள் ஆரேபியாவிலே தலைமை வகிக்கும் நாட்டினர். இப்பொழுது மூசா நாட்டு ஜனங்கள் அந்த மெபரிடிக் தலைவன் மூலம் ஆளுகின்றனர்; அவர்கள் பல கப்பல்களை வியாபாரத்திற்கு அனுப்புகின்றனர்; கப்பல்கள் அரபியர் வசம் அனுப்பப்படுகின்றன; அரபியர் நாட்டு பாஷையை யறிந்திருப்பது மன்றி அந்நாட்டின ரோடு சம்பந்தமும் செய்துகொண்டு வாழ்கின்றனர்.

17. இந்தப்பட்டினங்களிலே வாணிபத்திற்கென்றே மியூஸா (*Musa*) விற் செய்யப்பட்ட எறியீட்டிகளும் கைக்கோடரிகளும் ஈட்டிகளும், ஊசிகளும், பலவித கண்ணுடிகளும் ; சில விடங்களில் சிறிது சாராயமும், காட்டுமுரண்டிகள் நட்பைப் பெருவதற்காகக் கொடுக்கக் கொஞ்சம் கோதுமையும் இறக்குமதியாகின்றன. ஏராள மாக யானை மருப்பும் காண்டாமிருகத்தின் கொம்பும், ஆமையோடும் சிறிது தேங்கா யெண்ணெயும்[1] ஏற்றுமதியாகின்றன.

18. பெரனிஸிலிருந்து வலதுபுறம் செல்லும் அஸனியா துறை முகப் பட்டினங்களிலே இவைதான் இறுதியானவை; இந்தப்பட்டி னங்களுக்கு அப்பால் ஒருவரு மறியாத சமுத்திரம்[1] மேல்புறமாக வளைந்து இதோபியா, லிபியா, ஆபிரிக்கா முதலாய விடங்களுக்குத் தெற்கே யோடி மேல் கடலோடு கலக்கின்றது.

19. இனி, பெரனிசுக்கு இடதுபுறமாக முஸல் துறைமுகத்தி லிருந்து இரண்டு மூன்று நாட்பயணம் கடலிற் குறுக்கே சென்றால் வெள்ளைக்கிராமம்[1] என்ற காவலையுடைய பட்டினமுண்டு. அங்கி

---

(3) கிரேக்க உரோம ராஜ்யம் தலையோங்கியிருந்தபோது அரேபியருக் குப் போக்கிடமின்மையால் ஆப்பிரிக்காநாட்டில் ஆதிக்கம்பெற்றிருந்தனர். யவனர்ஆதிக்கம் குறையவே முகமதியர் ஐரோப்பாவில் மேலோங்கின ரென் பது சரித்திரம்.

17. (1) மூலத்தில் நார்கிலியோஸ் (Nargilios) என்று காணப்படுகிறது. பிராக்ருதமான 'நார்க்கில்' (நாரிகேளம்) என்ற சொல்லிலிருந்து வந்தது. இந்த எண்ணெய் வியாபாரம் இந்தியர்களால் அந்த நாட்டிற்குக் கொண்டு போகப்பட்டதென்பதற்கு இது மற்றொரு உதாரணம்.

18. (1) அக்காலத்திலே இந்த இடத்திற்கு அப்பாற் சென்றவர்களில்லை யென்பது நிதர்சனம்.

19. (1) வெள்ளைக்கிராமம்(Leukē Komē). இதனை எல் ஹோரா (El Haura) என்பர்; 25°7N., 37°13' E.

ருந்து நபதேயர் அரசன் மலிகஸ்[2] (*Malichas*) ஆள்கின்ற பெட்ரா[3] (*Petra*) வுக்குச் சாலே செல்லுகிறது. இது அரேபியாவிலிருந்து செல்லும் சிறு மரக்கலங்களுக்கு அங்காடிப்பட்டினமாக விருக்கிறது. அதனாலே அங்கே செஞ்சூரியன்[4] (*Centurion*) என்றொரு உத்தியோகஸ்தர் ஒரு காவற் சேனையோடு தங்கி, அங்காடிக்கு வரும் பண்டங்களில் நாலிலொன்று தண்டிக்கொண்டு இருக்கிறார்.

20. இதற்குக் கீழே அரேபியநாடு இருக்கிறது; அது எரித்திரேயன் கடலில் நீண்டிருக்கிறது. இந்த நாட்டிலே பாஷையில் முழுவதும் மிகுதியும் வேறுபட்ட பல வகைச் சனங்கள் வாழ்கிறார்கள். கடலேயடுத்துள்ள நாடுகளில் இங்குமங்குமுள்ள குடிசைகளில் புலாலுண்பவர்கள் வாழ்கின்றனர்; உள்நாட்டில் இரு பாஷை பேசுகின்ற ஊர் ஊராய்த்திரியும் போக்கிரி ஜாதியார்[1] வாழ்கின்றனர். இவர்கள் கரையோரமாகச் செல்லுங் கப்பல்களைக் கொள்ளையடித்தும், அதிலுள்ள ஜனங்களை அடிமையாக்கி விற்றும் வாழ்கின்றனர். இவர்கள் இவ்வாறு வாழ்வதால் இவர்களே பல தடவைகளில் அரேபிய அரசர்களாலும் தலைவர்களாலும் சிறைபிடிக்கப்படுவார்கள்; இவர்களுக்குக் கர்னைட்ஸ் (*Carnites*) என்று பேர். இந்த அரேபிய கடற்கரை முழுவதும் கப்பல் தங்கச் சாலைகளுமில்லை; கப்பல் நங்கூரம் பாய்ச்சவும் சௌகரியமில்லை; மலைகளும் குன்றுகளும் அதிகமுண்டு; அதனால் கப்பலில் செல்லுவதும் மிகவும் அபாயகரமானது. இவைகளாலே மாலுமிகள் அரேபிய நாட்டில் தங்காது நடுக்கடலில் வேகமாகச்சென்று கரிந்ததீவை[2] (*Burnt island*) அடைகின்றனர்; இந்தத் தீவுக்குக்கீழே நல்ல சாந்தகுணமுள்ள ஜனங்கள்—ஊர் ஊராய்த் திரிபவர்கள், ஆடு மாடு ஒட்டகம் மேய்ப்போர்—வாழ்கின்றனர்.

---

(2) இவர் கி. பி. 70-ல் எருஸலேம் பட்டினத்தைப் பிடிக்க ஆயிரம் குதிரையும் 5000 ஆளும் அனுப்பிய அரபிய அரசன்.

(3) இது 30°19'N.,35°31'Eல் இருக்கிறது.

(4) ஓர் உரோம உத்தியோகஸ்தன்.

20. (1) பெடுவின் கொள்ளைக்காரர். (Beduins). இவர்கள் கொள்ளைக்காரராவதற்கு முக்கிய காரணம் நாட்டின் வரட்சியேயாம். வெயிலின் கொடுமையால் அந்நாட்டில் ஒன்றும் உண்டாவதில்லை. அதனாலேயே அவர்கள் திருட்டுத்தொழிலைக் கைக்கொள்ளுகின்றனர்.

(2) இது ஜெபெல் டெர் (Jebel Tair) என்ற தீவு; 15°35'N.,41°50'E.

21. இவைகட்குக்கீழே குடாவின் இடது புறம் கரையிலே மியூஸா[1] (*Muza*) என்றொரு அங்காடிப்பட்டின மிருக்கிறது; இது பொனிசிலிருந்து இரண்டாயிரம் ஸ்டேடியா தூரத்திலிருக்கிறது; இது சட்டப்படி ஏற்பட்டது. இந்தப் பட்டினம் முழுவதும் அரேபியக் கப்பற்காரரும் கடற் பிரயாணிகளும் நிறைந்து வாணிபத்தில் அமிழ்ந்து கிடக்கின்றனர். அவர்கள் தங்கள் சொந்தக் கப்பல்களை யனுப்பிப் பாரிகஸாவோடு வியாபாரம் செய்கின்றார்கள்.

22. இந்தத் துறைமுகத்திலிருந்து மூன்று நாட்பயணம் உள் நாட்டிற் சென்றால் மெபரிடிஸ்[1] (*Mepharetes*) நாட்டு மத்தியில் ஸௌவா[2] (*Sauva*) என்ற பட்டண மிருக்கிறது; இந்தப் பட்டணத்தில் கோலிபஸ் (*Cholæbus*) என்ற தலைவனிருக்கின்றான்.

23. பின்னும் ஒன்பது நாட்பயணம் சென்றால் சபார்[1] (*Saphar*) என்ற தலைமைப்பட்டணமிருக்கிறது.; ஹொமரிட்ஸ், சபயிட் சாதியார்களின் தலைவரான கரிபெல்[2] இங்கு வாழ்கின்றனர்; இடைவிடாது அனுப்பிய தூதுக்களாலும் சன்மானங்களாலும்[3] இவர் நமது சக்கரவர்த்திக்கு நண்பராவார்.

(தொடரும்)

---

21. (1) அரேபியாவிலுள்ள மொக்கா (Mccha) என்ற பட்டினம். பிளினியும் தாலமியும் மோஸா (Mauza) என்ற இடத்தில் மேற்குறித்த அங்காடிப்பட்டின மிருக்கலாமென அபிப்பிராயப்படுகின்றனர். துறைமுகம் மஸலாவென்பர். பிளினி கூறிய இரண்டு ஊர்களும் இன்றுமிருக்கின்றன.

22. (1) ஹிமயாடிக்சாதியைச் சார்ந்த மாஅபிர் (Ma'āfier) என்ற வகுப்பினர்.

(2) மொக்காவுக்கு 40 மைல் வடக்கேயிருக்கிறது.

23. (1) மொக்காவுக்கு வடகீழ்பால் நூறு மைல் தூரத்திலுள்ள ஸாபர் Zafar என்ற ஊர்.

(2) இது அந்நாட்டு அரசர் பட்டம். Charibael என்பது Kariba-il என்ற சொல்லின் திரிபு. இதற்குக் 'கடவுள் அருள்பெற்ற' என்று பொருள்.

(3.) அரபியர் உரோமர்களை இந்தியாவோடு நேரே வாணிபம் செய்ய விடுவதில்லை; அதற்காக அரபியரை உரோமர் மகிழ்ச்சிகொள்ளும்படியாக வைக்கவேண்டியதாகவிருந்தது.

# அரசியல் முறை

டி. சிவராம சேதுப்பிள்ளை

(19-ம் பக்கத்தொடர்ச்சி)

பின்னும் கவர்ன்மெண்டார் தங்களுடைய குறைகளைக் கவனிக்கும்படி செய்ய, சட்ட சபைக்கு விதிகள் மூலமாய் மூன்று வழிகள் ஏற்பட்டன. (1) கேள்வி கேட்டல் (*Interpellations*). சர்வ சமாசாரத்தைப் பற்றியும் கேள்வி கேட்கலாம். கவர்ன்மெண்டார் தகுந்த பதில் அளிக்கவேண்டும். சிற்சில கட்டுப்பாடுகளும், தங்களுக்குப் பதில் அளிக்கப்படாது என்று தோன்றினால் மறுக்கும் அதிகாரமும் கவர்ன்மெண்டிற்கு இருந்த போதிலும் கேள்வி கேட்டல் மூலமாய்ச் சட்டசபைக்குச் செல்வாக்கு ஏற்பட்டது. (2) சபையில் எந்த அங்கத்தினரும் ஏதேனும் தீர்மானம் கொண்டு வந்து மக்கள் குறைகளைக் கோரிக்கொள்ளலாம். (3) கடைசியாய், திடீரென்று, சபை நடை முதல் வேலையை நடத்திக் கொண்டிருக்கும் பொழுதே, ஒரு விஷயம் மிக முக்கியமானது; அதை உடனே கவனிக்க வேண்டும் என்றும், அதற்காக மற்ற விஷயங்கள் யாவையும் ஒத்திவைக்கவேண்டும் என்றும், சில அங்கத்தினர்கள் ஒரு தீர்மானம் கொண்டு வரலாம். இதற்கும் சில நிபந்தனைகள் உண்டு; ஆனால் இந்த அதிகாரத்தைச் சில முக்கியமான சமயத்தில் சட்ட சபை செலுத்தி யிருக்கிறது. சட்ட சபையின் சட்டப்படி உள்ள அமுலையும், வழக்கப்படி நடந்தேறின செல்வாக்கையும், ஒருவாறு விளக்கி ஆயிற்று. இனி, மாகாண ஆட்சி முறையில் முக்கியமான இடம் பெற்றுள்ள கவர்னர் தொழிலையும், கடமையையும் சற்று விவரிக்கவேண்டியது அவசியம்.

கவர்னர்:—இதுகாறும் இந்தக் கட்டுரையை விடாமல் படித்து வந்தார்க்கு மாண்டேகு பெருமான் அமைத்திட்ட அரசியல் முறையைப்பற்றிய சில விஷயங்கள் தெளிவாகியிருக்கும். பொது அமைப்பு கூடியவரைக்கும் யாவருக்கும் விளங்கக்கூடியபடி அவ்வளவு சுலபமானதே. ஆயினும் அதை ஆட்சிக்குக் கொண்டுவரத் தொடங்குங்கால், அநேக விதிகளும், பழக்க வழக்கங்களும், கட்டுப்பாடுகளும் ஏற்படுத்தவேண்டி நேர்ந்துவிட்டது. இதனுடைய பலன் என்னவென்றால், யாவரும் வேண்டாத சில சிக்கல் முக்கல்களும்,

மனஸ்தாபம் நேரிடக்கூடிய சந்தர்ப்பங்களும் ஆம். சுய ஆட்சி புரிய விரும்புவோர் இத்தகைய சிக்கல்களைக் களைந்து, பல பேருடன் மனம் ஒத்து, யாவரையும் அனுசரித்து நடக்கவேண்டிய வித்தையைக் கற்றுக்கொள்ளவேண்டியது அவசியமே. அதற்கே போலும் இச் சிக்கல்களும் கட்டுப்பாடுகளும் ஏற்பட்டன ; ஆயினும், கட்டுக்கள் கடந்து போய், முரண் ஏற்பட்டு, ஆட்சி அமைதிக்கு ஒரு ஈனம் வரக்கூடாதல்லவா ? அதற்காகவே, சட்டத்திலேயே வேண்டிய அதிகாரம் கொடுத்து ஏற்படுத்தப்பட்டார் நம் மாகாண கவர்னர். அகில மாகாணத்தின் நியாய ஆட்சிக்கு அவரே அந்தத்தில் பொறுப் புடையவர். சட்ட சபையில் அவர் மெம்பர் அல்ல. ஆனாலும் எந்த இலாகாவையும் அடக்க அவருக்குச் சட்டப்படி அதிகார முண்டு. சட்ட சபையைக் குறிப்பிட்ட காலத்திற்குமுன் கலைத்து, மெம்பர்கள் மறுபடியும் தேர்தல் பெற்று வரட்டும் என்று உத்திர விடலாம். சட்ட சபை பொருள் அளிக்க மாட்டோம் என்றால், கவர்னர் தான் அளிக்கலாம். சட்ட சபையில் எந்தெந்த விஷயம் எத்தருணத்தில் எந்த வரிசையில் ஆலோசிக்கப்படவேண்டும் என்று தீர்மானிக்கலாம். சில பிரேரணைகள் மாகாண சம்மந்தமல்ல என்றும் சட்ட சபை வாதிக்கக்கூடாது என்றும் மறுத்து விடலாம். நிர்வாக சபையார் சட்ட சபைக்கு வருஷத் திட்டம் எடுத்துப் போவதற்குக் கவர்னர் உத்திரவு வேண்டும். தாம் தம் அபிப்பிராயங்களை வெளியிட வேண்டி, சட்டசபை கூட்டி அதன் முன் பேசலாம். நிர்வாக சபையாரின் தொழில் முறையை நிர்ணயிக்கக் கவர்னருக்கே அதிகாரம். பிளவு பட்ட நிர்வாக சபையுடன் ஒத்துழைத்து அதனை இழுத்துச் செல்ல வேண்டிய கடமை கவர்னருக்கே. அதன் தீர் மானங்களை மறுத்திடவும் அவருக்கு அதிகாரம் உண்டு. மந்திரி இலாகா நடைபெறாமல் நின்று விடும்படி நேருமானால் கவர்னர் தம் பொறுப்பாய் எடுத்து நடத்திவைக்கலாம்.

மேலும், அரசாங்கச் சட்டங்களின் உள் கருத்தை விளக்கும் கடமையும் கவர்னருக்கே. மற்ற நாட்டில் இக் கடமையைக் கோர்ட் டார் செலுத்துவார். இங்கே அது தகுந்தது அல்ல என்று ஒதுக்கப் பட்டது. சட்ட சபையில் வரும் தீர்மானங்கள் சட்ட ஒற்றுமை உள்ளனவா என்று பார்க்க வேண்டியதும் கவர்னர் தொழிலே ; கோர்ட்டார் தலையிடக்கூடாது.

கடைசியாக, இவை எல்லாம் பெரியனவல்ல. மாண்டேகு சீர் திருத்தத்தின் உள் கருத்தையும், அதன் நோக்கத்தையும் தவற விடாமல் காப்பாற்றி வரவேண்டியது கவர்னரின் பெரும் கடமை. இது சாதாரணமாய்ச் சட்டத்திலும் விதிகளிலும், நிபந்தனைகளி

லும், கணக்கற்ற உத்திரவுகளிலும் காணக்கிடக்கும் வஸ்து அல்ல. கவர்னர் தம்முடைய உதாரணத்தாலும், மனப்பான்மையாலும் எப்படி ஒரு சுய ஆட்சி இயந்திரத்தை உபயோகிக்கவேண்டியது என்று காட்டவேண்டிய ஒரு பெருந்தொழிலும், நல்ல நியாய ஆட்சியும், பலவித மதங்களும் ஒன்றற்கொன்று சண்டையிடாமல் பார்த்துக்கொள்வதும், நாடு இன்சால்வெண்டாகாமல் இருக்க முறைகள் தேடுவதும் மக்கள் சுகாதாரம், சமுதாயம், பிழைப்பு முதலியனவற்றில் விருத்திக்கு வரவும் பார்த்துக் கொள்ளவேண்டிய பெரும் கடமையும் அவருக்கே. அவரே, மந்திரிகளைப் பொறுப்புள்ளவர்களாகவும், மக்களுக்கு ஜவாப்தாரிகளாகவும் செய்து ஆட்சி நடத்த வேண்டியதற்கு வேண்டிய உதவி புரிய வேண்டியது. தேர்தல் மூலமாய் ஜனங்கள் அபிப்பிராயங்கள் வெளியிடப்பட்டிருந்தால், அவ்வபிப்பிராயங்கள்படி நடந்து கொள்ள வேண்டியது பிரதிநிதிகள் கடமை என்று சபை அங்கத்தினர்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டியது கவர்னர் கடமை. தீண்டாதார், தாழ்த்தப்பட்டோர், சில சார்பைச் சேர்ந்து ஜனத்தொகை அதிகமில்லாமல் எப்பொழுதும் மைனாரிட்டியில் இருப்போர், முதலானவர்கள் மற்றையோர் கையில் சிக்கி அநியாய விதிகளுக்கு அகப்படாமல் பாதுகாக்க வேண்டியதும் கவர்னர் கடமை.

இத்துடன் நம் அரசியல் முறையில் நம்மாகாண ஆட்சி முறை எத்தகையது என்று விளக்கி முடித்தோம். தற்சமயம் நம்மாகாண ஆட்சியின் விவரம் மட்டுமே தமிழ்நாட்டில் பல பேருக்கும் நன்றாய்த் தெரிய வேண்டியது அவசியமாகையால் இக்கட்டுரை இத்துடன் முடிவு பெற்றது. இன்னும், அரசியல் முறையில், தமிழர்கள் செவ்வனே அறிய வேண்டியன: (*a*) தமிழ் மாகாண ஆந்திர மாகாண இயக்கம், (*b*) ஜில்லா, தாலுகா போர்டுகள்; கிராமப் பஞ்சாயத்துக்கள்; இவைகளைப் பற்றி மேல் வரும் இதழ்களில் கவனிக்கப்படும்.



# உத்தம மாமி

## ஒரு நாடகம்

### ஐ.

### நாடக பாத்திரங்கள்

1. ஜயராம ஐயர் :—உபகாரச் சம்பளம் பெறும் ஒரு கவர்ன்மெண்டு உத்யோகஸ்தர்.
2. ராகவ ஐயர்:—கவர்ன்மெண்டுக் காலேஜில் உள்ள ஒருபேராசிரியர்.
3. கிருஷ்ணமூர்த்தி ஐயர் ;—ஷை காலேஜில் உள்ள ஆசிரியர் ; ராகவ ஐயரின் சகோதரர்.
4. துரைஸ்வாமி தீக்ஷிதர்:—உலோபியான ஒரு பணக்கார மிராசுதார்.
5. மகாலிங்கம் :—பி. ஏ. வகுப்பு மாணவன் ; துரைஸ்வாமி தீக்ஷிதரின் முதல் தாரத்தின் பிள்ளை.
6. நக்ஷத்திரேச ஐயர்:—துரைஸ்வாமி தீக்ஷிதரின் காரியஸ்தர்.
7. சுப்பிரமணியன் :—துரைஸ்வாமி தீக்ஷிதரின் சமையற்காரன்.
8. பார்த்தஸாரதி ஐயங்கார் :—ஒரு வக்கீல்.
9. சதாசிவ ஆசாரி :—ஒரு வைர வியாபாரி.
10. அலமேலு:—ராகவ ஐயர் மனைவி.
11. பவானி:—ராகவ ஐயர் மகள்.
12. ஜானகி:—துரைசாமி தீக்ஷிதரின் இளைய தாரம்.

பரதேசி, பிராம்மணர்கள், வேலையாட்கள் முதலியவர்கள்.

### காட்சி I.

ராகவ ஐயரின் பங்களாவில் ஓர் அறை: ராகவ ஐயரும் கிருஷ்ணமூர்த்தியும் பேசிக்கொண்டிருக்கும் சமயம்: அலமேலு ஒரு புறமாக நிற்கிருள்.

கிருஷ்ணமூர்த்தி :—என்ன அண்ணு! நீ குருட்டு விசாரம் பிடித்தவனுயிருக்கிறுய்! குழந்தைக்கு இன்னும் பதினுன்கு வயது கூட ஆகவில்லையே. எதற்காக நீ பயப்படவேண்டும்?

ராக :—தகப்பனுருக்குப் பயப்படுவதா? ஊர் வாய்க்குப் பயப்படுவதா? அலமேலு இரவு பகலாக அரிக்கிருளே! எதற்கு

ஆளாவது? நீ சொல்லு. நானும் பொறுத்துத்தான் பார்க்கிறேனப்பா, முடியவில்லையே!

கிரு: நீ நேற்று காலேஜில் ஸோஷியல் ரிபார்ம்ஸ் ஜன சமூகத்திற்குச் செய்யக்கூடிய சில நன்மைகளைப் பற்றிச் சொற்பொழிவு செய்தாயே? ஆடவர்களும் பெண்மக்களும் தகுந்த வயது வந்துதான் மணம் செய்விக்க வேண்டுமென்று; அது ஞாபகமிருக்கிறதா?

ராக :—ஆம்.

கிரு :—"படிக்கிறது ராமாயணம் இடிக்கிறது பெருமாள் கோயில்" என்பதுபோல் சொல்வது ஒன்று, செய்வது வேறு. உன்னை யார் மதிப்பார்கள் பிறகு!

அலமேலு :—அடுத்தாம் அண்டையாத்தில் என்ன சொல்லுகிறார்கள் தெரியுமா? வெளியே போக வெட்கமாயிருக்கிறது. நெருப்பை மடியில் வைத்துக் காப்பதுபோல் காத்து வருகின்றேன். புருஷாளுக்கு என்ன தெரியும்? "நரிக்குத் தெரியுமா நண்டின் பிராணவஸ்தை?" (கண்களைக் கசக்குகிறாள்.)

கிரு :—பவானி பள்ளிக்கூடத்திற்குப் போய்வருகிறாளே. மன்னிதான் பாரா கொடுத்து வருகிறாளோ? அடுத்தாத்தில் பெண்ணை படிக்கவைத்தார்களா? பாட்டு முதலானவை சொல்லி வைத்தார்களா?

அல :—ஆமாம். அதுக்குந்தான் கேலிபண்ணுகிறார்கள். பெண்ணை பி. ஏ. பாஸ் பண்ணச் செய்து கலெக்டர் வேலையிலா வைக்கப்போகிறீர்கள் என்று கேட்கிறார்கள். வீணை முதலானவை சொல்லிக்கொடுத்து சங்கீதக் கச்சேரிக்கா தயார் செய்கிறீர்கள் என்று கேலிசெய்கிறார்கள். பாழும் தெய்வம் என்தலையில் என்ன எழுதியிருக்கோ, யார் கண்டார்கள்! "உரலுக்கு ஒருபக்கம் இடி என்றால் மத்தளத்திற்கு இருபக்கதிலும் அடி!"

ராக :—இதோ ஆரம்பித்துவிட்டாளப்பா லெக்சர் பண்ணுவதற்கு. நானும் பலவிதமாகத்தான் முயற்சி செய்துவருகிறேன். கைகூடவில்லையே! குழந்தைக்கு பிராப்தம் எப்படியிருக்கிறதோ? பொறுமையோடுதான் இருக்கவேண்டும்.

[ஜயராம ஐயர் பிரவேசம்]

ஜயராம ஐயர் :—என்டாப்பா! நாம் செய்யவேண்டிய சுப காரியங்களைக் காலாகாலத்தில் செய்தால்தானே நல்லது. அடுத்த தெரு சேஷனும் தன்னுடைய பெண்ணுக்கு ஒரு பேஷான வரன் முடித்துவிட்டானாம். புது நாகரிகம் பலவிதமாக இருந்தாலும், நாம் நம்முடைய பெரிய சந்ததியின் கௌரவத்திற்கு விருத்தமாக

எதற்காக நூதனமாகக் காரியங்களைச் செய்யவேண்டும்? ஏதோ என் கண்முன்னாலே இப்படிப்பட்ட காரியங்கள் நடக்கவேண்டாம். எப்படியாவது குழந்தைக்கு நல்ல வரனை முடித்து இந்தத் தை மாதத்தில் கலியாணத்தை முடித்துவிடப்பா!

ராக:—அப்பா! தாங்கள் சொல்லுகிறபடி விவாகத்தை நடத்துவதில் எனக்கு எந்தவிதமான ஆக்ஷேபணையும் கிடையாது. நல்ல வரன் என்று பார்க்கப்போனால், வரதக்ஷிணை கொடுத்துக் கட்டாது போல் தோன்றுகிறது. பணமுடையோ, சொல்லமுடியாது போல் தோன்றுகிறது!

ஜய:—நம்ம சுப்பிரமணிய தீக்ஷிதர் பேரனுக்கு என்ன? லக்ஷரூபாய் சொத்திருக்கிறது. இரண்டாம் தாரமாய்க் கொடுத்து விடேன்.

அல:—நன்றாகயிருக்கு. அவன் வயதானவன். தவிர அவனுக்கு ஏதோ தீராத வியாதியின் அடையாளங்கள் இருக்காம். சின்னமாப்பிள்ளையாகப் பார்த்துக் கொடுப்பார்களா! குழந்தைதான் கலியாணம் செய்துகொள்ளச் சம்மதிப்பாளா? "கிளியை வளர்த்துப் பூனை கையில் கொடுப்பது போல்".

ராக:—சுப்பிரமணிய தீக்ஷிதர் பேரனா? பேஷ். முதல் நம்பர் லோபிக் குடும்பத்திலா நமது குழந்தையைக் கொடுப்பது. ஊரில் கேள்வி, ஷெ யான் தன்னுடைய மூத்த சம்சாரத்திற்குச் சோறு போடாமல், தாயார் தூண்டுதலின்மேல் பட்டினி போட்டுக் கொன்றதாக. தவிர அந்தப்பயலுக்குக் குடி முதலிய வியவகாரங்கள் பலத்து விட்டதாம்! அவனுக்கு ஒருகாலும் கொடுக்கமாட்டேன். பரம எழையாக இருந்தாலும் யோக்யமான பிள்ளையாகப் பார்த்துத் தான் கொடுப்பேன். நீங்கள் கவலைப்பட வேண்டாமப்பா. நான் கூடிய சீக்கிரத்தில் எப்படியாவது கஷ்டப்பட்டு விவாகத்திற்கு ஏற்பாடு செய்து விடுகிறேன்.

[ஜயராம ஐயர் போகிறார்]

கிரு:—மன்னீ! நீயும் போ. பவானி ஸ்கூலுக்குப் போக வேண்டியதற்கு ஏற்பாடு செய். மணியாய் விட்டது. அதோ மஹாலிங்கம் வருகிறான். அவனுடன் சில விஷயங்கள் தனித்துப் பேசவேண்டி யிருக்கிறது.

[அலமேலு உள்ளே போகிறாள்.]

ராக:—வா, மஹாலிங்கம்! உன்னுடைய பரீக்ஷை சமீபித்து விட்டதே. நன்றாகப் படித்திருக்கிறாயா? ஏதாவது சந்தேகங் களிருக்கின்றனவா? எப்படி?

மஹாலிங்கம் :—என்னால் கூடிய அளவு முயன்று தான் படித்திருக்கிறேன். எல்லாம் ஈசுவரனுடைய கிருபை ; தங்களுடைய ஆசீர்வாதம் பரிபூரணமாக இருக்கும் வரை எனக்கு என்ன குறைவு ஏற்படக்கூடும் ?

ராக :—நீ புத்திசாலி. நீ பாஸ் செய்வதற்கு என்ன தடை ?

கிரு :—நீயேன் மஹாலிங்கம், இன்னும் கலியாணம் செய்து கொள்ளாமலிருக்கிறாய் ?

மஹா :—(சிரித்துக்கொண்டு) எல்லாவற்றிற்கும் வேளை வரவேண்டாமா ?

ராக :—அவன் தகப்பனார் மிகுந்த ஐவேஜுள்ளவர். பையனும் அளவிறந்த யோக்யன். புத்திசாலி. இந்தவருஷம் பி. ஏ. பாஸ் செய்துவிடுவான். தக்க வரதக்ஷிணை கொடுக்கக் கூடியவர்கள்தாம் தீக்ஷிதர்வாளிடம் பேசமுடியும்.

மஹா :—என் பிதா அவர்கள் தாங்கள் சொல்லுகிறபடி வரதக்ஷிணையில் அபேக்ஷையுள்ளவர்களாக இருக்கலாம். நானும் அதே அபிப்ராயத்தில் ஈடுபட்டவன் என்பதைத் தாங்கள் எப்படி நிச்சயிக்கலாம் ? என் விவாகம் சம்பந்தப்பட்டவரையில், நான் பணத்தைப் பெரிதாக நினைக்கவில்லை. குணத்தைத்தான் கவனிப்பதாக நிச்சயத்திருக்கிறேன்.

[அந்தச் சமயத்தில் பவானி புஸ்தகங்களுடன் வருகிறாள்.)

பவானி :—அப்பா ! நான் பள்ளிக்கூடம் போய்வருகிறேன். (கிருஷ்ணமூர்த்தியைப் பார்த்து) சித்தப்பா, போய்வருகிறேன். (மஹாலிங்கத்தைப் பார்த்து லஜ்ஜையுடன் நாணிப் போகிறாள்.)

கிரு :—உன் விவாகம் உன்பிதாவின் அனுமதியின்றி எப்படி நடைபெறக்கூடும் ? நாங்கள் உன்னைப்பற்றிக் கேட்டபோது, தீக்ஷிதர் ரூபாய் 5,000 வரதக்ஷிணை வேண்டுமென்றும், நகைகள் ரூ. 5,000-க்குச் செய்யவேண்டுமென்றும் கண்டிப்பாகச் சொன்னாரே ! நாங்களும் ரூ. 5,000 கையிலிருக்கிறது ; அதைத்தான் கொடுக்க முடியும் என்று முடிவாகச் சொல்லிப்பார்த்தும் இசையாது என்று பதில் சொல்லிவிட்டாரே.

ராக :—சரி. காலேஜுக்கு நேரமாகிவிட்டது. பிறகு சந்திக்கலாம். போகலாம்.

[உள்ளே போகிறார்.]

கிரு :—மஹாலிங்கம். இன்று மாலை டென்னிஸ் கிரவுண்டில் என்னைச் சந்திக்கிறாயா ?

மஹா :—அவசியம் சந்திக்கிறேன். (தனக்குள் யோசிக்கிறான்.) நல்லது பவானியை நான் மணக்கவேண்டுமானால் ரூ. 10,000 வேண்டும்போலிருக்கிறது. அடுத்த வருஷம் ஐ. ஸி. எஸ். போக ரூ. 5,000 டிபாசிட்டுக்கு வேண்டுமென்று எப்படியாவது அப்பாவிடம் கேட்டு வாங்கி, பவானியைக் கலியாணம் செய்து கொள்ளவேண்டும். (போகிறான்.)

## காட்சி II.

(ராகவ ஐயர் உட்கார்ந்திருக்கிறார் : அலமேலு விசனகரமான முகத்துடன் காபி போட்டுக் கொண்டிருக்கிறாள் : பிற்பகல் : மாலை.)

ராகவ ஐயர் :—சிறு பையனாகவும், படித்தவனாகவும், ஆஸ்தியுள்ளவனாகவும் வேண்டுமென்றால், ஏதோ இருக்கும் நிலத்தையும் விற்றுத்தான் கலியாணம் நடத்தவேண்டும். சாரதாச் சட்டம் வந்தென்ன? சுயமரியாதை இயக்கம் வந்தென்ன? ஆணும் பெண்ணும் படித்துத்தானென்ன? பாமும் வரதக்ஷிணையில்லாமல் கலியாணமில்லையென்று வெளிப்படையாகத் தெரிகிறது. என்னிஷ்டப்படி கலியாணம் செய்வதென்றால், என்வகுப்பில் கெட்டிக்காரனான கவரை ஜாதிப் பையனொருவனிருக்கிறான். பேசாமல் நம் குழந்தையை அவனுக்குக் கலியாணம் செய்து விடுவேன்.

அலமேலு :—இது வேறே! சிவ, சிவ, ஜாதி விட்டு ஜாதி செய்ய வேணுமா? போதுமே, உங்கள் புதிய நாகரிகம்—"கண்டதே காட்சி, கொண்டதே கோலம்."

ராக :—பார்! புதியன புகுதலும், பழயன கழிதலும் வழு அல : கால வகையினானே." உன் கண்முன்னாலேயே அநேக மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. வெகு சுருக்கத்தில் எல்லாம் நிறுவலாகி விடும் போல் தோன்றுகின்றன. இந்தியர்களுக்குள் ஜாதி வித்யாஸம் பார்த்தால், பிறகு எவ்விதம் ஒற்றுமையாக ஜீவனம் செய்கிறது?

[கிருஷ்ணமூர்த்தி தன்கையில் ஒரு கடிதத்துடனும் சிரித்த முகத்துடனும் வருகிறான்.]

கிருஷ்ணமூர்த்தி :—அண்ணா! "முயற்சியுடையா ரிகழ்ச்சியடையார்." பணம் தயார் செய்துகொண்டு வந்துவிட்டேன். இதோ ரூபாய் 5,000 ஒருவரிடம் கடன் வாங்கிவந்திருக்கிறேன். உடனே கலியாணத்திற்கு ஏற்பாடு செய்.

ராக :—நகைக்கு ரூபாய் 5,000 வேண்டுமே!

அல :—என் நகை முழுவதையும் கொடுக்கிறேன்.

கிரு :—(யோசிக்கிறான்.)

ராக:—உன் நகை, ரூபாய் 1,000 பெறும்: மற்றவை? கிருஷ்ண மூர்த்தி, அதெற்கென்ன ஏற்பாடப்பா?

கிரு:—அதற்கும் எப்படியாவது ஒரு ஏற்பாடு செய்யலாம். "முயற்சி திருவினையாக்கும்." மன்னி, கொஞ்சம் ரகஸ்யம் பேசவேண்டும். உள்ளே போ.

அல:—என்ன கொள்ளையடித்து நகைகள் சம்பாதிக்கப் போகிறீர்களா? ரகசியம் பேச!

ராக:—நீ பெண், உன்னிடம் சொன்னால் பெருமையாக வேறு யாரிடமாவது சொல்வாய். எல்லாம் கெட்டு விடும். பிறகு உன்னிடம் சொல்லாமலிருப்போமா? (சிரித்துக்கொண்டு போகிறாள்.)

கிரு:—அண்ணா! இந்தக்கடிதத்தைப் பார். "கொடுக்கிற தெய்வம் கூரையைக் கிழித்துக் கொடுக்குமே!" மஹாலிங்கம் ரூபாய் 5,000 அனுப்பியிருக்கிறான். எப்படியாவது கலியாண ஏற்பாடு செய்யவேண்டுமாம்.

ராக:—ஆமாம்! நகைக்கு எப்படி ஏற்பாடு?

கிரு:—கோபித்துக்கொள்ளாதே. மஹாலிங்கத்துக்கு பவானியைக் கலியாணம் செய்துகொள்ளுவதில் வெகு இஷ்டம். அவனுக்கு நகை வேணுமென்கிற ஆசையில்லை. இப்போது நமது காலேஜ் ஆனிவர்ஸரி டிராமாவுக்காக வாங்கியிருக்கும் மதுரைப் புது மண்டபம் நகைகளைப் போட்டு அவை வைரநகைகள் என்று சொல்லிக் கலியாணத்தை முடிப்போம். "ஆயிரம் பொய் சொல்லி ஒரு தாலியைக் கட்டலாம்." என்று வசனமிருக்க, நாம் மற்றபடித் தயங்கினால் காரியம் சித்தியாகுமா? பிறகு நிலம் புலம் வகையறுக்களை விற்று எப்படியாவது ஒழுங்குசெய்வோம்.

ராக:—மஹாலிங்கம் தகப்பனார், தீக்ஷிதர் நகைகளைப் பார்க்காமலிருப்பாரா? வெகு நோட்டக்கார மனுஷ்யனாச்சே?

கிரு:—அடடா, மன்னார்குடி தீக்ஷிதனை நம்பச்செய்வதுதானா பெரியவிஷயம்! ஷியானை நினைத்தால் எனக்கு உடனே சிரிப்பு வருகிறது. ஷேக்ஸ்பியர்ஸ் மர்செண்ட் ஆப் வெனிஸ் ஷைலாக் தானோ என்றும் சந்தேகம் வருகிறது. அப்படி உனக்கு அதைர்யமாக இருந்தால் ஒரு காரியம் செய்வோம்! உனக்கு மிகவும் ஆப்த நண்பர்களாகிய சு. ப. ரா. ம. ராமசாமி செட்டியார், கண. க. ராம. ராமநாதன் செட்டியார் அவர்களிடமிருந்து ஒரு செட் வாங்கிக் காட்டிவிடுவோம். கலியாணம் முடிந்த உடன் வாப்ஸ் செய்துவிடலாமே!

ராக :—எனக்கென்னவோ பயமாகத்தா னிருக்கிறது. இது உண்மை வெளிப்பட்டால் நம்பிக்கை மோசமாகுமே!

கிரு :—நம்மிடம் பெண்ணை மகனுக்குக் கொள்கிறார். ரொக்கம் ரூபாய் 5,000 வாங்கிக் கொள்ளுகிறார்; 5,000 க்கு நகைகள் போடப் பலவந்தம் செய்கிறார். இது முதல்நம்பர் தீவட்டிக் கொள்ளையாகாதா? நாம் எப்படியும் குழந்தைக்குத் துரோகமா செய்யப்போகிறோம்! பிற்பாடுதான் நகைகள் செய்யப்போகிறோமே? இது நம்பிக்கை மோசமாகுமா? போ, அண்ணா, போ, இப்படி மீனம், மேஷம் பார்த்தால் கலியாணம் ஆகாது.

ராக :—சரி! பின்பு எப்படியாவது நல்ல நகைகளை வாங்கி பர்த்தி செய்துவிடுவோம். காரியம் எப்படியாவது ஆகவேண்டுமே. உன்னிஷ்டப்படியே செய்வோம்.

## காட்சி III.

(துரைசாமி தீக்ஷிதர் வீட்டில் ஒரு ஹால்: தீக்ஷிதர் தன் கைப் பெட்டியை முன்னால் வைத்துக்கொண்டு, ஓர் இறகு பேனாவால் ஒரு மண் மைக்கூட்டில் தோய்த்துக் கணக்கு எழுதிக்கொண்டிருக்கிறார்.)

சுப்பிரமணியன்:—(பிரவேசித்து) அம்மாமி இந்த ஜாப்தாவை உங்களிடம் கொடுக்கச் சொன்னாள். ரூபாய் பதினைந்து கொடுங்கள். பழவகைகள் ஜாப்தாப்படி வாங்கிவரவேண்டும்.

துரைசாமி தீக்ஷிதர் :—(ஜாப்தாவையும் சுப்பிரமணியனையும் ஏற இறங்க மாறிமாறிப்பார்த்து) அடே மணி! உன்னைப் புத்திசாலி என்று நினைத்துக்கொண்டிருந்தேன். அந்த எண்ணம் இப்போது மாறுகிறது—ஏன்டா! கலியாணம் சொல்லவருகிறவர்கள் பழம் பாக்கு முதலானவைகளைக் கொண்டுவருவதா? நாம் அவர்கள் வரும் முன்பே தட்டுத் தட்டாக வாங்கிவைத்து அவர்களுக்கு நைவேத்யம் செய்வதா? குடி மூழ்கிப் போய்விடும்போலத் தோன்றுகிறதே, ஹூம்!

சுப்பிர :—அவர்கள் கொண்டுவந்தாலும் வராவிட்டாலும் நாம் சரிவர வைத்திருக்கவேண்டுமென்று அம்மாமி சொல்கிறாள்.

தீக்ஷிதர் :—அம்மாமியுமாச்சு, ஆட்டுக்குட்டியுமாச்சு! ரூபாய் பதினைந்தாம். பதினைந்து அணுவுக்குக் காய் வெட்டாகக் கொஞ்சம் நாட்டுப்பழம், கொய்யாப்பழம், கற்கண்டு, வெத்திலை வகையறா வாங்கிவைத்தல் போதும். இதற்கெல்லாம் அம்மாமியை முன்வைத்

தால் என் சொத்து ஒரு வருஷத்திற்குக் கூடப் போராது. (பதி னைந்து அணுக்களை எண்ணிக்கொடுக்க வருகிறார்.)

மணி :—ரூபாய் ஐந்து கொடுங்கள். வேட்டியெல்லாம் கிழிந்துவிட்டது. வரும்பொழுது கடையில் வாங்கிக்கொண்டு வருகிறேன்.

தீக்ஷிதர் :—புத்தியில்லாதவனே! இருக்கிற வேஷ்டிகளைச் சுத்த மாகத் தைத்துக் கட்டாமல் புதுசாக வாங்கவேணுமாம்? எதற்கடா புது வேஷ்டி? புதுசு நாளைக் ககப்படும். பழசு அகப்படுமா? "கந்தையானாலும் கசக்கிக் கட்டு" என்று ஔவையாரும் சொல்லி யிருக்காளேயடா! பணத்தை வீண் செலவு செய்யக் கூடாதடா? போ. (மணி முணு முணுத்துக்கொண்டு போகும்போது) அடே, கலியாணம் பேசவருகிறவர்கள் கிளப்பில் சாப்பிட்டுக் கொள்வார் கள். அவள் ஏதாவது சொல்லுகிறாள் என்று தடபுடல் சமையல் செய்யப்போகிறாயடா. நேற்றுத்தினம் ஏதற்காடா சாம்பார் வைத்தாய்? பருப்பு ரூபாய்க்கு ஐந்துபடி, தெரியுமா? வெந்தயக் குழம்பு போராதா? பத்ரம்.

(மணிபோகிறான்.)

[மஹாலிங்கம் பிரவேசம்.]

தீக்ஷிதர்:—மஹாலிங்கம், ஐ. வி. எஸ்ஸுக்கு டிபாஸிட் ரூபாய் ஐயாயிரம் வாங்கி அனுப்பினாயே! அதற்குக் குறைந்தது ஒண்ணரை வட்டியாவது கொடுப்பார்களா! ஷெ தொகைக்கு ரசீது வந்து விட்டதா?

மஹாலிங்கம் :—வட்டியும் கொடுக்கமாட்டார்கள். முதலும் திருப்பிக்கொடுக்க மாட்டார்கள். ரசீது வந்துவிடும்....ரூ. 7-14-0 வேண்டும். ஒரு பவுண்டன் பேனா வாங்க.

தீக்ஷிதர் :—ஏன்டா? பவுண்டன் பேனாவா! அதனால் எழுதி னால் கையெழுத்துக் கெட்டுப்போகுமே.

மஹா :—ஒவ்வொருவரும் இரண்டு மூன்று வைத்திருக்கிறார் கள். நான் ஒன்று தானே கேட்கிறேன்.

தீக்ஷிதர் :—(கோபத்துடன்) ஸர். டி. முத்துஸ்வாமி ஐய ரெல்லாம் பவுண்டன் பேனாதானா வைத்து எழுதித் தீர்ப்புச் சொன்னார்கள்? இதோ பார். இரண்டு தம்படிக்கு மூன்று வருஷத் திற்கு முன் பேனா வாங்கினேன். அந்தப் பீரோவிலுள்ள கணக்கு கள் பூராவும் இதைவைத்துத்தான் எழுதி மூன்று லகாரம் வரை வரவு செலவு செய்திருக்கிறேன். எவ்வளவோ கேசுகளுக்கு

தாக்கலாகி ஜயித்து மிருக்கிறேன். பவுண்டன் பேனா எதற்கு? போடா, பிழைக்கத் தெரியாதவனே. யாரோ உன் வகுப்பி லுள்ள முட்டாள்கள் இரண்டு மூன்று பேனா வைத்திருந்தால் உனக்கு எதற்கடா? இந்தா ஆறு பைசா! நல்ல ஸ்டீல் பேனா ஒன்று வாங்கிக்கொள்! போ!

மஹா :—(விசனத்துடன் நிற்கிறான்—ஜானகி வருகிறாள்.) இந்த அரை அணா வேண்டாம். சித்தியைக் கேட்டுப் பவுண்டன் பேனாவுக்குப் பணம் வாங்கிக் கொள்கிறேன்.

ஜானகி :—குழந்தை பி. ஏ. வகுப்பில் படிக்கிறவன். ஒரு பவுண்டன் பேனா கேட்டால் அதற்கும் பணமில்லை என்று கையை விரிக்கிறீர்களே! இது நன்றாயிருக்கா? மணியன் சமையல் சாமான் களுக்கு ஜாப்தா கொண்டுவந்தால் பாதியைக் குறைத்து விட்டீர்கள். இப்போது கலியாணம் பேசவருகிறார்கள். பழம் வகையறா வேண்டு மென்றால் பதினைந்தணாவுக்கு வாழைக்காயும், கொய்யாக்காயும் வெள்ளரிக்காயும் வாங்கிக்கொண்டு வந்திருக்கிறீர்கள். வருகிறவர் கள் குரங்குகள் என்று நினைத்தீர்களா? அவர்கள் கொண்டுவரும் வெள்ளித்தட்டுகளில் இவைகளையா எடுத்து வைப்பது? இருந் திருந்து கடுகத்தினை ஒரு குழந்தைக்குக் கலியாணம் செய்யப்போகி றீர்கள். ஊராருக்குத் தெரிந்தால் மானக்கேடு!

தீக்ஷிதர் :—(பல்லைக்காட்டிக்கொண்டு) அசடே; பணம் லக்ஷ்மி, அதை அலக்ஷியம் செய்வது மகா பாபம். இதோ பார். இருப்புப் பெட்டியில் உனக்கும் உன் பிள்ளைக்குமாகத்தானே ரொக்கமாகப் பூட்டிவைத்திருக்கிறேன். அதிலிருந்து எடுத்துச் செலவு செய் தால் குறைந்துபோகுமே. ஒரு பைசாத் தொடலாமா! (இரும்புப் பெட்டிக்கு நமஸ்காரம் பண்ணுகிறார்.)

ஜானகி :—அடே யப்பா! உங்களுக்கு இளையாளாக வாக்கப் பட்டதிலிருந்து நல்லநாள் பெரியநாள் ஏதாவது உண்டா! நல்ல புடவை, நகைகள் உண்டா? சுடுகாட்டுக்குப் போகும்போதா பணம் உபயோகப்பட! ஊரிலுள்ள மற்ற ஸ்திரீகளில்லையா? ஒரு மோட் டார் வைத்துக்கொள்ள நமக்கு அந்தஸ்து இல்லையா? கார் இருந் தால் தேர் திருநாளுக்காவது போய்வரலாமே!

தீக்ஷிதர் :—போதும்! இந்தா ரூபாய் ஏழும் பதினாலு. மேற் கொண்டு செலவுக்கு வழிவைக்காதே! (ரூபாய் கொடுக்க, மஹா லிங்கம் போகிறான்.)

ஜானகி :—மூன்றும் மாதம் உங்கள் கட்டைவண்டியில் அறை பட்டவனுக்கு ரூபாய் முந்நூறு தண்டம் கொடுத்தீர்கள்.

போனமாதம் மூணு அணு கொடுத்துச் சாக்கடை சுத்தம் செய்யாத தால், யூனியன் போர்டார் பிராஸிகூஷன் செய்ததால் ரூபாய் எழுநூறு தண்டம்! அதிருக்கட்டும். போனவருஷம் இன்கம் டாக்ஸ் பாரத்தை மோசமாகப் பூர்த்திசெய்து அனுப்பினீர்கள். சுமார் ஆயிரம் ரூபாய் வரி ஏற்படவேண்டியிருக்க ரூபாய் 2,000 வரியும், 2,000 அபராதமுமாக ரூபாய் நாலாயிரம் தொலேத்தீர்கள். வீட்டுச் செலவுக்காக ரூபாய் ஏதாவது கேட்டால் மூக்கால் அழ ஆரம்பிக்கின்றீர்கள்.

தீக்ஷிதர் :—உன்னை இதெல்லாம் யார் கேட்டார்கள். நான் சொன்னது ஞாபக மிருக்கட்டும்.

ஜானகி :—உங்களேப்போல் பலபேரை நான் பார்த்திருக்கி றேன். இதேமாதிரிதான் பணத்தைச் சேர்த்துச் சேர்த்து வைத் திருந்து ஒருநாள் வாயைவிட்டார்கள். ஊரிலேயோ நீங்கள் வாங்கும் வட்டியைப்பற்றி ஜனங்கள் கங்குகரையில்லாமல் வயி றெரியப் பேசுகிறார்கள். பணவிஷயத்தில் கொண்டான் கொடுத்தா னும் கிடையாது. தவிர, உங்கள் தமக்கை வீட்டுப் பணத்தையும் மோசடி செய்து உங்கள் தகப்பனர் காலத்திலேயே எடுத்துக் கொண்டுவிட்டீர்கள். அவர்கள் இடும் சாபமோ கேட்கக்கூட வில்லே. சிவ, சிவா! தலையைத்தூக்கி வெளியே போகக் கூட வில்லே. இப்படி எல்லாரும் வயிறெரிந்தால் நாம் நன்றாக இருக்க முடியுமா? உங்களுக்கு வாக்கப்பட்டதற்கு ஒருவேளை சோறுதான் கொடுத்துவைத்திருக்கிறேன். பாழும் தெய்வம் கண்திறக்கமாட் டேன் என்கிறதே!

(கண்ணைக் கசக்குகிருள்.)

தீக்ஷிதர் :—சரி, சரி. நிறுத்து உன்கதையை. இந்தப் பாரத மெல்லாம் பணத்திற்காகத்தானே. இந்தா ரூபாய் பத்து. எல்லா வற்றையும் கூடியவரையில் சுருக்கிச் செலவுசெய். (பணம் கொடுக்கிறார்.)

[மஹாலிங்கம் பிரவேசம்.]

மஹா :—அப்பா! என் சைகிள் டயர் கிழிந்திருக்கிறது. வேறே புதிசாக வாங்கவேண்டும். ரூபாய் பதினைது அவசியம் வேண்டும்!

தீக்ஷிதர் :—கெட்டது குடும்பம்! சைகிள் வாங்கி வருஷம் மூன்று கூட ஆகவில்லேயே! அதற்குள்ளே டயர் தொலேந்து விட்டது! நான் அப்போதே வேண்டாமென்று சொன்னேனே! கேட்டாயா?

ஜானகி :—ஆமாம்! டையர்கள் மூன்று வருஷங்காளாகியும் கல்மாதிரி இருக்குமோணு? குழந்தையும் ஓட்டுக்கள் போட்டுச் சரிப்படுத்திவைத்து மூன்று வருஷமாக ஓட்டியிருக்க, இந்த அனியாய முண்டோ? மூன்று வருஷங்கள் கழிந்தது போராதா பதினுறு ரூபாய் கொடுக்க? நான்தான் கலியாணத்திற்கு வாங்கின புடவைகளை வைத்துக்கொண்டு காலம் தள்ளுகிறேன்.

தீக்ஷிதர் :—இரண்டு அல்லது மூன்றுக்கு பழைய டயர் அகப்படாதா? என்னமோ, உன் இஷ்டம்போல் செய்; புத்திசாலியாய் இருந்தால் பிழைப்பாய். இந்தா, பதினுறு ரூபாய்!

ஜானகி :—வருகிறவர்களெல்லாம் எங்கே சாப்பிடுவார்கள்? மணியனிடம் கிளப்புக்குப் போவார்கள் என்று சொன்னீர்களாமே?

தீக்ஷிதர் :—என்னத்திற்குச் செலவு? உனக்கும் சிரமம்?

ஜானகி:—"ஆடு நனைகிறதென்று ஓநாயிக்கு வெகு வருத்தமா?" இந்தச் சேதியைக் கேட்டாலுமே அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் கேலி பண்ணுவார்களே! ஈசுவரா, இப்படியு மிருக்குமா என்தலையெழுத்து?

தீக்ஷிதர் :—சரி; ஜாஸ்தி தடபுடல் செய்யாமல் ஒரு கறி, ஒரு குழம்புக்கு ஏற்பாடு செய்துவிடு.

ஜானகி :—5,000 வாதக்ஷிணை வாங்குகிறீர்கள். நகைகள் ஐயாயிரத்திற்குக் குறையக்கூடா தென்கிறீர்கள். வருகிறவர்களுக்கு ஒரு கறி, குழம்பு போருமா?

தீக்ஷிதர் :—எப்டியாவது ரூபாய் இரண்டு அல்லது இரண்டேகாலுக்குள் விஷயத்தை ஓட்டிவிடு! செலவுகளை அடக்கிக்கொள். வெகு அசடாக இருக்கிறுயே! உன்னை நான் நல்ல கெட்டிக்காரி என்று நினைத்துத்தானே கலியாணம் செய்துகொண்டேன். இப்படி செலவுகளைக் கொண்டுவருவாய் என்று தெரிந்திருந்தால் எனக்குக் கலியாணமே வேண்டா மென்று சொல்லியிருப்பேனே? பணத்தைச் செலவுசெய்தால் வெகுநாள் வருமா?

ஜானகி :—உங்கள் பணத்தை வக்கீலுக்கும், கோர்ட்டுக்குமாக அழுவீர்களே தவிர நல்ல காரியங்களுக் கென்றுல் மூக்கால் அழுவீர்கள். என்ன செய்கிறது!

தீக்ஷிதர் :—இந்தா, கோபித்துக் கொள்ளாதே. இதோ நமது காரியஸ்தர் வருகிறுர்.

[நக்ஷத்ரேச ஐயர் பிரவேசம்.]

தீக்ஷிதர் :—சம்மந்தி வகைபறு எந்த வண்டிக்கு வருகிறுர்களாம்? தாக்கலுண்டா?

நக்ஷத்திரேச ஐயர் :—ஆமாம். மாலே 6-½க்கு வருகிறூர்களாம்.

தீக்ஷிதர் :—சரி. வரட்டும். (ஜானகியைப் பார்த்து) ஜானகி! எல்லாரும் இன்று மாலே வண்டிக்கு வருகிறூர்களாம். போய் வேண்டிய ஏற்பாடுகளேச் செய். ஜாஸ்தி ஆடம்பரம் வேண்டாம். ஊரும் ஒருமாதிரியாக இருப்பதாகக் கேள்வி. (ஜானகி போகிறூள்.)

தீக்ஷிதர் :—ஐயா ! நேற்று தினத்தோடு பாராகும் நோட்டுக்களே வியாஜ்யம் போட வக்கீலிடம் ஏற்பாடு செய்துவிட்டீர்களா ?

நக்ஷத் :—ஆமாம். அதற்குள் கொடுக்கவேண்டிய சமுசாரிகள் வக்கீ லாபீசுக்கு அசல்வட்டித் தொகையோடு வந்து கெஞ்சினூர்கள். நாம் ஐயங்காருக்குக் கொடுக்கவேண்டிய பீசை மட்டும் அவர்கள் கொடுக்க ஒத்துக்கொள்ளாததால் வியாஜ்யத்தைப் போடச் சொல்லிவிட்டேன்.

தீக்ஷிதர் :—பேஷ், நல்லகாரியம் செய்தீர். வியாஜ்யம் போட்டு டிக்ரியாஞல் வக்கீல் பீசு நம் கைப்பொறுப்பாகாது.

நக்ஷத் :—டிக்ரியானதும், ஜப்திகட்டளே யெடுத்துத் தட்டு முட்டுச் சாமான்களேக் கிளப்புவதுதான் தாமசம், உடனே பணமாகிவிடும்.

தீக்ஷிதர் :—ஜப்திகட்டளேயை நிறைவேற்றவரும் கோர்ட்டு அமீஞவுக்குச் சேரவேண்டிய பீசும், அவர்களேப் பொறுத்தது, தெரியுமா ?

நக்ஷத் :—ஆஹா, தெரியும்.

[ஒருவயதுசென்ற பிராம்மணர், ஷியாரின் மனேவி, பெண் பிரவேசம்.]

தீக்ஷிதர் :—யாரையா அது ? என்ன ஜோலி ?

பிராமணர் :—(ஒருவிவாக முகூர்த்தப் பத்திரிகையை நீட்டி) அரிஹரீ ! நான் இருப்பது திருவையாறு. மிகவும் ஏழை. இதோ இவள் என் பெண், வயது பதினேந்தாகிறது. கலியாணம் செய்ய மார்க்கமில்லே. தாங்கள் தக்க ஸந்ததியைச் சேர்ந்தவாளென்றும், தங்களுடைய தர்ம சத்திரங்கள் பல இடங்களிலு மிருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஏதோ தங்களே ஆச்ரயிச்சு வந்திருக்கிறேன்.

தீக்ஷிதர் :—(கடுகடுத்த முகத்துடன்) என்னது ? கலியாணமா ? என்னய்யா பேத்துகிறீர் ? இப்படிப்பட்ட காரியங்களுக்கு எவனிடம் முதலிருக்கிறது ? போம் ஐயா போம். நாடு இருக்கப்பட்ட நிலே தெரியாமல் தடுமாறுகிறீர். சத்திரமாவது சாவடியாவது ! எங்கள் பாரம்பரையிலே அந்தமாதிரி வழக்கம் கிடையாதையா !

வேறு மனுஷ்யாளைப் போய்ப் பாரும். (பிராமணன் வகையறு போகிறுர்கள்.)

தீக்ஷிதர் :—பெரிய உபத்திரவமாக இருக்கிறது. வீட்டி லிருப்பவர்களுக்கும் யாசகர்களுக்கும் வகை செய்ய முடியாது போல் இருக்கிறது.

[பிராமணர் ஒருவர் பிரவேசம்.]

தீக்ஷிதர் :—தாங்கள் யார் ?

பிராமணர் :—நான் ஸ்ரீ காமகோடிபீடம் சுவாமிகள் ஸந்நி தானத்து ஏஜண்டு. ஸ்வாமிகள் அடுத்தவாரம் இந்த ஸ்தலத்திற்கு விஜயம் செய்கிறுர்கள். ஸ்ரீமுகமும் அனுப்பி யிருக்கிறுர்கள். தாங் கள் தக்க ஆஸ்திகாளென்று கேள்விப்பட்டு வந்தேன். தங்களுடைய கிருஹத்தில் பிக்ஷை செய்யலாமோ !

தீக்ஷிதர் :—ஆஹா. அதெற்கென்ன தடை ! ஸ்வாமிகள் தரிசனம் கிடைப்பது ஏதோ பூர்வஜன்ம சுகிர்தம். ஆனுல், என் பார்யை பிரஸவ டயமாக இக்குமே ! அதனுல் பாதகமில்......?

பிராமணர் :—அப்படியானுல் அது வர்ஜ்யதம். வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாமே ?

தீக்ஷிதர் :—(சந்தோஷத்துடன்) சரி, சந்நிதானத்து உத்திரவு படி நடக்கக் காத்துக்கொண் டிருக்கிறேன். உத்திரவா ?

பிராமணர் :—சரி, ஆனுல் நான் போய்வருகிறேன். (போகி றுர்.)

[பரதேசி ஒருவர் வருகிறுர்.]

பரதேசி :—இந்த ஆத்மா திருவண்ணுமலையி லிருந்து இரா மேசுவரத்திற்கு யாத்திரை போகிறது. ஏதோ தங்களைப் பார்த்துப் போகலாமென்று நினைத்து வந்தது.

தீக்ஷிதர் :—என்னைப்பார்த்து என்ன ஐயா ஆகவேண்டியது ? இந்த ஊரில் பெரிய முதலாளிகள் இருக்கிறுர்கள். போய்ப் பார்த் தாலும் பலன் உண்டு.

பரதேசி :—ஒரு கவளம் அன்னம் கிருபைசெய்யக் கூடாதா ?

தீக்ஷிதர் :—துவாதசி மடம், சத்திரம் வகையறுக்களுக்குப் போனுலும் சம்பிரமமாகச் சாப்பிடுவதை விட்டு, விட்டு எங்களை ஏன் ஐயா வதைவாங்குகிறீர் ? சாமி ! போய்வாரும்.

பரதேசி :—அண்ணுமலைக்கு அரோஹரா ? வெகு சந்தோஷம். அரோஹரா. (பாடிக்கொண்டு போகிறுர்.)

(தொடரும்)

# தந்தையும் மகனும்

ரா. ல.

முன்னொரு காலத்தில் க்ரிமியா தேசத்தில் முஸலேமல்-அஸ்ரப் என்று பெயருடைய கான் வம்சத்து அரசன் ஒருவன் இருந்தான். அவனுக்கு தோலயக்-அல்கல்லா என்னும் புத்ர னிருந்தான்.

அந்தக் கான் கிழவனாய்விட்டான். ஆன போதிலும் அவனது அந்தப் புரத்தில் அநேகம் பெண்களிருந்தனர். அவர்கள் அனைவரும் கானிடத்தில் மிகவும் அன்பு கொண்டிருந்தார்கள். ஏனெனில் அவ்வரசன் நல்ல திட்சாலியாயும், அவர்களிடத்து மிகவும் பரிவுடனும் குதூகலமாயும் நேசம் பாராட்டி வந்தான். ஒரு வீரன் கிழவனாய், தலை நரைத்த பின்னும், பரிவுடன் நேசிப்பானாகில் அவ்வன்பை யேற்று நேசிப்பது பெண்களினியல்பே.

அவனிடத்து இவர்களனைவரும் அன்போடிருந்த போதிலும், அவன் ருஷியா தேசத்திலிருந்து கைதியா யழைத்து வந்த ஒரு பெண்ணின் மேல் மட்டும் அதிக வாஞ்சை வைத்திருந்தான். அவ னிடத்தில் பல தேசத்திலிருந்து வந்திருந்த அந்த முந்நூறு மங்கைக ளனைவரையும் விட அவளே அவன் உயிர் நிலையாயிருந் தாள். ஒவ்வொருத்தியும் தேவ கன்னிகையைப்போல் எழில் வாய்ந்தவள். அவர்களனைவரையும் அவன் மிகுந்த போகத்திலும், ஸுகத்திலும் வைத்திருந்தான். அவரவர் இஷ்டப்படி ஆடவும், பாடவும், களித்திருக்கும்படியான ஏற்பாடனைத்தையும் செய்திருந் தான்.

அவன் அந்த ருஷியப் பெண்ணை அடிக்கடி தன் கோட்டைக் குள் தன்னுட னிருக்கவேண்டி அழைத்து வருவான். அங்கு அவளுக்கு மகிழ்ச்சியுட னிருக்கவேண்டிய அனைத்து மிருந்தன. அங்கு மிகவும் நேர்த்தியான விலை மதிப்புடைய ஆடை யாபர ணங்களும், பல தேசங்களினின்று கொண்டுவரப்பட்ட அபூர்வமான பக்ஷிகளும், சங்கீத வாத்யங்களும் அவனுடைய அந்தரங்கக் காதலும் அவளுக்கென்றிருந்தன. அந்தக் கான் இங்கு நிச்சிந்தை யுடனும், மிகுந்த உல்லாசத்துடனும் அவளுடன் நாட்களைக்

கழித்து வந்தான். அவனது முதுமைப்பருவம் கவலையற்று மனோகரமாயும் சாந்தமாயுமிருந்தது. ஏனெனின் அவனது புத்ரனான அல்கல்லாவோ புலியைப் போல் அஸாத்ய சூரன். மிகுந்த பாராக்ரமத்துடன் நாடெங்கும் படையெடுத்துச் சென்று, சென்ற விடமெங்கும் வெற்றியுடனும், கீர்த்தியுடனும், மிகுந்த செல்வத்துடனும், அழகிய பெண்மணிகளுடனும் திரும்பி வருவான். அவன் போன விடமெங்கும் ரத்த வெள்ளமும், நகரமெல்லாம் சுடுகாடாகப் பிணமும் சாம்பலுமாகவும், பார்க்கப் பயங்கரமாக மாறிவிடும். அதனால் அக் கானுக்குத் தன் புத்ரன், வம்சத்தின் புகழ் குன்றாமல் குலத்தை விளக்க வந்தவனாகவே யிருந்தபடியால் மிகவும் கவலையற்றிருக்கும்படி யிருந்தது.

ஒரு தடவை இம்மாதிரியே அல்கல்லா ருஷியாவின் மீது படையெடுத்துச் சென்று வெற்றியுடன் திரும்பிவர, அந்த வெற்றிக் கறி குறியாக அரசனால் அநேக விருந்துகளும் வேடிக்கைகளும் திருவிழாப்போல் கொண்டாடப்பட்டது. ஊரெங்கும் ஒரே கோலாகலமாயிருந்தது. இளவரசனின் வீர பராக்கிரமங்களைப் புகழ்ந்து அனைவரும் வேண்டிய மதுவருந்தியும், ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டுமிருந்தார்கள். பூ புத்ரனின் புகழையும் கீர்த்தியையும் கண்டு முதிய "கான்" அடைந்த ஆனந்தம் அளவிடப்படாதிருந்தது. தன் வம்சம் பிற்காலத்தில் புகழுடனேயே விளங்கிக்கொண்டிருக்குமென்ற நம்பிக்கை தானிருக்கும் பொழுதே ஊர்ஜிதமாய் விட்டபடியாலும், தன் சந்தோஷத்தை யடக்க முடியாமலும், தன் புத்ரனிடத்து வைத்த அபிமானத்தை வெளியிடும் பொருட்டு ராஜ சபை நடுவில் விருந்துண்டு முடியும் சமயத்தில், தன் மதுக் கலசத்தைக் கையிலேந்தி "அலகல்லா, முகமதுவின் அருளினால் என்றும் நீ கீர்த்தியடைவாயாக. அல்லா பரம புருஷர். என்னுடைய ஆயுட் காலத்திற்குள்ளேயே என் யௌவனத்தை என் தீர வீரனான புத்ரனிடத்திலிருத்தி விட்டார். என் முதிய கண்களுக்குச் சூரிய வெளிச்சம் எப்பொழுது புலப்படாதோ, என் தேகம் எப்பொழுது புழுக்களுக்கு ஆகாரமாய் விடுமோ, அப்பொழுது 'நான்' திரும்பவும் புத்ரனிடத்துள் வசிப்பவனாவேன். அல்லா மஹான் முகமது உண்மையான தீர்க்கதரிசி. எனக்கு நல்ல புத்ரனிருக்கிறான். அவன் புஜபராக்ரமமுடையவனாகவும், திடச்சித்தமுடையவனாகவும், தூய ஹ்ருதயத்தோடு மிருக்கிறான். உன் பிதாவின் கைகளிலிருந்து எதை நீ வாங்கிக் கொள்ள இஷ்டப்படுகிறாய், அல்கல்லா? மனதிலுள்ளதை உரைத்தாயானால் மனப் பூர்வமாய் அளிக்கிறேன்" என்றுரைத்தான்.

தந்தையின் சொற்கள் ஓய்ந்தனவோ அல்லவோ தோலயக் அல்கல்லா, இரவில் விளங்கும் கருங்கடலை யொத்த தன் கருங் கண்கள், மலைக் கழுகுகளின் கண்கள் போல் பிரகாசிக்க, எழுந்து நின்று, "ஓ 'மண்டலேச்வரனுயிருக்கும் என்னருமைத் தந்தையே, எனக்கு அந்த ருஷிய தேசத்துக் கைதியை அளியும்" என்றான்.

இந்தச் சொற்கள் காதில் விழுந்ததும், திடுக்கிட்டுத் தவித்து நின்ற தன் மனதை ஒருவாறு அடக்கவேண்டி, சிறிது நேரம் மௌனமாயிருந்து, பிறகு திடமான குரலில் உரக்க "அவளைத் தருகிறேன். விருந்து முடிவடைந்ததும் அழைத்துச் செல்லலாம்" என்றான்.

தீரமான அல்கல்லா சந்தோஷப் பெருக்கினல் ஜ்வலிக்கும் கூரிய கண்களுடன் தகப்பனரை நோக்கி, "அதிபதியான தந்தையே, நீங்கள் அளிக்கும் பொருளினருமையை நானறிவேன்—எனக்குத் தெரியும். நான் தங்களடிமை—உங்கள் புத்ரன். என் உதிரத்தை அப்படியே உறிஞ்சி எடுத்துக் கொள்ளுங்கள். நான் என் உயிரைத் தங்களுக்கு மனப் பூர்வமாய் அர்ப்பணம் செய்வேன்" என உரைத் தான். "எனக்கு வேண்டுவ தொன்றில்லை" என்று சொல்லி, கான், ப்ரக்யாதிபெற்று மகுட மேந்தி நிற்கும், நரைத்த தன் தலை கவிழ்ந்து நின்றான்,

விருந்து முடிவடைந்ததும் அவர்களிருவரும் அந்தப்புரத்தை நோக்கி மௌனத்துடன் சென்றார்கள். ஆகாயத்தில் மேகம் கூடி இருந்தபடியால் எங்கும் ஓரே இருள் சூழ்ந்திருந்தது. ஒரு நக்ஷத்ர மாவது கண்ணுக்குத் தென்படவில்லை. வெகுதூரம் வரையில் இருவரும் ஒருவருக் கொருவர் பேசாமல் நடந்து சென்றார்கள்.

பிறகு அஸ்ரப் "என் வாழ்நாள் விரைவாக முடிவடைந்து வருகிறது. என் ஹ்ருதயம் முதலிய எல்லாவற்றினுடைய சக்தி, ஆண்மை யாவும் க்ஷீணமடைந்து வருகின்றன. என் தற்காலத்திய வாழ்வும் சக்தியும் அப்பெண்ணின் அந்தரங்க அன்பினல் அடையப்படும் தழுவுதலினலேயே. தோலயக், அவள் உனக்கு அத்ய வசியமா? சொல்லு. என்னுடைய மற்ற நூறு மனைவிமார்களை அல்ல அனைவரையுமே நீ அவளொருத்திக்குப் பதிலாக ஏற்றுக் கொள்.

தோலயக் அல்கல்லா பெருமூச்சுவிட்டுவிட்டு மௌனியா யிருந்தான். திரும்பவும் கான் "எனக்கு இன்னும் இவ்வுலகில். எவ்வளவு நாளிருக்கிறது? மிகவும் சொற்ப நாளே. அவள்தான் என் வாழ்வின் கடைசி ஜோதி-இன்பம்-அந்த ருஷியப் பெண்ணே.

அவள் என்னை—என், அந்தக்கரணம் முற்று மறிவள்—முழு மன துடனும் என்னை நேசிக்கிருள். அவளில்லாவிடில் என்னிடம்—ஒரு நரைத்த கிழவனிடம்—ப்ரேமை பாராட்டுபவர் எவர்? அவர் களனைவருக்குள் ஒருவர் கூடக் கிடையாது; அல்கல்லா! ஒருவருமே யில்லை, !''

அல்கல்லா பேசாது மௌனியாயிருந்தான், மேலும் கான், "நீ அவளை ஆலிங்கனம் செய்கிருயென்பதையும், அவள் உன்னை முத்த மிடுகிருளென்பதையும் நான் அறிந்துகொண்டு எவ்வாறு உயிர் தரிக்கமுடியும்? ஒரு பெண் விஷயத்தில், தகப்பன் பிள்ளை என்ற பாந் தவ்ய பேதமே கிடையாது. தோலயக், நாம் அனைவரும் வெறும் ஆடவர்களே! என் அருமை மகனே! நான் இவ் விரவிற்குப்பின் உயிர் வாழ நேரிடுவதை விட, என்னுடம்பிலிருக்கும் வடுக்களான இரணங்கள்யாவும் திரும்பவும் அப்படியே ரணமாக மாறி, ரத்தம் முழுவதும் பீறிட்டு வெள்ளமாய் ஓடினாலும் பாதகமில்லை'' என்ருன். அப்பொழுதும் அவன் மகன் வாய் திறவாமலே யிருந்தான்.

அந்தப்புரவாயிலையடைந்த அவ்விருவரும் வெகு நேரம் மௌனமாய்த் தலை கவிழ்ந்தபடியே அக்கதவைத் திறக்காமல் அத னெதிரில் நின்றிருந்தனர். சுற்றிலும் இருள் சூழ்ந்திருந்தது. ஆகாயம் முழுவதும் மேகம் நிரம்பி இடியும் மின்னலுமாயிருந்தது. காற்றும் வேகமாய்ச் செடிகளினூடே அடித்துக் கொண்டு இசை பாடுவதுபோலிருந்தது.

"அப்பா, நான் அவளை ஆதி முதற்கொண்டு நேசிக்கிறேன்.'' என்று மெதுவாய் அல்கல்லா சொன்னான்.

"நான் அறிவேன்; அவள் உன்னை நேசிக்கவில்லை யென்பதையு மறிவேன்'' என்ருன் கான்.

"இவளை நினைக்கும் பொழுதெல்லாம் என் ஹ்ருதயம் வெடித்துவிடும் போலிருக்கிறது!''

"என் முதிர்ந்த ஹ்ருதயம் இப்பொழுது எதனுல் நிரம்பியிருக் கிறது''

திரும்பவும் கொஞ்ச நேரம் இருவரும் மௌனமாயிருந்தனர்.

அல்கல்லா பெருமூச்சுவிட்டு, "ஸ்திரீகள் ஆடவர்களுக்கு எப்பொழுதும் ஹிம்சையும் வேதனையும் உண்டாக்குபவர்கள். அவள் மிகவும் எழில் வாயந்தவளாயிருந்தால், பிறருக்கு அவளை அடைய இச்சை நேரிடுகிறபடியால், அவள் கணவன் மனக்கொதிப் படைந்து, அதனுல் நிம்மதியற்றவனுய் விடுகிருன். அவள் குரூபியா யிருந்தாலோ அவன் பிறரிடத்தில் அசூயை அடைந்து அழுக்கா

றுக்கு உள்ளாகிறன். அவள் சாதாரணமாய்க்குரூபியல்லாமலும் மிகவும் எழில் வாய்ந்தவள் அல்லாமலும் இருந்தாலும் அவள் நல்ல சௌந்தரியவதி என்று நினைத்து முடிவில் ஏமாற்றமடைவதால், தான் வேதனைக்காளாகிறன். 'எல்லாம் பெண்களின் மூலமாகவே'; என்று கூறியிருக்கிற பண்டிதரின் வாக்யங்களின் அர்த்தத்தை இப்பொழுதுதான் நன்குணர்ந்தேன்'' என்றான்.

''நோய் முற்றினல் எந்த மருந்திலும் குணமாகாதது போல் இந்நீதி சாஸ்திரம் எல்லாம் மனநோய் தீர்க்கும் மருந்தாகா.'' என்று முதியவன் சொன்னன்.

''அல்கல்லா அப்பா, அவளால் நாம் ஒருவரையொருவர் கண்டு பரிதாபப் பட்டுக்கொள்ள வேண்டும்'' என்று சொல்லி, கான் தலையை நிமிர்த்தி நீர்நிறைந்த கண்களுடன் தன் புத்திரனை உருக்கத்துடன் நோக்கினன்.

அல்கல்லா ''அவளை நாம் கொன்றுவிடலாம்'' என்று சொல்ல, கான் சிறிதுநேரம் யோசனையில் ஆழ்ந்து பிறகு ''நீ அவளையும், என்னையும்விட உன் ஆத்மாவையே உயர்வாகக் கருதுகிறய்'' என்றான்.

''ஆம், நீங்களுமப்படித்தான்,'' என்று பதில் கூறிவிட்டு இருவரும் திரும்பவும் சிறிது நேரம் பேசாமலிருந்தார்கள். கான் 'ஆம் நானுமப்படித்தான்,'' என்று சோகத்துடன் உரைத்தான். அம்மனே வேதனையானது அவனைச் சிறு குழந்தைபோலாக்கி விட்டது. ''சரி, நாம் அவளைக் கொன்றுவிடலாமா? நான் அவளை உனக்களிக்க முடியாது. என்னல் முடியவே முடியாது'' என்று கான் கண்ணீருகுத்தான்.

''அப்படியாயின் இந்தத் தாபத்தைப் பெறுக்க இனி என்னல் இயலவே இயலாது. உங்கள் வாளால் என் மார்பை இப்பொழுதே பிளந்துவிடுங்கள்; அன்றேல் அவளை எனக்களியும்'' என அல்கல்லா உரைக்கவே, கிழவன் அதற்கு மறுமொழி யொன்றும் கூருதிருந்தான். ''அல்லாவிடில் மலையுச்சியிலிருந்து கீழுள்ள சமுத்திரத்தில் நாம் அவளைப் போட்டுவிடலாம்'' என்று அல்கல்லா சொல்ல, கான் ''அவளை மலையுச்சியிலிருந்து கீழுள்ள சமுத்திரத்தில் நாம் போட்டுவிடலாம்'' என்று அவ்வார்த்தைகளையே எதிரொலித்தது போலத் தான் மொழிந்தான். பிறகு வாயிலைக் கடந்து அவர்கள் அந்தப் புரத்திலிருந்த அவளறைக்குள் சென்றுர்கள். அவள் அங்கே ஓர் விலையுயர்ந்த ரத்ன கம்பளத்தின்மீது துயின்று கொண்டிருந்தாள். அவள் முகத்தை நெடுநேரம் உற்று நோக்கியவண்ணம் இருவரும் அவளெதிரில் நின்றிருந்தனர். கானி

னுடைய கண்களிலிருந்து முத்து முத்தாக் கண்ணீர் வழிந்தோடி அவன் நரைத்த தாடியை நனைத்தது. அவன் புத்திரனோ தன் மனத் தாபத்தைத் தனக்குள் அடக்குபவன் போல் பல்லை நறநற வென்று கடித்துக்கொண்டும், பெருமூச்சு விட்டுக்கொண்டும் இருந் தான். தகப்பன் சும்மா நின்றிருப்பதைக் கண்டு அவன் அவளை எழுப்பினான். அவளது எழில் வாய்ந்த முகம் பூர்ண சந்திரனைப் போல் பிரகாசமாயிருந்தது. நடு நிசியில் எழுப்பப்பட்டமையாலும், கண்ணை விழித்ததும் கான் எதிரில் நின்றிருந்தமையாலும், வழக்க மாய், கானைத்தவிர வேறெவரும் வந்ததில்லையாகையாலும் அவள் கானிடத்துத் தன் இருகரங்களையும் நீட்டி "என் கிழச் சிங்கமே, எனக்கு ஒரு முத்தமளி" என்றாள்.

அதற்கு நேர் மாறாக அவன், "எழுந்திரு நீ எங்களோடு வர வேண்டும்" என்று சாந்தமாக உரைத்தான். உடனே திடுக்கிட்டு எறிட்டுப் பார்க்க அங்கு அல்கல்லாவைக் கண்டதோடு தன் சிங்கத் தின் கண்களில் நீர் பெருகுவதையும் கண்டாள். அவள் அதிக ஊக்க முடையவளாதலால் சமாசாரமனைத்தையும் ஒரு நொடியிலறிந்து கொண்டாள். உடனே எழுந்து, "இதோ வந்து விட்டேன்; ஒருவ ருக்கும் வேண்டாமென்று கடைசியாகத் தீர்மானம் செய்திருக்கிறீர் கள். ஆமாம். திடச் சித்தமுள்ள வீரர்களுடைய தீர்மானம் இதுவே! நான் உடனே வருவேன்" என்றாள். உடனே அம்மூவருமாகச் சமுத்திரத்திற்குப் போகப்புறப்பட்டார்கள். வழி முழுவதும் கரடு முரடாக இருந்ததால் அந்நள்ளிருளில் காட்டினிடையே சென்ற ஒற்றையடிப் பாதையினூடே செல்வது மிகவும் கஷ்டமாயிருந்தது. காற்றும் ஜில்லென்று விசையாக அடித்துக்கொண் டிருந்தபடியால் செடி கொடிகளால் வழி மறிக்கப்பட்டுக் கல்லின் மேலும் முட்களின் மேலும் நடக்க நேரிட்டது. அப்பெண் மிகவும் மெல்லியளாகையால் சீக்கிரம் சோர்வடைந்து விட்டாள். ஆனால் கர்வத்தினால் அவர் களிடம் கூறாமலே தொடர்ந்தாள். அவள் பின்தங்கித் தயங்கி வரு வதை நோக்கின கானின் புத்திரன், "உனக்குப் பயமாயிருக்கிறதா?" என்று கேட்டான். அதற்கவள் பதில் சொல்லாமல், பிரகாசமான கண்களோடு அவனை உற்றுப் பார்த்து, தன் ரத்தம் பீறிடும் பாதங் களைக் காண்பித்தாள். "நான் உன்னைத் தூக்கிச் செல்கிறேன்" என்று அல்கல்லா தன் கைகளை நீட்டினான். ஆனால் அவள் தன்னிரு கரங்களாலும் தன் கிழச் சிங்கத்தின் கழுத்தைக் கட்டிக்கொள்ள அவன் அவளை அலக்காய் ஒரு சிறுபறவையைத் தூக்குவது போல் தூக்கித் தன் தோளின் மேல் வைத்துக்கொண்டான். அவள் உட் கார்ந்த வண்ணமே, இருபுறத்திலுமிருந்த மாக்கிளை, கொடிகள் முத

லியவைகளைக் கானின் கண்களில் படாவண்ணம் விலக்கிக்கொண்டே வந்தாள். வெகு தூரம் நடந்த பின்பு சமுத்திரத்தின் அலையோசை அவர்கள் காதில் விழ ஆரம்பித்தது. அப்பொழுது கானுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த தோலயக் "அப்பா நான் முன்னே செல்லுகிறேன். ஏனெனில் ஒரு வேளை என் மனமானது தங்களை முதுகில் என் கை வாளினால் குத்திக் கொல்வதற்குத் தூண்டக் கூடும்" என்றான். "ஆம், கடந்து முன் போ, அல்லா உன் இச்சையைப் பூர்த்தி செய்து வைப்பார்—அல்லது மன்னிப்பார்—எல்லாமவன் செயல். நான், உன்னை ஈன்ற தகப்பன்; நான் மன்னிக்கிறேன். காதலினருமையை நன்குணர்வேன்" என்றான்.

கடைசியாக அவர்கள் சமுத்திரக் கரையிலுள்ள பாறையின் உச்சியையடைந்தார்கள். அங்கு அந்த எல்லையற்ற கருங்கடலின் அலைகள் பாறையினடியில் விசையோடு மோதுமோசை காதைத் துளைத்தது. ஓரே அந்தகாரமாயும், சீதளமாயும், பார்ப்பதற்குப் பயங்கரமாயுமிருந்தது.

கான் அப்பெண்ணுக்கு முத்தமிட்டு வந்தனம் செய்தான். அல்கல்லா அடிபணிந்து வந்தனம் கூறினான். அவள் ஓரத்தில் நின்று, கீழ் மோதிக்கொண்டிருந்த கருங்கடலைப் பார்த்து, அதன் நாதத்தைக் கேட்டு, பயத்தால் நடுங்கிய வண்ணம் கைகளிரண்டையும் மார்பின் மேலழுத்திப் பின்னால் நகர்ந்தாள். "என்னை நீங்கள் தள்ளிவிடுங்கள்" என்றாள்.

அல்கல்லா அங்க முழுவதும் நெட்டுயிர்ப் பெறிய, அவளை யெடுக்கக் கைகளை நீட்டினான். அதற்குள் கான் அவளைத் தன்னிரு கரங்களாலும் அணைத்து, ஆலிங்கனம் செய்து, பல முத்தங்களீந்தான். பிறகு இரு கைகளாலும் அவளைத் தன் தலைக்குமேல் தூக்கி பாறை யுச்சியினின்று எறிந்தான்.

கீழே சமுத்திர அலைகள் சங்கத்வனிபோன்ற பேரிரைச்சலுடன் மோதிய வண்ணமிருந்தது. அதனால் அவள் தண்ணீரில் விழுந்த சப்தமாவது, அல்லது அவள் வாயினின்று ஏதாவது அபயக் குரல் எழுந்ததா என்றாவது ஒன்றுமே ஒருவர் காதுக்காவது கேட்கவில்லை.

கான் அம்படியே அப்பாறையின்மேல் நிர்ஜீவனாய்ச் சாய்ந்து விட்டான். அவன் இருண்ட ஆகாயத்திலுள்ள மேகங்கள் கடலில் அமுங்குவதுபோல் காணப்பட்ட தோற்றத்தையும் அந்த எல்லையற்றதுமான கருங்கடலையும் உணர்வற்றவனாய்ப் பார்த்தபடியே யிருக்கக் காற்றினால் அவன் தாடியும் தலைமயிரும் பறந்தவண்ணமிருந்தது.

தோலயக் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு கற்சிலையைப் போலருகில் நின்றிருந்தான். பொழுது போய்க்கொண்டே யிருந்தது. புயலடிக்க ஆரம்பித்தபடியால் மேகங்கள் வேகமாய்த் தொடாரவாரம் பித்தன ; இடியும் மின்னலுமதிகரித்தன.

"அப்பா, நாம் திரும்பிப் போகலாம்" என்று அல்கல்லா சொன்னான். கான் மிகவும் மெலிந்த குரலில் "சற்றுப் பொறு" என்று எதையோ உற்றுக் கேட்பவன் போலிருந்தான். திரும்பவும் சிறிது நேரம் சென்ற பிறகு அல்கல்லா, "அப்பா, நாம் போகலாம்" என்றான். "இன்னும் சற்றுப் பொறு" என்றே கான் ஒவ்வொரு தடவையும் அவன் போகலாமென் றழைத்ததற்கெல்லாம் கூறினான். அநேக தடவைகள் கூப்பிட்டான். ஆனல் கான் தன் கடைசி வாழ்நாட்களில் ஒளி கொடுத்த விலையில்லா மாணிக்கத்தை இழந்த இடத்தை விட்டு அசையவுமாட்டேனென்றான். எதற்கும் ஒரு அந்தம் இருக்கிறதியல்பல்லவா ? கடைசியாக கான் இறுமாப்புடனும் வீரத்துடனும் எழுந்து நின்று, முகத்தைச் சுளித்துக் கொண்டான். "சரி நாம் போகலாம்" என்று வெறுப்புற்ற மெல்லிய குரலில் சொல்லி வழி நடக்க வாரம்பித்தான்.

பத்தடி செல்வதற்குள் கான் நின்றுவிட்டான். "சரி, எதற்காகத் திரும்பி எங்கு போகிறேன், தோலயக்?" என்று மகனிடம் கேட்டான். "அவளிடத்தி லல்லவா நான் என் உயிரனைத்தும் வைத்திருந்தேன். இனி எதற்காக நான் உயிருடன் இவ்வுலகி லிருப்பது? நான் கிழவனாய்விட்டேன். இனி என்னிடத்தில் ஒருவரும் ப்ரேமை வைத்துப் பாராட்டுபவரில்லை. என்னிடம் அன்பு பாராட்ட ஒருவருமற்ற பின்பு இவ்வுலகில் வாழ்வது விவேகமற்ற செயல்."

"அப்பா, தங்களுக்குக் கீர்த்தியும் குபேர சம்பத்தும் இருக்கின்றன.

"அப்பெண்ணின் இனிய வாயினின்று ஒரு திவ்ய முத்திரை யெனக்களித்தால், இவையனைத்தும் அதற் கீடாக மனப்பூர்வமாய் உனக்குத் தத்தம் செய்துவிடுகிறேன் ; அவையனைத்தும் நிலையற்றன. ஒரு பெண்ணின் மாசற்ற காதலே அழியாத செல்வம். எவன் அதை அடையவில்லையோ, அவனுக்கு இவ்வுலக வாழ்க்கையில் இன்பமென்பதே கிடையாது. அவன் கேவலம் பிச்சைக்காரனிலும் பிச்சைக்காரன். அவன் வாழ்நாட்களும் மிகவும் பரிதபிக்கக் கூடியவைகளே."

"என் அருமை மகனே, நான் போகிறேன் அல்லா ஆசீர்வாதத்தையும் கிருபையையும் உனக்களிப்பாராக ! உன் வாழ்நாட்

கள் முழுவதும் உன்னுடனேயே யிருப்பாராக ! என்றுரைத்துத் திரும்பிச் சமுத்திரத்தை நோக்கிச் சென்றான்.''

''அப்பா ! அரும் பிதாவே'' என்று தோலயக் கூவி யழுதான். அதற்குமேல் அவனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை. எவனிடத்தில் யமதூதர்கள் நெருங்கிவிட்டார்களோ அவன் ஆத்மாவை வாழ்க்கை யின்பத்தில் திருப்ப ஒருவராலும் இயலாத காரியம்.

'' என்னைப் பேசவிடும்.''

'' என்னைப் போகவிடு.''

'' ஓ அல்லா !''

''அப்பாமபுருஷர் எல்லாமறிந்தவர்'' என்றுரைத்துக் கொண்டே விரைவாய் நடந்து, பாறையுச்சியடைந்து, அங்கிருந்து கீழே குதித்தான்.

அவன் புத்திரன் அவனைத் தடுக்கவில்லை. அவனால் முடியவில்லை. —ஏனெனின் அவகாசமில்லை.

முன் மாதிரியே, கான் விழுந்த சத்தமாவது அல்லது வேறெவ் வித சப்தமாவது கேட்காமல் அந்த அலைகளின் பேரிரைச்சலே த்வனித்துக்கொண்டிருந்தது. காற்றும் விசையாக அடித்துக் கொண் டிருந்தது.

தோலயக் வெகுநேரம் செயலற்றுச் சிலைபோல் அப்பாறையுச்சி மீதிருந்து கீழே கடலை உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான். கடைசியாக '' ஓ அல்லா ! அவ்விதமான திடச் சித்தத்தையே எனக்குமளி ' என்று வாய்திறந்து உரக்கச் சொன்னான்.

பிறகு அந் நள்ளிருளில் அரண்மனைக்குத் திரும்பினான். ''கான் முஸலேமல்-அஸ்ரப்'' பரமபதமடைய கான் தோலயக்-அல்கல்லா அரசு புரிந்தான்.

# நமக்கென்ன?

ச. முனிஸ்வாமி பிள்ளை

ஓர் ஊரிலே ஒரு செட்டியார் இருந்தார். அவர் மிகுந்த செல்வமுடையார். அவருக் கிணையான செல்வமுடையவர் எவரும் அவ்வூரிலில்லை. அவ்வளவு பெரிய தனவந்தரான அந்தச் செட்டியார் பல வகையான வியாபாரங்களைச் செய்து வந்தார். ஆதலால் அந்தச் செட்டியாரிடத்தில் ஏராளமான மக்கள் வேலைக்காரர்களாக விருந்தனர். ஆ! ஹா! அவ்வேலைக்காரர்களிடத்துச் செட்டியார் காட்டிய கருணைக்கு அளவு கிடையாது. அவ்வளவு கருணையையும், அதனுல் அவர் பின்னர் அடைந்த நன்மையையும் பற்றி ஒரு சிறிது ஈண்டு எழுதுகிறேன்.

தம்மிடத்திலிருக்கின்ற வேலைக்காரர்களில் எவரேனுந் தமக்கு ஒரு சிரம மேற்பட்டு விட்டதெனச் செட்டியாரிடத்து வந்து சொன்னுல் 'இருக்கலாம்: அதைப் பற்றி "நமக்கென்ன" என்றே சொல்லி விடுவது வழக்கம். ஐயா! என்னுடைய தாயார் இறந்து போனுள். ஆதலால் எனக்குக் கொஞ்சம் பொருட் சகாயம் பண்ணவேண்டுமென்றுல் செட்டியார் "நமக்கென்ன" என்று பதில் அவசரமாகக் கூறி விடுவாரே யன்றி அச்சொல்லைச் செவியுற்று உதவி புரியார். உதவி, குறை, முறை, சச்சரவு எதைப்பற்றி வேலைக்காரர்கள் கூறி வந்தாலும் "நமக்கென்ன" என்னும் பழைய பாடத்தையே ஓதுவார். வேலைக்காரர்களிருக்கட்டும், ஊராரிருக்கின்றுர்களே அவர்களிடத்திலாவது செட்டியார் ஏதாவது இரக்க முடையவராயிருப்பாரா? அதுவுங் கிடையாது. எல்லோருஞ் செட்டியாருடைய செல்வத்திற்குப் பயந்து அடங்கியிருந்தனர். செட்டியார் நல்ல வழிக்கு வரவேண்டிய காலம் நெருங்கியது.

ஒரு நாள் அவருடைய அருமந்த மனைவியார் குளத்திற்கு நீராடச் சென்றவர்கள் அவ்விடத்திலேயே திடீரென மாரடைப்பு நோயினுல் மடிந்து போனுள். அங்கிருந்தவர்களெல்லாம் செட்டியார் பெண்டாட்டிதானே இறந்து போனுள், அதைப்பற்றி "நமக்கென்ன" என்றே போய்விட்டனர். பிரேதம் குளத்தங்கரையிலேயே கிடந்தது. வருகின்றவர்களெல்லாம் அதைப்பற்றி "நமக்கென்ன' "நமக்கென்ன"வென்று சொல்லிக்கொண்டு சென்றனரே யன்றி

ஒருவராவது செட்டியாரிடத்துச் சென்று அவர் மனைவி இறந்து போனதைச் சொல்லவில்லை. செட்டியார் காலையில் சென்ற தம் மனைவி பகல் பன்னிரண்டு மணியாகியும், வராததைக் குறித்து ஐயமுடையவராய் யாரையாவது விட்டுப் பார்த்துவரச் சொல்ல எண்ணினர். ஆனல் அன்று அமாவாஸையாதலால் வேலையாள ரொருவரும் வரவில்லை. சமையற்கார னெருவனே வீட்டிலிருந் தான். அவனை அழைத்துச் செட்டியார் "அடே! அம்மாள் காலை யிலே குளிக்கப்போனவர்கள் இன்னும் வரவில்லை. ஆதலால் நீ குளத் திற்குச் சென்று பார்த்து வா" என்ருர். முன்னரே குளத்தங்கரை யில் அந்தம்மாள் இறந்துகிடப்பதை அறிந்திருந்தும், செட்டி யாருக்குப் புத்தி புகட்டவேண்டுமென்னும் நோக்கோடு மௌனமா யிருந்த அவன் செட்டியாரை நோக்கி 'அதைப்பற்றி "நமக் கென்ன?"' என்று சொல்லிக்கொண்டே வீட்டை விட்டுத் துரித மாக வெளியே சென்றுவிட்டான். இதற்குள் ஊர் முழுதும் இச் செய்தி பரவி "இன்று இதன்மூலம் செட்டியாருக்குப் புத்தி புகட்டு வது" என்னும் நோக்கத்தோடு ஊராரும் வேலைக்காரர்களும், பிற ரும் வாளாவிருந்தனர். இந்நிலையில் சமையற்காரன் வெளியிற் போய் விட்டதும், அடங்காத சினமும், வருத்தமுமுடையவராய் வேறொரு வரு மில்லாததினல் வீதியிலாவது யாரேனும் போவார்கள்; அவர்க ளிடத்திலாவது சொல்லி யனுப்புவோம் என்னுங் கருத்துடையவ ராய் வந்து நின்றுகொண்டு போவார் வருவாரிடத்தில் இச்செய்தி யைக் கூறினர். அவர்களனைவரும் இரக்கம் ஒரு சிறிதும் காட்டாத படி 'அதைப்பற்றி "நமக்கென்ன?"' என்றே கூறிவிட்டுச் சென்ற னர். பார்த்தார் செட்டியார். தாமே குளத்தங்கரைக்குச் சென் ருர். அங்கே தம்முடைய அருமந்த மனைவியார் செத்துப் பிரேத மாக இருப்பதைக் கண்டார். கண்டதும் அவர் பதைபதைத்துத் துடிதுடித்துக் கொண்டு பக்கத்திலிருந்தவர்களைப் பார்த்து ஐயன் மீர்! இவள் என் மனைவி யென்பது உங்கட்குத் தெரியாதா? கொஞ்சம் வாருங்கள், இந்தப் பிரேதத்தை என் வீட்டில் சேர்த்து விடுவோம்!' என்ருர். அவர்களனைவரும் ஒரே முகமாக "நமக் கென்ன"? என்று சொல்லிவிட்டனர். செட்டியார் பாடு திண் டாட்டமாகிவிட்டது. உடனே செட்டியார் தம்முடைய வேலைக் க்காரர்களின் வீட்டுக்கு ஓடிச்சென்று உதவிக்கு வரும்படி அவர்களை அழைத்தார். அவர்களும் "நமக்கென்ன" "நமக்கென்ன" என்றே கூறிவிட்டனர்.

# கல்யாணத் தரகர்

ம. இராமச்சந்திரஞ் செட்டியார்

வெள்ளையர்களுக்குள்ளே மணம் பேசவும் பிடிக்கவும் தரகர்கள் வேண்டியதில்லை. ஒரு யௌவன புருஷன் ஒரு யுவதியை நாடக சாலையிலோ, விளையாட்டிடத்திலோ, பாடசாலையிலோ அல்லது இரயில் வண்டியிலோ சந்திப்பான். இருவருடைய பார்வையும் ஒன்று சேர வசீகரம் அடைவார்கள். அடிக்கடி சந்திக்கக் காதல் முற்றி மணம் ஏற்படும். பின்னர் நடக்கும் பிரிவினைக் கோலங்களை நாம் இங்கே கவனிக்க வேண்டியதில்லை. ஆனால் இவ்வித மணத்திற்குத் தரகன் என்னும் தூதன் வேண்டியதில்லை.

நமது நாட்டிலே மணமகன் பெண்ணைப் பார்க்க லஜ்ஜைப் படுவான். இது சிறிது மாறிக்கொண்டு வருகிறது. பெண்ணோ மணமகனைக் காண்பதே இல்லை. இருதிறத்தாரையும் ஒன்று சேர்க்கப் பெற்றோர் மாத்திரமன்று, தரகர் ஒருவர் அத்தியா வசியமாக ஏற்படுகிறார்.

நமது நாட்டு விவாகம் தெய்வீகம் பொருந்தியது, மத சம்பந்தமானது, பெருமை வாய்ந்தது என்போம். முகம் மதியருடையதோ தெய்வீகம் இல்லாமல் ஒரு லௌகிக ஒப்பந்தத்தின்பால் பட்டது என்று இகழ்கிறோம். அவ்விதமே மேல் நாட்டு மணங்களையும் தற்கால நூதன சட்ட சம்மந்த மணங்களையும் தாழ்த்திப் பேசுகிறோம். ஒப்பந்தம் இல்லாத தெய்வீக மணமாயின் தரகர்கள் மத்தியில் எதற்கோ தெரியவில்லை.

ஆனால் முற்காலத்தில் நமது நாட்டில் தரகர் இல்லாத மணங்கள் தாம் நடைபெற்றன. ஒரு தலைவன் ஒரு நாள் உல்லாசமாகக் காட்டில் வேட்டை ஆடச் செல்வான். அங்கே தினைப் புனத்தைக் காத்துக் கொண்டு கிளிகளை யோட்டிக்கொண்டு ஓர் அழகிய பெண் இருப்பாள். தலைமகன் அவள் அழகைக் கண்டு மயங்கிப் பேசுவான். பெண்ணோ தானும் காதல் பூண்டு பேச நாணுவாள். அப்போது ஒரு யானை எதிரிடும். பெண் நடுங்கி ஓடித் தலைவனிடம் அடைக்கலம் புகுவாள். தலைவன் யானையை அம்பால் எய்து வீழ்த்தி அவளைக் காப்பாற்றுவான். பின்னர் நீர்ச்சுனையில் அவள் குளிக்கையில் வெள்ளத்தில் விழுந்து கதறுவாள். உடனே தலைவன் சுனையில்

விழுந்து நீந்தி அவளை எடுப்பான். காதல் முற்றி ஊர் சேர்ந்து மணம் நடக்கும்.

இதுதான் ஆதியிலே தமிழில் நடந்த இயற்கைப் புணர்ச்சி என்ற விவாக முறை. வட நாட்டிலும் துஷ்யந்தன் சகுந்தலையை மணந்தது இதுமாதிரியே. இதற்கு வடநூலார் காந்தருவ விவாகம் என்பார்கள். இவ்விவாகங்களில் தரகர் இல்லை. விவாக ரத்தும் இல்லை. வியாபாரமும் இல்லை.

ஆனால் இப்போது பாருங்கள். கலியாணத் தரகர் இல்லாவிட்டால் விவாகம் நடக்குமா? பிரதிப் பிரயோசனம் இல்லாமல் மணம் நிறைவேறுமா? விவாகச் சந்தைகள் (மார்க்கட்டுகள்) தினமும் அதிகமாகிக் கொண்டு வருவதைக் காண்கிறோமில்லையா? தற்காலத்து உயர்தரப் பாடசாலைகளும் மாணவர் போசன விடுதிகளும் (ஹாஸ்டல்கள்) பெரிய விவாகச் சந்தைகள் ஆகிவருவதை நாம் காண்கிறதில்லையா? விவாகத் தரகர்களுடைய மதிப்பு அதிகரித்து வருவதை நாம் தினந்தோறும் காண்கிறோம். இவர்கள்முன் சாரதாச் சட்டம் பஞ்சாய்ப் பறப்பதில்லையோ. அத்தகைய தரகர்கள்தாம் தமிழருடைய இயற்கை மணத்தை ஒப்பந்த வியாபாரமணம் ஆக்கினார்கள். அவர்கள்தாம் ஆரியர்களுடைய தெய்வீக மணத்தையும் கன்னிகாதானத்தையும் லௌகீக வியாபாரக் கல்யாண மாக்கினார்கள். அன்னார்கள் எப்படி அவதரித்தார்கள், எவ்விதம் ஆளுகிறார்கள், எப்போது உதித்தார்கள்? என்பன சிறந்த ஆராய்ச்சிக் குரியன வாகும்.

நமது நாட்டிலே முற்காலத்தில் இருந்த காடு வனாந்திரங்கள் எல்லாம் மாயமாய்விட்டன. இயற்கை அழகு போய்விட்டது. அதோடு இயற்கை மணமும் போய்விட்டது. எங்கும் செயற்கை நிலங்கள் அதிகமாகவே மக்கள் தன்னந்தனியே சந்தித்துக் காதல் கொள்ளச் சமயம் வாய்ப்பதில்லை. தமிழருள் ஒரு வகுப்பார் ஆக இருந்தவர்கள் குல வேறுபாடுகள் ஏற்பட்டுப் பல வகுப்பினராகவே இயற்கை மணத்திற்குத் தடை ஏற்பட்டது. நூதனமாக வடக்கே இருந்து பல விதிகள் உள்புகவே மணங்களில் சுதந்திரம் போய் இதர வழிகளை நாடவேண்டி வந்தது. இந்த நிலையில் தரகர்கள் உற்பத்தி ஆனார்கள்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் மணச்சடங்கு நடத்தி வைப்பவர்கள் வைதிகர்கள். மணம் நடக்காவிட்டால் இவர்களுக்குப் பிழைப்பு இல்லை. ஆகவே மணங்கள் அதிகமாக நடத்த முயற்சி எடுத்துக் கொள்வதில் அவர்களுக்குச் சிரத்தை அதிகம். பெற்றோர்களைத் தூண்டிவிட்டு மக்களை ஒன்று சேர்த்து விடுதலிலே மிகுந்த

பிரயாசை எடுக்க முயலுவார்க்ள். பெற்றோர்களும் அவர்களுக்குத் தகுந்த மாதிரி செலவிற்குத் தருவார்கள். இவ்விதம் ஒரு வியாபாரமும் வியாபாரத் தொகுதியும் ஏற்பட்டன.

ஆரம்பத்தில் மணச்சடங்கு நடப்பிக்கும் வைதிகர்களில் இத் தொழில் ஏற்பட்டுப் பிறகு பல மக்களுக்குள்ளும் விருத்தி யடைந்து வருகிறது. ஆணுக்கும் பெண்ணுக்கும் பொருத்தம் பார்க்கும் பஞ்சாங்கமே சிலருடைய சட்ட நூல். தாயார் தகப்பன்மார்கள் கட்சிக்காரர்கள். இவர்களுக்கு வரதட்சணையும் கன்யாசுல்கமும் பிரதிப்பிரயோசனமாகும் மணமே ஒப்பந்த முடிவு. இது செய்து வைக்கும் தரகர்களுக்கு ஏற்றபடி தட்சணை கிடைக்கும். அனேகமாக இரண்டிடத்தும் பணம் கிடைக்கும்.

வியாபார ஒப்பந்தங்களில் உள்ள மோசடி, தவறுதல், பொருள் மாறுபாடு, ஆள் மாருட்டம், பிரதிப்பிரயோசனமின்மை முதலிய குற்றங்கள் இங்கேயும் உண்டு. தற்காலத்தில் இவை அதிகமாகிக் கொண்டு வருகின்றன. பெரும்பாலும் பெரிய நிலைமையில் இருப்பவர்கள் விவாக நுட்பங்களை அறியமாட்டார்கள். அன்னூர்களுக்குத் தரகர்கள் அவசியம். அவர்களே அதிகமாக மோசம் போகிறவர்கள். மோசத்தை வெளியில் காட்ட வெட்கப் பட்டு வீட்டுக்குள்ளே அவர்கள் அடங்கி இருப்பது சகஜம். ரோஷமுள்ளவர்கள் வெளியிட்டு வேடிக்கைக் காளாவதும் சகஜம்.

தற்காலத்தில் தரகர்களுடைய தொழில் மிகவும் சிறந்து கொண்டு வருகின்றது. நாட்டில் செல்வாக்கும் தற்கால இந்திய நாகரிகமும் அதிகமாக, அதிகமாகத் தரகர்களுக்குக் கொள்ளைதான். அதிகம் படித்த பிள்ளைகளுக்கு பண ஆசை அதிகம். பெண்ணைப் பெற்ற பெற்றோர்களுக்குப் படித்த மருமகன் வேண்டும். அவன் சம்பாதித்தாலும் இல்லாவிட்டாலும் அதில் அக்கரை இல்லை. ஆகவே தேடிப்பிடிக்கத் தரகர் அவசியமே. அதிலும் வைதிகம் முற்ற முற்றச் சாரதாச் சட்டமும் அமுலுக்கு வரவே தரகருடைய மதிப்புக்கு அளவில்லை.

தரகனுடைய சாமர்த்தியம் யாரால் அளவிட முடியும்? கைதேர்ந்த பம்பாய் மார்வாரித் தரகனும் நம் தென்னாட்டு வைதிகக் கலியாணத் தரகனுக்குத் தோற்று விடுவான். ஆளுக்குத் தகுந்த நூதன ஜாதகம்; நினைத்தபடி ஜனன தினம்; எண்ணுகிறபடி பொருத்தம்; பணத்துக்குத் தகுந்த அழகு, வயது, படிப்பு முதலியன ஏற்படும். இப்படிப்பட்ட இந்திர ஜாலங்கள் எந்தச் சித்தராலும் செய்ய முடியா. நாலுநாள் கலியாணம் ஒருநாளிலும் ஆகும்; நூறு ரூபாய்க் கலியாணத்துக்குப் பதினயிரம் ஆனலும் ஆகும்.

ஒரே நாளில் குபேரனையும் பிச்சையாண்டி ஆக்கி விடுவார்கள். பிச்சையாண்டி குபேரனும் ஆகலாம்.

தற்காலத்தில் நாடு பெருகப் பெருக இவர்கள் கூட்டம் இன்றியமையாததாகிவிட்டது. உலகத்தில் மணம் இல்லாமல் வம்ச விருத்தி எவ்விதம் நடக்கும். மணம் செய்வித்தல் இவர்கள் கையில் கிடைத்த பிறகு அதை அசைத்துப் பிடுங்க எந்தத் தேவதையாலும் முடியாது.

ஆனல் இவர்கள் படும்பாடு வெகு கஷ்டமே. எவ்வளவு பேரிடம் செல்லவேண்டும். எத்தனை துப்பறிவு நடத்தவேண்டும். எவ்வாறு சாகசம் செய்யவேண்டும். எத்தனை வசவுகள் சகிக்க வேண்டும். இவைகளை யெல்லாம் மீறியன்றோ ஒரு மணம் நிறைவேறும். தன்னை விடக் கைதேர்ந்த மனிதனிடம் அகப்பட்டுக் கொண்டால் இத்தரகன் திண்டாடும் திண்டாட்டத்தை நாம் கண்ணால் காணமுடியாது. இவ்விதம் ஒரு தரகன் திண்டாடின கதையை 300 ஆண்டுகளுக்கு முந்தியிருந்த ஒரு கவி வெகு அழகாக வருணித்திருக்கிறார்.

ஒரு அரசனுக்குப் பெண் வேண்டியிருந்தது. அக்காலத்தில் அரசர்கள் இதர வகுப்பாரிலும் மணம் செய்து கொள்வார்கள். வேடர் குலத்தில் ஒரு அழகிய பெண் இருந்தாள். அவளை மணம் பேச அரசன் தூதனை அனுப்பினன். தரகனுக்குத் தூதன் என்று கண்ணியமான பெயர் உண்டு. அத்தூதன் ஒரு சிறந்த படிப்பாளி. வேடர் ஊருக்குச் சென்று அப்பெண்ணின் பெற்றோரிடம் சொன்னன். அரசனுடைய திருமுக ஓலையும் எடுத்துச் சென்றான்.

தூதன் வேடனைக் கண்டு அரசர்களுடைய குலம் கோத்திரம் பிரபாவம் எல்லாம் வெகு அழகாகக் கூறித் தன் காரியத்தை எடுத்துரைத்தான். சந்திரமதி சக்கரவர்த்தியாகிய அரிச்சந்திரனைப் பெறவில்லையா, தமயந்தி நளச்சக்கரவர்த்தியைப் பெறவில்லையா, சீதை இராமபிரானைப் பெறவில்லையா, துரோபதை பாண்டவர்களைப் பெறவில்லையா ? அவர்களைப்போல் உன் மகளும் மன்னர் மன்னனகிய எம்மரசனை மணந்து அரண்மனையில் இருக்கலாமே. நளனையும் தமயந்தியையும் பிணைத்த அன்னத்தைப் போன்றே நானும் வந்திருக்கிறேன். சிவ பாக்கியம் எவ்விதம் உமது சிறு குடியாகிய வேடர்களுக்குக் கிடைக்கும்? தவறாதேயுங்கள் என்று பன்னி பன்னிப் பேசினன்.

இதையெல்லாம் சிறிது நேரம் நன்ராய்க்கேட்டுக் கொண்டிருந்த வேடன், தன் இயற்கைக் க்வுரவத்தை முன்னிட்டுத் தூதனை

விளித்து இப்படிக் கேட்டான். "மன்னர்கள் மனைவிகளை விரும்பிக் கேட்க வந்த தூதரே, 'உங்கள் மன்னர்கள் தங்கள் மனைவிகளை வைத்துக்கொண்டு வாழத்தகுதி யுள்ளவர்களா?'' எனக் கேட்கத் தூதன் ஆச்சரியப்பட்டு "ஏன் இல்லை; அவர்கள் மிகுந்த செல்வம் படைத்தவர்கள் அல்லவா? என்றான் வேடன்.

"ஆமாம், செல்வத்திற்கு என்ன குறைவு?''

"நீ எடுத்துக் காட்டின அரசர்களின் செய்கைகளையே எடுத்துப் பேசுவோம், அவர்கள் தங்கள் மனைவிகளை வைத்துக்கொண்டு செவ்வனே வாழ்ந்தவர்களா?''

தூதன், "இவன் என்ன, நம் பேச்சினாலே நம்மையே அடக்கி விடுவான்போல இருக்கிறது'' என்றெண்ணி,

"எப்படி? சொல்லும் பார்ப்போம்'' என்றான். வேடன்— "ஒரு அரசன் தன் மனைவியை வைத்துக்கொண்டு வாழத் தெரியாமலே கடன்கட்டுவதற்காக அவளை விற்றுவிட்டான் அல்லவா?''

"ஆமாம்''

"ஒரு மன்னன் நடுக்காட்டில் தன்மனைவியின் சேலையைப் பாதி அறுத்துத் தான் உடுத்திக்கொண்டு அவளை அனாதியாகத் துஷ்ட மிருகங்களிடை விட்டுவிட்டு ஓடிவிட்டானல்லவா?

"ஆம் இனியென்ன?''

"மற்றொரு அரசன் தன் அழகிய கற்புக்கரசியை வேறு ஒருவன் தூக்கிக் கொண்டுபோய்ப் பதினான்கு வருடம் சிறையில் வைத்திருக்கவும் அழுதுகொண்டு திரிந்துகொண்டிருந்தானல்லவா?''

"சரி, இனியுமுண்டோ?

"பல அரசர்கள் சபையிலே தம்மனைவியை இழுத்துச் சேலை அவிழ்த்து மானபங்கம் செய்யவும் வாய்பேசாமல் ஆண்மை இன்றி மதிமயங்கி நின்றார்கள் அல்லவோ ஐந்து மன்னர்கள்?''

"அடடா, இவனிடம் நமது ஜபம் சாயாதுபோல் இருக்கிறது'' என்று தூதன் நினைக்குமளவில் வேடன்,

"இக்குணமும் அதற்கேற்ற செயலும் கொண்டவர்கள் அல்லரோ உமது மன்னர்கள்? ஆகவே மணம் என்ற பேச்சை எடுத்து வந்த வாயை உமியும், நீர் கொண்டுவந்த ஓலையைக் கிழித்துவிட்டு ஓடி விடும்'' என்றான்.

மேலும் தூதன் விடாமல் "வேடரே எங்கள் மன்னர் குலத்தை இவ்வளவு இழிவாகப்பேசும் உம்குலத்தைப்பற்றிச் சிறிது

யோசியும். உங்கள் தாழ்ந்த குலத்திற்கு மேல்குலத்தாராகிய அரசர்கள் உறவு கிடைக்குமா ?'' என்றான். அதற்கு வேடன் மிகுந்த இறுமாப்புடன் "ஒய் தூதரே! எங்கள் குலம் எப்படிப்பட்டதென்று எண்ணுகிறீர்கள்? எங்கள் குலத்தான் ஒருவன் தான் சாப்பிட்டு ருசிபார்த்த எச்சிலை பரமசிவன் உண்டார் என்பது அறியீரோ? அந்த ஒரு பிரீதிக்காக அப்பரமசிவனுடைய மகன முருகவேளுக்கு நாங்கள் வளர்த்த ஒரு பெண்ணைக் கொடுத்தோம்.''

"அப்படியா!''

"ஆமாம், அப்படியாயின், நாங்கள் அருமையாகப் பெற்றெடுத்த பெண்ணை உங்கள் மன்னர்களுக்குக் கொடுப்போமோ?'' வேறு பேச்சென்ன, பைத்தியமோ, ஓடிவிடும்'' என்று பேசினான்.

இதனைக்கேட்ட தூதன் படிப்பும் சாதுர்யமும் இவர்களிடம் செல்லாது என்று கண்டு திரும்பிவிட்டான்.

இவ்விதம் ருசிவாய்ந்த கதையை அக்காலத்துக் கவி வருணித்ததை இனிப் பார்ப்போம்.

"விற்றதார்கலை பாதியோடுவ னத்திலேஅழ விட்டதார்,
வெஞ்சிறைபுக விட்டதார் துகில் உரியவிட்டுவி ழித்ததார்,
உற்றதாரமும் வேண்டும்என்றினி மன்னர்பெண்கொள
[ஒண்ணுமோ,
உமியடாமணம் என்றவாய்கிழித் தோலைகாட்டில் உருட்டடா,
வெற்றியாகிய முத்திதந்தருள் வெங்கைமாநகர் வேடர்யாம்,
விமலரானவர் எமையடுத்தினி தெங்கள்மிச்சில்மி சைந்தபின்
பெற்றவேலர் தமக்குயாமொரு பெண்வளர்ப்பினி லீந்தனம்
பெற்றபிள்ளைகொ டுப்பரோ இதென் பேய்பிடித்திடும் தூதரே.''

இவ்விதம் முன்காலத்தில் தரகர்கள் பட்டபாடு இப்போதிருக்கும் தரகர்கள் படுகிறார்களா ?

---

குறிப்பு—விற்றது அரிச்சந்திரன்.
அழவிட்டது நளன்.
சிறைவிட்டது இராமன்.
துகில் உரியவிட்டது பாண்டவர்.
மிச்சில் மிசைந்தது கண்ணப்பர்-எச்சிலைக் காளத்தியார் உண்டது.
வளர்ப்புப் பெண் வள்ளி.

# சிற்றோடை

சூடாமணி



IV

**ப**டிந்த கற்கள் மீதோடிப்
　　பலவா றலப்பி வருவேனே.
இடிந்து வளைந்த குடாவதனில்
　　எண்ணில் குமிழி எழுப்பிடுவேன்.
வடிந்த தடத்தின் பரல் மீது
　　வண்ணப் பண்கள் இசைப்பேனே.
மடிந்து மடிந்து நெளிகின்ற
　　மலைப்பாம் பெனவே இழைவேனே.

V

**கா**டு கரம்பு நிலந்தோறும்
　　கரைகள் வளையச் செய்வேனே.
நாடும் வண்ணச் சிறப்போடு
　　நாணற் கோரை வளர்ந்தெழுந்த
மேடும் காடும் அமைத்திடுவேன்
　　மெத்த விந்தை காட்டிடுவேன்.

பாடுங் குயிலின் இசைக் கேற்பப்
பண்பாய்த் தாள மிடுவேனே.

## VI

பண்ணார் இசைபோல் ஒழுகும் நான்
பலவா றலப்பித் திரிவேனே.
தண்ணார் நதியிற் கலந்திடவே
தாவி யோடிச் செல்வேனே.
மண்மேல் நிலையா மானிடர்கள்
வந்து வந்து போவார்கள்.
மண்மேல் நானே என்றென்றும்
மன்னி யோடிச் செல்வேனே.



# உபாத்தியாயர் பகுதி

## குழந்தைக் கல்வி

எஸ். ஜகந்நாதன்

### ஸ்தோத்திரப் பாடல்கள்

**ப**ல குடும்பத்தார் குழந்தைகளுக்கு ஸரஸ்வதி, கணேசர், சிவன், விஷ்ணு, சுப்பிரமணியர், நடராஜர் முதலிய தெய்வங்களைக் குறித்த சில ஸ்தோத்திரப் பாடல்களைச் சொல்லிக் கொடுப்ப துண்டு. வார்த்தைகளைத் தெளிவாகச் சொல்லவும், தெரியாத உச்சரிப்புக்களைத் திருத்தவும் இந்த ஸ்தோத்திரப்பாடல்கள் ஆதார மாயிருக்கின்றன.

### படப் புஸ்தகங்கள்

சின்ன அரிச்சுவடி, பெரிய அரிச்சுவடி, எண் சுவடி என்ற புஸ்தகங்களையே நாம் போற்றி வருகிறோம். ஆயினும் குழந்தை கள் படங்களைப் பார்த்துக் கவனிக்கக் கூடிய புஸ்தகங்கள் ஒன்றே னும் வெளி வராதது மிகப் பரிதபிக்கத்தக்கதே. இந்த விஷயத்தில் மேல் நாட்டார் குழந்தைகள் சுலபமாகச் சந்தோஷமாகக் கல்வி கற்று வரும்படி எவ்வளவோ படப்புஸ்தகங்கள், சாதனங்கள், உப கரணங்களைச் சேர்த்து வைத்திருக்கிறதுமன்றி ஒவ்வொரு குடும்பத் தாரும் வாங்கும்படி அச்சிட்டோ தயார் செய்தோ வைத்திருக் கிறார்கள். நமக்குத் தெரிந்த ஒரு உபயோகமான விஷயத்தைப் பரவச் செய்வதில் நாம் மேல் நாட்டாரின் முயற்சியைப் பாராட்ட வேண்டும். ஒருவர் சொல்லுவதைக் கேட்டு அதைப் பிறருக்குச் சொல்லுவததான் நமது வழக்கமாயிருந்து வந்தது. முக்கியமாக மேலே சொல்லியவைகளும் மற்றுமுள்ள குழந்தைத் தாலாட்டுப் பாட்டுக்களும் நமக்குக் கேள்வி மூலமாகவே தெரிய வந்திருக்கிறது. இந்தத் தாலாட்டுக்களும் படங்களுடன் அச்சிடப்படவேண்டும். சுவாமியின் உருவப்படங்கள் அமைக்கப்பட்டு, அவர்களுக்கேற்ற துதிக்கவிகளும் எழுதப்படவேண்டும். மேலும் இக்கதைகளையும் பாட்டுக்களையும் சுவரில் தொங்கவிடக் கூடியபடி சித்திரங்களுடன் வெளியிடுவது மேலான தர்மம் ஆகும் என்பது எனது அபிப் பிராயம்.

## சில பிராசீன விளையாட்டுக்கள்

"கண்ணும் பூச்சிரோரே", "தட்டாமலே தாமரைப்பூ", "கிச்சு கிச்சு தாம்பாளம்", "இட்டாச்சு", "ஆனை ஆனை அரசலானை", "சாய்ந்தாடு அம்மா சாய்ந்தாடு", "கை வீசம்மா, கை வீசு", "நிலா நிலா வா வா", "வண்டி ஓட்டுதல்", "ஜலம் இழுத்தல்", "நிழல் விளையாட்டு", "கில்லாப்பரண்டி கீப்பரண்டி" முதலியவைகள் நமது ஞாபகத்திற்கு வரலாம். விளையாட்டுக்களில் தேக உறுப்புகளைப் பழக்குவதோடு, சில பாட்டுக்களைக் கற்பித்துப் பாஷையை அபிவிருத்தி செய்வதும், ஞாபக சக்தியை வளரச் செய்வதும் குறிப்பிடத் தக்கவை.

## கற்பனு சக்தியை விளக்கும் ஆட்டங்கள்

சாதாரணமாய்த் தென்னங் குரும்பை, தென்னம் ஈர்க்கு இவைகளைக் கொண்டு தேர், சப்பரம், விமானம் இவைகளைக் கட்டுவது வெகு நேர்த்தியான விளையாட்டு என்று சொல்லலாம். மணலில் கிளிக்கூடு அமைத்தல், தோட்டம் போடுதல், சிறு கற்களைக் கொண்டு வீடு, கிணறு இவைகள்போல் கட்டுதல் இவைகளில் குழந்தைகள் களிக்கிறார்கள். மற்றும் பெரியவர்கள் "பல்லாங்குழி" "தாயக் கட்டம்" "பதினைந்து ஆடு புலிக் கட்டம்", "பரமபத சோபான படம்" என்பன போன்ற விளையாட்டுக்களில் காலங்கழிக்கும்பொழுது குழந்தைகளும் அங்கு கிடக்கும் சோழி, புளியங் கொட்டை, கிளிஞ்சல், குன்றுமணி இவைகளை எடுத்து விளையாடுகிறார்கள்.

## கணக்கு சம்பந்தமான ஓர் ஆட்டம்

"ஒற்றையோ இரட்டையோ" என்பது இதன் பெயர்.

கையில் ஒரு பிடி புளியங்கொட்டைகளை எடுத்து மூடிக் கொண்டு 'ஒற்றையோ, இரட்டையோ' என்று கேட்க ஒரு குழந்தை இரட்டையென்று சொல்லுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். அதன் பிறகு அந்தப் புளியங்கொட்டைகளைக் கீழே

o o
o o
o o
o o
o o

இப்படி இரண்டு இரண்டாக வைப்பது வழக்கம். கடைசியில் ஒன்று மாத்திரம் மீதியானல் ஒற்றை என்றும் ஒன்றும் இல்லாவிட்டால்

இரட்டை என்றும் தெரிந்து கொள்ளுகிறார்கள். இரண்டு இரண்டாக வைக்கப் பழக்குவதற்கு இந்த வேடிக்கை நன்றாகத் தான் இருக்கிறது.

### நாடகம் நடித்தல்

கதை சொன்னவுடன் குழந்தைகளைப் பார்த்து "நீ தான் இராஜா, நான் தான் இராணி; இராஜா இராணியைப் பார்த்து என்ன சொன்னான்" என்றும், பலவிதமாகக் கேட்பது உண்டு. பிறரைப்போல் பேசவும் நடிக்கவும் குழந்தைகள் பிரியங்கொள்ளுகிறார்கள்.

### வெளியே அழைத்துச் செல்லுதல்

குழந்தை அழுதால் அல்லது பிடிவாதம் பண்ணினால் திடீரென்று ஏதாவது சொல்லி அக்குழந்தைகளை வெளியே எடுத்துச் சென்று அச்சமயம் அங்கு காணப்படும் விசேஷங்களைக் காட்டிப் பிறகு வீட்டினுள் கொண்டு வருகிறது பெரியோர்களது வழக்கம். மரங்களிலுள்ள புஷ்பங்கள், அங்கு மிங்கும் பறக்கும் பக்ஷி ஜாதிகள், நடந்து செல்லும் மிருகங்கள், சூரியன், சந்திரன், நக்ஷத்திரம் இவைகளையும், கோயில், வாத்தியம் வாசிக்குமிடங்கள், கடை வீதி இம்மாதிரி இடங்களில் காணப்படும் விசேஷங்களையும் அறியக் குழந்தை ஆசைப்படுகிறது.

### தற்கால நிலைமை

இவ்விஷயங்கள் அனைத்தையும் ஒவ்வொரு குடும்பத்தாரும் தமது வீட்டுக் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. பல குடும்பங்களில் வயது முதிர்ந்த பெரியோர் இல்லாக்குறைவு பெருத்த குறைவாகும். பெற்றோர்களுக்கு வீட்டு வேலைகளும், தேக சம்ரக்ஷணார்த்தம் எடுத்துக் கொள்ள வேண்டிய முயற்சிகளும் அதிகமாய் இருக்கின்றன. ஆகவே குழந்தைகளைச் சரிவரப் பழக்குவதிலும், இளமையிலேயிருந்து கல்வியில் ஆசையுண்டு பண்ணுவதிலும் போதுமான சிரத்தை காட்ட அசக்தர்களாக விருக்கிறார்கள். மேலும் படிப்பில்லாத குடும்பங்களில் எத்தனையோ குழந்தைகள் பிறந்திருக்கிறார்கள். எத்தனையோ பேர் தாய் தகப்பனார் இல்லாமல் மற்ற உறவினர் ஆதரவில் இருந்து வருகின்றனர். இக்குழந்தைகள் எப்படி நல்ல வழியில் வருவது என்பதைக் குறித்து ஆராய்ச்சி செய்வது அவசியமாகும். இவ்விஷயங்களில் மேல் நாட்டார் செய்து வரும் பரீக்ஷைகள் கவனிக்கத்தக்கன.

## நற் பழக்கங்கள்

நாம், குழந்தைகள் எப்படி வளரவேண்டுமென்று நினைக்கிறோமோ, எந்தப் பழக்கங்களில் பழகவேண்டுமென்று நினைக்கிறோமோ, அவ்விஷயங்களில் நாமே குழந்தைக்குப் பிரதிபிம்பமாக இருத்தல் அவசியம். நாம் நமது நடத்தைகளையும் பழக்கங்களையும் செம்மைப்படுத்திக் கொள்ளுதல் முக்கியமானது. நம்முடைய நற்செயல்களும் தீச்செயல்களுமே குழந்தைகளிடம் காணப்படுகின்றன. "நூலைப் போல சேலை, தாயைப் போல பிள்ளை", என்றும் "அப்பனைப் போல பிள்ளை" என்றும் வழங்குகிற பழமொழிகளையும் நாம் கேட்டிருக்கிறோமல்லவா? நாம் திருத்தமான பாஷையைப் பேசுவதும், பிறரிடத்தில் பிரியமாய் நடந்து கொள்ளுவதும், ஈசுவர பக்தியுள்ளவர்களாயும், ஏழைகளிடத்திலும் பிராணிகளிடத்திலும் பக்ஷமுள்ளவர்களாயுமிருப்பது நமது குழந்தையை நற்பழக்கங்களில் பழக்க ஏற்ற சாதனங்களாகும். "உன்னுடைய பிள்ளை கெட்டிக்காரன், குணவான், சமர்த்தன்" என்பதைக் கேட்டுச் சந்தோஷப்படுகிற தாயாரின் சந்தோஷத்திற்கு அளவேயில்லை. கர்ப்பத்தில் 10 மாஸம் சுமந்து பிரஸவ வேதனையை அனுபவித்து "மகன் பிறந்திருக்கிறான்" என்ற சங்கதியைக் கேட்ட தாயாரின் சந்தோஷத்தைப் போல் பதின்மடங்கு ஆகும். நற்பழக்கங்களில் பழக்கக் குழந்தைப் பருவமே ஏற்ற தருணம். தினசரி குளித்தல், பல் தேய்த்தல், சுத்தமான உடுப்புக்களை உடுத்திக் கொள்ளுதல், நிஜத்தைச் சொல்லுதல், விடா முயற்சி முதலிய நற்குணங்கள் படிவதற்குக் குழந்தைப் பருவத்திலேயே சரியான அஸ்திவாரத்தை நாட்டவேண்டும். ஏதேனும் மாறான பழக்கங்களில் தனது மனதைச் செலுத்துமானால் நாம் அதைத் தடுக்க முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும்.

ஸாம தான பேத தண்டம் என்ற சதுர்வித உபாயங்களில் தண்டனையைக் கடைசியாகவே சொல்லியிருக்கிறது. "அடியாத மாடு படியாது" என்பதை நாம் எடுத்துக் கொள்ளக்கூடாது. மனநிலையை மாற்றுவதற்குத் தேகத்திற்கு வலி உண்டாக்குவது முற்றிலும் பொருந்தாது. நம்மிடத்திலும் சற்றுக் கண்டிப்பு என்பது இருக்கவேண்டுவது அவசியம். எப்பொழுதும் குழந்தையை மனம் போனபடி விடுதலும் கூடாது. சரியான காரியங்களைப் பலமுறை செய்ய அவகாசம் கொடுக்க வேண்டும். சரியான பழக்கத்தைப் பன்முறை அப்பியாசம் செய்விக்க இடந்தருதல் முக்கியமானது. குழந்தையின் தோழர்கள் நற்குணங்களில் பழகுபவர்களாகவிருத்தல் அவசியமானது. கூடிய வரையில் நமது வீடானது குழந்தையின் சரியான மன வளர்ச்சிக்குத் தக்கபடி அமைக்கப்படவேண்டும்.

சுற்றிலுமுள்ள இருப்பிடம், சரியான வழியில் திரும்பும்படி வழி காட்டுதல், நற்பழக்கங்களைப் பலமுறை திரும்பச் செய்தல் ஆகிய இம்மூன்றும் பிரதம பால போதனைக்கு ஏற்ற அனுகூலங்கள்.

## குழந்தைகளே நமக்கு உபாத்தியாயர்கள்

"குழந்தை தெய்வத்திற்குச் சமானம்", குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்'' என்பவை உண்மையான சொற்களே. குழந்தைகளுக்குச் சொல்லிக் கொடுப்பதில் அவர்களே நமக்குச் சில முறைகளைக் காட்டுகிறார்கள் என்று நான் நினைக்கிறேன். அவர்களது கஷ்டங்கள் பல. அக்கஷ்டங்கள் நிஜமான கஷ்டங்களே. எதனால் அக்கஷ்டங்கள் உண்டாயின, அவற்றை நீக்க நாம் என்ன முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும் என்று ஆலோசித்தல் அவசியமே.

## சில அபிப்பிராய மாறுதல்கள்

நமது நாட்டில் "திருஷ்டி தோஷம்'' என்பதான ஒரு கொள்கையை அனுசரித்துச் சிலர் குழந்தைகளை வெளியே அழைத்துச்செல்ல சம்மதிப்பதில்லை. அக்கொள்கையை நாம் முற்றிலும் மாற்றமுடியாவிடினும் குழந்தையின் க்ஷேமத்தைக் குறித்தும் தேக மன வளர்ச்சியை அனுசரித்தும் தினசரி நல்ல வெளிச்சம், காற்று, இயற்கையின் அற்புதங்கள் காணப்படுமிடங்களில் அழைத்துச் செல்லுவது முக்கியமாகும். பல விஷயங்களைக் கண்டு குழந்தை ஆனந்தப்படும். அதனால் நமக்கே ஒரு சந்தோஷமும் விசாலமான நோக்கமும் உண்டாகும். புது புது விஷயங்களைத் தெரிந்து கொள்ளக் குழந்தை ஆசைப்படும். அவற்றைப் பற்றி நாமும் தெரிந்து கொள்ளச் செய்வது அக்குழந்தையே.

குழந்தை எப்பொழுதும் விளையாடிக் கெட்டு விடுகிறான் என்று சாதாரணமாக நாம் சொல்லுகிறோம். மூன்று வயது முதல் ஐந்து வயது வரையில் இவ்விளையாட்டுக்களே அக்குழந்தைகளுக்கு ஜீவாதாரம் என்றே சொல்லலாம். நாம் அவ்விளையாட்டுக்களை நல் வழியில் திருப்ப வேண்டும். குழந்தைகள் இராஜ்யத்தில் காணப்படும் விளையாட்டுக்களில் தேர்த் திருவிழாக்கள் நடக்கின்றன, ரயில் வண்டி ஓடுகிறது, கலியாணம் நடக்கிறது, வியாபாரம் நடைபெறுகிறது. ஆகவே குழந்தைகள் தமது விளையாட்டுக்களில் உலக நாடகத்தையே நடத்திக் காட்டுகிறார்கள் என்றே யான் நினைக்கிறேன். குழந்தைகள் கட்டைகள் வைத்துக் கொண்டு வீடு, கோவில், கோபுரம் கட்டுவதை நாம் கவனிப்போம். குழந்தை ஏதோ ஒன்றை நிர்மாணம் செய்ய யத்தனம் செய்கிறது. ஒன்றைக்கட்டி முடித்தவுடன் அதைக் கண்டு களிக்கிறது. பிறரும் அதைப் பார்த்து ஆனந்தப்படவேண்டுமென்று ஆசைப்படுகிறது. சற்று நேரத்தில்

வேறு ஓர் எண்ணம் தோன்றவே, முதலில் கட்டினதைக் கலைத்து விடுகிறது. இதை யான் நினைக்குங்கால் சிருஷ்டி, ஸம்ரக்ஷணம், சம்ஹாரம் என்று மும்மூர்த்திகள் செய்து வரும் தொழில்கள் ஒவ்வொரு குழந்தையிடமும் காணப்படுகின்றனவே என்று நான் ஆச்சரியப்படுகிறேன். இதைப் பார்த்தவர்கள்தான் ஒரு வேளை "குழந்தையும் தெய்வமும் ஒன்று" என்று சொல்லி, குழந்தையைக் காலால் இடறினாலும் அக்குழந்தையைத் தொட்டுக் கண்மீது ஒத்திக் கொள்ளுகிறார் போலும்.

## ஜனன வாசனையும் இடத்தின் மகிமையும்

எல்லாக் குழந்தைகளும் ஒரே தேர்ச்சியைக் காட்டுகிறதில்லை. ஒவ்வொருவரும் பலவித தேர்ச்சியை அடைந்துள்ளார்கள். ஒரு குயவனது பிள்ளை பானை செய்வதைப் பற்றி நன்றாய் வர்ணிக்கிறான். தச்சனது மைந்தன் ஆயுதங்களை நன்றாய் எடுத்துப் பழகியிருக்கிறான். இடையனது மகன் மாட்டின் கன்றை அடக்கி ஆளுகிறான். இவ்வாறு குழந்தைகளின் இயற்கையிலேயே ஜனன வாசனை கலந்திருக்கிறது. ஒருகால் இதை யனுசரித்தே ஒவ்வொருவரும் தமது முன்னோர் தொழிலையே கற்று வருவது சிலாக்கியம் என்று நினைத்துள்ளார்கள் போலும். பற்பல விதமான நூதன கல்வி முறைகளை அனுஷ்டிப்போமானால் எல்லோரும் கல்வியைக் கிரகிக்க இடமுண்டு. இளவயதிலிருந்தே இக்கல்வி முறைகளை அனுஷ்டிப்போமானால் தக்க பலன் என்பதே எனது துணிபு.

## ஊக்கமும் பொறுமையும் விடாமுயற்சியும் அவசியம்.

இங்கு சொல்லியது போல் நமது குழந்தைகளை வளர்க்க ஊக்கமும் பொறுமையும் விடா முயற்சியும் அவசியமாகும். சாதாரணமாய்க் குழந்தைகளை வளர்ப்பது என்பது பெற்றோர்களுக்கே உரியது. ஆயினும் உபாத்தியாயர்களுக்கு இவ்விஷயத்தில் பொறுப்பு குறையாது. உபாத்தியாயர்கள் இவ்விஷயத்தில் தக்க சிரத்தை யெடுத்துக் கொண்டு பள்ளிக்கூடத்திற்கு வரும் குழந்தைகளைத்தவிர பாக்கி அஸ்திவாரப்படிப்பு இல்லாமல் தவிக்கிற மற்றக் குழந்தைகளுக்குப் பெற்றோர்கள் சங்கம் மூலமாகக் குழந்தைக் கல்வியைப் பற்றின முறைகளை எடுத்துச் சொல்லுவது அவசியமாகும். நூதனக்கல்வி முறைகளில் எத்தனையோ உபாத்தியாயினிகள் பழகி வருகிறார்கள். அவர்களே தமது படிப்பைப் பரிசீலனை செய்யவும் நிதர்சனமாக அனுஷ்டானத்தில் கொண்டு வரும்படிக்கும் தாங்கள் கற்றதைத் தாய்மார்கள் சங்கத்தில் சொல்லிவர வேண்டும். இவ்வாறு எத்தனையோ குழந்தைகளின் அஸ்திவாரப் படிப்பில் முயற்சி எடுத்துக் கொள்வது மேலான தர்மமாகும்.




## மூன்று பன்றிகள்

எஸ். ஜகந்நாதன்



ஓர் ஊரில் மூன்று பன்றிகள் இருந்தன.

ஒன்று மந்தி, ஒன்று அசடு, ஒன்று சமத்து.

மந்தி ஒரு வைக்கோல் வீடு கட்டினது.



அசடு ஒரு ஓலை வீடு கட்டினது.

சமத்து ஒரு கல் வீடு கட்டினது.



அந்த ஊரில் ஒரு நரி உண்டு. அந்த நரி மந்தி வீட்டிற்கு வந்தது.



"ஏ! மந்தி! நான் உள்ளே வரலாமா? கதவைத் திற" என்றது.

மந்தி "நீ வரக் கூடாது. நீ பொல்லாதவன்" என்றது.

நரி வைக்கோல் வீட்டைப் பிரித்துப் பன்றியைப் பிடித்துக் கடித்துத் தின்று விட்டது.

மறுநாள் அந்த நரி அசட்டின் வீட்டிற்கு வந்தது. அந்த வீடு ஓலை வீடு.



நரி: "ஏ! பன்றி! நான் உன் வீட்டிற்கு வரலாமா? கதவைத் திற" என்றது.

அசடு: "நீ பொல்லாதவன் நீ வரக் கூடாது" என்றது.

நரி வீட்டைப் பிரித்துப் பன்றியைக் கொன்று தின்று விட்டது.

மறுநாள் அந்த நரி சமத்தின் வீட்டிற்கு வந்தது.

நரி, "ஏ! பன்றி! நான் உன் வீட்டிற்குள் வரலாமா? கதவைத் திற" என்றது.

சமத்து, "முடியாது. முடியாது. நான் வீட்டைத் திறக்கமாட்டேன் போ" என்றது.

நரி, "பார் உன் வீட்டை இடித்துப் போடுகிறேன்" என்றது.



நரி தன்னால் ஆன வரையில் முட்டி மோதிக் கொண்டது. வீட்டை இடிக்க முடியவில்லை. முகம் காயமாகி விட்டது. பிறகு தன் இடத்திற்கு ஓடி விட்டது.

மறுநாள் காலை நரி சமத்து வீட்டிற்கு வந்தது.

நரி, "ஏ பன்றி! இங்கே ஒரு கொய்யாத் தோட்டம் இருக்கிறது. நாளை காலை நாம் போகலாம் வா" என்றது.



சமத்து விடியற் காலம் எழுந்து போயிற்று.

கொய்யாப்பழம் பறித்துக் கொண்டு வந்துவிட்டது.

கொஞ்ச நாழிகைக்குப் பிறகு நரி வந்தது.

பன்றியைத் தோட்டத்திற்குக் கூப்பிட்டது.

பன்றி, "நான் போய்வந்துவிட்டேன்" என்றது. நரி ஏமாந்துவிட்டது.

மறுநாள் நரி வந்தது. "ஏ பன்றி! நாளை சாயங்காலம் இலந்தைப்பழம் பறித்துவரலாம் வா" என்றது.

சமத்து மத்தியான்மே போயிற்று. மரத்தில் ஏறிப் பழம் பறித்துத் தின்றது.

அந்தச் சமயம் நரி அங்கே வந்துவிட்டது.

நரி, "ஏ பன்றி எனக்கு ஒரு பழம் போடு" என்றது.



பன்றி ஒரு பெரிய பழம் பறித்து வெகு தூரத்தில் எறிந்து விட்டது.

நரி பழத்தைத் தின்ன ஓடிற்று. சமத்து மரத்தில் இருந்து கீழே இறங்கி வீட்டிற்கு ஓடி விட்டது.

நரி மறுபடியும் ஏமாந்து விட்டது.

மறுநாள் நரி பன்றி வீட்டிற்கு வந்தது.

நரி, "ஏ! பன்றி! நாளைக்கு இந்த ஊரில் தேர் திருவிழா பார்க்க நான் போகப்போகிறேன். நீயும் வருகிறாயா?" என்றது.

பன்றி, "ஆகா! நான் வருகிறேன்" என்றது.

மறுநாள் பன்றி சீக்கிரமே தேர் பார்க்கச் சென்றது.



திருவிழாக் கடையில் ஒரு பானை வாங்கினது. அந்தச் சமயம் தெருக் கோடியில் நரி வந்து விட்டது.



சமத்து நரியைப் பார்த்துப் பயந்தது. சட்டென்று பானையில் புகுந்தது. பானையை உருட்டிக் கொண்டே வந்தது.



நரி அதைப் பார்த்து பயந்து ஓடிவிட்டது.

சமத்து தன் வீட்டிற்கு வந்து புகுந்து கொண்டது. கதவை தாழ்ப்பாள் போட்டு விட்டது.

நரிக்குக் கோபம் வந்துவிட்டது. சமத்தின் வீட்டின் மேல் ஏறினது. அங்கே ஒரு புகைப் போக்கி இருந்தது. அதன் வழியாக உள்ளே குதித்தது. அங்கே அடியில் வெந்நீர்ப் பானை இருந்தது. அதில் வந்து விழுந்து விட்டது.





ஜலம் மூக்கு வாய் எல்லாம் ஏறி இறந்து போயிற்று. பிறகு சமத்து சுகமாய் வாழ்ந்து வந்தது.




குழந்தாய்! மேலேயுள்ள படங்களைப் பார்த்து, பின் வரும் விடுகதைகளுக்குள் ஒவ்வொன்றுக்கும் எது சரியான பதில் என்று தெரிந்துகொள்.

1. சின்னஞ் சிறு பாத்திரமாம்.
பாப்பாவுக்கு ஏற்ற பாத்திரமாம்.
வெள்ளி வெண்கலப் பாத்திரமாம்.
வாயும் மூக்குமுள்ள பாத்திரமாம்.
பாலன் கையில் பிடித்துப்
பால் உறிஞ்சும் பாத்திரமாம். அது என்ன?

2. பட்சியிற் சிறந்த பட்சி; சிறகை விரித்து ஆடும் பட்சி ; அமரர்கோனைக் காத்த பட்சி ; ஆயிரங் கண் பெற்ற பட்சி. அது என்ன ?

3. வாயிற் பற்களுண்டு, கடிக்கும்; தலையிலேறிப் பிராண்டும், பெருக்கும், அழுக்கெடுக்கும்; பூச்சியைப் பிடித்து வரும். அது என்ன ?

4. வலை பின்னுவான், வலை வீசி இரை பிடிப்பான், செம்படவனேயல்ல ; இடத்திலிருந்து இடம் தாவுவான், குரங்குமல்ல, அணிலுமல்ல ; நூலேணியில் ஏறுவான், தொங்குவான் ; உருவம் சிறிதேயாயினும் கருமம் பெரிது ; எட்டுக் காலுள்ள இவன் யார் ?

5. "கட்டுக் கட கட" என்று பேசும் ; கம்பி வழியாய்ப் பறந்து வரும் ; பன்னிரண்டு வார்த்தைக்குப் பதின்மூன்றணு கட்ட, பன்னிரண்டு காதமானுலும் பாய்ந்து வந்து சேதி சொல்லும். அது என்ன ?

6. முக்காலணுவுக்கு முந்நூறு காதம் பறக்கும் ; அடிபட்டுக் குத்துப் பட்டு ஓடிவந்து சேதி சொல்லும் ; பகலில்லை, இரவில்லை, வெயிலில்லை, மழையில்லை, எப்பொழுதும் ஓடித் திரியும் ; அது ஏருத வாகனம் கிடையாது. அது என்ன ?

[எஸ். ஜகந்நாதன்]



# குழந்தைப் பாட்டு



## பனை ஓலை



ஓ ! ஓ ! பனை ஓலை.
வெள்ளையான பனை ஓலை.
ஓலம் இட்டுச் சலசலக்கும்.
ஒழுங்காய்க் கிழித்து முடைந்தாலோ
ஓலைப் பாயாய் முடிந்திடுமே.
ஓலையாலே கிளியும்,
ஓலையாலே வண்டியும்,
ஓலைக் காற்றாடியுமே,
ஒழுங்காய்ப் பின்னியே,
ஓலமிட்டு விளையாடுவேன்.

[சூடாமணி]



## சில துஸ்துக் குறிப்புக்கள்

வி. விசாலாக்ஷி அம்மாள்

'வாரி மினிக்கி வகுடும் பிளந்து, வாணிச்சி எண்ணெயைத் தொட்டு மினிக்கி, முறம் போல் பொட்டும் இட்டு, சிறு கடல் போல மையும் தீட்டி, கோபுரம் போல் கொண்டை முடித்துக் கொட்டைப் பாக்குப் போல வெற்றிலே அடக்கி, நல்ல அகமுடையான் தேடி, சிறிய அகமுடையான் தேடி, புறப்பட்டதாம்' என்று குழந்தைகளுக்குச் சொல்லும் பொரி அரிசிக் கதையில் பொரி அரிசி செய்து கொண்ட துஸ்தை, அதாவது தலே சீவி, பொட்டிட்டுச் செய்து கொள்ளும் அலங்காரத்தை—வர்ணிப்பதுண்டு.

நவநாகரிக வாழ்க்கையில் மேற்சொன்ன துஸ்து முறைகள் மாறிக்கொண்டு வருகின்றன. 'சிறு கடல்போல் மைதீட்டலும்,' 'முறம்அவ்வளவு பெரிய பொட்டிட்டுக்கொள்ளுதலும், வாயில் தாம்பூலத்தை அடக்கிக் கொள்ளுதலும் அவ்வளவு நாசூக்கான சிங்காரங்களாகக் கருதப்பட வில்லே. இதற்காக இவைகளே முற்றிலும் விட்டுவிட வேண்டும் என்ற அவசியமும் இல்லே. துஸ்தை இசைவாகச் செய்து கொள்ளவேண்டும். இதுவே முக்கியம்.

மை தீட்ட :—கண்ணுக்கு மை தீட்டுவதால் பார்வைக்கும் நன்ருகஇருக்கும் ; கண்ணுக்கும் நல்லது. ஆனுல், மை இட்டிருப்பது சுலபமாகத் தெரியும்படி தீட்டக்கூடாது ; இலேசாக இட வேண்டும். மை தயாரிக்கும் பொழுது, அதிக எண்ணெய் சேர்த்துக் கூட்டிவிடக் கூடாது. இது இட்டுக் கொண்டால் எளிதில் கரைந்து முகத்தில் வழிந்துவிடும். கெட்டியாகக் கூட்டப்பட்ட மையை இலேசாகக் கை விரலில் எடுத்து முதலில் மேல் இமைத்குத் தடவிப் பிறகு மிகவும் இலேசாகக் கீழ் இமைக்கும் தடவ வேண்டும். மையை மேல் இமையில் தீட்டுவதால் கண் தீக்ஷண்ணியமாகவும்

சோபையுடனும் ஜ்வலிக்கும். மை தீட்டி யிருப்பதும் அவ்வளவாக் வெளிப் பார்வைக்குத் தெரியாது. துஸ்து முறைகளை அநுசரிப் பதில் அதிக நேரத்தையும், பொருளையும், செலவு செய்யும் மேல் நாட்டு ஸ்திரீகள் சிலர், மேல் இமைக்கு ஒரு வர்ணம், கீழிமைக்கு ஒரு வர்னம். புருவத்துக் ஒரு வர்ணம் என்று மூன்று நிற மைப் பொடிகளை உபயோகிக்கிறார்கள் என்று வாசித்திருக்கிறேன். அவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ளுவது கஷ்டம்தான். ஆனால், இதற்கு மாறுபாடாகக் கவனிப்பே இல்லாமல் விட்டுவிட்டாலும் அழகாக இருக்காது. மையை ஜாக்கிரதையாகத் தீட்டினால் முகம் அழகாகவும் ஒரு வித வனப்புடனும் விளங்கும்.

முன் நெற்றி :—முன் நெற்றி மயிரை இழைய இழைய வாரிப் பின்னும் வழக்கமும் இப்பொழுது கர்னாடக முறையைச் சேர்ந்து விட்டது. முன் நெற்றி மயிர் பிரியாமல் இருப்பதற்காகக் கொஞ்சம் தண்ணீரைத் தொட்டுத் தடவியும் வாருவார்கள். 'பம்' முதலிய முன் நெற்றி மயிரைத் தூக்கி வாரி வைத்துக்கொள்ளும் நடுவில் ஏற்பட்ட சிங்காரங்களும் நாகூக்கான முறைகளாகத் தற்சமயம் கருதப்படுவதில்லை. முன் நெற்றி மயிரைத் தளர்த்தியாக வாரிச் சற்றுப் பிரிந்த மாதிரி அப்படியே விட்டுவிடுவதுதான் இப்பொழுது நாகரிகமாக எண்ணப்படுகிறது. சிலர் மேல் மயிரைத் தூக்கி அடி மயிரைக் குட்டையாகக் கத்தரித்து, நெற்றிமேல் சுருள் சுருளாக விழும்படிச் செய்துகொள்ளுகிறார்கள். இது சிறிய பெண்கள் செய்து கொள்ளக்கூடிய அலங்காரம். சற்று வயதானவர்கள் செய்துகொண்டால் அவ்வளவு நன்றாக இருக்காது. முன் நெற்றி மயிரைச் சற்றுத் தளர்த்தியாகவும், பிரிந்த மாதிரியும் விடலாம். தலை சீவின பிறகு முகத்தைத் துடைத்துக்கொள்ளும் பொழுது, முன் நெற்றி மயிரையும் இலேசாகச் சவுக்கத்தால் வேண்டுமானால் பிரித்து விடலாம்.

வெற்றிலை :—வாய் நிறைய வெற்றிலை போட்டு அடக்கிக் கொண்டு வெளியில் கிளம்புவது நாகரிகமில்லை என்றாலும், இதன் பொருட்டு வெற்றிலை போட்டுக் கொள்ளும் வழக்கத்தையே கையாளக் கூடாது என்று கூறுவதற்கும் இல்லை. போஜனம் ஆனதும் வெற்றிலை போட்டுக் கொள்ளுவதால் ஜீர்ணத்திற்கும் நன்மை செய்யும், உதடுகளும் சிவக்கும். மேல் நாட்டு ஸ்திரீ களைப் போல் உதடுக்கு வர்ணம் பூசிப் பிறகு அதைக் கரை யாமல் கவனித்துக் கொள்ளவேண்டிய அவசியமே நமக்கில்லை. வெற்றிலை போடுவதால் உதடு சிவப்பதுடன், இந்த நிறம் கரைந்து அசிங்கமாகத் தோன்றாது. வெற்றிலையை மென்று விழுங்கவோ

அல்லது துப்பவோ வேண்டும். வாயில் அடக்கிக் கொள்ளக்கூடாது. மேலும் உதடு சிவப்பது அழகே அன்றிப் பல் சிவப்பது அழகில்லை. 'கோவைக் கனிபோன்ற உதடும், முத்துப்போன்ற பற்களும்' என்றே வர்ணனை. சில பேர்களுக்குச் சுபாவத்தில் பற்கள் சிவந்துவிடும். இது பற்றியே குழந்தைகள் வெற்றிலை போட்டுக்கொண்டால், அவர்களைப் பார்த்து, 'உதடு சிவந்தால் ஓர்படி பிரியமாக இருப்பாள், நாக்குச் சிவந்தால் நாத்தனார் பிரியமாக இருப்பாள், பல் சிவந்தால் பர்த்தா பிரியமாக இருப்பார், எங்கே காட்டு பார்ப்போம்' என்று பரிகசிப்பதுண்டு. பல் சிவக்கும் பக்ஷத்தில், உடனேயே வாயைக் குழப்பிக் கொப்புளித்தால், பல் வெளுத்துவிடும். உதடுமட்டும் சிவந்து பார்ப்பதற்கு அழகாகத் தோற்றும்.

## ஆயிதே அல்லது பால் தோசை

பால் போளிக்குப் பதிலாக இதைச் செய்வதுண்டு. இதற்கு முதலில் அரிசியை நன்றாக அரித்துக் களைந்து, நிழல் உலர்த்தலாக உலர்த்தி, இயந்திரத்தில் போட்டுக் குங்குமம்போல் திரித்து, சலித்து எடுத்துக் கொள்ளவேண்டியது. மாவில் ஜலத்தைக் காய்ச்சிவிட்டு, சாதாரண தோசைமாவைவிடக் கொஞ்சம் இளகலாகவே கரைத்துக் கொள்ளவேண்டியது. கொஞ்சம் உப்பையும் சேர்த்துக் கரைத்துக் கொள்ளவேண்டியது. அடுப்பை மெதுவாக எரிய விட்டுத் தோசையை மெல்லியதாக வார்த்து அதன்மேல் இட்டலி பாத்திரத்தின் மூடி போன்ற எளிதில் தூக்கக் கூடிய ஒரு பாத்திரத்தைக் கவிழ்த்தி வைக்கவேண்டியது. கொஞ்ச நேரமானதும், பாத்திரத்தைத் தூக்கி, வெந்த தோசையைத் திருப்பிப்போடாமல் அப்படியே எடுத்து வைத்துக் கொள்ளவேண்டியது. இப்படி தோசைகளை வார்த்துக் கொண்டே மற்றொரு அடுப்பில் பாலைக் காய்ச்சலாம். கால்படி மாவைத் தோசை செய்வதாக இருந்தால் ஒரு படி பால் தேவையாக இருக்கும். ஒரு படி பாலை அடுப்பில் வைத்து, அது அடிப் பிடித்துக் 'கும்பி' விடாமல் கிளறி, அது அரைப் படியாகச் சுண்டும் வரையில் காய்ச்ச வேண்டியது. பிறகு அதில் 8 பலம் சர்க்கரையும், கொஞ்சம் ஏலரிசிப் பொடியும் போட்டு, அடுப்பை விட்டு இறக்கி, தோசைகளை அதில் ஊறவைத்து, நன்றாக ஊறிய பின் எடுத்து உபயோகிக்க வேண்டியது.




## இது உங்களுக்குத் தெரியுமா?

31. சமாச்சாரப் பத்திரிகை முதன்முதலில் பிரசுரிக்கப்பட்டது எப்பொழுது ?—1494-ம் வருஷத்தில். அமெரிக்காவிலே பாஸ்டன் நகரத்திலே 1690-ம் வருஷத்தில்.

32. போனுகிராப் கண்டுபிடிக்கப்பட்டது எப்பொழுது?—1877-ம் வருஷத்தில் எடிசன் என்பவரால்.

33. தபால்கள் முதன்முதலில் உபயோகிக்கப்பட்டது எப்பொழுது?—இங்கிலாந்திலே 1840-ம் வருஷத்தில். அமெரிக்காவில் 1847-ம் வருஷத்தில்.

34. ஒலியின் வேகம் என்ன?—ஒரு விஞடிக்கு 1120 அடி. அதாவது ஒரு மணிக்கு 743 மைல்.

35. காற்றில் மேகங்கள் ஓடுவதைப் பார்க்கிறீர்களே, அவற்றின் வேகம் எவ்வளவு இருக்கும்?—மணிக்குச் சுமார் 36 மைல்.

36. ஒவ்வொரு விஞடிதோறும் இரண்டு பேர்கள் சாகிருர்கள்.

37. முதன் முதலில் அச்சுக்கோத்தது எப்பொழுது ?—சீனுவிலே 6-ம் நூற்ருண்டிலேயே அச்சுக் கோத்துவந்தனர். இங்கிலாந்திலே சுமார் கி. பி. 1474-ம் வருஷத்திலே.

38. முதன் முதலில் தீக்குச்சி எப்பொழுது செய்யப்பட்டது ?—1829-ம் வருஷத்தில்.

39. தூரதிருஷ்டிக் கண்ணுடி எப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டது ? 1608-ம் வருஷம்.

40. மூக்குக் கண்ணுடி முதன் முதல் எப்பொழுது கண்டுபிடிக்கப் பட்டது ?—கி. பி. 13-ம் நூற்ருண்டில் இத்தாலிய நாட்டினன் ஒருவனுல் கண்டுபிடிக்கப்பட்டது.

41. அமெரிக்காவில் முதன் முதலில் ஏற்பட்ட நகரம் எது ?—1565-ம் வருஷத்தில் ஸ்பானியர்களால் ஸ்தாபிக்கப்பட்ட ஸெண்ட் அகஸ்டின் நகரம்.

42. ரோமாபுரி ஸ்தாபிக்கப்பட்டது எப்பொழுது ?—கி. பி. 752-ம் வருஷத்தில் ரோமுலஸ் என்பவரால். அ.

தோப்பிக் கள் : நெல்லாற் செய்யப்பட்ட கள்ளிற்குத் தோப்பிக் கள் என்று பெயர். இந்தக் கள் நாளாக நாளாக முதிர்ந்து பழுத்து அதிக மயக்கத்தைத் தரும். இதனை அவ்வாறு பழுக்க வைப்பதற்காக மூங்கிற் குழாயில் ஊற்றிவைப்பதுண்டு. இப்படிப் பழுத்த கள்ளை, 'தேட்கடுப் பன்னதோப்பி' என ஒரு புலவர் கூறுகின்ருர். ச. து. க.




## மாய மான்

டி. எஸ். இராமச்சந்திர ஐயர்

மூன் பக்கத்திலுள்ள படத்தில் கோதாவரிக் கரையிலுள்ள பஞ்சவடியில் இராமருடைய ஆச்ரமத்திற் கெதிரில் இராவணனுடைய கட்டளைப்படி மாரீசன் பொன் மானுருவத்தோடு வந்துலவுவதும் அதைக் கண்ட சீதை அம் மானைப் பிடித்துத் தரும்படி இராமரை வேண்டுதலும் காணப்படும். இவ்விஷயம் வால்மீகி இராமாயணத்தில் பின் வருமாறு கூறப்பட்டிருக்கிறது :

இராவணன் மாரீசனுடன் இராமரது ஆச்ரத்மதின் அருகில் வந்தவுடன் மாரீசனை நோக்கி, ‘‘இதோ இராமனது ஆச்ரமம் தெரிகிறது. நாம் எதற்காக வந்தோமோ அந்தக் காரியத்தைச் செய்’’ என்று கூறினான். அவ் வார்த்தைகளைக் கேட்ட மாரீசன் உடனே பொன் மயமான மானுருவங்கொண்டு ஆச்ரமத்திற்கெதிரில் சஞ்சரித்தான். மனோகரமாயும், தளதளப்பான காந்தியோடு நானாரத்னங்களின் சோபை விளங்குவதாயும் உள்ள தனது காந்தியால் அவ்வன முழுவதும் பிரகாசிக்கும்படிச் செய்துகொண்டு அவன் வைதேகியை வஞ்சிக்கவெண்ணித் தளிரை மேய்வதும், இங்குமங்கும் ஓடுவதும், மெதுவாக உலாவுவதுவமாக இருந்தான். அப்பொழுது அம் மானைக்கண்ட மற்ற மான்களும் இதர மிருகங்களும் நெருங்கி வந்து முகர்ந்து வெருவி யோடின. அந்தச் சமயத்தில் சீதையும் மலர் கொய்யவெண்ணி மரங்களருகில் வந்தவுடன் அம் மானைக் கண்ணுற்று வியந்து நோக்கி, ஆசைமிகுந்து, இராமலக்ஷ்மணர்களை யடைந்து அம் மானைப் பார்க்கும்படிச் செய்தாள். அதைக்கண்டவுடன் இலக்ஷ்மணன் சந்தேக முற்றவனாய் இராமரை நோக்கி, ‘‘மாரீசனே யிம் மானுருவங்கொண்டு வந்திருக்கிறானென்று நினைக்கிறேன். மான்வேடம்பூண்ட இம் மாயாவியால் அநேக அரசர்கள்

கொல்லப்பட்டிருக்கிறார்கள். இம்மாதிரியான மானை நான் உலகத்தில் கண்டதில்லை. இது மாயையென்பதிற் சந்தேகமில்லை'' என்றான். இவ்வாறு இலக்ஷ்மணன் கூறுவதைத் தடுத்து அம் மானின் தோலில் ஆசைகொண்ட சீதையும் இராமரை நோக்கி, “மகாபாஹோ! இம் மானைப் பிடித்தால் நமக்கு விளையாடுவதற்கு உபயோகமாகும். இதைப்போன்ற மான் இவ் வனத்தி லெங்குமில்லை. என்ன ரூபம்! என்ன சோபை! என்ன அழகிய குரல்! இது என் மனதை முற்றிலும் கவர்ந்து விட்டது. இது பிடிபட்டால் நாம் வனவாசம் முடிந்து அயோத்தி யடைந்த பொழுது அந்தப்புரத்திற்கு அலங்காரமாகும். எனது மாமிமார்களுக்கும் பரதனுக்கும் இது ஆச்சரியத்தை விளைவிக்கும். இது உயிரோடு பிடிபடாவிட்டாலும் இதன் தோல் எனக்குப் பிரியமுள்ளதாகும். இப் பொன்னிற மான்தோலைப் புல்லாதனத்தின் மீது விரித்து வீற்றிருக்க விரும்புகிறேன். இம் மாதிரியாக ஒன்றின் மேல் அதிக ஆசை கொண்டு பிடிவாதம் செய்வது மாதர்களுக்கடுக்காது. ஆனாலும் இம் மானின் உருவம் என் மனதை அபகரித்து விட்டது'' என்றாள். இவ்வாறு சீதை கூறியதைக்கேட்ட இராமரும் அதன் பொன்னிறமான மார்பினழகையும், மணிவர்ணமான காதுகளையும், சூரியன் போன்ற காந்தியையும், நக்ஷத்திரங்கள் போன்ற வொளியையும் கண்டு ஆச்சரியமடைந்தவராய் இலக்ஷ்மணனை நோக்கிச் சொல்லுகிறார். "மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் இவ் வுருவுடைய மான் காண்பதரிது. இதைக் கண்டு யார்தான் ஆசை கொள்ளார்? இம் மானின் மென்மையான தோலின் மேல் என்னோடு சீதை உட்காரவேண்டும். வேறு எந்த மிருகங்களின் தோலும் இதற்கிணையாகாது. நீ சொல்லியவண்ணம் அரக்கனது மயையாமெனில் இதைக் கொல்வது அவசியமாகும். இம் மாரீசனால் பூர்வத்தில் அநேக முனிவர்கள் வருந்தியிருக்கிறார்கள். அப்படியானால் பிராமணர்களைக் கொன்று வந்த வாதாபி அகஸ்தியரால் எப்படி கொல்லப்பட்டானோ அப்படியே இம் மாரீசனும் என்னால் கொல்லப் படவேண்டும். ஆகையால் வெகு ஜாக்கிரதையாகச் சீதையைக் காத்துவா. நான் இம் மானைப் பிடித்தாவது வருகிறேன்; அல்லது கொன்று அதன் தோலைக் கொண்டு வருகிறேன்.'' இவ்வாறு கூறிய பின் இராமர் ஆயுத பாணியாய் மானைத் தொடர்ந்தார்.

இவ் விஷயத்தைக் கம்பர் பின் வருமாறு வர்ணிக்கிறார்.

“பொன்னின் மானாகிப் புகுந்து சீதையை மயங்கச் செய்'' என்று இராவணன் கூறியதற் கிணங்கிய மாரீசன் அவ்வாறே இராகவன் வைகுமிடமடைந்தான்.

தன்மா னமிலா ததயங் கொளிசால்
மின்வா னமுமண் ணும்விளங் குவதோர்
பொன்மா னுருவங் கொடுபோ யினனல்
நன்மா னனையாள் தனைநா டுறுவான்.

கலைமான் முதலா யினகண் டவெலாம்
அலைமா னுறுமா சையின்வந் தனவால்
நிலையா மனவஞ் சனைநே யமிலா
விலைமா தர்கண்யா ரும்விழுந் தெனவே.

அதாவது, தனக்கு நிகரில்லாத மிகுந்த ஒளியினால் வானமும் மண்ணும் விளங்கும்படியான ஒரு பொன் மானுருவங்கொண்டு நல்ல மான் போன்ற சீதையை நாடிப் போயினன். அப்பொழுது அம் மானுருவைக் கண்ட கலைமான் முதலியவைகளெல்லாம் அலை போல் பெருகியவாசையோடு, நிலையில்லாத மனமும் வஞ்சகமு முடைய அன்பில்லா விலைமாதர்களிடத்தில் யாவரு வீழ்வதுபோல் அம் மானருகில் வந்தன. வால்மீகி மிருகங்களின் இயற்கை யுணர்ச் சியை மேம் படுத்திக் கூறும் பொருட்டு அவைகள் இம் மாயமானை முகர்ந்து வெருவியோடினவென்றார். கம்பரோ மாரீசனது மாயத் தொழிலின் பெருமையால் இயற்கை யுணர்வுடைய மிருகங்கள்கூட அறிவழிந்து இம் மாயையிலகப்பட்டன வென்றார்.

இச் சமயத்தில் வைதேகி தன் வால்வளை மென்கையென்னும் கொய்யா மலரால் மலர் கொய்துறுவாள் அங்குவந்து மனதினால் நினைக்கவொண்ணாத உருவுடைய மானைக் கண்டனள்.

காணா விதுகை தவமென் றுணராள்
பேணா தலங் கொடுபே ணினளால்
வாணா ளயிரா வணன்மா ளுதலால்
வீணா ளினறம் புவிமே வுதலால்.

தான் கண்ட அது மாயையென்றுணராதவளாய், இராவணனது வாழ்நாள் முடிவடைந்ததாலும், தர்மம் உலகத்தி லோங்கி வளருங் காலம் நெருங்கியதாலும் அம் மானிடத்தில் அடங்காத ஆசை கொண்டாள். அக் காதலினாற் றூண்டப்பட்டவளாய், "அதைப் பற்றித் தருக என்று என் பர்த்தாவைக் கேட்பேன்" எனப் பதைத்து வெற்றிச் சிலைவீரனாகிய இராமரை யடைந்துகூறுவாள்:

ஆணிப் பொனினா கியதாய் கதிரால்
சேணிற் சுடர்கின் றதுதிண் செவிகால்
மாணிக் கமயத் தொருமா னுளதால்
காணத் தகுமென் றனள்கை தொழுவாள்.

"ஒரு மானுளது. அது ஆணிப்பொன்னாலாகியது. அதன் ஒளி எங்கும் வீசுகின்றது. அதன் காதுகளும் கால்களும் மாணிக்க மயமாயிருக்கின்றன. அது காண்டற்குரியது" என்று கைதொழுதாள்.

அச் சொற்கேட்ட இராமரும் இதுபோன்ற துலகத்தினி லில்லையென்று கூறத்தக்க இது எவ்வாருனது என்று ஆலோசிக்காமலே அதனைக்காண ஆசை கொண்டான். அவ்வளவில் இளையவனும், "இம் மானின் கால் செவி வால் மணி யென்னும் தன்மையினுல் இது மாயமென்பதன்றி வேறெண்ணுவதிற் கிடமில்லை" என்ருன். அது கேட்ட இராமர், "ஏ இளங்குமரா! இவ் வுலகிலுள்ள சிருஷ்டி விசித்திரத்தை முற்றும் உணர வல்லவர்கள் யார்? உயிர் பல்லாயிரங் கோடியுள. அவைகளி லில்லாதன வொன்றுமில்லை. உயிர்களுக்கு முறையும் முடிவுமில்லை" என்ருர். இவ்வாறு கூறுகையில் சீதை, "நாம் பேசிக்கொண்டிருந்தால் அம் மான் ஓடிப்போய் மறைந்துவிடும்" என்ருள். அவள் கருத்தையறிந்து தம் தம்பியோடு வெளி வந்தபொழுது தடுக்கவொண்ணுத வினைப்பயனே என எதிரே அம் மான் விழித்தது.

"நோக்கிய மானை நோக்கி நுதியிழை மதியி ஞென்றும்
தூக்கில னன்றி தென்ரு னதன்பொருள் சொல்ல லாகும்
சேக்கையி னரவு நீங்கிப் பிறந்தது தேவர் செய்த
பாக்கிய முடைமை யன்ரே வன்னது பழுது போமோ"

தம்மை நோக்கிநின்ற மானை நோக்கிய இராமர் தம்முடைய சூக்ஷ்மமான புத்தியால் அதைப்பற்றி ஆராயாமலே நன்றிதென்ருர். மகா மேதாவியாகிய இராமர் இவ்வாறு ஆலோசிக்காமல் தீர்மானித்ததன் தத்துவ மின்னதென்று விசாரித்தால் பின் வருமாறு இருக்கலாமென்று கம்பர் கூறுகிருர்: பாற்கடலில் பன்னகப் பாயலில் பள்ளிகொண்டிருந்த பரந்தாமன் தேவர்களுடைய பாக்கியத்தாலன்ரே அப்பள்ளி நீங்கி இவ்வுலகில் பிறந்தது? அந்தப் பாக்கியம் பழுது போகாதன்ரே? நன்றிதென்று தீர்மானித்த இராமர் இலக்ஷ்மணனை நோக்கி

"வரிசிலை மறைவ லோனே மானிதன் வடிவை யுற்ற
அரிவையர் மைந்தர் யாரே யாதரங் கூர்கி லாதார்
உருகின மனத்த வாகி ஊர்வன பறப்ப யாவும்
விரிசுடர் விளக்கங் கண்ட விட்டில்போல் வீழ்வ காணுய்."

என்ருர். கம்பர் கூறிய உபமானத்தால் அம் மானை யடைந்தவைகள் நாசமடையும் என்பதைக் குறித்தார். இதனுல் இராமருக்கும் அம் மான் மாயமா யிருக்கலாமென்ற சந்தேக முண்டென்பதை

விளக்கினர். இது கேட்ட இலக்ஷ்மணன் இது சரியல்லவென்று நிச்சயித்து, "இப்பொழுது கண்டது பொன்மானுகில் நாம் மீண்டு போவதே காரியமாகும்" என்றான். அவ்வாறு கூறக்கேட்ட சீதையும் இராமரை நோக்கி, "இம் மானைச் சீக்கிரமாகப் பற்றித் தந்தால் நாம் நகரடைந்த காலத்தில் விளையாடுவதற்கு மிகவும் உபயோக மாகும்" என்றாள். "அப்படியே செய்வேன்" என்று எழுந்த இராமரைப்பார்த்துத் தெளிவுடைய இலக்ஷ்மணன், "இது கொடிய வரக்கர்கள் நம்மை வஞ்சிப்பதற்கென்று செய்த மாயமென்பதை தேவரீர் முடிவில் காணலாம்" என்றான். அப்பொழுது இராமர்

மாயமேன் மடிவா மன்றே வாளியின் மடிந்த போது
காய்சினத் தவரைக் கொன்று கடன் கழித்தோமு மாதும்
தூயதேற் பற்றிக் கோடுஞ் சொல்லிய விரண்டி னென்றும்
தீயதே யுரைத்தி யென்றான் றேவரை யிடுக்கண் டீர்ப்பான்.

"இது மாய மானுயிருந்தால் இதை யம்பினால் கொல்வேன். அப்படி கொன்ற பொழுது கொடிய மூர்க்கரான வரக்கரைக்கொன்று நமது கடனைக் கழித்ததாகும். அல்லது இது உண்மையானல் பற்றிக்கொள் வேன். இவ்விரண்டிலும் எது கெடுதல் சொல்வாய்? என்றார். இங்கும் இராமரைத் 'தேவரை யிடுக்கண் டீர்ப்பான்' என்றதினல் கம்பர் அவர் செய்த அவதாரத்தின் பயன் உண்டாவது காரணமாக இவ்வாறு தீர்மானித்தார் எனக் குறிக்கிறார். அப்பொழுது இளையவனும், "இவர்கள் செய்யும் மாய மின்னதன்மைத் தென்றும், இதன் பின் னின்றவ ரின்னரென்றும் தெளிவாயறிய முடியவில்லை யாதலால் நாம் இதன்மேல் இவ்வாறு ஆசைகொள்ளல் புகழுடைய தாகாது" என்றவுடன் இராமரும்

பகையுடை யரக்க ரென்றும் பலரென்றும் பயிலு மாயம்
மிகையுடைத் தென்றும் பூண்ட விரதத்தை விடுது மென்றால்
நகையுடைத் தாகுமன்றே யாதலி னன்றீ தென்னத்
தகையுடைத் தம்பிக் கந்நாட் சதுமுகன் தாதை சொன்னன்.

"அரக்கர்கள் நமது பகைவரென்றும் அவர்கள் பலரென்றும், அவர்கள் செய்யும் மாயம் மிகையுடைத்தென்றும் எண்ணி நாம் கொண்ட விரதத்தைக் கைவிடுவோமானல் பார்ப்பவர்கள் நகைப் பதற் கிடமாகுமாதலால், நான் செய்யத் துணிந்தது நல்லதுதான்" என்று தம்பிக்குச் சொன்னர். இப் பாட்டிலும் இராமரைச் சதுமுகன்தாதை என்று கூறியதால் அவர் புவியிலவதரித்த கருத்தை யொட்டியே யிவ்வாறு தீர்மானஞ் செய்தார் என்பது கம்பருடைய கொள்கைபோலும். பின்னும் இலக்ஷ்மணன் "நாம் நன்றாய்

ஆலோசித்துச் செய்வது தகும். ஆதலால் யானே சென்று, இதை விடுத்துப் பின்னின்றவர்கள் பலருள ரெனினும் என் வில்லால் அவர்களை வென்று மானைப் பற்றிக்கொணர்வேன்'' என்றவுடன் சீதை

ஆயிடை யன்ன மன்னு ளமுதகுத் தனைய செய்ய
வாயிடை மழலை யின்சொற் கிளியினிற் குழறி மாழ்கி
நாயக நீயே பற்றி நல்கலை போலு மென்னுச்
சேயரிக் குவளை முத்தஞ் சிந்துபு சிதறிப் போனாள்.

மனவருத்தத்தோடு தன்னுடைய வாய் குழறி அமுதனைய மழலையின் சொற்களால், “நாயக! நீயே பற்றி நல்கமாட்டாய்போலும்!'' என்று சொல்லிச் செவ்வரி படர்ந்த தன் குவளைக்கண்களினின்றும் சிந்தும் கண்ணீராகிய முத்துக்கள் சிதரச் சென்றாள். போனவளுடைய கோபக்குறியைக் கண்ட இராமர் “நானே மானைப்பற்றிக்கொணர்வேன் நீ யிங்குச் சீதையைக் காத்திரு'' என்று தம்பிக்குக்கூறி வில்லும் சாமும் கொண்டு விரைந்து மானைத் தொடர்ந்தார்.




# இலக்கியசாஸன வழக்காறுகள்

மு. இராகவையங்கார்

(131-ம் பக்கத் தொடர்ச்சி)

## 1. ஆதிகாலம்

தமிழ்மொழியின் ஆதிகாலம் என்பது கடைச்சங்கத்துக்கு முற்பட்ட காலவிசேடமாம். தலைச்சங்க இடைச்சங்கங்களும் அவற்றுக்கும் முற்பட்டனவும் இக் காலப்பகுதியுள் அடங்கும். இவ் வாதிகாலத்தில் வாழ்ந்த அரசர் புலவர்களைப்பற்றி இறையனார் களவியலுரையும் பிறவும் சிற்சில செய்திகளைத் தெரிவிக்கின்றன. ஆனால், அத் தலையிடைச்சங்கநூல்களில் ஒன்றுமே நமக்குக் கிடைத்திலது. நம் பரதகண்டத்து அமைந்த சாஸனங்களை நோக்கின், அவை, முக்கியமாக அசோகசக்கரவர்த்தி காலத்தினின்று தொடங்குதலைக் காணலாம். தலையிடைச் சங்கங்களோ, நூல்வழக்குப்படி, அதற்குப் பெரிதும் முற்பட்டனவாகும். ஆகவே, இவ் வாதிகாலத்தில் அமைந்த சாஸனங்களை நாம் எதிர்பார்க்க இடமில்லையாம். ஆயினும், தமக்கென்றமைந்த எழுத்தமைதியைப் பழைய தமிழ்மக்கள் உடையராயிருந்தவர் என்றே நாம் சொல்லக்கூடும். பண்டையோர் வழங்கிய வடிவெழுத்துக்கள் சிலவற்றைப்பற்றித் தொல்காப்பியனார் விவரிக்கின்றார். மெய்களும், எகரவொகரங்களும், குற்றிகர குற்றுகரங்களும், ஆய்தமும் புள்ளிக்குறி பெறுவன என்றும், மகரக்குறுக்கம் மகரவொற்றின் உள்ளாகப் புள்ளிபெறுமென்று அவ்வாசிரியர் நியமிப்பர்.* நூல்வழக்குப்படி, அவர் அகத்தியனார் மாணக்கருள் ஒருவராய் இடைச்சங்கத்தில் வீற்றிருந்தவர் என்பது பிரசித்தம். தொல்காப்பியத்தினும் பழைமைபெருமை வாய்ந்த தமிழ் நூல் வேறில்லை என்று ஆராய்ச்சி முறையாலும் துணியப்படுகின்றது. அந் நூலாசிரியர் இவ்வாறு புள்ளியெழுத்துக்களைச் சிறப்பாகக் கூறிச் செல்வதை நோக்குமிடத்து, தமிழுக்குத் தனிமையான எழுத்தமைதி

*"தொல்காப்பியனாரும் புள்ளி யெழுத்துக்களும்" என்ற தலைப்பின்கீழ் யானெழுதிய கட்டுரை பார்க்க. (செந்தமிழ். தொகுதி. 26, பக். 154—168.)

பழைமையாகவே உண்டென்று கொள்ளத் தடையில்லை. பரத கண்டத்தில் இப்போது வழங்கும் எழுத்துக்கட் கெல்லாம் பிராமி லிபிகளே மூலமானவை என்பது சாஸனவறிஞர் பெரும்பாலார் கருத்தாகும். இரண்டாயிரமாண்டுகட்கு முற்பட்ட சாஸனங்கள் பெரும்பாலும் இப் பிராமியிலே அமைந்துள்ளன. இவற்றுள் 'அசோக சக்கரவர்த்தியின் கட்டளைகள்' அமைந்த சாஸனங் களைத் தலைமையாகச் சொல்லலாம். இப் பிராமி சாஸனங்கள் சில, தமிழ் நாட்டில்—முக்கியமாகப் பாண்டிநாட்டின் மலைச்சார்வு களில்—இப்போது அருமையாகக் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவையாவும், சைனபௌத்த முனிவர்கள் இருந்துநோற்பதற்கு அமைத்துக்கொண்ட மலைப்பாழிகளில் பொறிக்கப்பட்டனவாகும். அவற்றில் அமைந்துள்ள பாஷையானது, பிராகிருத மொழிகலந்த தமிழின் சிதைவாகத் தெரிகின்றது. இச்சாஸனங்களிற் கண்ட எழுத் தமைதியே தமிழுக்குரியது என்று கொள்ள இடமில்லை. உரியதா யின், மெய்யெழுத்து முதலியன சிறப்பாகப் புள்ளிபெறுதற்குரியவை என்று தொல்காப்பியனர் நியமித்தபடி, இப் பிராமி சாஸனங்களினும் அப் புள்ளிகள் அமைந்திருத்தல் வேண்டுமன்றோ? அவ்வாறு இச் சாஸனங்களிற் காணப்பட்டில. அன்றியும் நம் நாட்டிற் காணும் பிராமி யெழுத்துக்கள் சில, வடநாட்டுப் பிராமியினும் வேருன குறியீடுகளையும் மாறுபாடுகளையும் கொண்டுள்ளன. இவற்ருல் தமிழ்மக்கள் தனியே வழங்கிய லிபிகளும் பிராமிலிபிகளும் கலந்த எழுத்தமைதியும், பாகதமும் தமிழுங்கலந்த பாஷையமைதியும் உடைய சாஸனங்களாகவே இவை தோற்றுகின்றன. எனவே, ஆதித் தமிழர் தமக்கென அமைந்த எழுத்தமைதி யுடையரல்லர் என்று சிலர் முடிவுகட்டுவது பொருந்தாதென்பது தெரியலாம். ஆயின், தமிழ் மொழிக்குத் தனியேயமைந்த ஆதி லிபிகள் உண்டோ என்ற கேள்வி நிகழக்கூடியதே. 25 வருஷங்கட்குமுன் செந்தமிழ்ப் பத்திரிகையில் இதுபற்றிய கட்டுரையொன்று வெளியிட்டுள்ளேன்.* சாஸனபரிசோதகர் கூறுமாறு, பழையனவும் புதியனவுமாகவுள்ள தமிழ்லிபிகள்யாவும், பிராம்மியின் திரிபுகளே என்பது ஒருவாறு பொருந்துவதே என்றும், ஆனல் கடைச்சங்கத்தார் காலத்தினும் அதற்கு வெகுகாலத்துக்கு முன்னும் வழங்கிய எழுத்து முழு தும், எகிப்தியர் சீனர் முதலியோர் வழங்கிவந்த சித்திரசங்கேத லிபி கள் (Hieroglyph) போன்றனவாதல் வேண்டும் என்றும் நான் அவ்வுரையிற் குறிப்பிட்டிருக்கிறேன். அவற்றை அடியில் வருமாறு சுருக்கமாக அறியலாம்.

---

* செந்தமிழ். தொகுதி. 5, பகுதி. 5.

தமிழ்மக்கள் பூர்வகாலத்தில் வழங்கிவந்த எழுத்துவகைகள் நான்காகும். அவை:—வடிவெழுத்து, பெயரெழுத்து, தன்மையெழுத்து, முடிவெழுத்து என்பனவாம்.

"வடிவு பெயர்தன்மை முடிவுநான் கெழுத்தே" (தீவா.)

எனப் பழைய நிகண்டுகளும் இவ்வெழுத்துக்களைக் குறிப்பிடுதல் அறியத்தகும். பிங்கலநிகண்டிற் கண்ட இதுவே சூத்திரத்துக்குப் பிற்காலத்தவராற் கூறப்பட்டுள்ள உரை, விளக்கமும் பிரமாணமும் உடையதன்று. அதனால் அவற்றைப்பற்றி ஈண்டு ஆராய்ச்சி செய்யவேண்டியதில்லை. இவ்வெழுத்துக்கள், தமிழ்மக்கள் நெடுங்காலமாக வழங்கிவந்த லிபிவகைகளாகவே தோற்றுகின்றன. இவற்றுள் வடிவெழுத்து என்றது, பூர்வ எகிப்தியர் வழங்கியது போன்ற சித்திரக் குறிகளேயாதல் வேண்டும். அவ்வெகிப்தியர் மனிதன் அன்றி விலங்கு போன்றவற்றை யுணர்த்த அவற்றின் முழுவுருவத்தையேனும் ஒருபாகமாகிய தலையையேனும் சித்திரித்துக் காட்டுதல் மரபு. இதனை உருவெழுத்து என்பதும் உண்டு.

"காணப் பட்ட உருவ மெல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
எழுதப் படுவ துருவெழுத் தாகும்"

என்பது பழஞ்சூத்திரம். இதனால், சித்திரவுருவில் எழுதிக் காட்டிவந்தனவே வடிவெழுத்து அல்லது உருவெழுத்து என்பது பெறுதல் கூடும். இனி, பெயரெழுத்து என்றது சீனர்களைப்போல ஒவ்வொரு பெயரை உணர்த்தற்கு இட்டு வழங்கிய சங்கேதக் குறிகளையாம். இவை, போரைக்குறிக்க மனிதன் புயங்களைக் காட்டுவதுபோல ஒரு தொடர்பு பற்றியேனும் அது பற்றுமலேனும் வழங்கப்படும். அடுத்த தன்மையெழுத்து என்றது குணங்கள் சக்திகள் முதலிய

---

* பிங்கல நிகண்டின் கீழ்க்குறிப்பிற் கண்டவை வருமாறு:—"வடிவெழுத்து—செவிப்புல வொலியைக் கண்ணுக்குப் புலப்பட வெழுதும் எழுத்து. பெயரெழுத்து-வடிவெழுத்து முதலாகவழங்கும் எழுத்துக்களுக்கு இடும் பெயரெழுத்து. தன்மை யெழுத்து—செவிப்புலனாகிய ஒலியெழுத்து. முடிவெழுத்து—வடிவெழுத்து முதலாயுள்ள எழுத்தினை மனத்தாற்றுணிவது முடிவெழுத்து எனக்காண்க. இக்கருத்து—இலக்கணக்கொத்துப் பாயிரம் 7-ம் சூத்திரவுரையின் கீழ்ப் பதிப்பாசிரியர் காட்டிய சூத்திரங்களை அடியாகக் கொண்டவை என்று தோற்றுகின்றது. இவையன்றி, உருவெழுத்து, உணர்வெழுத்து, ஒலியெழுத்து, தன்மை யெழுத்து என வேறு நான்கு வகையை யாப்பருங்கலவிருத்தி கூறும். (பக். 535)

வற்றைக் குறித்தற்கு வழங்கிய அடையாளங்களே. இத்தன்மை யெழுத்தாகப் பூர்வ எகிப்தியர் வழங்கியவை—விவேகத்துக்குக் கண்ணும் எறும்பும், அறிவின்மைக்கு ஈயும், நன்றியின்மைக்கு விரியன்பாம்பும், வெற்றிக்குக் கருடனும் பிறவுமாம். இறுதியான முடிவெழுத்து என்றது, வினைமுடிபுள்ள வாக்கியங்களைக் குறிக்க வழங்கிய அறிகுறிகளே. இரண்டு அல்லது பல பிராணிகளின் உறுப்புக்களை ஒன்றாகக் கலந்து ஓர் உருவம் அமைத்து ஒரு விஷயத்துக்கே குறியாக வழங்குவது எகிப்தியர் முறை. பெயர் தன்மை முடிவெழுத்துக்களும் வடிவாற் குறிக்கப்படினும், ஒரு பொருளை அதனுருக்காட்டி எழுதுவது வடிவெழுத்தென்றும், ஏனையவை அவ்வாறு இல்லாத சங்கேதவடிவுகளே என்றும் வேறுபாடு கண்டு கொள்க. இவற்றால், தமிழாது பூர்வலிபிகள் சித்திரசங்கேதக் குறிகளாதல் வேண்டும்—என்பது.

யான் பலவாண்டுகட்குமுன்பு எழுதிய இக்கருத்து சரித்திர வறிஞர்க்குப் பேரதிசயம் விளைக்கத் தடையில்லை. தமிழுக்கு இப்படியும் ஓர் எழுத்தைக் கற்பித்துக் கூறுதல் ஏற்குமோ என்று அன்னோர் சங்கித்தல் கூடியதே. ஆனால், எனக்கு இக்கருத்துத் தோன்றுதற்குக்காரணமாயிருந்த பிரமாணம் அவ்வறிஞரின் ஆராய்ச்சிக்கும் உரியதாகும். தமிழாசிரியனொருவன் அறிந்திருக்க வேண்டுவனவற்றுள், நாட்டில் வழங்கும் குறியீட்டெழுத்துக்களை யெல்லாம் அவன் நன்கறிந்தவனாதல் வேண்டும் என்று யாப்பருங்கல முடையார் கூறுகின்றார். அந் நூலின் இறுதிச் சூத்திர வுரையில், அதன் விருத்திகாரர் எழுதுவன வருமாறு:—

"மகடூஉ, ஆ, பிடி, குமரி, கன்னி, பிணவு, முடுவல் என்றின்ன சில வெழுத்தும், [அகசடதபய முதலிய்வாய வெழுத்தும் அசல வரஙய முதலிய இராசியெழுத்தும் கார்த்திகை முதலிய நாளெழுத்தும்], தேர், பதம்[1] முதலிய நால்வகை யெழுத்தும், சாதி முதலிய தன்மையெழுத்தும், உச்சாடன[2] முதலிய உக்கிரவெழுத்தும், சித்திரக்காருட முதலிய முத்திறவெழுத்தும், பாகியல்[3] முதலிய நால்வகை யெழுத்தும், புத்தேள் முதலிய நாற்கதி யெழுத்தும், தாது முதலிய யோனி யெழுத்தும், மாதமதியம்[4] முதலிய சங்கேத வெழுத்தும், கவி முதலிய சங்கேத வெழுத்தும், பார்ப்பான் வழக்காகிய பதின்மூன்றெழுத்தும் என்று இத்தொடக்கத்தனவும் கட்டுரை யெழுத்தும் வச்சிர முதலிய வடிவெழுத்தும் மற்றும் பலவகையாற் காட்டப்பட்ட எல்லாவெழுத்தும் வல்லார்வாய்க் கேட்க."

---

1. தோபதம். 2. முச்சுடானே. 3. பாசினகிய. 4. மாசுமடையம்.

இவ் வாக்கியங்கள் நாம் கூர்ந்து நோக்கத்தக்கன. இவை, பிழை பட்டுக் கிடப்பனவாயினும், இத் தொடர்களினின்று நாம் அறியக் கிடக்கும் அரிய செய்திகள் உள. வடிவெழுத்து, தன்மை யெழுத்து, சங்கேத வெழுத்து, கட்டுரை யெழுத்து என்று இத் தொடர்களிற் கூறப்படுவன, மேற்காட்டிய வடிவு, பெயர், தன்மை, முடிவெழுத்துக்களுடன் ஒப்பிடற் குரியவை. 'வச்சிர முதலிய வடிவெழுத்தும்' என்பதனுல் அவை வடிவு விளங்க எழுதப் பட்டமை தோற்றும். சாதி முதலிய தன்மை யெழுத்து என்ப தற்கு, எகிப்தியர் வழக்காக நான் குறித்த பொருளே பொருந் துவ தென்பது தெரியலாம். ஆகவே, சீனர் எகிப்தியர் வழங்கியவை போன்ற எழுத்துக்கள் தமிழகத்தில் அளவற்றிருந்தன வென்றும், அவற்றுட் சில யாப்பருங்கலவிருத்தியுடையார் காலத்தும்—அஃ தாவது உத்தேசம் 11-ம் நூற்றுண்டினும்—வழக்கிலிருந்தன என்றும் நாம் கொள்ளக்கூடியன.

இவ்வாறு பலவாண்டுகட்கு முன் யான் கண்ட கருத்தை வேறு பிரமாணமொன்றும் இப்போது வலியுறுத்துகின்றது. காவிரிப்பூம் பட்டினத்துத் துறைமுகத்தில் 'இறக்குமதி' யாகும் மூடைகட்கும் பண்டமேற்றிய வண்டிக்கட்கும் கண்ணெழுத்துக்கள் இடப்பட் டிருந்தன என்பது—

"வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பலபொதி"
(சிலப். 26, 136.)

"இருபதினுயிரங், கண்ணெழுத்துப் படுத்தன
கைபுனை சடமும்" (சிலப். 5, 112.)

என்ற இளங்கோவடிகள் வாக்கால் அறியலாம். இவ்வாறே அரசர்க் குத் திருமுகமெழுதுவாரைக் கண்ணெழுத்தாளர் என்று வேறிடத்தும் அவ் வடிகள் வழங்குவர்.

"கண்ணெழுத் தாளர் காவல் வேந்தன்
மண்ணுடை முடங்கலம் மன்னவர்க் களித்து"
(சிலப். 25, 170-1.)

எனக் காண்க. இவற்ருல் கண்ணெழுத் தென்பது, கடைச்சங்க நாளில் வழங்கிய ஒருவகை யெழுத்தின் பெயர் என்பதும், புறநாட்டு வணிகர் (வம்பமாக்கள்) தம் பெயர்முதலியவற்றை இவ்வெழுத்துக் களிலே பொறித்துவந்தவர் என்பதும், இவ்வெழுத்திற்ருன் அக் காலத்து அரசர் திருமுக முதலியனவும் எழுதப்பட்டுவந்தன என் பதும் அறியப்படுகின்றன. இனி, 'கண்ணெழுத்து' என்பதன் பொருள் யாது என்பதை நோக்குவோம் :

'கோல்' என்பது பலபொருள் குறிக்கும் பொதுச் சொல் லேனும், சார்பினுல் அது சிறப்புப் பொருள் உணர்த்தி நிற்றல் இயல்பளவையாகும் என்பதனைக் கூறுமிடத்து—

"மாமே லிருந்தொரு கோல்தா வெனிற்சுள்ளிக் கோல்தர லும்
சோமே லிருந்தொரு கோல்தா வெனிற்றர வேதுணிந்து
பூமேவு கண்ணழுத் தங்கோல் கொடுத்தலும் பூதலத்தே
நாமே வியல்பென்று கூறுவர் நல்லசொன் னுவலரே"

என்ற பழையபாட்டொன்று வழங்குகின்றது.[1] இதன் முதலிரண் டடிகளின் கருத்து—குதிரைமேலிருந்து கோல்கொடு எனின் அது சுள்ளிக்கோலும், மதில் மேலிருந்து 'கோல்கொடு' எனின் அது கண்ணழுத்தங் கோலுமாய்ச் சார்பினுற் பொருளுணர்த்தும் என்பதாம். சுள்ளிக்கோல்-குதிரை யோட்டுங் கருவிகளுள் ஒன்று. இளம்பூரணவடிகள், இதனைச் 'சுள்ளற் கோல்' என்பர்.[2] இனி, சோ (மதில்) மேலிருந்து 'கோல்தா' என்ருல், கண்ணழுத்தங் கோலை அது குறிக்கும் என்ற பகுதி ஆராயத்தக்கது. கண்ணழுத் தங் கோல் என்பது கண்ணேணியைக் குறிக்கும் என்பது அறிஞர் சிலர் கருத்து. ஆனல், கோல், கண்ணழுத்தங்கோல் என்பன ஏணிப் பொருளில் வழங்கும் சொல்லல்ல. அன்றியும், சுவரிடமாக இருப் பவன் 'ஒரு கோல் தா' என்று கேட்பதற்கு ஏற்ப அக்கோல், பிறன் கொடுத்தற்கும் வாங்குபவன் கையிற்பெறுதற்கும் உரிய பண்ட மாதலே பொருந்தும். கண்ணேணியோ மதின்மே லிருப்பவற்கு உதவியாக அம் மதிலிற் சார்த்தற்கு உரியதன்றி 'ஒரு கோல்தா' என்று கேட்டுக் கையிற் பெறுதற் குரியதாகாமை தெரியலாம். எனவே, ஈண்டுக் கொடுத்தற்கும் பெறுதற்கும் ஏற்றகோல் வேருகவே வேண்டும். அஃது எழுதுகோல் எனலே பொருத்தமாம். 'எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோல்' (குறள், 1285) என்பத ஞல், கோல் சித்திரமெழுதுங் கருவியாதல் தெளிவு. அதனல், சுவ ரிடமாக இருந்துகொண்டு ஒருவன் 'கோல்தா' எனின், அது சார்பு பற்றி எழுதுகோலாகவே ஒருவன் கருதிக் கொடுத்தலும்' என்பதே அத் தொடர்ப் பொருளாகக் கொள்ளற்பாலது. "மாடக்குச் சித் திரமும்" "சித்திர முதுசுவர்" "சுவர்மிசைச் சார்த்தியும் வைத்துந் தொழுவர்" என்பன முதலியவற்ருல், மதிலில் ஓவியமெழுதும்

1. இப்பாட்டு, சிவஞான சித்தியார், சுபக்கம், அளவை யிலக்கணங் கூறுமிடத்து மறைஞானதேசிகர் காட்டிய மேற்கோட் செய்யுட்களுள் ஒன்று.

2. தொல்காப்பியம், சொல்லதிகாரம், 33, இளம்பூரணம்.

வழக்குப் பிரசித்தம். இவ்வாறுயின், கண்ணழுத்தங்கோல் என்ற தொடரின் முற்பகுதி சித்திரத்தைக் குறிக்குஞ் சொல்லாதல் வேண்டும் என்றும், 'கண்ணழுத்து' என்று அச்சிட்டுள்ள அப்பகுதியைக் 'கண்ணெழுத்து' எனத் திருத்திப்படித்தல் பொருத்தமென்றும் தெரியலாகும். கண்ணெழுத்து-சித்திரவெழுத்து. 'கண்ணுள் வினைஞர்' என்பது சித்திரகாரிகட்கு ஒரு பெயர் என்பது சங்க நூல்களால் அறியப்படும். இதற்கு 'நோக்கினர் கண்ணிடத்தே தம் தொழிலை நிறுத்துவோர்' என்று பொருள் கூறுவர் நச்சினர்க்கினியர். இவ்வாறே கண்ணெழுத்தும், பார்ப்பவர் கண்ணில் தொழிற்றிறமை காட்டிநிற்கும் எழுத்து என்று விரிந்து பொருள் பெறும். எழுதல் என்பதற்குச் சித்திரித்தல் என்ற பொருள் பழைமையானதாம். அதனல், சித்திரத்தினடியாகவே எழுத்து என்ற சொல் வந்ததோ என்று கருதற்கும் இடமுண்டு.

இவ்வாறு சித்திரசங்கேதக் குறிகளான எழுத்துக்கள் தமிழில் முற்காலத்து வழங்கியவை என்பதற்குக் கண்கூடாகக் கண்ட பிரமாணமும் உண்டு. சாஸன விலாகாவினின்று வெளிவந்த புத்தகத் தொகுதிகளை நோக்கு மிடத்து, தமிழில் முன்னுளில் வழங்கிவந்த குறியீட்டெழுத்துக்களைக் காணலாம். உதாரணமாக:—

நெல் (S. I. I. III, 7, 93) குறி (S. I. I. III, 176)
சர்மன் (Ibid. 10) யாண்டு Ibid. V, 156)
கொல்லம் (T. A. S. V, 56) பொன் (Ibid.)

என்பன காண்க. மேற்குறித்த சாஸன சம்புடங்களின் கீழ்க் குறிப்புக்களில் இத்தகைய குறியீடுகள் ஆங்காங்கே பயில்கின்றன. இவற்றிற் சில இன்னவற்றைக் குறிப்பன என்று ஊகத்தால் அறியப் பட்டனவேனும், பல தெளியக்கூட வில்லை. சாஸனங்களில் இக் குறியீடுகள் அருமையாகக் காணப்படினும் உலகவழக்கில் மிகுதியாகவே அக்காலத்தில் வழங்கியிருத்தல் வேண்டும். சாஸனம் வரைந்தோரின் நோக்கம், தம் அறச்செயல்கள் அனைவர்க்கும் வெளிப்படையாகத் தெரிந்திருக்க வேண்டும் என்பதேயாம். அதனல், அக்காலத்தில் நாட்டார் நன்கறிந்த சங்கேதவெழுத்துக்களன்றி, ஏனையவை சாஸனங்களிற் பயில இடம் பெறவில்லை என்றே தோற்றுகின்றது. இச்சங்கேத வெழுத்துக்களே கரந்தெழுத்து என்றும் வழங்கப்பட்டன. காந்தருவதத்தை சீவகனுக்குக் கரந்தெழுத்திற் கடிதம் எழுதினுள் என்று, தங்காலத்து வழங்கிய இக்குறியீட்டெழுத்துக்களை உள்ளத்துக் கொண்டு திருத்தக்கதேவர் பாடுதல் இங்கறியத் தக்கது. (சீவகசிந். 1767.) தமிழாசிரியனெருவன் நாட்டில் வழங்கும் இத்

தகைய எழுத்துவகைகளையெல்லாம் உணர்ந்தவனுதல் வேண்டும் என முன்னோர் நியமித்திருத்தலால், பழைய வடிவு பெயர் தன்மை முடிவு முதலிய சங்கேத வெழுத்துக்கள் நாட்டிற் பெருவழக்குப் பெற்றிருந்தன என்றும், அவையாவும் முன்னோரால் முறையாகக் கற்கவும், கற்பிக்கவும் பெற்றுவந்தன என்றும் நாம் நன்கறியக் கூடும். இத்தகைய எழுத்துக்கள், தமிழுக்கே பழைமையாக உரியனவா, அன்றி எகிப்து முதலிய புறநாட்டாரிட மிருந்து வந்தேறி வழங்கியனவா ? என்பது தெளிய இடமில்லை. ஸிந்து, பாஞ்சால தேசங்களில் உள்ள ஹரப்பா, மொஹிஞ்ச தாரோ என்ற ஊர்களிலே, சமீபத்திற் கண்டறியப்பட்ட ஸுமேரியன் எழுத்துக்களாகக் கூறப்படுபவை, இச் சித்திர சங்கேதக் குறிகளாகவும், 5,000, 6,000, ஆண்டுகட்கு முற்பட்டனவாகவும் உள்ளன என்பர். இதனுல், இக்குறியெழுத்துகள் நம் தேசத்துப் புராதனமக்கட்குப் புறம்பானவையல்ல என்பது தெளிவாகின்றது. அம்முறையில், நான் மேலே கூறிய எழுத்துவகைகளை நோக்குமிடத்து, அப் புராதன மக்களில் தமிழரும் விலக்கப்பட்டவர் அல்லர் என்று கொள்ளக்கூடியதாம்.

(தொடரும்)

# 'உமா-கௌரி' என்ற நாமங்களின் வரலாறு

வி. ஆர். இராமச்சந்திர தீக்ஷிதர்

முன்னொரு காலத்தில் தாரகனென்னும் நாமம் பூண்ட கொடிய அசுர னொருவ னிருந்தான். அவன் தபோ பலத்தால் தார காமயமென்று பிரஸித்தி பெற்ற ஓர் பெரிய தேவாசுர யுத்தத்தில் விஷ்ணு இந்திரன் முதலான தேவர்களையும் தேவ கணங்களையும் ஜயித்து, தேவாசுரர்களுக்கு அரசனாக விளங்கினன். அக் காலத் தில் உலக சிருஷ்டி கர்த்தாவான பிரமனுக்குப் பலத்த சிந்தனை உண்டாயிற்று. "தபோ பலம் எல்லாப் பலத்தையும்விட மேல் அல்ல வோ ? இந்தப் பலத்தை ஆதாரமாகக் கொண்டே தாரகாசுரன் வரம் வேண்டுங்கால் தனக்கு மரணம் ஏழுநாள் வயதுள்ள குழந்தை யாலன்றி வேறு விதம் ஏற்படக்கூடாதென்று கேட்டுக் கொண்டா னன்றோ ? அதற்கு ஓர் உபாயம் தேடுவோம்'' என்று லோக பிதா மஹரான பிரமதேவர் ஆலோசனை செய்யுங்கால் ஓர் எண்ணம் அவர்க்கு உதித்தது.

அதாவது: "ஒரு சூரனை குமாரனை உற்பத்தி செய்யத் தகுந்தவர் மஹேசுவரரான ஈசரன்றோ. அவர் தற்சமயம் மனைவி யில்லாமல் தவத்தில் புத்தியைச் செலுத்தி யிருக்கின்றார். அவருக்கு மனைவியும், தக்ஷபிராஜபதி குமாரத்தியுமாகிய சதி என்பவள் தன் தகப்பனர் செய்த யாகத்தில் தன் கணவனுக்குச் செய்த அவமானத் தைப் பொறுக்க முடியாதவளாய் மரண வியோகம் அடைந்துவிட் டாள். அச் சிவபிரானுக்கு இரண்டாவது தாரம் ஏற்படுத்தி ஒரு குழந்தையை உண்டுபண்ணித் தாரகனை ஸம்ஹாரம் செய்து, தேவர்களுக்கு அபயப் பிரதானம் கொடுப்போம்'' என்று பிரம தேவர் தீர்மானித்தார்.

ஆனல் லோகேசுவரரான ஈசருக்குத் தகுதியான தாரம் தேடு வது சாதாரண காரியமோ ? அவர் தவத்தின் பலத்தால் யோசித்த வளவில், பர்வத ராஜனுன இமவான் பத்தினி மேனாதேவி இப்போது கர்ப்பவதியாயிருக்கிறாள். அவளுக்குச் சிவசக்தி ரூபமான ஓர் பெண் பிரஜை உண்டாகும்படி வழிதேடி, அந்தப் பெண்ணை மஹேச

ருக்குக் கலியாணம் செய்து வைப்பதென்ற தீர்மானத்திற்கு வந்தார். உடனே விபாவரி யென்றும் நிசாதேவி யென்றும் பெயர் பூண்ட இராத்திரி தேவதையை மனதால் தியானிக்க அந்தத் தேவியும் பிரம தேவர் முன்னிலையில் தோன்றினாள்.

பிரமரும் விபாவரியைக் கொண்டாடிப் பின்வருமாறு கட்டளை யிட்டனர்: "தற்காலம் தேவர்களுக்கு வந்திருக்கும் ஆபத்து மஹத்தானது ; அதைத் தீர்க்கும் விஷயத்தில் உன் உதவியை எதிர் பார்க்கின்றேன் ; இச் சமயம் பர்வத அரசனான இமவான் பத்தினி மேனா என்பாள் கர்ப்பவதியாக இருக்கிறாள்; நீயும் அவள் கருப்பத் தில் புகுந்து, புத்திரியாகப் பிறந்தால் உனக்கும் ஸாக்ஷாத் ஈசருக் கும் திருக்கலியாணம் நடக்கும்; நீ உலகங்களுக்கெல்லாம் தேவியான பரமேசுவரியாக விளங்குவாய்; நீயே சிவ சக்தி ரூபமாயிருப்பாய்; உன்னைத் துதியாதவர்கள் உலகி லிருக்கமாட்டார்கள். ஆகவே, தாமதிக்காமல் இமய பர்வதத்தை அடைந்து தேவகாரியத்தை முடித்து வைப்பாயாக."

அதைக் கேட்டதும் விபாவரி அங்கீகரித்து மேனாதேவி தங்கி யிருக்கிற இடம் சேர்ந்து பிரம தேவர் உத்தரவுப்படி அவள் தேகத் துள் புகுந்தனள். காலதாமதமின்றி மேனாதேவிக்கு ஸர்வாங்க சுந்தரியாயும் ஸர்வ லக்ஷணமுள்ளவளாயும் பெண் குழந்தை ஒன்று பிறந்தது. இது தேவி அவதாரமென்றறிந்த தேவர்கள் குதூகல மடைந்தார்கள். உற்சவம் கொண்டாடினார்கள். குழந்தையும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பர்வ காலத்தையும் அடைந்தாள். தேவராஜனான இந்திரன் நாரத முனிவரை அழைத்து, இமவானிடம் சென்று ஈசனுக்கு அப் பெண்ணைத் தாரமாகக் கொடுக்கும்படிச் செய்து வருமாறு அவ ரைக் கேட்டுக் கொண்டான். நாரத முனிவரும் இமவானிடம் சென்று தெரிவிக்க, அவனும் அந்த விஷயத்தில் ஈடுபட்டான்.

இதைக் கேட்ட இந்திரன் ஆலோசித்தான். "நாம் எண்ணிய கலியாணம் பாதி நிச்சயமாய்விட்டது. முழுக் கலியாணமாக வேண்டுமானால் கைலாய பர்வதத்தில் விளங்காநின்றவரும் தவத்தில் மூழ்கி யிருப்பவரும், பிரமசரிய விரதத்தில் ஒழுகுபவருமான சிவ பிரான் ஒப்புக்கொள்ளவேண்டும்." இக் காரணம் பற்றி இந்திரனும் காமதேவனான மன்மதனை அழைத்து, "ஈசனிடம் சென்று அவர், தவத்தைவிட்டு நீங்கித் திருமணத்தில் ஆசை கொள்ளும்படிச் செய் வாயாக" என்று கூற, மன்மதன் பயந்தான். ஆனாலும் தேவர் கோமான் கட்டளையை மீறி நடக்கமுடியுமோ ? ஆதலால் காம தேவன் ரதிதேவியும் வசந்தனும் பின்தொடரக் கைலாயத்திற்குப்

புறப்பட்டான். அவ்விடம் சென்று தன் புஷ்ப பாணத்தை முக்கண்ணர் மேல் செலுத்த, ஈசரும் மிக்க கோபத்தை அடைந்து நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்துவிட்டார். ரதி தேவியும் துக்க சமுத்திரத்தில் மூழ்கினவளாய் அம் மலையின் ஒரு பிரதேசத்தில் புலம்பிக்கொண்டிருந்தாள்.

இது இப்படி நிற்க, பர்வத அரசனான இமவான் தன் புத்திரியை மணக் கோலத்துடன் அழைத்துக்கொண்டு சிவபிரானிருக்குமிடம் தேடி வந்துகொண்டிருந்தான். வழியில் ரதிதேவியின் புலம்பலைக் கண்டு நின்று வினவ, அவளும் தன் கணவன் எப்படி ஈசர் கோபத்திற்கு இரையானான், என்பதைத் தெரிவித்தாள். அது கேட்டமாத்திரமே இமவானும் அவ்வளவு முன்கோபக்காரனுக்குத் தன் குழந்தையை விவாஹம் செய்துகொடுக்க மனமில்லாதவனாய்த் தன் வீட்டுக்குத் திரும்பினான். ஆனால் அந்தப் பெண்ணுக்கு அது இஷ்டமில்லை; எப்படியிருந்தாலும் ஈசரைத் தவிர வேறு எவரையும் மணம்புரிய விருப்பமில்லாதவளாய்த் தகப்பனாரை நோக்கி, "நான் இனி வரமாட்டேன்; தாங்கள் என்னை ஈசருக்குக் கன்னிகாதானம் செய்து கொடுங்கள்'' என்றாள். தந்தையான இமவான் பால்யபருவத்திலுள்ள குழந்தை தவம் செய்வது தகுதியோ ? முன் கோபியான தேவருக்கு மனைவியாவது நியாயமோ ? என்று பல சமாதான வார்த்தைகளைச் சொல்லியும் அவள் பிடிவாத நிலையைப் பார்த்து, மறுபடியும் 'உ + மா', 'உ + மா' என்றான். அதாவது 'அப்படி செய்யாதே அம்மா' என்பதாம். அப்பொழுது ஓர் அசரீரிவாக்கு ஆகாயமார்க்கத்தில் திடீரென்று எழுந்தது. அதாவது, "இவளுக்கு 'உமா' என்பது திருநாமம்; இனித் தவத்திற்குப் போகட்டும்; இவள் கூடியசீக்கிரம் ஈசானியாக விளங்கப் போகிறாள்.'' அது கேட்ட இமவானும் தன் பெண்ணின் எண்ணத்திற்கு இணங்கினான். இம்மாதிரி தேவிக்கு 'உமா' என்ற திருநாமம் ஏற்பட்டது.

உமாதேவிக்குக் கௌரி என்றும் ஒரு பெயருண்டு. அந்த நாமம் தேவிக்கு வந்த விவரத்தையும் அடியில் கூறுவாம்: தந்தை கட்டளையின்மேல் உமாதேவி கடுந் தவத்திலிறங்கிவிட்டாள். அதனால் இந்திரனுக்குக் கவலையால் தூக்கம் வரவில்லை. தாரக சிங்கத்தின் கர்ச்சனை அடங்கவில்லையே யென்ற கவலை இருந்தது. ஆதலால் பிரம ரிஷிகளான எழுவர்களையும் அழைத்து, உமா தேவிக்கும் ஈசருக்கும் பாணிக் கிரஹணத்தை நடத்திவைக்கும்படித் தெரிவித்தான். அவர்களும் உமா தேவியிடம் சென்று சிவபிரானைப் பற்றி நிந்தாஸ்துதிபோல் அவருடைய ஆடை ஆபரணங்களைப்பற்றியும்

துர்க்குணங்களைப்பற்றியும் விரித்துக் கூறினர். அத்துடன் மஹா விஷ்ணு குபேரன் முதலிய தேவர்களின் பெருமைகளையும் எடுத்துப் பேசி, அவலக்ஷணமான சிவபிரானைவிட, லக்ஷணம் பொருந்திய வேறு தேவர்களில் எவரையாவது மணஞ்செய்துகொள்ளக் கூடாதா என்று பல முறை அத் தேவியைப் பரீக்ஷை செய்தனர். தேவிக்கு ஈசரைத் தவிர வேறு எவரிடத்திலும் மனஞ் செல்லவில்லை யென்பதை உறுதியாக அறிந்த தேவரிஷிகள் சிவபிரானிடம் சென்று அநேக விதமாய்ப் பிரார்த்தித்துக் கொண்டாட, அவரும் தேவியை மணம்புரிய இணங்கினர்.

பிறகு பிரம்ம ரிஷிகள் இமவானிடம் சென்று திருக் கலியாணத்திற்கு ஏற்பாடு செய்ய, பாணிக்கிரஹண உற்சவம் வெகு விமரிசையாய் நடந்தேறியது. பார்வதியின் கலியாணத்தைக் கேட்டுச் சந்தோஷிக்காதவர்க ளில்லை. தமது மாமனர் மாமியார்களான பர்வத ராஜன் மேனு தேவி இவர்களிடம் விடைபெற்று ஈசர் உமாதேவியுடன் சிவபுரம் போய்ச் சேர்ந்தனர். அவர்கள் இன்புடன் வாழ்ந்து வந்தனர்.

இப்படி உல்லாசமாக இருக்குங்கால் ஒருநாள் பரிகசிப்பதுபோலச் சிவபிரான் தேவியைக் கறுப்பு நிறமானவள், நல்ல லட்சணமில்லாதவள் என்று சொல்லத் தேவி கோபங்கொண்டு ஈசனுடைய ஆடை ஆபரணங்களைவிடத் தன் காந்தி மட்டமன்று என்று வெறுத்துப் பேசி, தன்மேல் விருப்பமில்லாத இடத்தில் தான் தங்கமாட்டாளென்று கூறிவிட்டுத் தவத்திற்குப் புறப்பட்டாள். விளையாட்டே வினையானது என்றறிந்த சிவபிரானும் சமாதானம் சொல்ல, அதை மறுத்துத் தன் நிறத்தை மாற்றிக்கொண்டுதான் தான் திரும்பிவரக் கூடும் என்று வீட்டைவிட்டுக் காட்டை அடைந்தனள். உமாதேவிக்குத் தன்னிடம் இராத்திரி தேவதையான நிசாதேவி வசிப்பதும், நீலமேனி அதனாலுண்டாயிருப்பதும் தெரியாது. முன்போல் கடுந் தவம் ஏற்பட்டுவிட்டது. பிரம தேவருக்கும் மனதில் சஞ்சலம் உண்டாய்விட்டது. "ஒரு நல்ல காரியத்திற்கு அநேக இடையூறுகளா?" என்றுணர்ந்த பிதாமஹரும் தேவியைக் கொண்டாடி, அவள் தவம் கலையப் பண்ணி, அவள் எண்ணத்தை நிறைவேற்ற முன் வந்தார். அவரும் அந்தத் தேவி முன்னிலையில் நின்று நிசா தேவதையான விபாவரியை உமாதேவி தேகத்தைவிட்டு விலகும்படி உத்தரவு செய்தார். அப்படியே நிசா தேவி, உமா தேவியின் கண்களிலிருந்து குதித்தாள். குதித்த மாத்திரத்தில் உமைக்குக் கறுத்த மேனி நீங்கியது. தேகம் வெண்ணிறம் அடைந்தது. பிரம தேவனும் விபாவரிக்கு ஒரு சிங்க வாஹனத்தையும் ஒரு யக்ஷவேலைக் காரனையும் கொடுத்து "விந்திய

மலைக்குப்போய் வாசம் செய்வாயாக'' என்று கட்டளையிட, அப்படியே விபாவரி விந்திய பர்வதமடைந்தாள். உமாதேவியும் பிரமன் விருப்பப்படி சிவபுரம் சென்றனள். சிவ பிரானும் ஆனந்தத்தால் பரவசமானார். அன்று முதல் உமாதேவிக்கு 'கௌரி' என்ற திரு நாமம் உலகத்தில் வழங்கலாயிற்று.

கௌரீ தேவியுடன் சிவபிரான் விஷய சுகங்களில் மூழ்கி யிருப்பதைக் கண்ட தேவர்கள். குமாரோத்பத்தி யாகவேண்டிய நிமித்தம், தேவதூதனை அக்கினி பகவானைக் கைலாயத்திற்கு அனுப்பி, அவருடைய இன்பங்களைப் பேதித்துக் குமரவேள் உற்பத்தியாகும்படி செய்வித்தனர். அக்கினி பகவான் ஓர் கிளி வேடம் பூண்டு அம்மாதிரியே செய்யக் குமாரதேவர் அவதாரமானார். அன்று தொட்டு எழாவது நாளில் குழந்தையாகிய குமரக்கடவுள் கொடிய அசுரனை தாரகனை ஸம்ஹரித்துத் தேவர்களை ஆனந்தக் கடலில் மூழ்கும்படி செய்தனர்.

இவ்வரிய வாலாறுகள் மத்ஸ்ய புராணம், நூற்றைம்பத்து நாலாவது சருக்கத்தில் கண்டவை.




# சங்கீத சரஸ்வதி

பி. ஸ்ரீ ஆசார்யா

(134-ம் பக்கத்தொடர்ச்சி)

## இசை ஞானி ஓதுவார்

இந் நிலையில், உண்மையான சங்கீதவித்துவான்களும் அபூர்வமாகக் காணப்படுகின்றனர் என்றால், அது நமது முன்னோர் செய்த தவப்பயன் என்றே சொல்லவேண்டும். இத்தகைய வித்துவான்களில் ஒருவர் இசை ஞானி ஓதுவார். அவர் தற்கால இந்திய சங்கீதத்தில் பயிற்சிபெற்றிருப்பதோடு பழைய தமிழ்நாட்டு இசை நூல்களைக் குறித்தும் வெள்ளைக்காரர் சங்கீதத்தைக் குறித்தும் ஆராய்ச்சி செய்து வருகிறார். பலவகையான இன்னிசைக் கருவிகளின் நயங்களை அறிந்திருப்பதோடு வாய்ப்பாட்டிலும் கதா காலட்சேபங்களிலும் வல்லவராயிருக்கிறார். இசைத் தமிழோடு இயற்றமிழிலும் நாடகத்தமிழிலும் அவருக்கு ஞானமுண்டு. முத் தமிழையும் அறிந்திருக்கும் இசை ஞானி ஓதுவாருக்குச் சித்திரம் முதலிய அழகுக் கலைகளிலும் பழக்கமுண்டு.

அவர் பாடும்போது, சங்கீதத்தின் தெய்வத்தன்மையையும் வசீகர சக்தியையும் நாம் நிச்சயமாக உணர்ந்துகொள்ளலாம். அவரது குரல் ஒருசமயம் புல்லாங்குழல்போலக் குளிர்ந்து இசைக்கிறது. ஒருசமயம் சங்குபோல் பேசுகிறது. சிலசமயங்களில் பெண்களின் சிலம்புகள்போல் கொஞ்சுகிறது ; குயில்போல் கூவுகிறது ; கிளிபோல் மிழற்றுகிறது. சிலசமயங்களில் பம்பைபோலவும் கொம்புபோலவும் கோஷிக்கிறது ; முரசுபோல் அதிர்கிறது; வேறு சமயங்களில் ஓர் இன்னிசைக்கடல் போலப் பொங்கி அலைமேல் அலை எறிந்து முழங்குகிறது. அக் குரலில் எத்தனைவகையான ஒலி விசேஷங்கள் ! ஓசை வேறுபாடுகள் ! இசை நயங்கள் ! சப்த சித்திரங்கள் !

இசைஞானி ஓதுவாரின் அமுத கீதத்தைப் பருகுவோர், அதி சூட்சும நாதமயமாக இலங்கும் வேறொரு லோகத்தை அடைந்தவர்களைப் போல் தம்மை மறந்து பேரின்பத்தில் முங்கிமுழுகுகிறார்கள்.

அவர் வீணை வாசிக்கும்போது புருவங்கள் மேலே ஏறுவதில்லை; கண்கள் சலித்துக்கொண்டிருப்பதில்லை; கழுத்து விம்முவதில்லை; பற்கள் வெளிப்பட்டுத் தோன்றுவதில்லை; 'அங்க-சேட்டை'கள்' ஏற்படுவதில்லை.

பேர்பெற்ற பெரிய சங்கீத வித்துவான்களும், பாடும்போது, தங்கள்முகத்தை அவலட்சணமாக்கிக் கொள்வதுண்டு. சிலர் பாடும்போது ஆயிரம்தேள்கள் ஏககாலத்திலே முகத்தில் கொட்டியது போல், அவ்வளவு கஷ்டப்பட்டு முகத்தைச் சுளித்துக்கொள்ளுகிறார்கள். வேறு சிலர், நெருங்கிய பந்துக்களையோ சிநேகிதர்களையோ பறிகொடுத்தவர்களைப்போல் அழுமூஞ்சிகளாகப் பாடுகிறார்கள். இன்னும் சிலர் போர்செய்பவர்களைப்போல் கோபத்தோடு தங்கள் புருவங்களை ஏற்றி வில்லைப்போல் வளைத்துக்கொள்ளுகிறார்கள்.

சிலர் வெளிப்பட்ட திருடனைப்போல் 'தெறு தெறு' என்று விழிக்கிறார்கள்; சிலர் இப்படியும் அப்படியும் மா அரைக்கிறார்கள். சிலர் மிருதங்கம் வாசிக்கும்போது, தலை உடலினின்றும் வேறுபட்டு அறுந்து போமோ என்று ஜீவகாருண்யமுள்ளவர்கள் பயந்து பரிதாபப்படும் நிலைமை வாசிப்பவருக்கு ஏற்படுகிறது. இந்த ஆபத்தான நிலையில் தலையைக் கழுத்தோடு அமுக்கிப் பிடித்துக்கொள்ளலாமா என்றுகூட உங்களுக்கு ஓர் உணர்ச்சி ஏற்படலாம்.

இப்படிப்பட்ட வித்வான்களிற் சிலரைச் சமீபத்திலிருந்து கேட்பது ஒருவேளை நமக்கே ஆபத்தாக முடியுமோ என்று நீங்கள் நினைக்கலாம். எனவே, இவர்களைத் தூரத்தில் இருத்திக் கேட்க வேண்டும்; அல்லது திரைமறைவில் சிறைவைத்துக் கேட்கவேண்டும். சங்கீதத்தின் பெருமை கெடுவதற்கு இவ் வித்வான்களும் ஒருவாறு காரணராவர். இத்தகைய வித்துவான்களின் கூட்டத்தைச் சேர்ந்தவரல்லர் நமது இசைஞானியார்.

அமைதியும் அழகும் அனுபவ ரஸமும் அவர் அளிக்கும் இசை விருந்தின் சிறப்பியல்பு. அவர், இசையால் ஆத்ம தாபத்தையும் தாகத்தையும் போக்குகிறார்; பலவேறு ஆயிரக்கனவுகளைக் காட்டுகிறார்; வாழ்க்கையின் இரகசியங்களை அறிந்துகொள்ளமுயல்கிறார். அவர் கண்களிலே—முகத்திலே—'பிரபுத்துவம்' தாண்டவம்

ஆடுகிறது; அகத்தில் விளங்கும் உண்மையொளி குரலிலே பிரதி பலிக்கிறது.

### இசைஞானி தேவாரம் பாடுவது

தேவாரத்தில் ஏதாவது ஒரு பதிகத்தைப் பாடவேண்டுமென்று நானும் சில நண்பர்களும் ஒரு சமயம் அவரை வேண்டிக்கொண்டோம். சைவ உலகின் தனி நாயகமாகிய திருஞான சம்பந்தர் திருக்குற்றாலத்தைக் குறித்துப் பாடிய பாடல்களை அவர் பாடிக் காட்டினார். உடனே குற்றாலத்தின் பசுமையும் பொலிவும் புலனாயின. சுமார் 1200 ஆண்டுகட்குமுன் சம்பந்தர் நேரில்கண்ட குற்றாலம் அப்படியே எங்கள் கண்முன் வந்து, தென்பாண்டி நாட்டின் திலகம்—சைவ சமயத்தின் பிறப்பகங்களில் ஒன்றாகிய திருப்பதி, எவருக்கும் ஒப்பற்ற இம்மை யின்பம் அளிக்கும் அழகிய நீராடு துறை—கட்புலனாயிற்று. எங்களை அறியாமலே நாங்கள் எப்படியோ பழையகுற்றாலத்தில் அடியெடுத்து வைத்தோம்.

"வம்பார் குன்றம் நீடுயர் சாரல்
வளர் வேங்கைக்
கொம்பார் சோலைக் கோலவண்டு யாழ்செய்
குற்றாலம்"

என்று ஓதுவார் பாடத்தொடங்கினார்.

இயற்கை யழகிலும் இயற்கை வளத்திலும் ஈடில்லாத பெருஞ் சிறப்புவாய்ந்த குற்றாலம், சம்பந்தர் பருகி யனுபவித்த காட்சி யின்பங்களோடு தோன்றுகிறது.

வாடாத இயற்கை மணம் சொரியும் மலைச்சாரல் கட்புலனாகிறது. தெவிட்டாத இயற்கை யின்பம் பொழியும் பசுஞ்சோலை வளர்ந் தோங்குகிறது. நீண்டு உயர்ந்த பெருங்குன்றம் முடிமன்னர் போலச் செருக்கோடு நிமிர்கிறது. நீல வரிவண்டுகள், மதுவுண்ண விரைந்து மலரைச்சூழ்ந்து நீங்காது யாழ் இசைபோல் முரல் கின்றன.

ஓதுவார் மீண்டும் பாடுகிறார்:—

"செல்வம் மல்கு செண்பகம் வேங்கை
சென் றேறிக்
கொல்லை முல்லை மெல் அரும்(பு) ஈனும்
குற்றாலம்"

செண்பகம் முதலிய மரங்களைத் தழுவிப்படர்ந்து மெல்லிய அரும்பு களை ஈனும் முல்லை, பெருமக்களைச் சென்றடைந்து பயன்தரும் பொருள் போல விளங்குகிறது.

"மலையார் சாரல் மகவுடன் வந்த
மட மந்தி
குலையார் வாழைத் தீங்கனி மாந்தும்
குற்றாலம்"

என்று இசைஞானி மனங்கனிந்து பாடுகிறார்.

மலைச்சாரலிலுள்ள வாழைப்பழக் குலைகளுக்கும், அக் குலைகளை ஆசையோடு கவர்ந்து குட்டிக்கு அளித்துத் தாமும் உண்டுமகிழும் தாய்க்குரங்குகளும் கண் எதிரே தோன்றுகின்றன. இம்மலையிலுள்ள தீங்கனிகளைக் கண்டு எங்கள் வாயில் நீர் ஊறுகின்றது.

"நீலம் நெய்தல் தண்சுனை சூழ்ந்த
நீள் சோலைக்
கோல மஞ்ஞை பேடையொ (டு) ஆடும்
குற்றாலம்"

என்றும்,

"மைம்மா நீலக் கண்ணியர் சாரல்
மணி வாரிக்
கொய்ம்மா ஏனல் உண்கிளி ஓப்பும்
குற்றாலம்"

என்றும் பாடுகிறார்.

நீலமலர் முதலியமலர்கள் நிறைந்த சுனைகளும், பெரிய சோலைகளும், அச் சோலைகளில் அழகிய கலாபம் விரித்து ஆடும் மயில்களும், கண்முன் வருகின்றன. இயற்கை நலம் வாய்ந்த மலை மகளிர் தினையை உண்ண வந்த கிளிகளை ஓட்டும் காட்சியையும், அவர்களது சௌந்தரியம் போல மலர்ந்து தோன்றும் இன்ப மலர் வகைகளின் காட்சியையும், கண்டு உள்ளம் மோகம் கொள்ளுகிறது.

"போதும் பொன்னும் உந்தி அருவி
புடை சூழக்
கூதல் மாரி நுண்துளி தூங்கும்
குற்றாலம்"

என்று ஓதுவார் உற்சாகமாகப் பாடுகிறார்.

குற்றாலம், இணையிலா அழகுவாய்ந்த நீர்வீழ்ச்சிகளோடும் பளிங்கு மழைபோல் விழும் நுண் துளிகளோடும் கட்புலனாகிறது. மலையருவிகள் பழந் தமிழரசர்களின் வீரமுரசுபோல் அதிர்ந்து, அவர்களது வண்மைபோல் பொழிகின்றன. அவை சித்திராநதி என்ற சித்திரகங்கையாகப் பெருகுகின்றன. இக் காட்சியின்பங்களைப் பருகி நோக்கிய நாங்கள் குற்றாலத்து மலைவழியே

தவழ்ந்துவரும் மெல்லிய பூங்காற்றையும் பருகி ஆனந்த வெறி கொள்ளுகிறோம்.

இசை ஞானியார் பாடிய திருக்குற்றாலத் திருப்பதிகம், குற்றாலத்து அருவியைப்போல் மெலிந்த உள்ளத்திற்கு அமுதமாகிறது. அருவிநீர் போலப் பதிகமும் தடைபடாமல் குதித்துக் களித்துச் செருக்கி ஓடுகிறது. பல நீர்வீழ்ச்சிகளாக விழுந்தபின் பெருகி யோடும் சித்திரகங்கை போல இப் பாடல்களும் பாய்ந்து சுழித்து அலைகொழித்துச் செல்லுகின்றன. இப் பாடல்களின் இசை யின்பம், அருவியில் மொத்துண்டுவரும் மலைக்காற்றைப் போலவந்து உள்ளத்தையும் உணர்வையும் கட்டித் தழுவிக் குளிர்விக்கின்றது. இப் பாடல்களில் இயற்கைப் பொருள் அழகோடு அன்புருவாகிய இறையழகையும் தரிசிக்கிறோம். இயற்கை மணத்தோடு சிவமணமும் தமிழ்மணமும் அபேதமாகக் கலந்து வீசுகின்றன. சித்திர கங்கை தாமிரவருணியில் சங்கமமாவதுபோல், இயற்கை யின்பத்தோடு பக்தியின்பமும் சங்கமமாகிப் பெருக்கெடுத் தோடுகிறது.

காதலாகிக் கசிந்து கசிந்து இசைஞானி பாடும்போதுதான், பண்சுமந்த இப் பைந்தமிழ்ப் பாடல்களின் பெருமையை நாங்கள் உள்ள வாறு உணர்ந்துகொள்ளுகிறோம். சைவர்க்கும், சைவர் அல்லாதார்க்கும், கற்றார்க்கும் கல்லார்க்கும், வலிமை வாய்ந்தவர்களுக்கும் நோய்வாய்ப்பட்டு வலிமையிழந்தவர்களுக்கும், பொழுது போக்கச் செல்வோர்க்கும், தமிழ் ஆராயும் அறிஞர்களுக்கும் ஒருங்கே இன்பசுகம் அருளும் இயற்கைத்தெய்வமே, சம்பந்தருக்குக் குற்றாலத்தில் சிவமென்னும் செம்பொருளாகக் காட்சி அளித்தது. அத் தெய்வம் எங்களுக்கும் இப்பொழுது கருணை கூர்ந்து காட்சி வழங்குகிறது.

சம்பந்தர் காலத்தில், குற்றாலம் ஆரோக்கிய லட்சுமியும் அழகு லட்சுமியும் கைகோத்துக் குதிகொள்ளும் நடனசாலையாக இருந்தது. நவநாகரிகத்தின் படையெடுப்பினால் இப்பொழுது குற்றாலமலையின் அழகு ஒருவாறு குன்றிவருகிறது. எனினும், பன்னிரண்டு நூற்றாண்டுகளுக்கு முன் திருஞான சம்பந்தருக்குக் கண்விருந்தாக இருந்த அழகு-நிலையம், இசைஞானியாரின் சங்கீத சரஸ்வதி வாயிலாக இப்பொழுதும் எங்கள் கண்முன் விரிகின்றது.




## சுத்த ஜலம்

சுசி

(138-ம் பக்கத்தொடர்ச்சி)

### 6. ஜலத்தைச் சுத்திசெய்யும் முறைகள்

இயற்கையில் சுத்த ஜலம் கிடைப்பது அருமையிலும் அருமை என்பதையும் அது செயற்கையால் கணக்கற்ற அசுத்திகளைப் பெற்றுக்கொண்டேயிருக்கிறது என்பதையும் இதற்குமுன் எடுத்துக் காட்டியிருக்கிறோம். இனி இயற்கையில் கிடைக்கும் அசுத்த ஜலத்தை எவ் விதம் சுத்திசெய்து உட்கொள்ளத் தகுந்ததாக மாற்றலாம் என்பதைச்சற்று ஆராய்வோம்.

#### படியவைத்தல் (Sedimentation)

மண்சம்பந்தத்தால் கலங்கலும் நிறமும் மிகுதியுள்ள அசுத்த ஜலத்தைப் படியவைத்துத் தெளியச் செய்தல் சுத்திமுறைகளில் முதன்மையானது. இது எங்கும் வெகு சாதாரணமாய் கையாளப் பட்டுவருவது. ஏரிகளில் குடிக்கத் தண்ணீரைத் தேக்குவதனாலேயே அசுத்திகள் படிகின்றன; அவற்றுடன் நுண்ணுயிர்களும் மடிகின்றன. நீர் தெளிவடைகிறது. இவ்விதம் பலநாட்களாகத் தெளிய வைக்கப் போதுமான பெரிய ஏரிகளில்லாத போது சிறு தடாகங்கள் கட்டி அதில் கலங்கலான நீரை நிச்சலனமாக நிறுத்துவார்கள். அல்லது மெதுவாக ஊர்ந்தூர்ந்து போகும்படி செய்வார்கள். நீரின் வேகம் நிமிஷத்துக்கு $2\frac{1}{2}$ அங்குலத்துக்கு மேல் 8 அடி வரையிலிருக்கும். வேகம் குறையக்குறையத் தெளிவதிகமாகும். இவ்விதம் 6 மணி நேரம் நிச்சலனமாய் நின்றாலும் மெதுவாய் ஊர்ந்தாலும், ஜலத்திலுள்ள கல், மண், வண்டல் முதலிய கனமான கரையாப் பொருள்கள் படிந்துவிடும். தடாகத்தின் அடித்தளம் சரிவாயிருந்தால் படிந்த பொருள்களைக்கூட்டி ஒருபுறமாய் ஒதுக்கித் தடாகத்தைச் சுத்தம் செய்யச் சௌகரியமாயிருக்கும். 6 மணி நேரத்தில் $\frac{1}{60}$ மில்லி மீட்டர் கனமுள்ள பொருள்கள்கூடப் படிந்துவிடும்.

24 மணி நேரத்தில் $\frac{1}{160}$ மில்லி மீட்டர் கனமும் ஒருவாரத்தில் $\frac{1}{333}$ மில்லி மீட்டர் கனமும்உள்ள நுண்ணிய பொருள்களும் படிந்து விடும். தடாகத்தில் சலனத்தைக் குறைப்பதற்காகப் பலதடைச் சுவர்கள் (Baffles) கட்டி ஜலத்தை நெடுந்தூரம் வளைந்து வளைந்தும் மேலும் கீழுமாகவும் போகும்படி செய்வார்கள்.

ஒருவித ஜலம் களிமண் மிதப்பதால் கலங்கியிருக்கும். அப்படிபட்ட கலங்கல் எவ்வளவு நேரம் தெளியவைத்தாலும் தெளியாது. கனத்த களிமண் துணுக்கு ஒரு மில்லி மீட்டரில் நூற்றில் ஒரு பங்கு கனம்கூட இராது. "செழுஞ்சேற்றுத்" துளிகள் ஒரு மில்லி மீட்டரில் ஆயிரத்தில் ஒரு பங்கைவிட மெல்லியவை. அவற்றைவிட நுண்ணியவையும் "அந்தர்யாம கதி"யை அடைந்தவையுமான களிமண் துளிகள் (Clay in Colloidal state) ஒரு மில்லி மீட்டரில் பத்தாயிரத்தில் ஒரு பகுதியிலும் மெல்லியவை. அந்தர்யாமிகள் (Colloids) மிகமிகச்சிறியவை, ஆனல் அணுக்களை விட (Molecules)ப் பெரியவை. அவை பரவிநிற்கும் ஜலத்தில் அணுக்களைப்போலவே எப்போதும் சலித்துக்கொண்டிருக்கும். அந்தர்யாமியான களிமண் தனது கனத்தினுல் மட்டும் ஜலத்தில் ஓரங்குல ஆழம் படிவதற்கு 20 நாட்களுக்குக் குறையாது. சில மாதங்களாகலாம்.

## உறையவைத்தல் (Coagulation)

மேற் கூறிய களிமண் போன்ற அந்தர்யாமிகளைப் படியவைத்தாலும் பிரித்தெடுக்க முடியாது; வடிக்கட்டினுலும் பிரித்தெடுக்க முடியாது. அவை மிகுந்த ஜலத்தில் சில மருந்துகளை அணுப்பிரமாணம் சேர்த்தால், தோயவைத்த பால் போல ஜலம் உறையும். இம் முறையை "உறையவைத்தல்" (Coagulation) என்பார்கள். நமது மூதாதையர் சால்களில் கலங்கலான நீரைத் தேத்தாங்கொட்டை சேர்த்துத் தெளிய வைத்துக் கொண்டிருந்தது அநேகருக்கு ஞாபகமிருக்கலாம். அவ் வகையும் "உறையவைத்தல்" தான். உறையவைத்த ஜலத்தை நிச்சலனமான தடாகங்களில் நிறுத்தினுல் அசுத்திகளின் பெரும்பாகம் திரண்டு அடியிற் படிந்து விடும். மிஞ்சியதை வடிக்கட்டி எடுத்து விடலாம்.

கலங்கிய ஜலத்தையும், பச்சை, மஞ்சள் அல்லது சிவப்பு நிறமுள்ள ஜலத்தையும் உறையவைத்து வடிகட்டுவதே சிறந்த முறை. பத்துலக்ஷத்துக்கு 30 பாகத்தைவிட அதிகக் கலங்கலாவது (Turbidity over 30) 20 பாகத்துக்கு மேற்பட்ட நிறமாவது (Color over 20) உள்ள நீரை வடிக்கட்டுமுன் அவசியம் உறைய வைக்க வேண்டும்.

உறையவைக்க உபயோகிக்கப்படும் மருந்துகள் தேக ஆரோக்கியத்துக்கு விரோத மில்லாதவை. அவற்றை மிகச்சிறிய அளவில் ஜலத்தில் சேர்ப்பார்கள். அவற்ருல் ஜலத்துக்கு ருசி மாருது. அவற்றைச் சேர்த்த கொஞ்ச நேரத்துக் கெல்லாம் மருந்துகளிலிருந்தும் ஜலத்திலிருந்தும் பஸ்மங்கள் அந்தர்யாமிகளாய்ப் பிரியும். அவற்றிற்கு, அணுக்களுக்கு (Molecules) இருப்பது போலவே இயற்கையாகச் சலிக்கும் தன்மையுண்டு என்று முன்னே சொல்லியிருக்கிறேம். இதை "பிரௌனன்சலனம்" (Brownian movement) என்பார்கள். அவற்றில் ஒவ்வொரு துணுக்குக்கும் மின்சார சக்தியும் உண்டு. ஜலத்திலுள்ள அந்தர்யாமிகளின் மின்சார சக்திக்கு எதிரிடையான சக்தியுள்ள அந்தர்யாமிகள் அம் மருந்துகளைச் சேர்ப்பதால் உண்டாகும். எதிரிடையான மின்சார சக்தியுள்ள துணுக்குக்கள் ஆகர்ஷிக்கப்பட்டு ஒன்று சேர்ந்து ஒட்டிக்கொள்ளும். ஜலத்தையும் மெதுவாய்க் கலக்கினல் அந்தர்யாமிகள் ஒன்றேடொன்று சேர்ந்து ஒட்டிக் கொள்ள அனுகூலமாயிருக்கும். ஜலத்தின் பரமாணுத்துவ வீரியம் (Hydrogen-ion Concentration) ஏற்றதாயிருந்தால் இவ்வாறு சேர்ந்து ஒட்டிக் கொள்வது இலகு. அது சரியாயிராவிட்டால் ஜலத்திலுள்ள அந்தர்யாமிகள் ஒன்று சேருவதைப் பரமாணுக்கள் கலைக்கும். அந்தர்யாமிகள் ஒன்று சேர்ந்து ஒட்டிக்கொண்டு மெல்லமெல்லப் பெரிது பெரிதாய்ப் பஞ்சு போல் திரளும். பெரிதாக ஆக, கன மிகுதியால் திரள்கள் (floc) கீழே படியும். படியும்போது திரளாத துணுக்குக்கள், சாகாதிகள், நிறத்துக்குரிய வஸ்துக்கள், நுண்ணுயிர்கள் எல்லாவற்றையும் துடைப்பம்போல் துடைத்தெடுத்துக் கொண்டு போகும்.

ஜலத்தின் பாமாணுத்துவ வீரியம் எவ்விதமிருந்தால் அசுத்திகள் நன்ருகத்திரளும் என்பதை அந்த அந்த விடங்களில் பரிசோதித்துத் தெரிந்து கொள்ளலாம். அஃது அங்கங்கேயுள்ள அசுத்திகளின் தன்மையைப் பொறுத்தது. பரமாணுத்துவ வீரியம் சரியாயிராத ஜலத்தை மருந்துகள், அமிலங்கள் அல்லது காரங்கள் சேர்த்துத் தகுந்தபடி மாற்றிக்கொள்ளலாம். உறையவைப்பதற்குத் தகுந்த பரமாணுத்துவ வீரியம் 5-க்கு மேல் 7-க்குள்ளாக விருக்கும் (PH between 5 and 7.)

ஜலத்தின் உஷ்ணம் அதிகரிப்பதால் அதில் சலனம் அதிகரிக்குமாகையால், அசுத்தித்திரள்கள் எளிதில் சேரும். ஆனல் உஷ்ணமாவது சலனமாவது மட்டுக்கு மிஞ்சினல் திரள்கள் சிதறி உடைந்து போகும்.

உறையவைப்பதற்குச் சாதாரணமாய் உபயோகிப்பது சீனக்காரம் (Sulphate of Alumina), அன்னவேரி (Ferrous Sulphate), சுண்ணும்பு (Lime), சலவைக்குப்போடும் ஸோடா உப்பு (Soda ash), அலுமினோபெரிக் (Alumino ferric), சில சந்தர்ப்பங்களில்மட்டும் பேரியம் கார்பனேட் (Barium Carbonate), ஸோடியம் ஸிலிகேட் (Sodium Silicate), குளோரின் (Chlorin) என்ற மருந்துகளில் எதையாவது உபயோகிப்பார்கள். சிலசமயங்களில் இரண்டு மருந்துகளைச் சேர்த்தும் உபயோகிப்பார்கள். சீனக்காரம், சுண்ணும்பு, ஸோடா, அலுமினோபெரிக் இவற்றை லக்ஷம் ராத்தலில் ¾ ராத்தலுக்கு மேல் 5 ராத்தல் வரை உபயோகிப்பது வழக்கம். எதை எவ்வளவு உபயோகிக்க வேண்டு மென்பது அவ் வப்போது பரீக்ஷித்துத்தான் தீர்மானிக்க வேண்டும். சீனக்காரம் நிறத்தைப் போக்குவதிற் சிறந்தது.

ஜலம் நன்றாய் உறைவதற்கு மருந்து எல்லாப்பாகங்களிலும் சமமாய்க் கலந்திருக்கவேண்டும். அப்போது பிரியும் அந்தர்யாமிகள் திரண்டு நுண்ணுயிர்களையும் நிறத்தையும் எடுப்பதற்கு வசதிகள் வேண்டும். இதற்காக மருந்தை சிறிது ஜலத்தில் கரைத்தோ அல்லது பொடி பண்ணியோ தொட்டிகளில் வைத்துக் கொண்டு சுத்தி செய்ய வேண்டிய ஜலத்தில் அளவுக்குத் தகுந்தபடி அதில் சொட்ட விடுவார்கள். பொடியானல் தூவுவார்கள். கணக்குப்படி சொட்ட விடவோ தூவவோ சில சூழ்ச்சிகளிருக்கின்றன. மருந்து சேர்ந்த பின் சுத்தி செய்ய வேண்டிய ஜலம் கரடு முரடான கரைகளுள்ள வாய்க்கால் வழியே ஓடும். அப்போது கரைகளில் மோதுவதால் மருந்து ஜலத்தில் எங்கும் சமமாய்க்கலக்கும். சில சுத்தித்தலங்களில் ஜலத்தில் மருந்து சேர்த்தபின் அதில் ஒரு சக்கரத்தை மெதுவாய்ச் சுழற்றுகிறார்கள். சக்கரத்தின் ஓரத்தில் துடுப்புக்கள் போன்ற பல அலகுக ளிருப்பதால் அவை ஜலத்தைக் கலக்குகின்றன. இது தவிர வேறு சில கலக்கும் சூழ்ச்சிகளும் சில விடங்களில் உபயோகிக்கப்படுகின்றன.

மருந்துகலந்த ஜலத்தில் அசுத்தித்திரள்கள் உதிப்பதற்குக் கால் மணி நேரத்துக்கு மேல் 12-மணி நேரம் வரை பிடிக்கலாம். இவ்வளவு நேரம் ஜலம் ஆழ்ந்த தொட்டிகளில் மிகவும் மந்தமாய் சஞ்சரிக்கும். அதன் வேகம் மணிக்கு 2 கஜத்துக்குமேல் 14 கஜத்துக் குட்பட்டிருக்கும். தொட்டிகளில் தடைச்சுவர்களும் (Baffles) இருக்கும். தளமெல்லாம் அசுத்தித்திரள்களின் சேறு நிறைந்திருக்கும். அச்சேறு தானகவே வழிந்து மடையோரம் போகும்படி தளம் சரிவாகக் கட்டப்பட்டிருக்கும். சேற்றை வெளி

யேற்றுவதற்குத் தொட்டியினடியிலுள்ள சேற்று மடைகளை (Sludge valves)த் திறந்து விட்டால் போதும். ஜலத்தை இறைக்க வேண்டாம். ஜலத்தின் பளுவாலேயே சேறு வெளியே தள்ளப்படும். ஜலம் உறைந்து தெளிந்தபின் மேலுள்ள தெளிவான ஜலத்தைமட்டும் உபயோகத்திற்கு எடுத்துக் கொள்வார்கள். இல்லாவிடில் வடிகட்டிக்கொண்டு போவார்கள்.

### காற்றூடல் (Aeration)

வாயுக்கள் மிகுதியாகக்கரைந்த ஜலமும் துர்க் கந்தமுள்ள ஜலமும் இரும்பு பஸ்மங்கள் கரைந்த ஜலமும் காற்றூடல் என்ற முறையால் சுத்தி செய்யப் படுகின்றன. இதில் சுத்தி செய்ய வேண்டிய ஜலத்தை நன்றாய்க் காற்றுடன் கலக்கச் செய்வார்கள். ஜலத்தை உயரத்திலிருந்து பல நீர் வீழ்ச்சிகளாக விழும்படி செய்யலாம். அல்லது பல துவாரங்களுள்ள குழாய்கள் வழியாய் வேகமாய்ச் சிதறவிடலாம், அன்றிச் சொட்டவிடலாம். அப்போது ஜலத்திலுள்ள கரியமிலவாயு, அம்மோனியா, ஹைட்ரோஜன் ஸல்பைட் என்ற வாயுக்களும் சிலதூர்க் கந்தங்களும் பிரிந்துவிடும். காற்றிலுள்ள பிராணவாயு ஜலத்தில் கரையும். ஜலத்தில் கரைந்திருக்கும் இரும்பு பஸ்மங்கள் பிராணவாயுவுடன் ஐக்கியப்பட்டுக் கரையாப் பஸ்மங்களாக மாறுவதால் ஜலத்திலிருந்து பிரியும்.

சுமார் $\frac{3}{4}$ அங்குலத்துக்கு மேல் $1\frac{1}{2}$ அங்குலம்வரை பருமனுள்ள கல், செங்கல் அல்லது கோக் (Coke) என்ற கரி நிரம்பிய அடுக்குக்களை ஒன்றின்கீழொன்றாய் வைத்து அவற்றின் வழியே ஜலத்தை இறங்கச் செய்வதுண்டு. அப்போதும் ஜலம் நன்றாய்க் காற்றூடும். ஒவ்வோரடி கனமுள்ள 3 அல்லது 4 அடுக்குக்களிருக்கலாம். சிலவிடங்களில் கல் கரி இவற்றிக்குப் பதிலாக மரப்பலகை கூட உபயோகிக்கிறார்கள். இவ்வடுக்குக்களில் காற்றூடும்போது பாசிகள் சாகபதார்த்தங்கள் முதலியவைகளில் அநேகமும், அந்தர் யாமியான இரும்பும் (Colloidal iron) எளிதில் பிரிந்து திரள்கின்றன. அடுக்கு நாளடைவில் பழுப்பு நிறமுள்ள இரும்பு பஸ்மத்தால் மூடப்படும். அப்போது ஜலத்தில் கரைந்த பஸ்பம் முன்னிலும் இலகுவாய்ப் பிரியும்.

பிரிந்த இரும்பு பஸ்மங்களுள்ள ஜலத்தை உறையவைத்து வடிக்கட்டி நன்றாய்ச் சுத்தி செய்யலாம். இரும்பு ஜலத்தில் 10 லக்ஷத்திற்கு $\frac{1}{3}$ பாகத்திற்கு மேற்படலாகாது என்றும், $\frac{1}{2}$ பாகத்திற்கு மேல் (எடைக்கெடை) இருந்தால் ஜலத்தின் ருசி கெட்டுப் போகும் என்றும் அறிவாளர் மதிக்கின்றனர். இரும்பு அதிகம் கரைந்த

நீரில் துணிகளைச் சலவை செய்யவும் முடியாது. பழுப்பு நிறக் குறிகளும் கறைகளும் தோன்றித் துணிகளை நாசம் செய்துவிடும். தேயிலையும் காபியும் இரும்பு மிகுந்த ஜலத்தில் போட்டால் ருசிகரமாயிரா; கன்னங்கரேலென்றிருக்கும். ஆதலின் இரும்பு மிகுதியுள்ள ஜலத்தில் உறையவைக்கும் மருந்துகளைச் சேர்த்துப் பின் காற்றுடவைத்துப் படியவைத்து வடிகட்டினால் ஜலம் சுத்தப்பட்டு நல்ல ருசியுள்ளதாகவும், நிறம் கலங்கலற்றதாகவும், இரும்பினளவு ஆரோக்கியத்தின் வரைக்குட்பட்டதாகவும் ஆகலாம். மாங்கனீஸும் சாகபதார்த்தங்களும், இரும்பு ஜலத்திலிருந்து பிரிவதைத் தடை செய்யும். சீனக்காரம் சேர்ந்தபின் காற்றுடவைத்தால் அசுத்தித்திரள்கள் நன்றாய்ச் சேருகின்றன. இரும்பை எடுப்பதற்கு சுண்ணும்பும் ஸோடா உப்பும் உறை மருந்துகளாக (Coagulants) அநேக விடங்களில் உபயோகிக்கப்படுகின்றன.

# தேனீக்கள்

எம். ஏகாம்பரநாத ஐயர்

(141-ம் பக்கத்தொடர்ச்சி)

புஷ்பங்களிலிருந்து தேனையும், மகரந்தத் தூளையும் சேகரிக்கும் விஷயமாகத் தேனீக்களின் அமைப்புக்கள் எவ்வாறு பொருந்தியிருக்கின்றன வென்று இதுவரையில் கவனித்தோம். இப்போது தேனீக்களின் வீட்டைப்பற்றிச் சற்றுக் கவனிப்போம். தேன்கூண்டுகள் பெரிய பாறைகளிலோ, கட்டடங்களிலோ, மரங்களின் இடுக்குகளிலோ அடைபோல் இருப்பதையும், அவைகளில் தேனீக்கள் மொய்த்துக்கொண் டிருப்பதையும் அநேகர் பார்த்திருக்கலாம். அவற்றைச் சிறிதேனும் தொந்தரவு செய்யாமல் தூரத்திலிருந்து பார்த்துக்கொண் டிருக்கும்வரையில் நாம் சௌகரியமாக வெளியே நிற்கலாம். இப்படிப் பார்த்தால் சில தேனீக்கள் வெளியே போவதையும், மற்றும் சில உள்ளே புகுவதையும் பார்க்கலாம். இவைகளெல்லாம் ஒன்றுகூடித்தான் கூண்டில் ஒரு சமூகமாக வாழ்கின்றன. ஒவ்வொன்றிற்கும் ஓர் அறைஉளது.

தேன்கூடானது ஒருவித மெழுகினால் செய்யப்பட்டுள்ளது. இந்த மெழுகானது தேனீக்களின் அடிவயிற்றில் உண்டாகிறது. உண்டாகுந்தோறும், அதை வாயினுள்ள தாடையினால் (Jaws) எடுத்துத் தன் எச்சிலுடன் சேர்த்துப் பக்குவப்படுத்திக் கூட்டைக் கட்டுகிறது. தேனீக்களின் தேகத்தில் இம் மெழுகு உண்டாவதற்கு மூலபதார்த்தம் அவை பருகும் தேனாகும். ஒரு பவுண்ட் மெழுகுக்கு 15, 16 பவுண்ட் தேன் வேண்டியிருப்பதாகக் கூறுகின்றனர். எவ்வளவோ சிரமப்பட்டுச் சேகரித்த தேனிலிருந் துண்டான மெழுகை வீடுகட்ட உபயோகிக்கும் போது, அதை மிகவும் சிக்கனமாக உபயோகிப்ப தவசியம் என்று சொல்லவேண்டுவதில்லை. இவ் விஷயத்தில் நாம் தேனீக்களிடமிருந்து சிக்கனம் கற்றுக்கொள்ள வேண்டுமேயொழிய, அவை நம்மிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டிய ஸ்திதியில் இல்லை. தேன் கூண்டில் ஏராளமான அறுகோணங்களுள்ள அறைகளைப்பார்க்கலாம். ஒவ்வோர் அறையும் ஒரு தேனீக்கு இருப்பிடமாகும். இவ் வறைகள் அறுகோணமாக விராமல் ஏன் சதுரமாகவோ, வட்டமாகவோ இருக்கக்கூடாது? என்று கேட்கக்கூடும்.

உள்ள இடத்தில் சிறிதளவு ஸ்தலத்தையேனும் வீணாக்காமல் ஏராளமான அறைகள், தேனீக்களுடைய தேகத்திற்குத் தகுந்தபடி மெழுகைச் சிக்கனமாக உபயோகித்துக் கட்டவேண்டுமானால் அறுகோணச் சிற்றறைகளே சரியானவை என்று பெரிய எஞ்சினீர்கள் கூறுகின்றனர். இவ்வறைகளின் பக்கங்களும், சுவர்களின் கோணங்களும் கணிதசாஸ்திரப் பரிசோதனைகளால் மிகச் சரியாக இருப்பதாகத் தெரிகிறது. இவ்வீடுகட்டும் விஷயத்தில் தற்காலத்துப் பெரிய எஞ்சினீர்களைக் காட்டிலும் மேலானவைகளாக இருக்கின்றன இத் தேனீக்கள். இவ்வறிவு இயற்கை யறிவோ அல்லது அனுபவ விவேகமோ கூறமுடியவில்லை!







படம் 3.

மேற்கூறிய அதிசயமான மெழுக்கு மாளிகைகளில் வாழும் தேனீக்களின் வாழ்க்கையைப் பற்றிச் சற்றுக் கவனிப்போம். தேன் கூண்டுகளில், ஆண் (இராஜா), பெண் (இராணி), வேலைக்காரர்கள் என்று மூன்று ஜாதி தேனீக்கள் இருக்கின்றன. தேனைச் சேகரிப்பதும், அறைகள் கட்டுவதும், சிறுதேனீக்களை வளர்ப்பதும், தேன் கூண்டைப் பகைவர்களிடமிருந்து காப்பதும், கூண்டைச் சுத்தமாக வைத்துக்கொள்வதும், இராணியின் சௌகர்யா சௌகர்யத்தைக் கவனிப்பதும், வேலைக்காரர்களுடைய தொழிலாகும். வேலைக்காரத் தேனீக்கள் அலிகளாகும். மேற்கூறிய சீப்புக்கள், மகரந்தக் கூடைகள் முதலானவைகள் இவற்றிற்கு உண்டு. ஆண் தேனீக்கள் அல்லது இராஜாக்கள் சிற்றின்பத்தில் மூழ்கிவாழும் விட புருஷர்கள். இவை உருவத்தில் வேலைக்காரர்களைக் காட்டிலும் பெரியனவாக இருக்கும். இவற்றிற்கு விஷக்கருவிகள் இல்லை. ரோமச்சீப்புக்களும் மகரந்தக்கூடைகளும் இல்லை. தேன் பருகத் தேன் குழலும் தகுந்த நீளமில்லை. ஆகையால் இவைகள் இயற்கையாகவே சோம்பேறி சிருஷ்டிகள் என்று சொல்லவேண்டும். பெண் தேனீயை, இராணி என்றும் சொல்வதுண்டு. இதுதான் தேன் கூட்டிற்குத் தாயார். ஸர்வ கௌரவத்தையும் வகிப்பது இதுதான். இதன் சௌகர்யத்தைத்தான் வேலைக்காரர்கள் கவனிக்கிறார்கள். இதை இராணி என்று கூறினாலும், இது ஏகாதிபத்ய ஸர்வாதிகாரம் செலுத்துவதில்லை. பொதுவாகப் பார்த்தால், தேனீக்களின் நாடு குடியரசு நாடு என்றே சொல்லவேண்டும். நாட்டின் பெரும்பாலான வேலைக்காரத் தேனீக்கள், இராஜ்யத்திற்கு வேண்டிய சௌகர்யங்களைச் சபை கூடி யோசித்துத் தங்களுக்குள் வெவ்வேறு வேலைகளை நியமித்துக்கொண்டு தகுந்தபடி இராஜ்யத்தை நடத்துகின்றன. இராணியின் வேலை சமுதாயவிருத்தியேயாகும். இராணி, உருவத்தில் வேலைக்காரர்களைக் காட்டிலும் பெரிதாக விருக்கும். ஆனால், கொடுக்கு இருக்கும் இடத்தில் நீண்ட அண்டசூகம் (ovipositor) என்று சொல்லும் முள்போன்ற வமைப்பு ரிருக்கும். ஒரு தேனீ இராஜ்யத்தில் ஒரே இராணிதான் இருக்கும். ஓர் இராஜ்யத்தில் இரண்டு அதிகாரிகள் இருக்க முடியுமோ? தேன்கூண்டினுள்ளே இருக்கும் அறைகளில் சில பேதங்கள் உண்டு. ஆண் தேனீக்களுடைய அறைகளும், இராணியினுடைய அறையும் பெரியனவாக இருக்கும். இராணியின் அறை அதன் அந்தஸ்துக்கேற்றபடி இருக்கும். வேலைக்காரத் தேனீக்களின் அமைப்பு மேலே கூறப்பட்டது. இவைகள் வெளியேயிருந்து கொண்டுவரும் மகரந்தத்தூளையும், தேனையும் உள்ளே இருப்பவைகளிடம் கொடுத்துவிட்டு மறுபடியும் வெளியே

போகும். இவைகள் வெளியே அலைவதனால் அலுத்துப்போய்விட்டால், உள்ளிருப்பவைகள் வெளியே செல்லும். பகைவர்கள் கூண்டினுள்ளே செல்லாமலிருக்கச், சில காவலாட்களாக வாயிற்படியைக் காத்துக்கொண் டிருக்கின்றன. இவற்றைத் தப்பித்துக்கொண்டு உட்செல்வது அசாத்யமான காரியம். சில தேனீக்கள், வெளியிலிருந்து கொண்டுவந்த தேனைச் சிற்றறைகளில் கொட்டி அவற்றைச் சிறு மூடிகளால் மூடுகின்றன. சில, வீட்டறைகளைக் கட்டவும், பழுது பார்க்கவும் மெழுகைச் செய்கின்றன. சில, கூண்டு அதிக காங்கை யாகாமலிருக்கத் தங்கள் இரக்கைகளால் விசிறிக்கொண்டேயிருக்கின்றன. இன்னும் சில, வளர்ந்து கொண்டிருக்கும் சிறு குழந்தைகளைப் போஷித்து அவற்றிற்கு வேண்டிய சௌகரியங்களைக் கவனிக்கின்றன; இன்னும் சில இராணியாருக்குச் சேவகம் செய்கின்றன. இம் மாதிரியாக ஒவ்வொரு தேனீக்கு ஒவ்வொரு வேலையுண்டு. அவைகளுக்குள்ள வேலைகளைச் சிறிதேனும் முணுமுணுப்பின்றித் திருப்திகரமாகச் செய்து வருகின்றன.

இப்பொழுது தேனீக்களின் வளர்ச்சியைப் பற்றிச் சற்று கவனிப்போம். தேன்கூண்டின் சிற்றறைகளில் இராணியானது ஒவ்வொரு முட்டையிடும். ஆண்தேனீக்களாகும் முட்டைகளையும், பெண்தேனீக்களாகும் முட்டைகளையும் அவ்வப் பிரத்தியேக வறைகளிலும், வேலைக்காரர்களாகும் முட்டைகளை மற்ற வறைகளிலும் இடும். சதாரணமாக வசந்த காலவாரம்பத்தில் வெளிவருபவை வேலைக்காரர்களே யாகும். இம் முட்டைகளிலிருந்து மூன்று நாட்களில் சிறு தேனீப்புழுக்கள் வெளியே வரும். இவற்றிற்குக் காலில்லை. கம்பளிப்புழுக்கள் செய்வதுபோல் ஆகாரத்தைத் தேடித் தின்னும் நிலைமை யில்லை. ஆகையால் முட்டைகளிலிருந்து வெளியே வருவதைக் கவனித்து அவற்றிற்கு ஆகாரம் கொடுப்பது சில தேனீக்களின் வேலை. முன்னதாகச் சேகரிக்கப்பட்ட தேனையும், மகரந்தத் தூளையும் கலந்து ஒருவிதமான தேன்ரொட்டி என்கிற ஆகாரத்தைச் சில தேனீக்கள் ஒவ்வொரு அறைக்கும் கொண்டுபோய் அங்குள்ள தேனீப்புழுவுக்குக் கொடுக்கின்றன. இப்படி ஐந்தாறு நாள் போஷித்தபிறகு அப்புழுக்கள் பெரிதாகின்றன. இதற்குப்பிறகு, அவைதாமாகவே ஆகாரம் உட்கொள்ளும். அந்த ஸ்திதியில் அவற்றிற்கு வேண்டிய தேனை அறைகளில் போட்டுச் சிறு மூடிகளால் சில வேலைக்கார யீக்கள் மூடுகின்றன; இம் மூடிகளின் வழியாகக் காற்று உட்செல்லக்கூடும். இவ் வறைகளில் தேனீப்புழுக்கள் ஆகாரத்தை உட்கொண்டு வளர்ந்து சிறு பாப்பாக்களாக (Pupas) மாறுகின்றன. இந்நிலையில் இரண்டு வாரங்கள் இருக்கின்றன. இரக்கைகள் முளைத்து

இவைகள் நன்குக வளர்ந்தவுடன், மூடியைத்திறந்துகொண்டு குழந்தைத் தேனீக்களாக வெளியே ஊர்ந்துவருகின்றன. இப்படி வெளிவரும் சிறு வேலைக்கார யீக்கள் நகரத்தைச் சுற்றிலும் மற்ற தேனீக்களால் அழைத்துச் செல்லப்பட்டு, நாலு அல்லது ஐந்து நாட்களில், கால்களுக்கும் இரக்கைகளுக்கும் பலம் ஊறி வேலை செய்ய ஆரம்பிக்கின்றன. ஆனல், ஆரம்பத்தில் மற்ற தேனீக்கள் இச் சிறு குழந்தைகளைத் தனிமையாக வெளியே போக விடுவதில்லை. முதலில் நகரத்தினுள்ளேயே, கூட்டைச் சுத்தம் செய்தல், இராணிக்கு ஊழியம் செய்தல், விசிறுதல் முதலான சில்லரை வேலைகள் செய்கின்றன. சற்று அனுபவம் வந்தவுடன் புஷ்பங்களிலிருந்து தேனையும், மகரந்தத் தூளையும் கொண்டுவர வெளியே செல்லும். இவை குழந்தைகள் அல்லவா ? ஆரம்பத்திலேயே தேனைச் சரியாகச் சேகரித்துவரத் தெரியுமா ? ஆரம்பத்தில் சற்றுக் கஷ்டப்பட்டாலும் நாளாவட்டத்தில் தேர்ந்துவிடுகின்றன. தேனீயானது தனது கூண்டிலிருந்து, வெளியே போய் எங்கெங்கோ அலைந்துதிரிந்து வழிதப்பாமல் திரும்பி வருவது வெகு அதிசயமான விஷயமே. எவ்வளவு தூரம் சென்றாலும் தவருமல் தன் கூண்டிற்கே வந்துவிடும். இவ்விதமாக வேலைக்காரத் தேனீக்கள் சிறிதேனும் ஸ்வயநலம் பாராட்டாமல் தங்கள் வேலைகளை இராஜ்யத்திற்காகச் செய்ய ஆரம்பிக்கின்றன.

இப்போது பெண்முட்டைகளைப்பற்றிச் சற்றுக் கவனிப்போம். கோடைகாலத்தில் தேன் ஏராளமாகச் சேகரிக்கப்பட்டிருக்கும் போது, இராணியானவள், பிரத்யேகமாக அமைக்கப்பட்டுள்ள ராஜரீக அறைகளில் பெண்களாகும் முட்டைகளை யிடும். இவற்றிலிருந்து, மூன்று நாட்களில் சிறு தேனீப்புழுக்கள் வெளிவருகின்றன. இவை வெகு கௌரவமாகப் பாதுகாக்கப்படுகின்றன. அலிப் புழுக்களுக்குப் போலல்லாமல், இவைகளுக்குத் தாராளமாக ஆகாரம் கொடுக்கப்படுகின்றது. இவைகளும் பாப்பாநிலைக்கு மாறிப் பிறகு இரக்கைகள் முளைத்துச் சிறு பெண்தேனீக்களாக மாறுகின்றன. இந்த ஸ்திதியில் ஓர் அதிசயமான ஸம்பவம் நடக்கிறது. இவ் விளவரசிகள் வெளியே வந்துவிட்டால், தமக்கு கௌரவம் குறைந்து விடுமென்று அசூயைகொண்டு தாய்த்தேனீக்கள் அவற்றைக் கொல்ல எத்தனிக்கின்றன. சொந்தத்தாயாராக இருந்தாலும் இளவரசியைக் கொலைசெய்ய விடலாமா ? இதற்குத் தகுந்தபடி இளவரசி வளரும் அறையைச் சுற்றித் தகுந்த பந்தோபஸ்துள்ள ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. என்ன செய்தபோதிலும் தாய்த் தேனீக்குக் கோபம் குறைவதில்லை. இளவரசி வளர்ச்சிபூர்த்தியாகி

வெளியேவரும் சமயம் நெருங்க நெருங்க, இராணிக்கு ஆவேசமும், கலக்கமும் அதிகமாகி, இராஜ்யத்தில் ஒரு கிளர்ச்சி உண்டாகிறது. இக் கிளர்சியில் அநேக அலித்தேனீக்கள் இராணியுடன் வெளியே பறந்து வெகுதூரம் சென்று வேறொரு இராஜ்யத்தை ஏற்பாடு செய்கிறது. பழைய தேன்கூடு அருகில் இருந்தால் அதைப் பழுது பார்த்து அதில் வசிக்கும். இல்லாவிட்டால் புதிதாக ஒரு கூட்டைக் கட்டிவசிக்கும். பிறகு பழைய கூட்டில் பின்தங்கின தேனீக்கள், காவலில் வைக்கப்பட்ட இளவரசியின் அறையில் ஒன்றைத் திறந்து புதிய இராணியை வெளியே விடுகின்றன. அது வெளியே வந்தவுடன் தன் இளவரசு ஸ்தானத்திற்குப் போட்டியாக இருக்கும் மற்ற இளவரசிகள் வளரும் இரண்டு மூன்றறைகளருகிற்போய் அவற்றைக் கொல்ல முயற்சி செய்கிறது. ஆனல் இவ்விதம் கொல்லுவதற்கு மற்றத் தேனீக்கள் இடம் கொடுப்பதில்லை. இச் சந்தர்ப்பத்தில் இவ் விளவரசி, சில தேனீக்களுடன் வெளியே பறந்து சென்று வேறு இராஜ்யத்தை ஏற்பாடு செய்து கொள்ளலாம். இப்படி நேர்ந்தால் இன்னொரு இளவரசியின் அறையைத் திறந்து அதிலுள்ள இளவரசியை வெளிவிடுகின்றன. அதுவும் இம்மாதிரியாகவே முயற்சி செய்தாலும் அது மற்ற தேனீக்களால் அடக்கி வைக்கப்பட்டிருக்கிறது. இவ் விதம் இருக்கையில் அது இளவெயிலுள்ள ஓர் தினம் வெளியே பறந்து செல்லும். மகாபோகத்துடன் வளர்ந்த ஓர் இளஞ்சீமாட்டி தனிமையாக வெளியே புறப்பட்டால், பக்கத்திலுள்ள சிற்றின்பத்தில் மூழ்கிவாழும் காமுகத் தேனீக்கள் அச் சீமாட்டியைப் பின் தொடர்ந்து ஆகாயத்தில் பறந்து செல்கின்றன. ஆனல் இந்த சீமாட்டி முதலில் தான் காணும் ஆணைச் சேராது. எந்த ஆண் அதிக உயரம் பறந்து தன்னுடைய பலத்தைக் காட்டுகிறதோ அதைத் தான் இணையாகச் சேருகிறது. ஆண் தேனீக்கள் வேளியே போன சிரமத்தால் அவ்விடத்திலேயே மடிகின்றன. ஆகாயகமனத்தில் இணைசேர்ந்த பெண்தேனீ தன் கூட்டிற்கே திரும்பிவருகிறது. இப்போது அங்குள்ள தேனீக்கள் அதை வெகு சந்தோஷத்துடனும், கௌரவத்துடனும் வரவேற்று, வெகு ஆதரவுடன் அதற்குக் குற்றேவல் செய்கின்றன. வேறு சில அறைகளில் இளவரசிகள் வெளியே வராமலிருந்தால், அவற்றைக் கொல்லுவதிலேயே நோக்கமாகவுள்ள இச் சீமாட்டியின் முயற்சியை இப்போது அவை தடுப்பதில்லை. அதன் இஷ்டப்படி அவற்றைக் கொன்றுவிட்டுத் தான் அரசை வகிக்கிறது. அன்றுமுதல் இந்த இராணிக்குக் கௌரவம் அதிகமே. காலக்ரமத்தில் அது முட்டைகளிட்டு முட்டைகளிலிருந்து சமூகாபிவிருத்தி நடக்கிறது. எப்பொழுதாவது ஓரே

சமயத்தில் இரண்டு மூன்று இராணிகள் பாப்பாஙிலேயிலிருந்து வெளியே வந்துவிட்டால் அவைகளுக்குள் சண்டையுண்டாகி, ஒவ்வொன்றும் வெளியே பறந்து இராஜ்யங்களை எற்படுத்திக் கொள்ளும்.

ஆண்தேனீக்களைப்பற்றி இரண்டொருவார்த்தைகள் சொல்ல வேண்டுவதவசியம். இவை வேலையொன்றும் செய்யாமல், தேனைப்பருகிச் சிற்றின்பத்தில் மூழ்கி வாழ்கின்றன வென்று மேலே கூறப்பட்டது. இவற்றை மற்றதேனீக்கள் சோம்பேறிகள் என்று வெறுக்கின்றன. கோடைகாலத்திலும், வசந்தகாலத்திலும் ஆகாரம் நிறையக்கிடைக்கும் காரணமாக இச் சோம்பேறிகளுக்கு ஆகாரம் கொடுக்கின்றன. மழைக்காலத்தில் ஆகாரம் சேகரிக்க முடியாதல்லவா? சேகரித்துவைத்துள்ள ஆகாரத்தைக்கொண்டு அந்தக் காலத்தில், இச் சோம்பேறிகளைப் போஷிக்கமுடியுமா? அதுகாரணமாக மழைக்காலம் கிட்டக்கிட்ட ஆண்தேனீக்களையும், அறைகளிலுள்ள ஆண்தேனீப்புழுக்களையும் மற்ற தேனீக்கள் வெளியே துரத்திவிடுகின்றன. மழைக்காலத்தில் இராஜ்யத்திலுள்ள ஆகாரத்தை வெகு ஜாக்ரதையாகச் செலவழித்துப் பிறகு வசந்தகாலத்தில் தங்கள் வேலையை ஆரம்பிக்கின்றன.

# சூரிய வெப்பம்

பி. என். அப்புஸ்வாமி

நமது பூமிக்கும் பிற கிரகங்களுக்கும் நடுவில் நின்று அவை யனைத்தையும் இயக்குகின்றது நமது சூரியன். இதன் பெருமையை யுணர்ந்து முற்காலத்தவர்கள் இதைத் தெய்வம் என்றே கொண்டா டினர்கள். ஆனல், உண்மையில் இது அக்கினிப் பிழம்பே யன்றி வேறல்ல. இது பூமியைக் காட்டிலும் ஒரு மில்லியன் (பத்து லக்ஷம்) மடங்கு பெரியது. பூமியின் குறுக்களவு சுமார் 8,000 மைல். சூரியனது குறுக்களவு 865,000 மைல். இவ்வளவு பெரிதென நமக்குத் தெரிகிற சூரியனும் மிகச் சிறிய நக்ஷத்திரங்க ளுள் ஒன்றே யாகும்.

பீடெல்கியூஸ் என்று சொல்லப்படும் திருவாதிரை நமது சூரியனைப் போல 25 மில்லியன் மடங்கு பெரியது. அதாவது இரண்டரைக்கோடி சூரியன் கொண்டது ஒரு திருவாதிரை. தெற் குத் திக்கிலே டொராடஸ் என்ற நக்ஷத்திர கணம் ஒன்றிருக்கிறது. இதற்குக் கத்திமீன் (*Sword-fish*) கணம் என்றும் ஒரு பெயர் உண்டு. இதற்கு 'சுவர்ணசிரமம்' என்பதும் ஒரு பெயர். இதிலே உள்ள முக்கிய நக்ஷத்திரமானது நமது சூரியனைப் போல மூன்று லக்ஷம் மடங்கு பிரகாசமாயுள்ள ஒளியை வீசிக்கொண்டி ருக்கிறது. பார்வைக்கு எவ்வளவோ சிறிய நக்ஷத்திரமாய்த் தோன்றுகிறது.

நமது சூரியனைச் சுற்றி அதன் கிரகங்கள் எல்லாம் பிரதக்ஷிணம் செய்து கொண்டேயிருக்கின்றன. நமது சூரியன் தன் பரிவாரங் களாகிய பூமியையும் மற்றக் கிரகங்களையும் காகர வென்று இழுத்துக் கொண்டு ஓட்ட ஓட்டமாய் விநாடிக்கு 12 மைல் வீதம் இடை விடாமல் ஓடிக்கொண்டேயிருக்கிறது. ஹெர்குலீஸ் என்று சொல்லப்படும் ஒரு தாராகணத்தை நோக்கித்தான் இவ்வாறு ஓடுகிற தென்று கண்டுபிடித்திருக்கின்றார்கள். ஏன் ஓடுகிறது? யாருக்குத் தெரியும்?

சூரியன் மிகச் சிறிய நக்ஷத்திரமே யாயினும் நமக்குப் பெரி தென்று தோன்றும் பூமியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் அதன் அளவு பிரமாண்டமானது என்று தான் சொல்லவேண்டும். அதன் அளவைக் கூட நமது மனது கிரகிப்பது எளிதான காரிய மல்ல.

இதைக் காட்டிலும் அதிகமாக நம்மைப் பிரமிக்கச் செய்வதும் ஒன்றிருக்கிறது. இது சூரியனுடைய வெப்பம்.

சூரியனுடைய தேஜஸ் மிகவும் உக்கிரமானது. ஒன்பதேகால் கோடி மைலுக்கு அப்பாலுள்ள நாம் கூடச் சிற்சில வேளைகளில் அதன் சூட்டைத் தாங்க முடிவதில்லை. அதனுடைய மேல்பரப்பில் உள்ள சூடானது சுமார் 6,000 டிகிரி இருக்கலாமென்று மதிப்பிட்டிருக்கிறார்கள். ஆகையால் அங்கே உள்ள உலோகங்கள் எல்லாம் உருகி ஆவியாகிக் காற்று ரூபமாகவே தான் இருக்கின்றன. சூரியனது உட்புறத்தில் உள்ள சூடு ஐந்து கோடி டிகிரி யாவது இருக்கும் என்று சொல்லுகிறார்கள். இந்தச் சூட்டின் அளவையும் வெப்பத்தையும் நாம் மனத்தாலும் கிரகிக்க முடியாதென்றே சொல்ல வேண்டும். இந்த வெப்பத்தின் கொடுமையை—தீவிரத்தைச்—சில உதாரணங்களால் விளக்க முயலுகின்றார்கள். சுண்டைக்காய் அளவு பருமையான ஒரு வஸ்துவானது சூரியனைப் போலச் சூடுள்ளதாய் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதிலுள்ள சூடு நாற்புறமும் பரவிக்கொண்டிருக்குமல்லவா ? அப்படியிருக்கும் வஸ்துவிலிருந்து ஆயிரம் மைலுக்குள் ஒரு மனிதனும் கிட்ட நெருங்க முடியாது. 1000 மைல் தூரத்திலுள்ள ஒருவன் கூட அதிலிருந்து பிறக்கும் சூட்டினால் கருகிச் சாம்பராய்ப் போய்விடுவான். அவ்வளவு உக்கிரமானதாயிருக்கும் அந்தச் சூடு.

சூரிய மண்டலத்திலிருந்து பரவும் சூட்டை வேறு விதமாகவும் எடுத்துக் காட்டலாம். சூரிய மண்டலத்தின் மேற்பரப்பிலே ஒவ்வொரு சதுர அங்குலத்தினின்றும் பரவும் சக்தியானது 50 குதிரைப் பவருள்ள எஞ்ஜின் ஒன்றை நிற்காது நிரந்தரமாய் ஓட்டக் கூடிய அளவுள்ளதா யிருக்கிறது.

சூரியனிடமிருந்து ஒரு வருஷத்தில் வெளி வருகின்ற சூடானது 200,000,000,000,000,000,000,000,000 டன்கள் எடையுள்ள நிலக்கரி கொடுக்கக்கூடிய சூட்டுக்கு இணையாக இருக்கிறது. 40,000,000,000,000,000,000,000,000 டன்கள் எடையுள்ள பனிக்கட்டியை உருக்கி ஜலமாக்கப் போதுமானது அச் சூடு என்று நிருணயித்திருக்கிறார்கள். இங்கிலாந்திலே ஒரு வருஷ காலத்தில் தோண்டி யெடுக்கப்படும் நிலக்கரி முழுதையும் எரியவிட்டால் கிடைக்கும் சூடானது சூரிய மண்டலத்திலே 50 கஜநீளமும் 50கஜ அகலமும் உள்ள ஒரு சிறு பரப்பிலிருந்து கிடைக்கும் சூட்டுக்கு ஈடாக ஆகமாட்டாது. இவை யாவற்றையும் நினைத்து நினைத்துப் பார்த்தால் சூரியனது வெப்பத்தின் அளவு ஒருவாறு புலனாகக்கூடும்.

# இந்தியா உண்டானது எப்படி?

டி. என். முத்துஸ்வாமி ஐயர்—பி. என். அப்புஸ்வாமி ஐயர்

(148-ம் பக்கத்தொடர்ச்சி)

இதற்குப் பின் தோன்றிய பெர்ம்மா கார்பனிபெரஸ் யுகம் என்று சொல்லப்படும் ஒரு காலத்திலே இக் கண்டம் முழுவதும் இயங்குகின்ற பனிக்கட்டியால் ஒரே மொத்தமாய் மூடப்பட்டிருந்தது. மிகவும் உன்னதமாயிருந்த அரவல்லி மலைகளின் சிகரங்களை எல்லாம் பனியாறுகள் மூடியிருந்தன. அவற்றுள் சில வடபுறமாய் வழிந்து அங்குள்ள நீரில் விழுந்து பனிக்கட்டி மலைகளாக மிதந்து போயின. சில காஷ்மீரத்தையும், வேறு சில ஹாயாராவையும், இன்னும் சில ஸிம்லாவையும் எட்டின. ஏரிகளை நோக்கியும் சில சென்றன. இவை வண்டல்களையும் பிற சிதைவுப் பொருள்களையும் அந்த ஏரிகளில் கொண்டு கொட்டின.

பனியாறுகள் பின்னிடைந்துபோன காரணத்தால் உப்பு மலைத் தொடர்ப் பிரதேசமும் காஷ்மீரப் பிரதேசமும் மீண்டும் கடலால் கவரப்பட்டுக் கடலாயின. உப்புமலைத் தொடரிலிருந்து தொடங்கி நியூ ஸௌத் வேல்ஸ் எனப்படும் ஆஸ்ட்ரேலிய மாகாணம் வரையில் ஒரு வளைகுடாவானது நீண்டதாக இருந்திருக்க வேண்டும். இது அதிக அகலமின்றிச் சிறுத்துத்தான் இருந்திருக்கும். இத்தகைய தொடர்பு ஒன்று இல்லாவிட்டால், வெகு தூரத்துக் கப்பாலுள்ள இவ்விரண்டு பிரதேசங்களிலும் ஒரே வகையான யூரிடெஸ்மா என்னும் ஒரு ஜந்து (*Eurydesma*) அக் காலத்திலே வாழ்ந்து வந்திருக்க முடியாது.

மத்திய பெர்மியன் யுகத்திலே, இந்தியாவில் சிற்சில பிரதேசங்களின் மேற் பரப்பிலே, ஒன்றுக்கொன்று சமதூரத்திலுள்ள சில வெடிப்புக்கள் உண்டாயின. இவை மிகவும் நீண்டிருந்தன. பூமியின் மேலோட்டின் அடிப்புறமானது அவ்வளவு ஸ்திரமில்லாமல் இருந்ததுதான் இவ் வெடிப்புக்கள் உண்டாவதற்குக் காரணம். காலம் செல்லச் செல்ல இவ் வெடிப்புக்களின் அகலமும் ஆழமும் அதிகரித்துக்கொண்டே வந்தன. கடைசியாக இவ்வெடிப்புக்களுக்கு இடையிலுள்ள பிரதேசங்கள் சரிந்து சரிந்து தாழ்ந்து




ஜுராஸ்ஸிக் காலத்து இந்தியா.

போயின. அதனால் பெரும் அகழ்கள் உண்டாயின. இவ்வாறு அநேக இடங்களில் பூமியின் மேல்மட்டம் தாழ்ந்து போன படியால் நாட்டின் மேற்பரப்பின் அமைப்பானது மிகவும் கரடு முரடாய், மேடு பள்ளங்கள் மிகுந்ததாய்க் காணப்பட்டது. நாம் மேலே கூறிய நான்கு பிரதேசங்களிலும் இவ்வகையான தாழ்ச்சிகள் நன்கு காணக்கிடந்தன. இவ்வாறு பள்ளமாய்த் தாழ்ந்து போன அகழிகளின் தரை மட்டத்திலே மேன்மேலும் வந்து குவிகின்ற வண்டல்கள் சிதை பொருள்கள் இவைகளின் கனம் ஒரு புறமிருந்து அழுத்திற்று. முன்னால் தோன்றிய வெடிப்புக்கள் மேன்மேலும் குழியாய்ப் பிளந்துகொண்டே போயின. இவ்விரு காரணங்களாலும் அகழ்கள் முன்னிலும் ஆழத் தாழ்ந்துகொண்டே வந்தன. பூமி தாழ்வதும் தாழ்ந்த இடங்களின்மீது வண்டல்கள் குவிந்து படிவதுமாக மீண்டும் மீண்டும் நடக்க நடக்க, மேல் பெர்மியன் காலம் முதல் ஜுராஸ்ஸிக் காலம் வரையில் வண்டல்கள்

(*Lower Gondwanna*) படிந்துவந்ததினுல் கீழ்க்கோண்டவன அமைப்புக்கள் அதிகரித்தன. நிலத்தில் வாழும் உயிரினங்களைக் காட்டும் அழகிய படப்புத்தகத்திலே பல பக்கங்கள் இவ்வாறு உண்டாயின.

இந்தியாவை ஒரு புறத்தில் ஆப்ரிக்காவோடும் மற்ருெரு புறத்தில் ஆஸ்ட்ரேலியாவோடும் பிணைத்த பூப் பிரதேசமும் இதேமாதிரியான தாழ்ச்சிகளுக்கு உட்பட்டு வந்திருக்கவேண்டும் என்று ஊகிப்பது தவருகாது. எங்கெங்கெல்லாம் கடலோடு போக்கு வரவுக்கு வழிகள் இருந்தனவோ அங்கங்கெல்லாம் நீர் புகுந்து இவ் அகழிகளை நிரப்பிக்கொண்டு மேன்மேலும் வடபுறமாகக் கடலானது வளர்ந்து வந்திருக்க வேண்டும். இவ்வாறு சிறிது சிறிதாக நிலம் தாழத் தாழக் கடலானது மேன்மேலும் படை யெடுத்து வந்து நிலத்தை ஆக்கிரமித்து வங்காளக்குடாக்கடல் என்பதை உண்டாக்கிற்று. காலக்கிரமத்தில் பூப்பிரதேசத்தின் நடுவிலுள்ள ஏரியின் நன்னீர்களும் கடலோடு ஒன்றுபடுவதற்குரிய வழிகளைக் கண்டு பிடித்து அவற்றின் வழியாய்ப் பாய்ந்தோடித் தம்மை எதிர் கொண்டு வரும் கடலோடு சேர்ந்தன. இவைதாம் நதிகள் எனலாயின. தாவரங்களும் ஜந்துக்களும் இந்தியாவிலிருந்து ஆப்பிரிக்காவுக்கோ, அல்லது ஆஸ்ட்ரேலியாவுக்கோ தம் இஷ்டம்போல் உலவி வருவதற்குச் சாதகமாய்ப் பரந்து விரிந்து கிடந்த கொண்டவனக் கண்டமானது சிறிது சிறிதாய் உடைபட்டுப்போய், ஒரு புறம் வங்காளக் குடாக்கடலுக்கும் மற்ருெரு புறத்தில் அரபிக்கடலுக்கும் இடம் கொடுத்தது. இவ்வாறு நிலப் பகுதிக்குள் கடல் புகுந்தபடியால், நிலப்பரப்பின் நடுவில் உள்ள நன்னீர் ஏரிகள் நாளடைவில் நீண்ட நதிகளாவதற்கு ஓர் ஏது ஏற்பட்டது.

ஏரிகளும் ஏரிகளிலிருந்து தோன்றிய நதிகளும் மலிந்து தோன்றிய அக்காலத்திலே கீழ்த்தரமான தாவர வகைகள் நாட்டிலெங்கும் செழித்துச் செறிந்திருந்தன. இவற்றுள் பெரும் பகுதியானது ஏரிகளுக்கும் நதிகளுக்கும் அடித்துக்கொண்டு போகப்பட்டன. அவை பள்ளப் பிரதேசங்களிலே கொண்டு சேர்க்கப்பட்டு, அப்படி யப்படியே அங்கங்கே தங்கி விட்டன. ஆகையால் இயற்கைத் தொழிலாளிகளால் அவை ஒருமிக்க அடித்துக்கொண்டு போகப்பட்டு முற்றிலும் அழிந்துபோகவில்லை. இதுவுமன்றிக் கற்களையுங்கூட எளிதில் அப்பளம்போல் நொறுக்கிவிடும் வன்மை மிகுந்த பூமியின் குழப்பங்களினின்றும் அவை தப்பிப் பிழைத்து விட்டன. இதெல்லாம் நம்முடைய அதிர்ஷ்ட வசம்தான். ஏனெனில் இப்பள்ளப் பிரதேசங்களில் நிரம்பிய தாவரங்கள் தாம் படிந்து, மில்

லியன் கணக்கான வருஷங்கள் ஆயின பின்பு, நிலக்கரியாக மாற்றப்பட்டுத் தோன்றுகின்றன. சிங்கரேனி, உமேரியா, கிரிதீப்ஜேரியா, ராணிகஞ்ஜ் என்னும் இடங்களில் எல்லாம் தோண்டி யெடுக்கப்படுவது இந்த நிலக்கரிதான்.

ராஜ்மகால் சுரங்கங்களில் காணும் நிலக்கரிக்கும் தாமுதாப் பிரதேசத்தில் காணும் நிலக்கரிக்கும் எவ்வளவோ வித்தியாசம் உண்டு. ராஜ்மகால் பிரதேசத்திலுள்ள நிலக்கரிக்கு அடிப்படையான தாவரங்கள் பரிணும ஏணியில் சற்று உயர்ந்தபடியைச் சார்ந்தவை. அவை மேல்தரமான தாவரங்கள். தாமுதாப் பிரதேசத்திலுள்ள நிலக்கரியோ வெனில் மிகவும் தாழ்ந்த கீழ்த்தரமான பிரதமத் தாவர வகைகளிலிருந்து உண்டானது. இவ்விரண்டு தாவர வகைகளுக்கும் இடையிலுள்ள காலமானது எத்தனையோ மில்லியன் வருஷங்கள் இருக்கலாம். ஆதலால் முன்னவை மேல்கோண்டவன யுகத்தைச் சேர்ந்தவை என்றும், பின்னவை கீழ்க்கோண்டவன யுகத்தைச் சேர்ந்தவை என்றும் சொல்லப்படுகின்றன. இவை முறையே கீழ் ஜுராஸ்ஸிக் யுகத்தையும் பெர்மியன் யுகத்தையும் சேர்ந்தவை என்றும் கூறலாம்.

கீழ்க் கொண்டவன மேல் கொண்டவன யுகங்களுக்கு இடையிலுள்ள ஒரு காலத்திலே, அதாவது மத்திய கொண்டவன என்று சொல்லப்படுகிற ட்ரையாஸ்ஸிக் காலத்திலே, அதற்கும் முற்காலத்திலே உண்டாகிய அகழ்கள் நிரம்பிவந்தன வெனினும் புதிது புதிதான அகழ்களும் உண்டாகிக்கொண்டே வந்தன. ஆனல் அக் காலத்திலே விசித்திரமாக நடந்தது என்ன வென்றால் ஏரிகளாகிய பள்ள பூமிகள் தாவரப் பொருள்களை முன்போல் பெறவில்லை. கீழ்க் கொண்டவனக் காலம் பூராவும் இந்தியாவாகிய நிலப்பரப்பு முழுவதும் மாருத ஒரே சுகமான வேனிற் காலமாகவே இருந்தது. அக்காலத்தின் விசேஷத் தன்மையால் நாட்டில் எங்கும் தாவர வகைகள் செழித்து ஓங்கி வளர்ந்து மகிழ்ந்து பூத்துச் சிரித்தன. வேனிற் காலமானது மத்திய கொண்டவன யுகத்திலே சிறிது சிறிதாகத் தன்மை மாறி மறைந்து, நாட்டிலெங்கும் ஒரே வகையான தீராத பனிக்காலம் வந்து தோன்றிவிட்டது. இப்பனிக் காலத்திலே குளிரின் மிகுதியால் நீர்ப்பெருக்கெடுத்தோடும் ஆறுகள் எல்லாம் இறுகிப் பனியாறுகள் ஆகிவிட்டன. இந்தக் குளிரைத் தாங்கமாட்டாது, பூத்துச் செழித்துப் புன் சிரிப்புக் கொண்ட செடிகள் கொடிகள் யாவும் பட்டுக் கருகி உருவழிந்து போயின. இவ்வாறு தோன்றிய பனிக்காலம் கழிந்ததும் நாட்டின் சீதோஷ்ண நிலையானது நேர் எதிர்முகமாக மாறித் தோன்றியது.

அப்பொழுது வறட்டு வெயில் அடித்தது. எல்லாம் காய்ந்து கருகிச் சருகாகிவிட்டது. நாடானது நெருப்புப் பொசுக்கும் வனாந்தரம்போல் வறண்டு போய்விட்டது. ஆதலால் மத்திய கொண்டவனப் பாறைகளில் தாவர சேஷங்கள் ஒன்றும் காணப் படுவதில்லை. தாவரங்கள் இருந்தாலல்லவோ அவற்றின் சேஷங் களைக் காணலாம்? ஸாத்பூரா மலைத்தொடரிலுள்ள மகாதேவ் மலை களும், வங்காளத்திலும் கோதாவரிப் பள்ளத்தாக்கிலும் தனித்துத் தோன்றும் சிற்சில தனி மலைகளும் இக்காலத்தைச் சேர்ந்தவை. ஆதலால் அந்த மலைகளிலுள்ள பாறைகளில் தாவர அடையாளங்கள் ஒன்றும் பதிந்து காண்பதில்லை. தாவரங்கள் இவ்வாறு தங்கி நிற் காதுபோயினும் பிராணிகள் மட்டிலும் மாறிமாறித் தோன்றும் வெம்மையையும் குளிரையும் எவ்வாறோ தாங்கிக்கொண்டு காலத்துக் கேற்றபடி உயிர் வாழ்ந்து வந்தன. ஆதலால் அக்காலங்களில் உள்ள பிராணி சேஷங்களும் சின்னங்களும் மத்திய கொண்ட வனப் பாறைகளிலே ஏராளமாகப் புதைபட்டுப் பதிந்து கிடப் பதைக் காணலாம்.

வற்றி வறண்டிருந்த இந்த நிலையும் ஒரு காலத்தில் கடைசி யாகத் தொலைந்துபோய்விட்டது. உஷ்ணப் பிரதேசத்துக்குரிய வேனிற்காலம் மீண்டும் வந்து தோன்றிற்று. வேனில் என்றால் செழித்து வளரும் செடி கொடி மரங்களுக்குக் கொண்டாட்ட மல்லவா? நாடெங்கும் செடியும் பூவும் மரமுமாக நிறைந்து தோன்றின. அப்பொழுது புதிதாய் உண்டாய்க் கொண்டிருந்த பள்ள பூமிகளிலும், முன்னமேயே தோன்றியிருந்தபோதிலும் தாவரங்களால் நிறையப்பெறாது அன்றளவும் பள்ளமாகவே இருந்து வந்த பழைய பள்ள பூமிகளிலும், மறுபடியும் புதிய தாவரப் பொருள்கள் ஏராளமாக வந்து குவிந்து அவற்றை நிறைத்தன. இப் படிவந்து விழுந்த தாவரக் குவியல்கள்தாம் மேல் கொண்டவ னக் காலத்து நிலக்கரியாக மாறின.

இந்தியாவின் மத்தியப் பிரதேசங்களிலே மிகவும் விஸ்தாரமான இடங்கள் ஒருமிக்கக் கீழே ஆழ்ந்து விட்டன. ஆதலால் எப்படி ஒரு தராசின் தட்டுக்களில் ஒன்று கீழே போக மற்றதுமேலே கிளம்புகிறதோ அப்படியே மேற்கூறிய மத்தியப் பிரதேசத்தின் அக் கம்பக்கத்திலுள்ள கடலடிப் பிரதேசமானது மேலே கிளம்பியது. அதனால் சமுத்திரத்தின் ஆழமும் அளவும் சற்றுக் குறைந்து போயின. சமுத்திரத்திலுள்ள நீரானது வெளியே வழிந்து அக்கம் பக்கத்திலுள்ள நிலக்கண்டத்தின் மீது வெள்ளமாய்ப் பர விற்று. இவ்வாறு கடலின் அதிக்கிரமிப்புக்கள் உண்டாயின.

கோரோமாண்டல் கோஸ்ட் எனப்படும் நமது நாட்டின் கீழ்க்கரையோரத்திலே விசாகப்பட்டணம் ராஜமகேந்திரம், ஸ்ரீபெரும்புதூர் என்னும் இவ்வூர்கள் இப்பொழுது இருக்கும் இடங்கள் முழுவதும் அந் நாளிலே கடலால் கவரப்பட்டு இருந்தன. இவற்றிற்குத் தெற்கே தஞ்சாவூர் வரையிலுள்ள பிரதேசமும் கூட இவ்வாறு கடலால் ஒரு கால் மூடப்பட்டிருந்தாலும் இருக்கலாம். விசாகப்பட்டணத்துக்கு வடக்கே கட்டாக் வரையில் இவ்வாறு கடல் அதிக்கிரமித்திருந்தது. ஆதலால் ஜுராஸ்ஸிக் காலத்திலே வங்காளக் குடாக்கடல் தோன்றியாய் விட்டது என்பது இதனால் வெளிப்படையாக இருக்கிறது. பிந்திய ஜுராஸ்ஸிக் காலங்களிலே இந்தியாவின் வடமேற்குப் புறத்திலேயும் இத்தகைய கடலின் படையெடுப்புக்கள் நிகழ்ந்தன. டெதிஸ் கடலின் புயம்போன்ற ஒரு கிளையானது ஆழமான வளைகுடாவாக நீண்டு ஸால்ட் மலைத் தொடர், மேற்கு ஸிந்து, பலுச்சிஸ்தானம் என்னும் இப்பிரதேசங்களின் வழியாகப் புகுந்து கட்ச் வரையில் எட்டியிருந்தது.

மேலே சொல்லியபடி இப் பூதத்துவ காலங்கள் முழுவதிலும் டெதிஸ் ஆனது தங்கிநின்றது. அக் காலங்களில் ஏராளமான பாறைப் பொருளைச் சேகரித்துக் கொண்டது. கடலின் அடிப்புறத்தின்மேல் அவை வந்து விழவிழக் கடல் சிறித் சிறிதாக தூர்ந்து போகத் தொடங்கியதால், அதன் ஆழமானது நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வந்தது.

ஜுராஸ்ஸிக் யுகத்தின் இறுதிக் காலத்தில் இந்தியாவின் பூகோள அமைப்பானது சற்றேறக்குறைய அடியில் வருமாறு இருந்தது: இமயமலைப்பிரதேசத்திலே ஸால்ட் மலைத்தொடரைத் தாண்டி கட்ச் வரையில் விரிந்திருந்த ஆழமற்ற கடல் ஒன்று இருந்தது. இப்பொழுது இந்தியாவிலுள்ள நதிகள் ஓடுவது போலவே அவற்றுக்குச் சமதூரமாக உள்ள இடங்களில் சிற்சில நதிகள் ஓடிக் கொண்டிருந்தன. இவற்றுள் சில வங்காளக்குடாக் கடலிற் போய் விழுந்தன. நாட்டின் கீழ்க்கரை இப்பொழுது இருக்கும் இடத்துக்குச் சற்று மேற்காகவே இருந்தது. மேல் புறத்திலே இந்தியாவையும் ஆப்பிரிக்காவையும் பிணைத்துக் கிடந்த நிலப்பிரதேசமானது முன்னிருந்ததைக் காட்டிலும் அகலத்தில் மிகவும் குறைந்ததாகக் காணப்பட்டது.

(தொடரும்)

## சாஸ்திர சம்பந்தமான தமிழ்ச் சொற்கள்.

---

*Abstract*—கேவலம்.
*Abstract sciences*—கேவல சாஸ்திரங்கள்.
*Ammonia*—நவச்சார ஆவி.
*Anatomy*—அங்காதிபாத சாஸ்திரம்.
*Animal organism*—சர ஜீவி.
*Animal*—சரம்.
*Antiquary*—பழம்பொருட் சோதகன்.
*Architet*—சிற்பி.
*Arts*—கலை.
*Axle*—அச்சு.
*A priori*—காரணானுமானம்.
*Aquarium*—நீர்நிலைக்கண்ணாடிக்கூடு.
*Articulate (Sound)*—எழுத்துள்ள (ஓசை).
*Bank*—திரவிய பரிவர்த்தனை சாலை.
*Biology*—ஜீவ சாஸ்திரம்.
*Black Lead Pencil*—ஈய எழுதுகோல்.
*Botanist*—தாவர சாஸ்திரி.
*Calculating machines*—கணிக்கும் இயந்திரங்கள்.
*Comparative*—தாரதம்மிய.
*Complex*—சங்கர, கலப்பான.
*Compound*—கலப்புப் பொருள்.
*Concrete sciences*—அகேவல சாஸ்திரங்கள்.
*Copy Book*—சட்டம்.
*Cross-examination*—குறுக்கு விசாரணை.
*Curriculum*—பாடபத்ததி.
*Delicacy of feeling*—இந்திரிய சாதுரியம்.
*Demand*—குன்றபொருள்.
*Descriptive*—விவரண.
*Division of Labour*—வேலைப் பிரிவினை.
*Drawing Room*—சித்திர விலாசம்.

---

# பெரிபுளூஸ்

ச. சோமசுந்தர தேசிகர்

(158-ம் பக்கத்தொடர்ச்சி)

24. மியூசா அங்காடிப் பட்டணத்தில் நல்ல கப்பற்சாலை யிராவிடினும் கடல் மணற்பாங்காக விருப்பதால் நங்கூரம் பாய்ச்ச இடமுண்டு. இங்கே பலவிதப் பண்டங்கள் இறக்குமதியாகின்றன. உயர்ந்ததும் மட்டமுமான தோம்பு, கைவைத்துத் தைத்த சாதாரணமானதும், பூவேலைசெய்ததும் சரிகை கலந்ததுமான அரேபியதர உடுப்புக்கள், குங்குமப்பூ, ஒருவகை வசம்பு[1], மஸ்லீன், உடுப்பு, சாதாவும் நாட்டுமோதிரியுமான துப்பட்டி, பலவித நிறமுள்ள இடுப்புக் கச்சை, போதிய அளவு பலவகைச் சாந்துக்கலவை[2], சிறிது சாராயமும் கோதுமையுமாம். அங்கேயே காட்டில் போதிய அளவு தானியமும் ஏராளமாகச் சாராயமும் கிடைக்கின்றன. அரசனுக்கும் நாட்டுத் தலைவனுக்கும் சவாரிக் குதிரைகளும், பொதி குதிரைகளும், பொற்கலங்களும், மெருகிட்ட வெள்ளிப் பாத்திரங்களும் நாணயமாக நெய்த ஆடைகளும், செப்புப் பாத்திரங்களும் கொடுக்கப்படுகின்றன. இந்த நாட்டிலிருந்து முதற்றர

---

24. (1) வசம்பு. மூல எட்டில் Kyperos என்றிருக்கிறது. இதனை Sweet rush என்று மொழிபெயர்த்திருக்கின்றனர். சிரியநாட்டுக் கலமஸ் என்றும் சிரிய நாட்டு சுவீட்ரஷ் என்றும் இருவகையுண்டு என்று பிளினி கூறுவர். இவை பார்த்திய அரசர் முடிசூட்டு மங்கல நீரில் உபயோகப் படுவன. சுவீட்ரஷ் என்ற பண்டம் எகிப்திலிருந்து வருவது. ரோட்ஸ் நாட்டிலிருந்து வருவது இரண்டாந்தரத்தது. இது சடாமாஞ்சியைப்போன்ற மணமுடையது. சாந்திற் சேர்க்கப்படுவதன்றி மூத்திரகாரி மருந்தாகவும், தொண்டைப் புண்ணை யாற்ற திராட்சைச் சாறு, காடியோடு கலந்துண்ணும் மருந்தாகவும், புண்களையாற்ற பூச்சு மருந்தாகவும் உபயோகப்படும். மக்கிரிண்டில் மஞ்சள் அல்லது சித்தரத்தை யென்பர். இவை யிரண்டு மல்ல.

(2) கலவைச்சாந்து வாசனைப் பண்டங்கள் என்னென்னவகை உண்டோ அவ்வளவையும் சேர்த்துக் குழம்பாகச் செய்து உடலில் அணிவதுண்டு.

மான பரங்கிச் சாம்பிராணி[3], மட்டிப்பால்[4], அலாபாஸ்டர்[5], அவலிடஸ் முதலான இடங்களிலிருந்து ஏற்றுமதியாவதைப் போன்ற பண்டங்கள் முதலாயின ஏற்றுமதியாகின்றன. இந்த இடத்திற்குச் செப்டம்பர் மாதத்தில் பிரயாணம் போகின்றனராயினும் சிறிது முன்னரே போவதிலும் கெடுதியில்லை.

25. இதற்குக் கீழ் 300 ஸ்டேடியா சென்றால் அரபியாவும் பெர்பர் நாடும் நெருங்குகின்றன; இந்தப் பாகத்திலொரு குறுகிய ஜலசந்தி ஓடுகிறது[1]; இதன் நீளம் 60 ஸ்டேடியா. இந்த இரண்டு நாட்டையும் டியோடோரஸ்[2] (*Diodorus*) என்ற தீவு பிரிக்கிறது. இந்தச் சலசந்திவழியாகச் செல்லும்போது வேகமான நீரோட்டமும் பக்கத்து மலைகளிலிருந்து அடிக்கும் காற்றும் துன்பம் செய்யும். இந்தச் சலசந்தி முடியுமிடத்திலே கரையோரமாக ஓஸிலிஸ்[3] என்ற பட்டினமிருக்கிறது; இது ஒரு பெரிய அங்காடிப் பட்டினமல்லவாயினும் ஜலசந்தியில் வருபவர்கள் தங்கும் முதல் துறையாகும்.

26. ஓஸிலிஸுக்குக் கப்பால் கடல் கிழக்குப் பக்கமாக விரிந்து சமுத்திரம் போலாகிறது; 1200 ஸ்டேடியாவுக் கப்பால் யூதமன் அரபியா[1] என்ற கிராமம் இருக்கிறது; இதுவும் கரிபெல் அரசனுக்குச்சொந்தம். இங்கே ஓஸிலிஸைவிடக் கப்பல் தங்க நல்ல சாலை

---

(3) பரங்கிச் சாம்பிராணி. Myrrh. இது ஒருமரத்தின் பால். தெற்கு அரேபியா, ஓமான், சோமாலி கடற்கரைகளிலுண்டாவது. மரத்தின் பட்டைக்குமேல் பால் வடிவது. சாம்பிராணியோடு சேர்த்துப் புகைக்கப் படுவது.

(4) மட்டிப்பால். Gebanite-Minaean Stacte. மினிய நாட்டில் வாசனை தரும் மரங்களிலிருந்து வடியும் பால் என்பது பொருள். இது முற்காலத்தில் யூதர்களால் தூபப் பண்டங்களிலொன்றாக உபயோகப்பட்டு வந்தது.

(5) அலாபாஸ்டர். Alabaster. இது ஒருவகை வெள்ளைக்கல். பளிங்கையொத்தது. இதனால் பெட்டி முதலியன செய்யப்படுகின்றன; தைலம், வாசனைப் பண்டம் வைக்கத் தகுதியானது.

25. (1) ஜலசந்தி. இந்த நீரோட்டத்திற்கு Strait of Bab-el-mandeb என்று பெயர்

(2) டியோடோரஸ். பெரிம் (Perim) என்ற தீவு.

(3) ஓஸிலிஸ். செல்லா (cella) என்ற ஊர்.

26. (1) யூதமன் அரபியா. ஏடன் பட்டினத்தின் பழைய பெயர். இது ஒரு புராதனமான பட்டினம். மத்திய தரைக் கடலிலுள்ள நாடுகளுக்கு இந்தியாவிலிருந்து செல்லும் பண்டங்கள் இங்கேதான் மாற்றப்படுவது வழக்கம்.

யும் நல்ல தண்ணீருமுண்டு; இந்தக் கிராமம் குடாவுக்குள் நுழையும் வாயிலிலிருக்கிறது. இந்தியாவிலிருந்து எகிப்துக்கு நேரே பிரயாணம் செய்யாதபோதும், அந்நாட்டுப் பண்டங்கள் எகிப்துக்கு நேரே செல்லாது இந்தத் துறைமுகத்துக்கு வந்து போனபோதும், இப்போது அந்த வியாபாரம் அலெக்ஸான்டிரியா மூலம் நடப்பது போலும் நடந்தகாலத்தில் இந்த ஊருக்கு யூதமன் என்று பெயரிடப்பட்டது. கரிபெல் அரசன் நமது காலத்துக்குச் சிறிது முன்னர் அந்தப் பட்டினத்தை யழித்துவிட்டான்.

27. யூதமன் அரேபியாவுக்கு அப்பால் இடைவிடாது செல்லும் கரையும் இரண்டாயிரம் ஸ்டேடியாவுக்குமேல் நீளமுள்ள ஒரு வளைகுடாவுமிருக்கிறது. இந்தக் கரையோரமாக நாடோடிகளும் (*Nomads*) புலாலுண்பார்களும் வாழ்கின்றனர்; இந்த வளைகுடா திரும்பும் முனையில் முன்வந்துள்ள கானு[1] (*Cana*) வென்ற அங்காடிப் பட்டினம் இருக்கிறது. சாம்பிராணி விளையும் நாடான இலியாசஸ் (*Eleazus*) இராச்சியத்தில் இந்த ஊர் இருக்கின்றது. கானுவிலிருந்து இருநூறு ஸ்டேடியா அளவில் அதற்கெதிரில் வெட்ட வெளியான பறவைத் தீவும், டோம் தீவும் (*Dome Islands*) இருக்கின்றன. இந்தக் கானுவிலிருந்து உள்நாட்டுப் புறமாக ஸபதா[2] (*Sabbatha*) என்ற தலைமைப்பட்டண மிருக்கிறது. அங்கே அரசன் வசிக்கிறான். இந்நாட்டிலுண்டாகும் சாம்பிராணி முழுவதும் ஒட்டக முலமாக இங்கே கொண்டுவரப்படுகிறது. அது இங்கிருந்து தோலாலான குடத்தெப்பங்களிலும்[3] படகுகளிலும் கானுவுக்குக் கொண்டுபோகப்படுகின்றது. இங்கிருந்து தொலைவுத் துறைமுகங்களுக்கும் பாரிகஸா, ஸித்தியா, ஓமானு, பாரசீகம் முதலான விடங்களுக்கும் வியாபாரம் நடக்கிறது.

28. மூசாவைப்போன்று இங்கும் எகிப்திலிருந்து சிறிது கோதுமையும் சாராயமும் இறக்குமதியாகின்றன; சாதாவும் பொதுவும் போலியுமான அரபிதினுசு உடைகள்; மூஸாவுக்குச் செல்வது போன்று செம்பு, தகரம், பவளம்[1], நெரியரிசிப்

---

27. (1) கானு. ஹிஸ்ன் கோரப் (Hisn ghorab) என்ற ஊர். 14°10' N., 48° 20' E.

(2) ஷப்வா (Shabwa) என்றும் சொல்லப்படும்.

(3) தெப்பம். தோலில் காற்றடைக்க அது உப்பினபோது தண்ணீரில் போட மிதக்கும் மிதவை.

28. (1) பவளம். மத்தியதரைக்கடலி லுண்டாகும் பவளம் சிறந்ததாகக் கருதப்பட்டு முசிரி முதலான இடங்களில் வியாபாரம் செய்யப்படுகின்றன.

பால்[2] முதலான பண்டங்கள்; அரசனுக்கு வேலைப்பாடான தங்கத் தாம்பாளங்களும், வெள்ளித் தட்டுகளும், குதிரைகளும், படிமங்களும்[3], நல்ல ஆடைகளும் போகின்றன. இங்கிருந்து நாட்டுப் பொருள்கள், சாம்பிராணி, கரியாபோளம்[4] மற்றும் பலவிதப் பண்டங்கள் ஏற்றுமதியாகின்றன. இந்த இடத்திற்குச் செல்ல மூசாவுக்குச் செல்லப் புறப்படும்பொழுதும் கொஞ்சம் முன்னும் புறப்படுகின்றனர்.

29. கானுவுக் கப்பால் பூமி உள்நாட்டிலே வளைவதால் பெருத்த ஆழமான குடா உண்டாகிறது; அதனைச் சகலிடஸ்[1] (*Sachalites*) என்பர்; அதனை யொட்டிச் சாம்பிராணி விளையும் நாடு இருக்கிறது; இது மலையடர்ந்ததாயும் மக்கள் வாழ்வதற்குத் தகுதியற்றதாயும், பனியும் மேகமும் அடர்ந்ததாயும் சாம்பிராணி மரங்கள் நிறைந்ததாயுமிருக்கிறது. இந்தச் சாம்பிராணி மரங்கள் உயரமானவையுமல்ல, பருத்தவையுமல்ல; எகிப்தில் மரங்கள் பிசின்விடுவதுபோல் இந்த மரங்களிலும் பால் பட்டைமேல் வடிகின்றது. வடிந்தவை அரசனுடைய அடிமைகளாலும் தண்டனையடைந்த கைதிகளாலும் சேர்க்கப்படுகின்றன. இந்த நாடு மிக்க நோயுடையதும் வாழ்வதற்குச் சௌக்கியமற்றதுமான நாடு.[2] கரையோரமாகக் கப்பலிற் செல்வோரும் நோயடைகின்றனர்; அங்கு வேலை செய்பவர்கள் நோயினாலும் பசியினாலும் உயிர்விடுகின்றனர்.

30. இந்தக் குடாவில் கிழக்கு நோக்கி சியாகுருஸ்[1] (*Syagrus*) முனைப்பு இருக்கிறது; அதனில் அந்நாட்டைக் காக்க ஒரு கோட்டை யுண்டு; ஒரு துறைமுகமும் சாம்பிராணிக் கிடங்குமிருக்கிறது. இந்த முனைக்கும் இலவங்க முனைக்கும் எதிரில், சியா

---

(2) நேரியரிசிப்பால். இதனை நெரியாசம் என்பர். இது முற்காலத்தில் கோயில்களில் தூபப்பண்டமாக உபயோகப்பட்டுவந்தது; இதுபொழுதும் ஊதுவர்த்தி முதலியவற்றிற் சேர்க்கப்படுகிறது.

(3) படிமங்கள். அரசன் தொழுவதற்காகச் செதுக்கப்பட்டவை.

(4) கரியாபோளம். Aloes. இது இரத்தக்கட்டு முதலானவைகட்கு உபயோகப்படும் ஒருவகைக் காய்ச்சிய பிசின்.

29. (1) ஸகலிடஸ். அரபு பாஷையில் ஸகில் என்ற சொல்லுக்கு கரை யென்று பொருள். இச்சொல்லை கிரேக்கமயமாக்கிவிட்டனா.

(2) இந்நாடு வாசயோக்கிய மற்றது என்பது பலர் துணிபு.

30. (1) சியாகுருஸ் என்பது ராஸ் பார்டாஹ் (Ras Fartah) என்று வழங்குகிறது. 15°36' N., 52°12' E.

குருஸுக்குச் சமீபமாய் டயஸ் கோர்டியா[2] என்ற பேருடைய ஒரு தீவு இருக்கிறது. இது பாலைநிலமாயும் சதுசதுப்புள்ளதாயும் முதலை கள், பெரும்பாம்புகள், உடும்புகள் நிறைந்ததாயும் இருக்கிறது. இந்தப் பிராணிகளின் கொழுப்பையெடுத்துக் காய்ச்சி ஒலிவை யெண்ணெய்க்குப் (*Olive oil*) பிரதியாக உபயோகிக்கின்றனர். உடும்பின்[3] தசையை யுணவாகக்கொள்ளுகின்றனர். இந்தத் தீவில் கனிகளாவது திராட்சையாவது வேறு தானியமாவது கிடையா. சனங்களும் வெகு சொற்பம். அவர்கள் கரையோரமாக எதிர்க் கரையிலுள்ள நாட்டை நோக்கி வாழ்கின்றனர். அவர்களும் அரபியர் இந்தியர் கிரேக்கர் கலந்த கலப்பு மக்களாய் வியாபாரத்தின் பொருட்டுத் தங்கியவர்கள். அத்தீவில் நாட்டு ஆமையும் கடலாமை யும் வெண்கல ஆமையும் இருக்கின்றன ; வெண்கல ஆமை யோடு அதிகம் ; இது பெரிதாக விருப்பதால் பலரும் விரும்புகின்றனர் ; மலை ஆமை எல்லாவற்றிலும் பெரிதாயிருப்பதோடு கனத்த ஓடு முடையது ; பிரயோசனமற்ற ஓடுகூட அடிப்புறம் உடைக்க முடியாதபடி அவ்வளவு உறுதியானது ; நல்லவையும் நாணயமு மான ஓடுகள் நகைப் பெட்டிகளாகவும், தட்டுகளாகவும், பணிகாரத் தாம்பாளங்களாகவும் செய்யப்படுகின்றன. இந்திய நாட்டுப் பண்ட மென்று கருதப்படுகிற சாயக்கட்டி[4] (*Cinnabar*) இங்கே மரங் களினின்று பாலாக எடுக்கப்படுகின்றது.

31. அஸெனியா நாடு கரிபெல் அரசனுக்கும் மெபரிடஸ் தலை வனுக்கும் உட்பட்டிருப்பதுபோல இந்தத் தீவும்[1] சாம்பிராணி விளையும் நாட்டு அரசனுக்கு உட்பட்டிருக்கிறது. மியுசாவிலிருந்து வரும் ஜனங்களும், தமிழகம், பாரிகஸா சென்று திரும்பும் ஜனங் களும் இவ்விடம் வியாபாரம் செய்கின்றனர் ; அரிசி, கோதுமை, இந்தியத் துணி, அடிமைப் பெண்கள் இவைகள் கொண்டுவரு கின்றனர். இவைகட்குப் பண்டமாற்றாக ஆமையோடு வாங்கு

---

(2) டயஸ்கோர்டியா. இது சோகோத்தரா (Socotra) என்று வழங்குவது. 12°30'N., 54° 1' E. சுகாதார த்வீபம் என்பது இப்படி மருவி நிற்கிறதென்பர்.

(3) உடும்பினை ஐரோப்பியர் விரும்புவதாகத் தெரியவில்லை. இந்திய நாட்டில் உடும்புமாமிசம் மேலானதாகக் கருதப்படுகிறது.

(4) சாயக்கட்டி. இது யானையும் யாளியும் சண்டையிட்டு இறப்ப தாலுண்டான இரத்தமென்று ஒரு காலத்தில் கருதப்பட்டது. இங்கே கூறப் பட்டது மரத்திலிருந்து வடியும் பால்.

31. (1) சோகோத்தரா தீவு. தென் அரபியாவிலுள்ள மஹ்ரா (Mahra) நாட்டுக்குச் சொந்தம்.

கின்றனர். இதுபொழுது இந்தத் தீவு அரசனால் காக்கப்பட்டும்[2] குடிகளுக்குப் பயிர் செய்யக் கொடுக்கப்பட்டும் வருகிறது.

32. சியாகுருசை யடுத்துக் கீழே ஓமானருகுடா[1] கரையைக் குடைந்து செல்லுகிறது ; அதன் நீளம் 600 ஸ்டேடியா. இதற்குப் பின்னால் உயரமும் செங்குத்துமான மலைகள் இருக்கின்றன. 500 ஸ்டேடியா தூரம் குகைவாழ்நர் வாழ்கின்றனர். இதற்கு அடுத்து மொஸ்கா[2] (*Moscha*) என்றொரு துறைமுகம் இருக்கிறது. அங்கே சகலிடிஸ் நாட்டில் உண்டாகும் சாம்பிராணி முழுவதும் கொண்டு வரப்படுகின்றது. கானாவிலிருந்து கப்பல்கள் ஒழுங்காக வந்து செல்லுகின்றன. தமிழகம்[3] பாரிகஸாவிலிருந்து நாட்கழித்துத் திரும்பிவரும் கப்பல் இங்கே மாரி மழைகாலத்துக்குத் தங்குகின்றன. கப்பலிலுள்ளவர்கள் அரசனது உத்தியோகஸ்தர்களிடம் தங்களிடமுள்ள ஜவுளி, கோதுமை, நல்லெண்ணெய் முதலிய வற்றைக் கொடுத்துச் சாம்பிராணி வாங்குகிறார்கள். இந்தச் சாம்பிராணி சகலிடிக் நாடு முழுவதும் யாதொரு கண்காணிப்புமின்றி சேகரித்துக் குவியல் குவியலாகக் கொட்டப்பட்டிருக்கின்றன. தெய்வந்தான் காப்பாற்றுகிறதென்று நம்பவேண்டியிருப்பினும் அரசனுடைய அனுமதியின்றி அறிந்தோ மறைவாகவோ கப்பலில் சிறிது சாம்பிராணிகூட ஏற்ற முடியாது; ஒரு கட்டி சாம்பிராணி கப்பலேற்றப்படினும் கப்பல் துறைமுகம் விட்டுப் பெயர முடியாது.

33. மோஸ்காதுறைக்குக் கீழ் அஸிக்[1] (*Asich*) வரை 1500 ஸ்டேடியா அளவு கரையோரமாக ஒரு மலைத் தொடர் செல்லுகிறது. அதன் கோடியில் வரிசையாக ஸெனோபியன் (*Zenobian*) என்ற ஏழுதீவுகள்[2] இருக்கின்றன. இவற்றிற்கப்பால் இதுபொழுது பாரசீகத்துக்குச் சொந்தமான ஒரு மிலேச்ச நாடு இருக்கிறது. இந்த ஸெனோபியன் தீவுகளிலிருந்து இரண்டாயிரம்

---

(2) காப்பு. பக்கத்திலுள்ள அரசர் இத்தீவைப் பிடித்துக்கொள்வதற்கு எப்பொழுதும் கருத்துள்ளவர்.

32. (1) ஓமானருகுடா. The Bay of Omana. இதுபொழுது கமார் பே (Kamar Bay) என்று சொல்லப்படும்.

(2) மோஸ்கா. கோர் ரீரி (Khor Reiri) என்று இப்பொழுது சொல்லப்படுகிறது.

(3) தமிழகம். கோள நாடெட்டப்பட்ட தமிழ் நாடு.

33. (1) அஸிக். ராஸ் அஸிக் (Ras Hasik) என்ற ஊர்.

(2) ஏழுதீவு. குரியா முரியா (Kuria Muria) என்று பேர்,

ஸ்டேடியா நடுக்கடலிற் சென்றால் கரையிலிருந்து 120 ஸ்டேடியா தூரமுள்ள ஸராபிஸ்[3] (*Sarapis*) என்ற தீவு எதிர்ப்படும். இந்தத் தீவு இருநூறு ஸ்டேடியா அகலமும், 600 ஸ்டேடியா நீளமுங் கொண்டது; அதனில் மிக்கக் கொடியவர்களான மூன்று புலாலுண்ணும் வகுப்பினர் வாழ்கின்றனர்; அவர்கள் அரபுபாஷை பேசுகின்றனர். பனையோலையை ஆடையாக அணிகின்றனர். வெகு நேர்த்தியான ஆமையோடு இங்கே யுண்டாகின்றன. கானுவி லிருந்து சிறு கப்பல்களும் பண்ட மரக்கலங்களும் முறையாக வரு கின்றன.

34. பாரசீக வளைகுடாப் பக்கமாக வடக்குமுகமாகச் செல் லும் கரையோரமாகப் பயணம்சென்றால் இரண்டாயிரம் ஸ்டேடியாவுக் கப்பால் கலேயி[1] *Calæi* என்ற தீவுகள் இருக்கின் றன. அங்குவாழும் ஜனங்கள் நாகரீகமற்ற மோசக்காரர்.

35. கலேயி தீவுகளின் வடகோடியில் கலோன் என்ற மலைகள் இருக்கின்றன; அதனை யடுத்துப் பாரசீக வளைகுடா முகத்துவாரம் இருக்கிறது; அங்கு முத்துச்சலாபம் குளிக்கின்றனர். ஜல சந்தியின் இடது புறம் அஸபொன் (*Asabon*) என்ற பெரிய மலைத்தொடர் இருக்கிறது; வலது புறத்திலும் செமிராமிஸ் (*Semiramis*) என்ற பெரிய மலைத்தொடர் இருக்கிறது. இவை கட்கு நடுவே 600 ஸ்டேடியா அளவு ஜலசந்தியைக் கடக்க வேண்டும். இவைகட்கப்பால் பாரசீக வளைகுடா என்ற அகன்ற கடல் இருக்கிறது. வளைகுடாவின் வடகோடியில் சட்டப்படி ஏற் பட்ட அபோலோகஸ்[1] (*Apologus*) என்ற அங்காடிப் பட்டினம் இருக்கிறது. இது யூபரடேஸ் நதிக்கும் சாரக்ஸ் ஸ்பஸ்னிக்கும்[2] (*Charax Spasini*) அருகிலிருக்கிறது.

36. வளைகுடாவின் வாய்வழியாக ஆறுநாள் பயணம் சென்றால் ஓம்மானு[1] *Ommana* என்ற பாரசீகநாட்டு அங்காடிப் பட்டினமிருக்கிறது. இந்த இரண்டு அங்காடிப் பட்டினங் களுக்கும் பாரிகஸாவிலிருந்து செம்பு, சந்தனம்[2], தேக்கமரம்,

(3) ஸராபிஸ். மாஸிராதீவு (Masira). 26°20′N., 58°40′. E.

34. (1) தயிமானியாத் தீவுகள். மஸ்கட்டுக்கு வடமேற்கிலிருக்கின் றன. இப்பொழுது கல்ஹத் (Kalhat) என்று பேர்.

35. (1) அபோலோகஸ். ஒபல்லா (Obollah) என்ற ஊர்.

(2) மஹமரா (Mahommarah) என்ற ஊர். 30° 24″ N., 48° 18 E.

36. (1) ஓமான் (Oman) பட்டினம்.

(2) சந்தனம். கிரேக்க தேசத்துக்குச் சென்றதாகக் காணப்படுவது இதுதான் முதல் தடவை,

சிஸே மரம்[3] கருங்காலி[4] முதலிய பண்டங்களை யேற்றிக்கொண்டு மரக்கலங்கள் முறையாக வந்துபோய்க் கொண்டிருக்கின்றன. கானுவிலிருந்து சாம்பிராணி ஓம்மானுவுக்குக் கொண்டுவரப்படுகின்றது ; ஓம்மானுவிலிருந்து அரேபியாவுக்கு அந்நாட்டு வழக்கப்படி மதராடா[5] (*Madarata*) என்ற கட்டுத்தோணிகள் செல்லுகின்றன. இந்தப் பட்டினங்களிலிருந்து பாரிகஸாவுக்கும் அரேபியாவுக்கும் முத்துக்கள் ஏற்றுமதி யாகின்றன ; ஆனல் அவை இந்திய முத்துக்களுக்குக் கீழ்த்தரமானவை. நாட்டுக்கு வேண்டிய தோம்பு, சாராயம், பேரீச்சை, பொன், அடிமை வியாபாரம் முதலியன நடக்கின்றன.

37. ஓம்மானு நாட்டுக்கு அடுத்தாற்போல் பர்சிதே[1] (*Parsidæ*) இராச்சியமும், கெட்ரோஸியா[2] (*Gedrosia*) வளைகுடாவுமிருக்கிறது ; இந்த வளைகுடாவின் மத்தியிலிருந்து ஒரு முனை நீளுகிறது. இவ்விடத்தில் கப்பல்கள் செல்லும்படியாக ஆற்று முகமும் ஓரியா[3] (*Oræa*) என்ற அங்காடிப் பட்டினமும் இருக்கிறது. கடற்கரையிலிருந்து ஏழுநாட் பயணத்தில் ரம்பாஸியா[4] ? என்ற ஊர் இருக்கிறது. இது இராசதானிப் பட்டினமாம். இந்நாட்டில் கோதுமை, சாராயம், அரிசி, பேரீந்து உண்டாகின்றன ; கரையோரமாகக் குங்கலியம்[4] விளைகின்றது.

---

(3) Dalbergia cissoo.

(4) *Diospyros ebenum*. கருங்காலி கி. மு. 500லேயே இந்தியாவிருந்து எகிப்துக்குக் கொண்டுபோகப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

(5) மதராட் Muddarra'at என்ற அரபுச் சொல் தென்னை நாரால் கட்டப்பட்டது என்று பொருள்படும். கட்டுத்தோணிகள் இன்றும் தென்னிந்தியாவில் வழக்கிலுள்ளது.

37. (1) பர்சிதே. பாரசீக நாடு. (Persia). இது முதலில் பாரசீகமென்றும் பிளினிகாலத்தில் பார்த்தியா (Parthia) என்றும் பேர் பெற்றது. இதுபொழுது குறுகின நாடாய் பாரசீகம் என்றே பேர்பெறும்.

(2) கெட்ரோஸியா. இது ராஸ் ஆர்மரா (Ras Ormara) என்ற முனைக்குப் பக்கத்திலிருக்கும் ஒரு சிறிய வளைகுடா.

(3) ஓரியா. சோன்மியானி வளைகுடா (Sonmiani Bay.)வில் இருக்கிறது. ஆற்றுக்குப் புராளி (Purali) என்று பெயர். இந்த நதி பெரிபுளூஸ் காலத்தில் இப்பொழுது மணல்மேடிட்டுப்போன ஒரு குடாவில் விழுந்தது. ஓரிதே (Oritae) என்ற ஜனங்கள் வசித்ததாகவும் அவர்கள் நாடு இது என்றும் பிளினி கூறுவர். அக்காலத்தில் பெலுச்சிஸ்தானம் பார்த்தியர் என்ற பாரசீகர் வசமிருந்தது.

(4) குங்குலியம். *Balsamodendron mukul*. இது இந்தியாவிலும் விளைகிறது.



# உத்தம மாமி

## ஐ.

(174-ம் பக்கத் தொடர்ச்சி)

### காட்சி IV.

[ராகவ ஐயர் வீட்டில் ஓர் அறை. பவானி பாடிக்கொண்டிருக்கிறாள். காலம் ; இரவு.]

[ராகவ ஐயர் பிரவேசம்.]

பவானி :—அப்பா! முன்பே கனகராம் அவர்களின் தோட்டக் கச்சேரியிலிருந்து புறப்பட்டு வந்தீர்களே ? ஏன் இவ்வளவு கால தாமதம் ?

[ராகவ ஐயர் மௌனம்.]

பவானி :—என்ன அப்பா, பேசவில்லை ? உங்களுக்கு என்ன உடம்பு ? ஏதோ வெகு களைப்பாயிருக்கிறீர்களே. உட்காருங்கள். அம்மாவைக் கூப்பிடட்டுமோ ?

ராக :—அம்மா ! எனக்கு உடம்பு ஒன்றுமில்லை. உன்னை நாளை உன் புக்ககத்திற்கு அனுப்பவேண்டுமேயென்கிற கவலை.

பவானி :—அதற்கு ஏனப்பா என்னைக் கலியாணம் செய்து கொடுத்தீர்கள் ? கலியாணம் செய்து கொடுக்காவிட்டால் உங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்துகொண்டிருப்பேனே !

ராக :—அதற்கில்லையம்மா, நான் வருத்தப்படுவது. உனக்கு ஒரு பெரிய தீங்கு செய்திருக்கிறேன் ; அதனால் தான்.

பவானி :—எனக்கா ! அப்பா ! என்னைப் பெற்று வளர்த்துப் படிப்பு, பாட்டு, நல்ல போதனை இவைகளைச் சொல்லிவைத்ததெல்லாம் நீங்கள். அப்பா ! போங்களப்பா, போங்கள். என்னிடம் ஏதோ மனதை அறிய இப்படிப் பேசுகிறீர்கள்.

ராக :—இல்லையம்மா. உனக்கு ஒரு பெரிய தீங்கைச் செய்து விட்டேன். உன் மாமியார் வீடுபோய் நீ விசனிக்காமலிருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலை.

பவானி :—அப்பா! எனக்கு நல்ல புருஷனைப் பார்த்துக் கலியாணம் செய்துவைத்தீர்கள். என் மாமியாரோ லக்ஷ்மிமாதிரி இருக்கிறாள். அப்பா! இவர்களைப் பற்றி உங்களுக்குக் கவலை ஏற்படக் காரணமென்ன? (யோசித்து) என்னிடம் ஒளிமறைவாய்ச் சொல்லுகிறீர்கள்.—நான் மாமியாரிடமும், புருஷன் முதலியவர்களிடமும் சரிவர நடந்துகொள்ளமாட்டேனோ என்கிற கவலை உங்களுக்கு இருக்கிறது. தெரிந்துகொண்டேன். (சிரித்துக்கொண்டே) அப்பா, நான் உங்களுடையவும், அம்மாவுடையவும் பெயரைக் கெடுக்காமல் நல்லமாதிரியாக மாமனார், மாமியாரிடம் நடந்துகொள்ளுகிறேன்.

ராக :—பவானி, உன் நடவடிக்கையைப் பற்றிக் கொஞ்சமும் கவலையில்லை. உனக்கு நகைகள் ஒன்றும் இப்போது போடமுடியாமல் போனதே என்ற கவலைதான்.

பவானி :—எனக்குப் போட்ட நகைகளே ஏராளமாயிற்றே! "போதுமென்ற மனமே பொன் செய்யுமருந்து." உங்கள் மாப்பிள்ளைகூட "உன் தகப்பனார் போட்ட நகைகள் ஒன்றையும் தம் வீட்டிற்குக் கொண்டுவரக் கூடாதென்று கண்டிப்பாகச் சொல்லி இருக்கிறார்; என் புருஷனே என்னை நகைகளில்லாமல் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கும்போது எதற்கப்பா நகைகள்?

ராக :—உன் மாமனாரும் மாமியாரும் சும்மா விடுவார்களா?

பவானி:—ஆனால் இப்போதிருக்கும் நகைகளே போதுமானவை. இன்னுமெதற்கு?

ராக :—வெகு பேதை நீ. உனக்குப் போட்டிருக்கும் நகைகள் வைர நகைகளல்ல. எல்லாம் கில்ட் நகைகள்.

பவானி :—இவைகளா!

ராக :—இது விஷயம் வெளிவந்தால், வேறு வினை வேண்டியதில்லை. உன் மாமனாரோ மன்னார்குடியில் பெயர் பெற்ற வடிகட்டின லோபி. எப்படியாவது இந்த வருஷம் தள்ளிவிட்டால் இருக்கும் நிலங்களையாவது விற்று நல்ல வைர நகைகளாகப் போட்டுவிடுவேன். உன் புக்ககத்தில் உன்னைத் துன்புறுத்தினால் நாங்கள் செய்திருக்கும் பெரிய மோசத்திற்காகவும், நீ எங்களுக்குப் பெண்ணாகப் பிறந்திருக்கிற தோஷத்திற்காகவேனும் பொறுத்துக்கொள். இதுதான் நான் உனக்குச் சொல்லக்கூடியது.

பவானி :—அதற்காக வருந்த வேண்டாம். வருவன வந்துதான் தீரும். எல்லாம் கடவுள் செயல்.

(கிருஷ்ணமூர்த்தி பிரவேசம்)

கிரு : கார் வந்து காத்துக்கொண்டிருக்கிறது, போகலாமே.

ராக :—புறப்படுவோம்.

[புறப்படுகிருர்கள்.]

## காட்சி V.

[துரைசாமி தீக்ஷிதர் வீட்டில் ஓர் அறை ; காலம் : மாலே ; அஸ்தமன சமயம்.]

(ஜானகி உட்கார்ந்துகொண்டிருக்கிருள். பவானி பாடிக் கொண்டிருக்கிருள்.)

பவானி :—அம்மா ! அஸ்தமன சமயமாகிவிட்டதே ; திரு விளக்கை ஏற்றிவிடலாமா ?

ஜானகி :—சரி, அம்மா! லக்ஷ்மி படத்திற்குப் புஷ்பம் சாத்தி, கற்பூரம் கொளுத்தி, ஹாரத்தி எடுத்துவிடம்மா. (பவானி போகிருள்.)

(தனக்குள்) பவானி வந்தது முதல் வீட்டில் லக்ஷ்மி நடமாடுவதுபோல் இருக்கிறது. ஆனல் சற்றும் குதூஹலமில்லாமலிருக்கிருள். என்ன காரணமோ தெரியவில்லே. ஒரு கால் தன் தாய் தந்தையரைப் பிரிந்த காரணமாகவிருக்கலாமோ ? எதற்கும் லேசாக விசாரிக்கலாம். அந்தக் குழந்தைக்குத் தாய் நான்தானே ?

[பவானி லக்ஷ்மி பூஜை முடித்துத் தன் மாமியாரை நமஸ்காரம் செய்கிருள்.]

ஜானகி :—(பவானியை வாரி எடுத்துக் கட்டியணைத்து முத்தமிட்டு) மஹாராஜியாக இரு அம்மா! என்றென்றும் என் அருமைக் குழந்தைக்கு அருந்துணேவியாக எங்கள் குடும்பத்தைப் பிரகாசிக்கச் செய்துகொண்டு இரு. (சற்று நின்று) கண்ணே, உன்னே ஒன்று கேட்கவேண்டுமென்று மிகவும் ஆவலாக இருக்கிறேன். நீ கூசாமல் பதில் சொல்லவேண்டுமே ?

பவானி :—தாயிடம் எந்த விஷயத்தை ஒளிக்கலாம் ? அதுவும் உங்களிடம் ஒளிமறைவென்ன ? பதில் சொல்லுகிறேன்.

ஜானகி :—நீ ஒருவித்மாக பெரிய ஏக்கத்துடனிருப்பதாகத் தெரிகிறதே. அப்படி வருத்தப்படக்கூடிய சந்தர்ப்பம் ஏதாவது ஏற்பட்டதா ? உன்னே உன் புருஷன் நொந்து கொண்டாஞ ? அல்லது உன்மாமனர் ஏதாவது அப்பிரியமான வார்த்தைகளேச் சொன்னரா ? அல்லது உன் அப்பா அம்மாவைப் பிரிந்த மன வருத்தமா ?

பவானி :—இல்லை அம்மா! என்னிடம் எவ்வளவோ அன்புடனும் ஆசையுடனு மிருக்கிறார்கள். கடுமையான வார்த்தையை யாரும் சொல்லவுமில்லை. நீங்கள் அப்படி எண்ணக்கூடாது !

ஜானகி :—அப்படியானால் மனக்கிலேசங்கொண்டவள்போ லிருக்க என்ன காரணம்? எந்த விஷயத்தையும் என்னிடம் ஏன் சொல்லக்கூடாது? உன் தாய் மாதிரி நான் இல்லையா ? நான் ஏதாவது வித்யாசமாக விருக்கிறேனா? கூசாமல் சொல்.

பவானி :— (சற்று மௌனம்.) தாங்கள் தாய் பெண்ணை நடத்துவதற்குப் பதின்மடங்கு மேலாகத்தான் என்னை நடத்தி வந்திருக்கிறீர்களே தவிர மற்றபடி வேறு வித்யாசமாக நடத்தவில்லையே.

ஜானகி :—அகத்தினழகு முகத்தில் தெரியும். ஏதோ உன் மனதில் ஒன்று உன்னைப் பாதிக்கின்றது. அதை நீ அவசியம் சொல்லத்தான் வேண்டும்.

பவானி :—அம்மா ! (கண்ணில் நீர் ததும்ப) நாங்கள் தங்களுக்கெல்லாம் பெரியதொரு அபசாரம் செய்து விட்டோம். நான் போட்டுக் கொண்டிருக்கும் நகைகளெல்லாம் அசல் வைர நகைகளல்ல. பணமில்லாததால், இமிடேஷன் நகைகளைப் போட்டு என்னை அனுப்பிவிட்டார்கள். எங்கப்பா நிலங்களை விற்று வகை செய்து விடுவார்கள். அதற்காக அவர்களையும் என்னையும் மன்னிக்கவேண்டும்.

ஜானகி :—அடி அசடே! இதற்காகவா மனதைப் புண்படுத்திக் கொண்டிருக்கிறாய்? உன் தகப்பனார் இவ்விதம் செய்திருந்திருக்காவிட்டால் உன்னை நான் நாட்டுப்பெண்ணாக அடையும் பாக்கியத்தை இழந்திருப்பேனே. அடி என் கண்ணே! உன்னையும் உன் குணத்தையும் அபேக்ஷித்தேனேயல்லது இந்த நகைகளுக்கு நான் ஆசைப்படவில்லையே. உனக்கு இந்த நகை தான் எதற்கு ? யார் அழகுக்கழகு செய்வார் ? உன் களங்கமற்ற பரிசுத்த குணமே உனக்குப் பெரிய ஆபரணமாகுமே. எல்லாவற்றையும் என்னிடம் கொடு. உனக்கென்று வேறே சிகப்பு செட்டுகள் தயார் செய்து இருக்கிறேன். அவைகளை அணிந்து கொள். நான் உன் தகப்பனாருக்கு நகையும் வேண்டாம், பணமும் வேண்டாமென்று தெரிவிக்கின்றேன். கொஞ்சமாவது விசனப்படாதே.

பவானி :—ஆகட்டும், அம்மா ! நீங்கள் செய்கிற இந்தப் பேருதவிக்கு நாங்கள் எந்த விதத்தில் பிரதி செய்யப்போகிறோம் ? அவாள் வரும் சமயமாயிற்று. அனுஷ்டானத்திற்கு வேண்டியவைகளைத் தயார் செய்கிறேன். (போகிறாள்.)

ஜானகி :—ஐயோ ! என் பணத்தையும், நகைகளையும் அநியாயமாகக் கலியாணங்களில் பெண்ணைக் கொள்ளும்போது அபகரிக்கிறார்களோ தெரியவில்லை? இதனால் உண்டாகும் தீங்குகளைச் சிறிதும் நினைக்கின்றார்களில்லையே ! எவ்வளவு ஏழைச் சிறுமிகள் என்றும் நீங்காத துன்பத்தை இதனால் அடைகின்றார்கள் ! வீண் டம்பத்திலும் அனாவசியமான விஷயங்களிலும் நமது சமூகத்தார்கள் என் அரும்பாடுபட்டுத் தேடிய பணத்தை வீணாகச் செலவு செய்கின்றார்களோ ?............(யோசனை செய்கிறாள்) குழந்தை விஷயத்தைக் கவனித்தால்......சங்கதி தெரிந்தால் என் பர்த்தா சம்பந்திகளை லேசில் விடமாட்டாரே ! சரி, இது தான் யோசனை. தற்சமயம் என்னிடம் ரூபாய் ஐயாயிரம் கைவசமிருக்கிறது. பவானிக்கு அசல் வைரங்களில் ஒரு செட் நகைகள் செய்து விடுகிறேன். பிறகு இது விஷயம் பவானியின் தகப்பனாருக்குத் தெரிவித்துவிட்டால் எல்லாம் ஒழுங்காய் விடும்.

[உள்ளே போகிறாள்.]

## காட்சி VI.

[துரைசாமி தீக்ஷிதர் வீட்டில் ஓர் அறை; மகாலிங்கம் வருகிறான். பவானி முதலியவர்களிருக்கிறார்கள்.]

[நக்ஷத்ரேச ஐயர் பிரவேசம்.]

மகாலிங்கம்:—நக்ஷத்ரேச ஐயரே, உமது பெண்ணுக்கு எப்போது கலியாணம்? நாளையதினமா ?

நக்ஷத்ரேச ஐயர் :—ஆம் ! நான் கேட்டிருந்த நகைகளைக் கொடுங்கள்.

மகா :—பவானி, உன் பழைய நகைகளை இவரிடம் கொடு.

பவானி :—நகைப் பெட்டியைக் கொண்டுவந்து கொடுக்கிறாள்.

[நக்ஷத்ரேச ஐயர் வெளியே வருகிறார்.]

நக்ஷத்ரேச ஐயர்:—(இருபுறமும் பார்த்துவிட்டுத் தமக்குள்) சரி தான், இதில் என்ன நகைகள் இருக்கின்றன என்று கூடப் பார்க்காமல் நகைப்பெட்டியைக் கொடுத்துவிட்டுப் போய்விட்டார்கள். தீக்ஷிதருக்கு நல்ல சம்சாரமும், புத்திரனும் வந்து வாய்த்தார்கள். ஒரு பைசாவை எட்டுத்தடவை எண்ணிப் பார்ப்பார் தீக்ஷிதர் ; அவர் வீட்டு மனுஷாளோ மகா அஜாக்கிரதை யானவர்கள். நல்லது; இது தான்சமயம். தீக்ஷிதரிடம் ஆயுஷ்பரியந்தம் வேலை பார்த்தாலும் நமக்கென்ன பிரயோஜனம்? நமக்கு வேண்டிய நகைகளை எடுத்துக்

கொண்டு பாக்கி நகைகளைத் திருப்பிக் கொடுத்துவிட வேண் டும். இந்தப் பவானி எல்லாரிலும் முதல்நம்பர் அஜாக்கிரதை. திருப்பிக் கொடுக்கும்போது கவனிக்காமல் வாங்கிவைத்து விடுவாள். படித்துத்தான் என்ன செய்வது? (நகைப்பெட்டியை மேலே பார்க்கிறான்) வேலை என்றால் கம்பெனி வேலைதான். அதிலும் சென்னை ராஜதானிக்கே நாணயத்திலும், வேலைப்பாட்டி லும் சிறந்த பிரபல வைர வியாபாரிகள் வீ. கும்ஸீசபில்தாஸ் கம்பெனி என்றால் கேட்கவும் வேண்டுமா? பெட்டியே இவ்வளவு ஜோர் என்றால் நகைகள் எல்லாம் முதல்தரமாக இருக்குமே! என் பெண்ணுக்கு ஒரு மூக்குப்பொட்டு, பேஸரீ, தோடு ஒரு ஜோடி, இவைகள் போதும். (பெட்டியைத் திறக்கிறார்.) என்ன டால்! கண்ணைப்பறிக்கிறதே! (ஒரு நகையை எடுத்துப் பார்க் கிறார்.) நல்லது, நமக்கு வேண்டிய சதாசிவம் ஆசாரியிடம் இந்த மூன்று ஐட்டங்களின் விலை மதிப்பையும் கேட்போமே. தீக்ஷிதர் வீட்டில் வருஷம் பத்துக்கு உழைத்ததற்கு இரண்டாயிரம் ரூபாய் பிரயோஜனமாவது வேண்டாமா? நல்லவேளை, இதோ ஆசாரியும் தெருவழியேபோகிறான். நான்போய்க் கேட்கிறேன்.

[ஆசாரியைத் தெருவழியே தொடர்ந்து செல்கிறார்.]

நக்ஷத் :—ஐயா, ஆசாரி, இந்த வைர மூக்குப்பொட்டின் மதிப்பைப்பார்த்துச் சொல்லுங்கள் ஐயா. (வைர நகையைக் கொடுக் கிறார்.)

ஆசாரி :—(சற்றுநேரம் பார்த்து) போம் ஐயா, போம்; வைர மாவது இது! கனவோ, அல்லது என்னை ஏய்க்கப்பார்க்கிறீரா? இது அசல் புது மண்டபம் சரக்கையா! முக்காலே மூணுவீசம் பொரும் ஐயா?

நக்ஷத் :—என்ன, புதுமண்டபமா? என்ன ஐயா கேலியா செய்கிறீர்! நமது தீக்ஷிதர்வாள் நாட்டுப்பெண்ணுக்குப் பிறந்தகத் தில் செய்ததல்லவா இது? சரியாகப் பாரும் ஐயா?

ஆசாரி :—தீக்ஷிதர் என்றால் உமக்குக்காணும் மொக்கை. அவர் பெயரை என்னிடம் சொல்லாதீர். ஐயா கஞ்சப் பயலில் பொறுக்கி எடுத்த கஞ்சன். நினைத்தாலும் வயிறு எரிகிறது. அவன் வட்டி வாங்குகிற அநியாயம்! போம் ஐயா, போம்! லோபிக்கு இப்படித் தான் ஐயா வந்து வாய்க்கும்!

[நகையைவீசி எறிந்துவிட்டுப் போகிறான்.]

நக்ஷத் :—(தனக்குள்) சே! "பிச்சையெடுத்தும் பட்டினி, கலியாணம் செய்தும் பிரம்மசாரி" என்றபடி களவாடியும், புது

மண்டபச் சரக்கையா திருடவேணும். பெரிய மோசமாக வல்லவா இருக்கிறது! சரி, இனி தீக்ஷிதர் தயவையாவது சம்பாதிக்கலாம்.

[தீக்ஷிதர் வீட்டிற்குச் செல்கிறார்.]

நக்ஷத் :—மோசமல்லவா செய்து விட்டார்கள். நமது நாட்டுப் பெண்ணுக்குப் போட்ட நகைகளெல்லாம் புதுமண்டபத்து நகைகளல்லவா, பாருங்கள் !

தீக்ஷிதர் :—யாருங்காணும் மோசம் செய்தது? நீ மோசம் செய்யப்பார்க்கிறாய். நான் கலியாணத்துக்கு முன் எல்லா நகைகளையும் சோதனை பார்த்தல்லவா வாங்கினேன். என்ன சொல்லுகிறாய் ?

நக்ஷத் :—இப்போதுதான் நான் இங்கேவந்தேன். இன்னும் 20 நிமிஷமாகவில்லையே. என்னவாக மோசம் செய்யமுடியும் ?

தீக்ஷிதர் :—வாஸ்தவந்தான். (நகைகளைவாங்கிப் பார்த்து) நல்லது, இவைகளைப் பவானியிடம் கொடுத்துவிடு. வக்கீலைப்போய் கூட்டிக்கொண்டு உடனேவா. (போகிறார்.)

[பவானி வருகிறாள்.]

நக்ஷத் :—அம்மா, எனக்குவேறு நகைகள் கிடைத்துவிட்டன. ஏதாவது தொலைந்துபோய்விட்டால், பிறகு பெரிய மனுஷ்யாள் வீட்டுப் பொல்லாப்பாக வந்துவிடும். எதற்கும் விலை உயர்ந்த சரக்குகளானதால், எடுத்து வைத்துவிடம்மா. (தனக்குள்) எல்லாரும் நன்றாக மாட்டிக்கொண்டு விட்டார்கள் !.

[பவானி போகிறாள்—ஜானகி வருகிறாள்.]

நக்ஷத் :—அம்மா, பவானி போட்டுக் கொண்டிருக்கும் நகைகளெல்லாம் பெரும் மோசம்.

ஜானகி :—அப்படியா ? நீர் பார்த்தீரா மோசத்தை ? (நக்ஷத்ரேச ஐயர் போகிறார்). இது தான் சமயம். (பெட்டியிலிருந்த கில்ட் நகைகளை எடுத்துவிட்டு நல்ல நகைகளை வைத்து விடுகிறாள்).

## காட்சி VII.

[தீக்ஷிதர் வீடு. பகல். ஓர் அறை.]

பவானி :—ஐயோ ! என்ன செய்யப் போகிறார்களோ ! வக்கீலும் நம்பிக்கை மோசத்திற்கு அப்பாவின் பேரில் பிராது தயார் செய்கிறாராம்.

[தீக்ஷிதர் வருகிறார் ; வக்கீலும் பிரவேசம்.]

தீக்ஷிதர் :—சார் ! இந்த அவமானத்தைச் சகிக்க முடியவில்லை. அரை அணு வட்டிவிடாமல் வசூல் செய்த தீக்ஷிதர் ஐயாயிர ரூபாய் நகைகளை இழப்பதா ? பார்க்கிறேன் ஒரு கை.

பார்த்தசாரதி ஐயங்கார் :—பிராது தயாராக இருக்கிறது. ராஜ கோபால ஐயர் வந்த உடன் பவானியைக் கூப்பிட்டு நகைப்பெட்டியைக்கொண்டு வா என்று சொல்லுங்கள். நகைப்பெட்டி வந்தவுடன் சதாசிவம் ஆசாரியைப் பார்த்துப் பரீக்ஷை பார்க்கச் சொல்லுங்கள். சதாசிவ ஆசாரி அபிப்பிராயம் கொடுத்தவுடன் இந்தப் பிராதுடன் நம் இன்ஸ்பெக்டர் கிருஷ்ணசாமி ஐயரவர்களிடம் நகைப்பெட்டியை ஆஜர் செய்யுங்கள்; தயவு தாக்ஷிண்யம் மாத்திரம் பார்க்கக்கூடாது.

[மகாலிங்கம் பிரவேசம்.]

மகா :—அப்பா ! மாமா வந்து விட்டார்கள்.

தீக்ஷிதர் :—(கோபத்துடன்) நீ B. A. பாஸ் செய்து என்னடா பிரயோஜனம்? போன வருஷம் ரூபாய் 5000 வாங்கி அனுப்பி விட்டாய்? இதுவரை வட்டி அறுநூறு வந்திருக்கும். அதுவும் போச்சு ; நகைகளெல்லாம் கில்ட் நகைகளாய் விட்டன. ரூபாய் ஐயாயிரம் போனது தான். என்ன பிள்ளை நீ ?

[ராகவ ஐயர், அலமேலு, கிருஷ்ண மூர்த்தி வருகிறார்கள்.]

தீக்ஷிதர் :—பவானி ! (கூப்பிடுகிறார். பவானி வருகிறாள்.) உன் நகைப்பெட்டியைக் கொண்டு வா. (பவானி பயந்து கண்ணீருடன் போகிறாள்.)

[சதாசிவம் ஆசாரி பிரவேசம்.]

தீக்ஷிதர் :—உட்காரும். (பவானி நகைப்பெட்டியைக் கொண்டு வந்து கொடுக்கிறாள். அதை வாங்கிச் சதாசிவம் ஆசாரியிடம் கொடுக்கிறார்.) இது பாரும்.

சதாசிவம் ஆசாரி:—(நக்ஷத்திரேச ஐயரிடம் தாழ்ந்த குரலில்) புது மண்டபமும் அரங்க விலாஸமும் கலந்திருக்கும்.

ஜானகி :— வீ. கும்ஸீசபில் தாஸ் வெகு நாணயமாகச் செய்தது.

ச்தாசிவம் ஆசாரி :—(நகைகளைப் பார்த்துப் பிரமித்து) இவைகள் முதல் ரேட் எக்ஸ்ட்ரு புளூவொயிட்ரோஸ் ஜாகர் டயமண்டுகளாகும். நகைகளின் வேலைப்பாடுகள் மிகவும் அருமை, பேஷ் !

தீக்ஷிதர் :—ஏண்டா. நக்ஷத்ரேசா, வேறே ஏதோ சொல்லிக் கொண்டிருந்தாயே ? (விழிக்கிறார்.) முட்டாள், நம்மேல் மான நஷ்டத்திற்கு அவர்கள் வழக்குத் தொடுத்தால் பெரும் செலவு வரும் !

நக்ஷத் :—ஐயங்காரிடம் கொடுத்த பீசை மானநஷ்டம் பிராதுக்கு வைத்துக் கொள்ளச் சொல்லுங்களேன்,

ஐயங்கார் :—அதற்கு வேறே பீசு தான். நீங்கள் பயித்தியக் காரத்தனம் செய்ததற்காக, நான் பிராது தயார் செய்ததில் ஏதே னும் குறைவுண்டோ ?

ஜானகி :—சரி, நகைகளை மதிப்புப் பார்த்தது போரும். எல் லோரும் போஜனம் செய்ய வாருங்கள்.

அலமேலு :—(கையைப் பிசைந்துக் கொண்டு) அம்மா ! நான் பவானியைச் சுமந்தேனேயொழிய, நீ தான் அவளைப் பெற்றாய் !

பவானி :—அம்மா, என் தாய் தகப்பனார் மானத்தைக் காப்பாற்றியதற்கு உங்களுக்கு என்ன கைம்மாறு செய்யப்போகி றோம்.

ஜானகி :—நீ எனக்கு நாட்டுப் பெண்ணாகமட்டும் இருந்தால் போதாது. பெண்ணாகவும் இருக்கவேண்டும். (வாரி எடுத்துக் கட்டி அணைகின்றாள்.)

மகா :—நான் அலமேலு அம்மாளுக்கு அடிமைப்பட்டிருக் கிறேன். என்னை அவர்கள் விலை போட்டு வாங்கி விட்டார் களல்லவா ?

ஜானகி:—(மகாலிங்கத்தைப் பார்த்து) சரி, இன்றுமுதல் அல மேலு அம்மாளுக்கு முதல் பிள்ளையாக இரு. (அலமேலுவைப் பார்த்து) என் பெண்ணான பவானிக்கும் உன்பிள்ளையான மகாலிங் கத்திற்கும் இதோ கலியாணம் செய்து வைக்கிறேன். (இருவர்கள் கையையும் சேர்த்து வைக்கிறாள்).

பவானி :—உங்களைப்போல் மாமியாரில்லாமல் எத்தனை சகோ தரிகள் மனம் நொந்து கஷ்டப்படுகிறார்கள். உங்களைப் போல நல்ல மாமியார்களாக எல்லாரும் இருப்பார்களாகில் எங்களைப் போன்ற நாட்டுப் பெண்களுக்கு என்ன கஷ்டம் ?

# முக வெட்டு

ரா. கி.

## 1

முகவெட்டு என்றால் என்ன வென்று யாராவது விளக்கிச் சொல்ல முடியுமா? அது என்ன வென்பதாக எல்லாரும் மனதிற்குள் அறிவீர்கள். ஆனால் அது என்ன வென்று சொல்லும்படி கேட்டால், கொட்டுக்கூடை முழி முழிப்பீர்கள், "ஏழிலே ஒன்பது போனால் என்ன?" என்று கேட்கப்பெற்ற குழந்தையைப்போல்.

கவிதையைப்பற்றி மாத்தூ அர்னால்ட் என்னும் ஆங்கில ஆசிரியர் கூறுவது முகவெட்டுக்கும் பொருந்தும் என்று நினைக்கிறேன். "உண்மைக் கவிதையின் இலட்சணம் இன்னதென்பதை விளக்கிக் கூறமுடியாது. ஆனால் கவிதா சந்தம் பொருந்திய வரிகளைப் பொறுக்கி எடுத்து 'இதோ! இது தான் கவிதை' என்று சுட்டிக் காட்ட முடியும்" என்று அவ்வாசிரியர் கூறுகின்றார். முகவெட்டு விஷயமும் இப்படித்தான். அதை இன்னதென்று சொல்லமுடியாமல் தவிக்கிறீர்களல்லவா? ஆனால் மாரமங்கலம் ஏ. கே. சாமியை மட்டும் பார்த்தீர்களானால் "ஆ! இந்த ஆசாமி முகவெட்டு உள்ளவன்" என்பதாக உடனே சொல்வீர்கள். ஆனால் திருவாளர் ஏ. குமாரசாமி நாயக்கரை நேரில் காணும் பாக்யம் உங்களில் 100க்கு ஒருவருக்குக்கூடக் கிடைப்பது சந்தேகமாதலின், அவருடைய வாழ்க்கை சம்பவங்களில் சிலவற்றையாவது தெரிந்து கொள்ளுங்கள்.

குமாரசாமிக்கு அவனுடைய தகப்பனார் வைத்துவிட்டுப் போன சொத்தெல்லாம் 'முகவெட்டு' ஒன்றுதான். ஆ! அவர் மட்டும் இன்று உயிரோடிருந்து தம் அருமை மகன் தாம் அளித்த பிதுரார்ஜிதத்தை எவ்வளவு நன்றாய்ப் பயன்படுத்திக்கொண்டிருக்கிறான் என்று பார்த்தாரானால்,—சந்தோஷ மிகுதியினால் சிரஸாஸனம் செய்யமாட்டாரா? தந்தை காலமானபோது நான்காவது பாரத்தில் படித்துக்கொண்டிருந்த குமாரசாமி படிப்பை நிறுத்திவிட்டு, சம்பாத்யத்துறையில் இறங்கினான். எலிமெண்டரிஸ்கூல் உபாத்யாயர் வேலை அவனுக்கு வெகு சுலபமாகக் கிடைத்துவிட்டது. ட்ரெயினிங்குக்குப் போய் வந்தபின்னர், மாரமங்கலம்

முனிசிபல் ஆரம்பப்பாடசாலை ஒன்றில் தலைமை உபாத்யாயராஞன்.

"'முகவெட்டு' ஜம்பமெல்லாம் இதில் தானு முடிந்தது?" என்று கேட்கிறீர்கள். கொஞ்சம் பொறுங்கள். ஆரம்பப்பாடசாலை உபாத்யாயர்கள் எவ்வளவோ பேர்தான் இருக்கிருர்கள். எல்லோரும் ஏ. கே. சாமி ஆகிவிடமாட்டார்கள். கொஞ்ச காலத்திற்குள் கல்வி இலாகா அதிகாரிகள் எல்லாருக்கும் அவன் செல்லப்பிள்ளையாஞன். இதுமட்டுமா? முனிசிபல் சேர்மன் முத்துரத்தினம் செட்டியார், ஏ. கே. சாமி என்ருல் உயிரை விடத் தொடங்கினர். வாத்தியார் வேலையை விட்டு விட்டுத் தமது அந்தரங்கக் காரியதரிசியாக அமர்ந்து விடும்படி கூட ஒரு தடவை அவர் கேட்டார். இதற்கு 'மாட்டேன்' என்று மறுத்தது குமாரசாமியின் சுதந்திர மனப்பான்மையைக் காட்டுகிறதல்லவா? தான் பிற்காலத்தில் அடையப்போகும் மேலான பதவிக்கு இது இடையூருயிருக்குமென்று அவனது அந்தராத்மா உணர்ந்திருந்தது போலும்.

## 2

மனிதவாழ்க்கையே ஒரு பெரிய சூதாட்டம் என்பது சிலருடைய கொள்கை. மற்ற விஷயங்களில் எப்படியாயினும் கலியாணத்துக்கு இது மிகவும் பொருந்து மல்லவா? குமாரசாமி இச்சூதாட்டத்தில் மகா அதிர்ஷ்டசாலியாக விளங்கிஞன். கலியாணம் தாஞக அவனைத் தேடிவந்தது. அவ் வூரில் நல்ல குடும்பம் ஒன்றில் குழந்தைகளுக்கு அவன் 'பிரைவேட்' சொல்லிக்கொடுத்து வந்தான். அந்த வீட்டில் வயது வந்த ஒரு பெண்ணும் இருந்தாள். பெற்ருேரின் செல்வப்பெண் அவள். அவளுக்குத் தக்க கணவனைத் தேடிப் பிடிப்பதற்காகப் பெற்ருேர் எவ்வளவோ சிரமம் எடுத்துக் கொண்டிருந்தனர். இதுவரை ஒன்றும் சரியாக அமையவில்லை. இந்நிலைமையில் ஒரு நாள் காந்திமதி தன்தாயாரிடம், "அம்மா! நீங்கள் வீணுக சிரமப்படவேண்டாம்; தம்பியின் வாத்தியாருக்கு என்னைக் கட்டிக்கொடுத்துவிடுங்கள். வேறு யாரையும் நான் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன்" என்று சொல்லிவிட்டாள்.

வாத்தியார் பையனைக் காந்திமதியின் பெற்ருேர்களுக்கும் பிடித்திருந்தது. அவர்கள் இது விஷயமாக ஏ. கே. சாமியைக் கேட்டார்கள். இன்னெருவர் இன்னெருவராஞல் உடனே வாயைப் பிளந்து விடுவார்க ளல்லவா? குமாரசாமி அப்படிச்செய்ய வில்லை. "எனக்காவது? கலியாணமாவது? கையில் ஒரு காசு இல்லை;

தங்குவதற்குக் குடிசை கிடையாது. பணக்காரவீட்டுப்பெண்ணைக் கலியாணம் செய்து கொண்டு நான் என்ன பண்ணுவது?'' என்றான்.

"அதற்காக நீ கவலைப்பட வேண்டாம். எங்களுக்கு இந்த ஊரில் மூன்று வீடுகள் உண்டு. ஒன்றைக் காந்திமதிக்குக் கொடுத்து விடுகிறோம். உனக்கு சம்பாத்யம் இல்லாமல் போகிற காலத்தில் நாங்கள் கைவிட்டு விடுவோமா?'' என்றார் காந்திமதியின் தகப்பனார்.

குமாரசாமியின் முகவெட்டைக் குறித்து இப்போது என்ன சொல்கிறீர்கள்?

கலியாணமாயிற்று. குமாரசாமியும் காந்திமதியும் புது வீட்டில் குடித்தனம் செய்யத் தொடங்கினார்கள். முனிசிபாலிடியார் கொடுத்த சம்பளம் அச் சிறு குடும்பத்துக்குப் போதுமாயிருந்தது. அதிகப்படி செலவு ஏற்பட்டபோது காந்திமதியின் பெற்றோர்கள் கொடுத்து உதவிவந்தார்கள்.

சில காலம் வரையில் அவர்களுடைய இல்லறம் இன்பகரமாக நடந்து வந்தது. ஆனால் ஒருநாள் முனிசிபல் வரிவசூல் சேவகன் வந்து, "காந்திமதியம்மாள் யாரு? வீட்டுவரி கட்டவேண்டும்'' என்று குமாரசாமியிடம் கேட்டபோது, தெள்ளிய பாலில் சிறிது நஞ்சைக் கலந்ததுபோல் அவன் உள்ள நிறைவில் கள்ளம் புகுந்தது. ஆண்பிள்ளையாகிய தான் இருக்கும்போது தன் மனைவின் பேரைச் சொல்லி வரி கேட்டது அவனுக்குப் பிடிக்கவில்லை. வெறுப்புடன், "உள்ளே போய் ஜமீன்தாரிணியைக் கேள்'' என்றான். இந்த வார்த்தை, என்ன விஷயமென்று பார்க்க வந்து நடையில் நின்று கொண்டிருந்த காந்திமதியின் காதில் விழுந்தது.

காந்திமதி மகா புத்திசாலி. குமாரசாமியின் மன நிலைமை எப்படியிருக்கிறதென்பதை உடனே கண்டு கொண்டாள். அன்றிரவு குமாரசாமி சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது, "இந்த வீடு என் பேரிலிருப்பது எனக்குப் பிடிக்கவே இல்லை. நீங்கள் இருக்கும் போது என் பேரைச்சொல்லி ஏன் ஒருவன் வரி கேட்கவேண்டும்? கொஞ்சங்கூட நன்றாய் இல்லை. உங்கள் பேரில் மாற்றி விட்டு மறு காரியம் பாருங்கள்'' என்றாள். குமாரசாமி இதற்கு எத்தனையோ ஆட்சேபங்களைச் சொன்னான். ஒன்றும் பலிக்கவில்லை. வீட்டை அவன் பெயருக்கு மாற்றித் தஸ்தவேஜி நடந்தேறியது. காந்திமதியின் விருப்பத்துக்கு அவள் பெற்றோர்களும் குறுக்கே நிற்கவில்லை.

## 3

ஏ. கே. சாமியினுடைய முகவெட்டின் சரித்திரத்தில் இப்போது ஒரு புது அத்தியாயம் ஆரம்பமாகின்றது. இதுகாறும் அவன் அதனால் நன்மையே அடைந்து வந்தான். இப்போது அவனுக்கு அதனால் நேர்ந்த விபத்தை விவரித்தல் எனது வருந்தற்குரிய கடமையாகிறது. உலகில் துன்பம் இல்லாத இன்பமும், துக்கம் சேராத சுகமும், தீமையே இல்லாத நன்மையும் கிடையா என்று ஆன்றோர் கூறியுள்ளார் அன்றோ?

அடுத்த வருஷத்தில் மாரமங்கலம் நகரசபைத் தேர்தல் வந்தது. அபேட்சர்களாக நிற்க விரும்பியவர்கள் மூன்று நான்கு மாதத்திற்கு முன்னலிருந்தே வேலை செய்யத் தொடங்கினர்கள். ஏ. கே. சாமியின் வீடு இருந்த வார்டிற்கு ஒரு லேவாதேவி செட்டியாரும், ஒரு கிழ வக்கீலும் போட்டிபோட உத்தேசித்தார்கள். பாரத யுத்தத்தில் கண்ணனுடைய உதவியை நாடி, துரியோதனன் அர்ச்சுனன் இருவரும் சென்றதுபோல், மேற்படி அபேட்சர்கள் இருவரும் ஏ. கே. சாமியிடம் வந்தார்கள். அந்த வார்டில் தங்களுடைய தேர்தல் ஏஜண்டாக அவர் வேலை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்கள்.

ஏ. கே. சாமி அன்று சாயங்காலம் தன் நண்பர்களோடு பேசிக் கொண்டிருந்த போது இதைப்பற்றிப் பிரஸ்தாபித்தான். அவர்களில் ஒருவன், "ஏன் சாமி! பிறத்தியாருக்குப் போய் நீ ஏஜண்டாயிருந்து வேலை செய்வானேன்? நீயே ஏன் தேர்தலுக்கு நிற்கக் கூடாது?" என்று கேட்டான். "பலே சபாஷ்! சரியான யோசனை" என்று சுற்றிலுமிருந்த நண்பர்கள் முத்தாய்ப்பு வைத்தார்கள்.

"நீங்கள் எல்லோரும் உதவி செய்வதா யிருந்தால் நிற்கிறேன்; பின் வாங்கிவிட மாட்டேன். துணிந்த கட்டைஇது என்பது தான் உங்களுக்குத் தெரியுமே" என்ருன் ஏ. கே. ஸாமி.

"நன்ருயிருக்கிறது. நீ மாத்திரம் நில்லு; எங்கள் வேலை யெல்லாம் போட்டு விட்டு இதே காரியமாகப் பார்க்கிறோம்" என்ருன் முதலில் பேசியவன். அதையும் மற்றவர்கள் ஆமோதித்தார்கள்.

"அப்படியானல் ஜமாய்த்து விடுவோம்" என்ருன் ஏ. கே. சாமி. தான் தேர்தலுக்கு நின்ருல் நிச்சயமாய் ஜயிக்கலாம் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. ஆரம்ப உபாத்யாயர்களின் சங்கத்திற்குப் பல வருஷகாலம் காரிய தரிசியாயிருந்த பழைய

பெருச்சாளியுடன் போட்டியிட்டு மிகப் பெரும்பான்மையான வாக்குகளால் அவரை முறியடித்துத் தான் வெற்றி பெறவில்லையா?

ஆரம்ப ஆசிரியர் சங்கத்தின் அடுத்த மாதாந்தக் கூட்டத்தில் ஏ. கே. சாமி தன் உத்தேசத்தைத் தெரிவித்தான். எல்லாரும் அவனை உற்சாகப்படுத்தி, தாங்களும் தேர்தலின் போது உதவி செய்வதாக வாக்களித்தார்கள்.

## 4

ஏ. கே. சாமியின் நியமனச் சீட்டு அனுப்பப் பெற்ற போது ஒரு பெரிய தடை குறுக்கிட்டது. "நகரசபையின் கீழ் ஊழியம் பார்ப்பவர்கள் தேர்தலுக்கு நிற்கக் கூடாது" என்று ஒரு விதி இருப்பது தெரியவந்தது. சாமி பெரிய சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டான். வாத்தியார் வேலையை ராஜீனமா செய்வதா? தேர்தலுக்கு நிற்கும் யோசனையைக் கைவிடுவதா?—இவ்வளவு தூரம் ஏற்பாடு செய்த பிறகு பின் வாங்குவது மானக்குறைவாகத் தோன்றியது. "இது என்ன கொள்ளைப்பயல் உத்யோகம்? மாதம் ரூ. 24-8-0 வாங்கிப் பெட்டியில் போட்டுப் பூட்டுகிறு யாக்கும்? முனிசிபல் கௌன்சிலராகிவிட்டால் அப்புறம் எத்தனையோ வழிகளில் சம்பாதிக்கலாம்" என்று நண்பர்கள் யோசனை சொன்னார்கள்.

மறுநாள் கால் கடுதாசியில் ஏ. கே. சாமியின் ராஜீனமாக் கடிதம் போயிற்று. ஊரெல்லாம் இதே பேச்சாயிருந்தது. தேர்தல் வேலை தொடங்குவதற்கு இந்த விளம்பரம் மிகவும் உபயோகமானதல்லவா? வாக்கு வேட்டை தொடங்கியதும் மற்றொரு இடையூறு குறுக்கிட்டது. என்ன தான் முகவெட்டும், நண்பர்களின் உதவியும் இருந்தாலும், சில்லரைச் செலவுகளுக்குப் பணமில்லாமல் காரியம் நிறைவேறாது என்று தெரியவந்தது. பணம் கொடுத்து ஓட்டு வாங்கும் உத்தேசம் என்னவோ இல்லை. ஆனால் சுவர் விளம்பரங்கள், துண்டுப் பிரசுரங்கள் அச்சடிப்பதற்கும், வண்டிச் சத்தத்துக்கும், காபி கிளப், கள்ளுக் கடைச் செலவுக்குமாவது பணமில்லாமல் என்ன செய்ய முடியும்? முந்நூறு நானூறு ரூபாயாவது வேண்டும்.

"என்னபிரமாதம், சாமி! கடன் வாங்கிக் கொண்டால் போகிறது. சேர்மன் பதவிக்கு இரண்டு பலத்த கைகள் போட்டி போடப்போகிறார்கள். போன தேர்தலில் ரூ. 2,000 கலகலவென்று கொட்டவில்லையா? நடத்து காரியத்தை!" என்றார்கள் நண்பர்கள்.

லேவாதேவி செட்டியாருக்கு விரோதி செட்டியார் ஒருவர் மாரமங்கலத்தில் இருந்தார். அவர் ஏ. கே. சாமியின் வீட்டைப் பந்தக

மாக வைத்துக் கொண்டு 300 ரூபாய் $1\frac{1}{4}$ வட்டிக்குக் கடன் கொடுத்தார். தேர்தலில் எதிரியைத் தோற்கடித்து விட்டால் வட்டியில்லாமல் முதலை மட்டும் வாங்கிக் கொள்ளவதாக வாக்களித்தார். ஓட்டுப் போடும் தினம் நெருங்கிற்று. வக்கீல் கிழவனுர் தமக்கு 'சான்ஸ்' இல்லையென்று கருதி முதலிலேயே விலகிக் கொண்டு விட்டார். லேவாதேவி செட்டியாருக்கும் ஏ. கே. சாமிக்குந்தான் போட்டி. செட்டியார் பணத்தை வாரியிறைத்தார். ஓட்டு ஒன்றுக்கு ரூ. 10 வீதம் கொடுத்தார். மூன்று கள்ளுக்கடைகளையும், ஐந்து காப்பி ஹோட்டல்களையும் ஒரு வாரத்திற்குத் தனிக் குத்தகையாக எடுத்திருந்தார்.

என்ன தான் அவர் தலை கீழாக நிற்கட்டுமே? ஏ. கே. சாமியின் முகவெட்டுக்கு முன்னுல் அவர் பணம் என்ன செய்யும்? மேலும் ஸ்ரீமதி காந்திமதியம்மாள் வீடு வீடாய்ச் சென்று தன் புருஷனுக்கு ஓட்டுப் போடும்படி கேட்ட பின்னர், தேர்தல் முடிவைப்பற்றி என்ன சந்தேகமிருக்க முடியும்?

செட்டியாரிடம் பணம் வாங்கிக் கொண்டவர்கள் அவருடைய வண்டியில்போய், அவருடைய செலவில் காப்பி சாப்பிட்டுவிட்டு ஏ. கே. சாமிக்கு ஓட்டுச் செய்துவிட்டுத் திரும்பினுர்கள்.

தேர்தலுக்கு மறுநாள் இரட்டை நாயனம், தஞ்சாவூர் பாண்டு முதலிய வைபவங்களுடன் ஏ. கே. சாமி மோட்டாரில் ஊர்வலம் வந்தார். "ஏ. கே. சாமிக்கு ஜே! செட்டியாருக்குக் கோவிந்தா" என்ற கோஷம் வானத்தை அளாவிற்று. இந்தத் தேர்தல் விஷயத்தில் முன்னுலெல்லாம் அவ்வளவு திருப்தியாயிராத சாமியின் மாமனுர் மாமியார் கூட அன்று அளவில்லாத மகிழ்ச்சி யடைந்தவர்களாய் மாப்பிள்ளைக்கு ஆலாத்தி நீர் சுற்றிக் கொட்டி திருஷ்டி கழித்தார்கள் என்ருல், வேறென்ன சொல்ல வேண்டும்? தங்கள் பெண்ணையும்கூட உட்காரவைத்து ஊர்வலம் விடவில்லையே யென்றுமட்டும் அவர்கள் மனதில் ஒரு சிறுகுறை இருந்தது.

## 5

நாளையதினம் முனிசிபல் கௌன்சில் சேர்மன் பதவிக்குத் தேர்தல். இன்றிரவு ஏ. கே. சாமியின் வீட்டில் அவனும் அவனுடைய நண்பர்களும் உட்கார்ந்து ஆவலுடன் வாசற்புறத்தை நோக்கிக்கொண்டிருந்தார்கள். சேர்மன் பதவிக்கு நின்ற இருவரில் யாருடைய ஆள் முதலில் பணத்துடன் வரப்போகிருன் என்பது

தான் அவர்களுடைய கவலை. ரூ. 2000 முதலில் யார் கொண்டு வருகிறார்களோ அவர்களுக்கு ஏ. கே. சாமியின் ஓட் என்று தீர்மானிக்கப்பட்டிருந்தது. நேரமாக ஆக அவர்களுடைய பரபரப்பு அதிகமாயிற்று.

இரவு ஒன்பதரை மணிக்குத் துப்பு விசாரிப்பதற்காக அனுப்பியிருந்தவன் வந்து சேர்ந்தான். எட்டுமணி சுமாருக்குச் சோமநாத முதலியார் இன்பசாகரம்பிள்ளை வீட்டிற்கு வந்ததாகவும், இருவரும் ஒரு மணி நேரம் இரகசியமாகப் பேசிக்கொண்டிருந்தபின் முதலியார் திரும்பத் தம் வீட்டிற்கே போய் விட்டதாகவும் சொன்னான்.

இந்தச் செய்தி அவர்கள் தலையில் ஒரு பெரிய பாறங்கல்லைத் தூக்கிப் போட்டாற்போலிருந்தது. "அடே மோசம் போய் விட்டோமடா!" என்றான் ஒருவன். "இரண்டு நரிகளும் கூடிச் சூழ்ச்சி செய்துவிட்டதடா !" என்றான் இன்னொருவன். மேலே என்ன செய்வதென்பதைப் பற்றி யோசிக்கலானார்கள். இரவு பன்னிரண்டு மணிவரையில் மூன்று கவுளி வெற்றிலை, அரை வீசைப் பாக்கு, ஒரு கத்தை புகையிலை, ஏழு பாக்கட் சிகரட் இவைகளை ஒழித்த பிறகும் ஒரு முடிவுக்கும் வர முடியாமல் தூங்கச் சென்றார்கள்.

மறுநாள் புதிய நகர சபை கூடியதும் ஸ்ரீமான் சோமநாத முதலியாரே எழுந்து, இன்பசாகரம் பிள்ளையைச் சேர்மன் பதவிக்குப் பிரேரணை செய்தார். வேறு போட்டி அபேட்சகர் இல்லாதபடியால் பிள்ளைவாள் ஏகமனதாய், கரகோஷத்துடன் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஏ. கே. சாமியின் முகத்தில் ஈ ஆடவில்லை. அச்சமயம் அவன் எழுந்து தானே சேர்மன் பதவிக்குப்போட்டி போட முன்வரவில்லையென்பது, அவனது அளவிலாத மனோ உறுதிக்கு அசைக்க முடியாத அத்தாட்சியாகும்.

உண்மை என்னவென்றால், மாரமங்கலத்தில் சோமனாத முதலியாரும் இன்பசாகரம் பிள்ளையுந்தான் பெரிய மனிதர்கள். அநேக தேர்தல்களில் போட்டி போட்டுப் பெற்றோர் தேடிவைத்த ரொக்கப் பணத்தை எல்லாம் தொலைத்துக் கடனாளியான மிராசுதார்கள். கடன் தொல்லை மிகுந்து நெல்விலையும் வீழ்ந்து போகவே, அவர்களும் புத்திசாலிகள் ஆகிவிட்டார்கள். தங்களுக்குள் போட்டியிடுவது கூடாதென்றும், ஒருவர் நகர சபைச் சேர்மன் பதவிக்கும், மற்றொருவர் அந்தத் தாலுக்கா போர்டு தலைவர் பதவிக்கும் நிற்பதென்றும், ஒருவரை ஒருவர் ஆதரிப்பதென்றும் தேர்தலுக்கு முன்னிரவு தீர்மானித்துக் கொண்டார்கள். இவ்வாறு ஏ. கே. சாமியின்

முகவெட்டும், அவன் கையிலகப்படாத வேறு சந்தர்ப்பங்களும் சேர்ந்து அவனைச் சந்தியில் நிறுத்திவிட்டன. வாத்தியார் வேலை போயிற்று ; வீட்டின் மேல் ரூ. 300|- கடனாயிற்று ; இவை நஷ்டம். நகர சபை மெம்பர் என்ற பெயர் லாபம். குப்பை வண்டிக்காரர்களையும், கக்கூஸ் தோட்டிகளையும் அதிகாரம் செய்ய லாம். ஆனால் இந்த அதிகாரம் வீட்டில் சோறுபோடுமா ?

## ௬

மேற் கூறிய சம்பவங்கள் நடந்து கொஞ்சகாலம் ஆகின்றது. இப்போது மறுபடியும் ஏ. கே. சாமி ஆரம்பப் பாடசாலையில் உபாத்யாயரா யிருக்கின்றான். நகர சபை மெம்பர் பதவியை ராஜீனமா செய்து விட்டான். வீட்டைத் திரும்பவும் தன் மனைவி பேருக்கே எழுதிக் கொடுத்துவிட்டான். அதன் பேரிலிருந்த கடனை அவன் மாமனார் ஒப்புக் கொண்டு தீர்த்துவிட்டார். இப் போது அவனுடைய வாழ்க்கை மிக்க நிம்மதியாக நடந்து வருகிறது.

ஆனால் முனிசிபல் சேர்மன் இன்ப சாகரம் பிள்ளை இன்று அவனிடம் வர வேண்டியதற்குக் காரணம் என்ன ? பல்லைக் காட்டிக் கொண்டு அவனுடைய தயவை நாடுவதுபோல் பேசவேண்டிய தென்ன ?

காரணமில்லாமல் இல்லை. நாளை நகரசபைக் கூட்டத்தில் அவர் மீது நம்பிக்கையில்லைத் தீர்மானம் வரப்போகிறது. அது சம்பந்த மாக அவனுடைய உதவியைக் கோரித்தான் வந்தார்.

ஆமாம், மிகவும் நெருக்கடியான நிலைமை. முதலியாரின் கட்சியிலும் எதிர்க்கட்சியிலும் ஏறக் குறைய ஓட்டுகள் சமமா யிருந்தன. ஒரு ஓட்டைப் பற்றித்தான் சந்தேகம். இந்த ஓட்டு முதலியாருக்குக் கிடைத்தால் நம்பிக்கையில்லாத் தீர்மானம் அடி பட்டுப்போகும். இந் நிலைமையில் கேவலம் ஓர் ஆரம்பப் பாடசாலை உபாத்யாயரிடம் சேர்மன் முதலியார் பல்லைக்காட்டிக் கெஞ்சுவது ஆச்சர்ய மில்லையா ?

அதிலும் ஏ. கே. சாமி இப்போது முன்போல் இல்லை. லஞ்சங் கொடுத்து அவனை விலைக்கு வாங்கமுடியாது. தேர்தல்களைத் தூய்மைப் படுத்துவதை அவன் தனது வாழ்க்கையின் முக்கிய நோக் கங்களில் ஒன்றாய்க் கொண்டிருந்தான். ஓட்டு சம்பந்தமாகப் 'பணம்' என்ற வார்த்தையைக் கேட்டாலே அடிக்க வந்து விடுவான்.

எல்லாம் சரிதான்; ஆனல் இதென்ன சம்பந்தமில்லாத பிதற்றல்? அவன்தான் இன்று நகரசபை மெம்பர் இல்லையே? கேவலம் ஓர் உபாத்யாயர்தானே? அவனுடைய உதவியால் சேர்மனுக்கு என்ன ஆகக்கூடும்?

அவன் மெம்பர் இல்லையென்பது உண்மையே. ஆனாலும் நகர சபையில் ஒரு ஓட்டு இப்போதும் அவன் கையிலிருந்தது. இன்று அவனுடைய ஸ்தானத்தில் அவனுடைய தர்ம பத்தினி ஸ்ரீமதி காந்திமதியம்மாள் நகர சபை மெம்பராயிருந்தாள்!

# பத்தருக்குப் பத்து வேலி

டி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரி

பல வருஷங்களுக்குமுன் பல்வளம் நிரம்பிய தென்னாட்டில் இறையூர் என்ற ஊரைத் தலைநகராகக்கொண்டு, மக்களேறு எனப் பெயரிய அரசன் செங்கோல் சுணங்காது அரசு செலுத்திவந்தான். அவன் பலவகைக் கலைவாணர்களையும் மனமகிழ்ந்து போற்றி வந்தான். அவ்வூரில் கலைக்களிறு என்றதட்டான் ஒருவன் இருந்தான். அவன் அரசன் கோயில்வேலைகளை மிக்க நம்பிக்கையுடனும் நயமாகவும் செய்துவந்தான். அவனுக்கு, பொன்னன், பொன்னழகன், பொன்வண்ணன், பொன்னூரன் என நான்கு புதல்வர்கள் இருந்தனர். கலைக்களிறுக்கு வயது அறுபதாய்விட்டது. இக்காலத்திற் போல, அக் காலத்திலும் முதியவர் அரசாங்கவேலையை இத்தனை வருஷங்களுக்கப்பால் புரிதல் கூடாதென்னும் கட்டுப்பாடிருந்தது. எனவே, அவன் தன் புத்திரர்களுள் ஒருவனையே தான் பார்த்துவந்த வேலையில் அமர்த்த எண்ணங்கொண்டான். ஒருநாள் இரவில், தண்கதிர்ச்செல்வன் தன் எல்லா வொளியையும் ஒருங்கு சேரப்பொழிந்து மக்களையும் மாக்களையும் இன்பக் கடலில் மூழ்கச் செய்துகொண்டிருக்குங்கால், கலைக்களிறு தன் அருமைப்புதல்வர்களை யழைத்துத் தன்னருகிருத்தி அன்புடன் கூறத் தொடங்கினான் :—

"அருமைப் புதல்வர்களே ! நான் தற்சமயம் முதுமை மிக்கோனாயினேன். இனி, யான் அரண்மனை வேலைகளை இயற்றுதல் அரிது. எனவே, உங்களுள் ஒருவனைத் தகுதி நோக்கி, அதற்கென ஒரு பரீக்ஷை நடத்தி என் இடத்தில் அமர்த்த வேண்டும். ஆதலின் நீங்கள் தங்கள் தங்கள் தொழில் திறத்தை எடுத்துக் கூற வேண்டும்'' என்றான்.

வடமொழியில் பொற் கொல்லற்கு 'பச்யதோஹர:'* என ஒரு பெயருண்டு. எனவே அம் மரபினர் வேலை செய்ய ஒரெடைப் பொன்னைப்பெற்றால் அதிற் சிறு கூற்றையேனும் பிறர் அறியாவாறு

---

* இதன் பொருள் 'பார்த்துக்கொண்டிருக்கும்போதே பார்ப்பவர் அறியாவாறு கவர்வோன்' என்பதாம்.

தம்வயப்படுத்திக்கொள்ளும் திறனுடையரல்லரேல் அவர் கலாவிற்பன்னராக அக்காலத்தில் அம்மரபினருள் கருதப்பட்டாரல்லர். அதை யனுசரித்து முதற் புதல்வன், "கொடுத்த பொருளில் காற்பங்கையே தன்வயப்படுத்தும் திறமை எனக் குளது" என்றான். முறையே இரண்டாமவனும் மூன்றாமவனும் அரை முக்காற்பங்குகளைத் தம்வயமாக்கும் தத்தம் திறமைகளை எடுத்துரைத்தனர். நான்காமவன் கொடுத்ததைச் சிறிதுகூடவிடாமல் தன்வயமாக்கும் தன் திறனைமெல்லிய குரலில் காதோடுகாது வைத்துத் தன் தகப்பனிடம் சொன்னான். நான்காமவன் சொல்லைக்கேட்டு வியப்பும் மகிழ்ச்சியும் கொண்ட கலைக்களிறு 'இவனே நம் இடத்தில் நமக்குப் பிறகு அமர்ந்து பணிபுரியவல்லவன்' என மனதில் நிச்சயித்தான். எனவே அரசனிடம் சென்று, "அரசே! என்னுடைய நாலாம் புதல்வனே எனக்குப்பின் நும் கோயில் திருப்பணியியற்ற வல்லவன்; அவனையே தாங்கள் ஏற்றல் வேண்டும்" எனப் பகர்ந்தான். முதல் மூவரையும் கடந்து நாலாமவனைத் தகுதியுடையவனெனக் கூறியதைக் கேட்ட அரசன், காரணத்தை வினவ, கலைக்களிறு புதல்வன் கூறியதைக் கூறினான். இதைக் கேட்டு அரசனும் வியப்புற்று இதை நன்கு பரீக்ஷிக்கவேண்டும் என்றான். கலைக்களிறும் அதற்கிணங்கவே மற்றொரு நன்னாளில், அரசன் பொன்னாரனை அழைத்து, "பத்தரே! யான் இவ்வூர்த் தேவாலயத்தில் கோயில்கொண்ட சிவபிரானுக்கு நூறுபொன் எடையுள்ள தங்கக்குடமொன்று செய்வித்து அபிஷேகம் செய்ய வேண்டிக் கொண்டுள்ளேன்; அதை நீவிர் செய்து முடிப்பீராக" என்று கட்டளையிட்டான். அவன் "அங்ஙனமே" என விடை பகர்ந்து வேலைபுரியத் தொடங்கினான். அரசன் பல வீரர்களை உருவிய கத்தியுடன் அவனைச்சுற்றிக் காவல்புரியுமாறும் அவன் ஏதேனும் சிறிது பொன்னை அபகரிப்பினும் வேறு ஏதேனும் பொற்குடப் பணியிற் குற்றஞ் செய்யினும் அவனைக் கொன்றுவிடுமாறும் கடுங்கட்டளை இட்டனன். பொன்னாரன் தினந்தோறும் அரண்மனையில் எவ்விதமான சித்திரவேலை செய்தானோ அதனை அப்படியே மனத்தால் நினைந்து இரவில் தன் வீட்டில் ஒருவரும் அறியாவாறு தனியிடத்தே பித்தளைக்குடமொன்றில் பொறித்து வந்தான். இதனை ஒருவருமறியார். திங்கள் இரண்டு கழிந்தன. வேலையும் ஒருவாறு முற்றுப்பெற்றது. அப்பால் அவன் அரசனை நோக்கி "அரசே! அடியேற் கோரவாவுளது; அதனைமட்டும் இவ்வேலையின் வேதனமாக யான் பெற விரும்புகிறேன்" என்றான். அரசனும் "ஆம், அதனைக் கூறு" எனவே, அவன் "சிறியேன் கைகளால் திருக்குளத்தி

னின்றும் ஒரு குடம் நீர் கொணர்ந்து கோயில் வாயிற்படியில் அபிஷேகம் செய்யவேண்டுமென்பதேயாம்'' என்றான். அதனை அரசன் அநுமதித்தான். அநுமதி பெற்ற அந்நாளே தான் வீட்டில் தனியே செய்த பித்தளைக்குடத்தைப் பொன்னூற் பூசி புஷ்கரிணியில் ஒருவரும் அறியாமல் குறித்த ஓரிடத்தில் அமிழ்த்திவைத்தான். மறுநாள் காவலுடன் குடத்தைக் கொடுத்து "உன் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்'' என்றான் அரசன். குடத்தைக் கையிலேந்திச் சென்ற பொன்னூரன் காவலரும் மங்கலவாத்தியங்களும் தன்னைச் சூழ்ந்துவரத் திருக்குளம் சென்று நீராடித் தூயனாய்ப் புண்ணிய நீரில் மெள்ளப் பொற்குடத்தை யமிழ்த்திப் பித்தளைக் குடத்தை யெடுத்துத் தன் தலையின்மேல் வைத்துக் கோயில் சென்று அபிஷேகம் செய்து கிருதார்த்தன்போல மனமகிழ்ச்சியுடன் அரசன் இல்லத்திற் குடத்தைக் கொண்டு சேர்த்துவிட்டுத் தன்னகம் புக்கான். கோயிலிலும் அரசன் அபிஷேகாராதனைகளை முறையே செய்து முடித்தான். ஒரு திங்கள் சென்றது. அரசன் கலைக்களிற்றை வரவழைத்து "நின் புதல்வன் திறன் எவ்வாறாயிற்று?'' என்றான். "அவன் சொன்னபடியே செய்தான்'' என அவன் விடையளித்தான். "யான் எவ்வளவோ காவல்வைத்துச் செய்திருக்க நின் சொல்லை எப்படி நம்புவது?'' என்றான் அரசன். எனவே "என் புதல்வனே தங்கள் ஐயத்தை யகற்றுவான்'' என்றான் தந்தை. உடனே அவனை அழைத்து வருமாறு அரசன் கட்டளையிட்டான். அவன் தங்கக்குடத்தைக் கையிலேந்திக்கொண்டு வந்து அரசன் திருமுன் வைத்து வணங்கித் தான் செய்த தந்திரத்தை எடுத்துரைத்தான். அதைக்கேட்ட அரசன் அவன் புத்திவன்மையைப் புகழ்ந்து "'பத்தருக்குப் பத்துவேலி' அளித்தேன்'' என்று கூறி அவனையே அவன் தந்தையின் இடத்தில் அமர்த்தினான்.

# சிற்ரேடை

சூடாமணி



## VII

அங்கும் இங்கும் நுழைவேனே.
அழகார் மலர்கள் மிதந்தோட
பொங்கி ஆழ்ந்து வருவேனே.
பொன்னூர் கெண்டை மீனினமும்
தங்க வெயிலில் சிறுமீனும்
தத்திப் பாய்ந்து விளையாடத்
துங்க முத்தாய்த் தெளிந்தோடித்
துலங்கச் சிரித்து வருவேனே.

## VIII

பளிங்கில் வார்த்த நீர்போலப்
பழுதில் சான்றோர் கவிபோலக்
களங்க மில்லா உள்ளத்தைக்
காட்டிக் களித்து வருவேனே,

விளங்கும் நீர்மேல் வெண்ணுரைகள்
மிதந்து செல்லும் அணியாகத்
துளங்கும் ஆடி யென, என்னில்
தோன்றும் நேர்ந்த பொருளெல்லாம்.

IX

எண்ணர் பொருள்கள் தொடர்ந்திடவே
என்னே டிழுத்துச் சென்றந்தத்
தண்ணர் நதியிற் கலந்திடவே
தாவி ஓடி வருவேனே.
மண்மேல் நிலையா மானிடர்கள்
வந்து வந்து போவார்கள்.
மண்மேல் நானே என்றென்றும்
மன்னி யோடிச் செல்வேனே.



# உபாத்தியாயர் பகுதி

## வித்தியாபிவிருத்தி முறைகள்

இரா. கு. நல்லகுற்றுலம் பிள்ளை

1. பண்டை நாளில் நம் நாட்டுக் கல்விப் பயிற்சி மறுமைக்கும், இம்மையில் பலதிறப்பட்ட வாழ்க்கைக்கும் பொருந்தியதாய் இருந்தது. 'ஆயகலைகள் அறுபத்து நான்கினையும்' வளர்த்து உணர்விக்கும் 'அம்மை' கலைமகளாக வணங்கப்பட்டாள். அவ் வித்யாதெய்வம் ஐம்புலன்களுக்கும் இன்பம் தருகின்ற பெண்ணின் உருவத்தையே தனது உருவமாகக் கொண்டது. அது ஈடும் எடுப்பு மற்றது ; அழகு நிறைந்தது. அதன் குளிர்ந்த பார்வையும், வீணு கானமும் பண்டித பாமரர் எவரையும் தம்வயப் படுத்துவன.

2. கல்வி ஒன்றினுலன்றிக் கேள்வி, காட்சி, அநுபவம் இவை களாலும் வித்தியாபிவிருத்தி யாகலாம். அக்கல்வியும் ஏதாவதொரு பள்ளியின் மூலமாகத்தான் பெற்றுக வேண்டுமென்பதில்லை. என்று லும், பள்ளிக் கல்வியே வித்தியாபிவிருத்திக்கு விசேஷக் கருவியாக இருத்தலினுல் பள்ளிக் கல்விமுறையின் குறைகள் வித்தியாபி விருத்தியைப் பெரிதும் பாதிக்கின்றன. ஆகவே தற்காலப் பள்ளி களில் அவைகளை நீக்கித் திருத்தமான முறைகளை அநுசரிக்க வேண் டியது அவசியமாகிறது.

பண்டைக்காலப் பயிற்சி, பிரணவ வழிபாட்டுடனும், தன் படிப்பும் உலகும் நன்றுக வேண்மென்ற தூய நினைப்புடனும், குரு வணக்கத்துடனும், குருவே துணையென்ற உறுதியுடனும் ஒவ்வொரு மாணவனுலும் தொடங்கப்பட்டது. பண்டைக்காலக் குரு சிஷ்ய பாவம் வித்தியாபிவிருத்திக்கும், இம்மை மறுமை வாழ்க்கைக்கும் பொருத்தமாய் இருந்தது ; பண்டைக்காலக் குருவே, இம்மை வாழ்க்கைக்கு ஒரு வீரத்தலைவராயும், உத்தமத் தோழராயும், மறுமை வாழ்க்கைக்கொரு சிறந்த துணையாயும் விளங்கி வந்தார். பண்டைக் குருகுல வாசம் மனே சாந்தியையும், எவ்வுயிரையும் தன்னுயிர் போலப் பேணுந் தன்மையையும், சமுதாய நன்மையில் ஆர்வத்தையும் வளர்த்து வந்தது.

3. ஒருவனுக்கு உலகமெலாம் சித்திக்கினும் அவன் ஆன்ம லாபத்தை இழப்பானுயின் பிறவியின் பயனை இழக்கின்ருன். சமய ஞான போதனை இல்லாதபோது உள்ளம் மலர்ந்து மணப்பதற்கில்

லாமலும், ஒழுக்கமும் சமூகத் தொண்டில் ஆர்வமும் அமைவதற்கும் பலப்படுவதற்கும், சந்தர்ப்பம் வாய்ப்பதற்கில்லாமலும் போகின்றன. இயற்கை அழகிலும், இசையிலும், ஓவியத்திலும் மனதைக் கவியச் செய்யாத கல்வி மனோ சாந்தியைத் தரக்கூடியதன்று. மறுமைக் கன்றி இம்மையிலும், ஊக்கமும் வீரமும் இன்றி ஏதும் சாத்தியமாவதில்லை. 'வறுமையிற் செம்மை' நம் நாட்டைப் போல் வேறெங்கும் மிளிர்ந்ததில்லை. தரித்திர நிலைமையிலும் தம் வாழ்க்கையில் திருப்தியும், தெய்வம் பேணலும், சுற்றந்தழுவலும், எவர்க்கும் உபசாரமும் வேறெங்கும் காண்பதரிது. தற்காலக் கல்வி அவைகளையும் கெடுத்து வருகிறது. சுருங்கச் சொல்லின், தற்காலக் கல்வி, அநேகமாய்த் தெய்வத்திற்கே இடந்தராததாய், ஆன்ம ஞானமற்றதாய், ஒழுக்கத்தின் உயர்வைக் கருதாததாய், வீரம் போற்றாததாய், விசாலமான அறிவைப் புகட்டுவதாயில்லாமல் ஏதேனும் ஒருபடியாய் வளர்ந்து செல்வதாய், ஜடஉலகத்தையே போற்றுவதாய், குறுகிய அறிவையும் தன்னலத்தையும் வளர்ப்பதாய் இருக்கக் காண்கிறோம்.

4. நம் நாட்டில் ஜாதி சமயபேதங்கள் பலவாக இருப்பதனால் சமய ஞானபோதனை சாத்தியமில்லையென்று கருதுவதற்கு இடமில்லை. எச் சமயத்திலும் ஊடுருவிச் செல்லும் சிறந்த கருத்துக்களையும் அந்த அந்தச் சமயத்திற்கே உரிய கருத்துக்களையும் சமரசபாவமாய்ப் போதிப்பது சிரமமான காரியமல்ல. அதுபோன்றே எவரும் போற்றும் வீரர்கள் பெரியார்கள் முதலியவர்களுடைய சரித்திரங்களையும் அந்த அந்தக் கூட்டத்திற்கே உரிய பெரியார்களின் சரித்திரங்களையும் சொல்வதும் சாத்தியமான காரியமே. சமூக ஊழிய வேலைகளில் உபாத்தியாயர்களும், வயதுவந்த மாணவர்களும் ஈடுபடலாம். சாரணப்படைகள் எங்கும் நிறுவப் படலாம். பண்டை நாள் விளையாட்டுக்களும் தற்காலத்திற்கேற்ப அமைத்து ஆடப்படலாம். அதிகாலையில் தனித்துச் செய்யக் கூடிய தேகப்பயிற்சிகளை வழக்கமாகச் செய்து வரலாம். அதிலும் விசேஷமாகத் தொகுதி தொகுதியாக மாலையிலும் நிலவிலும் ஆடும் விளையாட்டுக்களில் சேர்ந்து ஆடுவதின் மூலம் பலரைத் தம்வழிநடத்தும் திறமையையும், செய்ய வேண்டியது இன்னதென விரைவில் தீர்மானித்துக் கொண்டு அப்படியே செய்யும் சாமர்த்தியத்தையும், சமயமறிந்து தம் தோழர்களுக்கு வேண்டியவற்றைச் செய்து உதவும் திறத்தையும் மாணவர்களுக்குப் புகட்ட வேண்டும். ஜாதி சமயபேதமின்றி ஒரே குறிக்கோளைக்கொண்டு காரியங்களை நடத்துவதில் ஆர்வமுடைய தோழர்களாக இருந்து வருவது மாணவர்களுக்கு அவசியமா

கும். உயர் கலாசாலைமாணவர்கள் இராணுவப் பயிற்சி பெறுவதும் ஓர் ஒழுங்கிற்கு உட்பட்டு நடப்பதற்குச் சாதகமாகும். பள்ளிமாணவர்களன்றி மற்றும் பாலியர்களும், வயது வந்தவர்களும் விளையாடுவதற்குச் சௌகரியமாகக் கிராமங்கள்தோறும் பொது இடங்கள் சிலவும், பட்டணங்களில் பொது இடங்கள் பலவும் இருத்தல் வேண்டும். எங்கும் இயற்கை அழகையும், புஷ்பங்களின் கண்கவர் வனப்பையும், மணத்தையும், இசையையும், ஓவியத்தையும் எவரும் அநுபவிப்பதற்குப் போதிய வசதிகளிருத்தல் வேண்டும்.

5. இயற்கை அழகும், இலக்கியமும் போன்று தம்மளவிலேயே இன்பந்தரும் இசையிலும், சிற்பத்திலும், ஓவியத்திலும், எவரும் ஈடுபட வேண்டியது அவசியமாகும். ஆகவே எல்லா ஆரம்பக்கல்விச் சாலைகளிலும் களிமண் முதலியவற்றால் உருவம் செய்தலும், சித்திரம் வரைதலும், வர்ணம் தீட்டலும் கற்பிக்கப் படவேண்டும்.

6. நம் நாடு வியவசாய நாடு; வியவசாய விருத்தியைக் கொண்டே பெரிதும் பிழைக்கக் கூடிய நாடு. மற்றத் தொழில்கள் அநேகமாய் வியவசாய விருத்தியால் விருத்தியாகக் கூடியனவும், வியவசாய முயற்சிக்கு அநுகுணமாக இருக்கக் கூடியவையுமன்றித் தத்தம் அளவிலேயே பெரிதும் பயன் தருவன அல்ல. ஆகவே நாட்டின் கல்வி வியவசாய விருத்திக்கு ஏற்றதாயும், கல்வி பயில்வாரிற் பலரை வியவசாய முயற்சிகளிலேயே ஈடுபடச் செய்வதாயும் இருத்தல் வேண்டும். ஆனால் தற்காலக் கல்வியோ, மாணவர்களைத் தங்கள் முன்பின் வாழ்க்கைச் சுற்றுப்புறத்தினின்றும் பிரித்துத் தங்கள் நிலைமைக்கு அதிகமான செலவில் சுக வாசிகளாக்கத்தக்க வேண்டாப் புதிய பழக்க வழக்கங்களைக் கொடுத்துத் தங்கள் குலத்தொழிலில் விருப்ப மற்றவர்களாகவும், சேவகாவிர்த்தியையன்றி வேறு எத்தொழிற்கும் பயன்படாதவர்களாகவும் அவர்களை ஆக்கிவிடுகிறது. சர்வகலாசாலைப் பட்டதாரிகளுக்கும், சாதாரணமாக மற்ற ஜனங்களின் நிலைமை இன்னதென்பதும், அவர்களுக்குத் தாங்கள் என்ன என்ன வகையில் உதவலாமென்பதும் தெரிகிறதில்லை. அவர்களுடைய படிப்பு வியவசாய விருத்திக்கும் கிராம வாழ்க்கைக்கும் முற்றிலும் பொருந்தாததாகவேயிருக்கிறது.

7. தற்காலக் கல்வி, பெரும்பான்மை சர்க்கார் உத்யோகத்தை எதிர்பார்த்துப் பயிலப்படுகின்றதாயினும், கல்விச் சாலைகள் அதைத் தங்கள் நோக்கமாகக் கொண்டதுமில்லை; அந்த நோக்கத்திற்கும்

அவை சரிவரப் பொருந்தியனவாயுமில்லை. இது பற்றியே வேறு தனிப் பரீக்ஷைகளில் தேறுகிறவர்களை மட்டும் சர்க்கார் உத்யோகங்களுக்கு எடுத்துக் கொள்வதாயிருக்கிறது. அப்படி சர்க்கார் உத்யோகம் பெறுபவர்களும் தங்கள் முன் வாழ்க்கையின்றும் அறவே பிரிக்கப்பட்டவர்களாகவும், பட்டணவாச விருப்பம் தவிர, வேறு எவ்வித வாழ்க்கை லக்ஷியமில்லாதவர்களாகவுமே காணப்படுகிறார்கள். தற்காலக் கல்வி பயின்றவர்களுக்குச் சர்க்கார் உத்யோகங்களும் கிடைக்காது போகும்போது அவர்கள் எதற்கும் உதவாக் கழியாகப் பணத்தைச் செலவழித்துப் படித்துப் பட்டினி கிடந்து சாகிறவர்களாக ஜன சமூகத்தில் நின்று தவிக்கும் காட்சி பரிதாபகரமாகவே இருக்கிறது.

8. மாணவர்களும் உபாத்தியாயர்களும், முக்கிய வியவசாய காலத்தில் தங்கள் தங்கள் கிராமத்திலேயே இருக்கக் கூடியதாகவும் தங்கள் வியவசாய வேலைகளைத் தாங்களும் நேரிற் கவனிக்கக் கூடியதாகவும் கல்விச்சாலை விடுமுறை நாட்கள் அமையவேண்டும். வியாபாரக் கலாசாலைகள் தவிர்த்த மற்ற எல்லாக் கலாசாலைகளுக்கும் நவம்பர், டிசம்பர், ஜனவரி, மாதங்கள் விடுமுறையாக இருக்கலாம். மற்ற நாட்களிலும் அக்கம் பக்கம் வியவசாய வேலைகளுக்குத் தக்கதாகப் பள்ளிக்கூட நேரங்கள் அமைக்கப்படலாம்.

9. ஆரம்பக் கல்விச்சாலைகளிலும், 6-வது பாரம் முடியவுள்ள உயர்தரப் பாடசாலைகளிலும் பயிலும் படிப்பு, பின் வாழ்க்கைக்குப் பிரயோசனமாயிருக்கும்படி செய்தாலொழிய, இரண்டொரு வகுப்புக்களோடு படிப்பை நிறுத்திக்கொள்ளும் வழக்கம் நிற்பது கஷ்டமாகும்; ஆகையால் அவைகளில் இயற்கைப் பொருட்பாடமும், தோட்ட வேலையும், ஆரம்ப சாஸ்திரமும் அவசியம் கட்டாயப் பாடங்களாக இருத்தல் வேண்டும். எண்ணும் எழுத்தும் வாழுமுயிர்க்கு இருகண் ஆகுமாதலால் அவைகளில் ஆரம்பக் கணிதமும் நாட்டு இலக்கியமும் கட்டாயப் பாடங்களாக இருத்தல் வேண்டும். எந்த வகுப்பிற்கும் நாட்டிலக்கியப் பயிற்சியோடன்றி வேறெந்த இலக்கியப் பயிற்சியும் தனித்து இருக்கக் கூடாது. ஆரம்பக் கணிதமும் கூடியவரை வியவசாயத்தை ஒட்டியதாக இருத்தல் வேண்டும். காட்டும் படங்களும், சொல்லும் கதைகளும், வியவசாய வாழ்க்கையைப் பற்றியும், மரஞ்செடி கொடிகளைப் பற்றியும், ஆடு மாடுகளைப் பற்றியும், மிகுதியாக இருக்கலாம். ஏகதேசம் மாணவர்களைத் தோட்டம், தோப்பு, துறவுகளுக்கும், நஞ்சை புஞ்சைகளுக்கும், ஆறு குளங்களுக்கும் கூட்டிப்போய் வியவசாயமுறைகளை விளக்கிக் காட்டலாம். பெற்றோர்களுக்கும் மற்றும் வயது வந்தவர்களுக்கும்

மழைக்குணம் அறிதலையும் பிற வியவசாய விஷயங்களையும் போதிக்கலாம். வாசக புஸ்தகங்களிலும் வியவசாய விருத்திக்கான விஷயங்களும், இயற்கை விநோதங்களும், சரீர அமைப்பு, சுகாதாரம், முதலுதவிபோன்ற பல பிரயோசனமான விஷயங்களும் விரவியிருத்தல் வேண்டும். பாலியமாணவர்களுக்குப் போதிக்கும் உபாத்தியாயர்கள் மாணவர்களின் மனோ நிலைமை கண்டு அவரவர்கள் திறமைக்குத் தக்கதாகக் கற்பிக்கும் சாமர்த்தியம் உடையவர்களாக இருத்தல் வேண்டும். கையெழுத்தும், நல்ல உச்சரிப்பும், பிசகின்றி எழுதலும் எவர்க்கும் தக்க துணையாகப் பின்வாழ்க்கையில் உதவக்கூடும். ஆதலால் பாலியம் முதற்கொண்டே இவைகளில் கவனம் செலுத்தி வரவேண்டும்.

10. வியவசாயிகள் தங்கள் தீராத் தரித்திரத்திற்குக் காரணம் அறியாராய், எல்லாம் விதிபோல் நடக்குமென்றிருக்கிறார்கள். அவர்கள் தங்களுக்கு வரும் கஷ்டங்களைத் தவிர்த்து தங்களை நல்ல நிலைமைக்குக் கொணரும் வழிகளை அறிந்திருப்பதாகத் தோன்றவில்லை. அறிந்தாலும், அவைகளை அநுஷ்டானத்திற்குக் கொண்டு வருவாருமில்லை. பாலியத்தில் புகட்டப்படும் விஷயங்களே பின் வாழ்க்கையைத் தன் வயமாக்குகிறதென்ற அபூர்வ தத்துவமுணர்ந்த பெரியார்கள் எல்லாம் தங்கள் தங்கள் நாட்டை எவ்வகையாகத் திருப்ப விரும்புகிறார்களோ அத்தகையதான கல்வியையே தங்கள் நாட்டில் பெரிதும் புகட்டுகிறார்கள். நம் நாட்டிலும் கல்வி இலாகாத் தலைவர்கள் நம் நாட்டினராகவும், நம் நாட்டின் நிலைமையையும் பிற்கால வாழ்க்கை அமைய வேண்டிய மாதிரியையும் நன்கு தெரிந்தவராகவும் இருந்திருப்பார்களானால், இதுவரையில் கல்விப் பயிற்சி நல்ல விதமாக மாறி யிருத்தல் கூடும். இனிமேலும் அவ்விதம், அமையாத வரையில் நம் நாடு க்ஷேமமடையும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை.

11. சென்னைக் கவர்னராக இருந்த சர் தாமஸ் மன்ரோ மாணவர்கள் நாலணா முதல் எட்டணாவரை பள்ளிச் சம்பளம் தருகிறார்கள் என்றும், அந்த வகையில் கிராம உபாத்தியாயர்களுக்கு ரூபாய் ஏழுவரை கிடைக்கக் கூடுமென்றும், சர்க்காரிலிருந்து அவர்களுக்கு மாதம் ஒன்பது ரூபாயாவது சம்பளம் கொடுக்க வேண்டுமென்றும் 1826-ம் ஷு எழுதிய தமது குறிப்பொன்றில் எழுதி யிருக்கிறார். இப்போதுள்ள கால நிலையை உத்தேசிக்கும் போது ஆரம்பப் பள்ளி ஆசிரியருக்குக் கிடைக்கும் ஊதியம் அவர் சொன்ன தொகையில் நாலில் ஒரு பங்காகக்கூட இருப்பதாகச் சொல்வதற்கில்லை. ஆரம்ப ஆசிரியர்களின் பொதுக் கல்விப் பயிற்சி இன்னும் அதிகப்படியாக இருத்தலும் வேண்டும்; வேறு எந்த உத்தியோகம் பார்ப்பவர்

களைக் காட்டிலும் போதகாசிரியர்களாக இருப்பவர்களே நிரம்பக் கெட்டிக்காரர்களாக இருக்கவேண்டியது அவசியம். ஆதலால் சம்பளம், ரஜா, படிப்பு வசதி முதலியவைகள் மற்ற உத்யோகங்களுக்கு ஏற்பட்டிருப்பதைக் காட்டிலும், அதிகப் படியாக இருந்தால்தான் நிரம்ப அறிவுடையவர்கள் போதகாசிரியர்களாக வரக்கூடும்.

12. ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் மாணவர்கள் எண்ணிக்கை அதிகமாகிக் கொண்டே வருவதாக இருந்தாலும், படிப்பின்மையின் வீதாசாரம், நாளுக்கு நாள் குறைந்ததாயில்லை; ஜனப் பெருக்கத்திற்குத் தக்கவாறு பள்ளி வசதிகள் அதிகப் படாதவரையில் படிப்பின்மை அதிகரித்துக் கொண்டேதான் வரும். இலவசக் கட்டாயக் கல்வி எங்கும் ஏற்பட வேண்டும். 5-வது வகுப்பு வரையில் கட்டாயம் என்று துவக்கி நாளடைவில் எட்டு வகுப்பு முடியக் கட்டாயம் ஆக வேண்டும். எல்லா ஆரம்பப் பள்ளிகளும், ஸ்தலஸ்தாபனங்களால் நடத்தப்படவேண்டும். செலவை ஸ்தலஸ்தாபனங்கள் ஒரு பங்கும் அரசாங்கம் மூன்று பங்குமாக ஏற்றுக்கொள்ளல் நலம். பரோபகார ஸ்தாபனங்களால் நடத்தப்படும் பள்ளிகள் தவிர்ந்து சொற்ப சர்க்கார் உதவி பெற்று நடக்கும் எந்தப் பள்ளியும் சரிவர நடக்கக் கூடியதன்று. இராணுவத்திற்குச் செலவழிக்கும் பணத்திலும் அதிகமாய்க் கல்விக்குச் செலவழிக்கலாம். அதனுல்அளவிறந்த பிரயோசனமுண்டு.

13. குருடர்களுக்கும், ஊமைகளுக்கும், செவிடர்களுக்கும், அபூர்வ விவேகிகளுக்கும், தனித்தனிப் பள்ளிக்கூடங்கள் போதுமான அளவு இருக்கவேண்டும். ஏதேனும் இரண்டொரு பாடங்களில் மந்தமா யிருப்பவர்களுக்கும் அத்தகைய மந்தத்தை நீக்கிப் போதிப்பதற்கான சௌகரியங்கள் சிற்சில பள்ளிக்கூடங்களிலாவது இருத்தல் வேண்டும்.

14. பள்ளிக்கூடங்கள் சூரிய வெளிச்சம் பாய்வதாய், காற்றோட்டம் உள்ளதாய், குளிர்ந்த கூரையையுடையதாய், தோட்ட வேலைக்கும் விளையாட்டிற்கும் இடமுடையதாய் இருத்தல் வேண்டும், பல பல போதனு முறைகளின் உட்கருத்தும் மாணவர்கள் தாங்களே எதையும் கவனிக்கவும், எதைப்பற்றியும், நினைக்கவும் இப்படிச் செய்வதென முடிவு செய்யவும் பழக்குவதாகவே இருப்பதால், காலதேச வர்த்தமானங்களுக்கும், பள்ளியின் பண நிலைமைக்கும் தக்கவாறு ஏதேனும் இரண்டொரு முறைகளையே அநுசரிப்பதாக இருந்தாலும், பலமுறைகளின் உட்கருத்துகளும் விரவியிருத்தல் வேண்டும். ஆனல் இலக்கணத்தை மீறியதும், கர்ணகடூரமானது

மான 'டப்பி, டமார' முறை எவ்வகையிலும் பொருந்ாது. உபாத்தியாயர்கள் மாணவர்களுக்கு வழி காட்டியாக இருக்கலாமே யன்றித் தங்களுக்குத் தெரிந்ததை யெல்லாம் மூளையில் பலவந்தமாய்த் திணிப்பவராக இருத்தல் கூடாது. எதையும் குருட்டுப் பாடம் செய்வது கூடாதேயன்றி ஞாபக சக்தியை முறையாக வளர்க்க வேண்டியது அவசியமே யாகும்.

15. அதிபாலியப் பெண்களும் வயது வந்த பெண்களும், வேறு தனிப் பள்ளிக்கூடங்களும், வகுப்புகளும், அமையாத போது, ஆடவர்களோடு கலந்து வாசிக்கலாம். இடைத்தரப் பெண்கள் ஆடவர்களோடு எக்காரணத்தை முன்னிட்டும் கலந்து வாசிப்பது உசிதமல்லாத காரியமே யாகும். முகம்மதியர்களுக்கு என்றும், ஆதிதிராவிடர்களுக்கு என்றும், தனித்த பள்ளிகள் அமைப்பதும் வேண்டாத காரியமே யாகும். அவர்கள் இருப்பிடங்களிலும் அவைகளை அடுத்தும், அவர்கள் விரும்பும் பாடங்கள் போதிக்கும் பள்ளிகள் போதுமான அளவு இருக்கவேண்டியது அவசியமேயன்றி அவர்களுக்கெனத் தனித்திருக்க வேண்டியது அவசியமில்லை. அரசாங்கச் செலவில் நடத்தப்படும் அல்லது அரசாங்க உதவிபெறும் எல்லாப் பள்ளிக்கூடங்களும் எவரையும் விலக்குதல் கூடாது.

16. ஆரம்பக் கல்விச் சாலைகளில் கிராமச் செல்வவிருத்தி முறைகளும் கிராம ஸ்தாபன அமைப்பும் அவைகளின் வேலை முறைகளும், போதிக்கப்பட வேண்டும். 3-வது வகுப்பிலிருந்து மாணவர்கள் பிரியம்போல், ஆங்கிலமும், அல்லது சமஸ்கிருதம், ஹிந்தி, உருது, அராபிக், இவைகளில் ஒன்றோ, அல்லது மற்றும் ஏதாயினுமொரு தேச பாஷையோ கற்பிக்கப்படலாம்.

(தொடரும்)




## பூந்தோட்டம்

[இக்கதைத் தென்பாண்டி நாட்டில் ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு விதமாகப் பெண் குழந்தைகளால் விளையாடப் பட்டு வருகின்றது. அத்தகைய விளையாட்டைச் சிறிது கற்பனையோடு சேர்த்து நான் எழுதியிருக்கிறேன்.]

வசந்த காலம்; மாலைப் பொழுது. பள்ளிக்கூடம் முடிந்து விட்டது. உடனே சில பெண்கள் ஆற்றங்கரையோரத்தில் உள்ள பள்ளிக்கூடத்திற்குச் சமீபமான நந்தவனத்தில் விளையாடுவதற்காக மகிழ்ச்சியோடு வருகிறார்கள். தங்கள் ஆசிரியர் கற்பித்துக் கொடுத்த நாடகத்தை ஆடவேண்டுமென்பது அவர்களது ஆசை. வரும் பொழுது,

'ஆத்தங் கரையின் ஓரத்திலே
அருகே யிருக்குந் தோட்டத்திலே
பூத்தி ருக்கும் பூவெல்லாம்
போய்ப் பறிப்போம் நாமெல்லாம்'

என்று பாடுகிறார்கள். தோட்டத்தின் வாசலண்டை வந்ததும் பாட்டு முடிகிறது. எல்லோரிலும் உயரமாக உள்ள ஒரு பெண் தன் கைகளில் பிச்சி, மல்லிகை, மகிழம்பூ, ரோஜாப்பூ, அந்திமந் தாரைப்பூ, முல்லை என்ற ஆறுவகைப் பூக்களை வைத்துக் கொண்டிருக்கிறாள். உடனே வேறு ஏழு பெண்களையும் தன் முன்னாலே முதுகுப்புறத்தைக் காட்டி, இருகைகளையும் பின் புறமாகச் சேர்த்துக் கோத்துக் கொண்டு நிற்கும்படி செய்கிறாள். எல்லோரும் நிற்கிறார்கள். ஒருவரும் திரும்பிப் பார்க்கக்கூடாது. இந்தப் பெரிய பெண், ஒரு பூவைக் கையில் வைத்துக் கொண்டு,

'பூக்கொண்ட கள்ளா ஓடு'

என்று பாடிக்கொண்டே, ஒவ்வொருவர் கையிலும் தொட்டுக் கொண்டே கடைசியாக யார் கையிலாவது வைத்து விடுகிறாள்.

பூவைப் பெற்ற நிமிஷமே அந்தப் பெண் நந்தவனத்திற்குள் ஓடிப் போய்த் தன் கையிலுள்ளது என்ன பூவென்று பார்த்துக் கொள்ள வேண்டும். அதுதான் அவள் பெயர். பிச்சியானால் பிச்சிச்செடி மறைவிலும், மல்லிகையானால், மல்லிகைச் செடி மறைவிலும் ஒளித்துக் கொள்ளவேண்டும். பூவைக் கொடுத்துக்கொண்டு வருகிற வள்,

'கள்ளன் கையில் பூக்கொடுத்தேன்
காவல்காரா, பத்திரம் பத்திரம்'

என்று சொல்லுகிறாள்.

இதே மாதிரியே ஒவ்வொரு பூவிற்கும். இந்தப் பெரிய பெண் ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு பூவாகவைத்து ஓடச்செய்த பிறகு மிகுந்த ஒரு சிறுமிக்குப் பண்டாரம் என்று பேர் வைத்துத் தோட்டத்திற் குள் போய்ப் பூக்களைப் பறித்து வர உத்தரவிடுகின்றாள். பண்டா ரம் ஆகிய பெண் ஒரு பூக்கூடையைக் கையில் எடுத்துக்கொண்டு தோட்டத்திற்குள் பிரவேசிக்கிறாள். அப்பொழுது எல்லாப் பூக்க ளும் தாங்களிருந்த இடத்திலிருந்து,

'தோட்டத்தில் வருவது யார்?'
பண்டாரம்:—நான் தான் பண்டாரம்.
பூக்கள்:—எங்கே வந்தாய்?
ப:—பூப்பறிக்க.
பூ:—என்ன பூ?
ப:—மாம்பூ.
பூ:—இல்லை.
ப:—புளியம்பூ.
பூ:—இல்லை.
ப:—பாதிரிப்பூ.
பூ:—இல்லை.
ப:—பிச்சிப்பூ.
பிச்சி தவிர மற்றப் பூக்கள் :—இல்லை.
ப:—மல்லிகை.
பிச்சி, மல்லிகை தவிர மற்றப் பூக்கள்:—இல்லை.
ப:—மகிழம்பூ.
பிச்சி, மல்லிகை, மகிழம்பூ தவிர மற்றப் பூக்கள்:—
இல்லை.

ப:—ரோஜாப்பூ.

பிச்சி, மல்லிகை, மகிழம்பூ, ரோஜா, தவிர மற்ற பூக்கள்:—இல்லை.

ப:—அந்திமந்தாரை.

பிச்சி, மல்லிகை, மகிழம்பூ, ரோஜா, அந்திமந்தாரை தவிர மீதியாக நின்ற முல்லை:—இல்லை.

ப:—முல்லை.

ஒரு பதிலும் கிடையாது. பண்டாரப்பேண் இங்கும், அங்கும் விழிக்கின்ருள். ஒருவரும் தேன்படார். பண்டாரம் மீண்டும் நந்த வனத்தின் உட்புறத்தில் செல்ல முயலுகையில் எல்லாப் பூக்களும் தாங்களிருந்த இடத்திலிருந்தே ஒவ்வோருவராக ஓடி வந்து பண்டாரத்தைச் சூழ்ந்து கோள்ளுகிருர்கள். உடனே பண்டாரம் ஒருத்தியைப் பார்த்து,

'நீ யார்?'

பிச்சிப்பூ:—நானு?

பிச்சி யென்ற பெயருடையேன்:
பிறையைப் போன்ற ஒளியுடையேன்:
நச்சியணிவார் குழலுக்கே
நன்ருய்க் கொடுப்பேன் நறுமணமே!

ப:—நீ, யார்!'

மல்லிகை:—நானு?

மன்னரும் விரும்பிடும் உயர்வுடையேன்:
மல்லிகை யென்னும் பெயருடையேன்:
உன்னரும் அழகுடன் என் போலே
உண்டோ ஒருவர் உலகினிலே?

ப:—'நீ யார்?'

ரோஜாப்பூ:—நானு?

அழகும் மணமும் மிகவுடையேன்:
அதிக விலைக்கே வந்தடைவேன்:
மொழியும் ரோஜா என் பெயர்தான்:
மோஹன ரோஜா என் பெயர் தான்.

ப:—நீ யார் ?

அந்திமந்தாரை:—நானா ?

'அந்தி வேளையில் அலர்ந்திடுவேன் :
அடிக்கும் காற்றில் ஆடிடுவேன் :
மந்தாரை யென்னும் பெயர்கொண்டேன் :
மாதர் குழலில் இடங்கொண்டேன்.

ப:—நீ யார் ?

முல்லை:—நானா ?

பூமியின் புன்சிரிப் பென்றுசொல்லும்
பொலிவுறு முல்லை மலர்நான்தான் :
பூமியில் காதலர் போற்றிடுமோர்
புதிய முல்லை மலர் நான் தான்.

ப:—எங்கெல்லாம் வளருவீர்கள் ? உங்கள்
தொழிலென்ன ?

பூக்கள்:—

காட்டிலும் நாட்டிலும் வளர்ந்திடுவோம் :
காற்றில் மணத்தைக் கலந்திடுவோம் :
பாட்டினில் நாங்கள் அன்பு வைத்தே
பாடும் ஈக்குத் தேன் கொடுப்போம்.

ப:—எங்கே வந்தீர்கள் ?

பூக்கள்:—இறைவன் படைத்தான் ;
இங்கு வந்தோம்
இறைவன் அழைத்தால்,
ஏகிடுவோம்.

(எல்லோரும் செல்வார்கள்.)

[ஸ்ரீ வை. குஞ்சு]

# குழந்தைகள் விளையாட்டு

## 1. வார்த்தைகள் சேர்த்தல்

குழந்தைகளே! நீங்கள் உங்களது வாசக புஸ்தகங்களைப் படிக்கையில் புதிய புதிய வார்த்தைகளைப் படித்து வருகிறீர்கள். மேலும், ஒரே வார்த்தைக்குப் பல பல வேறு வார்த்தைகள் வருவதையும் காண்கிறீர்கள். இவைகளைப் பொறுக்கிச் சேர்த்து நீங்களே ஒரு விளையாட்டு விளையாடலாம் என்று நினைக்கிறேன்.

ஒரே அர்த்தத்தைத் தரக்கூடிய சில வார்த்தைகள்.

(ஐந்து ஐந்தாக)

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| அரசன் | காடு | யானை | பிள்ளை |
| ராஜா | வனம் | கஜம் | மகன் |
| மன்னன் | கானகம் | வேழம் | புத்திரன் |
| வேந்தன் | அடவி | கரி | குமாரன் |
| கொற்றவன் | அரணியம் | குஞ்சரம் | செல்வன் |

| 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|
| பெண் | கணபதி | பிராமணர் | சுப்பிரமணியர் |
| மகள் | கஜமுகம் | அந்தணர் | குமரன் |
| புத்திரி | விநாயகர் | வேதியர் | முருகன் |
| குமாரி | பிள்ளையார் | மறையோர் | ஆறுமுகம் |
| செல்வி | விக்னேசுவரர் | பார்ப்பனர் | வேலன் |

(நான்கு நான்காக)

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| குதிரை | துணி | அப்பா | அம்மா |
| அசுவம் | ஆடை | தகப்பனார் | தாயார் |
| பரி | வஸ்திரம் | தந்தை | அன்னை |
| துரகம் | உடை | பிதா | மாதா |

| 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|
| குழந்தை | நெருப்பு | வருத்தம் | பயிர்த்தொழில் |
| பாலன் | அக்கினி | துக்கம் | வேளாண்மை |
| சிசு | தீ | துயரம் | வியவசாயம் |
| மகவு | அனல் | துன்பம் | கிருஷி |

(மூன்று மூன்ருக)

| 1 | 2 | 3 | 4 |
|---|---|---|---|
| உபாத்தியாயர் | படிப்பு | சாப்பாடு | பசு |
| குரு | கல்வி | ஆகாரம் | ஆ |
| ஆசிரியர் | வித்தை | உணவு | கோ |

| 5 | 6 | 7 | 8 |
|---|---|---|---|
| பிரகாசம் | கலியாணம் | அறிவு | வீடு |
| வெளிச்சம் | மணம் | புத்தி | இல்லம் |
| ஒளி | விவாகம் | மதி | அகம் |

இவை போன்ற வார்த்தைகளைச் சேர்த்து மூன்று அட்டைகளில் எழுதித் தொங்கவிட்டுக்கொள்ளுங்கள்.

(விளையாடும் விதம்)

இந்த வார்த்தைகளைச் சிறு சிறு துண்டு அட்டைகளில் எழுதிக் கலந்து ஒரு பையில் போட்டுக்கொள்ளுங்கள். எத்தனைபேர் விளையாட வருகிருர்களோ அத்தனைபேர்கள் அட்டைத்துண்டுகளைச் சமபாகமாக எடுத்துக்கொள்ளவேண்டும். பிறகு ஒவ்வொருவனும் தனக்குக் கிடைத்த வார்த்தைகளை வரிசைக்கிரமமாக அடுக்கி வைத்துக்கொள்ள வேண்டும். பிறருக்குக் காண்பிக்கக்கூடாது. அப்படி வார்த்தைகள் கிடைத்திருக்கும்பொழுது ஒவ்வொருவனும் தன்னுல் எத்தனை வரிசைகள் சேர்க்க முடியுமோ அத்தனை வரிசைகளைச் சேர்க்கப் பார்க்கவேண்டும். உதாரணமாக, ஒருவனிடம் காடு அடவி என்ற வார்த்தைகள் இருந்தால், அவன் அந்த வரிசையிலுள்ள கானகம், அரணியம் என்ற வார்த்தைகள் யாரிடமிருக்கக்கூடும் என்று

யோசித்து அவற்றை அவனிடமிருந்து வாங்கிச் சேர்க்கவேண்டும். ஒருவனைப் பார்த்து "உன்னிடம் கானகம் இருந்தால் கொடு" என்று கேட்டதும், அவன் இருந்தால் கொடுத்துவிடுவான். இல்லையேல் அவன் தன்னிடம் இருக்கும் வார்த்தை குறைவுள்ள வரிசைகளுக்கு வேறு வார்த்தைகளைக் கேட்க ஆரம்பிக்கிறான். யார் எவ்வளவு அதிகமாய் வரிசைகள் சேர்க்கிறானோ அவனே கெலித்தவன்.

[எஸ். ஜகந்நாதன்]



## வில் வண்டி



மாடு தலையை அசைத்தோட
மணி சலங்கை அசைந்தாட
சக்கரம் விரைவாய்ச் சுற்றிடவே
சடுதியில் போகுது வில் வண்டி.

[சூடாமணி]



# தாலாட்டு



[இது 2வது தொகுதி 1190ம் பக்கத்தில் வெளிவந்துள்ள தாலாட்டின் பாடபேதம்.]

ஆளப் பிறந்தாளே
  அஞ்சாதே யாரடிச்சா ?
அடிச்சாளைச் சொல்லியழு
  அறையில் அடைத்து வைப்போம்.
செய்தாளைச் சொல்லியழு ;
  சிறையில் அடைத்து வைப்போம்.
சேவகத்தை மாற்றி வைப்போம் ;
  ஆக்கினைகள் செய்து வைப்போம்.
தொட்டாரைச் சொல்லியழு ;
  தோள் விலங்கு போட்டிடுவோம்.
சொன்னாரைச் சொல்லியழு ;
  சோலைப் பசுங்கிளியே !

---

## குழந்தையை ஆட்டல்

[குழந்தையின் கைகளைப் பிடித்துக் கொண்டு முன்னும் பின்னுமாக நிறுத்தி ஆட்டிக் கொண்டு பாடுவது.]

கொட்டுமத்தாளே ;
  கோவைக்காய் சித்தாடை.
பட்டு உடுத்துவளாம் மங்கை ;
  பாடகக் காரியாம் மங்கை.
குட்டுக் குட்டுவனும் மங்கை
  ஆம்படையான்.
கோச்சிண்டு இருப்பானும் மங்கை
  ஆம்படையான்.  [வி. என். பார்த்தசாரதி]

[இது 2வது தொகுதி 983-ம் பக்கத்தில் கண்ட பாட்டின் பாடபேதம்.]




# வீடு

வி. விசாலாக்ஷி அம்மாள்

'பெருக்காத இடத்திலும், பேசாத இடத்திலும் இருக்க மாட்டேன்' என்றும், 'சிந்தின இடத்தில் சேரேன், மங்கின இடத்தில் வாரேன்' என்றும், சகல ஐசுவரியங்களுக்கும் அதிபதியான ஸ்ரீ லக்ஷ்மீதேவி சொல்லுவதாக நம்முள் வசனங்கள் பல உண்டு. இதன் உட்கருத்து, மனிதர்கள் சுத்தமாகவும் சந்தோஷமாகவும் இருக்க வேண்டும் என்பதே.

வீட்டைச் சுத்தமாகவும் அலங்காரமாகவும் வைத்துக் கொள்ளும் பொறுப்பு அநேகமாக வீட்டு யஜமானியையே சேருகின்றது. இதிலும், முன்போலின்றி மேஜை, நாற்காலி, சோபா போன்ற சாமான்களும், பூக்கள் வைக்கும் 'வாஸ்கள்,' 'டிராயிங் ரூம்' என்ற வீட்டுக்கு வந்தவர்களை வரவேற்று உட்காரவைத்துப் பேசுவதற்கு என்று புதிதாக மேல் நாட்டு முறையைத் தழுவி ஏற்பட்டுள்ள அறையில் அலங்காரமாக வைக்கும் சாமான்களும் நவ நாகரிக வாழ்க்கையில் ஏற்பட்டிருப்பதால், இவைகளைத் துடைத்து ஒழுங்காக வைக்க வேண்டிய அவசியமும் உண்டாகிறது. முன் நாட்களில் வீட்டைப் பெருக்கி, மெழுகிக் கோலங்கள் போட்டு அலங்காரம் செய்தார்கள். தற்சமயத்தில் அநேக வீடுகள் 'சிமிட்டி' முதலிய வஸ்துக்களால் கட்டப்படுவதால், மெழுகும் அவசியம் அவ்வளவாக ஏற்படுவதில்லை. மேலும், வீட்டில் நாற்காலி, மேஜை, சோபா, முக்காலி என்ற சாமான்கள் நிறைந்துவிட்டால், எங்கு மெழுகிக் கோலமிடுவது?

நவீன வாழ்க்கையில் இச்சாமான்கள் அவசியமாக வேண்டியே இருக்கின்றன. இவைகளைக் காசைக் கொடுத்து வாங்கினால் மட்டும் போதாது; சரியான வழியில் உபயோகிக்க வீட்டு யஜமானிக்குத்

தெரிய வேண்டும். இவ்விதச் சாமான்களை வாங்கி வைத்தால், பிறகு ஏதோ துடைப்பத்தை எடுத்து நீள நெடுகப் பெருக்கினல் மட்டும் போதாது. பிரதிதினமும், முடியாவிட்டால் வாரம் இரண்டு முறையாவது இந்தச் சாமான்கள் மேலும், படிந்துள்ள தூசி ஓட்டடை முதலியவற்றை நன்ருகத் துடைக்க வேண்டும். சுவரில் மாட்டியுள்ள படங்களைத் தூக்கி, அடிச் சுவரைச் சுத்தி செய்ய வேண்டும். பூக்கள் வைக்கும் 'வாஸ்கள்,' பித்தளை போன்ற உலகங்களால் செய்யப்பட்டிருந்தால், நன்ருகப் 'பளிச் சென்று' தேய்த்து வைக்கவேண்டும். இவைகளைச் சிரத்தையுடன் செய்யா விட்டால் பிறகு வீடு சுத்தமாகவும், லக்ஷணமாகவும் இருக்காது.

'டிராயிங்-ரூம்,' என்பது முற்றிலும் மேல் நாட்டு வழக்கத்தை அநுசரித்து ஏற்பட்ட புதிய வழக்கம். இதைக் கூடிய வரையில் சுத்தமாகவும், அலங்காரமாகவும் வைத்துக் கொள்ளவேண்டும். என்றே ஒவ்வொருவரும் பிரியப்படுகிருர்கள். பொதுவில் 'டிராயிங் ரூம்'களின் சாமான்கள் ஒன்ருக இருந்தாலும், ஒருவர் வீட்டு அறையைப் போல் மற்ருெருவர் வீட்டு அறை இருப்பதில்லை. சிலர் வர்ண-அமைப்பு ஒத்திருக்கும்படிச் செய்கிருர்கள். சிலர் விலை பெற்ற சாமான்களை வைத்து அலங்காரம் செய்கிருர்கள். அவர் அவர்களுடைய, மனப் பாங்கின்படி 'டிராயிங்-ரூம்' சாமான்கள் அமைக்கப்படுகின்றன. அதிக சாமான்களை 'டிராயிங்-ரூமில்' சேமித்துவைப்பது அவ்வளவு நாகூக்கான முறையாக எண்ணப் படுவதில்லை; பொறுக்காக இருத்தலே நலம். 'டிராயிங்-ரூமில்' வர்ண-அமைப்பு ஒத்திருக்க வேண்டும் என்று பிரியப்படுகிறவர் கள், சுவருக்கு எந்த வர்ணம் கொடுக்கிருர்களோ, அதே வர்ணத் தில், மேஜை, நாற்காலி, சோபா முதலியவற்றுக்குத் துணிகள், உறைகள் முதலியவற்றை உபயோகிக்க வேண்டும். சுவரில் படங்கள் மாட்டுவது, அவர் அவர்கள் இஷ்டத்தைப் பொருத்ததே ஆனுலும் வரிசையாக அநேக படங்களை வைப்பதை விட ஆங்காங்குச் சில படங்களை மாட்டுவதே நாகூக்கு முறையாகும். பிரியப் படுகிறவர்கள் கதவுக்கும், சன்னல்களுக்கும் திரைகளை உபயோகிக் கலாம். மொத்தத்தில், வீட்டிற்கு வருபவர்களை வரவேற்பதற்கு என்று தனியாக ஏற்பட்டுள்ள இந்த இடம், எப்பொழுதும் சுத்த மாகவும் அலங்காரமாகவும் வைக்கப்பட வேண்டும்.

### கிடாரங்காய் ஊறுகாய்

சில நாட்களுக்கு முன் ஒரு தினசரிப் பத்திரிகையில் கிடார நார்த்தைக்குக் கிடாரங்காய் என்ற பெயர் காரணப் பெயரா, இடு

குறிப் பெயரா, எக்காரணத்தினுல் இப் பெயர் அதற்கு ஏற்பட்டது என்பதைப் பற்றிப் பலத்த வாக்குவாதம் நடந்தது பலருக்கு நினைவிருக்கலாம். அது எப்படியாயினும் கிடாரங்காய் ஊறுகாய் மிகவும் ருசிகரமான பதார்த்தம். அதைப் பல விதங்களில் செய்யலாம்.

முழுக் கிடாரங்காயை, வாணலியில் எண்ணெய் விட்டு, அடுப்பை மெதுவாக எரித்து, நன்ருகப் புரட்டிப் புரட்டி வதக்கி, ஆறின பிறகு துண்டுகளாக நறுக்கி, உப்புக் காரம், பெருங்காயம் முதலியவைகள் சேர்த்து ஊறுகாய் போடுவதுண்டு. இது மிகவும் வாசனையாக இருக்கும். ஆனல், அநேக காய்களை இவ்விதம் ஒவ்வொன்ருக வதக்குவதென்ருல் சிரமம் அதிகமாகும். கிடாரங்காயை விரல் பருமனுக்குச் சுருள் போட்டு, விதையை உதறி எடுத்து விட்டுத்துண்டுகள் செய்து ஊறுகாய் போடலாம். இதைப் பச்சையாகப் போடுவதுண்டு. ஊற நாளாகும். இந்தத் தளரை நன்ருக வதக்கி அதிலேயே உப்புக் காரத்தைக் கொட்டிச் சுருள வதக்கி ஊறுகாய் போடலாம். இது சீக்கிரத்தில் கெடாது. 'ஞாரங்காய்ப் பட்டை' என்று போடுவதும் உண்டு. இதற்குக் கிடாரங்காயைச் சற்று இலேசான பெரிய பில்லைகளாக நறுக்கி, உப்பு மட்டும் போட்டு ஊற வைத்து உலர்த்திவிட வேண்டியது. இதைப் பத்தியத்துக்கு உபயோகிக்கலாம்; வாய்க்கு சுசிருசியாகவும் இருக்கும். கிடாரங்காயைப் பொடிப் பொடியாக நறுக்கி, அதே அளவு பச்சை மிளகாயையும் பொடியாக நறுக்கி, நல்ல சூடான ஜலத்தைக் கொஞ்சம் விட்டு, வேண்டிய அளவு உப்புப் போட்டு, சற்று நேரம் ஊற வைத்துப் பெருங்காயம் கடுகுமாகத் தாளித்து உபயோகிக்கலாம். இது மூன்று நாலு தினங்களுக்கு மேல் நன்ருக இராது. கிடாரங்காய் நல்ல புளிப்பு ஜாதியைச் சேர்ந்ததால் வேண்டிய அளவு உப்புக் காரம் போடவேண்டும். இல்லையேல், ஊறுகாய் சீக்கிரத்தில் கெட்டு விடும்; நாள்பட நிற்காது.




## இது உங்களுக்குத் தெரியுமா?

43. துப்பாக்கிக் குண்டு எவ்வளவு வேகமாகச்செல்லும்? மணிக்கு 1000 மைல் வீதம் செல்லும்.

44. மலையைக் குடைந்த குகைகளுள் மிகவும் நீளமானது எது? ஸ்விட்ஸர் லாந்துக்கும் இடாலிக்கும் இடையே ஆல்ப்ஸ் மலையைக் குடைந்த ஸிம்ப்ளன் குகை. இதன் நீளம் $12\frac{1}{2}$ மைல். அங்கே உள்ள ஸெண்ட் கோதார்டு என்னும் குகை $9\frac{1}{2}$ மைல் நீளமுள்ளது.

45. மிகவும் உயரமான நீர்வீழ்ச்சி எது? ஆப்பிரிக்காவிலே பிரிடிஷ் கயானாவிலுள்ள கெய்டியூர் நீர்வீழ்ச்சி என்று சொல்லப்படுகிறது. இதன் உயரம் 822 அடி. நமது நாட்டிலுள்ள கெர்ஸோப்பா நீர்வீழ்ச்சி இதைக் காட்டிலும் உயரமானது.

46. மிகவும் நீளமான நதி எது? தென் அமெரிக்காவிலுள்ள அமெஸான் நதி. இதன் நீளம் 4000 மைல். வட அமெரிக்காவிலுள்ள மிஸ்ஸௌரி மிஸ்ஸிஸிப்பி இரண்டையும் சேர்த்து, இதைவிட நீளமென்று சொல்லுவதும் உண்டு.

## வட்டிக்குக்கொடுத்த பணம் இரட்டிக்கும் காலம்

| வட்டி விகிதம் வருஷத்துக்கு ரூ. 100-க்கு. | சாதாரண வட்டி | வட்டிக்கு வட்டி |
|---|---|---|
| 10 | 10 வருஷம் | 7 வருஷம் 100 நாள் |
| 9 | 11௵ 40 நாள் | 8௵ 16 நாள் |
| 8 | $12\frac{1}{2}$௵ | 9௵ 2 நாள் |
| 7 | 14௵ 104 நாள் | 10௵ 89 நாள் |
| 6 | 16௵ 8மீ | 11௵ 327 நாள் |
| 5 | 20௵ | 15௵ 75 நாள் |
| $4\frac{1}{2}$ | 21௵ 81 நாள் | 15௵ 273 நாள் |
| 4 | 25௵ | 17௵ 246 நாள் |
| $3\frac{1}{2}$ | 28௵ 208 நாள் | 20௵ 54 நாள் |
| 3 | 33௵ 4மீ | 23௵ 164 நாள் |
| $2\frac{1}{2}$ | 40௵ | 28௵ 26 நாள் |
| 2 | 50௵ | 35௵ 1 நாள் |



தசரதர் மரணம்.




## தசரதர் மரணம்

டி. எஸ். இராமச்சந்திர ஐயர்

ஸ்ரீராமர் தம்பியுடனும் மனைவியுடனும் தண்டக வனமடைந்தாரென்பது கேட்டுத் துயருற்றுத் தசரதர் மரணமடைந்ததும் அது கண்டு கௌசலையும் சுமித்திரையும் வருந்துவதும் முன்பக்கத்தி லுள்ள படத்தில் காட்டப் பட்டிருக்கின்றன.

இராமர் அயோத்தியை விட்டுச் சென்றதன்பின் ஆருவது நாள் மாலையில் சுமந்திரன் திரும்பி அயோத்தி யடைந்தான். புத்திர சோகத்தால் வருந்தி, 'ஒருகால் இராமர் திரும்பி வந்தாலாகாதா?' என்று ஏங்கிக்கொண்டிருக்கும் தசரத மகாராஜாவினிடம் சுமந்திரன் தான் இராமர் முதலியோரைக் கங்கைக்கரையில் விட்டுப்பிரிந்ததும் அவர்கள் அவ் வாறுகடந்து வனத்திற் சேர்ந்ததுமான விருத்தாந்தங்களை விரிவாயுரைத்தான். அதுகேட்ட கௌசலை ஆற்ருத் துயரினளாய்க் கணவனைச் சிறிது வெறுத்துக் கூறினள். அரசன், கணவனை அவ்வாறு வெறுத்தல் குலமகளிர்க்குத் தகாதெனக்கூறலும், தேவியும் மனம்பதைத்து மன்னனை அடிவணங்கித் தான் செய்த பிழையைப் பொறுத்தருளவேண்டினள். அப்பொழுது அரசனும் தான் முன்செய்தவினையின் பயனல் வந்தது இத் துயரமெனக்கருதி மனைவிக்குத் தான் முன் செய்த பாபச்செயலைக் கூறலானன். "ஏ, தேவி! நான் உன்னை மணப்பதற்குமுன் வருஷாகாலத்தில் வேட்டையிலாசைகொண்டு யானை முதலிய மிருகங்கள் நீரருந்த வருமிடத்தை நாடி ஸரயூநதிக்கரையில் இரவில் மறைந்திருந்தேன். அப்பொழுது குடத்தில் நீர்மொள்ளுவதினுலுண்டாகும் சப்தத்தைக் கேட்டு அது யானை நீரருந்தும் சப்தமெனக்கருதி அச் சப்தத்தைக் குறித்து அம்பைத் தூரந்தேன். உடனே, அவ் வம்பினுலடிபட்ட மனிதனுடைய

குரல்கேட்டது. 'ஐயோ! இவ்விரவில் நீர் கொள்ளவந்த தபஸ்வி யாகிய என்மேல் பாணத்தை யார் எய்தான்? எவருக்கு நான் அபகாரம் செய்தேன்? தீங்கிழைத்தலை யொழித்துக் கானகத்தில் கந்த மூலங்களைப் புசித்துவாழும் என்னைக் கொல்வதற்கு என்ன காரண மிருக்கக்கூடும்? நான் இறப்பதற்கு வருந்தவில்லை. இருகண்களுமில்லாத விருத்தர்களும் என்னையே கதியாகவுடையவர்களுமான எனது தாய் தந்தையர்கள் இவ்வம்பினு லிறந்தவர்களேயன்றோ!' என்று கூறியமொழிகளை யான் கேட்டுத் திடுக்கிட்டுச் சோகத்திலழுந்தியவனாய் அவ்விடத்தை யடைந்து அம்பினாலடியுண்டு புழுதியிற் புரண்டு கொண்டிருந்த அம் முனியைக்கண்டு மனமழிந்தேன். அப்பொழுது அவன் என்னைக் கோபத்தோடு நோக்கிக் கூறினான்: 'ஏ அரசே, காட்டில் வாழும் நான் உமக்கு என்ன அபகாரம் செய்தேன்? பெற்றோருக்குத் தீர்த்தம் கொள்ளவந்த என்னை யடித்துத் தாகத்தால் வருந்தி என்வரவை எதிர்பார்த்திருக்கும் அந்தகர்களாகிய அவ்விருவரையும் கொன்றுவிட்டீர்; அவர்கள் இவ்விஷயமறிந்து உம்மை நாசப்படுத்துவதற்குமுன் நீரே சென்று, அவர்களிடத்தில் கூறி அருள்புரியும் வண்ணம் வேண்டிக்கொள்ளும். இதோ தெரிகிற ஒற்றையடிப்பாதை வழியே செல்லும். இவ்வம்பு என் மர்மத்தில் புகுந்து வியதையை உண்டுபண்ணுகிறது. அதை யெடுத்துவிடும்; அப்பொழுது என் உயிர் நீங்கும்.' இவ்வாசகங்களைக் கேட்டுத் துயரடைந்தவனாய் அவனுடைய உடலினின்றும் அம்பைப் பிடுங்க எத்தனிக்கையில் எனது துயரத்தையுணர்ந்த அம்முனிபுத்திரன் பிராணன் போகும் சமயத்தில் என்னை நோக்கி, 'ஏ மன்னரே, பிரம்மஹத்தி செய்தோம் என்ற தாபத்தையொழியும். நான் வைசியனுக்குச் சூத்திரஸ்திரீயினிடத்திற் பிறந்தவன்' என்று கூறியவண்ணம் பாணம் எடுபட்டவுடன் உயிர் நீத்தான். நானும் அவன் கூறிய வழியேசென்று, சிறகிழந்த பக்ஷிகளைப் போன்ற அந்தகர்களுடைய ஆச்ரமத்தை யடைந்தபொழுது, என்னுடைய அடியோசையைக் கேட்டு அம் முனிவரும், 'ஏன் அப்பா, நெடுநேரமாயிற்றே; சீக்கிரம் கொண்டுவா. ஜலத்தில் விளையாடினையா என்ன? உன் தாயார் அதிகக் கவலைப்படுகிறாள். நானாவது அவளாவது ஏதாவது பிசகாய்ச் சொல்லியிருந்தாலும் நீ பொறுத்துக்கொள். நீதானே யெங்களுக்குக் கதி. நீ ஏன் பேசவில்லை?' என்று கூறினர். அது கேட்ட நான் பயமடைந்தவனாய்ச் சிறிது தைரியப்படுத்திக் கொண்டு, 'ஐயா, நான் தங்கள் புத்திரனல்லன்; க்ஷத்திரியன்' என்பதைத் தெரிவித்துப் பின் நடந்த விருத்தாந்தத்தைக்கூறி நானறியாது செய்த பிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தேன். இவ் வார்த்தை

யைக் கேட்டதும் அம்மகரிஷியும் பெருமூச்செறிந்து, அடங்காத சோகத்தோடு, வணங்கி நின்ற என்னை நோக்கி, 'இக்கொடுஞ்செயலை நீயே வந்து சொன்னதனல் உன் தலை வெடிக்கவில்லை; வானப்பிரஸ்தனை ஞானபூர்வகமாகக் கொன்றிருந்தால் இந்திரனானாலும் தன் பதவியை இழத்தல் நிச்சயம். நீ அஞ்ஞானத்தால் செய்ததால் உயிரோடிருக்கிறாய். எங்களைப் புத்திரனிருக்குமிடம் கொண்டுபோய்விடு; அவனைப் பார்க்க விரும்புகிறோம்' என்றார். அம்முனியைப் பத்தினியுடன் அழைத்துச்சென்று முனிகுமாரன் விழுந்திருக்குமிடத்திற் சேர்த்தேன். அவர்களும் அவனதுடலில் விழுந்து பலவாறாகப் பிரலாபித்தார்கள். பிறகு மனைவியும் தாமும் ஸ்நானத்திற்கெழுந்தனர். அப்பொழுது முனிகுமாரனும் தனது புண்ணியவசத்தால் சுவர்க்கத்திற்கிந்திரனுடன் செல்லுகையில் பெற்றோரை நோக்கி, 'தங்களுக்குச் செய்த பரிசரியத்தின் பலனாக மகத்தான பதவியை யடைந்தேன். நீங்களும் விரைவில் என்னருகே வந்துசேருவீர்கள்' என்று கூறினான். நீராடியெழுந்த அவ்விருவரும் என்னைப் பார்த்து, 'எந்தப் பாணத்தால் எங்களைப் புத்திரனில்லாதவர்களாக்கினையோ அதனாலேயே எங்களையும் கொன்றுவிடு. எங்களுக்கு மரணத்தில் வருத்தமில்லை. அஞ்ஞானத்தால் எங்கள் மகனைக்கொன்றதால் நீயும் உன் புத்திரனைப் பிரிந்த சோகத்தால் உயிரிழக்கக்கடவாய்' என்று சபித்தனர். இவ்வாறு என்னைச் சபித்தபின்னர் அவர்கள் சிதையிலேறிச் சுவர்க்க மடைந்தனர். இவ் வண்ணம் நான் இளமையில் செய்த பாபத்தின் பயனை இப்பொழுதனுபவிக்கிறேன்? நானும் புத்திர சோகத்தால் உயிர் துறப்பேன். ஏ தேவி! கண்தெரியவில்லை; என்னைத் தொடு; மரண மடையும் தறுவாயில் கண்கள் ஒளியிழக்குமன்றோ? யம தூதர்கள் என்னைத் துரிதப்படுத்துகிறார்கள். பதினான்கு வருஷங்கள் கழிந்தவுடன் திரும்பிவரும் ஸ்ரீராமனைப் பார்க்கும் பாக்கியமுடைய மாந்தர்கள் தேவர்களே. எண்ணெய் சுண்டிய விளக்குப்போல் என் இந்திரியங்க ளெல்லாம் மழுங்குகின்றன. புத்திரசோகமானது எனது பிராணனை நதிவேகமானது கரையைக் கரைப்பதுபோல அழிக்கின்றது. ஏ ராமா! என் சோகத்தைத் தீர்க்கவல்ல குமாரா! ஏ கோசலையே! உன்னைப் பார்க்க முடியவில்லை. ஏ சுமித்திரே! ஏ குலத்தை யழிக்கவந்த பாபி கைகேயி!' என்று கதறியவண்ணம் கௌசலை சுமித்திரை இவ்விருவர்கள் முன்னிலையில் தசரதன் உயிரிழந்தான்.

வால்மீகி இராமாயணத்திற் கூறப்பட்ட தசரத மஹாராஜன் மரணமடையும் சமயத்தில் நடந்த விருத்தாந்தங்களைச் சுருக்கி மேலே கூறினோம். இவ்விருத்தாந்தங்கள் கம்பராமாயணத்தில் எவ்வாறு

கூறப்பட்டிருக்கின்றனவென்பதைக் கவனிப்போம்: தசரதர் தான் சாபம் பெற்றவரலாற்றைச் சுமந்திரன் திரும்பிவந்தபின்னர் கௌசலையினிடம்கூறி உடனே இறந்ததாக வால்மீகி கூறியிருக்கக் கம்பர், இராமர் காட்டிற்குப் புறப்பட்டதினத்திலேயே தசரதர் இச்சாப விஷயம் கூறியதாகச் சொல்லியிருப்பதுடன் அவ் வரலாற்றிலும் சில மாறுதல் செய்திருக்கிறார்.. அது பின் வருமாறு:—

கைகேயி வாக்கால் இராமன் கானடைவானென்பதினால் துய ருற்ற அரசன் பலவிதமாய் அவளை நிந்தித்து மூர்ச்சையடைந்தான். அப்பொழுது கௌசலை அவனது உடலையும் தாள்களையும் தடவிக் கொடுக்க மூர்ச்சைதெளிந்து அரசனும் இராமன்வருவனோ என்று மெள்ளக் கூறியபின்னர், 'ஐயோ இந்தப் பாவி கைகேயி கூனி மொழியால் தன்மகனுக்காக அரசு பெற்றதன்றி என் மகனைக் கானே கென்றாளே' என்றான். பின்னும் கௌசலையைப் பார்த்துக் கூறு வான்:

> பொன்னார் தோளான் கானே புகுதப் புகுதல் தவிரான்
> என்னா ருயிரோ அகலா தொழியா திதுகோ சலைகேள்
> முன்னா ளொருமா முனிவன் மொழியும் சாபம் உளதென்
> றந்நா ளுற்ற தெல்லாம் மவளுக் கரசன் அறைவான்.

"முன்னாளில் ஒரு முனிவன் சாபம் உளதாதலினால் இராமன் காட்டிற்குச் செல்வதை நிறுத்தமாட்டான். நானும் உயிர் வாழேன். வேட்டையி லாசைமிகுந்தவனாய் வில்லும் சரமும் கொண்டு யானை வருமோர் செய்ய நதியின் கரையில் மறைய நின்றேன். அப்பொழுது அந்தகர்களாகிய தன் தாய் தந்தையர்களுக்கு ஒரு முனிகுமாரன் புனல்கொள்ளவந்த தறியாது, அவன் நீர்மொள்ளும் ஒலியை யானை நீர் நுகரும் ஒலியென்றெண்ணிக் கணைதுறந்ததல்லால் கண்ணிற் றெரியக் கண்டேனில்லை. அப்பொழுது அங்கெழுந்த அழுகுரல் மனிதர்குரலென்றயர்ந்து அங்குச் சென்று கையிலிருந்து குடம் நெகிழக் கணையோடு உருளுகின்றவனைக் கண்டு, 'ஐயா, நீ யார்? அரு ளுவாய்' என்னலோடும், அவன்தான் பல வருணங்களுள் நாலாகிய தாம் வருணத்திற் பிறந்தவனென்றும், காசியபன் மைந்தன் விருத் தேசனன் புதல்வன் சலபோஜன் என்னும் மறைதெரி நாவான் மகன் சுரோசனன் என்றும் கூறினான். (இங்கு, தன் தந்தையை அந்தணனென்னாது மறைதெரிநாவன் என்றும், தான் நாலாவதாகிய வருணத்தில் உதித்தவனென்றும் கூறியிருப்பது வால்மீகி இராமா யணத்தில் வைசியனுக்குச் சூத்திரஸ்திரீயினிடத்திற் பிறந்தவன்

என்பதற்கு ஒத்திருப்பதாகக் கருதலாம்.) பின்னும் அவன் கூறுவான்: 'நீ யானையென்றெண்ணி உணரா தெய்தாய்; ஆதலால், துயருறுவதிற் பயனில்லை. இது ஊழ்வினைப் பயனாகும். எனது பெற்றோருக்குத் தண்ணீர் கொண்டுபோயளித்து, என்மரணத்தையுமுரைத்து, வானடைய்தும் யான் அவர்களைத் தொழுததாகவும் சொல்' என்றுகூறி உயிர் நீத்தான்.

"பிறகு நானும், மைந்தன் வரவே நோக்கியிருக்கும் மாதவன்பால் அந்தண்புனல்கொண்டு அணுகவே அவர், 'ஐயா, இதுபோதளவாய் வந்திங்கணுகாததென்னோ? நொந்தோம்; சந்தம் கமழும் தோளாய்! தழுவிக் கொளவா' என்றார். அப்பொழுது அவ்வரை நோக்கி, 'ஐயா, யானோரரசன்; அயோத்தி நகரத்துள்ளேன்; யானையைத் தேடிமறைந்து இருளில் வதிந்தேன். அங்கு நும் புதல்வன் புனல் மொண்டிடும் ஓதையைக்கேட்டுக் கண்ணால் பாராமல் கணை துரந்தேன். அவன் அடிபட்டு அழுதகுரல் கேட்டு அவனிடம் சென்று வினவ அவன் உற்றவெலாமுரைத்து வானேரீட்ட மெதிர் வந்திடவே விண்ணிடை யேகினன். ஆகையால் பொறுத்தருள்வீர்' என்று அவரது இருதாள்களில் வணங்கினேன். உடனே,

வீழ்ந்தா ரயர்ந்தார் புரண்டார் விழிபோ யிற்றின் றென்றார்
ஆழ்ந்தார் துன்பக் கடலுள் ளையா வையா வென்றார்
போழ்ந்தாய் நெஞ்சை யென்றார் பொன்னு டதனிற் போய்நீ
வாழ்ந்தே யிருப்பத் தரியேம் வந்தேம் வந்தே மினியே.

அவர்களிருவரும் கீழேவிழுந்து புரண்டு துயரக் கடலுளாழ்ந்து மகனையிழந்து உயிர்வாழ்ந்திருப்பத் தரியேம் என்றிரங்கினர்.

என்றென் றயரும் தவரை யிருதாள் வணங்கி யானே
இன்றும் புதல்வ னிலனீ ரேவும் பணிசெய் திடுவேன்
ஒன்றுந் தளர்வுற் றயர் ரொழிமின் னிடரென் றிடலும்
வன்றிண் சிலையாய் கேண்மோ வெனவே யொருசொல் வகுத்தான்.

கண்ணுண் மணிபோன் மகவை யிழந்து முயிர்கா தலியா
உண்ணு வெண்ணி யிருந்தா வுலகோ ரென்னென் றுரையார்
விண்ணின் றலைசே றுதும்யா மெம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையா யடைவாய்ப் படர்வா னென்னு.

தாவா தொளிருங் குடையாய் தவறிங் கிதுநின் சாணம்
காவா யென்று யதனாற் கடிய சாபங் கருதேம்
ஏவா மகவைப் பிரிந்தின் றெம்போ லிடருற் றனைநீ
போவா யகல்வா னென்னுப் பொன்னாட் டிடைபோ யினரால்.

அவ்வாறயர்ந்த அவர்களை வணங்கி 'இனி யானே உம்புதல்வனெனக் கருதுங்கள் ; நீங்கள் ஏவும் பணிசெய்வேன் ; துயரொழிமின்' என்றேன். அது கேட்டு அம்முனிவரும், 'அரசனே ! கண்மணிபோன்ற எங்கள் மகனையிழந்தும், உயிரின்மேலாசை கொண்டு உணவருந்த எண்ணியிருந்தால் உலகம் பழிக்கும். நீ, தவறுதலாகச் செய்தேன்; பொறுத்தருள வேண்டும் என்று சரணடைந்தமையால் கடியசாபம் கொடுக்கக் கருதேம். ஆனால், நீயும் எம்மைப்போல் மகவைப்பிரிந்திடருற்று உயிர் நீப்பாயாக' என்றுகூறி உயிரொழிந்தனர். அச்சாபத்தைக்கேட்ட நானும்,

சிந்தை தளர்வுற் றயர்தல் சிறிதும் மிலனா யின்சொல்
மைந்தன் னுளனென் றதனுன் மகிழ்வோ டிவண்வந் தனெனால்.

ஆதலால் அந்தமுனி சொற்றமையும் அண்ணல் வனமேகுதலும் என்றனுயிர் வீகுதலு மிறையும்தவறா.''

இங்கு, தசாதர் முனிவனிட்ட சாபத்தைக்கேட்டுத் துயருறாமல் புத்திரனுண்டாவானென்று மகிழ்வோடு வந்தேன் என்றதாகக் கம்பர் கூறியிருப்பதனால் இச் சம்பவம் நேர்ந்தது அவர் நெடுங்காலம் பிள்ளையில்லாமல் வருந்திய சமய மென்பதைக் குறிக்கின்றது. வடமொழியில் மகாகவியாகிய காளிதாஸனும் ரகுவம்சத்தில் இவ்வாறு கூறியிருப்பதை நோக்குங்கால், இவ்விருகவிகளும் தசரதருடைய மகப்பேறடையாத வருத்தத்தை விசேஷித்துக் காட்டும் பொருட்டு, வால்மீகிமுனிவர் இச்சம்பவம் தசரதனது இளமைப் பருவத்தில் நடந்ததாகக் கூறியிருப்பதை மாற்றிக் கூறினார்கள் என்று தோற்றுகின்றது.

பின்னர், தேர்கொண்டு சுமந்திரன் திரும்பிவந்து வசிட்டமுனிவரோடும் மன்னவன் கோயில் புகுந்தபோது,

இரதம்வந் துற்ற தென்றாங் கியாவரு மியம்ப லோடும்
வரதன்வந் துற்றா னென்னா மன்னனும் மயக்கம் தீர்ந்தான்
புரைதபு கமல நாட்டம் பொருக்கென விழித்து நோக்கி
விரதமா தவனைக் கண்டான் வீரன்வந் தனனோ வென்றான்.

இரதம் வந்துவிட்டதென்ற சொல்கேட்டு இராமன் வந்திருப்பானென்றெண்ணி அரசனும் மயக்கம் நீங்கிக் கண்விழித்து வசிட்டரைப் பார்த்து, 'வீரன் வந்தனனோ' என்றான். இல்லையென்றுரைக்கலாற்றா தேங்கிநின்ற முனிவரது முகக்குறியால் இராமன் வந்திலனென்றறிந்து அரசன் சோர்ந்தான். அத்துன்பத்தைக் காண மனமிலாது முனிவரு மங்குநின் றகன்றார்.

நாயகன் பின்னுந் தன்றேர்ப் பாகனை நோக்கி நம்பி
சேயனோ வணிய னோவென் றுரைத்தலு மனையான் செய்ய
வேய்யுர் கானம் தானும் தம்பியும் மிதிலைப் பொன்னும்
போயின னென்று னென்ற பொழுதத்தே யாவி போனன்.

அரசனும் பின்னர்ச் சுமந்திரனை நோக்கி, "இராமன் வெகுதூரத்தி லிருக்கிறனா, அருகிலிருக்கிறனா?" என்று கேட்க, "அவன் தம்பி யுடனும் சீதையுடனும் காடடைந்தான்" என்று சுமந்திரன் சொன்னவுடனே உயிரிழந்தான்.

வால்மீகிமுனிவர், சுமந்திரன் கூறிய மொழிகளைக்கேட்ட பின்னர்க் கோசலையிடத்து முனிவரளித்த சாபவிருத்தாந்தத்தைக் கூறிப் பின்னர் அரச னிறந்தானென்று கூறியிருக்கக் கம்பர், தசரத னுக்கு இராமனிடத்துள்ள அன்பு மிகுதியைக் காட்டவெண்ணி இராமன் கானடைந்தா னென்ற சொல் கேட்டவுடனே அவன் மரணமடைந்தானெனக் கூறினர் போலும். இது காரணமாகவே சாபவிருத்தாந்தத்தைக் கோசலைக்கு முதலிலேயே அரசன் அறி வித்ததாகக் கம்பர் கூறினரெனக் கருதல்வேண்டும்.




## காற்றிராயன் கதை

அ. சிதம்பரநாத செட்டியார்

ஓரே ஒரு நாள் நான் எங்கேயோ புறப்பட்டுப் போனேன். எங்குப் போனேன் என்பதே எனக்குத் தெரியாது. இப்படி அப்படி நடந்து ஊருக்கு வெகு தூரத்தில் போய் விட்டேன் என்பது மாத்திரந்தான் தெரியும். என் ஊரிலிருந்து மூன்று மைல் தூரத்தில் மலை உண்டென்று சொல்வார்கள். மலையை நான் கீழே இருந்து பார்த்தது உண்டே அல்லாமல் மேலே ஏறிப் பார்த்ததே இல்லை. அதனால் நான் போன இடம் மலைதானா என்பது நிச்சயமாய்த் தெரியவில்லை. மலையாகத்தான் இருக்கவேண்டுமென்று நினைப்பதற்கும் இடமுண்டு. ஏனென்றால் நான் போன இடத்தைச் சேர்வதற்கு முன்னால் பல கற்கள் என் காலைக் குத்திவிட்டன. சில இடங்களில் ஏறினேன், சில விடங்களில், நழுவினேன், பிறகு விழுந்தேன், எழுந்தேன்; அழுமாத்திரம் இல்லை. இப்படியெல்லாம் எங்கெங்கேயோ ஏறி, எங்கெங்கேயோ இறங்கி, நான் சொன்ன இடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். அங்குப் போவதற்கு நாழிகை எவ்வளவு ஆயிருக்கும் என்று என்னால் சொல்ல முடியாது. கையிலோ அப்பொழுது கடியாரமில்லை. உத்தேசமாகச் சொல்வதெல்லாம் அநேகமாகப் பிழையாயிருக்கலாம். அதனால் உத்தேசமாகவும் நாழிகையைப் பற்றிக் கூற எனக்கு இஷ்டமில்லை.

அங்கே போனதும் எப்படி வீட்டிற்குத் திரும்புவது என்று யோசனை வந்துவிட்டது; அதற்குமேலே நடக்கவோ முடியவில்லை. ஏன் அங்கே சென்றேன் என்பதும் விளங்கவில்லை. இப்படியிருக்கும்பொழுது என்னவோ ஒரு சப்தம் கேட்டது. சப்தம் உயரவிருந்து வந்ததால், அது என்னவென்று நான் அண்ணாந்து பார்த்தேன். ஒரு மரத்தின் மீது ஏதோ ஒரு பட்சி இருந்தது. அது எவ்வளவு அழகாய் இருந்தது, தெரியுமா? அது ஏதோ பாடிற்றுப் போலும்! அதுதான் நான் கேட்ட சப்தமாயிருக்க வேண்டுமென்று நினைத்தேன். "ஏ, பட்சி! பட்சி!! நீ யாரோடு

பேசுகிறாய்?'' என்று கேட்டேன். அது தலையைக் கீழே குனிந்தது. கீழே நான் மட்டுமிருந்ததால், என்னைத்தான் பார்க்கிறது என்று அறிந்தேன். "எனக்கு என்ன சொல்லுகிறாய்?'' என்று வினவினேன். நல்ல பாட்டு ஒன்று பாடிற்று. அப் பாட்டைக் கேட்ட பிறகு வேறு எப்பாட்டும் கேட்கக்கூடுமென்று நான் நினைக்கவில்லை. "என்னைப் போலச் சந்தோஷமாய்ப் பாடிக்கொண்டு இரு'' என்று அது சொல்வதாகத் தோன்றிற்று. நானும் அதைப் பின்பற்றிப் பாட ஆரம்பித்தேன். என் வாயைத் திறந்தால் எட்டேர்க் கப்புறம் இருப்பவர்கள் ஓடுவார்கள் என்பது எனக்குத் தெரியும். இருந்தாலும் அங்கு எனக்கு ஒன்றும் வெட்கமில்லை. பட்சியைத் தவிர வேறு ஒருவரும் இல்லாததால் பாடினேன். என் பாட்டு எனக்கே ஆனந்தத்தை விளைத்தது. நான்தான் பாடியதோ என்று எனக்கே சந்தேகமாய் இருந்தது. சாதாரணமாக, நாலு வார்த்தை பேசுவதற்குள் கோழை வந்து என் வாயை யடைக்கும். ஆனல், அன்றைக்கோ கடகடவென்று சரமாரியாகப் பாடிவிட்டேன்.

பாடினபிறகு ஏதோ உற்சாகம் என்னைத் தெரியாமலே என்னிடம் வந்துவிட்டது. வீட்டிற்கு எப்படியாவது திரும்பிவிட்டால், அடிக்கடி அங்கே வந்து பாடிப் பழகிக் கொள்ளலாம் என்று நினைத்தேன். உடனே, "பட்சி! பட்சி! என் வீட்டிற்கு வழி எது?'' என்று கேட்டேன். அது ஒரு குச்சியை என் வலது பக்கம் போட்டது. வலது பக்கமாகத்தான் போகவேண்டுமென்று நினைத்துக் கொஞ்ச தூரம் போனேன். அங்கே ஒரு சப்தம் கேட்டது. என்னவென்று பார்த்தேன். ஒரு மரக்கிளை கீழே தொப்பென்று விழுந்தது. அது ஒடிந்தபோதுதான் சப்தம் உண்டாயிற் றென்று நினைத்தேன். அந்தக் கிளை விழுந்த இடத்தண்டை போனேன். மரத்தின்மீது யாரேனும் இருக்கிறார்களா எனப் பார்த்தேன். ஒருவரையுங் காணவில்லை. மரத்தின் கிளையில் உள்ள இலையொன்று என் தலையைத் தடவிற்று. அது என் தாயார் தடவிக் கொடுப்பதுபோல் இருந்தது. அந்த மரத்தில் இருந்த இலைகள் பச்சைப் பசேலென்று இருந்தன. அவற்றின் அழகை நான் கண்டு கொண்டிருக்கும் பொழுது ஏதோ சலசல என்று சப்தம் கேட்டது. அது என்னவாயிருக்கும் என்று ஆராய எண்ணினேன். சப்தம் எந்தத் திக்கிலிருந்து வந்ததோ அந்தப் பக்கம் போனேன். என்ன ஆச்சரியம்! ஓர் ஆறு அங்கே ஓடிக்கொண்டிருந்தது. அதை ஆறு என்று சொல்லவேண்டுமோ, அருவி என்று சொல்லவேண்டுமோ, தெரியவில்லை. கிட்ட நெருங்கினதும் அந்தச் சப்தம் இன்னும் அதிகமாயிற்று. சற்று நேரத்திற் கெல்லாம் சப்தம் அறவே அடங்கி

விட்டது. ஆனால் தண்ணீர் ஓடிக்கொண்டுதான் இருந்தது. அது மிகவும் தெளிவாக இருந்தது. அள்ளிக் குடிக்கலாமா என்று யோசித்தேன். ஆற்றில் போகும் தண்ணீரைக் குடிக்க யாரைக் கேட்க வேண்டும்? ஒரு கை அள்ளிக் குடித்தேன்; மறு கை மடக்கிக் குடித்தேன்; பல கை எடுத்துப் பருகினேன். தேவாமிர்தம் என்று சொல்லுகிறார்களே அதை நான் அறியேன். ஆனால், நான் அன்று அருந்திய நீரைவிட அமிர்தம் சிறந்ததாயிருக்குமோ என்று சந்தேகித்தேன்.

தண்ணீரைக் குடித்த பிறகு, அவ்வருவியில் பாயும் நீரைப் பார்த்து, "என் ஊர்க்கு எப்படிப் போவது?" என்று கேட்டேன். இருந்தாற்போலிருந்து அருவியில் ஓரிடத்தில் வெளிச்சம் உண்டாயிற்று. வெளிச்சம் உண்டான பக்கமாகத்தான் போகவேண்டும் என்று தெரிந்து கொண்டேன். அப் பக்கமாக, அக்கரைபோய்ச் சேர்ந்தேன். அருவி இடையளவு ஆழந்தான் இருந்தது.

அதற்கப்பால் போவதற்கு எனக்கு வழி தெரியவில்லை. என் தனிமையை நினைத்துத் திகைத்தேன். ஏதேனும் புலி அல்லது பாம்பு வந்துவிட்டால் என்ன செய்வதென்று எனக்கு அப்பொழுதுதான் அச்சம் உண்டாயிற்று. "ஆ! கடவுளே, நீதான் கதி. அநாதியாகிய என்னைக் காப்பது ஆதியாகிய உன் கடமையல்லவா? ஊர்க்குப் போக வழி காட்டவேண்டும்" என்று வேண்டினேன். ஒரு தட்டாரப் பூச்சி என்மேல் வந்து உட்கார்ந்தது. அவ்விடத்தில் நான் தனியாக வில்லை என்பது அப்பொழுதுதான் எனக்கு விளங்கிற்று. என் அச்சமும் பறந்தோடிப்போயிற்று. அப் பூச்சி என் முன்னே சிறிது சிறிது தூரமாகப் பறந்து போயிற்று. எனக்கு அது வழிகாட்டியாக இருந்தது. அதை நம்பியே அது சென்ற வழியே நானுஞ் சென்றேன். திடீரென்று அதுமேலே பறந்துபோய்விட்டது. உயரப் பார்த்தேன். பின்னொரு தட்டாரப்பூச்சி அங்குப் பறந்துகொண்டிருந்தது. அது என் வழிகாட்டியை விளையாட அழைத்திருக்கவேண்டும். அதனால்தான் நான் வழிகாட்டியை இழக்க நேரிட்டது.

நான் அண்ணாந்து பார்த்துக்கொண்டிருந்த சமயத்தில் என்னை யாரோ வந்து அணைத்ததுபோல் இருந்தது. "என்னடா அப்பா! உன்னைப் பெறுவதற்கு எத்தனை நாளாய் விட்டதே!" என்று வந்தவர் சொல்லி முத்தமிட்டார். "நீங்கள் யார் என்று சொல்வீர்களா?" என்று கேட்டேன். "அது தெரியாதா? நான்தான் காற்றிராயன்" என்றார் அவர். "அப்படியா அது? என்னைக் கூப்பிட்டால் நான் வந்திருப்பேனே. என்னை அடைய எத்தனை

நாள் முயன்றீர்களோ?'' என்றேன். "அதை ஏன் கேட்கிறாய்? நான் முயலாத நாள் இல்லை. நீ பள்ளிக்கூடத்திற்குப் போகும் போதும் வீட்டிற்குத் திரும்பும்போதும் உன்னை வந்து அடைய முயன்றதுண்டு. உங்கள் பள்ளிக்கூடத்தில் ஒரே ஒரு ஜன்னல் தானே இருக்கிறது? அதன் பக்கம் நீ என்றைக்காகிலும் உட்கார்ந் திருந்தால் அன்றும் முயன்றதுண்டு. அன்றொரு நாள், நீ வாழைப் பழத்தோலை வெளியே எறிந்துவிட்டு ஜன்னலை உங்கள் வீட்டில் மூடியபொழுதுகூட முயன்றேன்'' என்று அவர் சொன்னார்.

"என்னை அவ்வளவு தேடிப் பிடிப்பதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டேன். "உன்மீது எனக்குள்ள அன்புதான் கண்ணே'' என்று என் தாயார் கூறுவதுபோற் கூறி, முகத்தைத் தடவிக் கொடுத்தார் அவர். "தங்களுக்கு எந்த ஊரோ?'' என்று கேட் டேன். அவர், "நான் இங்குத்தான் அநேகமாக இருப்பது. சில சமயங்களில் கடற் பக்கம் போவேன்; சில சமயங்களில் காட்டுப் பக்கம் போவேன்; இன்னும் சில சமயங்களில் ஓடைகளின் பக்கம் போவேன். ஆனால், எங்குப் போனாலும் இங்குத் திரும்பி வந்து விடுவது வழக்கம். நீ இங்கே அடிக்கடி வந்தால் என்னோடு விளை யாடலாம். இப்பொழுது நாமிருவரும் விளையாடுவோமா?'' என்று கேட்டார்.

"சரி, உங்களுக்கு வயது என்ன?'' என்று கேட்டேன். அதற்கு அவர், "நான் நிரம்ப வயதானவன் என்றாலும் உன்னுடன் விளையாட என்னால் முடியும்'' என்று சொன்னார். "ஆமாம், நிரம்ப வயது என்றால் எவ்வளவு என்று சொல்லக்கூடாதா? இங்கு ஓடும் ஆற்றிற்கு மேலே உங்களுக்கு வயது ஆயிற்றோ?'' என்று கேட்டேன். "சரியான கேள்வி. ஆற்றைவிட நான் மூத்தவன் இல்லையானாலும், ஆற்றோடு சம வயதுள்ளவன் நான். ஆறு எப்பொழுது உண்டாயிற்றோ அப்பொழுது நானும் பிறந்தேன்'' என்று அவர் சொன்னார். "ஆனால், தங்களுடைய தாய் தந்தையர் யாரோ?'' என்று வினவினேன். "எல்லாம் உன்னுடைய தாய் தந்தையர்தாம். நாமெல்லாம் சகோதரர்கள். எல்லாம் வல்ல இறை வனால் நாமெல்லாம் படைக்கப் பட்டோம்'' என்று அவர் சொன் னார். அது எனக்கு வியப்பாகவே தோன்றிற்று. "நீங்கள் நிரம்ப மூத்தவர் என்று சொல்கிறீர்களே! விளையாடும்பொழுது என்னை எங்கேயாகிலும் கீழே தள்ளிவிட்டால் என்ன செய்வேன்?'' என்று கேட்டேன். "அப்படியொன்றும் பயப்படவேண்டாம். நீ சிறு வன் என்பது எனக்குத் தெரியாதா? முதலில் நாம் இருவரும்

ஓடிப் பார்ப்போம். உன்னால் என்னை ஜயிக்க முடியுமா ?'' என்று காற்றிராயர் கூறினார்.

"நல்லது ; ஓடலாம்'' என்று சொல்லி நான் ஓட ஆரம்பித்தேன். அவரும் ஓடி வந்தார். இருவரும் கொஞ்ச தூரம் சேர்ந்தாற்போலச் சென்றோம். அப்பால், அவர் பின் தங்கி வந்தார். மறுபடியும் அவர் என் பக்கம் வந்துசேர்ந்ததும், "என்ன இருந்தாலும் நீங்கள் கிழவர்தானே ! அதனால்தான் என்னை ஜயிக்க முடியவில்லை ; எனக்குத் தோற்றுவிட்டீர்கள்'' என்று சொல்லிச் சிறிது பெருமை காட்டிக் கொண்டேன். "நீ சிறுவனாயிற்றே என்று இதுவரையில் பின் தங்கி, என் வேகத்தை அடக்கிக் கொண்டு வந்தேன். இனி அடக்கேன். ஓடுவோமா ?'' என்று சொல்லி விட்டு அவர் பறந்துபோவதுபோல் என்முன் சென்றார். "ஏ'' என்று நான் சொல்வதற்குள் அவரை என்முன் காணேன். அவ்வளவு விரைவாகப் பறந்தோடிப் போய்விட்டார். என் கண்ணிற்கு எட்டிய வரையில் அவர் காணப்படவில்லை. இருந்தாலும், அவரைக் கண்டுபிடித்துவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பது என்று நினைத்து நானும் ஓட்டம் ஓட்டமாக ஓடினேன். முடிவில் அவர் ஆற அமர உட்கார்ந்திருந்த இடத்தை அடைந்தேன் ; களைத்துப்போய்க் கீழே விழ்ந்தேன். "தம்பி ! நீ பலவான் ஆயிற்றே ! இப்படி யெல்லாம் களைத்துச் சலித்து விழலாமா ? எழுந்திரு, அப்பா ! இதோ, இதனைச் சாப்பிடு'' என்று அவர் சொன்னார். எதைச் சாப்பிடுவது என்று எழுந்து பார்த்தேன். அருமையான காற்று கம் கம் என்று வீசிற்று. எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவு காற்றைச் சாப்பிட்டேன். அவர், "இன்னுஞ் சாப்பிடு, இன்னுஞ் சாப்பிடு'' என்று வயிற்றை நிரப்பிவிட்டார்.

பிறகு, நானாகவே அவரை ஓடுவதற்கு அழைத்தேன். அவரும் இசைந்தார். சிறிது தூரம் ஓடியவுடன், நான் அவரிடமிருந்து தப்பித்துக்கொள்ள முயன்றேன். அதனால், ஓடவேண்டிய வழியை விட்டு, என் வலப் பக்கமாகத் திரும்பி ஓடினேன். மிக விரைவாக அவர் ஓடிவந்து, என்னை வழிமறித்துவிட்டார். "உனக்குக் களைப்பாக இருந்தால், இன்னும் இதனைச் சாப்பிடு. நீ சாப்பிடுவதால் இது குறைந்து போகாது. இன்னும் எத்தனை பேர் சாப்பிட்டாலும் இது குறைவுறாது. சாப்பிடு, சும்மா சாப்பிடு, அப்பா !'' என்று அவர் சொன்னார். மீண்டும் நான் காற்றை உட்கொண்டேன் ; என் களைப்பும் ஒருவாறு நீங்கிற்று.

"உங்களை நான் இனி, தாதா என்றுதான் அழைக்கப் போகிறேன். தாதா, தாதா, இந்த விடத்திற்கும் சூரியனுக்கும் எவ்வளவு

தூரம்? தயவுசெய்து சொல்லுங்கள்'' என்று கேட்டேன். 'அதெல்லாம் நீ ஒரு நாளில் தெரிந்துகொண்டு ஓடிவிடப் பார்க்கிறாயா? முடியாது, முடியாது. இங்கு நீ அடிக்கடி வந்து கொண்டிருந்தால், உனக்குப் பின்னால் சொல்லுவேன்'' என்று கூறினார் அவர். "929 லட்சம் மைல் தூரத்தில் சூரியன் இருக்கிறான் என்று எங்கள் உபாத்தியாயர் சொல்லிக் கொடுத்தாரே. யாரோ நிபுணர் ஒருவர், ஜீன்ஸ் என்ற பெயருடையவராம்; அவர் அவ்வாறு கணக்கிட்டுச் சொல்லியிருக்கிறார் என்றாரே எங்கள் உபாத்தியாயர். அது என்ன பொய்யா?'' என்று கேட்டேன்.

அதற்கு, தாதா சொன்னார்:—''இவ்வாறெல்லாம் கண்டுபிடித்ததுபோலவும் கணக்கிட்டது போலவும் சொல்வார்கள். பூமியைவிட மூன்று லட்சம் மடங்கு சூரியனுக்குப் பளுவுண்டு என்று சொல்வார்கள். பூமியைவிடப் பன்னீராயிரம் மடங்கு சூரியன் விசாலமானவன் என்றுஞ் சொல்வார்கள். ஒரு செகண்டிலே சூரியன் 200 மைல் தூரம் போய்விடுகின்றான் என்றுஞ் சொல்வார்கள். சூரியனைவிடச் சிறிய நட்சத்திரங்கள் பல இருக்கின்றனவாம். சூரியனைவிட மிகப் பெரிய நட்சத்திரங்கள் சில இருக்கின்றனவாம். அவை யெல்லாம் சூரியனைவிட அதிக தூரத்தில் இருப்பதால் கண்ணுக்குச் சிறுத்துத் தோன்றுகின்றனவாம். இப்படியெல்லாம் அவர்கள் சொல்வார்கள். உண்மை தெரிந்துகொள்ள வேண்டுமானால் இங்கு அடிக்கடி வா; அறிந்துகொள்ளலாம்.''

"தாதா! அது இருக்கட்டும். ஒரு கதை சொல்லுங்கள்'' என்று கேட்டேன். அவரும் சொல்ல ஆரம்பித்தார்:—''ஓர்! ஊரிலே ஒரு பையன் இருந்தான். அவன் பெயர் சுந்தரன். அவன் பள்ளிக்கூடத்தில் படித்துக்கொண்டிருந்தான். அவனைப் பார்ப்பவர்கள் 'பாரடா! இந்தப் பையன் யாரடா? என்ன மல்லன் போல் இருக்கிறானே இவன்! இவன் உடம்பைப் பார்த்தாயா? இவன் முகத்தைப் பார்த்தாயா? இவன் மார்பைப் பார்த்தாயா? என்ன அழகு! என்ன களை! எவ்வளவு அகலம்!' என்று பேசிக்கொள்வதுண்டு. அவ்வளவுக்குங் காரணம் மாலை நேரத்தில் பள்ளிக்கூடம் விட்டதும் அவன் ஓடியாடி விளையாடுவதுண்டு. வியர்வை சொட்டச் சொட்ட விளையாடுவான். பிறகு ஒரு வெட்டவெளியான இடத்தில் உட்கார்ந்துகொண்டு காற்றை உட்கொள்வான். மார்பை மாத்திரம் மூடிக்கொண்டுதான் இருப்பான். அரை மணி நேரங் கழித்து, வியர்வை அடங்கியதும் குளிப்பான். காய்ந்த ஆடையால் உடம்பை நன்றாகத் துடைத்துக்கொண்டு

ஆகாரம் உண்ணுவான். அவ் வாகாரம் அவனுக்கு அமுதம் போலவே யிருக்கும். ஏனென்றால், அவன் விளையாடிய பிறகு, கெட்ட இரத்தம் எல்லாம் வியர்வையாக வெளிப்பட்டுவிடும். நல்ல இரத்தம் எல்லாவிடங்களிலும் பாயும். நல்ல இரத்தம் உடம்பில் ஓடினால் நிரம்ப நிரம்ப நல்லது. இன்னும் நல்ல ரத்தம் வேண்டுமென்று சில உறுப்புக்கள் உடம்பில் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும். இரத்தம் உண்டாவதற்குச் சாப்பாடு, தண்ணீர், காற்று முதலானவை வேண்டும்; எப்பொழுது சாப்பாடு வரும் வரும் என்று உடம்பிலுள்ள இயந்திரம் எதிர்பார்த்துக் கொண்டே யிருக்கும். அப்பொழுதுதான் பசி யெடுக்கும். பசித்ததும் புசித்தல் மிகவும் நல்லது. பசித்துப் புசித்தால் உணவு அமுதம்போல் தானிருக்கும். சாப்பிட்டது உடம்பில் ஒட்டும். தேகத்தில் பலமுண்டாகும். இக் காரணத்தால்தான் சுந்தரன் பார்ப்போரெல்லாம் ஆச்சரியப்படும்படி இருந்துவந்தான்.

"சுந்தரத்துடன் படித்த மற்றப் பிள்ளைகள் விளையாடுவதில்லை. அந்தப் பள்ளிக்கூடத்தில் விளையாடுவதற்கு இடமில்லை. அதனால், அவர்களிற் சிலர் தென்னமரம்போல் வளர்ந்து, மார்பு என்பது உண்டோ என்று சொல்லும்படி இருந்தனர். வேறு சிலர் பூசனிக்காய் போன்று பருத்து, பெஞ்சிப் பலகையளவு உயரங்கூட இல்லாமல் இருந்தார்கள். இப்படி, உயரமிருந்ததால் சுற்றளவில்லை, சுற்றளவிருந்தால் உயரமில்லை என்னும்படி அவர்கள் இருந்து வந்தார்கள். வீட்டிற்குப் போனால் கதவை அடைத்துக்கொண்டு உள்ளேயே இருப்பது அவர்களுடைய வழக்கம் அவர்களுடைய பெற்றோரும் அதிகமாக அவர்கள் தேக வளர்ச்சியைக் கருதவில்லை போலிருக்கிறது. அதனால், புல் தடுக்கினால் கீழே விழுகிறவர்களும், விழுந்தால் எழ முடியாதவர்களுமாக அந்தப் பள்ளிக்கூடப் பையல்கள் இருந்து வந்தார்கள். அதே ஊரிலே வேறொரு பள்ளிக்கூடம் உண்டு. அங்கும் விளையாடுவதற்கு இடமில்லை. அங்கு இராமையர் என்று ஓர் உபாத்தியாயர் உண்டு. வீட்டிற்குப் போனதும், சுத்தமான தெருவிலாகிலும் தோட்டத்திலாகிலும் பையல்கள் விளையாட வேண்டுமென்று அவர் சொல்வார். நல்ல சுத்தமான காற்றை உட்கொள்ளவேண்டுமென்றும் சொல்வார். இரவில் படுத்துக்கொள்ளும்பொழுது வீட்டின் ஜன்னல் கதவுகளைத் திறந்தபடி வைத்துக்கொண்டே தூங்கவேண்டும் என்றும் சொல்வார். பகலில் எல்லாம் என் அண்ணன் சூரியனுடைய ஒளி, வீட்டினுள் படும்படி செய்ய வேண்டுமென்றுஞ் சொல்வார். பகலிலும் வீட்டிற்குள் நல்ல காற்று வருவதற்காக, கதவுகளையும் ஜன்னல்களையும் திறந்து

வைத்துக்கொள்ள வேண்டுமென்றுஞ் சொல்வார். சொல்லியபடி பிள்ளைகள் செய்து வருகிறார்களா என்ப் பெற்றோரை விசாரித்து வருவார். பெற்றோர்க்கும் இவ்வித விஷயங்களை எடுத்துச் சொல்வார். அவருடைய மாணாக்கர்கள் அநேகமாக எல்லோரும் உன்னைப்போலிருப்பார்கள்'' என்று தாதா சொன்னதும் நான் திடுக்கிட் டெழுந்தேன்.

"எங்கள் உபாத்தியாயரைப் பற்றித்தானா நீங்கள் சொல்வது? அவர் பெயர் எனக்குத் தெரியாது. ஆனால், மாநிறமாக இருப்பார் அவர்'' என்று நான் கூறினேன். தாதா, "அது இருக்கட்டும், இன்னுங் கொஞ்சம் சாப்பிடு, இன்னுங் கொஞ்சம் சாப்பிடு'' என்றார். நானும் காற்றைப் புசித்தேன். புசிக்கப் புசிக்க என்னிடம் ஒரு புது சக்தி உண்டாவது போலவே இருந்தது. அதனால் காற்றைப் புசிப்பதில் இன்றைக்கும் எனக்கு இஷ்டந்தான். ஆனால், நல்ல காற்றாக மட்டும் இருக்கவேண்டும். அன்று என் பாக்கியமே பாக்கியம்! எவ்வளவு நல்ல காற்றைச் சாப்பிட்டேன்! நான் சாப்பிட்டுவிட்டு, விட்ட கதையை முடிக்கும்படித் தாதாவைக் கேட்டேன். அவரும், "கீழே படுத்துக்கொள், நான் சொல்லுகிறேன்'' என்றார். கீழே புல்லின் மீது படுத்துக்கொண்டேன். புல்தான் எனக்கு மெத்தை; புல்தான் எனக்குத் தலையணை. ஆகாசம்தான் எனக்குக் கூரை; காற்றிராயர் எனக்குத் துணை என்று நினைத்துக் கொண்டு படுத் திருந்தேன். என்ன ஆனந்தம்! என்ன ஆனந்தம்!! பூமி என்னோடு உறவுகொண்டாடியதுபோல் இருந்தது. தாயார் குழந்தையைக் கையில் ஏந்திக்கொண்டிருப்பது போன்று, என்னைப் பூமி ஏந்திக்கொண்டிருந்தது. சூரியன் என்னைப் பார்த்துப் புன்னகை செய்வதுபோலிருந்தது. காற்று முத்தமிட்டுப் பாடுவது போல் இருந்தது.

இந்த ஆனந்தத்தை நான் அனுபவித்துக் கொண்டிருக்கும் பொழுது, தாதா எங்கேயோ போய்விட்டார்போலிருந்தது. நானும் சிறிது தூங்கிவிட்டேன். ஆனால், தாதா என்னை விட்டாரில்லை; வந்து எழுப்பினார். நானும் கண்ணைத் துடைத்துக்கொண்டு எழுந்தேன். தாதா எங்குப் போயிருந்தார் எனக் கேட்டேன். "உபாத்தியாயர் இராமையர் வந்திருந்தார். அவருக்கு ஒரு கதை சொல்லிவிட்டு வருகிறேன்'' என்றார் அவர். "அவர் போய்விட்டாரா? நான் அவரைக் காணவேண்டும்'' என்று சொன்னேன். மறுமுறை அவர் வரும்பொழுது தாதா அவரைக் காட்டுவதாகச் சொன்னார்.

இதற்குள், சூரியன் என்னை வீட்டிற்குப் போகும்படி சொல்லியதுபோல் தோன்றிற்று. தாதாவிடம் விடை கேட்டேன்; அவரும்

விடை யளித்தார். "வீட்டிற்கு வழிகாட்ட வேண்டும்" என்றேன். என்னை வெகுதூரம் கொண்டுவந்துவிட்டு ஒரு முத்தங்கொடுத்து, "அப்பா! கண்ணே! போய்வா; அடிக்கடி இங்கு வந்துகொண்டு மாத்திரம் இரு; உன் நன்மைக்குத் தான் சொல்கிறேன். உனக்குப் பயமாயிருந்தால் பெரியவர்களை இட்டுக்கொண்டு வா. நீ தனித்து வருவது பிசகுதான். இனி அவ்வாறு செய்யாதே. உன் நண்பர்களையும் பெற்றோர்களையும் அழைத்துக்கொண்டுவந்து என்னைச் சாப்பிடு. நிரம்பச் சாப்பிடலாம்; பயப்படாதே; ஒன்றுங் குறையாது" என்று அவர் சொன்னார்.

"தாதா, தங்களைச் சாப்பிடுகிறதா? அது என்ன விந்தை! அது என்ன அநியாயம்?" என்று நான் பதறித் துடித்துக் கேட்டேன். அதற்கு, "ஒன்றும் விந்தையில்லை; அநியாயமில்லை. என்னை நீ சாப்பிடுவது நியாயந்தான். உனக்காகவே நான் இருக்கிறேன். நன்றாகச் சாப்பிடலாம். என்னை நீ 'தாதா தாதா' என்று அழைத்தால் நான் தாதா ஆய்விடுவேனா? 'நீ தா தா' என்று கேட்கிறாய் என்று கொடுத்துக்கொண்டே தான் இருப்பேன். நான் உனக்குப் பாட்டன் அல்ல; நான் காற்றிராயன் என்று முன்னமே சொல்லவில்லையா? இப்பொழுதும் நான் சொல்லுகிறேன், நான் காற்றிராயன் தான்; காற்றாகிய இராசன் நான்; நீ அறிந்துகொள்ளவில்லையா?" என்று அவர் சொல்லிவிட்டு ஓடோடியும் போய்விட்டார். பின்னொரு நாள் போய்ப் பிடித்துக் கொள்ளலாம் என நினைத்து, அன்று நான் வீட்டிற்குத் திரும்பி வந்துவிட்டேன்.

# பிராணிகளின் விளையாட்டு

பா. மு. சோமசுந்தரன்

குழந்தைகளுக்கு விளையாட்டில் விருப்பம் மிகுதி. விளையாட்டே அவர்களுக்கு முதன்மையான தொழில். விழித்திருக்கும் நேரமெல்லாம் பெரும்பாலும் ஆட்டத்திலேயே அவர்கள் கழிப்பார்கள். கனவிலும் அவர்களுக்கு விளையாட்டே; உறங்கும்போது அவர்கள் செய்யும் பிதற்றலும் சைகையும் விளையாட்டுக்குச் சம்பந்தப்பட்டவையே. 'முப்பது நாழிகையும் விளையாட்டே மணியமா?' என்று பெரியோர் தாங்கள் இருந்த இருப்பை மறந்து அலுப்போடு முறையிடுவதைக் கேட்டிருக்கின்றோமல்லவா? 'மூலையேதும் வேண்டேனென் றோடிப்' பசிகூடத் தெரியாமல் பகலெல்லாம் ஆடிக்கொண்டிருப்பது மக்களது இயல்பு. பிள்ளைப் பருவத்தின் இலக்கணங்களில் சிறந்து தோன்றுவது விளையாட்டே.

மானிடக் குழவிகளைப் போலவே பல பிராணிகளின் குழவிகளுக்கும் விளையாட்டே பொழுதுபோக்காக அமைந்திருக்கின்றது. பூனைக்குட்டி பந்து விளையாடுவது பார்ப்பதற்கு வெகு விநோதமாக இருக்கும். பந்து என்பதில்லை; கிழிந்த காகிதமோ, பீறற்பாயோ, உலர்ந்த சருகோ எதுவானாலுஞ் சாலும்; அதனைக் காலால் தள்ளி அசையும்படி செய்யும்; அசையும் அப் பொருளை அடிக்கும்; அறையும்; இரண்டு காலாலும் பிடிக்கும்; மோக்கும்; கடிக்கும்; அதனின்று பின்னுக்கு மெல்ல ஒடுங்கும்; மறுநொடியிற் பொள்ளென அதன்மேற் பாயும்; விடும்; திரும்பப் பற்றும்; சற்று ஓய்ந்து படுக்கும்; பழையபடி ஆடத் தொடங்கிவிடும். தன் தாயின் வாலைப்பற்றிக்கொண்டும் இம்மாதிரியே விளையாடும். தாய் நெடுநேரம் பொறுத்திருக்கும். அதன் முகத்தைப் பார்த்தால் தன் குழந்தையின் ஆட்டத்தைக்கண்டு புன்னகை கொண்டிருக்கின்றதோ என்னும் எண்ணம் நமக்கு உண்டாகலாம். பின்னர் இதென்ன சள்ளை என்று நினைப்பது போன்ற குறிப்புத் தோன்றுகிறதோ என்று நாம் எண்ணும்படி கண்ணைப் பாதி மூடிக்கொண்டிருக்கும். இன்னும் குறும்பு குறையாதிருக்குமாயின் 'சீ, சும்மா இரு' என்பது போல உருமும். குட்டியின் கொட்டம் சற்று அடங்கும். இரண்டு மூன்று குட்டிகள் இருந்தாலோ அவற்றின் ஆட்டத்தை நாளெல்லாம் பார்த்தாலும் நமக்குச் சலியாது. அவை ஒன்றையொன்று பார்த்துப் பின்னுக்குப் பெயர்ந்தோடிப் பதுங்கிப் படுத்து எழுந்து மெல்ல ஒதுங்கிக் கள்ளத்தனமாய் நடந்து ஒளிந்து பின்பற்றிச்

சென்று நெருங்கிப் பொட்டெனப் பாய்ந்து தாக்கிப் பிடித்துப் புரண்டு உருண்டு அகன்றுபோய்ப் பின்னும் கிட்டி மோதித் தள்ளிக் கவ்விக் கடித்து உருமிச் சீறிப் பொய்வேட்டை யாடியும் பொய்ச் சண்டை யிட்டும் விளையாடும். குட்டிகள் தாயின் அருகிலிருந்து விளையாடுவதன்றித் தனித்தும் விளையாடுவதுண்டு. இவ் வண்ணமே நாய்க்குட்டிகளும் குலைத்துக்கொண்டு இரைக்க இரைக்கச் சுற்றி யோடி, வாயோடு வாய் கவ்விக் காலையும் வாலையுங் காதையுங் கழுத் தையுங் கடிக்காமற் கடித்து, நோவாமல் வருத்திச் சலமின்றிக் கலாம் விளைத்து விளையாடுவது யாவரும் அறிந்ததே. ஆட்டுக்குட்டிகள் செண்டுபோலத் துள்ளித் துள்ளிக் குதித்தோடி ஆடும். இரண்டு குட்டிகள் எதிர்த்து வந்து ஒன்றையொன்று வலிவாக விசையோடு தாக்கற்குப் போந்து முன்னங் காலை மடக்கி உடம்பை நிமிர்த்திப் பின்காலில் நின்று தலையை ஒரு புறஞ் சாய்த்து முன்னுக்குப் பாய்ந்து மாந்தளிர்போல் தொங்கும் காதுகள் அசையக் கொம்பு சற்றும் அரும்பாத மழமழவென்றிருக்குஞ் சிறுதலையோடு சிறு தலையை முட்டிப் பொய்ப்போர் புரிவது காண்பதற்கு எவ்வளவு அழகாக இருக்கும். இக் காட்சியைக் கண்ணுறுவோர்க்குப் பசுங் குழவிகளோடு டீடீடீடீடீ என்று விளையாடும் நினைவு வந்து மெய்ம்மயிர் பொடிப்பினும் பொடிக்கும். பசுவின் கன்றுகளும் தலையை உயர்த்தி வாலைநெறித்து முதுகை வளைத்து முன்னுடலிற் பின்னுடலைச் செருகிக்கொண்டு குடுகுடு என்று தாவித்தாவி யோடும். ஓடியோடித் திரும்பும். கன்றோடு கன்று தலையைத் தாழ்த்தி மோதிக்கொண்டு ஒறுத்து நின்று பொய்ச் சண்டை இடும்.

வீட்டு விலங்குகளின் குட்டிகளே யன்றிச் சில காட்டு விலங்கு களின் குட்டிகளும் விளையாட்டில் விருப்புள்ளனவே. சாலை மரங் களிலும் கோவில் மதில்களிலும் குரங்குக் குட்டிகள் கும்பு கூடிச் செய்யும் சேட்டையும் ஆடும் ஆட்டமும் வெகு வேடிக்கையாக இருக்கும். மக்கள் மரக்குரங்கு என்னும் ஆட்டம் ஆடுவார்களே அதைப்போலவே இக் குட்டிகளில் ஒன்று மற்றொன்றைத் துரத்திப் பிடிக்க முயலும். மற்றது படகோடேறித் துடுமெனப் பாய்ந்தும் தொத்தியுந் தொங்கியுங் கிளையைப்பற்றி உலுக்கியும் அதற்கு ஆட்டங் காட்டும். ஒரு குரங்கு செய்கிற மாதிரியே மற்றவையுஞ் செய்வது இன்னொருவகை விளையாட்டு. இதன் வாலை அது இழுத் தும் அதன் வாலை இது இழுத்தும், இதனை அது புரட்டியும் அதனை இது புரட்டியும், தழுவுவழித் தழுவியும் தங்குவழித் தங்கியும் இவை ஆடும் ஆட்டத்தைக் கண்டு விநோதமும் மகிழ்ச்சியும் உறுதவர்

யாவர்? பிள்ளைகள் தாய் தந்தையரின் 'வாலைப் பிடித்துக் கொண்டே' திரிவது இப் பூர்வஜன்ம வீலாவிசேஷ வாசனையாமோ! மான்மறிகளும் ஆட்டுக்குட்டிகளைப் போலவே ஆடும். அவை பாறையை மிதித்திடும். மெல்ல மெல்ல வெறித்திடும். வெருவி மீதிற் குதித்திடும். செவியை நீட்டிக் குரபதம் உரத்தைக் கூட்டிக் குதித்தெழும் ஊதையும் உள்ளமும் உருவச் செல்லும் கதிக்கு ஒரு கல்வி வேறே காட்டுவதென்ன ஓடும். கலை யொன்றுந் தோன்றுத தோலும் மயிரும் பொதிந்து மெத்தென்ற இளங்கொம்புகளாலே ஒன்றையொன்று குத்தி விளையாடிப் பொழுது போக்கும்.

சில பறவைச் சாதியின் பார்ப்பும் விளையாட்டுக்காகச் சண்டையிடும். அடிக்கடிப் பறந்து சுழலும். என்ன நோக்கத்தோடு இப்படி பறக்கிறதென்று கவனித்தால் ஒரு நோக்கமும் புலப்படுவதில்லை. தவழுங் குழந்தைக்குத் தவழ்தலும், தளர்நடைக் குழந்தைக்கு நடத்தலும் இன்பமாதல் போலப் பறத்தலில் இக் குஞ்சுகளுக்கு இன்பம். இன்னும் பறத்தலில் தமக்குள்ள திறமையையும் சதுரப்பாட்டையும் காட்டிக்கொள்வது அவற்றிற்குக் களிப்பைத் தருவதுபோலும். தாம் ஒன்றில் வல்லவர்கள் என்பதைப் பிறருக்குக் காட்டிக்கொண்டு இன்புறுவது சிறு மகார்க்கும் இயல்பு. பெரியோர் மாத்திரமென்ன இவ் வியல்பின் நீங்கினவரோ! இவற்றைத் தவிர விளையாட்டினால் உடனே அடையும் பயன் வேறொன்றும் தெற்றெனக் காண்பதில்லை.

நேராக விளையும் பயன் ஒன்றும் வெளிப்படையாகக் காணுதிருத்தலே விளையாட்டின் பிரதான இலக்ஷணங்களில் ஒன்று. ஒரு குறிக்கோளைக் கருதிச் செய்யும் முயற்சி விளையாட்டாகாது; வேலையாகும். வேலையைப்போலக் கஷ்டமானதும் பெருமுயற்சி செய்தே நடைபெறுவதும் மிகுந்த களைப்பைத் தருவதுமாயினும் விளையாட்டை வேலையென்றெண்ணுதல் கூடாது. விளையாட்டு வெறுந் தேகாப்பியாசமுமன்று. எவ்வகை உடற்பயிற்சியிலும் சிறந்த பயிற்சி விளையாட்டே. சிலவித ஆட்டங்கள் நிரம்ப உழைப்பு வாங்கும்; உடம்புக்கு நிரம்ப வருத்தத்தையும் உண்டு பண்ணும். ஆயினும் விளையாட்டைக் கேவலம் அங்கசாதனையெனக் கருதுதல் ஒண்ணுது. யாதானும் ஒரு பயனை ஆராய்ந்து நிச்சயித்து அதனை அடைவதற்கு உபாயமாக எந்த விளையாட்டுங் கைக்கொள்ளப்படுவதில்லை. இன்ன விளையாட்டினாலே இன்ன பலன் சித்திக்கும் என்னும் முன்னுணர்வு பிராணிகளுக்கு உண்டு என்று நாட்டமுடியாது. ஆயினும் ஒரு பிராணி தனக்கு இயல்பாய்த் தன்னுள் அடங்கிய சக்தி முழுவதையும் கையாளுந் திறனைப் பெறவேண்டுமாயின் விளை

யாட்டு, பெரும்பாலும் இன்றியமையாததாகும். விளையாட்டு முற்றிலும் சாமாஜிக காரியமுமன்று ; ஒப்புரவு வாழ்க்கை விளையாட்டுக்கு ஆவசியகமன்று ; பிராணிகள் சில பல கூடியே ஆடவேண்டும் என்னும் நியதி யில்லை. பூனைக்குட்டி பல சமயங்களில் தன்னந் தனியே ஆடிக்கொண்டிருப்பதைக் காணலாம். இனி, ஒன்றை யொன்று முந்தவேண்டும், வெல்லவேண்டும் என்னும் போட்டி விளையாட்டில் மனவெழுச்சியையும் கவர்ச்சியையும் கொடுக்கும்; கூரிய தீஞ்சுவையையும் ஊட்டும். ஆயினும் பாட்டினால் உண்டாகும் ஊக்கமே விளையாட்டுக்குக் காரணம் என்றல் பொருந்தாது. இராகத்தில் தாளம் எப்படியோ, இரசத்தில் ஸ்தாயிபாவம் எப்படியோ அப்படியே விளையாட்டில் முதன்மையாகவும் நிலையாகவும் காணுந்தன்மை ; ஒரு பிராணி தன் முழு வளர்ச்சியும் நிரம்பின காலத்தில் செய்யும் செயல்வகைகளை முன்னதாக இளமையிலேயே செய்து பழகுதலாம் எனத் தெரிகிறது. மேல் யௌவனத்திற் செய்யப்போகுங் காரியத்தை எதிர்நோக்கிப் பால்யத்திற் செய்யுங் காரியம் விளையாட்டென்ப.

பிராணிகள் பல்லாயிர வகையின. அவற்றுள் எவையோ சில வகையினதாம் விளையாடுகின்றன. பூனை நாய் நரி நீர்நாய் முதலிய புலவூன் விலங்கு, செம்மறி வெள்ளாடு பசு குதிரை கழுதை முதலிய குளப்படி விலங்கு, பல்வகைக் குரங்கு முதலியவற்றின் குட்டிகளிடத்தும், சாதாரணமாக நமது கண்ணுக்குத் தென்படாத அணில் நீரெலி முதலியவற்றின் குட்டிகளிடத்தும் விளையாட்டை நாம் நன்றாகக் காணலாம். இவையெல்லாம் தமது குட்டிகளுக்குப் பால் கொடுக்கும் ஸஸ்தனி வகுப்பைச் சேர்ந்தவை என்றாலும் எல்லாப் பாலூட்டு விலங்குகளின் இளமையிலும் விளையாட்டு ஒரு பொதுவியல்பாகத் தோன்றுகின்றதென்று கொள்வதற் கிடமில்லை. பறவைகளிலும் விளையாட்டு சாதாரணமானதன்று; ஊர்வன, தவளை, மீன் வகுப்புக்களிலும் சிறிதே குறிப்பாகத் தோன்றுகிறது ; முதுகெலும் பில்லாத புழு பூச்சி நண்டு நத்தை முதலான உயிரினங்களில் இவ்வகை விளையாட்டு முளைத்ததோ இல்லையோ என்னும்படி யிருக்கிறது. ஆகவே இயங்கியல் உயிர்களில் மிகச் சிறியதொரு பகுதியில் தான் விளையாட்டுக் காணப்படுகிறது. இவ் வுண்மையைக் கவனித்தால், 'சிலவகைப் பிராணிகளின் வாழ்க்கையில் மாத்திரம் விளையாட்டுப் பருவம் இடைச்செருகிக் கிடப்பானேன்?' என்னும் வினா எழுகிறது. விளையாட்டினால் பிராணிகள் அடையும் நன்மை ஏதோ உண்டு என்பதும் ஆயினும் அந் நன்மையைச் சில உயிர்வகைகளே கைவரப் பெற்றிருக்கின்றன என்பதும் விளங்குகின்றன.

# இந்தியா உண்டானது எப்படி?

டி. என். முத்துஸ்வாமி ஐயர்—பி. என். அப்புஸ்வாமி ஐயர்

(257-ம் பக்கத்தொடர்ச்சி)

அடுத்த யுகமாகிய கிரெடேஷஸ் யுகத்திலும் கடலானது இவ்வாறே ஆக்கிரமித்து வந்தது; நிலங்கள் உடைபட்டுத் தகர்ந்து




கிரேடேஷஸ் காலத்து இந்தியா.

கடல்களாயின. சோழமண்டலக் கரையின் மீது கடலானது இன்னும் சற்று அதிகமாகவே படையெடுத்து வந்தது. அதை இன்னும்

சற்று அதிகமாகக் கவர்ந்து கொண்டது. இப்பொழுது தென் இந்திய ரயில்வேயில் விருத்தாசலத்துக்கும் திருச்சினப்பள்ளிக்கும் இடையே குறுக்காகப் போடப்பட்டிருக்கும் இருப்புப்பாதை இருக்கும் இடமெல்லாம் அந்தக் காலத்திலே கடலுள் மூழ்கியோ அல்லது அதன் அலைகளால் மோதப்பட்டோ இருந்தன. மேல் புறத்திலே டெதிஸ் கடலானது நர்மதை ஆறு ஓடும் பள்ளத்தாக்குள்ள பிரதேசத்திலே ஆழ்ந்த வளைகுடாவாகப் புகுந்திருந்தது. அந்தப் பிரதேசமானது மிகவும் அமிழ்ந்து போன பள்ள பூமி. பூமியில் உண்டாகிய குழப்பங்கள் வர வர அளவில் மிகுந்து கொண்டே வந்தன. இந்தோ-ஆப்பிரிக்கா எனப்படும் இந்தியாவும் ஆப்பிரிக்காவும் ஆகிய பெரிய நிலப்பகுதியானது அநேக இடங்களில் வெடித்துக் கீறிப் போயிற்று. அதனால் அது தாழ்ந்து பள்ளமாய்ப் போயிற்று. தெற்குச் சமுத்திரம் அந்தப் பள்ளப் பிரதேசத்தின் மீது படையெடுத்து வந்து, அதைத் தாக்கிப் பாய்ந்து கவர்ந்துகொண்டு, வெகு துரிதமாக அரபிக் கடலை உண்டாக்கிற்று. பூமியின் வடபுறத்திலே தோன்றிய குழப்பங்களால் ஆழமற்ற டெதிஸ் கடலும் அதன் கிளைகளாகிய வளை குடாக்களும் சற்று மேற்காகத் துரத்தப்பட்டன. அவை இருந்த இடத்துக்கு அறிகுறியாக இமயமலைப் பிரதேசத்தில் இரண்டு பெரிய ஏரிகள் மட்டும் மிஞ்சின. இவ்வாறு, தெற்கே நிலமானது கடலுக்கு இடம் கொடுத்தது; வடக்கே கடலானது புதியதொரு பூமிக்கு இடம் கொடுத்தது. இவ்வாறு உண்டாகிய மாறுபாடுகள் யாவும் பின்பு வரப் போகும் மிகப்பெரிய குழப்பத்தைக் காட்டி நின்றன. இக் குழப்பம் எரிமலை சம்பந்தமானது. அளவிலோவெனின், இதற்கு இணையாகச் சொல்லக் கூடிய எரிமலை வெடிப்புக்கள் இதுவரை நிகழ்ந்ததில்லை. நீர் இறைக்கும் பம்புகளின் வாய்களிலிருந்து இடைவிடாது ஜலம் கொட்டுவது போல், அக்காலத்திலே, எரிமலைகளின் வாய்களிலிருந்தும் அவற்றிலுண்டாகிய பெரிய வெடிப்புக்களிலிருந்தும் ஓயாது வெள்ளம் போல் கற்பிரவாகமானது பொங்கி வழிந்து கொண்டே இருந்தது. வெசூவியஸ் மலை வெடிப்புக்களைப் போல் வெடி, பாண வேடிக்கை ஒன்றும் இல்லாமல், ஓசைப்படாமல் கல் ஆறு பெருக்கெடுத்து ஓடிக்கொண்டே இருந்தது. இவ்வாறு வெகு காலம் நிகழ்ந்தது. பம்பாய் ராஜதானி குஜராத் ஸிந்துப் பிரதேசங்கள் ஆகிய இவை இப் பிரவாகத்தின் வாய்ப்பட்டு மிகவும் சேதப்பட்டுப் போயின. எரிமலை வெடிப்பின் ஆதிக்கியமானது நாட்டிலெங்கும் உணரத்தகும் தன்மையதாய் இருந்தது. பம்பாய்க்கும் ராஜமகேந்திரத்துக்கும் எவ்வளவு தூரம்? அப்படி யிருந்தும்

பம்பாயில் உதித்த கற்பாறை வெள்ளமானது ராஜமகேந்திரப் பிரதேசமெல்லாம் பெருகி ஓடிற்று. ஐம்பது லக்ஷம் சதுர மைல்




தக்ஷிண பீடபூமியின் அகற்சி.

விஸ்தீர்ணமுள்ள பெரும் பிரதேசம் முழுவதிலும் இக்கற்பிரவாகம் பெருக்கெடுத் தோடி அதை மூடியது. இப்பெரும் பிரதேசத்தில் எங்குப் பார்த்தாலும் கற்பிரவாகம் தென்படுமே தவிர வேறொன்றும் தென்படாது. இவ்வாறு பல தடவைகளாக வெள்ளம் பெருக்கெடுத்தது. ஒவ்வொரு தடவையிலும் ஓடிப்படிந்த கற்பிரவாகமானது சராசரி பதினைந்து அடி உயரமிருக்கும். சிற்சில இடங்களில் இவ்வாறு 50 அடி உயரம் வரை உருகிய கல் மேன்மேலும் படிந்துவிட்டது. இவை எல்லாம் நேரும்போது, முன்னிருந்த ஏரிகள் முன்

னரே நதிகள் ஓடும் அகன்ற பள்ளத்தாக்குக்களாக மாறி அமைந்தாகி விட்டன. இவையாவும் இக் கற்பிரவாகத்தால் மூடுண்டன. எனினும் அப் பெரும்பள்ளங்கள் முற்றிலும் நிரம்பவில்லை. அவை அக்கம் பக்கங்களுக்குச் சமமாக ஆகவில்லை. அவற்றைக் காட்டிலும் சற்றுத் தாழ்ந்தே இருந்தன. ஆதலால் மீண்டும் அவ்வழியே நீர் வழிந்து நதிகளாய் ஓடுவதற்குச் சாத்தியமாய் இருந்தது. இன்றும் அவ் விடங்கள் பள்ள பூமிகளாகவே இருந்து வருகின்றன. அவை தாம் இப்பொழுது நமது தீபகற்பத்தில் நர்மதை மஹாநதி கோதாவரி முதலிய நதிகள் ஓடும் பிரதேசங்கள். அந்தக் காலத்தில் ஏற்பட்ட விசேஷ நிகழ்ச்சியென்று சொல்லத்தகுவது பூமியானது இருந்த இடத்திலேயே நேராக ஆழ்ந்து தணிந்துபோனது தான். இதுவும் நதிப்பாசனங்களை மீண்டும் ஏற்படுத்துவதற்குத் துணையாயிருந்தாலும் இருந்திருக்கலாம். அக்காலத்திலே வாழ்ந்து வந்த செடிகொடிமரங்களுக்கும் ஜீவஜந்துக்களுக்கும் என்ன கதி நேர்ந்திருக்கும் என்று சொல்லவேண்டியதில்லை; அவற்றின் கதி என்னவென்று நாம் எளிதில் ஊகித்துக்கொள்ளலாம். பூமியின் அடிவயிற்றிலிருந்து கற்பிரவாகமாக இவ்வளவு கற்பொருளும் வெளியிலே தள்ளப்பட்டபடியால் அதன் அக்கம்பக்கத்திலிருந்த நிலப்பிரதேசங்கள் இன்னும் ஆழ்ந்துபோயின. அரபிக்கடலும் வங்காளக் குடாக்கடலும் ஸ்திரமாக ஸ்தாபிக்கப்பட்டன.

கொண்டவன நிலத்தை உடைத்துத் தகர்த்த பூமியின் அதிர்ச்சிகளும் இயக்கங்களும் வடக்கேயும் தெரியாமல் போகவில்லை. பிந்திய கிரெடேஷஸ் யுகத்திலோ அல்லது முந்திய டெர்ஷரி யுகத்திலோ இமயமலைப் பள்ளபூமியிலே படிந்திருந்த வண்டல் தொகுதிகள் வடபுறமிருந்தும், வடகீழ்ப்புறமிருந்தும், வடமேற்புறமிருந்தும் அழுத்தித் தூக்கித் தள்ளப்பட்டன. இவ்வழுத்தங்களைத் தாங்க மாட்டாமல், அவைகளில் மிகவும் சுருக்கல்விழுந்து, அவை மடிந்து அழிந்துபோயின. பழைய கண்டத்தின் வடவிளிம்பானது இவ்வாறு உண்டாகிய அழுத்தங்களுக்கு ஏற்ப மாறுபட்டுச் சௌகரியப்படுத்திக்கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டு விண்டுபோயிற்று. மேன்மேலும் அழுத்தமானது உண்டாக உண்டாக இந்த விளிம்போரமாகப் பாறைகள் கொண்டு தள்ளப்பட்டன. இதுதான் இமயமலைத் தொடரின் முதன்முதல் ஆரம்பம். அழுத்தமானது மிகமிக இத் தொடர்கள் மேன்மேலும் உயரக் கிளப்பப்பட்டன. மலைகளைக் கட்டுவிக்கின்ற பெரிய இயற்கைச் சக்திகளின் இத்தகைய வன்மையானது பெரும்பாறைத் தொகுதிகளை ஒன்றின்மேலொன்று சறுக்கும்படி தள்ளிற்று. இதனால் பாறைகள் உடைபட்டுப்

போயின. பாறையில் உண்டாகிய பிளப்பானது வரவர விரியவே பாறையானது முற்றிலும் கீறிப் போயிற்று. அப்படிக் கீறிய பாறையானது உருண்டு பள்ளத்தில் சரிந்தது. இவ்வாறு பாறையின் மேல் புறத்திலும் பள்ளப் பிரதேசங்கள் உண்டாயின. அகழ் போன்ற இப்பள்ள பூமியானது காலக்கிரமத்தில் நீர்ப் பிரதேசமாக ஆயிற்று. அது ஒரு குடாக்கடலாகவோ, காயலாகவோ, அல்லது நதியாகவோ ஆகி வந்தது.

முதன் முதலில் இமயமலைத் தொடர் உண்டாகிய காலத்திலே ஏற்பட்ட அகழ்களில் மிகவும் ஆழமானதும் மிகச் சிறந்ததுமான அகழானது இந்தியாக் கண்டத்தின் கீழ்க் கோடியாகிய அஸ்ஸாமிலிருந்து மேல் கோடியாகிய பஞ்சாப் வரை இந்தியாவுக்குக் குறுக்கே நீண்டு கிடந்தது. வேறு அகழ்களும் இக்காலத்தில் தோன்றினவெனினும், அவை அளவில் இதைப் போல அவ்வளவு பெரிதாக இருக்கவில்லை. ஸிந்து நதியின் வடபுறமும், ஸோனு, ஜீலம், சீனுப், ராவி, பீயஸ், ஸட்லெஜ், காக்கர் ஆகிய நதிகளும், கங்கா நதியின் கீழ்ப்பாகமும் இவ்வாறு உண்டாகிய அகழ்களில்தான் பிறந்தன. இப்படியாக வடக்கே நதிப்பிரதேசம் ஒன்று உண்டாக்கப் பட்டது.

அஸ்ஸாம் முதல் பஞ்சாப் வரை விரிந்து கிடந்த தாழ்வரையில் வண்டல்கள் வந்து படியத்தொடங்கின. இவ்வாறு மேன் மேலும் வந்து குவியும் வண்டல்களின் கனத்தால் இத் தாழ்வரையின் அடிப்புறமானது அழுத்தப்பட்டது. அதனுல் அது இன்னும் அதிகமாகத் தாழ்ந்து போயிற்று. அதனுல் வண்டல்கள் மேன்மேலும் வந்து படிவதற்குச் சௌகரியமாயிருந்தது. இவ்வாறு வண்டல் படியும் தாழ்வரை தணியத்தணிய அவ் வண்டலை அளிக்கும் பீடபூமியானது மேன்மேலும் உயர்ந்து வந்தது. முன் சொன்னபடி தராசுத் தட்டுக்களில் ஒரு தட்டுக் கீழே போகப்போக மற்ருெரு தட்டு மேலே எழுவதைப் போன்றதுதான் இதுவும். சிறிது காலத்துக்கப்புறம் இவ்வகையான உயர்வு தாழ்ச்சி இல்லாத ஒரு சம நிலை ஏற்பட்டு விட்டது. படிந்த வண்டல்களை மலைகளாகக் கட்டும் சக்திகள் மீண்டும் தாக்கின. அவற்ருல் இவை புதிய மலையாக உயர்த்தப்பட்டன. இவை இவ்வாறு மலையானபோது இவற்றுக்கு அடுத்த தென்புறமாக வேருெரு பள்ள பூமியாகிய அகழ் உண்டாயிற்று. டெதிஸ் பிரதேசத்தை மலையாக்கிய சக்திகள் அதற்கு அடுத்தாற்போல் ஒரு நீர்ப்பிரதேசத்தை உண்டாக்கின. இந்த நீர் வரை மலையானதும் இதற்குத் தெற்கே பின்னும் ஒரு நீர் வரை தோன்றிற்று. இவ்வாறு சம தூரங்களிலே நீர்ப் பிரதேச

மாக இருந்து மலையாக மாறிய பிரதேசங்கள் அணி அணியாகக் காணப்படுகின்றன. அவ்வாறு அவை உண்டாயின என்பதை அறிந்து கொள்ளுவது இக்காலத்திலும் சாத்தியமாக இருக்கிறது.









இவ்வாறு தோன்றிய முதல் நீர்வரையானது பலுச்சிஸ்தானம் ஸிந்து முதல் தொடங்கி, கிழக்கு ஆப்கானிஸ்தானம் வழியாகச்சென்று, பிறகு பஞ்சாப் வழியாகக் கிழக்கே திரும்பி வளைந்து, இமயமலையின் அடிவாரப் பக்கமாய் ஓடி, நைனிடால் வரையில் நீண்டிருந்தது. இவ் வரையானது சமுத்திர சம்பந்தமான உப்பு நீர்க் குடாக்கடல் ஒன்று இருந்த இடத்தைக் குறிக்கின்றது. இக் குடாவானது சிற்சில இடங்களில் கடலோடு சேர்ந்திருந்தது; வேறு சில இடங்களில் அவ்வாறு சேராமல் காயலாக இருந்தது. நைனிடாலுக்குக் கிழக்கே ஒரு வேளை ஒரு நதியாக இவ்வரை நீண்டிருந்தாலும் இருக்கலாம். அந் நதியும் கிழக்கே தோன்றி மேற்கு முகமாய் ஓடி இக் காயல்களில் வந்து விழுந்திருக்கலாம்.

அகழிகளிலே வந்து குவிந்த வண்டல்கள் எழுச்சி பெற்று மலைகளானதும், அதே சமயத்தில், அவற்றுக்குத் தெற்கே உண்டாகிய புதிய அகழியிலே, வண்டல்களை வாரிக்கொண்டோடும் சிற்றாறுகள் வந்து வீழ்ந்தன. அவ்வாற்றுப் பெருக்குக்களினால் நிறைந்த அப் பிரதேசமானது பெரும் நதிப்போக்காக ஆகிவிட்டது. இவ்வாறு உண்டாகிய மிகப் பெரியதாயிருந்த ஒரு நதிக்கு இந்தோபிராம் என்று இந்திய ஜியலாஜிகல் ஸர்வே டிரெக்டரான டாக்டர் பாஸ்கோ என்பவர் பெயரிட்டிருக்கிறார். அவர் சொல்லுகிறதாவது:—"இந்நதியானது அஸ்ஸாமில் உற்பத்தியாகி, பூடான் தேசத்துத் தெற்கு எல்லை வழியாய் ஓடி, டார்ஜீலிங்குக்குக் கீழாக வங்காளத்தின் வடமுனையைக் கடந்து, டேராடேன் வழியாகவும் சிர்மூர் மாகாணம் வழியாகவும் வடமேற்கு முகமாகச் சென்று, காங்க்ரா ஜில்லாவின்வழி ஜம்முவை அடைந்து, அங்கிருந்து ராவல் பிண்டிக்குத் தென் புறமாயுள்ள பள்ளத்தாக்கின் வழியே பாய்ந்து, (*Makhad*) மகத்தைத் தாண்டி, கோஹாத்துக்குக் குறுக்காகப் பன்னு சமவெளியை அடைந்து, அங்கிருந்து தெற்கே திரும்பி ஷீரானி மலைகளையும் புக்தி மலைகளையும் கடந்து, கடைசியாக ஸிந்து முகத்துவாரத்தில் போய் விழுந்தது." ஸிந்து நதியிலும் கங்காநதியிலும் ஒரே வகையான பிராணிகள் வசிப்பதை இவ்விரு நதிகளும் சேர்ந்து ஒரு பெரு நதியாய் இந்தியா கண்டத்தின் கீழ்ப் புறத்திலிருந்து மேல்புறம் வரை ஓடின வென்னும் கொள்கையைக் கொண்டு விளக்க முயலுகின்றனர். நதியில் நிறைந்த வண்டல்கள் மலைகளாக மாறி அமைந்தன; அப்பொழுதே அவற்றுக்குத் தெற்கே மற்றொரு நதி உண்டாயிற்று. இப்படியாக மீண்டும் மீண்டும் நிகழ்ந்த படியால் நதி ஓடும் வரையானது படிப்படியாக இமயமலைப் பிரதேசத்திலே தென்புறமாகத் தள்ளப்பட்டுக் கொண்டே வந்தது. அது போலவே

பலுச்சிஸ்தானப் பிரதேசத்திலே அது கீழ்ப் புறமாகத் தள்ளப்பட்டு வந்தது. இதைப் பின்னொருவாறு கூறலாம். அதாவது, இமயமலையானது கொஞ்சம் கொஞ்சமாகத் தெற்கே அகன்று நகர்ந்து கொண்டும் தனது வளர்ச்சிக்கு வேண்டிய பொருள்களைத் தன் அடி வாரத்தில் தனக்குத் தெற்குப் புறமாயோடும் நதியின் மூலமாகச் சேகரித்துத் திரட்டிக் கொண்டும் வந்தது. ஒரு காலத்திலே இந்தியாவிலே அமைந்திருந்த நதிப்போக்கானது கீழ்க்கண்டபடி இருந்திருக்கவேண்டும்:—




பிரம்மபுத்திராவின் தோற்றம்.

கிழக்கிலிருந்து மேற்கு முகமாக ஓடும் இந்தோ-பிராம்; அதற்குத் தெற்காக ஜீலமும், சீனபும், முன்பே தோன்றி யிருந்த பிற நதிகளும். இந் நதிகள் யாவும் மேன்மேலும் வளர்கின்ற மலையோடு ஒத்துப் போகும் முயற்சியில் ஈடுபட்டு உற்பத்தி ஸ்தானத்தை மேன்மேலும் பின்னிட்டுப் போகச் செய்ய முயன்று வந்தன: அதாவது அவை தலைப்புறமாகவும் நகரத் தொடங்கின. ஜீலம், சீனப், ராவி, பியஸ், ஸட்லெஜ், காக்கர் ஆகிய இந் நதிகள் தலைப் புறத்திலே வட கிழக்காக நகர்ந்து நகர்ந்து இந்தோ-பிராமைப் பிடித்துக் கொண்டன. கங்கை நதியும் அவ்வாறே சிறிது சிறிதாகப் பின் பார்த்து வடமேற்குக்கு மேற்காக உள்ள திக்காகச் சென்று இந்தோ பிராமின் அடுத்த பகுதியைப் பிடித்துக் கொண்டது. வங்காளத்திலே ஓடுகின்றபோது, வங்காளத்திலுள்ள அதன்

பிரமபுத்திரா நதியினது பாகத்துக்கு யமுனை என்று ஒரு பெயர் உண்டு. அந்த யமுனை நதியானது சிறிது சிறிதாகப் பின்னேக்கிச் சென்று இந்தோ-பிராம் நதியை அதன் உற்பத்தி ஸ்தானத்தின் அருகில் கைப்பற்ற முயன்று வந்தது. அது போலவே இந்தோ-பிராம் நதியும் தனக்கு ஏதாவது நதிகள் அகப்படாவா வென்று தேடிக் கொண்டிருந்தது. இமய மலையானது, மற்ற இடங்களில் வளர்வதைக் காட்டிலும் சீக்கிரமாக அஸ்ஸாம் பிரதேசத்திலே உயர்ந்து வளர்ந்து வந்தது. ஆகவே தலைப் புறமாக ஊர்ந்து போகும் அந்நதியானது ஐராவதி நதியின் உபநதியாகிய சிந்த்வின் நதியின் தலைப்புறத்தைப் பற்றிக்கொண்டது. இப்பொழுது கீழ் வங்காளத்திலே சின்னஞ்சிறு நதியாகக் காணப்படும் மேக்னை வென்னும் நதிக்கும் அதே இடம்தான் உற்பத்தி ஸ்தானமா யிருந்தது. இவ்வாறு சிந்த்வின் நதிக்கும் மேக்னை நதிக்கும் உரிய உற்பத்தி ஸ்தானத்தைக் கைப்பற்றிய இந்தோ-பிராம் அவற்றின் நீர்ச் செல்வத்தைக் களவாடி அபகரித்துக்கொண்டது. இப்படியாக அஸ்ஸாம் பிரதேசத்தை உற்பத்தி ஸ்தானமாகக் கொண்டிருந்த இந்தோ-பிராம் நதியானது வரவர இமயமலையின் வடபுறத்தை உற்பத்தி ஸ்தானமாகக் கொண்டுவிட்டது. அந் நதி இதோடு நிற்கவில்லை. மறுபடியும் அது மேற்கு முகமாகச் சென்று இமயமலைக்கு அப்புறத்திலே திபெத்து தேசத்திலே இமயமலைக்குச் சமதூரமாக ஓடிக் கொண்டிருந்த ஒரு நதியையும் பிடித்துக்கொண்டது. அதிக ஆசை கொண்ட இந்தோ-பிராமானது இவ்வாறு நீர்ச்செல்வத்தை ஏராளமாக அடைந்து இறுமாப்படைந்திருந்தது. ஆனல் நாம் மேலே கூறியபடி பிரமபுத்திரா நதியின் வங்காளப் பாகமாகிய யமுனை நதியானது அஸ்ஸாம் தேசத் தருகில் இந்தோ-பிராம் நதியின் நீர்ச் செல்வத்தை அபகரிக்க முயன்று கொண்டிருந்தது. இந் நதி அதைக் கைப்பற்றியதும் அதன் நீர்ப்பெருக்கெல்லாம் குறுக்கு வழியாக வங்காளக் குடாக்கடலுக்குத் திருப்பப்பட்டது. இவ்வாறுதான் தற்காலத்திய பிரமபுத்திரா நதி உண்டாயிற்று. வடமேற்கிலும் இவ் வாறுன நிகழ்ச்சி ஒன்று நிகழ்ந்தது. ஸிந்து நதியின் அட்டாக் பாகமானது மேற்கூறிய திபெத்து நதியின் வால்புறத்தைப் பிடித்துக்கொண்டு அதன் நீர் அனைத்தையும் இந்தியாவுக்குக் கொண்டுவந்துவிட்டது. இவ்வாறு உண்டாகியதுதான் தற்காலத்து ஸிந்துநதி. நதிகளை நதிகள் விழுங்கிய காலம் அக் காலம்.

இவ்வாறு இந்திய நதிகளாகிய பிரமபுத்திரா நதியும் ஸிந்து நதியும் திபேத்தைப் படையெடுத்து அங்குள்ள நதியொன்றைத் தலைப்புறமாக ஒன்றும் வால்புறமாக ஒன்றும் பற்றி, அதன் நீர்

முழுவதையும் கவர்ந்து கொள்ளையடித்து, அதன் நீர்ச் செல்வத்தை நமது நாட்டுக்குக் கொண்டுவந்து விட்டன.




இது தான் இமயமலையின் ஜீவசரிதை. இமயமலைச் சாரலில் பிறந்த நதிகளின் பிறப்பு வளர்ப்பும் இதுதான். தெற்கே இந்தியத் தீபகற்பத்திலே உள்ள மலைகளையும் நதிகளையும் காட்டிலும் அவை வயதில் மிகச் சிறியன. அந் நதிகள் பிறந்து பல மில்லியன் வருஷங்களுக்குப் பின்புதான் இமயமலையின் நதிகள் பிறந்தன. விந்திய மலைத்தொடரும் மேல்காற்று மலைத்தொடரும் கீழ்காற்று மலைத்தொடரும் பூமியிலே மிகப் பழமையான பாறைகளின் முண்டங்கள். இமயமலை தோன்றியதுபோல் வண்டல்களைக் கூட்டிக் கூட்டிச் சேர்த்துத் திரட்டி மலையாயினவல்ல அவை. அவை மலையாய் உயர்ந்து நிற்பதற்குக் காரணம் என்னவென்றால், அக்கம் பக்கத்திலுள்ள இடங்கள் யாவும் காற்றாலும் வெயிலாலும் மழையாலும் தாக்குண்டு தகர்ந்து பொடிந்து கரைந்து குறைந்து போன பொழுதும் கூட அவை இவற்றால் அழிக்கப்படாமல் தங்கி நிற்பது தான். அதனால்தான் அவை இக்காலத்தில் உயரமாயிருக்கின்றன. சுற்று முற்றுமுள்ள பாறைகள் யாவும் கரைக்கப்பட்டு அரபிக் கடலில் ஒரு பகுதியும் வங்காளக் குடாக்கடலில் ஒரு பகுதியுமாகத் தள்ளப் பட்டு, உயரம் குறைந்து கொண்டே வந்தன. அக்கம் பக்கத்துப் பூமி அரிக்கப்பட்டுத் தாழ்ந்து போகவே இவை கடல் மட்டத்துக்கு மேல் உயர்ந்து தோன்றுகின்றன.

இமயமலை யௌவனப் பருவத்திலுள்ளது. அதன் நதிகளும் யௌவன தசையிலுள்ளவை; ஆதலால் சுறுசுறுப்பு மிகுந்தவை.

தீபகற்பப் பிரதேசம் பழம் துண்டம்; மிகப் பழமையான கொண்ட வனக் கண்டத்தின சேஷம். அதன் மலைகள் கிழட்டு மலைகள். அதன் நதிகளும் மந்தமானவை.

தென்புறமிருந்து இமயமலைத் தொடரோடு கடைசியாகச் சேர்க்கப்பட்ட மலைத் தொடருக்கு ஸிவாலிக் மலைத் தொடர் என்று பெயர். இதிலே தான் பிரக்கியாதி பெற்ற ஹரித்துவாரம் ஜம்மு முதலிய ஸ்தலங்கள் இருக்கின்றன.

அக் காலத்திலே அத்தியாச்சரியமான ஜீவ ஜந்துக்கள் சிற்சில வாழ்ந்து வந்தன. அப்பொழுது உள்ள யானைகள் மிகப் பெரிய அளவுள்ளவை. அவற்றின் கொம்பு ஒவ்வொன்றும் ஒன்பதரை அடி நீளம் இருக்கும். கொம்பின் அடிப்புறம் இருபத்தேழு அங்குலம் குறுக்களவுள்ளதாயிருக்கும். நமது காலத்திலே உள்ள மிகப் பெரிய ஆமை ஐந்து அடிக்கு மேல் இருக்காது. அக் காலத்து ஆமைகள் இருபது அடி நீளமுள்ளனவாய் இருந்தன.

இவ்வளவு ஆச்சரியமான ஜீவவருக்கமும்கூட அப்பொழுது ஏற்பட்ட ஒரு பெருங்குழப்பத்தால் வெகு சீக்கிரம் நசித்துப் போயிற்று. தேசத்தின் சீதோஷ்ண நிலை மாறுபட்டுச் சூடு மிகவும் குறைந்து போயிற்று. அப்பொழுது உண்டாகிய பெரும் குளிரால் வட இந்தியாவின் பெரும் பாகமானது பனிக்கட்டியால் போர்வையினுற் போர்த்தியது போல் மூடப்பட்டது. இந்தப் பனிக்கட்டிப் போர்வையானது மிகவும் கனமுள்ளதாக இருந்தது.

அக் காலத்திலே பனியாறுகள் தோன்றின. பனியாற்றுக் காலம் நீங்கிய பொழுது இந்தியாவின் தேச அமைப்பானது அநேகமாக முடிவுபெற்று விட்டதென்றே கூறவேண்டும். ஆனால் கங்கா நதிப்பள்ளத்தாக்கு மட்டிலும் முற்றிலும் நிறையவில்லை. இந்தப் பிரதேசமானது இப்பொழுது மேல்புறத்தில் தென் வடலாக முந்நூறு மைல் குறுக்களவுள்ளதாயும், கீழ்ப்புறத்தில் தொண்ணூறு மைல் குறுக்களவுள்ளதாயும் இருக்கிறது. அது சராசரியிலே ஆயிரம் அடிக்குமேல் பள்ளமுள்ளதாகவும் இருந்து வருகிறது. இனி வருங்காலத்திலே நாலு கோடி வருஷங்களுக்கு அப்புறம் வாழும் மனிதன் மிக்க மேன்மை பொருந்தியவனுயும், அளவில் சிறியவனுயும், அளவிறந்த மூளைத் திறமையை உடையவனுயும் இருப்பானென்று ஊகிக்கப்படுகிறது. இவனுக்கு அதிமனிதன் என்று பெயரிட்டிருக்கிறுர்கள். இப்பேர்ப்பட்ட அதிமனிதனுடைய காலத்திலே இந்நதிப்பாசனம் நிறைந்து இமயமலைத் தொடர்களோடு இன்னெரு புதுத்தொடர் சேர்ந்தாலும் சேரலாம்; அல்லது இதற்கு நேர் எதிரிடையாகக் கொண்டவனக் கண்டத்தில் சில பாகங்கள்

அமிழ்ந்து கடல் போன்ற பெரிய ஏரிகள் உண்டானாலும் உண்டாக லாம். இவற்றுள் எதை அவன் பார்க்கப் போகிறானோ நாம் அறியோம்.

பூதத்துவ காலங்களோடு ஒப்பிட்டு நோக்கும்போது ஒரு மனிதன் உயிர் பெற்று வாழும் காலத்தை ஒன்றுமே யில்லையென்றே கருதுதல் தகும். அவ்வளவு சிறு காலமே வாழ்கின்ற மனிதன் எப்படி இப்பேர்ப்பட்ட நீண்ட காலமாக நிகழும் மாறுபாடுகளைக் கவனிக்க முடியும்? ஆனபோதிலும், சமீப காலத்தில் உண்டாகிய சிற்சில சிறு மாறுபாடுகளை நாம் நேரில் கவனிக்க முடிந்திருக்கிறது. பம்பாய் நகருக்கருகில் கடலோரத்தில் இருக்கும் குன்றுகள் கடலுள் ஆழ்ந்து கிடந்தன. பம்பாயின் கீழ்ப்புறமும் திருநெல்வேலி ஜில்லாக் கடற்கரையோரத்திலேயுள்ள வள்ளி மூக்கன் குடாவின் மேல்புறமும் கடலுள் ஆழ்ந்து விட்டன. இவ்வாறு ஆயினவென்பது கடலினுள்ளே காடுகள் காணப்படுவதினின்று தெரிய வருகிறது. மேக்ரன் கரையோரத்திலே நிலம் கடலுள் ஆழ்ந்து விட்டது. மகாபலிபுரமானது கடலால் கவரப்பட்டிருக்கிறது. மயிலாப்பூர்க்கு அருகில் உள்ள ஸாந்தோம் எனப்படுவது முன்னொரு காலத்தில் கடலிலிருந்து பன்னிரண்டு காதத்துக்கு அப்பால் உட்புறமாக இருந்தது. இப்பொழுது அது கடலோரமாக இருக்கிறது. தண்டையார் பேட்டைப் பக்கத்தில் கடலானது கரையை உடைத்து உட்புகுவதற்குப் பெரும் முயற்சி செய்து கொண்டிருக்கிறது. இவற்றைத் தவிரக் கங்கைநதிப் பள்ளத்தாக்கிலே மேன்மேலும் வண்டலானது மிகுந்து படிந்துகொண்டே வருகிறது. இம்மாறுபாடுகள் யாவும், ஒவ்வொன்றாக அவ்வப்போது எடுத்து நோக்கின், மிகச் சிறியனவே எனினும் நாளடைவில் பெரும் மாறுபாடுகளை இயற்றுவிக்கும் திறமை வாய்ந்தவை.

இவ்வாறாகக் கண்டங்களும் கடல்களும் தத்தம் வழியாகவே பரிணமித்து வருகின்றன. தாவரங்களும் ஜந்துக்களும் பிறந்து வளர்ந்து அழிவது போலவே நிலவடிவங்களும் பிறந்து வளர்ந்து அழியும் தன்மையனவாய்த்தான் இருந்து வருகின்றன. பூமியின் முக ஜாடையானது, மெதுவாக வெனினும், மாறிக்கொண்டே தான் வருகிறது. சிறிது சிறிதாக நிகழ்ந்து வரும் இம்மாறுபாடுகளின் தொகுதியால், சில மில்லியன் வருஷங்களிலே, மிக்க மாறுபாடுகள் ஏற்பட்டு விடும். அப்பொழுது இந்திய பூமியானது நமக்கு அளிக்கும் காட்சி இப்பொழுது இருப்பதைப் போல் இருக்காது. இந்தியத் தாயின் வதனமானது அக்காலத்திலே வேறு விதமாகத்தான் இருக்கும் என்பதற்கு யாதொரு ஐயமுமில்லை.

## சாஸ்திர சம்பந்தமான தமிழ்ச் சொற்கள்

---

*Rock*—பாறை.
*Aqueous rock*—ஜலப்பாறை.
*Sedimentary rock*—வண்டல் பாறை.
*Igneous rock*—ஆக்கினேயப் பாறை.
*Granite*—(கிரானிட்.)
*Sandstone*—(ஸாண்டுஸ்டோன்) மணற்கல், சந்தனக்கல்.
*Layer*—அடுக்கு.
*Primary*—(ப்ரைமரி) முதல்தர, முற்கால.
*Form*—வடிவம்.
*Crystal*—(கிறிஸ்டல்) படிகம்.
*Gorge*--(கார்ஜ்) நதியின் பள்ளமான படுகை, நதி செல்லும் மலைப்பிளவு.
*Delta*—(டெல்டா) நதியின் முக்கோண முகத்துவாரப் பிரதேசம்.
*Centrifugal*—(சென்ட்ரிபியூகல்) நடுவிற்பிரி.
*Centripetal*—(சென்ட்ரிபெடல்) நடுவிற்புகு.
*Mica*—(மைகா) அப்பிரகம்.
*Million*—(மில்லியன்) பத்து லக்ஷம்.
*Secondary*—(ஸெகண்டரி) இரண்டாம்தர, பிற்கால.
*Era*—யுகம்.
*Cambrian*—(கேம்ப்ரியன்).
*Triassic*—(ட்ரையாஸிக்).
*Basin*—பள்ள பூமி.
*Upper Gondwana*—மேல் கொண்டவன.
*Iceberg*—பனிக்கட்டி மலை.
*Lower Gondwana*—கீழ்க் கொண்டவன.
*Jurassic*—(ஜுராஸ்ஸிக்).
*Lagoon*—காயல்.
*Permian*-—(பெர்மியன்).
*Kangra*—(காங்க்ரா).
*Utatpur*—உதத்பூர்.
*Dehra Dun*—டேரா டூன்.
*Hydrographic System*—நீர்வழி.
*West North West*—வடமேற்குக்கு மேற்கு, மேற்கு வடமேற்கு.
*Mussourie*—முஸ்ஸாவரி.
*Bultana*—புல்தாணு.
*Lonar Lake*—லோணர் ஏரி.

அ.

# சரித்திரம்

## பூர்விக இந்தியாவும் ஜாவா சுமாத்ராத் தீவுகளும்

ஒ. ப. தேசிகன்

(முன் தொடர்ச்சி)

பண்டைச் சீன தேசத்திலிருந்து, இந்தியாவிலுள்ள பௌத்த க்ஷேத்திரங்களைத் தரிசித்துச் செல்லும் உத்தேசத்தோடும், பௌத்த சமய நூல்களைச் சேகரிக்கும் கருத்தோடும் இத்தேயத்திற்கு விஜயம் செய்த யாத்ரீகர்களிடையே இட்-ஸிங் என்பவர் கி. பி. ஏழாவது நூற்றாண்டில் இந்தியாவின் நிலைமையைக் குறித்து அருமையான குறிப்புகள் பலவற்றை யெழுதி வைத்திருக்கிறார். இட்-ஸிங் கி. பி. 671-ம் ஆண்டில் ஓர் முறையும், கி. பி. 698-ம் ஆண்டில் ஓர் முறையுமாக இரண்டு தடவை இந்தியாவிலிருந்து ஸுமாத்ராவிற்குப் பிரயாணம் செய்தார். அவரது இரண்டாவது பிரயாணத்தில் அக்காலத்தில் ஸ்ரீ விஜயமென்ற பெயரால் வழங்கிய ஸுமாத்ராவின் தலைநகரான ஸ்ரீ போஜத்தில் சுமார் ஏழு வருட காலத்திற்கதிகமாகத் (கி. பி. 688 முதல் 695 வரை) தங்கி வசித்து வந்ததாகச் சரித்திர வரலாறுகள் கூறுகின்றன. ஸ்ரீபோஜ மென்னும் நகரம் இது போழ்து பாலம்பாங் (Palembang) என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது. இட்-ஸிங் ஸ்ரீபோஜத்தில் தமக்குக் கிடைத்த பௌத்த சமய நூல்களை யாராய்ந்தும், அவற்றைச் சீனமொழியில் பெயர்த்தெழுதியும் இவ்வாறாக அந்த ஏழு வருட காலத்தையும் கழித்தனராம்.

இட்-ஸிங் இந்தியாவிலே தாம்லூக் என்று இப்பொழுது வழங்கும் தாம்ரலிப்தித் துறைமுகத்திலிருந்து ஸ்ரீவிஜயத்து அரசனுக்குச் சொந்தமான மரக்கல மொன்றிலேயே ஸுவர்ணத்வீபத்திற்குப் பிரயாணம் செய்ததாகக் கூறப்படுகிறது. ஸ்ரீவிஜயத்தரசனிடம் ஏராளமான மரக்கலங்களிருந்தன வாதலின், அவைகளின் உதவியால் அவன் கீழ்த்திசை நாடுகள் பலவற்றோடும் சிறப்பாக இந்தியாவோடும் அடிக்கடி போக்கு வரத்துச் செய்து வந்ததில் யாதொரு ஆச்சரியமு மிருப்பதற்கில்லை.

ஸ்ரீவிஜயம் அதுகாலை வடமொழிக் கல்வி யாராய்ச்சியில் மிகவும் சிறப்புற்று விளங்கியது. இந்தியாவின் புராதனமான வித்யா பீடங்களைப் போலவே ஸ்ரீவிஜயமும் அவ்வமயம் கல்விக் களஞ்சியமாகவும் நாமகளின் நல்லிடமாகவும் இலங்கியதென்பதில் ஐயமில்லை. ஆயிரத்துக்கதிகமான பிக்ஷுமார்கள் இவ்விடத்தில் வித்யா விஷயமான ஆராய்ச்சியிலும் பாரமார்த்திக ஆராய்ச்சியிலும் ஈடுபட்டிருந்தனராம். இந்தியக் கல்விக் கழகங்களில் மாணுக்கர்களுக்குப் போதிக்கப்பட்டதனைத்தும் இவ்விடத்தில் கற்பிக்கப்பட்டனவாம்[1]. பாரத நாட்டில் மட்டுமேயன்றி, கடல்களுக்கப்பாலுள்ள தூர நாடுகளிலும் தனது புகழைப் பரப்பி உலகப்பிரஸித்தியுடன் விளங்கிய நாளந்தா சர்வ கலாசாலையைப்போலவே ஸ்ரீவிஜயத்தின் கீர்த்தியும் வெகு தூரம் வரையில் எட்டி யிருந்த தெனக் கூறுவது மிகையாகாது. அன்றியும் நாளந்தா சர்வ கலாசாலையின் அத்யக்ஷ பீடத்தில் வீற்றிருந்த தர்மபாலன என்னும் ஆசிரியச் சிரேஷ்டர்—யுவான் சுவாங் என்ற சீன யாத்ரிகர் இத்தேயத்திற்கு விஜயம் செய்வதற்குப் பல்லாண்டுகள் முன்பாக—இக்கல்விக் கழகத்தைப் பார்ப்பதற்காக, தமது முதுமைப் பருவத்தையும் கருதாது, அக்காலத்தில் மிகுந்த ஆபத்துக்களுக் கிருப்பிடமாக இருந்த கடல் யாத்திரையின் சிரமத்தையும் பொருட்படுத்தாமல், இப்பிரயாணத்தை மேற்கொண்டாரென்ருல், ஸ்ரீவிஜயப் பிரதேசம் அதுகாலை எவ்வளவு மேம்பாடெய்தியிருந்திருக்க வேண்டுமென்பதை ஒருவாறு நாம் ஊகிக்கலாகும்.

சீன யாத்ரிகர்கள் இந்தியாவிற்கு விஜயம் செய்யும் முன்னர் இவ்விடத்திலுள்ள கல்விக் கழகங்களில் வடமொழியில் பயிற்சி பெற்று, அதன் பின்னரே இவ்விடம் வந்து சேர்வது வழக்கம் என்று இட்-ஸிங் எழுதிய குறிப்பொன்றினல் தெரிய வருகிறது.

வங்காளத்தில் ஓரளவு கீர்த்தியுடன் அரசாண்டு வந்த 'பால'வமிசத்தரசர்களிலே, தேவபாலன் என்னும் மன்னனது நாளந்தா செப்பேடுகளினின்றும் ஸுமாத்ராவுக்கும் இந்தியாவுக்குமிடையே எத்தகைய உறவின் முறையும், நேசப்பான்மையும் வளர்ந்து வந்திருக்கவேண்டுமென ஒருவாறு அறியலாகும். தேவபாலனுடைய பராக்கிரமும், மாபெருங் கீர்த்தியும் வங்க நாட்டில் மட்டுமேயல்லாமல், கடல் கடந்து இந்திய மக்கள் குடியேறியிருந்த நாடுகளிலும் பரவியிருந்தன. அதுகாலை ஸுவர்ணத்வீபத்தில் அரசாட்சி செலுத்தி வந்த பால புத்ர தேவ மஹாராஜன், தேவபாலனிடம் மிகுந்த நட்புணர்ச்சியும் விசுவாஸமும் கொண்டிருந்தனன்.

---

1. Dr. Takakusu-It-sing-1896.

பால புத்ர தேவன் பீஹார் மாகாணத்திலுள்ள நாளந்தா க்ஷேத்திரத்தில் பௌத்த விஹார மொன்றைச் சிறப்பாகக் கட்டி முடித்தனன். அதில் வசித்து வந்த பிக்ஷுமார்களின் ஸௌகரியங்களுக்கு யாதொரு குறைவும் இராவண்ணம் போதிய வசதிகளைச் செய்து கொடுத்தான். அன்றியும், அவனுடைய வேண்டுதலின் பேரில் தேவபால மன்னன் அந்த விஹாரத்தின் சம்ரக்ஷணையின் பொருட்டு ஐந்து கிராமங்களை நன்கொடையாக அளித்ததாக அச்சாஸனம் கூறுகிறது.

மஹாராஜ பால புத்ர தேவனின் அன்னை தாரா என்னும் பெயர் வாய்ந்தவளென்றும், அவள் சந்திரவம்சத்திலுதித்த தர்மஸேது மன்னனின் குமாரியென்றும், யவ பூமியை மிகவும் கீர்த்தி பொருந்த ஆட்சி புரிந்த வேந்தனது குமாரனின் தேவியென்றும் அச்சாஸனத்தில் காணப்படுகிறது. அன்றியும், நாளந்தையின் பல்வகைப்பட்ட எழில் நலங்களாலும், அற்புதங்களாலும் வசீகரிக்கப் பட்டவனாகவும், ஸுத்தோதனன் புதல்வனிடம் (புத்தர் பிரான்) தனக்குள்ள அபரிமிதமான பக்தி விசுவாஸத்தாலும் ஸுவர்ணத்வீபத்தின் அரசனாகிய தான், பக்தியும் சீலமும் மிகுந்த பிக்ஷுக்கள் வசித்து வரும் பொருட்டு, மேக முலாவும் மாடிகளையுடையதும், தூயவெண்ணிறத்தால் அற்புதமாகச் சோபிப்பதுமான விஹாரத்தைக் கட்டி முடித்தது பற்றி அம்மன்னன் பெருமை பாராட்டுகிறான். (Nalanda grant of Deva Pala—1921)

இட்-ஸிங்கின் காலத்திற்கும் (கி. பி. 700) மத்ய ஸுமாத்ராவில் கி. பி. 1350-ம் வருடத்திற்குச் சற்றேறக்குறைய ஆட்சி செலுத்திய ஆதித்யவர்மனுடைய காலத்திற்குமிடையில் அத்தீவின் வரலாறுகள் பெரும்பாலும் இருள் வாய்ப்பட்டுக் கிடக்கின்றன. 14-வது நூற்றாண்டிலுங்கூட ஆதித்யவர்மனது நாட்களில் ஸுமாத்ராவில் ஜின அமோகபாஸனின் சிலா விக்ரஹமானது பதாங்சந்திக் கோயிலில் பிரதிஷ்டை செய்யப்பட்டதென்றும், இச்சம்பவம் ஓர் வகையான ஸம்ஸ்க்ருத பாஷையில் அவ்விடத்திலுள்ள கல்வெட்டுக்களில் பொறிக்கப்பட்டுள்ளதாகவும் அறியக் கிடக்கிறது.[1] ஆனால் இதனிடையே ஸுமாத்ராவில் ஆதி முகம்மதியர்களின் மதாவேசம் சிறிது சிறிதாக மேலோங்கத் தொடங்கி விட்டது. நாளடைவில் அத்தீவு முழுவதும் இஸ்லாமிய மயமாக மாறிவிட்டது.

---

1. Voyages des Pelerins Buddhistes—
E. Chavammes
Greater India—Kalidas Nag—Calcutta Review
Jan. 1926 pp. 174, 175.

## பண்டைத் தமிழ் நூல்களில் காணப்படும் குறிப்புக்கள்

சரித காலத்திற்கு முற்பட்ட காலம் முதலாகவே பண்டைத் தமிழகத்திற்கும், ஜாவா, ஸுமாத்ராத் தீவுகளுக்குமிடையே கடல் மார்க்கமாகப் போக்கு வரத்து நிகழ்ந்து வந்ததாகவும், இவ்விரு நாடுளும் ஒன்றோடொன்று உறவு பூண்டு நேசபாவத்துடன் வாழ்ந்து வந்ததாகவும் தமிழ் நூல்களின் வாயிலாக அறிகின்றோம். சாவக (ஜாவா), கற்பூரம் சாம்பவம், கடாஹம் (ஸுமாத்ரா), காழகம் (பர்மா), சீனம் முதலிய நாடுகளைப் பற்றித் தமிழ் நூல்களில் அளவற்ற குறிப்புகள் காணப்படுகின்றன.

தைரியமும் ஸாமர்த்தியமும் ஒருங்கே வாய்க்கப்பெற்றிருந்த பண்டைத் தமிழர் மூன்று புறமும் கடல் சூழ்ந்திருந்த தமது நாட்டினின்றும் பிறநாடுகளுக்குச் செல்வதற்கு இன்றியமையாத ஸாதனங்களை அமைத்துக் கொண்டு, அயல் தேயத்தினர் வர்த்தகத்தின் பொருட்டுத் தமது நாட்டிற்கு மரக்கலமேறி வரும்வரையில் காத்திராமல், தங்களுக்குத் தேவையான கலங்களைத் தாமே கட்டி முடித்து, அவற்றின் உதவியால் தூர நாடுகளையும் கண்டு, தமது வியாபாரப் பண்டங்களை ஆங்குப் பரப்பிப் பண்டமாறுதல் செய்து வந்தனர். கடல் யாத்திரையின் பயனாக ஏற்படக்கூடிய ஆபத்துகளைப் பற்றிய செய்திகள் பண்டைத் தமிழ் நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

சாவக நாட்டிலுள்ள நாகபுர மென்னும் பட்டணத்தைக் குறித்து மணிமேகலையில் ஒரு குறிப்புக் காணப்படுகிறது. சாவக நாடென்பது ஜாவாவையே குறிப்பிடுவதாகுமென்பதை நாம் சொல்ல வேண்டியதில்லை. அன்றியும் பூமிசந்திரன், புண்ய ராஜன் என்னும் அந்நாட்டரசர்கள் இருவரைப் பற்றியும் தமிழ் நூல்கள் பிரஸ்தாபித்திருக்கின்றன. பண்டைத் தமிழகத்திற்கும் சாவக நாட்டிற்குமிடையே போக்கு வரத்து நிகழ்ந்து வந்திருப்பதை,

"மாநீர் வங்கம் வந்தோர் வணங்கி
சாவக நன்னாட்டுத் தண்பெயல் மறுத்தலின்
ஊனுயிர் மடிந்த துரவோ யென்றலும்
அமரர்கோ னாணையி னருந்துவோர்ப் பெறாது
குமரி மூத்தவென் பாத்திர மேந்தி
அங்கந் நாட்டுப் புகுவதென் கருத்தென
வங்க மாக்களொடு மகிழ்வுட னேறிக்
கால்விசைக் கடுகக் கடல்கலக் குறுதலின்
மாலிதை மணிபல் லவத்திடை வீழ்த்துத்

தங்கிய தொருநாட் டானுங் கிழிந்தனன்
இழிந்தோ னேறின னென்றிதை யெடுத்து
வழங்குநீர் வங்கம் வல்லிருட் போதலும்...''
(மணிமேகலை 14 : 73—85)

என வருவதனுல் அறியலாம்.

மணிமேகலை சாவக நாட்டினை யடைந்து ஆங்கு அதனை ஆட்சி புரிந்த ஆபுத்திரனேடு மணிபல்லவத்திற் கேகி அங்கே தீவதிலகை யின் மூலமாகக் காவிரிப்பூம் பட்டினம் கடல் கொள்ளப்பட்டதை யும், மாதவியும் சுதமதியும் அறவண வடிகளோடு வஞ்சி நகர் சென்றதையும் அறிந்து ஆகாய மார்க்கமாக வஞ்சி நகர் சென்ற தாக மணிமேகலை கூறும்.

சங்க நூல்களேயன்றிச் சோழ மன்னர்களின் கல்வெட்டுக்களி லும் ஸ்ரீவிஜயத்தைப் பற்றிய குறிப்புக்கள் பொறிக்கப்பட்டிருப்பது சாஸன ஆராய்ச்சியின் வாயிலாகப் பெறப்படுகிறது. லேடன பட்டயமெனப் பிரசித்தி பெற்ற ராஜராஜ சோழனின் செப்பேடு களால் கடாரத்தரசன் ஸ்ரீமார விஜயோத்துங்க வர்மன் சூடாமணி வர்மன் புதல்வன் நாகபட்டினத்தில் ஓர் பௌத்த விஹாரத்திற்கு நன்கொடை யளித்ததாகவும், அதிலுள்ள வடமொழிப் பகுதியி னின்றும் தெரிய வருகிறது. அதன் தமிழ்ப்பகுதி சூளாமணி வர் மனைக் கடாரத் தரசன் என்று உரைக்கிறது.

வடமொழியில் 'கடாஹம்' என்றும், தமிழ் மொழியில் 'கடார'மென்றும் வழங்கும் சொற்கள் ஓர் இடத்தையே குறிப்பிடுவ தாக ஆராய்ச்சியாளர்கள் கருதுகிறுர்கள். பட்டினப்பாலையில் காழக மெனக் குறிப்பிட்டுள்ள ஸ்தலமும் அதுதானென்பது இன்னும் பலாது முடிபாகும். இந்தக் கடாரம் என்பது ஸுமாத்ராவின் வட கரையிலுள்ளதென்பதை மறுக்க முடியாத பல ஆதாரங்களைக் கொண்டு டாக்டர். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் அவர்கள் நிரூபித் துள்ளார்கள்.

ராஜராஜ சோழ தேவனின் அருமையும் பெருமையும் வாய்ந்த புதல்வன் ராஜேந்திர சோழ வேந்தனின் இறைமாட்சி பாரத நாட் டிற்கும் அப்பாலுள்ள தீவுகளிலும் பரவியிருந்தது. தனது ஒப்பு யர்வில்லாக் கடற்படையின் உதவியால் ராஜேந்திரன் புறநாடுகளை யும் வென்றுன். அவனுடைய வெற்றிக் கொடி கடல் கடந்த நாடு களிலும் பெருமையுடன் பறந்து கொண்டிருந்தது. இந்த 'இந்திய நெப்போலியனின்' உள் நாட்டு வெற்றி விஜயங்களைப் பற்றி விரி வாக எழுதுவது இக்கட்டுரையின் உத்தேசத்திற்குப் புறம்பான

தாதலின், அதை விடுத்து அவனது புறநாட்டுப் படையெடுப்புக்களைக் குறித்துச் சிறிது குறிப்பிடுவதோடு நிறுத்திக் கொள்வோம்.

ராஜேந்திர சோழன் வட நாட்டிலுள்ள பற்பல பகுதிகளைத் தனது மாப்பெருந்தண்டால் வெற்றி கொண்டதும், தான் வெற்றி கொண்ட மன்னர்கள் கங்கை நீரைச் சுமந்து வர, அதைக் கொண்டு தனது வெற்றிச் சிறப்பின் ஞாபகார்த்தமாகத் தான் நிருமித்த கங்கை கொண்ட சோழபுரத்தில் பிரதிஷ்டை செய்வித்ததும் சரித்திரப் பிரசித்தமான செய்திகளாகும்.

(ராஜேந்திர சோழன் தனது கப்பற்படையைக் கடாரத்தை நோக்கிச் செலுத்துமுன் தான் ஒரிஸ்ஸா (கலிங்கம்) முதலிய நாடுகளை அடிப்படுத்துவது முற்றிலும் இன்றியமையாத தென்பதை யுணர்ந்தான். சோழ மன்னனின் தளகர்த்தர்களும் தண்டத்தலைவர்களும் வடக்கே கங்கைக் கரை வரையிலும் சென்று தர்மபாலன், கோவிந்த சந்திரன், மஹிபாலன் முதலிய சிற்றரசர்களை வென்று தம் மன்னனுக்கு அடிமைப் படுத்திய செய்தியை யறிய வந்ததும் அவர்கள் தங்கள் ஸ்வதேசத்திற்குத் திரும்புதற்கு முன்னதாகவே ராஜேந்திரன் மிகவும் பெரியதோர் கடற்படையுடன் வடக்கு நோக்கிப் பிரயாணப்பட்டு, கோதாவரிக் கரைகளிலே தன் சேனாபதியைச் சந்தித்ததையும், ஒரிஸ்ஸா மன்னனோடுபொருது அவனைப் பணியவைத்ததையும், அதன் பின் அலை கடலில் தன் கலங்களைச் செலுத்திக் கடாரம் மாநக்கவாரம் முதலிய இடங்களில் தனது புய வலிமையையும் ஆற்றலையும் உணர்த்தியதையும் நோக்கின் தனது கப்பற்படையைக் கலிங்கத் துறைமுகத்திலிருந்தே அனுப்புவதைச் சிரேஷ்டமானதாகக் கருதினன் என்பது போதரும். கோபால்பூருக்கு அருகிலுள்ள பாலூர் என்னுமிடத்திலிருந்தே இக்கடற்படை அனுப்பப்பட்டதாகக் கூறப்படுகிறது.)

கடாரத்தரசனான சங்கிராம விஜயோத்துங்க வர்மன்மீது போர் தொடங்குவதற்காகப் பாலூரிலிருந்து ராஜேந்திர சோழ வேந்தனால் அனுப்பப்பட்ட பெரும்படையானது சென்ற விடந்தோறும் வெற்றிமேல் வெற்றியடைந்து வாகை மாலை சூடி, விஜயோத்துங்கனைச் சிறை செய்து, அவனது நிதியையும், யானைகளையும் கைப்பற்றியதுமன்றி ஸ்ரீ விஜயத்தை வெற்றி கொண்டதையும், ஆங்குள்ள வித்தியாதரதோரணம், மணிக்கதவு முதலியவைகளைத் தன் வயப்படுத்தியதையும் சாஸனங்கள் அறிவிக்கின்றன.

"நித்தில நெடுங்கட லுத்திர லாடமும், வெறிமலர்த் தீர்த்தத் தெறிபுனற் கங்கையும், அலைகடல் நடுவுட் பலகலஞ் செலுத்தி,

சங்கிராம விசையோத்துங்க பன்மனாகிய கடாரத்தரைசனை வாக்யம் பொருகடல் கும்பக்கரியொடு மகப்படுத், துரிமையில் பிறக்கிய பெரு நெதிப் பிறக்கமும், ஆர்த்தவ னகநகர் போர்த் தொழில் வாசலில் விச்சாதிரத் தோரணமும், மொய்த் தொளிர்புனை மணிப்புதவமும், மணிக் கதவமும், நிறை சீர் விசையமும், துறை நீர்ப் பண்ணையும் வன் மலை யூரெயிற் றொன்மலை யூரும், ஆழ்கட லகழ்சூழ் மாயிரு டிங்க மும், கலங்கா வல்வினை இலங்கா சோகமும், காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும், காவலம் புரிசை மேவிலிம் பங்கமும், விளைப்பந் தூறுடை வளைப்பந் தூறும், கலைத்தக் கோர்புகழ் தலைத்தக் கோலமும், திதமா வல்வினை மதமா லிங்கமும், கலாமுதிர் கடுந் திறல் இலாமுரி தேசமும், தேனக்க வார்பொழில் மானக்க வாரமும், தொடுகடற் காவல் கடுமுரட் கடாரமும், மாப்பெருந்தன் டாற் கொண்ட கோப்பர கேஸரி பன்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர சோழர்''

(ராஜேந்திர சோழன் மெய்க் கீர்த்தி.)

பண்ணைத் துறைமுகம், மலையரண் கொண்ட மலையூர், அலை கடல் அகழியாக வமைந்த மாயூரிடிங்கம், பெரிய அரண்கள் வாய்த்த லங்காசோகம், மாப்பப்பாளம், மேவிலிம்பங்கம், விளைப்பந் தூர், தக்கோலம், மதமாலிங்கம், ஈழமுறித்தேசம், மாநக்க வாரம், கடாரம் முதலிய நிலப்பகுதிகளனைத்தும் இவ்வெற்றியிலடங்கியன வென்பது மேற்கூறிய சாஸனத்தால் விளங்கும். அதாவது பர்மா வின் தென்பகுதியையும், மலேயா தீபகற்பத்தின் பெரியதோர் பகுதியையும், கடலிடைச் சிதறியிருந்த பற்பல தீவுகளையும் சோழ மன்னனது பெருவீரர் தமது மன்னனுக்குரியதாகச் செய்திருக்க வேண்டும்.

(தொடரும்)

# பெரிபுளூஸ்

ச. சோமசுந்தர தேசிகர்

(266-ம் பக்கத்தொடர்ச்சி)

38. இந்த நாட்டுக்கப்பால் தேசம் கிழக்கிலிருந்து வளைகுடாவின் குறுக்காகப் பெரியதொரு வளைவு வளைகிறது; அந்த நாட்டுக்கு ஸித்தியா (*Scythia*)[1] என்று பெயர்; இது வடபுறமாகக் கடற்கரையோரமாகச் செல்லுகிறது; நிலம் சதுப்புடையது; எரித்திரேயன் கடலில் விழும் நதிகளில் மிகப் பெரிதான ஸிந்துஸ் நதி பெருவெள்ளத்துடன் வந்து கலக்கின்றது; இதனால் இதன் முகத்துவாரத்தில் கடற் பக்கம் வெகு தூரம் கடல்நீர் உப்பின்றி நன்னீராக இருக்கிறது.[2] கடற் பிரயாணஞ் செய்வோர் இந்த நாட்டைக் கிட்டியதற்கறிகுறியாக நாகங்கள் பல கடற் கீழிருந்து மேல்வரும். இங்கும் பாரசீகத்திலும் இவை கிரயீ[3] (*Grace*) என்று பேர் பெறும். இந்நதி (ஸிந்து) ஏழு கிளைகளையுடையதாயினும் மத்தியிலுள்ளதைத் தவிர்த்து மற்றவை ஆழமற்றவை. அந்த நடுக்கிளையின் முகத்துவாரத்தில் பர்பரிக்கம்[4] (*Barbaricum*) என்ற அங்காடிப்பட்டினமிருக்கிறது. இதற்கு எதிரில் ஒரு சிறு தீவு இருக்கிறது. பின்னே ஸித்தியாவின் தலைநகரான மின்னகரம்[5] (*Minnagara*) இருக்

38. (1) ஸித்தியா: ஸிந்துநதி யோடும் பகுதிக்கு மேற்கிலுள்ள நாட்டுக்கு ஸித்தியா என்று பெயர்.

(2) நன்னீர்: ஆற்றில் வெள்ளம் மிகுதியாக வந்து கடலில் கலக்கும் போது ஆற்று நீரின் வேகத்தினால் கடல் நீர் ஒதுக்கப்பட்டு அங்கு உள்ளது நல்ல நீராகவே இருப்பது இன்றும் தென்னிந்தியாவில் காண்பதொரு காட்சி.

(3) கிரயீ என்பது கிரக என்பதின் திரிபென மேல்நாட்டார் கருதுகின்றனர். அது பொருத்தமானதாகத் தோற்றவில்லை. அது அங்கு காணப்படும் பாம்புவகையின் பெயராயிருத்தல் கூடும்.

(4) பர்பரிக்கம்: கிரேக்கர் இந்நாட்டில் கேட்ட ஒரு சொல்லைக் கிரேக்கமயமாக்கியதால் இவ்வூரின் உண்மைப்பெயர் கண்டுபிடிப்பது முடியாததாகிறது.

(5) மின்னகரம்: சித்தியர் இந்தியாவிலிருந்தபோது தாங்கள் கண்ட பட்டினத்திற்கெல்லாம் மின்னகரம் என்று பெயரிட்டனர். இது இன்ன இடமெனத் திட்டமாகக் கூறுவதற்கில்லை.

கின்றது ; இந்நகரம் பார்த்திய[6] அரசர்களுக்குரியது ; அவர்களோ தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக்கொண்டு ஒருவரையொருவர் துரத்தி வருகின்றனர்.

39. மரக்கலங்கள் பர்பரிக்கத்தில் தங்குகின்றனவாயினும் பண்டங்களெல்லாம் தலைநகரிலுள்ள அரசனுக்கு ஆற்றின்வழியே[1] கொண்டுபோகப்படுகின்றன. இந்த அங்காடிப் பட்டினத்தில் நல்ல உயர்ந்த சல்லா, சிறிது போலிச் சல்லா, குங்கிலியம், சித்திரப் பட்டாடை[2], நீலம், பவளம், நெரியாசம், வெள்ளைப்போளம், கண்ணாடிப் பாத்திரங்கள், பொன் வெள்ளித் தாம்பாளங்கள், சிறிது சாராயம் இறக்குமதியாகின்றன. இவற்றிற்கு மாறாகக் கோஷ்டம்[3], குங்கிலியம், லிஸியம்,[4] வாசனை வேர்,[5] டர்கோயிஸ்[6] (*Turquoise*), மரகதம், இரும்புக்கட்டிகள், பருத்தித் துணி, பட்டு நூல், நீலச்சரக்கு இவை ஏற்றுமதியாகின்றன. இவ்விடத்திற்குக் கப்பலோட்டிகள் ஜுலை மாதத்திலுண்டாகிற இந்திய எதிலியக்காற்றில் புறப்படுகின்றனர் ; இக் காற்று மிக்க அபாயமுடையதெனினும் இக் காற்றில் பயணமானுல் விரைவிலும் நேர்முகமாகவும் குறித்த இடத்தைச் சேரலாம்.

40. லிந்து நதிக்கப்பால் வடமுகமாகச் செல்லும் மற்றொரு வளைகுடா வுண்டு ; அதனில் கப்பல் செல்லாது ; அதற்கு எயிரினேன் (*Airinon*) என்று பெயர் ; அதன் பிரிவுகளைப்பெரிய குடா வென்றும் சிறியகுடா வென்றும் சொல்வர் ; இவ்விருபிரிவுகளும் கரையிலிருந்து வெகு தொலைவிலுள்ளன ; மேட்டுப் பாங்காயும்

(6) பார்த்திய அரசர்களாவார் மத்திய ஆசியாவிலிருந்து படையெடுத்து வந்து சிந்துப் பிரதேசங்களைப் பிடித்தாண்ட பாரசீக சாதியினர்.

39. (1) ஆறு : லிந்துநதி வழியே.

(2) சித்திரப்பட்டாடை : மூல எட்டில் போலிமிதா (Polymita) என்றிருக்கிறது. இச்சொல்லுக்குப் பல இழைகள் கொண்டது என்று பொருள்.

(3) கோஷ்டம் : ஒரு மருந்துச் சரக்கு.

(4) லிஸியம் என்பது இமயமலையிலுண்டாகும் மஞ்சட் சாயம் கொடுக்கும் ஒருவகை வேர். இவ் வேரிலிருந்து சாயமும் மருந்துகளும் செய்யப்பட்டன.

(5) வாசனைவேர் : சடாமாஞ்சி முதலியன. சுக்கு நாறிப்புல் கிழங்கென்பர்.

(6) டர்கோயிஸ் : பச்சை கலந்த நீலம். இது முதலில் துருக்கியிலிருந்து வந்ததாகக் கருதப்பட்டதால் இப்பெயரிடப்பட்டது. பாரசீகத்தில் கிடைக்கிறது.

40. (1) எயிரினேன் : ரான் ஆப் கட்ச் என்று பெயர்.

அடிக்கடி மாறும் மணற்றிட்டு முடையன ; இதனால் கடலில் வரும் கப்பல்கள் நாடு காணுமுன்னரே கரை தட்டிவிடுகின்றன. இந்தக் குடாவினின்றும் ஒரு முனைப்பு எயிரினோனைச் சுற்றிக் கீழ்ப்புறமாகப் புறப்பட்டோடித் தென்புறம் சென்று வளைந்து மேற்கேயோடிப் பராகா[2] (*Baraca*) என்ற குடாவை யுண்டாக்குகிறது. இதற்குள் ஏழு தீவுகளிருக்கின்றன. அந்தக் குடாவுக்கு வரும் கப்பல்களை நேரே உள்ளே கொண்டு வராமல்[3] வெகுதூரத்தில் நிறுத்தி நங்கூரம் பாய்ச்சுவார்கள் ; அப்படியின்றிக் குடாவுக்குட் சென்றவர்கள் இறந்தவர்களேயாவர் ; அதற்குக் காரணம் அங்கே கடல் கொந்தளிப்பாகவும் அலைகள் கடுமையாகவும் இருப்பதோடு கடலில் கீழ்நீரோட்டமும் சுழிப்பும் அதிகம். கடலின் அடிப்பாகம் சில இடங்களில் ஆழமாகவும், சில இடங்களில் குன்றுகள் முளைத்ததாகவு மிருப்பதால், நங்கூரம் பாய்ச்சினால் சில இடங்களில் நங்கூரம் பிடிபடுவதில்லை; சில இடங்களில் நங்கூரக் கயிறு அறுந்துபோயும் சில விடங்களில் ஆடிக்கொண்டும் இருக்கிறது ; கடற் பிரயாணஞ் செய்பவர்கள் இந்த நாட்டை அறிந்து கொள்ளும்படியாகப் பெரியவையும் கருமைநிறமுள்ளவையுமான பாம்புகள் தென்படுகின்றன ; இந்தக் கரையிலும் பரிகஸாவைச்[4] சுற்றியுமுள்ள இடங்களில் காணப்படும் பாம்புகள் பளபளப்புள்ள பச்சை நிறத்தோடு பொன்னிற முடையனவாய்ச் சிறியனவாகக் காணப்படுகின்றன.

41. பராகா குடாவுக் கப்பால் பாரிகஸாவும் ஆரிய[1] நாட்டுக் கடற்கரையும் இருக்கின்றன ; இதுதான் இந்தியாவுக்கும் நாம்பனஸ்[2] (*Nambanus*) நாட்டுக்கும் ஆரம்பமாகுமிடம்[3]. ஸித்தி

---

(2) பராகா : கட்ச் வளைகுடா.

(3) இந்த இடத்தைப் படத்தில் பார்த்தாலும் இதன் நிலைமை தெரிய வரும்.

(4) பருகச்சா என்று சொல்லப்படும் தற்கால புரோச் (Broach.)

41. (1) ஆரியகம் என்பது மூலஏட்டில் விளக்கமாகச் சொல்லப்படவில்லை. சிலர் லடிகா (Latica) என்றும் லரிகா (Larica) என்றும் ராஸ்டிகா என்றும் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆனால் தமிழகத்துக்கு எதிராக ஆரியகம் என்பது வடபுறமுள்ளதென்பது கவனிக்கத்தக்கது.

(2) நாம்பனஸ்: மூலஏட்டில் மம்பரஸ் என்று இருக்கிறது. அக்கால நிலையை நோக்கச் சகவமிசத்து நகபாணன் ஆண்டிருப்பானென்று தோன்றுகிறது.

(3) இந்தியா விந்தியத்துக்கு வடக்கே மத்திய ஆசியாவிலிருந்து பலர் படையெடுத்து வந்து ஆளவும் தெற்கே ஆந்திர சோழ பாண்டியர் ஆளவும் நடுவிலுள்ள நாடு க்ஷாத்திரப்பர் வசமாயிற்றென்பர் சரிதக்காரர்.

யாவுக்கு அணிமையிலும் உள்நாட்டிலும் இருக்கும் நாட்டை அபிரியா[4] (*Abiria*)வென்பராயினும் கடற்கரைப் பக்கத்தை ஸிராஸ்டிரினி[5] (*Syrastrene*) என்பர். கோதுமை, அரிசி, எண்ணெய், நெய், முரட்டுத் துணிகள் நெய்யப்படுகின்ற பருத்தி இவை உண்டாகின்ற செழிப்புள்ள நாடு[6] இது. இங்கே பல மாட்டுக் கிடைகள் வளர்க்கப் படுகின்றன ; மக்களும் நீண்டு கறுத்திருப்பர். இத் தேசத்தின் தலைமைப் பட்டினம் மின்னகரம்[7] எனப் பேர் பெறும் ; இங்கிருந்து பருத்தி அதிகமாகப் பரிகஸாவுக்குக் கொண்டுவரப்படுகிறது. இவ்விடங்களில் அலெக்ஸாந்தர் படையெடுப்பின் அறிகுறிகளாகப் பழங்கோயில்களும் கோட்டை மதில்களும் கிணறுகளும் காணப்படுகின்றன. பர்பரிகத்திலிருந்து பரிகஸாவுக்கு எதிரிலும் அஸ்தசம்ப்ராவுக்கு (*Astacampra*) முன்னுமுள்ள பப்பிகா (*Papica*) முனைக்கு நாவாய் ஓட்டு வழி மூவாயிரம் ஸ்டேடியா அளவாகும்.

42. இதற்கடுத்தாற்போல் வடபுறமாகச் செல்லும் கழி யொன்றுண்டு[1]. இது கடலலைபால் அலைக்கப்படுகிறது. இதன் முகத்துவாரத்தில் பயோனஸ்[2] (*Baeones*) என்ற தீவு இருக்கிறது ; அதன் நடுவில் மெயிஸ்[3] (*Mais*) என்ற ஆறு ஓடுகிறது. பரிகஸா செல்பவர்கள் முந்நூறு ஸ்டேடியா அகலமுள்ள இந்தக் குடாவைத் தாண்டும்போது கிழ்ப்புறமாகத் தெரியும் இந்தத் தீவை இடது பக்கமாக வைத்து நேர் குறுக்காக பரிகஸாவிருக்கும் ஆற்று வாய்க்குச் செல்வர். இதற்கு நம்மதஸ்[4] (*Nammadus*) என்று பேர்.

43. இந்தக்குடா குறுகியதாயிருப்பதால் சமுத்திரத்திலிருந்து பரிகஸாவிற்குச் செல்வதற்கு வருங் கப்பல்கள் துன்பப்படுகின்றன ; வலதுபுற வழியும் இடதுபுற வழியும் அவ்விதமே சங்கடமுடையதாக விருப்பினும் இடதுபுறமாக நல்ல வழியொன்று

---

(4) அபிரியா வென்ற தேசம் பைபிள் என்ற விவிலிய நூலில் கூறப்படும் ஓபிர் (Ophir) என்பர்.

(5) ஸிரஸ்டிரனி : சௌராஷ்டிரம். தற்காலக் கத்தியவார் தீபகற்பம்.

(6) செழிப்புள்ள நாடு: இங்கே குறிப்பிடப்பட்ட நாடு கூர்ஜர நாடு. அதன் செழுமை உலகறிந்ததே.

(7) மின்னகரம் : இது இந்தூராக விருக்கலா மென்பது சிலர் அபிப்பிராயம்.

(8) பப்பிகா : கோபிநாத முனை.

42. (1) கழி : காம்பே குடா.

(2) பயோனஸ்: நருமதை முகத்துவாரத்துக்கு எதிரிலுள்ள பிராம் தீவு.

(3) மெயிஸ் : மாஹிநதி.

(4) நம்மதஸ் : நருமதை யாறு.

உண்டு. குடாவின் வலது பக்க வழியின் தொடக்கத்தில் நீண்டு குறுகிய மணல் திட்டொன்று உண்டு; அது குன்றுகள் நிரம்பியது; கம்மனி (*Commoni*) என்ற கிராமத்தை நோக்கியிருக்கிறது; ஹிரோனி (*Herone*) என்று பேர் பெறும். இதற்கு எதிரிலும் அஷ்டசம்பரா (*Astacampra*) முன்னும் பப்பிகா என்ற முனை நீளுகிறது; இவ்விடத்தில் நீரோட்டம் வேகமுள்ளது; கடலின் அடியிலுள்ள மலையும் கறடும் முருடுமாக விருப்பதனாலே நங்கூரம் பாய்ச்சியினால் நிலைநிற்பதில்லையாதலால் அது நல்ல துறைமுக மன்று. அந்தக் குடாவிலே ஆபத்தின்றி நுழைந்தாலும் பரிகசாவி லிருக்கும் ஆற்றுமுகத்தைக் காண்பது அரிது; அதன் கரை மிகத் தாழ்ந்திருப்பதால் அவ்விடம் செல்லும்வரை ஊர் கண்ணுக்குப் புலப்படுவதில்லை. அப்படிக் கண்டுகொண்டாலும் ஆற்றுவாயில் காணும் மணற்றிட்டுகளால் அங்கே செல்வது மிகத் துர்லபம்.

44. இவ்வாறு இருப்பதால் 'திரப்பகா' (*Trappaga*) சோதிம்பா[1] (*Cotymba*) என்ற படகுவகைகளில் மாலுமிகளோடு நிறைந்திருக்கும் அரசாங்கச் செம்படவர்கள் சௌராஷ்டிரம் வரை கரையோரமாகச் சென்று கடலில் வரும் மரக்கலங்களைப் பரிகசாவுக்கு அழைத்துச் செல்லுகின்றனர். அவர்கள் (செம்படவர்கள்) குடாவின் தலைப்பிலிருந்து கப்பல்களை மாலுமிகளோடு மணற்றிட்டுக்கு நடுவில் (சேதமின்றி) அழைத்துச் செல்லுகின்றனர். வெள்ளத்தில் சென்றும் வத்தத்தில் பள்ளங்களிற்றங்கியுமிருந்து குறித்தவிடங்களுக்கு மரக்கலங்களைச் செலுத்துகின்றனர். இந்தப் பள்ள நீர்நிலைகள் பாரிகசா வரையில் ஆழமான இடங்கள்; அது (பரிகசா) முகத்துவாரத்திலிருந்து முந்நூறு ஸ்டேடியா அளவில் ஆற்றங் கரையில் இருக்கிறது.

45. இனி, இந்தியா தேச முழுவதும் பல ஆறுகள் ஓடுகின்றன; அவற்றில் வெள்ளமும் வத்தமும் அதிகம்; அமாவாசை பௌர்ணமியில் மூன்று நாள் வரை ஏற்றமாயும் பிற்பாடு திங்கள் பாடுசாயும்போது வரவரக் குறைந்தும் வரும். பரிகசா பக்கத்தில் இது பின்னும் அதிகம்; அதனால் (அவ்விடங்களில்) தரை திடீரெனக் காணப்படுவதும், தரையாயிருந்தவிடம் கடலாவதும், சற்று முன் மரக்கலங்கள் சென்ற பாகம் நீர்வற்றி வெறுந்தரையாவது மியற்கை. ஆற்றிலும் கடல் வெள்ள ஏற்றத்தால் ஆற்று வேகம் குறையக் கடல் வெள்ளம் எதிர்த்து உள்ளே வெகு தூரம் செல்லும்.

---

44. (1) திரபகா, சோதிம்பா என்பவை அந்நாளிலிருந்த படகு வகைகள்.

46. இந்தக் காரணத்தாலே பழக்கமற்றவர்களுக்கும் முதன் முதல் வியாபாரத்திற்கு வருபவர்கட்கும் மாக்கலங்கள் கொண்டு வருவதும் போவதும் கஷ்டமாகிறது. வெள்ளத்தில் ஓட்ட வேகம் தாங்க முடியாது ; நங்கூரம் பாய்ச்சினாலும் அது நிலை பெறாது ; அதனால் பெரிய மாக்கலங்கள் அதன் வேகத்திலகப்பட்டுத் திரும்பி மணற்றிட்டில் அடிபட்டு உடைகின்றன ; சிறு கப்பல்கள் தலைகவிழ்கின்றன ; வற்றத்தில் பக்கங்களிலுள்ள கால்களில் ஒதுங்கிச் சாய்ந்த கலங்களை நேரே நிமிர்த்திவைக்காவிட்டால் வேகமாக உட்செல்லும் வெள்ளத்தினால் கப்பல் நிறைந்து விடும். குறிப்பாக அமாவாசையின் இரவில் வெள்ள ஓட்டம் விசையாக இருக்கிறது ; அப்பொழுது கடல் ஓத்து நிற்பதாக நினைத்து ஒருவன் முகத்துவாரத்தில் நுழைய ஆரம்பித்தால் அதிக தூரத்திலிருந்து வரும் ஒரு சேனையின் இரைச்சலைப் போல் அவன் காதிற் படும் ; உடனே கடல்நீர் பேரிரைச்சலோடு மணற்றிட்டையெல்லாம் மூடிக்கொண்டு ஓடும்.

(தொடரும்)



# ஸ்ரீபரசுராம பராக்கிரமம்

வி. சுப்பிரமணிய ஐயர்

**ப**ரசு என்ற வடமொழிப்பதம் கோடரி என்ற பொருள்படும். இதனைத் தமது ஆயுதமாக வுடையவர் பரசுராமர். கோடரியை யுடைய ராமரை வடமொழியில் பரசுராமர்எனக் கூறுகிறார்கள்.

மலையாளப்பிரதேசத்தில் சஞ்சாரம் பண்ணுவோரும், மைசூர்ப் பிராந்தியங்களிலுள்ள பல ஸ்தலங்களை ஆராய்ந்து கவனிப்போரும், ஆங்குள்ள ஒவ்வோர் இடமும் ஒவ்வொரு பொருளும், பரசுராம ரின் பெயருடன் சேர்த்து வழங்கப் பெறக்கூடியதாயிருப்பதையும், அவர் பெயர் அங்குப் பூஜ்யதைக் குரியதாய்க் கொண்டாடப் பெறக்கூடியதாயிருப்பதையும் பார்க்காமலிரார். அவ்விடங்களில் அநேக கோயில்கள் அவருக்கென் றிருப்பதை அனைவரும் சென்று பார்க்கலாம். இந்த இரண்டு ஜில்லாக்களைத் தவிர—மேலைக்கரையி லும் மைசூர்ப் பீடபூமியிலும் தவிர—வேறெந்தவிடத்திலும் பரசு ராமருக்குக் கோயிலும் கிடையாது, பூஜ்யதையும் கிடையாது என்றே சொல்லிவிடலாம்.

ஆனாலும், ஸ்ரீபரசுராமரின் சரித்திரத்தை எடுத்துச் சொல் லாத ஜாதியுமில்லை, இடமுமில்லை யென்று சொல்லவேண்டி யிருக் கிறது. பிரமணர்களுக்கும், க்ஷத்திரியர்களுக்கும் இடையிலுள்ள விரோதமும் பிறவும் காரணமாக, இந்தியாவில் ஸ்ரீபரசுராமரின் சரித்திரம் பிரக்கியாதியாய் வழங்கிவருகிறது. ஸ்ரீமஹாபாரதத்தில் ஸ்ரீபரசுராமரின் பராக்கிரமம் மிகுதியும் வர்ணித்துக் கூறப்படும் போது க்ஷத்திரியர்களுக்கும் மேம்பட்டுப் பிராமணர்கள் பெரிதும் விளங்கினார்களென்றும், இப்படிப்பட்ட ஸ்ரீபரசுராமரின்மீதும் க்ஷத்திரியர்கள் வெற்றிபெற்று விளங்கினார்களென்றும் சொல்லப் பெற்றிருக்கிறது. பரசுராமரது சரித்திரம் பற்பல வகைகளில் புனைந்து கூறப்பெற்றிருக்கின்றது. இவருடைய உருவங்கள் வைத்துப் பலவிடங்களில் பூஜையும், பஜனைகளும் நடந்துவரு கின்றன. இவருடைய சரித்திரப் பிரபாவங்களை ஆதாரமாகக் கொண்டு பலவகை வேறு சரித்திரங்களும் புனைந்து சொல்லப் பெற்று வருகின்றன. இவருடைய அமானுஷ்யமான செயல்கள் சில சொல்லப்பெறுவனவற்றில், தம்முடைய கைக்கோடரியினால் பல

மலைகளைப் பிளந்தார் என்றும் இவரது சரித்திரம் கூறுகிறது. இப்போது சிலமலைகளிலுள்ள இயற்கை விரோதமான அமைப்புக்களையும், இயற்கை அமைப்புக்களிலேற்பட்ட சில விரோதாபாசங்களையும் இப் பரசுராமரின் கோடரியினால் நேர்ந்த கோலங்களென்று வர்ணிக்கிறார்கள். ஸ்ரீபரசுராமரைப் பூஜைசெய்யும் ஸ்தலங்கள் அவ்வளவாக இவரது மகிமைகளுக்கேற்ப அதிகமாயில்லாமற் போனபோதிலும் இவரது மகிமையையும் பெருமையையும் வீரத்தையும் போற்றி, இவர் மஹாவீரர் என்றே பெயர் பெற்றுவிட்டார் என்னவேண்டும். இவரைப்பற்றிய பொதுவான சரித்திர ஸாரம் பின்வருமாறு :—

ஸ்ரீபரசுராமரின் தந்தையார் ஜமதக்னி மகரிஷி என்று பெயர் பெறுவர். இவர் வஸிஷ்ட மகரிஷியின் விரோதியாகிய விசுவாமித்திர மகரிஷியின் நெருங்கின பந்துவாவர். ஜமதக்னி ரேணுகை என்னும் வனப்பு வாய்ந்த மாதினை மணந்து இல்லறம் நடத்தி வந்தார். ரேணுகையின் தகப்பனார் பெயர் பிரஸேனஜித்தென்பது. ஆகவே ஸ்ரீபரசுராமரின் தந்தை வமிசாவளியில் பிருகு என்னும் ஆதிபுருஷரிடத் துண்டானவர் என்பது தெரியலாகும். தாய் வழியில் இவரது கூடஸ்தர் குசிக மஹரிஷியாவர். ஸ்ரீ பரசுராமர் ஜமதக்னி மஹரிஷிக்குப் பிறந்த குமாரர்களில் ஐந்தாவராவர். க்ஷத்திரிய வமிசத்தை வேரறுக்க இவர் திரேதா யுகத்தின் முதலில் இப்பூமியில் அவதரித்தவர். பிராமண ஜனிமாவில் பிறந்த ஸ்ரீபரசுராமர் மிகவும் வல்லமையுடையவராய்ப் பிறந்து, இருபத்தொரு தடவைகளில் க்ஷத்திரியப் பூண்டைப் பூமியிலிருந்து தொலைத்து வமிச நாசமாக்கி, இந்தியாவில் தம் ஆற்றலை நிலை நாட்டினவர். ஜமதக்னி மஹரிஷி யிடத்தில் தேவேந்திரன் காமதேனு என்னும் தெய்வப் பசுவின் புத்திரியாகிய ஸுரபியைக் கொடுத்து வைத்திருந்தான். ஒருகால் கார்த்தவீர்யார்ஜுனன் என்னும் க்ஷத்திரிய மன்னன் வேட்டை யாடிக்கொண்டே, இம் மஹரிஷி யிருக்கும் காட்டில் நுழைந்து இவரைச் சந்தித்தான். மஹரிஷியும் மன்னனை நல்வரவேற்று விசேஷ விருந்தொன்றினை இக் காட்டில் இவனுக்குச் செய்துவைத்ததைப் பார்த்து மன்னன் மஹரிஷியின் செல்வத்தைப் பற்றிச் சந்தேகிக்க இடமுண்டாயிற்று. ஸுரபி என்னும் தெய்வப்பசுவே மஹரிஷியின் செல்வத்திற்குக் காரணமாகுமென்று கார்த்த வீர்யார்ஜுனன் உணர்ந்து கொண்டான். மஹரிஷியின் பெருமையைக் கண்டு பொறுமை கொண்டவரசன், இப் பசுவைப் பிடிக்கக் கருதி, அக்காட்டிலுள்ள எல்லா விருக்ஷங்களையும் தரையோடு தரையாகும்படி வெட்டிச் சாய்த்துவிட்டான். இப்படி

இம்மன்னன் இம்மகரிஷி யாசிரமம் முழுவதையும் பாழ் பண்ணினான். இவ் விசேஷமான சரித்திரத்திற்கு ஆதாரம் வேண்டுமானால் இப் பசு இருந்த இடமும், மகரிஷியின் ஆசிரமும் ஸோராப் என்ற நீர்வளமும் நிலவளமும் நிறைந்த பிரதேசமாகுமென்று நிர்ணயித்து விடலாம். இந்த ஸோராப் ஜில்லா மைசூரின் வடபாகத்தில் இப்பொழுதும் பிரத்யக்ஷமாய்க் காணக்கூடியதாக இருக்கிறது. கார்த்தவீர்யார்ஜுனனின் துஷ்டச் செயல்களைக் கேள்வியுற்று ஸ்ரீபரசுராமர் அவனுடைய கர்வத்தை யடக்கி அவனுக்கு நற்புத்தி கற்பிக்கக் கருதினார். அம்மன்னனை ஸ்ரீபரசுராமர் எதிர்த்து அவனுடைய ஆயிரம் கைகளையும் தலைகளையும் அறுத்துத் தள்ளினார்.

அம் மன்னனது குமாரர்கள், தமது தந்தை, ஸ்ரீபரசுராமரால் கொலையுண்டமை பற்றிப் பெரிதும் மனம் புழுங்கிப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்று கருதினார்கள். அவர்கள் அனைவரும் ஸ்ரீ ஜமதக்னி யாசிரமம் குறுகி அம் மகானைக் கொன்றார்கள். அவரது மனைவி இதனைக் கேள்விப்பட்டதும் தன்னுடைய புருஷனுடனும் சககமனமானாள். சககமனமான ரேணுகாஸ்தலத்தை இன்றும் சந்திரகுத்தி என்னும் பெயர் கொடுத் தழைக்கிறார்கள். அவளைப் பூஜை செய்ய ஓர் கோயிலும் ஆங்குக் கட்டப்பெற்றிருக்கின்றது. ரேணுகை சககமனம் செய்யும் போது, மார்பில் இருபத்தொருதடவை புடைத்துக் கொண்டும் தன்னுடைய புருஷரைக் கொன்றவர்களுக்குச் சாபம் கொடுக்கும் வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டும் பிராணனைவிட்டாள். இதன் மேல் ஸ்ரீபரசுராமர், இப்படி அநியாயமாய்த் தம்முடைய பிதாவைக் கொலை செய்த க்ஷத்திரிய வமிசத்தை நாசம் செய்தல்லது, தாம் சாந்தி யடையப் போவதில்லை யென்று பிரதிக்ஞை செய்தார். இவ்வாறு க்ஷத்திரியர் பூண்டை வேரறுக்கும் வேலையில் கங்கணம் கட்டிக் கொண்டெழுந்த ஸ்ரீபரசுராமருக்கு அது சுலபசாத்தியத்தில் முடியக் கூடிய காரியமன்றாயினும், இவ்வேலையைச் செய்வதில் தம் சக்தி முழுவதையும் இவர் பூர்ணமாய்ப் பிரயோகித்தார் என்றே சொல்ல வேண்டும். இவர் இருபத்தொரு தலைமுறை வரையும் க்ஷத்திரியப் பூண்டு முளைகிளம்பி வளராவண்ணம் க்ஷத்திரியர்களுடன் கடும் போர் புரிந்து வேரறத் தடிந்தார்.

க்ஷத்திரியர்களின் பூண்டற்றுப் போனதற் கப்புறம், ஜனங்களை யாள அரசரில்லாது போயினர். அதன்மேல் இராஜபுத்திரர் தமது அக்கினி குண்டத்தை யெடுத்துக்கொண்டு ஆபுமலைச் சிகரத்தில் ஏறினர். அங்கே மஹரிஷிகளின் அநுக்கிரகத்தினால், பாரியார்கள், பொன்வார்கள், ஸோலன்சிகள், சௌவாப்ஸ் என்ற அரச

வமிசங்கள் உண்டாயின என்று இப்போதும் இராஜபுதனத்தில் ஒரு கர்ணபரம்பரைக் கதையைச் சொல்லிக் கொள்கிறார்கள். சுத்தமான ஆரியக்ஷத்திரியர்களுக்குப் பதிலாக, மத்திம காலத்தில் இராஜபுத்திர வீரர்கள் க்ஷத்திரியர்களாயினார்கள் என்ற கர்ணபரம்பரைக் கதையை இது விளக்கிநிற்கும்.

இம்மாதிரி, க்ஷத்திரியவமிசத்தைக் கருவறுத்த பாபத்தினால், இவரைப் பிராமணர்கள் தம் மத்தியில் வைத்துக் கொள்ளப் பிரியப் படாமல், கடலில் தென்கரையோரம் போமாறு கட்டளையிட்டார்கள். அப்படியே ஸ்ரீபரசுராமர் சமுத்திரராஜனைக் கூப்பிட்டுத் தமக்கு இடம்கொடுக்குமாறு வேண்டிக்கொள்ள, ஸ்ரீபரசுராமக்ஷேத்திரம் என்னும் மலையாளப்பிரதேசம் உண்டாயிற்றென்பர். இவர், பின்னும் தமது கோடரிகொண்டு மேலே மலைப்பிரதேசங்களில் பல பிளவுகளை யுண்டுபண்ணினார்.

சமுத்திரத்தைப் பணித்துத் தூரமாகப் போமாறு உத்தரவு செய்து, ஏழு கொங்கணதேசங்கள் என்ற சமுத்திரப் பிரதேசங்களையும் உண்டுபண்ணிப் பின்னால் க்ஷேத்திரபர்வதம் போய்ச் சேர்ந்தார். ஆகவே, மலையாளக்கரையிலுள்ள ஜனங்கள் இப்போதும் பரசுராம பக்தியை மேற்கொண்டவராயிருக்கிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை. இவ்விடத்தில் பிராமணர்கள் வந்து குடியேறினார்கள். இப்பிரதேசங்களில் சர்ப்பங்கள் அதிகமாயிருந்தபடியால் இதிற் குடியேறிய ஜனங்கள் ஓடிப்போனார்கள். பின்னால், இந்தச் சர்ப்பங்களை ஒவ்வொரு வீட்டின் அதிதெய்வமாக்கி விடவே, சர்ப்ப பீதி ஒழிந்துபோய்ச் சனங்கள் சுகமாய் வசிக்கலானார்கள். இன்றும் சர்ப்பங்களை இப்பாகத்தார் தம்முடைய குலதெய்வமாகக் கொண்டாடுவது குறிப்பிடத்தக்கது.

புதிதாகக் குடியேறினவர்களில் 64 கிராமத்தார்களிருந்தார்கள். இவர்கள் பெண்சந்ததி வழியாய் வமிசம் பெருகவேண்டுமென்று ஸ்ரீ பரசுராமர் உத்தரவிட்டார். ஏதோ, இரண்டொருவகுப்பார் இதற்கு விலக்காக இருக்கிறார்களே யொழிய, மற்றையவர்கள் எல்லோரும் ஸ்ரீ பரசுராமர் பணித்தபடியே ஒழுகுகிறார்களென்னவே வேண்டும். பிராமணர்களின் பாதுகாப்பாகச் சில வேறு ஜாதியினர் இங்கே கொண்டு வந்து குடியேற்றப் பெற்றிருக்கிறார்கள். பின்னால் நாயர்கள் கிராம பரிபாலனவேலையைக்கொண்டு நடத்தும்படி ஏற்படுத்தப்பட்டார்கள். இப்படியே பரசுராம க்ஷேத்திரம் (மலையாளப் பிரதேசம்) ஸ்ரீ பரசுராமரால் உண்டாக்கப்பெற்றது. இங்கே புண்ய கர்மா செய்தலினால் மோட்சப்ராப்தி உண்டென்னும் விஷயம் பிராமணாசிர்வாதமாகக் கொடுக்கப்பெற்றுள்ளது. இது கர்ணபரம்

பரைக் கதை யென்று சொல்லப்பெற்றாலும், மலபார்கெஜட்டீரை எழுதினவர் பின்வருமாறு அபிப்பிராயப் படுகிறார் :—“ பூமிப் பரப்பு சாஸ்திரிகள், வெகுபுராதனகாலத்தில், சமுத்திரம் மேலேமலேப் பிராந்தியத்திற் புகுந்து மேற்கொண்டழித்தது ; அப்புறம் ஏதோ பூகம்பம் நேரிட்டு, எரிமலையும் உண்டாகிச் சமுத்திரத்திற்கும் பூமிக்கு மிடையில் பிளவுண்டு பண்ணியிருக்கவேண்டுவது இயற்கை யின் அமைப்பாயிருக்கவேண்டும். இஃது ஆயிரம் வருஷங்களுக்கு முந்தி ஏற்பட்டிருக்கலாம். ஆனல் பரசுராமரைப் பற்றிச் சொல்லப் பட்ட விஷயம் பலவேறு விதமாயிருக்கிறது”.

ஷிமோகா ஜில்லாவில் நதியின் மத்தியில் ஒரு குட்டையிருக் கிறது. இது பரசுராமரின் கோடரியினல் மலேப்பாறையினின்று குடைந்தெடுக்கப்பட்டதென்பர். இவ்விடத்திற்கு வருஷவாரியில் இலக்ஷாபலக்ஷம் யாத்திரிகர்கள் ஸ்நாநம் செய்வதற்கு யாத்திரை யாக வந்து ஸ்நாநம் செய்து போகிறார்கள். க்ஷத்திரியப் பூண்டை யெல்லாம் தொலேத்த பாவம் போக க்ஷேத்திராடனம் தீர்த்தாட னம் செய்து வந்த மஹானுபாவரான ஸ்ரீ பரசுராமர் இவ்விடம் வந்த பிறகே தம் பாவங்கள் எல்லாம் தொலேயப்பெற்று இஷ்டசித்தி அடைந்தாரென்பர்.

ஸ்ரீ பரசுராமரது கோடரியின் வைபவத்தை விளக்க, மைசூரில் ஒரு தேவாலயம் பரசுராமருக்கென்று பிரபலமாயிருக்கிறது. கோலார் ஜில்லாவின் மேலேப்புறத்திலுள்ள மலேயைச் சதசிருங்கபர்வதம் என்று பெயரிட்டழைக்கிறார்கள். நூறு சிகரங்களுள்ள மலே யென்பது அதன் பொருள் தமது தந்தையைக் கொன்ற பழிக்குப் பழியை இங்கேயே ஸ்ரீபரசுராமர் செய்து தீர்த்தார் என்பர். இவர் பழிக்குப்பழி தீர்த்துக்கொண்டு கோலாகலம் (சந்தோஷம்) கொண்ட இந்த க்ஷேத்திரத்தையே இப்போது கோலாகலநகரம் என்று பெய ரிட்டழைக்கிறார்கள். இதனேயே இப்போது கோலார் என்று வழங்குகிறோம். கொங்கணத்தில் ஷிதபவனர் என்ற ஒரு ஜாதியார் பின்வரும் காரணத்திற்காக ஸ்ரீபரசுராமரால் சிருஷ்டிக்கப் பெற் றிருக்கிறார்கள். க்ஷத்திரியர்களுடன் மலேந்த போருக்குப் பிறகு, இந்தியாவில் ஸ்ரீஷிதபவனமலேயில் ஸ்ரீபரசுராமர் ஆயாசம் தணித் துக் கொள்ளலானர். இந்த இடத்தில் வசித்த பிராமணர்கள், ஸ்ரீபரசுராமரைச் சண்டைக்கிழுத்தார்கள். அப்போது சமுத்திரக் கரையில் போய், மிச்சமாய் எரிந்து கொண்டிருந்த சவங்களில் 14 பேரை இவர் உயிர் கொடுத்தெழுப்பி அவர்களேப் பிராமணர் களாக்கினர்.

ஸ்ரீபரசுராமர் தமது பராக்கிரமத்தினால் செய்த காரியங்கள் எண்ணிறந்தன. இவரது பராக்கிரமங்களைப்பற்றி மஹாபாரதம் ஸ்ரீ ராமாயணம் போலப் பலபுஸ்தகங்கள் எழுதியிருக்கலாம். ஆனால் பரசுராமரிடத்து அக்காலத்து ஏற்பட்ட எந்தத் துவேஷத்தினாலோ, அப்படிப்பட்ட புஸ்தகங்கள் அவரைப்பற்றி எழுதப்படாமைக்குக் காரணம் தெரியவில்லை.

ஸ்ரீபரசுராமர் தம் தகப்பனார் சொற்கேட்டு, தம் தாய் ரேணுகையின் தலையை வெட்டினது முதலாவது அநியாயம் என்று ஸ்ரீமஹாபாரதத்தில் கூறப்பெற்றிருக்கிறது. தன் மனத்தில் அந்நிய புருஷனை நினைந்ததனால், ரேணுகை தன் பர்த்தாவின் அப்பிரியத்தைச் சம்பாதித்துக்கொண்டாள். அப்போது தம் தாயைக் கொல்லும்படி தம் ஒவ்வொரு புத்திரனையும் கூப்பிட்டு உத்திரவு கொடுத்தார். ஸ்ரீபரசுராமர் என்ற கடைசிப் புத்திரனன்றி மற்றெவரும் தம் தந்தையின் சொற்கேட்க இசைவில்லை. அவ்வாறு ஸ்ரீபரசுராமர் தம் சொற்கேட்டதைப் பார்த்த ஜமதக்னி வரம் வேண்டுமாறு உத்தரவிட்டார். தமக்குத் தாயார் வேண்டுமென்பதையே வரமாகத் தம் பிதாவிடம் ஸ்ரீபரசுராமர் கேட்டார். அவ்வாறே பரசுராமர் கேட்ட வரத்தை ஜமதக்னி கொடுத்து, ஸ்ரீபரசுராமரது தாயாரைத் தெய்வங்களிலொன்றாக்கி நீடுழிகாலமான ஆயுசையும் பிறவற்றையும் கொடுத்தார்.

ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீபரசுராமர் ஸ்ரீராமருடன் யுத்தம் செய்ய நேரிட்டகதை விஸ்தாரமாய்ச் சொல்லப்பெற்றிருக்கிறது. ஸ்ரீ மகாபாரதத்திலும் இக்கதை சொல்லப்பெற்றிருந்தாலும் சரித்திரப் போக்கில் வித்தியாசங்கள் காணப்படுகின்றன. ஸ்ரீராமாயணத்தில் ஸ்ரீபரசுராமர் ஸ்ரீபரமசிவனின் பக்தர் என்று அவரது சரித்திரம் விஸ்தாரமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. பரசுராமரை ராமர் ஜயித்தாரென்றும், தம்முடைய அம்பின் வேகத்தினால் பரசுராமரின் நல்ல லோகத்தின் கதியைக்கூட ஸ்ரீராமர் அடித்துவிட்டார் என்றும் ஸ்ரீபரசுராமரின் சரித்திரத்தைப் பாழ்படுத்திச் சொல்லியிருக்கிறது பக்ஷபாதமான கதையே யாகும்.

அசுவத்தாமா பலிர் வ்யாஸோ ஹநுமாம்ச விபீஷண :
கிருப : பரசுராம: சஸப்தைதே சிரசீவின :

என்ற சுலோகம் ஸ்ரீபரசுராமர் சிரஞ்சீவிகளில் ஒருவராய் இன்று நம்முலகத்திலிருக்கிறார் என்பதை விளக்குகிறது.

# இன்பந் தேடிய இளவரசன்

திரு. சி. குழந்தைவேலன்

இன்பமே என்வாழ்வில் இருக்க எண்ணுகிறேன்; இந்த என் எண்ணம் ஈடேறுமா? எந்த வகையிலேனும் இன்பமே காண ஆவலுறுகிறேன்; இன்ப வாழ்க்கையை எட்டிப் பிடித்திட என்மனம் தாவுகிறது; தாவிய நெஞ்சம் தகைபெறுமா? இவ்வுலகில் இன்பமென்னும் இனிய பொருள் எங்குளது? அதை அன்புடன் எனக்குங் காட்டுவீர்களா? இன்பமே துய்த்த எவரேனும் என் கண்முன் எதிர்ப்படவொண்ணுதா? இன்பவழி இதுதானென்று காட்டுவாரில்லையா? ஓ! இன்ப மனிதர்களே! இன்பவுலகில் இன்பமாளிகை எங்கேயிருக்கிறது? இந்த ஏழையை அழைத்துச் சென்று அங்குள்ள இன்பத்தேனை அள்ளிப்பருகி ஆனந்தமடையச் செய்யுங்கள். இந்த உதவி செய்வீர்களா? இன்பம் எங்கே இருக்கிறது?

*    *    *    *

நான் ஒரு சக்கரவர்த்தி மைந்தன். என் தந்தையால் நான் பள்ளத்தாக் கொன்றில் பத்திரமாக வைக்கப்பட்டிருந்தேன். அப்பள்ளத்தாக்கு இயற்கையழகும் இன்பப்பொருளும் எங்கும் நிறைந்துள்ள இடமாகும். நாற்றிசையும் மலையினின்று விழும் மலையருவியுண்டு. மலைச்சார்பெல்லாம், மரச்செறிவு ஆற்றங்கரை எல்லாம் அழகிய பூத்திரள். அடிக்கிற காற்றில் செடிகளின் தழை, கிளை இவை சிறிது அசைய, இலவங்கம், ஏலம், கற்பூரம், சாதிக்காய், தக்கோலம் முதலிய வாசனைத் திரவியங்கள் மலையினின்று பல பலவென்று விழும். புல் பூண்டுகளை மேய்பவைகளும், தழை குழை கடிப்பவையுமான நானுசாதி விலங்குகள் அச்சமற்று உலாவித் திரியும். ஆட்டு மந்தைகளும், கன்று காலிகளும் திரளாய்க் கூடி மேயும் பசும்புற்காடு ஒருபக்கம்; மான், மரை, முயல் முதலிய விலங்குகள் மகிழ்ச்சியாய்த் துள்ளிக் குதித்து வேகமாய்ப்பாயும் காட்டிடை வெளிநிலம் ஒருபக்கம்; மலையில் வெள்ளாட்டுக் குட்டிகள் உல்லாசமாய்த் துள்ளிவிளையாடும்; வஞ்சமனமுள்ள வானரங்கள் மரக்கிளைகளில் மகிழ்ச்சியாய்க் குதித்துத் திரியும்; மந்த குணமுள்ள மதயானை கிளைபடர்ந்த மாநிழலில் படுத்திருக்கும். மனிதருக்கு இகத்தில் இயற்கையான நற்பேறனைத்தும் அங்குத்

திரன்டிருந்தன. இவைகள் எனக்கு எவ்வித இன்பத்தையும் ஊட்டக் காணேனே! இதோ அவ்விடத்தினின்றும் வெளிப்பட முயலுகிறேன்! இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

மனிதரியற்கை யொன்றும், மற்றுள்ள உயிர்க்கோடிகள் இயற்கை ஒன்றுமாக வேறுபடும் காரணமென்ன? என்னருகில் திரியும் விலங்கினம் அனைத்திற்கும் எனக்குள்ள உடல்துன்பங்களுண்டு. பசிக்கும்பொழுது அவை பசியடங்கப் புல்மேயும்; தாகம் எடுக்கும்பொழுது தாகந்தீரத் தண்ணீர் குடிக்கும்; இவ்வாறு பசிதாகந் தீரவும், அவை நிறைமனங்கொண்டு நித்திரை செய்யும். அயர்ந்து தூங்கி விழித்து எழுந்த பின்னும் உண்டாகும் பசிதாகத்தை மேற்சொல்லியபடி தீர்த்துக் கொண்டு பதைப்புறுதிருக்கும். அவ்விலங்கைப் போல் எனக்குப் பசி தாகம் முதலிய உடல் துன்பங்கள் சோறு தண்ணீரால் தீர்ந்த பின்னும் என் பதைப்புத் தீருகிறதில்லை. பசி தாகம் முதலிய குறைகளால் விலங்கும் வருந்துகிறது; நானும் வருந்துகிறேன். அக்குறைதீரவும் விலங்குக்கு மனநிறைவு உண்டாகிறது; எனக்கோ அது இல்லை. பசிதீர உண்டு மீண்டும் பசிக்கிறவரையில் என்மனம் குறுவிசாரப்படுகிறது; பொழுதுபோகாமல் அலுப்புண்டாகிறது. சோறு தண்ணீரில் விருப்புண்டாகும்படி பசிதாகம் மிஞ்சவேண்டுமென்று விரும்புகிறேன். பறவைகள் காய், கனி, தானியாதிகளைக் கொத்திப் பொறுக்கி இரை நிறையத் தின்றபின், சோலைகளுக்குப் பறந்து போய் மரக்கொம்புகளிற்படிந்து களிகூர்ந்து கூவும். அவை கூவும் அடுக்கொலி அன்றொருவிதம் இன்றொருவிதமல்ல; விகற்பமின்றி என்றும் ஒரேவிதமாயிருக்கும். நானும் கின்னரர் பாடகரை வரவழைத்து வீணாகானம் பண்ணுவித்துச் சங்கீத காலக்ஷேபம் செய்விப்பதுண்டு. எனினும் நேற்று எனக்கு இன்பமளித்த பண்ணை இன்றும் கேட்டால் அலுப்பு உண்டாகாமற்போகாது. நாளைக்குங் கேட்டால் பின்னும் அலுப்புப் பெருகும். அதற்குரிய போகந் தெவிட்டாத ஞானேந்திரிய பலம் எனக்கில்லை. போகம் தெவிட்டினும் என்மனம் இன்பம் அறியாதிருக்கின்றது. இந்தவிடத்தில் எற்கும் நுகர்ச்சியில்லாத நுட்பமான ஆறுவது இந்திரியம் ஏதோ மனிதருக்குண்டு. இது உண்மை. பின்னும் சற்றுத் தெளிவாய்ச் சொல்லுகிறேன்: ஐந்து இந்திரியங்களுள்ளும் அமையாத சக்தி ஏதோ ஒன்றிருக்கிறது. அவ்வாசை தீர்ந்தே ஆனந்தம் பிறக்கவேண்டும். அவ்வானந்தத்தை அடையவே இன்பப் பூமியைவிட்டு வெளி வர முயல்

கிறேன். எனக்குச் சொல்லுகிறீர்களா ? இன்பம் எங்கே இருக்கிறது ?

* * * *

நானே அரசகுமாரன். எனக்கென்ன குறை என்கிறீர்களோ ? குறையொன்றும் எனக்கில்லாதிருப்பதும், இருந்தால் அது இன்னதென்று அறியாதிருப்பதுமே என் மனக்குறைக்கு நிமித்தமாம். நெஞ்சறிய எனக்கு ஏதுங்குறையிருந்தால், அதைத் தீர்க்க ஆசையுண்டாம்; அவ் வாசை முயற்சியைத் தரும்; முயற்சிபிறந்தால் ஆதித்தன் அஸ்தகிரி சேர நெடும்பொழுது செல்லுகிறதேயென்று என்மனம் பதைக்காது. நித்திரையொழிந்து அறிவு தெளிந்து பொழுது விடியவும் நான் பிரலாபிக்க நிமித்தமிராது. வெள்ளாட்டுக்குட்டி செம்மறியாட்டுக்குட்டிகள் ஒன்றையொன்று தொடர்ந்து ஓடுவதைப் பார்க்கும்பொழுது, அவ்வாறு தொடர எனக்கும் யாதாயினும் விஷயமிருக்குமானால் ஆனந்தம் உண்டாகுமே என்று இதயம் நினைக்கின்றது. வேண்டுவன யாவும் குறையாதிருப்பதனால், யாதொரு விகற்பமுமின்றி, நேற்றையதினம் இன்றைய தினம் போலும், சென்ற நாழிகை செல்லுகின்ற நாழிகை போலும் இருக்கின்றன. பின்னும் சொல்லின், எனக்கு ஒரு நாளல்ல, ஒரு நாழிகை ஓராண்டுபோல் நீடித்திருக்கிறது. என் சிறு பருவத்தில் ஒரு நாள் ஒரு நாழிகைபோலக் குறுகி விரைவிற் கழிந்தது. உலகப்பரப்பு ஒரு விநோதமாகத் தோன்றியது. விநாடிக்கு விநாடி முன் காணாத புதுமைகளைக் கண்டேன். நாளென்பதை அவ்வண்ணம் குறுகத் தோற்றுவிக்கும் உபாயமேதும் அறிந்தாற் சொல்லுங்கள். இப்பொழுதே எனக்குப் போகந் தெவிட்டுகிறது. விரும்பத்தகுந்த புதிய விஷயம் எதையேனும் காட்டுங்கள்! இவ்விதக் குறையுள்ள எண்ணமே அந் நிறைவான பூமியை வெறுக்கச்செய்தது. இப்பொழுதேனும் சொல்லுங்கள்: நான் தேடும் இன்பம் எங்கே இருக்கிறது ?

* * * *

பேதைமையுள்ள இளம் பருவமும், பலம் ஒடுங்கும் முதிர் பருவமும் மனிதர் வாழ்நாட்கணக்கிற் சேரா. ஒன்றைச்சிந்தித்து நல்லது கெட்டது தெரியும் சக்தி இளைஞருக்குண்டாக வெகுநாட் செல்லுகின்றன. ஆடவருக்குச் செய்திறம் விரைவில் ஒழிந்து போகிறது. தப்பறப் புத்திபூர்வமாய் மதிப்பிட்டால் நாற்பது மாதத்தை நான் வீணே சிந்தனையிற் போக்கினேன். போனகால முள்ளது. அது என் வசத்திலிருந்ததற் கையமில்லை யல்லவா? இனி வரும் இருபது மாதம் எனக்கு வசமாகுமென உறுதி சொல்லுபவர் யார்? ஒருவருமில்லையே! இனியேனும் நான் இன்பமா

யிருக்கலாகாதா? அவ்வெண்ணம் என்மனத்தில் எழுந்தது பிழை யாகுமா? சீக்கிரம் சொல்லுங்கள்: இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

இதோ நான் இப் பூமியாகிய பள்ளத்தாக்கினின்றும் வெளி வந்துவிட்டேன். ஆ! என்ன என்ன காட்சிகளைக் காண்கின்றேன்! வாகனத்திற் செல்லும் வகையான பல பெரிய மனிதர்களையும் தள் ளாடும் நடையும் தலைநடுக்கமுமுள்ள கிழவர்களையும் ஒரே சமயத்தில் பார்க்கிறேன்! இதென்ன விந்தை! இப்படியும் உலகத்திலுண்டா? அதோ அண்ணாந்து பார்க்கும்படியான அத்தனை பெரிய மாடி வீடொன்று எனக்குத் தெரிகிறது! இவற்றையெல்லாம் நான் இன்பப் பூமியில் காண்பதெவ்வாறு? இதென்ன! மாடிவீட்டுக் கருகில் இடிந்த குட்டிச்சுவர் நிற்கின்றதே! உலகம் இப்படித்தானா? ஆ! மனிதர் எவ்வளவு சுறுசுறுப்பாக வாழ்க்கைப்போரை நிகழ்த்து கிறார்கள்! எல்லோரும் இன்பமாகத்தானே வாழ்கிறார்கள்? அதோ ஒரு தனவந்தர் வாடிய முகத்துடன் செல்லுகிறாரே; ஏன்? அடடா? இந்த ஏழைக்குடியானவன் எவ்வளவு இன்பமாய் வேலைகள் செய் கிறான்! உலகமே ஒரு விநோதக் காட்சிச்சாலையாயிருக்கிறதே! இதில் நான் தேடும் பொருள் கிட்டுமா? இன்பம் எங்கே இருக் கிறது?

* * * *

பாலியந்தான் மனமகிழ்ந்து இனிதிருக்குங்காலம். விரும்பும் எதையும் அநுபவித்துக் களிகூர்வதும், ஒன்றதீர ஒன்றாகப் போகங் களில் ஓயாமல் நாள் கழிப்பதுமே மணியமாயிருக்கும் காலம் அல்லவா? எனவே, இளைஞருடன் தோழமை கொண்டேன். ஐயோ நான் என்ன சொல்லுவேன்! என் கொஞ்ச நாட்களிலேயே அலுத்து விட்டதே! இளைஞர்கள் உல்லாசத்திற்கு விஷயமில்லை. அவர்கள் நகைப்பிற்குக் காரணமில்லை. அவர்கள் இன்பம் ஸ்தூல இன்பம்; விஷய இன்பம். விவேகம் அதிற் கலக்கவில்லை. அவர்கள் நடை மாறுபாடானது. ஒழுங்கும் விதிகளும் அவர்களுக்குப் பரிகாசம். ஆனால் அதிகாரி முகங்கடுத்தால் அவர்கள் மனங்குன்றிப் போய் விடும். அறிவுடையோரைக் கண்டால் அவர்கள் நாணி விறைத்துப் போவார்கள். நிபந்தனை எதுவுமின்றி நடப்பதும், நெறிகுறியின்றி நேர்ந்தபடிசரிப்பதும், களிப்பதும் பகுத்தறிவுள்ள மனிதருக்குத் தகுதியாகுமா? மனோசுகமானது அச்சமும் ஐயமுமற்று உறுதியும் நிலையு முள்ளதாயிருக்க வேண்டுமே! இவர்களிடம் இத்தகைய இன்பம் இல்லையே! என்செய்வேன்! எங்குத் தேடுவேன்? இன்பம். எங்கே இருக்கிறது?

* * * *

"புலன் வென்றவன் அதன்பின் அச்சத்திற்கு அடிமையாகான். ஆசை அவனைப் பேயாட்டம் ஆட்டி அலைக்காது. அழுக்காற்றால் அவன் துர்ப்பலன் ஆகான். சினத்தீ அவன் இதயத்தில் பற்றாது. நெஞ்சிளைத்து அவன் ஆண்மை குன்றாது. துக்கங் குடிகொண்டு அவன் மனவுறுதி அழியாது. கடும்புயல் அடிக்கிறதென்றாம், காற்றடித்து ஒய்ந்ததென்றாம் காலபேதம் பாராமல் எத்தனை காலமும் ஏககதியாய் ஆகாய மண்டபத்தில் செல்லும் ஆதித்தனைப்போல், அவன் சந்ததியுள்ள ஜனத்திரளிடையில் சஞ்சரிக்கும் பொழுதும், தன்னந் தனியே இருக்கும் பொழுதும் சாந்தசித்தனாய் நடப்பான்" என்று ஒரு பண்டிதர் பிரசங்கஞ் செய்தார். அவ்வித்தகர், காணும் எவரும் பேணிப்பணியத்தகும் பெரியார்; சிறந்த இங்கிதர்; மொழிவதை அற மொழிபவர். அவர் முடிவாக, "கெட்ட எண்ணங்களும் சினமும் எள்ளளவும் உடம்பில் ஏற்படாவண்ணம் பொறையென்னும் வைரமுடியைத் தரித்துக் கொள்ளவேண்டும். இதுவே இன்பம்" என்று சொன்னார். இதைக் கேட்டதும், "ஆ! இவரே நாம் நாடி வந்த பொருளைத் தேடிக் காண்பிக்கவல்ல தீரர்" எனத் தீர்மானித்தேன். அதனால் அவரைக் காண்பதற்கு மறுநாள் சென்றேன். நான் கண்டதென்ன? அப்பண்டிதர் தம் ஓரேமகள் இரவு இறந்துவிட்டாளென்று அழுது கொண்டிருந்தார்! அவர் என்னைக் கண்டதும், "கேளும்; மனிதர் உறவிலிருந்தும் உதவாமற் போகும் சமயம் பார்த்து வந்தீர். என் ஏகபுத்திரி இறந்துபோனாள். அவ்விறக்க, என் ஆசையனைத்தும் அழிந்துபோயின" என்று புலம்பினார். "ஐயா, சாவைக்குறித்து அறிவுடையோர் தட்டுக்கெட்டுத் தடுமாறுவது இயற்கை யல்லவே; ஆறிலுஞ் சாவு; நூறிலுஞ் சாவு. அது எப்பொழுதும் நம்மைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. இன்று நமக்கு இறப்பு வரினும் வருமென்று மனிதர்யாவரும் அன்றன்று நினைத்துக் கொள்வதல்லவா கடன்?" என்று நான் தெரிவித்தேன். அதற்கவர், "அப்பா! உற்றாரைப் பிரிவோர்க்கு உறும்துயரை அறியாதவன் போலப் பேசுகிறாய்" என்றார். நான் விடாமல், "பின்னை நீங்கள் மிக வலியுறுத்தி உணர்த்திய போதனைகளை மறந்து விட்டீர்களா? துன்பமெனும் மாற்றான் பிடித்துக் கொள்ளா வண்ணம் மனக்கோட்டைக்கு அரண் செய்யும் அறிவு மன்னனுக்கு ஆண்மையில்லையா? புறப் பொருளெல்லாம் மாறுவதியற்கை. உண்மையும் அறிவும் எந்த வேளையிலும் அணுவளவேனும் மாறாதிருக்கும். இதை அறியுங்கள்" என்றேன். அவர், "உண்மையாலும் அறிவாலும் எனக்கு என்ன என்ன பயனுண்டாம்? இறந்துபோன என் மகள் இனித் திரும்பிவாராளென்று எனக்கு அவைகள் சொல்லும்.

இதன்றி, இப்பொழுது அவைகளால் எனக்கு என்ன சுகம்?'' என மொழிந்தார். இதன்பின் அவரிடம் எனக்கென்ன வேலை? ஏமாற்றந்தானு நான் கண்டது? இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

இடையர் வாழ்க்கையில் இன்பமிருக்குமென்று எண்ணினேன். இடையர்குலம் கள்ளமற்றது, கலகமற்றது எனப்பாடல்களிற் படித்திருந்ததும் இச்சமயம் என் நினைவில் எழுந்தன. இடையர்க்குரிய எளியவாழ்வே இன்ப வாழ்வென்று கண்டறிந்து நாம் நாடிய பொருள் கைகூடிற்றென்று மகிழ்ந்து மனநிறைவு பெறுவதென்று நிச்சயித்தேன். ஆ! அவன் என்னைக்கண்டதும் எவ்வளவு பரிவுடன் வரவேற்று உபசரித்தான்! நான் செல்வவந்தன் ஒருவன் வீட்டிற்குச் சென்றிருந்தால் இவ்வளவு உபசாரத்தை எதிர்பார்க்க முடியாதென்று எனக்குத் தெரியும். நிற்க, இடையனின் இன்ப துன்பங்களைப் பற்றி அறிய ஆவல் கொண்டேன். "ஐயா, உங்கள் குடி இயற்கையின் சுகதுக்கங்களைக் குறித்துத் தங்கள் கருத்தென்ன?'' என்று வினவினேன். அவனே முருட்டிடையன்; ஒன்றுமறியாதவன். இன்ப துன்பங்களின் தன்மை இதுதானென்று கண்டறியும் வல்லமை அவனிடமில்லை. ஆகவே, கேட்ட கேள்விக்கு அவன் ஏதோ வாயில் வந்ததை உளறினன். ஆயினும் நான் கண்டு கொண்டதென்ன? 'பழத்தினுள் புழுப்போல'ப் பலவிதக் குறையெண்ணங்கள் அவர்கள் இதயத்தை அரித்துப் பழுது படுத்தின; தாங்கள் மெய்வருந்தி உழைக்க, அவ்வுழைப்பால் விளையும் ஊதியத்தை நிறைசெல்வமுள்ள சீமான்கள் அநுபவித்துச் சுகித்திருக்கிறார்களென்று நினைத்து, அவர்களுக்குத் தம்மில் உயர்ந்தோர் மீது காரணமின்றிச் சினம் மிகுந்திருந்தது என்பதைத்தான்! என்ன விந்தை! எங்குச் சென்றாலும் பாழும் துன்பப்பேய் தொடர்ந்து கொண்டிருக்கிறதே! இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

எளிய இடையரிடம் இன்பம் இல்லையெனின், பெரிய செல்வனிடமேனும் இன்பமிராதா? இதோ ஓர் அழகிய பெரிய இல்லம்! இதனுள் வசிப்பவர் இன்பந்துய்க்கும் வள்ளலாகவே இருக்க வேண்டும். உள்ளே நுழைகிறேன். ஆ! அதோ அவ் வள்ளல் எத்துணை இன்பமுகம் காட்டி எதிர்கொண்டு வரவேற்கிறார்! இவரே இன்பக் களஞ்சியம்! என் கவலை ஒழிந்தது! இன்பக் கோட்டையை எட்டிப் பிடித்து விட்டேன்! இப்பொழுதாவது என் முயற்சியில் வெற்றி கண்டேனே! இவ்வெற்றியே எனது பாடுகளுக்குக் கைமேற் கூலியென மகிழ்கிறேன். முயற்சி பயனளிக்காது

போகுமா? 'முயலுமேமென்மேல்' என்ற செம்மைசான்ற மொழியின் சீர்மைதானென்னே! அடடா! இது வென்ன ஏமாற்றம்! நான் உணர்வோடுதான் இருக்கிறேனு? அவ் வின்பவள்ளல் தம் உள்ளத்திலும் உறுத்தும் பல குறைகள் இருக்கின்றனவென்றல்லவா கூறுகிறுர் போலிருக்கிறது! அவர் வாய்மொழியை வகையாய்க் கேட்கிறேன்: "என் நிலைமை இன்பமுடையதென உங்களுக்குத் தோற்றுகிறது போலும். ஆனல் அது உண்மையல்ல; கண்மாயந்தானென உணருங்கள். என் செல்வத்தால் உயிருக்குத் தீங்கேற்படுகிறது. என் பொருட்செல்வத்தைக் குறித்துப் பலர் எனக்குப் பகைவர்களானுர்கள். அவர்கள் பகைமை கொள்ள நான் எதுவும் செய்தவனல்லன். இது வரையில் எனக்கு அவர்களால் தீங்கொன்றும் நேரிடாமல் துணை நின்றவர்கள் என் நண்பர்கள். என்ருலும் நான் அவர்களை முற்றும் நம்பமுடியாது. இன்று எனக்கு உதவி புரியும் அவர்கள் நாளை எதிரியுடன்கூடி என் சொத்தைச் சூரையிடுவித்துத் தாமும் ஒரு பங்கு வாங்கி அநுபவித்தாலும் அநுபவிப்பார்கள். அதனுல் எனது சொத்து முழுவதையும் தூர தேசத்திற்கு அனுப்பிவிட்டேன். பகைவர் பயம் உண்டாகும் அந்த விநாடியே அத்தேசத்துக்கோடித் தப்பிவிடுவேன். அப்புறம் பகைவர்கள் இச் சிங்கார மாளிகையைக் கைக்கொண்டு உண்டாட்டுக் களியாட்டுச் செய்து நான் நாட்டுவித்த உத்தியானங்களின் பயனைத் துய்ப்பார்கள்" என்பதைக் கேட்டு என் காது புளித்துப்போயிற்று. ஒரு விநாடியும் அங்கு நில்லாது ஓடி வந்து விட்டேன். இவ்வளவு பெரிய உலகில் நிலைத்த ஓர் இன்பம் கிடையாதா? அட தொந்ரவே! எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விட்டுத் திரிகிறேனே! எங்ஙனமாயினுஞ்சரி; முயற்சியைத் தளர்த்த நான் விரும்பவில்லை. இதோ என் மனம் முறிந்து விட்டது! இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

"இல்லற வாழ்வில் இன்பம் நிறைந்திருக்கவில்லை. துன்பக் கலப்பற்றது துறவற வாழ்க்கையே." இதே எண்ணத்துடன் நாட்டை விட்டுக் காட்டை யடைந்தேன். துறவியொருவரின் மலைக் குகையுள் துணிகரமாக நுழைந்தேன். ஆழ்ந்த எண்ணத்துடன் அமரிக்கையாய் அமர்ந்திருந்த துறவியைக் கண்டேன். அவர் முகத்தோற்றம் என் மனத்திற்கு மகிழ்ச்சியை ஊட்டியது. இவரிடந்தான் இன்பக் கொள்ளை யெடுத்துக் கொண்டு போகவேண்டுமென்று உறுதிகட்டினேன். மெள்ள என் கருத்தை அவரறிய வெளியிட்டேன். அவர் இன்ப மலையை எடுத்துக் கொடுப்பாரென்று ஆவலாய் எதிர்பார்த்தேன். அந்தோ! அவர் சொன்னதைக் கேளுங்கள்: "நான் துறவி

யாகிப் பதினைந்தாண்டு ஆகிறது. என்னைப்பார்த்து எவரும் துறவறம் பூணுவது எனக்குச் சம்மதமல்ல. இளம்பருவத்தில் நான் இராணுவத்தொழில் செய்து, வரவரத் தரமுயர்ந்து தளபதி யானேன். பரவிய தேசங்கட்குப் படையெடுத்துச் சென்றோம். பல சண்டைகளைக் கண்டேன். பல கோட்டைகளின் முற்றுகையைப் பார்த்தேன். கடைசியில் பருவத்தில் குறைந்த இராணுவத்தொழி லாளர் ஒருவருக்கு மிகுந்த நன்கொடை நடந்ததனாலும், எனது ஆண்மை குன்றியதனாலும் சமாதானமாய் இளைப்பாறியிருந்து நாள் கழித்து இறக்க நிச்சயித்தேன். இல்வாழ்க்கையில் இடையூறு விளைவிக்கும் இன்னலும் பிணக்கும் மிகுதியெனக் கண்டு துறவி யானேன். முன்னொருமுறை மாற்றானொருவன் என்னைத் தொடர, அவன் கண்ணுக்குத் தப்பிப் பிழைக்கும்படி நானடைந்த அடைக்கல ஆலயம் இந்தக் கல்முழை. ஆரம்பத்தில் இவ்விடம் எனக்கு இன்ப மளித்தது. ஆனால் பழகப் பழகப் பாலும் புளிக்கும் என்றபடி யாயிற்று. என் புதிய இன்பம் எங்கேயோ ஓடியொளிந்தது. என்ன என்னவோ எண்ணங்கள் என்மனத்தை அலட்டுகின்றன. நல்வினை விட்டாலன்றித் தீவினைக்கு விலகுவது அசாத்திய மென்று என் நெஞ்சில் சிலவேளை சிந்தனை பிறப்பதை நினைந்து நாணுகிறேன். நான் துறவியானதற்குக் காரணம் பக்தியல்ல; குரோதமே. பைத் தியமான காட்சிகளைக் கண்டு என்மனம் களியாடுகிறது. நான் போக் கடித்தது அதிகம், வரப்பெற்றது கொஞ்சமென்று எண்ணித்துயரப் படுகிறேன். தீயோர் செல்லும் வழியைக்கண்டு அதில் செல்லும் நிமித்தம் ஏகாங்கியாகிய எனக்கில்லை. நல்லோர் சொற்றுணை—பழக்கம் ஏதேனுமுண்டா? அதுவும் இல்லையே! இல்லற வழியில் நிற்பவர்களுக்கு உண்டாகும் இன்பதுன்பங்களை அளந்து பார்த்து, துன்பத்திலும் இன்பமே அதிகமென்று கண்டு, நாளைய தினம் ஊருக்குப் புறப்படவிருக்கிறேன். தனிமையில் நாளைக் கழிப் பவனுக்குத் துன்பம் பெருகுவது நிச்சயம்'' என்றார். நான் இது வரையிலும் அவர் சொன்னவற்றை மூச்சுப் பிடித்துக் கேட்டுக் கொண்டிருந்தேன். இப்பொழுதே எனக்கு உச்சுவாச நிச்சு வாசம் ஒழுங்காய் வரத் தலைப்பட்டது. இன்பந்தேடி இடர்ப்பட்டது போதுமென்று சாமியாரையும் அழைத்துக்கொண்டு நாட்டை நாடி வந்து அவரை விட்டகன்றேன். அத்துடன் என்னாசை அடங்கி விட்டதா? அதுதானே இல்லை! இன்பமாங் காதலியை இறுக அணைத்து முத்தமிடும்வரையிலும் என்னிருகண்களும் உறங்கா. எனது உள்ளமுஞ் சலியாது. இதோ கூவிப் புறப்படுகிறேன். இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

'இயற்கைநெறி விலகாது ஒழுகுவோர்க்கு இன்பமுண்டாம்' என்று எவரோ மொழிந்தது என்காதில் விழுந்தது. திரும்பிப் பார்த்தேன்; இருவர் ஓரிடத்தில் இன்பங்குறித்து வாய்ப்போர் நிகழ்த்துவதைக்கண்டேன். "இன்பம் பெறும் ஆசை, மனிதர் நெஞ்சில் அடியுற அழுந்தியிருப்பதனால், இன்பம் தமக்கு ஏற்படாதென்று நாட்பட அநுபவசித்தமாய் அறிந்திருப்பினும், அவ்வாசைக்கு ஒழிவில்லை. இம்மையில் எவ்வித நிலையிலிருப்பவர்க்கும் துன்பமேயன்றி இன்பமேயில்லை" என்றார் ஒருவர். மற்றொருவர் ஆத்திரத்துடன் எழுந்தார்; "தான்தான் செய்த பிழையாலன்றி மற்றப்படி எவனும் துன்புறுதிருக்குங்காலம் வந்துவிட்டது. கருணைநிதியாகிய கடவுள் நமக்கு எட்டும்படி கிட்டவைத்திருக்கும் இன்பத்தைப் பெறும்வகை யாதென்று கண்கெட்டவர்கள்போல் விசாரிப்பதைவிட மிக்க பைத்தியம் மற்றொன்றில்லை. இயற்கைக்குப் பொருந்த ஒழுகுவதே இன்பம்பெறும் வழி. 'இயற்கை நெறி விலகல் இன்ப நெறி விலகல்' என்னும் இளைஞரும் எளிதிலுணரத்தக்க தெள்ளிய நீதிமொழியை நமக்கு மறைமொழியாய்த் தலைமேற்கொண்டொழுகக் கடவோம்" என அவர் புகன்றார். இம்மொழிகளைச் செவியாரக் கேட்ட நான், இவரே என் மனப்பிணி தீர்க்கும் மருந்தெனத் துணிந்து அவரிடஞ் சென்று, என் ஆவலைத் தெரிவித்துப் பலபல உசாவினேன். அவர் என்மனத்திற்படாத என்ன என்னவோ செய்திகளை விடையாகச் சொன்னார். சொல்லச் சொல்லப் பொருளை விள்ளாமல் மயங்கவைக்கும் ஞாதாக்களில் இவரும் ஒருவரென்று விரைவி லறிந்துகொண்டு விலகினேன். இன்பம் தேடுவதில் இத்துணைப்பாடுகளா? துன்பத்திற்குப் பிறகு இன்பம் உண்டே! நான் இத்துணைத்துன்பம் அநுபவித்த பிறகேனும் இன்பமுண்டா? இன்னும் அலைந்து பார்க்கிறேன். இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

அரச வாழ்விலேயே அதிக இன்பம். இதை முன்னமேயே அறியாமற்போன என் அறிவென்ன? ஆ! எத்தனைபேர் அவனைப் பணிகிறார்கள்! அவன் போல் பாக்கியவான் யாருளர்? என்றும் மகிழ்ந்து இன்பமே துய்க்கும் அரசனே எனக்கு இன்பப் பொருளை எடுத்தளிக்க வல்லவன். கிட்ட நெருங்குகிறேன். ஆ! எவ்வளவு கண்ணியத்தோடு கூடிய மரியாதை! நிறைகுடம் நீர் ததும்புமா? "இன்ப வேந்தரே! இன்ப வேட்கை கொண்டலையும் எனக்கு இன்பம் நல்குவீரா? 'விழைபயன் கருதாது மழைபோலுதவும் மாமலர்க்கையினை' உடைய வள்ளலே! வேண்டிய பொருளை ஈண்டே

தருவீர்'' என்று நான் அவசரமாய்க் கேட்டது ஆச்சரியமாகுமா? இதென்ன! அரசன் மறுமொழி என்னை அப்படியே தூக்கி வாரிப் போட்டு விட்டதே! ஆ! ஆ! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதைபோலல்லவா ஆயிற்று! அரசன் மொழிவதை நீங்களும் கேளுங்கள்: "இன்பந்தேடும் இளங்குமரனே! அறிவுபொருந்த அரசாள்வதில் அநேக கோடி மக்கள் இன்ப நிலையுற்றிருப்பதைக் கருத்துறக் கண்டறியும் இன்பத்திற் கொப்பான இன்பம் வேந்தனுக்கு வேறொன்றில்லை. ஆயினும் இராச்சியத்தில் வாழும் எல்லாமக்களும் அரசன் ஆணைகடவாது நடப்பது பற்றி அவ் வரசன் ஒருவனுக்கு மாத்திரம் உண்டாகும் மேலான இன்பத்திற்கு ஒருகுறையிருக்கிறது. அது நால்வர்க்கும் பொது இன்பமல்ல; ஒருவனுக்கே சிறந்த இன்பம்; பிறருக்குக் கிட்டா இன்பம். இப்படிப் போக்கு நீக்கற்று அரசனொருவன் இதயத்திலடங்கி அவனோடு அழிந்து போகும் இன்பத்தைத் தோற்றுவிக்கும்பொருட்டு அநேகம்பேர் அவன் சித்தத்திற்கடங்கி நடத்தல் சிறப்பல்லவே; அறமுமல்லவே. ஆகவே, இதனினும் மேலான இன்பம் மற்றொன்று இருக்க வேண்டுமென எண்ணுகிறேன். இன்னுங்கேள் இளவரசனே! என் கீழ் வேலை செய்வோரனைவரும் ஒருவருக்கொருவர் அழுக்காறு கொண்டு அலைகிறார்கள். பொய், புனைசுருட்டு, சதிசூழ்வது, கலகம் விளைவித்துக் கட்சி பிரிப்பது முதலிய அருங்குணங்களை அவர்களிடங் காணலாம். அவர்களைக் கட்டிக்கொண்டு அரசாளும் நான் இன்பமடைவது எப்படி? இன்னும் வேற்றரசர்களின் படை யெடுப்புக்கு அச்சங் கொள்ளும் என்னுள்ளத்தில் இன்பவெள்ளம் ஓடாமல் அணைபோட்டுத் தடுக்கப்படுகிறது..." இதற்குமேல் அவர் மொழிகளைக் கேட்டுக் கொண்டிருக்க என்னிடம் பொறுமையில்லை. ஐயகோ! அரசவாழ்விலேயே 'அவதியென்றால் அப்புறம்? இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

எளிய வாழ்க்கையிலுள்ள ஏழைகளிடமே என் இன்பம் குதிகொண்டு விளையாடும். அங்குப் போய்த் தேடுகிறேன். அட பாழும் உலகமே! என்ன நான் இப்படி ஏமாறுகிறேன்? எத்தனை வீடுகளில் நுழைந்து பார்த்தும் இன்பமாம் செல்வியைக் காணவில்லையே! தரித்திரமுள்ள குடும்பங்களிலும் இல்லாத குடும்பங்களிலும் சாதாரணமாய்ப் பிணக்கு இருக்கிறது. ஓர் இராச்சியமாவது பெருங் குடும்பமானால், ஒரு குடும்பம் கலகக் கட்சிகளால் பின்னப்பட்டுக் காலச்சக்கரச் சுழற்சிக்கு இலக்காயுள்ள சிறு இராச்சியமாகும். உலகப் போக்குத் தெரியாதவன் பெற்றார்க்கும் பிறந்தார்க்குமுள்ள

அந்நியோன்னிய அன்பு நிலைபெற்றுச் சமமாக இருக்கு மென்று எண்ணுவான். ஆனால் இவ்வன்பு பிள்ளைப்பருவம் கழிந்தபின் நிலை பெறுவது அரிது. பிறந்து சிறிது காலத்திற்குள் பிள்ளைகள் வளர்ந்து பெற்றோர்க்கு எதிரிகளாகிறார்கள். பெற்றோரும் பிள்ளைகளும் மன மொத்து ஒழுகுவது அரிது. எல்லோரும் நல்லோராயிருக்கும் குடும்பத்தை எங்கும் காணோமே. அடிக்கொரு குணங்கொள்ளும் ஐசுவரியவான்களாகிய உற்றார் உறவினர்களால் என்ன என்ன கெடுதி நேரிடுமோ வென்று சிலர் இடைவிடாது ஏங்கித் திகைக்கிறார்கள். செல்வர்களிடம் இதமாய் நடக்கவும் இயலவில்லை; பிழையாய் நடக்கவும் பயப்படுகிறார்கள். இதனால் வாடுவோர் பலர். கணவர் சிலர் துடுக்கர்; மனைவியரிற் சிலர் வக்கிரகுணமுடையவர். பெரும்பலோர் இவ்விதமே துயரக் கடலில் ஆழ்ந்திருக்கிறார்கள். இளைஞர் பலர் துன்பத்திற்குப் பயந்து, 'அவளைத் தொடுவானேன்; கவலைப்படுவானேன்' என்று மணமின்றித் தனியே வாடுகிறார்கள். போதும்! போதும்! எங்கும் ஏமாற்றமா? இன்பம் தேடி இன்னும் எங்கெங்குத் திரிந்து இளைப்பேன்? கடவுளே! என் முயற்சியில் வெற்றி காண்பது குதிரைக் கொம்புதானா? இன்பந்தேடிய என்னெஞ்சு இளைக்கிறதே! ஊக்கஞ்சலிக்கிறதே! என்ன? என் உறுதி எங்கே சென்றது? இதோ! இதோ! குதித்தெழுகிறேன். இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

புதிதாய் மணஞ் செய்து கொண்ட புருடன் மனைவியரிடம் இன்பம் துள்ளி விளையாடும். அங்குச் சென்று அதை அள்ளிக் கொண்டு வந்துவிடுகிறேன். ஆகா! இந்த என் எண்ணமும் எப்படி வெடித்து வெறுங்காற்றாய் விட்டது! கேட்கிறீர்களா நான் கண்டறிந்த அநுபவத்தை? மனிதருக் குண்டாகும் எண்ணிறந்த துன்பங்களில் மணமும் பலவிதத்துயரங்களுக்கு வழியாயிருக்கிறது. விவாகநிலைக்குரிய வெவ்வேறு துக்கத்தையும், துயரையும், கணவனுக்கும் மனைவிக்கும் சடுதியில் தீராப் பிணக்கு உண்டாகும் ஏதுக்களையும், இருவர் குணபேதங்களையும், கருத்து விரோதத்தையும், ஒருவர் விருப்பத்திற்கு ஒருவர் விருப்பம் மாறுபடும்பொழுது உண்டாகும் கடுமையான உக்கிர விவாதங்களையும், நெஞ்சறிய நன்றென அவரவர் தழுவிய இருவித குணம் ஒன்றுக் கொன்று வேறுபடுங்கால் உண்டாகும் பிடிவாதச் சண்டையையும் மதித்துப் பார்க்குமிடத்தில் மணத்தில் இன்பமில்லை யென்றே தெரிகிறது. இன்னுஞ்சில கேளுங்கள்: தற்செயலாக ஓரிடத்தில் சந்திக்கும் இளைஞராகிய ஆண்பெண்கள் ஒருவருக்கொருவர் கண்ணம்பு எய்து இருவரும் நேரிற் கண்டு

மரியாதை செய்து அவரவர் வீட்டிற்போய்ச் சேர்ந்து தனிமையி லிருக்கும் பொழுது ஒருவரை யொருவர் கனவிற் காண்பார்கள். வேறு பராக்கு நினைவற்று இராப்பகல் இருபோதும் அதே சிந்தை யாய் இருப்பதனால், பிரிந்திருக்கும்பொழுது அவர்கள் மனம் துன் பப்படும். ஆனதால், இருவருங்கூடி வாழ்ந்தால் இன்ப முண் டென்று அறுதியிட்டு மணமுடிப்பார்கள். இம்மங்கள மணத்திற்கு முன்பு அவர்கள் கண்திறந்து பாராது விட்ட குணக்கேடுகளெல் லாம் பின்னிட்டுத் தெளியத் தோன்றும். தோன்றத் தோன்ற நாயும் பூனையும்போல் அவர்களுக்குத் தீரா வாக்குவாதம் உண்டாகி வாழ்நாள் குன்றும். கண்கெட்ட தெய்வம் இப்படித் தம்மைச் சேர்த்துவைத்து வருத்துகிறதே யென்று அவர்கள் கடவுளை நோவார்கள். அன்றியும் பருவத்திற்கு முந்தி மணம் முடிவதனால் பெற்றோர்க்கும் பிள்ளைகளுக்கும் விரோதம் உண்டாகிறது. தந்தை மனங்கசந்து உலகப் பற்றைக் கைவிடுமுன் மைந்தன் அதைக் கைப் பற்றிக்கொள்ளப் பதைப்பான். தாய்க்குப் பருவம் தளருமுன் மகள் பக்குவ மடைவாள். இதனால் பெற்றோரை விட்டுப் பிள்ளைகள் பிரிந்துவிட வேண்டுமெனத் துடிப்பார்கள். பிரிந்த குடும்பத்தில் பிறகு இன்பமேது? இன்னும் பருவம் ஏறிய பின் மண முடித்தவர்களுக்கு மிகுதியான இன்பமில்லையென்பதையும் ஒரு வாறுணர்ந்தேன். பருவத்திற்குப் பின்பு மணஞ்செய்வோர்க்கு மனை யாள் அன்பு தலைப்படுமென்று எண்ணுகிறேன். எல்லாம் சரி. நான் காணப்புறப்பட்ட பொருள் எங்கே? அதைக் காணவில்லை. 'மனித சக்திக்கு அமையாத அளவுக்கு மேல் அதிகம் சாதிக்க எத் தனிப்பவன் ஒன்றையும் சாதிக்கமாட்டான்' என்று சொல்லுவார் களே; அதன்படிதான் என் முயற்சியும் முடியுமோ? சீ! எத்தகைய கோழை எண்ணம்! 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?' மனமே! எழுந்திரு! புதியவிடத்திற்குப் போய்ச் சேருவோம். உல கத்தீரே! இன்பம் எங்கே இருக்கிறது?

* * * *

அதோ ஒரு வயோதிகன் பரபரப்பற்று மெதுவாகச் செல்லு கிறான். அவன் வாழ்க்கை ஆடம்பரமற்றது; இன்பமுற்றது. அவனே நான் செல்ல வேண்டிய இன்பபுரிக்கு வழி சொல்லுவான். அவனைக் கேட்கிறேன்: "ஐயா பெரியவரே! இம் முதிர்வயதில் உம்மைக் குறித்து என்ன நினைக்கிறீர்? உமது இன்பத் துன்பங்கள் எப்படி?" என்ற என் கேள்விக்கு அக்கிழவன் கூறிய மறுமொழி என்ன? இதோ கேளுங்கள்: "உல்லாசமும் திடகாத்திரமும் உள்ள வர்களுக்கு வெளியில் உலாவி வருவது இன்பம். பருவம் முதிர்ந்த

வர்களுக்கு ஆரோக்கியம் அமையுமானல், அதுவே போதும். எனக்கும் இவ்வுலகில் இனிப் புதுமை ஒன்றுமில்லை. எண் திசையும் பார்க்கும்பொழுது நான் உல்லாசமாயிருந்த காலத்தில் கண்டவைகளையே காண்கிறேன். வானத்தை அண்ணாந்து பார்த்து வளர் பிறை தேய் பிறையைக் காணும்பொழுது காலச்சக்கரத்தை நினைந்து துன்புறுகிறேன். பிரபஞ்ச தத்துவ விசாரணையில் எனக்கு இப்பொழுது முன்போல் அதிகப் பிரியமில்லை. விரைவில் இங்கிருந்து செலவுபெற விருக்கும் எனக்கும் உலகத்துக்கும் இனிச் சம்பந்தமென்ன ? இன்னுங்கேள் மைந்தனே ! நான் புகழில் பூரித்திருப்பேனென நினைப்பாய். பிறர் போற்றுவது விருத்தனுக்கு வெற்றுரேலி. மைந்தன் கீர்த்தி கேட்டு மனமகிழ என்னைப் பெற்ற மாதாவுமில்லை; மணமகன் பெற்ற சம்மானமென்று மனம் பூரிக்க மனைவியுமில்லை. என் மித்துருக்கள் சத்துருக்கள் இருதிறத்தாரும் காலங்கடந்து போனார்கள். பிறரால் புகழப்படுவது இளைஞருக்கு விருப்பம். செல்காலத்தில் நான் செய்தது, பட்டதைப் பின்னோக்காய்ப் பார்க்குமிடத்தில், செய்யத் தக்கவைகளைச் செய்யும் பருவத்தில் செய்யாது விட்டதும், வீணான செய்கைகளில் மிகவும் வீண்பொழுது போக்கியதும், பின்னும் அதிக காலம் சோம்புற்றும் செயலொழிந்துமிருந்ததும் என் நினைவில் வருகின்றன. முக்கிய காரியங்கள் பலவற்றை முயலாது விட்டேன். செய்யத் தொடங்கிய பெருமுயற்சிகள் பலவற்றை அரைகுறையாய் நிறுத்தி விட்டேன். ஆசையையும் அலைச்சலையும் என் சிந்தையினின்று அகற்ற எத்தனிக்கிறேன். ஆசையும் அலைச்சலும் வீணென்று விவேகம் அறியும். அறிந்திருந்தும் அவைகள் இந்நாள்வரையும் குடிகொண்ட மனையை விட்டு அகலாதிருக்கப்பார்க்கின்றன. இனி எனக்குச் சாகுங்காலம் வர நாட்படாது. விண்ணுலகடைந்ததும் மண்ணுலகில் தேடிக் காணாத மனோசுகம் எனக்குக் காணியாட்சியாகுமென்றும், இங்கு எனக்குக் கிட்டாத சுத்தகுணம் எளிதில் அமையுமென்றும் மனங்குளிர நம்புகிறேன்'' என்பது. இந்தக் கதையைக் கேட்பதற்குத்தானா கிழவனிடம் ஓடினேன் ? எங்கும் ஒரு குறையா ? எவரிடமும் ஒரு குறையா ? குறையில்லா நிறை வாழ்க்கை குவலயத்தில் உண்டா ? இல்லையா ? அதையேனும் நிச்சயமாய்த் தெரிந்துகொள்ள இதோ நடக்கிறேன். உங்களை வினவுகிறேன் : இன்பம் எங்கே இருக்கிறது ?

* * * *

பிரசித்த பண்டித ரொருவரைக் கண்டு, 'இன்ப நிலை எங்குளது ?' என்று கேட்டேன். அவர் சொன்ன அதிசயத்தைக்

கேளுங்கள்! "உலகப்பரப்பில் உமக்கெதிரே தோன்றும் பேதா பேதமான நிலைகள் பல. அவற்றுள் ஏதாயினுமொன்றைச் சுட்டி, இதுவே மேலானதென்று உமக்கு உணர்த்த நான் வல்லனல்லேன். நான் மேன்மையானதென்று ஒரு நிலையைக் கொண்டு ஏமாந்து போனேன். இதுவே நான் சொல்ல மாட்டுவேன். என் வாழ் நாளெல்லாம் அநுபவமின்றி ஏட்டுக் கல்வி கற்று வந்தேன். பெரும் பாலும் மனிதருக்குக் கைமேல் உதவாத கல்வித் துறைகளைக் கற்றுத் தேர்ந்தேன். உலகத்தில் நால்வர்க்குப் பொதுவான சுகமனைத்தை யும் விலை கட்டிக் கொடுத்து விட்டுக் கல்விப் பொருளை வாங்கி னேன். பெண்பாலார் உறவு என்னும் மனத்திற்கினிய நாகரிகம் அறியேன். நெஞ்சை உருக்கும் குடும்ப ஐக்கிய வியாபாரச் சுக மறியேன். வேறு பண்டிதர்களுக்குக் கிட்டாத விசேஷ அதிகாரம் எதுவும் அடைந்தேனானல், அதனுடன் அச்சமும் அலைச்சலும் ஐயமும் சேர்ந்திருக்கின்றன. நான்கு பேர்களைக் கண்டு கலந்து உறவாடி லௌகிகம் அறிய அறிய, என் நினைவு பல துறைகளில் செல்லுகின்றது. சென்ற பின் அவ்வதிகாரங்கள் எவையானாலுஞ் சரி, உண்மையல்லவென்று என் மனம் ஐயுறுகின்றது. மனத்திற் கினிய வழிகளில் என் சிந்தனை சிலநாள் வரையில் சிதறியிருக்கும் பொழுதெல்லாம், என் விசார ஞானம் தப்பாய் முடிந்ததென்றும், அளவு கடந்து நான் பட்ட பாடுகளனைத்தும் வீண் பாடாய்ப் போயினவென்றும் என் மனம் எண்ணுகிறது" என்றார். கேட்டீர் களா? எல்லோரும் பாடிய பல்லவியைத்தான் இவரும் பாடுகின்றார். ஐயா! நான் இன்பந்தேடித் தேடி இளைத்ததுதானா மிச்சம்? கடைசி யாக நான் தெரிந்து கொண்டதுதான் என்ன? "இவ்வுலகில் இன் பமே அநுபவித்தவர் எவருமில்லை; ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு குறையுண்டு" என்பதைத்தானா? இன்பங்கண்டோன் துன்பங் காண்பதும், துன்பம் அநுபவித்தோன் இன்பம் அநுபவிப்பதும் இவ்வுலகில் இயற்கையே தானே? இதை யறியவா நான் இத்தனை பாடுபட்டேன்? என் நெஞ்சம் அமைதி கொள்ளவில்லையே! இன் னுங் கேட்கிறேன்; இன்பம் எங்கே இருக்கிறது! இன்பம் எங்கே இருக்கிறது!!

# அமுலுக்கு மிஞ்சின ஆக்கினை

சி. வீரபாகு பிள்ளை

தொண்டை நாட்டுக்கும் ஆந்திர தேசத்துக்கும் இடையிலே கீழைக் கடற்கரையில் ஒரு சிறு ராஜ்யம் இருந்தது. அதன் பெயர் நரையம். அதன் மொத்த ஜனத்தொகை ஏழாயிரம்; அதற்கு அதிகமில்லை. ஆகவே ஜன சங்கைக் கணக்கில் ஒரு சிறு நகரம் அதை மிஞ்சிவிடும். இன்னும் அந்த ராஜாங்கத்திலுள்ள நிலம் முழுவதையும் அங்குள்ளவர்களுக்குச் சமமாகப் பங்கிட்டால் ஆளுக்கு ஓர் ஏக்கரா நிலம் கிடைப்பது அருமை. அவ்வளவு சிறிதாயிருந்தாலும் அதற்கு ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு ஓர் அரண்மனை இருந்தது. அரண்மனைக்குப் பல வேலையாட்கள் இருந்தார்கள். அரசனுக்கு மந்திரிகள், புரோகிதர், சேனாபதி, சேனை முதலிய அங்கங்களும் உண்டு; ஒன்றுக்கும் குறைவில்லை.

சேனையில் உள்ளவர்களின் தொகை மொத்தம் அறுபது. ஆனாலும் அதற்குச் சேனை என்றுதான் பெயர். மற்ற ராஜ்யங்களைப் போல அங்கும் புகையிலைவரி, சாராயவரி, ஆள்வரி ஆகிய வரிகள் உண்டு. ஆனால் ஜனத்தொகை கொஞ்சம். அரசன் சிறப்பாக உண்டு உடுத்து வாழவேண்டும். அவன், அதிகாரிகளுக்கும், கைகட்டிச் சேவகஞ் செய்கிறவர்களுக்கும், சேனைக்கும் மாதந்தோறும் சம்பளம் கொடுக்கவேண்டும். போதாக்குறைக்குக் கூத்தர்களும் பாணர்களும் வருவார்கள். அவர்களுக்கும் ஏதாவது தொலைக்க வேண்டும். அவற்றிற்கெல்லாம் இந்தவருமானம் காணுமா? அங்கு ஒரு சூதுக்கடை இருந்தது. அதுதான் இந்தச் செலவில் பாதியைத் தாங்கிக்கொண்டு போயிற்று. சூதாடிகளில் எவர் வெல்லட்டும், எவர் தோற்கட்டும்; கடைக்காரன் தனக்கு வரவேண்டிய தொகையை வாங்கிவருவான். அவ்விதம் அவனுக்குக் கிடைக்கும் வரும்படியிலிருந்து அவன் ராஜாங்கத்துக்கு ஏராளமான பணம் கொடுத்து வந்தான். சூதுக்கடையின் ஏலம் வருஷாவருஷம் விஷம் ஏறுவது போல ஏறிக்கொண்டே வந்தது. இதற்குக்காரணம் என்ன? சூதுக்கடை இந்த இடத்தைத் தவிரத் தமிழகத்தில் வேறு எங்கும் கிடையாது.

---

இது ருஷ்ய ஆசிரியன் தோல்ஸ்தேயி (Tolstoy) எழுதிய 'Too Dear' என்ற கதையைத் தழுவி எழுதியது.

முன்னால் தென்பாண்டி என்கிற நாஞ்சில் நாட்டில் உள்ள சிற்றரசர் இதே மாதிரி சூதுக்கடைகள் வைத்திருந்தார். விளக்கில் விழும் விட்டில்போல இந்தக் கொடிய சூதில் நாசமடைந்தவர்கள் பலர். சூதாடிகள் தங்கள் செல்வத்தையெல்லாம் இழந்தாலும் குற்றமில்லை. இழந்த செல்வத்துக்கு எட்டுமடங்கு கிடைக்குமென்று கடன் வாங்கி ஆடி, அதையும் இழந்து பின் கசமோ, விஷமோ தேடவேண்டியதாகிறது. நாஞ்சில் நாட்டாருக்கு இதைச் சகிக்க முடியவில்லை. அவர்கள், இக்கடைகளை உடனே மூடிவிட வேண்டுமென்று ஏகோபித்துச் சொல்லவே அவ்வரசர் வேறு வழியில்லாமல் அவைகளை மூடிவிட்டார். இப்பொழுது அந்தச் சூதுக்கடைகள் போன மூலை தெரியாது. ஆனால், நரையத்துக் குடிகள் வாயில்லாப் பூச்சிகள்; ஆகையால் சூதுக்கடை சிரஞ்சீவியாக இருந்தது.

யாராவது சூதாடவிரும்பினால் அவர்கள் நரையத்துக்குத்தான் வரவேண்டும். அயலிடத்திலிருந்தும் பலபேர் சூதாடுவதற்கு வருவதால், இந்தச் சூதுக்கடை வருமானம் அரசனுக்குத் தாராளமாக இருந்தது. இந்த ஆதாயம் சிறந்ததல்ல என்பது அரசனுக்குத் தெரியும். ஆனால், அவன் என்ன செய்வான்? சிக்கனத்திட்டம் கொண்டுவந்தால் அதிகாரிகளுக்குக் கோபம் வருகிறது. உருசி கண்ட பூனை பாற்பானையை விடுமா? வரியைக்காட்டினால் குடிகளுக்குக் கோபம் வருகிறது. மேலும், அது குருவிதலையில் பனம்பழம் வைத்த மாதிரியாகும். அவர்களால் தாங்க முடியாது. தன் செலவைக்குறைக்கவும் வழியில்லை. அந்தஸ்து போகிறது. ஆகவே, நாய் விற்ற காசு குலையாதென்று அவன் பேசாமலிருந்து விட்டான்.

அரச ஆடம்பரங்களில் அவன் எவ்விதக்குறைவும் வைக்கவில்லை. வருஷந்தோறும் முடிசூட்டு விழா வரும். அது கண்கொள்ளாத காட்சி. புது வருஷப்பிறப்பில் அவன் தன் ஒலக்க மண்டபத்தில் இருந்து ஏனதி, எட்டி, காவிதி முதலிய பட்டம் அளிப்பதுண்டு. அப்பட்டங்களைப் பெறுவது யார் தெரியுமா! காக்கை பிடிப்பதில் கைதேர்ந்தவர்கள்; மற்றவர் கொட்டாவிவிடவேண்டியதுதான். மற்ற ராஜ்யங்களில் இவ்விதப் பட்டதாரிகளுக்கு வருமானம் உண்டு. இங்கு அது பூச்சியம். ஆனால், பேர், மரியாதை கிடைக்கும். பட்டம் பெற்றவரைக் கண்டதும் குடிகள் தோளில் இட்ட துண்டை அரையில் கட்டிக்கொண்டு கும்பிடவேண்டும். இக்காலத்தில்கூடச் சில கனவான்கள், நாலுபேர் முன்னிலையில் ஒருவர் தமக்கு வேட்டி இறக்குவதையும், கை கூப்புவதையும் காண விரும்புகிறார்களே! அக்காலத்தில் கேட்பானேன்? இதற்காகக்

காக்கை பிடிக்கும் பரீக்ஷையில் 'சென்டம்' (நூறுக்கு நூறு) வாங்க அவர்கள் பட்ட சிரமம் கொஞ்சமல்ல. இந்தப்பட்டமளிப்பு விழாவில் ஒரே ஒரு குறைதானிருந்தது. இன்னர் இன்னபட்டம் பெற்றூர் என்று தடித்த எழுத்தில் பிரசுரம் செய்யப் பத்திரிகைகள் இல்லை. அரசனுக்கு மந்திரிசபை, சட்டசபை, நியாயசபை இருந்தன. ஆனல், அவை மற்ற அரசர்களுக்கு இருப்பது போலப் பெரியவையல்ல.

சில வருஷங்களுக்கு முன், இந்த அரசனது நாட்டில் ஒரு கோரமான கொலை நடந்துவிட்டது. இவ்விதமான கொலை அந்த நாட்டில் இதற்கு முன் நடந்ததே கிடையாது. அந்தக் குடிகள் பரமசாதுக்கள். கொலை என்ற பெயரையே அவர்கள் இப்பொழுது தான் கேட்டார்கள். மின்னுமல் இடி விழுந்ததுபோல இந்தக் கொலை நடந்தது. நாடு முழுதும் நடுங்கிப்போய்விட்டது.

நீதி மன்றத்தின் வாசல்களில் டவாலியிட்ட சேவகர்கள் பலர் நின்றூர்கள். அவர்களுக்குத் தங்கள் டவாலிகளை வலது தோளில் போடுவதா இடது தோளில் போடுவதா என்ற சந்தேகந்தீர நெடு நேரமாயிற்று. வாதிகளும், வக்கீல்களும், ஜூரிகளும் தங்கள் தங்கள் இடங்களில் அமர்ந்தார்கள். பானைக்குள் வைத்திருந்த அவர்கள் சட்டையின் சுருக்கு எவ்வளவு இழுத்தாலும் சரியாகிறதில்லை. நீதிபதிகள், விசேஷ காலங்களில் மட்டும் அணிந்துகொள்ளும் தங்கள் அங்கிகளில் படிந்த தூசி துலாம்படைகளை உதறி அணிந்து கொண்டு மிகுந்த ஆடம்பரத்தோடு வந்து தங்கள் ஆசனங்களில் இருந்தார்கள். விசாரணை நடந்தது. பிரதிவாதி கொலை செய்தது வாஸ்தவமென்று ருஜுவாயிற்று. இனி, நீதிபதிகள் தீர்ப்புத்தான் பாக்கி. அவர்கள் சட்டப்புத்தகங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தார்கள். கொலை செய்தவனுக்கு மரண தண்டனை என்றுதான் சட்டம் கூறுகிறது. அவ்விதமே தீர்ப்புச் செய்துவிட்டார்கள். இந்தத்தீர்ப்பு அரசனுக்கு அனுப்பப்பட்டது. அரசனும் தீர்ப்பைப் படித்துப் பார்த்து உறுதி பண்ணி விட்டான்.

இனித் தீர்ப்பை நிறைவேற்றுவதில் ஒரு தடைதானிருந்தது. அதாவது, மரண தண்டனையை நிறைவேற்றுவதற்கு யந்திரமும் இல்லை; நிறைவேற்றுகிற ஆளும் இல்லை. இவ்விஷயத்தை மந்திரிகள் ஆலோசித்தார்கள். முடிவில் அவர்கள், இந்தக் கொலைபாதகனைக் கொல்லுதற்கு யந்திரமும் அதில் பழக்கமுள்ள ஓர் ஆளும் வேண்டு மென்றும், ஆளையும், யந்திரத்தையும் அனுப்ப என்ன செலவாகு மென்றும் விசயவாடையில் அரசாண்ட தெலுங்கு மன்னனுக்கு ஒரு கடிதம் எழுதிக்கேட்கிறது என்று தீர்மானித்தார்கள்.

அவ்விதமே ஒரு கடிதம் எழுதப்பட்டது. ஒரு வாரத்தில் விசய வாடையிலிருந்து பதிலும் வந்தது. அரசன் அதைப் பார்த்தான். அதில் 16000 பொற்காசு கொடுத்தால் யந்திரமும் ஆளும் அனுப்ப லாம் என்றிருந்தது. "கொலை புரிந்தவனைக் கொல்ல 16000 பொற் காசு செலவழிப்பதா? நன்றாயிருக்கிறது! நம் குடிகளோ ஏழாயிரம். தலைக்கு இரண்டு பொற்காசு விழும். அவர்கள் எப்படி தாங்கப் போகிறார்கள்? கலகம் வரும்! ஆகையால் முடியாது" என்றான்.

திரும்பவும் மந்திரி சபை கூடிற்று. அவர்கள் "விசயவாடை அதிபதி தெலுங்கன். தெலுங்க மன்னனுக்குத் தமிழர் என்றால் பிடிக்குமா? 'வேங்கைவள நாடன்' முதலிய பாட்டுக்களைப் பாடிய நம் தமிழ்ப்புலவர்களுக்கு அவர்கள் வரிசை செய்யவில்லையா என்று நாம் நினைத்தோம். அதற்குக்காரணம் வேறு. புலவர்களைப் பரி சளித்து மரியாதை செய்யாமற்போனால் அவர்கள் அங்கதம் பாடு வார்களே! நமக்கு வாயாலுமாகாது; கையாலுமாகாது. தெலுங்க வேந்தனுக்கு நாம் எழுதினதே பிசகு. தொண்டைமான் தமிழ் வேந்தன்; அவனுக்கு எழுதினால் நம்முடைய காரியம் சுலபமாக முடியும்" என்று கச்சி நகருக்கு ஒரு கடிதம் எழுதினார்கள். உரிய காலத்தில் அங்கிருந்து பதிலும் கிடைத்தது.

தொண்டைவேந்தர், யந்திரம், அதில் பழகிய ஒரு மனிதன், போகவரச்செலவு எல்லாம் 12000 பொற்காசு ஆகுமென்று எழுதி யிருந்தார். அதற்கு இது சகாயம். இருந்தாலும் வழிவேண்டாமா? இப்பெருஞ் செலவை யார் பொறுப்பது? அரசனுக்கு முடியாது. பின், அது குடிகளின் திருத்தலைப் பொறுப்பாகத்தான் முடியும். ஆகவே, திரும்பவும் மந்திரிசபை கூடிற்று. மந்திரிகளும் இந்த இழவைக் குறைந்த செலவில் எப்படி முடிப்பதென்று நெடுநேரம் யோசித்தார்கள். கடைசியில், 'நமது சேனையில்உள்ள ஒருவன் இந் தக்கொலைகாரனது கழுத்தைத்திருகிக் கொல்லட்டும்; இதற்கு யந் திரமும் வேண்டாம், ஆளும் வேண்டாம்' என்ற எண்ணம் அவர்க ளுக்கு உதயமாயிற்று. உடனே அவர்கள் சேனாபதியை அழைத்து, "இந்த மனிதனது தலையைக் கிள்ளியெறிவதற்கு நமது சேனையில் ஒரு வீரனைத் தெரிந்தனுப்புங்கள். போர்க்களத்தில் பகைவரது தலையைக் கொய்வதுதானே அவர்கள் தொழில்?" என்றார்கள். அவ ரும் 'நல்லது' என்று தம் சேனவீரர்களை அழைத்து, "உங்களில் ஒருவன் இந்தக் கொலையாளியின் தலையை வாங்க முடியுமா?" என் றார். அவர்கள், "சாமி! அது எங்களால் ஆகாது. ரத்தத்தைக் கண்டாலே எங்கள்தலை சுற்றிவிடும். அந்தப் பள்ளிக்கூடத்தில் நாங் கள் படிக்கவில்லை" என்று சொல்லி விட்டார்கள்.

இனி என்ன செய்வது? திரும்பவும் மந்திரிகள் கூடி இவ் விஷயத்தை முடிவுசெய்ய ஒரு சபையும், அதற்கு ஓர் உட்சபையும் நியமித்தார்கள். சபையார் ஆலோசனையும் வந்தது. கடைசியில், மந்திரிகள் கொலைத்தீர்ப்பை ஆயுள்வரை சிறைவாசமாக மாற்றிவிட்டால் அரசன் இவனுக்கு இரங்கினதாகவும் முடியும்; செலவும் குறையும்'' என்று முடிவு செய்தார்கள்.

அரசனும் இதற்கிசைந்தான். ஆனால், இதிலும் ஒரு தடை இருந்தது: ஆயுள்வரை சிறைவாசம் பெற்ற ஒரு குற்றவாளியை வைக்கத்தகுந்த சிறைச்சாலை அங்கு இல்லை. ஒரு நாள், இரண்டு நாள் அடைத்துவைக்கும் ஓர் அறைமட்டும் உண்டு. அதுவும் அவ்வளவு உறுதியானதல்ல. குற்றவாளி ஓடநினைத்தால் அதிலிருந்து லகுவாக ஓடிவிடலாம். அந்தப் போலிச்சிறையிலா இவனை அடைத்துவைப்பது? இவன் கிழவனல்ல; இளம்பருவமுடையவன். ஆகவே, அவர்கள் மிகுந்த சிரமப்பட்டு இருப்பதற்குள் ஓர் உறுதியான இடம் பார்த்து அதில் இவனை அடைத்துவைத்து ஒரு காவல் காரனையும நியமித்தார்கள். காவல்காரன், இவன் ஓடிப்போகாமல் பார்த்துக்கொள்வதோடு அரண்மனையில் இருந்து இவனுக்கு வேளைக்கு வேளை உணவும் வாங்கிவந்து கொடுக்கவேண்டும்.

குற்றவாளி அந்தச்சிறையில் சுகமாக வாழ்ந்து வந்தான். ஒரு வருஷமாயிற்று. அரசன் ஒருநாள் தன் வரவு செலவு கணக்கைப் பார்க்கும்போது செலவு கணக்கில் ஒரு புதிய அயிட்டம் காணப்பட்டது. அது இந்தக் குற்றவாளிக்காக ஏற்பட்டது. அந்தச் செலவும் கொஞ்சமல்ல. குற்றவாளி உணவுக்கும், காவல்காரன் சம்பளத்துக்குமாக 6000 பொற்காசுகளாயிருந்தன. என்ன செய்வான் அரசன்! பயலோ பீரங்கிக் குண்டுமாதிரி இருக்கிறான். வயசு இருபது நிறையவில்லை. இன்னம் இவன் ஐம்பது வருஷத்துக்குக் குறையாமல் இருப்பான். செலவு என்னவாகும்? இதையார் பொறுப்பது? அரசனுக்கு மிகுந்த கவலையாகிவிட்டது. உடனே அவன் மந்திரிகளுக்கு ஆள் அனுப்பினான்.

மந்திரிகள் வந்து சேர்ந்தார்கள். அரசன் அவர்களைப்பார்த்து, "இந்தக் கொலைசெய்த நாயைவைத்துச் சம்ரக்ஷிப்பது கஷ்டமாக இருக்கிறது. இவன் விஷயத்தில் நாம் இப்பொழுது கையாளும் முறை பொருத்தமுடையதல்ல. வருஷத்துக்கு 6000 பொற்காசுகள் செலவாகின்றன! இதற்கு வேறு ஒருவழி பாருங்கள்'' என்றான். "உடையவன் இடையூறுற்றால் அடுத்தவர்க்கு வகையுண்டோ?'' (திருவிளை. மதுரைக். 15 : 27.) மந்திரிகளும் மிகுந்த கவலையோடு ஒன்றுகூடி. ஆலோசித்தார்கள். அவர்களுள் ஒருவர்,

"நண்பர்களே! காவல்காரன் எதற்கு? அவனை நீக்கிவிட்டால் பாதிச் செலவு மிஞ்சுமே!" என்றார். மற்றொரு மந்திரி, "சரிதான்! பயல் கம்பி நீட்டிவிடுவான்" என்றார். அதற்கு, முன் சொன்னவர், "ஓடினால் ஓடட்டும், சனி தொலைந்தது" என்றார். இதை எல்லாரும் ஏகமனதாய் ஒப்புக்கொண்டுவிட்டார்கள். இது அரசனுக்கு அறிவிக்கப்பட்டது. அரசனும் ஆக்ஷேபிக்கவில்லை. காவல்காரனுக்குச் சீட்டுக்கிழிந்தது. பிறகு நடந்ததென்ன? சாப்பாட்டு நேரம் வந்தது. சோறு வரவில்லை. குற்றவாளி கதவைத் திறந்துகொண்டு வெளியில் வந்து பார்த்தான். யாரையுங் காணோம். பசி வந்து விட்டது. நேராக அரண்மனை மடைப்பள்ளிக்குப் போய் இலையை எடுத்துப் போட்டுக்கொண்டான். சோறு பரிமாறப்பட்டது. திருப்தியாகச் சாப்பிட்டுவிட்டுத் திரும்பவும் சிறைக்கூடத்துக்கு வந்து கதவைத் தாழிட்டுக் கொண்டு இருந்துவிட்டான். மறுநாளும் இந்தக் கூத்துத்தான். சாப்பாட்டு நேரத்துக்கு அரண்மனைக்குப்போவதும், சட்டமாகச் சாப்பிடுவதும், திரும்பவந்து சிறைச்சாலையில் நீட்டி நிமிர்வதுமன்றி அவன் அதைவிட்டு ஓடுகிறதாகத் தெரியவில்லை. இனி என்ன செய்வது? வால் போச்சு, கத்தி வந்தது டும், டும், டும்! திரும்பவும் மந்திரிகள் ஆலோசிக்கத் தொடங்கினார்கள்.

"இது என்ன மூடமந்திரமா? உன்னை வைத்துக்கொண்டிருக்க எங்களுக்கு இஷ்டமில்லை என்று வெளிப்படையாகவே சொல்லி விடுவோம்" என்று அவர்கள் சொல்லிவிட்டார்கள். கொலைகாரன் நீதி இலாகா மந்திரிமுன் கொண்டுவந்து நிறுத்தப்பட்டான்.

நீதிமந்திரி அவனைப்பார்த்து, "நீயேன் ஓடிவிடக்கூடாது? உன்னைத்தடுப்பதற்குக் காவல்காரன் இல்லையே! இனி, நீ உனக்கு இஷ்டமான இடத்துக்குப் போகலாம். அரசர் அதற்குக் கவலைப் படமாட்டார்" என்றார்.

குற்றவாளி மந்திரியைப் பார்த்து, "துரையவர்களே! நான் ஓடிப்போனால் அரசர் அதற்குக் கவலைப்படமாட்டார் என்பது எனக்கு நன்றாகத்தெரியும். நான் எங்குப்போவது? என்ன வேலை செய்வது? வயிற்றுப்பெருமானுக்கு வழி என்ன? உங்களுடைய தீர்ப்பால் நான் கொலைகாரனாகிவிட்டேன். இனி, நான் யாரிடம் போனாலும் அவர்கள் முகத்தைத் திருப்பிக்கொள்ளுவார்கள். உங்களால் நான் அடைந்த கேவலம் கொஞ்சமல்ல. முதலில் கொலைக்கு உத்தரவு செய்தீர்கள். அதை அமுலுக்குக் கொண்டுவந்தால் அன்றோடு என் கவலை தீர்ந்திருக்கும். அதை நீங்கள் செய்யவில்லை. 'போனால் போகிறது' என்று நானும் இருந்துவிட்டேன். இனி, ஆயுள்வரையும் சிறைவாசம் விதித்து எனக்குச் சோறு கொண்டுவர

ஒரு மனிதனையும் நியமித்தீர்கள். சில நாளாக அவனைக்காணவில்லை. அதற்கு நான் முணங்கினேனா? உங்களைப் பாவி என்றேனா? வாய் பேசாமல் அரண்மனைக்குப்போய்ச் சாப்பிட்டுவருகிறேன். பிச்சைப் பாத்திரத்தில் சனி புகுந்தமாதிரி இப்பொழுது 'வெளியே போ' என்கிறீர்கள். உங்களுக்கு முட்டில் பசி; எனக்கு வயிற்றில் பசி; நான் வெளியில் போய் என்ன செய்ய? நீங்கள் உங்கள் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் செய்யலாம். வெளியில்மட்டும் நான் போக முடியாது'' என்றான்.

இதைக்கேட்ட நீதிமந்திரிக்குப் பெரிய திகைப்பாகி விட்டது. பாவம்! அவர் என்ன செய்வார்! அவன் போகமாட்டேன் என்கிறான். திரும்பவும் மந்திரிசபை கூடியது. ஆலோசனை நடந்தது. முடிவில் அவர்கள் அரசனிடம் சென்று, "வேறு வழியுங் காணவில்லை. சனியனை ஏதாவது கொடுத்துத்தான் தொலைக்கவேண்டும்'' என்றார்கள். அரசனும் அதற்கிசைந்தான். 6000 பொற்காசு கொடுத்து விடுவதென்று தீர்மானமாயிற்று. முதல் மந்திரி குற்றவாளியைக் கூப்பிட்டுச் சில தவணையில் உனக்கு 6000 பொற்காசு கொடுத்துவிடுகிறோம். நீ இந்த நாட்டைவிட்டே ஓடிவிடவேண்டும். சம்மதமா?'' என்றார். அதற்குக் குற்றவாளி, "வாயிதாப்படி 6000 பொற்காசுகளையும் சல்லி குறையாமல் கொடுத்துவிடவேண்டும். அப்படியானால் போகிறேன்'' என்றான்.

இனித் தடை என்ன? குற்றவாளி மூன்றில் ஒரு பகுதியை வாங்கி முடிந்துகொண்டு திரையத்தை விட்டுப் புறப்பட்டான். தன் ஜன்மபூமிக்கு நாலு நாழிகை வழியில் அவன் கிரயத்துக்கு ஒரு நிலம் வாங்கி அதில் காய்கறிகள் பயிரிட்டுக்கொண்டு சுகமாக வாழ்ந்து வருகிறான். அந்த அந்த வாயிதாக்களில் பணம் வாங்க அவன் திரையத்துக்குப் போவதுண்டு. பணத்தை வாங்கினதும் நேரே சூதுக் கடைக்குப்போய் ஒன்றிரண்டு காசுகளை வைத்துச் சூதாடுவான். கிடைத்தாலும் கிடைக்கும்; போனாலும் போகும். வீட்டுக்குத் திரும்பிவிடுவான். சுக்கிரதசை! கவலையற்ற சாப்பாடு. கேட்பானேன்? இப்பொழுது அவன் காலம் சுகமாகக் கழிகிறது.

மரணத்தீர்ப்பை அமுலுக்குக் கொண்டு வருவதில் எனன செலவானாலும் பின்வாங்காத ஒரு ராஜ்யத்தில் அந்தப் பேர்வழி பிறந்திருந்தால் இப்படிச் சுகமாக வாழமுடியுமா? திருவாரூரில் பிறந்தால் முக்தி கிடைக்குமென்று சொல்லுகிறார்கள். திரையத்தில் பிறந்தால் கொலை செய்தாலும் சுகவாழ்வு கிடைக்குமே! இது பிரத்யக்ஷப் பிரமாணம். அது ஆகமப் பிரமாணம். இப்பொழுது திரையம் பெரிதா? திருவாரூர் பெரிதா?

# சிற்றோடை

சூடாமணி



X

இளைஞர் விடுத்த கப்பலுடன்
   இளம்பெண் எறிந்த பழம்பூவும்
முளரிக் குவளை நாண்மலரும்
   முதிர்ந்து விழுந்த காய்கனியும்
கிளையும் கொம்பும் இலையனைத்தும்
   கிட்டிய பொருள்கள் பற்பலவும்
வளைய வாரி வர்த்தகர்போல்
   பண்ட மாற்றி வருவேனே.

XI

காடு கரம்பு கழனிகளில்
   கமழ்பூங் காவிற் கானகத்தில்
ஓடும் பொழுதே உளமகிழ்வேன்
   உண்ண நன்னீர் உவந்தளிப்பேன்
பாடுங் குயில்கள் பண்ணிசைப்பப்
   பச்சைக் கிளிகள் கதைசொல்ல



ஆடும் மயிலின் நாடகங்கள்
அனைத்தும் கண்டு வருவேனே.

## XII



கண்ணார் கந்தன் வாழ்கின்ற கழனி யருகே கரைபுரளும்
தண்ணார் நதியிற் கலந்திடவே தாவி யோடிச் செல்வேனே.
மண்மேல் நிலையா மானிடர்கள் வந்து வந்து போவார்கள் ;
மண்மேல் நானே என்றென்றும் மன்னி யோடிச் செல்வேனே.

# உதயம்

சூடாமணி

குளிரும் தென்றல் அசைந்தசைந்து
குலவி மகிழ்ந்து தவழ்ந்திடவே,
மிளிரும் உதயச் செவ்வண்ணம்
விரைந்து கிழக்கில் பெருகிடவே,
ஒளிரும் சிறைமென் புள்ளினங்கள்
ஒன்றாய் இசைகள் பாடிடவே,
தளிரும் இலையும் வளர்காவில்
தண்ணார் மலர்கள் கண்விழிக்கும்.

கன்னிக் கடலின் முத்தணிந்து
காலைப் பசும்புல் களிப்பெய்தும் ;
மின்னும் மணிகள் பலகோத்து
மென்காற் சிலந்தி வலைபின்னப்
பொன்னின் ஆடை என்றதனைப்
போற்றிச் செடிகள் புனைந்தொளிர,
என்மெய் தீண்டி இளங்கதிரொன்று
'எழுவாய் ! உதயம் !' என்றதுவே.

மூடிவில் கடலின் கரையினிலே
முதிர்ந்த சங்கைக் கண்டெடுத்தேன் ;
நொடியில் அதனைச் செவிச்சேர்த்தேன் ;
நுட்ப ஒலிகள் பலகேட்டேன் ;
இடியின் ஒலியும் மழைஒலியும்
இந்த உலகின் ஒலியாவும்
படியக் கலந்த ஒலியொன்று
பண்ணார் 'ஓம் ! ஓம் !' என்றொலிக்க,

கேட்டேன் அந்தப் பேரொலியை,
கேட்டு லயித்தேன் அவ்வொலியில்;
காட்டின் ஒலியும் கடலொலியும்
கானப் புள்ளின் பண்ணிசையும்
பாட்டின் இசையும் வாத்தியங்கள்
பாடும் இசையும் சங்கினுள்ளே
கூட்டி ஒன்றாய் வைத்தவரார் ?
கூற வல்லோர் கூறுவரே.

# உபாத்தியாயர் பகுதி

## வித்தியாபி விருத்தி முறைகள்

இரா. கு. நல்லகுற்றாலம் பிள்ளை

(290-ம் பக்கத் தொடர்ச்சி)

17. உயர்தரப் படிப்பைச் சர்வகலாசாலைப் படிப்பு என்றும் தொழில் படிப்புகள் (Diploma Schools) என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். அவைகளும் திருத்தியமைக்க வேண்டியனவாக இருக்கின்றன. அவைகளையும் ஆரம்பக் கல்விச்சாலைகளையும் இணைக்கிற மத்யதரப் பாடசாலைகளையும்—அதாவது 4 முதல் 6-வது பாரமுடிய உள்ள படிப்பை மேல் படிப்புகளுக்கும் பின் வாழ்க்கைக்கும் பொருத்தமாய் இருக்கும்படியாக நிரம்பவும் திருத்தவேண்டும். படிப்பவர் எவரும் எந்த நிலைமையில் தம் படிப்பை நிறுத்தினாலும் அம்மட்டில் அதற்குத் தக்கதாக அவரது படிப்பு பிரயோசனப் படக்கூடியதாக இருத்தல் வேண்டும். சொற்பக் கல்விஅறிவாவது எல்லோருக்கும் இருக்கவேண்டியது அவசியமாதலால் ஆரம்பக் கல்விச்சாலைப் படிப்பு எல்லார்க்கும் ஒன்றுபோலிருத்தல் வேண்டும். மேற்படிப்புக்கு ஆங்கிலம் அவசியமாக உள்ளவர்கள் மட்டும் ஆங்கிலம் படிக்கவும் மற்றவர்கள் ஹிந்தி முதலிய சுதேச பாஷை படிக்கவுமாக இருக்கலாம். வேத பாடசாலை, தமிழ்ப் பாடசாலை, ஆகம பாடசாலை, தேவார பாடசாலை, மதராஸா இவைகளில் சேருபவர்களும், எட்டாவது வகுப்பு முடியப் படித்தவர்களாக இருத்தல் வேண்டும். அந்த அந்தப் பாடசாலைகளில் மத்யதரப் பாடசாலைகளின் கட்டாயப் பாடங்களுடன் அதனதன் நோக்கத்திற்குத் தக்க விசேஷ பாடங்களாக அவைகள் நடத்தப் படலாம்.

18. சமயப் பாடசாலைகளில் பயில்பவர்களுக்கும், பின் சங்கீதம் பயிலவிரும்புபவர்களுக்கும், ஆங்கிலம் அவசியமாயிருக்கவேண்டியதில்லை. சர்க்கார் உத்யோகங்களையோ, சர்வகலாசாலைப் படிப்பையோ விரும்புகிறவர்கள் எவரும் ஆரம்பக் கல்விச்சாலையிலிருந்தே மத்யதரச் சாலையிலும் ஆங்கிலம் கற்று வரவேண்டும். ஆரம்பக் கல்விச் சாலையில் கட்டாயப் பாடமாக இருப்பவையெல்லாம் மத்யதரப் பாடசாலைகளிலும் கட்டாயப் பாடமாக இருக்கவேண்டும். மத்யதரப் பெண் பாடசாலைகளில் கிராம ஸ்தாபனங்கள், வியவசாய

தத்துவம், கிராமச் செல்வவிருத்தி என்பவைகளைப் பற்றிய பாடங்களைக் கொஞ்சம் குறைத்துக் கொள்ளலாம். ஆனால் அவர்களுக்கு அவசியமான வீட்டு நிர்வாகம், தையல், பின்னல், பால் கறத்தல், தயிர் கடைதல், சமையல் முதலிய வீட்டுவேலைகளைப் பற்றிய அறிவு திறம்படப் போதிக்கப்பட வேண்டும்.

19. மத்யதரப் பாடசாலைகள் சர்வ கலாசாலைப் பாடசாலைகள் என்றும், விவசாயப் பாடசாலைகள் என்றும், வைத்திய பாடசாலைகள் என்றும், வியாபாரப் பாடசாலைகள் என்றும், உபாத்திமைப் பாடசாலைகள் என்றும், நெசவுப் பாடசாலைகள் என்றும், சிற்பயந்திரப் பாடசாலைகள் என்றும், தொழில் முறைப் பாடசாலைகள் என்றும் பிரிக்கப்படலாம். அந்த அந்தப் பாடசாலைகளில் அதனதன் நோக்கத்திற்குத் தக்க விசேஷ பாடங்களும் சர்வ கலாசாலைப் பாடசாலைகளில் சரித்திரம் சாஸ்திரம் முதலிய பாடங்களும் நடத்தப்படவேண்டும்.

20. நெசவுத் தொழில் அதிகமாக உள்ள இடங்களில் மத்யதர நெசவுப் பாடசாலைகளும், வியாபாரம் மிகுதியாக உள்ள இடங்களில் வியாபார மத்யதரப் பாடசாலைகளும், வியவசாய விருத்தியில் ஈடுபட்டு உழைக்கக் கூடியவர்கள் உள்ள இடத்தில் வியவசாய மத்யதரப் பாடசாலைகளும், மற்றும் அவசியத்திற்கும் நடக்கக் கூடிய சௌகரியத்திற்கும் தக்க மற்ற மத்யதரப் பாடசாலைகளும் அமைக்கப்படலாம். எல்லா மத்யதரப் பாடசாலைகளிலும் கட்டாயப் பாடங்கள் ஒன்றுபோ லிருக்குமாதலால் அவற்றில் ஆங்கிலம் கற்றுள்ள எல்லோருமே சர்க்கார் உத்தியோகங்களுக்கு அருகர்களாயிருப்பார்கள். அது சித்திக்காத போதும் தாம் தாம் படித்துள்ள தொழில் முயற்சிகளில் இறங்கிப் பிழைத்துக் கொள்ளவும் சௌகரியமாயிருக்கும்.

21. தற்காலம் 4-வது பாரம் படித்தவர்களையே ஆஸ்பத்திரியில் மருந்து சேர்க்கும் வேலைப் பயிற்சிக்கு எடுத்துக் கொள்ளுகிறார்கள். 6-வது பாரம் முடிய முடித்துப் பரீக்ஷையில் தேர்ச்சி பெற்றவர்களையே சுகதாரப் பரீக்ஷைக்குப் படிக்க எடுத்துக் கொள்ளுகிறார்கள். அவ்வித மில்லாமல் வைத்திய மத்யதரப் பாடசாலையிலேயே சரீர சாஸ்திரமும், சுகம் பேணும் முறைகளும், நகர கிராம சுத்த நிர்மாணமும், வியாதி வராமல் தடுக்கும் முறைகளும், முதலுதவியும், அம்மைப்பால் குத்தலும், தொத்து நோய் வராது தடுத்தலும், புண்களுக்கு மருந்து கட்டலும், சீமை வைத்திய முறைப்படி மருந்துகள் சேர்க்கவும், ஆயுர் வேத சித்த வைத்திய யூனானி முறைகளின்படி கஷாயம், லேகியம், செந்தூரம் முதலியவைகள் சேர்க்கவும், பத்திய

நியமங்களும் பற்றிப்படித்திருந்தால் அவர்கள் சர்க்கார் ஸ்தலஸ்தாபன ஆஸ்பத்திரி உத்தியோகங்களுக்கும் அவ்வளவிலேயே தகுதியுள்ளவர்களாகவுமிருப்பார்கள். அவ்வித உத்தியோகங்கள் கிடையாதபோது சொந்தமாய் வைத்தியம் செய்தும் பிழைத்துக் கொள்ளுவார்கள். ஜனங்கள் தற்காலம், உடற்கூறு, வியாதிக்கூறு தெரியாதவர்களிடம் மருந்து சாப்பிட்டுக் கஷ்டப்படுவதும் நாளடைவில் குறைந்து போம். இதுபோலவே உபாத்திமைப் படிப்புக்குத் தனியாக இரண்டு வருஷம் படிக்கவேண்டுமென்று இராமல், மற்றப் படிப்புகளோடேயே சேர்ந்து படித்து உபாத்திமைத் தொழிலுக்கு அருகராய் விடலாம். உபாத்திமைத்தொழில் சம்பந்தமான பாடங்களோடு வியவசாய மூலதத்துவங்களும், உடல்நூலும், சுகாதாரமும், வியாதியைத் தடுத்தலும், முதலுதவியும் கற்பிக்கப்படலாம். அவ்வித போதனை அவர்கள் கிராமத் தலைவராக இருந்து வேலை செய்வதற்கு மிகுந்த சௌகரியத்தைத் தரும்.

22. 1. வியவசாயம், 2. வியாபாரம், 3. வைத்தியம், 4. சுகாதாரம், 5. மருத்துவம், 6. சிற்பயந்திரம் இவை சம்பந்தமான (Diploma Schools) உயர்தரப் பாடசாலைகளுக்கு அதனதன் சம்பந்தப்பட்ட மத்யதரப் பாடசாலைகளிலிருந்தே படிக்கப் போகலாம். சங்கீதம் எல்லா ஆரம்பக் கல்விச் சாலைகளிலும், மத்யதரப் பாடசாலைகளிலும் கட்டாயப் பாடமாக இருத்தலினால் எந்த மத்யதரப் பாடசாலையிலிருந்தும் சங்கீத உயர்தரப் பாடசாலைகளுக்குப் படிக்கப் போகலாம்.

23. சர்வ கலாசாலைப் படிப்புகள் எல்லாம், வியவசாயம், வியாபாரம், சிற்ப யந்திரம், தனித் தொழில் படிப்புகளாகவும் மற்றவை சாதாரணப் படிப்போடு கூடிய பிரவர்த்திப் படிப்புகளாகவும் பிரிக்கப்படலாம். அவைகளில் ஏதுமே தற்காலம் இரண்டர்மீடியேட என அழைக்கப்படும் இரண்டு வருஷப் படிப்பிற்கும் அதன் பகிரங்கப் பரீக்ஷைக்கும் பின்னதாகப் படிக்கக்கூடியதாய் இருத்தல் வேண்டும். மேலே சொல்லிய தனித்தொழில் சர்வ கலாசாலைப் படிப்புகளில் ஆங்கிலமும், தாய்ப்பாஷையும் கட்டாயப் பாடங்களாக இருக்க வேண்டியதில்லை. மற்றச் சர்வகலாசாலைப் பரீக்ஷைகளுக்கெல்லாம் குறைந்தது 3 வருஷப் படிப்பாவது இருக்கவேண்டும். ஆங்கிலமும் தாய்ப்பாஷையும் கட்டாயப் பாடமாக இருத்தல் வேண்டும். ஆங்கிலம், நாட்டிலக்கியம் சாதாரண அளவிற்கு அதிகமாயும் மற்றும் பாஷையும், பரீக்ஷைக்கு எடுத்துக் கொள்ளப்படும்போது B. Litt. பட்டத்திற்கும், ஆங்கிலமும் நாட்டிலக்கியமும் சாதாரண அளவோடு சாஸ்திரப் பரீக்ஷையும் ஏற்படும்போது B. Sc. பட்ட

மும், இராஜீய முறை, தேசீய செல்வ விருத்தி, தேச சரித்திரம், சட்டம், இவைகள் அமைகிறபோது B. L. பட்டமும், உபாத்திமைத் தொழிலுக்குரிய பாடங்கள் சேரும்போது B. T. பட்டமும், வியாபார சம்பந்தமான உயர்தரப்பாடங்கள் சேர்ந்து தேறும் பொழுது B. Com. பட்டமும் கொடுக்கப்படலாம். அதே மாதிரி பின் உயர் பரீக்ஷைகளில் தேறும்பொழுது அந்த அந்தப் பாடங்களில் மாஸ்டர் பட்டமும், கொடுக்கப்படலாம். மேலே சொல்லிய பட்டங்களுக்கு எடுத்துக் கொள்ளும் பாடங்களுக்குத் தக்கனவாக அவர்களுடைய இண்டர்மீடியேட் பாடங்களும் மத்யதரப் பாடசாலைப் படிப்புகளும் அமைந்திருக்க வேண்டும்.

24. மத்யதரப் பாடசாலைகளில் 6-வது பாரம் முடிவிலும், தொழிற் பாடசாலைகளிலும், சர்வகலாசாலைக் கல்லூரிகளிலும் குறிப்பிட்ட சில வகுப்புகளிலுமே பகிரங்கப் பரீக்ஷைகளிருத்தல் வேண்டும். அப்பேர்ப்பட்ட பரீக்ஷைகளிலும் வாய்மொழிப் பரீக்ஷைக்கு இடமிருக்குமானால் அவற்றிற்கே அதிக மார்க்குகள் இருத்தல் வேண்டும். எழுத்துப் பரீக்ஷைக் காயிதங்களும், பரீக்ஷை நடக்கும் இடத்திலேயே இருவரால் பார்வையிடப்பட்டு பரீக்ஷை நடந்த 2 வாரத்திற்குள் முடிவு சொல்வதாயிருக்க வேண்டும். பரீக்ஷையில் தவறுபவர்கள் தவறிய பாடங்களில் மட்டும், பள்ளிக் கூடங்கள் திறக்குமுன் அதாவது மூன்று மாதத்திற்குள் பரீக்ஷிக்கப் படவேண்டும். மாணவர்கள் அறிவுக்களஞ்சியமாக விளங்குவதைக் காட்டிலும், நாவை உபயோகப்படுத்தும் திறமையே அவர்களின் பிற்கால வாழ்க்கையில் பெரிதும் பிரயோசனப்படக் கூடுமாதலால் அப்பேர்ப்பட்ட கேள்விகளே பரீக்ஷைகளில் கேட்கப்படவேண்டும். அவைகளை மாணவர்கள் தாராளமாய்ப் புததகங்களை வைத்துப் பதிலெழுத அநுமதிக்கப்படவேண்டும்.

25. பாடசாலை மேற்பார்வை அதிகாரிகள் உபாத்தியாயர்கள் சொல்லிவைக்கும் முறைகளைக் கவனிக்கவும், அவசியமான திருத்தங்களையும், புதிய போதனுமுறை நுட்பங்களையும் அவர்களுக்குப் போதிக்கவும் வேண்டும்.

26. இப்பொழுது படிப்பில்லாதவர்களின் தொகை அதிகமாக இருப்பதாலும், இனிக் கட்டாயக் கல்வி முறை வந்து படிப்பின்மை சாதாரண முறையில் குறைய இன்னும் ஒரு தலைமுறை யாவது செல்லும் ஆதலாலும், வயது வந்தவர்களுக்கும் வாசிக்கவும் எழுதவும் போதிப்பதோடு நாடகம், சினிமா, புகைப்படங்கள், துண்டுப் பிரசுரம், மற்றும் பிரசாரம் மூலமாகவும், அறிவைப்

புகட்டவும், விருத்தி செய்யவும் வேண்டும். அப்போது அதனுல் ஆகும் வியவசாய விருத்தி முதலிய பலன்கள் பலவற்றையும் உடனே அநுபவிக்கவும் சாத்தியமாகும். அவர்கள் மக்களுக்குக் கட்டாயக் கல்வி புகட்டுவதும் எளிதாகும். தற்காலப் போக்கிற்குத் தக்கபடி தாலாட்டுகளும், தில்லாலப் பாட்டுகளும், கும்மிகளும், கர்ண பரம் பரைக் கதைகளும், வியவசாயம் முதலிய கைத்தொழில் விருத்தி, ஒற்றுமை, நாட்டின் நன்மை, மேன்மைக்கான போக்கில் திருப்பப் படவேண்டும்.

27. ஏதேனும் திருத்த முறைத் திட்டம் இல்லாமல் செய்யும் முயற்சியால் நல்ல பலன் உண்டாகாது; எவ்விதத் திட்டம் வேலை செய்வதானுலும், ஏராளமான தொண்டர்களும், பணமும் வேண் டும். அவ்விதம் தொண்டர்களேயும், பண உதவியையும், எதிர் பார்த்தவர்களாய்ச் சும்மா இருந்துவிடாமல், ஒவ்வொருவரும் தங்களா லியன்றஅளவு வயது வந்தவர்களின் அறிவு விளக்கத்திற் கான முயற்சிகளே எடுத்துக் கொள்வதற்கேற்றபடி நம் நாடு இப் போதைய நிலைமையிலும் நல்ல நிலைமையை அடையுமென்பதில் சந்தேகமில்லை.




## சில பானங்கள்

வி. விசாலாக்ஷி அம்மாள்

'பங்குனி வெயிலில் பகல் வழி நடந்தவன் பாவத்தில் செல்லுகிறேன்!' என்று, பங்குனி மாதத்தில் கதிரவன் உக்கிரத்தைக் குறித்து நம்மவருள் ஒரு சொல்லுண்டு. சித்திரை வைகாசி மாதங்களில் வெயிலின் கொடுமையைக் கூறவேண்டியதே இல்லை. உதகமண்டலம், கொடைக்கானல், பங்களூர், நந்தி போன்ற குளிர் ஊர்களுக்குத் திரவியக்கட்டு, ஆள்கட்டுப் போன்ற பல சௌகரியங்கள் உடைய சிலராலேயே செல்ல முடிகிறது. இப்படிச் செல்பவர்களும், பள்ளிகள் விடுமுறை நாட்களுக்காக மூடினபிறகே, தங்கள் குழந்தைகளை அழைத்துச் செல்ல முடியுமானதால், சித்திரை மாதத்தில் ஏறக்குறைய முக்கால் வாசியும் இங்கேயே தங்கும்படியாகிறது. இந்த வெயில் நாட்களில், மத்தியான சாயங்கால நேரங்களில் சூடான டீ, காபி, கோகோ போன்ற பானங்களை விடக் குளிர்ந்த பானங்களே ஆரோக்கியத்தை அளிக்கக் கூடியவைகள். இவ்விதம் தாகசாந்தியையும் ஆரோக்கியத்தையும் கொடுக்கும், வீட்டில் தயாரிக்கக் கூடிய சில பானங்களை எழுதுகிறேன்.

எலுமிச்சம் பழம், நாரத்தம் பழம் இவைகளைப் பிழிந்து நீரும் சர்க்கரையும் கலந்து அவ்வப்போது பானம் தயாரிக்கலாம். எலுமிச்சம் பழம், மாதுளம் பழம், ரோஜாப்பூ இவைகளை ஷர்பத்தாக முன்னதாகவே தயாரித்து வைத்திருந்து வேண்டிய பொழுது தண்ணீருடன் கலந்து சாப்பிடலாம்.

மாதுளம்பழ ஷர்பத் :—மாதுளம் பழ விதைகளை, சொத்தை, அழுகல் இல்லாமல் சுத்தமாக உரித்தெடுத்து ஒரு மத்தால் நன்றாக மசித்து, ஒரு வெள்ளைத் துணியினால் ரஸத்தை வடிகட்டிக் கொள்ள வேண்டியது. பிறகு, ஒரு பங்கு ரஸத்துக்கு இரண்டு பங்கு சர்க்கரை என்ற கணக்கில் சர்க்கரை சேர்த்துக் காய்ச்சி, மது பாகத்தில் இறக்கிச் சற்று ஆறினதும் வாய் குறுகலான புட்டியில் விட்டுக் காற்றுப் போகாமல் மூடி வைத்துக் கொள்ள வேண்டியது. தேவையான பொழுது ஜலத்துடன் கலந்து சாப்பிடலாம். இது தாகத்தைத் தணிக்கும் குணமுடையது. இறக்கும் தருணத்தில் கொஞ்சம் பன்னீரை இதில் கலந்தால் நல்ல வாசனையாக இருக்கும். ஐஸ் கிடைத்தால் போட்டுச் சாப்பிட மிகவும் ஆரோக்கியமாக இருக்கும்.

எலுமிச்சம் பழ ஷர்பத் :—நன்றாகப் பழுத்த பெரிய பழங்களாக இருந்தால் நல்லது. ரஸம் பிழிவதற்கு முன் பழத்தைச் சிறிது நேரம் வெந்நீரில் ஊறவைத்தோ, அல்லது தோலை உரித்து விட்டோ பிழிவதால் தோலில் உள்ள கசப்பு ரஸத்தில் இறங்காமல் இருக்கும். எலுமிச்சம் பழ ரஸம் ஒரு பங்கானால் கற்கண்டு அல்லது சர்க்கரை மூன்று பங்கு சேர்த்துக் கொள்ள வேண்டியது.

புளியம் பழப் பானம் :—புதுப் புளியைப் பானம் செய்வதுண்டு. புளியை இலேசாகக் கரைத்துச் சர்க்கரை சேர்த்துச் சாப்பிடலம். இதை ஷர்பத்தாக செய்தும் விற்கிறார்கள். இந்தப் பானத்தைக் கல்கத்தாவில் பதினெட்டு வருஷம் நியாயாதிபதியாக இருந்த ஸர். வில்லியம் ஜோன்ஸ் என்பவர் வெகுவாகச் சிலாகித்து எழுதி இருக்கிறார். இது உடம்பிற்குக் குளிர்ச்சியை அளிக்கும் குணமுடையதாம்.

நீர் மோரும், வெள்ளரிக்காயும் :—இலேசாகப் புளித்த மோரைக் கொஞ்சம் உப்பும் கறிவேப்பிலை அல்லது நாரத்தை இலை சேர்த்து நன்றாகக் கரைக்க வேண்டியது. எலுமிச்சம் பழ ரஸத்தையும் கலந்து கொள்ளலாம். பிஞ்சு வெள்ளரிக்காயைத் தோலைச் சீவி மெல்லிய வில்லைகளாக நறுக்கிக்கொள்ள வேண்டியது. கரைத்த இலைகள் மிதக்காமல் நீர்மோரிலிருந்து அவைகளைச் சுத்தமாக நீக்கி

விட்டு வெள்ளி அல்லது கண்ணாடி டம்ளர்களில் மோரை விட்டு இரண்டு மூன்று வெள்ளரி வில்லைகளையும், நன்றாகப் பொடி செய்த ஐஸில் கொஞ்சமும் ஒவ்வொரு டம்ளரிலும் போட்டுப் பானம் வழங்க வேண்டியது. இந்தப் பானம் மிகவும் ருசிகரமாவும் ஆரோக்கியமாகவும் இருக்கும்.

காபி, கோகோ முதலிய பானங்களை ஜில் என்று ஆற்றிப் பிறகு ஐஸ் சேர்த்துச் சாப்பிடலாம். காபியை, 'ஐஸ்' பண்ணுவதாக இருந்தால், வழக்கம் போல் கலந்து, நன்றாக ஆற்றி ஐஸின் மேல் வைத்துக் குளிரச் செய்ய வேண்டியது. கோகோவினுள் ஐஸைப் போடலாம். இதற்குக் கோகோ போடும் பொழுது, மிகவும் சிறிய அளவு, பொடியும் சர்க்கரையும் கரைவதற்குப் போதுமான அளவு நீர் விட்டுக் கரைத்துப் பால் சேர்த்துக் கொள்ள வேண்டியது. பிறகு நன்றாகப் பொடிக்கப்பட்ட சிறிய ஐஸ் கட்டிகளை அதில் அள்ளிப் போட்டுச் சாப்பிட்டால் ருசியாக இருக்கும்.

சிலர் வில்வப் பழத்தைப் பானம் செய்து சாப்பிடுகிறார்கள். இது ஒருவித வாசனையாக இருக்கும். மிகவும் சீதளம் செய்யும் குணமுடையது. பழுத்த வில்வப் பழத்தை உடைத்து உள்ளே இருக்கும் சத்தை எடுத்து, நன்றாகப் புளிகரைப்பதுபோல் நீரில் கரைத்து வடிகட்டி, தேவையான அளவு சர்க்கரை சேர்த்துச் சாப்பிடலாம்.

# குழந்தைப் பாட்டுக்கள்

## ரதம்



ரதம் ஓடுதுபார்—தங்க

ரதம் ஓடுது பார் !

ஆலவட்டம் கொடிகள் பறந்திடவே

யானை குதிரை கும்பல் சூழ்ந்திடவே

மேளதாள வாத்தியம் முழங்கிடவே

மாலை மணி தீபம் விளங்கிடவே

ரதம் ஓடுது பார் !—தங்க

ரதம் ஓடுது பார் !

[சூடாமணி.]

## நிலாவை அழைத்தல்

நிலா ! நிலா ! வா வா !
நீ இங்கே ஓடிவா !
குழந்தையோடு கொஞ்ச வா !
கொஞ்சி விளையாட வா !
கிழக்கே முகம் காட்டிவா !
கிண்ணத்தில் பால் கொண்டுவா !
மலைமேலே ஏறிவா !
மலர்போல வா வா!
பால் நிலாவே ஓடி வா !
பாலை எங்கும் சிந்தி வா !

[பி. ஸ்ரீ.]

---

## சாய்ந்தாடல்

சாய்ந்தா டம்மா சாய்ந்தாடு !
தங்கக் கிளியே சாய்ந்தாடு !
பச்சைக் கிளியே சாய்ந்தாடு !
பவளக் கொடியே சாய்ந்தாடு !
சோலைக் கிளியே சாய்ந்தாடு !
சுந்தர மயிலே சாய்ந்தாடு !
மோகனக் கிளியே சாய்ந்தாடு !
முத்து வண்டே சாய்ந்தாடு !
கண்ணே மணியே சாய்ந்தாடு !
கனியே பாலே சாய்ந்தாடு !
ரோஜா மலரே சாய்ந்தாடு !
ராஜா மணியே சாய்ந்தாடு !

[பி. ஸ்ரீ.]



# குழந்தைக் கதை



## பட்டுக் குல்லா

ஒரே ஒரு ஊர். அந்த ஊரின் பெயர் தஞ்சாவூர். அந்த ஊருக்கு ஒரு ராஜா. அந்த ராஜாவின் பெயர் தங்க ராஜா.



அந்தத் தஞ்சாவூரிலே ஒரு பெரிய கோயில் உண்டு. அந்தக் கோயிலுக்கு முன் பக்கத்திலே ஒரு பெரிய கோபுரம் உண்டு. அந்தக் கோபுரத்திலே கிளி குடியிருந்து வந்தது.

ஒரு நாள் தங்க ராஜா ஒரு தங்கப் பல்லக்கில் ஏறிக் கொண்டு அந்தக் கோயிலுக்குப் பக்கமாக உலாவ வந்தார்.



பச்சைக் கிளி (தனக்குள்):—

தரையில் இருந்து எனக்கு ஓர்
தங்கக் காசு கிடைத்ததே!

தரையில் இருந்து எனக்கு ஓர்
தங்கக் காசு கிடைத்ததே!

பச்சைக் கிளி (ராஜா வருவதைப் பார்த்து):—
தஞ்சாவூர் ராஜாவே, என்
தங்கமான ராஜாவே!
தரையிலிருந்து எனக்கு ஓர்
தங்கக் காசு கிடைத்ததே!
தரையிலிருந்து எனக்கு ஓர்
தங்கக் காசு கிடைத்ததே!
தஞ்சாவூர் ராஜாவே, என்
தங்கமான ராஜாவே!

(கூத்தாடுகிறது.)

[கிளி கூத்தாடுகிறதையும் அது தன்னைக் கூப்பிடுகிறதையும், சொல்வதையும் ராஜா கவனிக்கிறார்.]

பச்சைக் கிளி (மறுபடியும்):—
பல்லக்கில் ஏறிவரும் துரையே!
தரையிலிருந்து எனக்கு ஓர்
தங்கக் காசு கிடைத்ததே!

(ஆடுகிறது.)

ராஜா:—பல்லக்கை நிறுத்து.



[ராஜா பல்லக்கிலிருந்து கீழே இறங்குகிறார்]

ராஜா (சேவகனைப் பார்த்து):—சேவகா! அந்தக் கிளியைப் பார்த்தாயா? அதற்கு எவ்வளவு பெருமை! அது தனக்கு ஒரு தங்கக் காசு கிடைத்து



விட்டதென்று எப்படி கூத்தாடுகின்றது? அதற்கு நான் மகாராஜா என்று கொஞ்சங்கூடத் தெரியவில்லையே. அடே சேவகா! நீ போய் அந்தக் கிளியின் காசைப் பிடுங்கிக்கொண்டு வாடா.

சேவகன்:—மகாராஜா ! இதோ கொண்டுவருகிறேன்.

[சேவகன் கோபுரத்திலிருந்த கிளியைப் பிடித்து அதனிடமிருந்த காசைப் பிடுங்கி வந்து அதை ராஜாவிடம் கொடுக்கிறான்.]



பச்சைக் கிளி :—



தஞ்சாவூர் ராஜாவும்—
என் தங்கக் காசை வாங்
கிக் கொண்டாரே.

தங்கமான ராஜாவும்—
என் தங்கக் காசை வாங்
கிக் கொண்டாரே.

(சந்தோஷமாய்க் கூத்தாடுகிறது.)

[ராஜா அதைக் கேட்டதும் கோபமடைகிறார்.]

ராஜா (சேவகனைப் பார்த்து):—அடேசேவகா!



அந்தக் கிளி என்னைக் கூடக் கேலி பண்ணுகிறதே; பார்த்தாயா? நீ போய் அந்தக் கிளியின் தலையிலே ஒரு குட்டு குட்டிவிட்டு வா.



[சேவகன் மண்டபத்திற்குப் போய் அந்தக் கிளியைப் பிடித்து அதன் தலையில் ஒரு குட்டுக் குட்டுகிறான். கிளியின் தலையிலிருந்து ரத்தம் வழிகிறது.]

கிளி (அதைப் பார்த்து):—



எங்கள் ராஜா தங்கராஜா;
என் காசை வாங்கிக்
கொண்ட
எங்கள் துரை மகாராஜா.
என் தனக்குச் சிவப்பான,
பட்டுக் குல்லா தைத்தாரே;
பட்டுக் குல்லா தைத்தாரே.



என் தலைக்குச் சிவப்பான பட்டுக் குல்லா தைத்தாரே ;

பட்டுக் குல்லா தைத்தாரே !

(குதிக்கிறது)

ராஜா:—ஆகா ! அந்தக் கிளி எவ்வளவு நல்ல கிளி! அது தனக்கு ஒரு தங்கக்காசு கிடைத்தபோதும் சந்தோஷமாக விருந்தது. சேவகன் அதன் தலையில் குட்டிரத்தம் வருகிறபோதும் சந்தோஷமாக இருக்கிறதே. சுகம் வந்தாலும் துக்கம் வந்தாலும் அது எப்போதும் சந்தோஷமாயிருக்கிறது. நானும் இனி அந்தக் கிளியைப் போல் இருப்பேன்.

அடே சேவகா ! அந்தக் கிளியைப் பிடித்துக் கொண்டு வா.

[சேவகன் கிளியைப் பிடித்துக்கொண்டுவந்து ராஜாவிடம் கொடுக்கிறான்.]





[ராஜா கிளியை மடிமேல் வைத்துக்கொண்டு அரண்மனைக்குப் போகிறார். வைத்யனைக் கூப்பிட்டுத் தலைக்கு மருந்து போடச் சொல்லுகிறார்.]



[கிளியைக் கூட்டில் அடைத்துப் பாலும் பழமுங்கொடுத்து வளர்க்கிருர்.]



[தலையிலுள்ள புண் ஆறினதும் கிளி அந்தக் கூட்டை விட்டுப் பறந்து திரும்பவும் கோபுரத்திற்குப் பறந்து போய்விடுகிறது.]

கிளி (ராஜா உலாவ வருவதைப் பார்த்து):—

தஞ்சாவூர் ராஜாவே, என்
தங்கமான ராஜாவே!
பழமும் பாலும் தந்த ராஜாவே!
தந்தைபோல வளர்த்த ராஜாவே!
தஞ்சாவூர் ராஜாவே, என்
தங்கமான ராஜாவே!

(கூத்தாடுகிறது.)

[சூடாமணி.]




**தமிழின் பெருமை:** தமிழா தெய்வத்தை நம்பு. பயப்படாதே. உனக்கு நல்ல காலம் வந்துவிட்டது. உனது ஜாதியிலே உயர்ந்த அறிஞர்கள் பிறந்திருக்கிறார்கள். தெய்வங்கண்ட கவிகள், அற்புதமான சங்கீத வித்வான்கள், கைதேர்ந்த சிற்பர், பல நூல் வல்லார், பல தொழில் வல்லார், பல மணிகள் தோன்றி யிருக்கிறார்கள். அச்சமில்லாத தர்மிஷ்டர் பெருகுகின்றனர். உனது ஜாதியிலே தேவர்கள் மனிதராக அவதரித்திருக்கிறார்கள். கண்ணை நன்றாகத் துடைத்துவிட்டு நான்கு பக்கங்களிலும் பார். ஒரு நிலைக்கண்ணாடியிலே போய்ப் பார். உனது நாட்டு ஸ்திரீகளிலே பலர் சக்தி கணங்களின் அவதாரமாக ஜனித்திருக்கிறார்கள். ஒளி, சக்தி, வலிமை, வீர்யம், கவிதை அழகு, மகிழ்ச்சி, நலங்களெல்லாம் உன்னைச் சார்கின்றன. பாரதி.

ஒரு கணக்கு வேடிக்கை; மூன்று ஸ்தானமுள்ள தொகை ஏதாவது ஒன்றை எடுத்துக்கொள்ளுங்கள். ஆனால் அதில் எந்த எண்ணும் ஒரு முறைக்கு மேல் இருக்கக்கூடாது. அந்தத் தொகையிலுள்ள எண்களைத் தலைகீழாக அதாவது முன் பின்னாகத் திருப்பி எழுதுங்கள். இவ்விரண்டு தொகைகளுள் எது பெரிதோ அதிலிருந்து சிறிய தொகையைக் கழியுங்கள். நமக்குக் கிடைக்கும் மீதமும் அநேகமாக மூன்று ஸ்தானத் தொகையாகவே இருக்கும். அதில் நடு ஸ்தானத்திலுள்ள எண்ணானது ஒன்பதாகத்தான் இருக்கும். மேலும் முதல் ஸ்தானத்திலுள்ள எண்ணையும் மூன்றாம் ஸ்தானத்திலுள்ள எண்ணையும் கூட்டினால் அவ்விரண்டு எண்களின் தொகையும் ஒன்பதாக இருக்கும். நமக்குக் கிடைக்கும் மீதமானது மூன்று ஸ்தானத்துத் தொகையாயிராமல் இரண்டு ஸ்தானத்துத் தொகையாயிருக்குமானால் அந்தத் தொகையிலுள்ள இரண்டு எண்களும் ஒன்பதாகவேதான் இருக்கும். ஆதலால் இப்படிக் கிடைக்கும் மீதியில் முதல் ஸ்தானத்துத் தொகையாவது மூன்றாம் ஸ்தானத்துத் தொகையாவது இன்னது என்று தெரிந்தால் மீதித் தொகை இன்னது என்று நாம் எளிதாகச் சொல்லிவிடலாம்.

உதாரணமாக 653 என்னும் தொகையை எடுத்துக்கொள்ளுவோம். இதைத் தலைகீழாக எழுதினால் 356 என்னும் தொகை கிடைக்கிறது. இவ்விரண்டு தொகைகளுள் பெரிய தொகை 653 தான். ஆகையால் 653ல் இருந்து 356ஐக் கழிப்போம். அப்பொழுது நமக்குக் கிடைக்கும் மீதி 297 என்னும் தொகை. நாம் மேலே சொன்னபடி இதன் நடுஸ்தானத்திலுள்ள எண் 9. முதல் ஸ்தானத்திலுள்ள எண்ணையும் மூன்றாம் ஸ்தானத்திலுள்ள எண்ணையும் கூட்டினால், நமக்குக் கிடைக்கும் தொகை 9. ஆகவே இந்த

மீதியில் முதல் ஸ்தானத்திலுள்ள ஏழையாவது மூன்றும் ஸ்தானத்திலுள்ள 2-ஐயாவது நாம் தெரிந்து கொண்டால் 'மீதி' என்கிற தொகை இன்னது என்று சொல்லிவிடலாமல்லவா? நமக்கு 2 தெரியு மென்று வைத்துக் கொள்ளுவோம் நடுஸ்தானத்திலே 9. நமக்குத் தெரிந்த ஸ்தானத்தைத் தவிரத் தெரியாத இன்னொர் ஸ்தானத்திலுள்ள எண் 9-ல் இருந்து 2-ஐக் கழித்த மீதியாகிய 7. ஆகவே 297 என்னும் மீதித் தொகை தெரிந்துவிடும்.

பின்னொரு உதாரணம் எடுத்துக்கொள்வோம். 465 என்னும் தொகையை எடுத்துக் கொள்வோம். இதை மாற்றி எழுதினால் 564 என்னும் தொகை கிடைக்கிறது. இவற்றுள் பெரியது 564. ஆகையால் அதிலிருந்து 465-ஐக் கழித்தால் நமக்குக் கிடைக்கும் மீதி 99. மீதியில் ஒன்றும் ஸ்தானத்தி லுள்ள எண் 9 என்பது நமக்குத் தெரியுமானால், மீதி 99 என்று உடனே நாம் சொல்லிவிடலாம்.

இந்த விஷயத்தை வைத்துக்கொண்டு இதைப்பற்றித் தெரியாதவர்களிடம் சிறிது நேரம் வேடிக்கையாகக் கணக்குப் போட்டு விளையாடலாம்.

அ.




வேதமதி: [ஸ்ரீமான் எஸ். கே. பார்த்தஸாரதி ஐயங்காரவர்கள் B.A., B.L., இயற்றிய பிரஹஸன நான்மணிமாலை. முதற்பதிப்பு 1933, விலை அணா 10; கிடைக்குமிடம்: ஆசிரியர், டிஸ்டிரிக்ட் முன்ஸீப், மன்னார்குடி.]

வெட்டி வெருட்டல், குமான் குளிசம், மறுதலாய மணவாளன், திமிரினி திருந்தல் ஆகிய நான்கு பிரஹஸனங்களாலான வேதமதி என்னும் நான்மணிமாலையை ஆசிரியர் ராவ்பகதூர் பி. ஸம்பந்த முதலியார் அவர்களுக்குச் சூட்டியுள்ளார். ஒவ்வொரு பிரஹஸனமும் மூன்றுகாட்சிகள் கொண்டதுவாய் ஐந்து நடிகர்களைக் கொண்டே ஆடிக் காட்டக் கூடியதாய் அமைந்துள்ளது. நடிப்பதற்கு வேண்டிய சாமான்களை ஆசிரியரே ஜாபிதா செய்துள்ளார்.

நம்முடைய பழைய நாடகங்களின் அமைப்பு வேறு; இப்பொழுது நவீனமாய் எழுதப்பெறும் நாடகங்களின் அமைப்பு வேறு. நமது முன்னோர்கள் நாடகங்களை ரஸப்பிரதான காவியங்களாகக் கருதினார்கள். ரஸம் ததும்புமாறு நூல் அமைப்பதற்கு எடுத்துக்கொண்ட கதை பிரசித்தமானதாக இருக்கவேண்டும். கதையை ரஸத்துக்கு அனுகுணமாக மாற்றி அமைப்பதிலும் நாடகபாத்திரங்களின் குணாதிசயங்களை அவரவர்கள் பேச்சிலும் அபிநயத்திலும் விளக்குவதிலும் நாடகாசிரியனது திறமை புலனாகும்.

இக்காலத்து நாடகங்களில் அத்தகைய திறமையைக் காண்பது அரிது. தற்கால ஆங்கில நாடகங்களில் காணப்படுவதான உண்மையைப் பிரதியெடுத்துக்காட்டும் திறமையும் இவற்றில் இருப்பதில்லை. ஆங்கிலச் சொற்களை இடையிடையிட்டுப் பேசுவதாலும் பல கீழ்த்தரமான பரிகாசங்களாலும் கதையை நிரப்பி, சம்பாஷணையைப் பாத்திரானுகுணமாக அமைக்காமலே ஹாஸ்யங்கள் எழுதிவிடுகிறார்கள். இந்நான்கு பிரஹஸனங்களும் இம்முறையிலேயே அமைந்துள்ளன. ஒன்றிலும் யாதொரு நாடகத்திறமையும் புலப்படவில்லை. நாடகபாத்திரங்கள் பேசும் பேச்சுக்கள் அவர்களுடைய குணாதிசயங்களுக்கு ஏற்ப மாறுபட்டு விளங்கவுமில்லை; இயற்கையாக அப்பாத்திரங்கள் பேசக்கூடிய பேச்சுக்களுக்கு மாறாகவும் பல இடங்கள் அமைந்துள்ளன. ஆதலின், இவை, வேடிக்கையாக வேஷந்தரித்துப் பள்ளிக்கூடப்

பிள்ளைகள் சிறிது நேரம் நடித்துக்காட்டுவதற்குப் பயன் படுவனவே யன்றிக் கற்றோர் படித்தோ நடித்தோ இன்புறத்தக்க முறையில் அமையவில்லை.

ஸ்ரீரமண ஸ்துதி தசகம் : [(தமிழ்) இங்கிலீஷில் ஸ்தோத்ரத்ரயமும் சில அனுபவங்களும் ரமணதாஸ ஸதாநந்தன் இயற்றின. முதற் பதிப்பு 1933, விலை அணா 5. கிடைக்குமிடம்: ரமணதாஸ் கே. எஸ். சேஷகிரி அவர்கள், 138, ப்ராடீஸ் ரோட், மயிலாப்பூர், மதராஸ்.]

திருவண்ணாமலையிலெழுந்தருளியிருக்கும் ஸ்ரீரமண மகர்ஷியின் மீது பாடிய பத்துப் பாட்டுக்கள் இந்நூலில் உள்ளன. சென்னையில் ஜார்ஜ் டவுன் ஸ்ரீ மூக்கர் நல்ல முத்துத் தெருவில் 11-5-32 அன்று ஸ்ரீரமணரின் உருவப் படத்தை எழுந்தருளப் பண்ணி ஒரு பஜனை மண்டபம் ஸ்தாபிக்கப்பட்டது. அங்கு 12-1-33 அன்று ஸ்ரீரமண விழாக்கொண்டாடப்பட்டது. இரண்டு தினங்களிலும் ஆசிரியர் பாடிய ஆங்கிலப்பாடல்கள் மூன்றும் இந்நூலிற் சேர்ந்துள்ளன. மேலும் ஆசிரியர் தம்முடைய அநுபவங்களையும் இதர சிஷ்யர்களின் அநுபவங்களிற் சிலவற்றையும் சேர்த்து ஸ்ரீரமணரின் பெருமையை விளக்கும் குறிப்புகளாக ஆங்கிலத்தில் எழுதி இந் நூலிலே சேர்த்துள்ளார். தசகத்திலுள்ள பாடல்கள் ஆசிரியருக்கு ஸ்ரீரமண மகர்ஷியினிடமுள்ள பக்தியையும் தத்துவ நூல்களில் அவருக்குள்ள பயிற்சியையும் விளக்குகின்றன. ஸ்ரீரமணரைப் பரமாத்ம ஸ்வரூபமாகவும் திரிமூர்த்திகளாகவும் தக்ஷிணாமூர்த்தியாகவும் பாடியுள்ளதும் குறிப்பிடற்குரியது. "கற்றதும் கேட்டதும் உனை அறிதற்கே" என்று அவரைப் புகழ்ந்தும், "தனைத்தானறியத் தருவாய் வரமே" என்று அவரை வேண்டியும்,

"நாமரூ பங்கடந்த நாதன் அருள் அடைந்தும்
நேமங்கள் எதுக்கினி நெஞ்சே, அஞ்சல் ஒழி"

என்றும்,

"ரமணமயம் ஜகமுழுதும் ; ரமணனன்றி யொன்றிலையால் ;
ரமணமயம் பலபொருளும் ; ரமணன் என்போன் சிவமே"

என்றும்,

"எனது யான் எனுமாயை நீங்கி—எங்கள்
யாவர்க்கும் ஞானோபதேசஞ்செய் நாதன்'

என்றும் பாடியுள்ளார்.

எல்லாம் நானே: [ரமணதாஸன் கா. சு. சேஷகிரி எழுதியது. இரண்டாம் பதிப்பு 1933; விலை அணா 2 ; கிடைக்குமிடம்: ஆசிரியர், 138 ப்ராடீஸ் ரோட், மயிலாப்பூர், மதராஸ்.]

16 பக்கங்கள் கொண்ட இச்சிறு நூலில் அத்வைதக் கொள்கைகள் தெளிவாகவும் பல திருஷ்டாந்தங்களுடனும் விளக்கப் பெற்றுள்ளன.

வே. நா.



சீதை கணவனுடன் கான்புகவேண்டுதல்.




# சீதை கணவனுடன் கான்புக வேண்டுதல்

டி. எஸ். இராமச்சந்திர ஐயர்

ஸ்ரீராமர் தந்தை சொற்படி தண்டகவனம் செல்லத்தீர் மானித்துத் தாயினிடம் விடைபெற்றுத் தன் அரண்மனையடைந்து சீதையினிடம் சொன்னவுடன் அவள் தானும் வனம்புக வேண்டுமென யாசித்தலைக் காட்டுகிறது முன்பக்கத்திலுள்ள படம்.

கவுசலையை வணங்கி அவளால் ஆசீர்வதிக்கப்பெற்ற இராமர் வனம் செல்லப்புறப்பட்டுச் சிறிது கவிழ்ந்த முகத்தோடு தமது அரண்மனையை அடைந்தார். அப்பொழுது தேவ கார்யங்களைச் செய்து யௌவ ராஜ்யாபிஷேகத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த சீதையும் எழுந்து சோகத்தால் பீடிக்கப்பட்ட தன் கணவனைப் பார்த்து நடுங்கினள். அவனைக்கண்டு மனத்தில் பெருகும் துயரைத் தாங்காது நின்றவரைப் பார்த்துச் சீதை, "ஏ நாதா! ஏன் இந்த முக வாட்டம்? பட்டாபிஷேகத்திற்கென்றுள்ள இச் சுபதினத்தில் இத் துயரிற்குக் காரணமென்ன? உமது அலர்ந்த செந்தாமரையை யொத்த வதனம் ஏன் கொற்றவெண்குடையால் நிழற்றப்படவில்லை? வீசப்பட்ட வெண்சாமரை யெங்கே? துதிபாடகர்கள் மாகதர்கள் ஏன் தங்களைச் சூழ்ந்து வரவில்லை? இரதம் கஜம் முதலிய ராஜசின்னங்க ளொன்றுமின்றி வருவதென்னே? அபிஷேகத்திற்கென்று குறித்த இச் சுபதினத்தில் சந்தோஷமின்றி இவ்வபூர்வமான முக வாட்டத்திற்குக் காரணமென்ன?" இவ்வாறு பிரலாபித்த சீதையை நோக்கி இராமர் கூறுவார்: "ஏ சீதாய்! தந்தையார் என்னை வனவாசத்திற்கனுப்பிவிட்டார். நற்குலத்துதித்த நன்னெறியறிந்த நங்காய்! அன்னை கைகேயிக்கு அரசன் முன்னாள் அளித்த வரம் இரண்டையும் இவ் வபிஷேக சமயத்தில்

அவள் யாசிக்கச் சத்தியத்தால் கட்டுண்ட அரசனும் என்னைப் பதினான்கு வருஷங்கள் தண்டகத்தில் வசிக்கும்படி கட்டளையிட்டுப் பரதனை யௌவராஜ்யத்தில் அமர்த்தினர். இப்பொழுது வனத்திற்குச் செல்லப் புறப்பட்டு உன்னையடைந்தேன். நான் அகன்றதற்பின் நீ பரதனிடத்தில் எப்பொழுதும் என்னைக் குறித்துப் புகழ்ந்து பேசலாகாது. பெருஞ்செல்வத்திலிருப்பவர்கள் பிறரைப் புகழ்வதைப் பொறார். பரதன் அரசனாணையால் இளவரசனாயினான். ஆதலின் அவனுக்கு விரோதமின்றி அனுகூலமாயிரு. நான் அரசனுடைய சத்தியத்தைக் காப்பாற்ற இப்பொழுதே வனம் செல்கிறேன். நீ திருடமாயிரு. நான் முனிவர்தங்கும் வனமடைந்த பிறகு நீ விருதோபவாசம் செய்து காலாகாலத்திலெழுந்து தேவ பூஜை செய்து தந்தையையும் துயரிலாழ்ந்திருக்கும் தாய் கவுசலையையும் பின்னுமுள்ள தாய்மார்களையும் பணிந்து உபசரிக்கக் கடவாய். என் தம்பிமார்களாகிய பரத சத்துருக்னர்கள் என் புத்திரர்களுக்குச் சமானமாவார். அவர்களுக்கொருபொழுதும் அப்பிரியத்தைச் செய்யாதே. பரதன் நமது குலத்திற்கும் தேசத்திற்கும் அரசனன்றோ? அவனை ஆராதிக்க வேண்டியதவசியம். இராஜாக்கள் அகிதம் செய்பவர்கள் தமது புத்திரர்களாயிருந்தாலும் வெறுப்பார்கள். ஆகையால் அவனை அனுசரித்து இங்கு வாழ்ந்திருப்பாய்.''

இம்மொழிகளைக்கேட்ட சீதை காதலாலெழுந்த கோபத்தோடு கணவனை நோக்கிக் கூறுவாள்: "ஏ இராமா! என்ன இவ்வளவு அல்பமான பரிஹாசத்திற்கிடமான வார்த்தைகளைப் பேசினீர்! மகா வீரர்களான இராஜ புத்திரர்களால் சொல்லத்தகாத இகழ்ச்சிக்கிடமான மொழிகள் உம்மால் சொல்லப்பட்டன. தந்தை தாய் மகன் முதலியோர் அவரவர்கள் புண்ணிய பாக்கியத்தையனுபவிக்கிறார்கள். கணவனது பாக்கியத்திற்குரியவள் மனைவியே யன்றோ. மங்கையருக்குக் கதி கணவனேயன்றோ. நீர் வனம் புகுவதானால் உமக்கு முன் கல்லும் முள்ளும் நிறைந்த கானடையத் தயாராயிருக்கிறேன். என்னிடத்தில் கோபங்கொள்ளாமல் சந்தேகமின்றிச் சுத்தையாகிய என்னையும் அழைத்துச்செல்லும். எல்லாத் தர்மங்களைக் காட்டிலும் கணவன் காலடி நிழலைத் தொடர்வதன்றோ விசேஷமானது? என்பெற்றோர்கள் செய்த உபதேசமும் இதுவே. விலங்குகள் வாழும் கானகத்தில் பாதிவிருத்யத்தைத் தவிர வேறு சிந்தையின்றி என் தந்தை அரண்மனையிலிருப்பது போலச் சுகித்திருப்பேன். நித்தியம் நியமத்தோடு உமக்குப்பரிசரியம் செய்து சுகித்திருப்பேன். உலக முழுதும் காக்கவல்ல உமக்கு என்னைக் காப்பது இயலாததன்று. உம்முடன் கூடவே வருகின்

றேன். கந்த மூலங்களருந்தி உமக்குச் சங்கடமின்றி வாழ்வேன். என்னை விட்டுச் செல்வது தகாது. உம்முடன் மலை வனம் நதிகள் முதலியவற்றின் வளங்களைக் கண்டு ஆனந்தித்துப் பயமின்றி யிருப்பேன். இவ்வாறு நூறு அல்லது ஆயிரம் வருஷங்களானாலும் சந்தோஷித்திருப்பேன். உம்மை விட்டுப்பிரிந்திருத்தலைச் சுவர்க்கத் திலும் வேண்டேன்.''

இராமர் வனத்திலுள்ள கஷ்டங்களை நினைந்து சீதையைத் தம்முடன் அழைத்துச் செல்ல மனந்துணியவில்லை. அவளது புத்தியை வனவாஸத்திலிருந்து திருப்பும் பொருட்டுக் கானக வாழ்க் கையில் உள்ள துயரங்களையும் கஷ்டங்களையும் விரிவாயெடுத்துரைத் துப் பலவிதமாகக் கூறினர். அது கேட்ட சீதை கண்களில் நீர் ததும்பத் துக்கத்தோடு கூறுவாள்: "தாங்கள் எவைகளை வனவாஸத் திலுள்ள தோஷங்களாகச் சொன்னீர்களோ அவைகளெல்லாம் உம்மிடத்திலன்புள்ள எனக்குக் குணங்களாகவே தோன்றுகின்றன. சிங்கம் புலி யானை முதலிய மிருகங்களெல்லாம் உம்முடை அபூர்வ மான அழகைக்கண்டு அகன்றுவிடும். அவைகளால் எனக்குப் பய மேற்படாது. உம்முடனிருக்கும் என்னை வருத்துவதற்கு இந்திரனு லும் முடியாது. நான் என் பிதாவினுடைய அரண்மனையிலிருக் கையில் பிராமணோத்தமர்கள் என்னுடைய லக்ஷணங்களைப் பார்த்து வனவாஸத்தில் உத்ஸாகமுடையவளாயிருப்பேனென்று சொல்லி யிருக்கிறார்கள். அவர்களுடைய வாக்குப் பலிக்கும் காலம் வந்து விட்டது. நான் கன்னிப்பருவத்தில் இருக்கையில் என் தாயாரிடத் தில் நான் வனவாஸம் செய்வேன் என்று ஒரு தவப்பெண் சொல்லி யிருக்கிறாள். ஆகையால் இப்பொழுது உம்முடன் வனத்திற்கேக விரும்புகிறேன். இப்பொழுதே தயாராகிறேன். பதிவிரதையாய் உமக் கிசைந்த மனைவியாகிய என்னை யாது காரணத்தினால் அழைத் துப்போக விரும்பவில்லை? உமது சுக துக்கங்களுக்குரியவளாயும் பக்தையாயுமிருக்கிற என்னை அழைத்துச் செல்வது தகும். அப்படி யில்லாவிடில் விஷமருந்தியோ நெருப்பில் விழுந்தோ நீரில் மூழ்கியோ உயிர் துறப்பேன்.''

இவ்வாறு கண்ணீர் நிலம்புக நின்று கூறும் சீதையைக் காட் டிற்கு வாராமலிருக்கும்வண்ணம் இராமர் ஸமாதானப்படுத்த ஆரம் பித்தார். அப்பொழுது அவரிடத்திலுள்ள அன்பு காரணமாகச் சிறிது கடுமையான வசனங்களைச் சீதை சொல்லத் தொடங்கினாள்: "ஏ இராமா! மிதிலாதிபதியாகிய என் தந்தை ஆடவுருக்கொண்ட அணங்கையோ மருமகனாயடைந்தார்! சூரியனிடத்திலிருப்பதுபோல் தேஜஸ் இராமரைத் தவிர வேறொருவரிடத்துமில்லையென்று உலகம்

கூறுவது பொய்போலும்! சத்தியவந்தனை யடைந்த சாவித்திரியைப் போல் என்னை நினையும். உம்மையன்றி அயலாரை மனத்தினால் கூட நினைப்பவளல்ல. மனத்திற்கிசைந்த மனைவியாகிய என்னை அல்ப மனுஷ்யர்களைப்போல் பரவசமாக்கக் கருதுகிறீர். என்னை விட்டு நீர் வனம் செல்லுதல் கூடாது. உம்மடனிருந்தால் காட்டிலுள்ள கல்லும் முள்ளும் வீட்டிலுள்ள பஞ்சு மெத்தை போலாகும். உம்மை விட்டுப் பிரிந்து ஒரு முகூர்த்தங்கூட ஜீவித்திருக்கமாட்டேன். பின்னர்ப் பத்துடன் மூன்றும் ஒன்றுமான வருஷங்கள் எப்படியிருப்பேன்!'' .

இவ்வாறு பலவிதமாய்ப் பிரலாபித்துக் கதறிக் கண்ணீர் வடித்து இராமரைத்தழுவி வாடிய முகத்தவளாய் நின்றாள். நினைவொழிந்தவள் போலிருந்த அவளை இராமரும் தழுவியுரைப்பார்: "தேவி! நீ துயரொழிவாய். எனக்கொன்றும் பயமில்லை. உன்னைக் காப்பதற்குச் சக்தியுள்ளவனாயினும் உன் மன நிலையை நன்குணராததால் நீ காட்டிற்கு வருவதைத் தடுத்தேன். இனி உன்னைவிட்டுச் செல்வதில்லை. தந்தையின் சொல்லைக் காப்பது எனது கடமையாகும். என்னுடன் நீயும் வனவாஸம் செய்யலாம். அதற்குத் தயார் செய்துகொள். பிராம்மணர்களுக்கும் பிக்ஷுக்களுக்கும் ரத்னங்களையும் போஜனத்தையும், உன் ஆபரணம் முதலியவைகளை உன்னுடைய சேடிமாருக்கும் கொடு'' என்று இவ்வாறு கூறிய கணவர் வார்த்தைகளைக் கேட்டு உடனே சீதை தானஞ்செய்ய ஆரம்பித்தாள்.

வால்மீகி இராமாயணத்தில் கூறியிருப்பதை ஒருவாறு சுருக்கியெழுதினோம். இனி, கம்பர் இவ்விருத்தாந்தத்தை எவ்வாறு கூறியிருக்கிறாரென்பதைப் பார்ப்போம்:

அயோத்தி நகரத்து மாந்தர்களனைவருக்கும் ஓர் உயிர் போன்ற இராமன் தந்தை சொல் தாங்கிக் கான்புகுதற்கிசைந்து மயங்கியேங்கிப்பலரும் பின்தொடரச் சானகியிருந்தவிடத்தைச் சார்ந்தான். அப்பொழுது,

*அழுது தாயரோ டருந்தவ ரந்தண ரரசர்*
*புழுதி யாடிய மெய்யினர் புடைவந்து பொருமப்*
*பழுது சீரையி னுடையினன் வரும்படி பாரா*
*எழுது பாவையன் னாண்மனத் துணுக்கமொ டெழுந்தாள்.*

தாய்மார்கள் முனிவர்கள் அந்தணர் அரசர் முதலியோர் புழுதி படிந்த மெய்யராய் அழுது பின்தொடரச் சீரையுடுத்து வரும் இராமனைக்கண்ட சீதை மன நடுக்கத்துடன் எழுந்தாள். எழுந்த நங்

கையை மாமியர்கள் தழுவிக் கண்ணீரால் நனைத்துப் புலம்பவும், மன மழிந்த சீதை இன்னதென்றறியாதவளாய்க் கண்களில் நீர் பெருக நடுங்கி வள்ளலாகிய இராமனைப் பார்த்து, "பொன்கழலோய்! உமக்கு நேர்ந்திருக்கும் துயரம் அரசனைக் குறித்ததோ? என்ன? அதை இயம்பும்" என்றாள். அதுகேட்ட இராமன், "ஒப்பற்ற என் தம்பி பரதன் அரசாள்வான். நான் தாய் தந்தையரிருவருடைய ஆணையை ஏந்திக் காடடைந்து வருவேன். நீ இங்கு வருந்தாமலிரு" என்றான்.

நாய கன்வன நண்ணலுற் றானென்றும்
மேய மண்ணிழந் தானென்றும் விம்மலள்
நீவ ருந்தலை நீங்குவென் யானென்ற
தீய வெஞ்சொற் செவிசுடத் தேம்புவாள்.

இதைக் கேட்டவுடன் சீதை தன் நாயகன் கானடைவானென் பதற்கும் தனக்குரித்தான அரசிழந்தானென்பதற்கும் துக்கிக்க வில்லை. ஆனால், 'நீ வருந்தாமல் இங்கிரு' என்ற கொடிய வாசகம் சுடத் துயருற்றாள். பாற்கடலில் பள்ளி நீங்கி அயோத்தி வந்து பிறந்த பின்பும் பிரியாதவளாகிய சீதை துறந்து போவேனென்ற சொல்லைப் பொறுப்பது கூடுமோ? அவ்வாறு வருந்தியவள், "அன்னை யும் ஐயரும் சொன்னதைச் செய்யத் துணிந்தது நியாயமே. ஆனா லென்னை இங்கு இருத்திபென்றீரே!" என்று உயிருமிழா நின்றாள். அப்பொழுது இராமன், "ஏ சீதாய்! உன்னுடைய பஞ்சூட்டிய சிவந்த பாதங்கள் காட்டின் அரக்கினுருக்கழல் காட்டும் கல்லில் நடப்பதற்குரியனவல்ல" என்றான்.

பரிவி கந்த மனத்தொடு பற்றிலா
தொருவு கின்றனை யூழி யருக்கனும்
எரியு மென்பதி யாண்டைய தீண்டுநின்
பிரிவி னுஞ்சுடு மோபெருங் காடென்றாள்.

சீதை, "ஏ இராமா! அன்பில்லாத மனத்தொடு என்னைப் பற்றிலாது பிரிக்கின்றீரே! ஊழிக் காலத்துச் சூரியனும் நெருப்பும் உம் பிரிவைக் காட்டிலும் சுடுமோ" என்றாள். அச்சொற்கேட்ட இராமன் அவ ளுடைய உட்கருத்தை உணர்ந்தவனாய்க் கண்ணீர்க்கடல் போன்ற வளைக் கைவிட் நேர்கிலனாய் என் செய்வதென்றெண்ணலாயினான். அச்சமயத்தில் சீதை மனைக்குள் சென்று துணிவுடனே மரவுரி யணிந்து மெய்ம்மறந்து நிற்கும் இராமனது கையைப்பற்றி வந்து அயல் நின்றாள். அச்செயலைக் கண்டவர் யாவரும் மண்ணில் வீழ்ந் தனர்; பின்னும் வாழ்நாளுளவாதலால் உயிர் துறந்திலர். தாய்மார்

களும் சேடியரும் தீயின் மூழ்கினவரையொத்துத் துயருற, சீதை யை நோக்கி இராமன் சொல்லுவான் :

முல்லை யுங்கடன் முத்து மெதிர்ப்பினும்
வெல்லும் வெண்ணகை யாய்விளை வுன்னுவாய்
அல்லை போத வமைந்தனை யாதலின்
எல்லை யற்ற விடர்தரு வாயென்றான்.

" முல்லை மலரையும் முத்தையும் வென்ற வெண்ணகையாய்! நீ என்னுடன் வருவதால் விளையும் துன்பத்தை உணராது போகவமைந்தாய். அதனால் எல்லையற்ற துயருண்டாக்குவாய்.''

சொற்ற வன்னது கூறலும் கோகிலம்
செற்ற தன்ன குதலையள் சீறுவாள்
உற்று நின்ற துயாமி தொன்றுமே
எற்று றந்தபின் னின்பங்கொ லாமென்றாள்.

இராமன் கூறியதைக்கேட்டுக்கோபமடைந்த குயிலைப்பழித்தமொழியாள், ''உமக்கு நேர்ந்த துயரம் இஃது ஒன்றுதானே ! என்னைத் துறந்த பின் இன்பமடைவீர் போலும்'' என்றாள்.

பிறிதொர் மாற்றம் பெருந்தகை பேசலன்
மறுகி வீழ்ந்தழ மைந்தரு மாதரும்
செறுவின் வீழ்ந்த நெடுந்தெருச் சென்றனன்
நெறிபெ றாமை யரிதினி னீங்குவான்.

அப்பொழுது பிறிதொன்றும் பேசாது இராமன் சீதையுடன், மனமறுக்கத்துடன் மைந்தரும் மாதரும் அழுது வீழ்ந்த நெடுந்தெருவில் நெறிபெறாது சங்கடப்பட்டுச் சென்றனன்.




# திருக்குற்றாலக் குறவஞ்சி

ஸ்ரீவை. குஞ்சு

இந் நாட்களில் குறவர்கள் என்றழைக்கப்படும் ஒரு சாதியார்-நந்தமிழ் நாட்டின் ஆதிக் குடிகளின் மரபினர்-உள்ளார். இயற்கையன்னையின் எழில் நிலயமாக விளங்கும் குறிஞ்சி நிலமே இவர்களது உறைவிடமாகும். ஆடவர்கள் மலைப்பிரதேசத்தை யடுத்த காடுகளில் திரிந்துவந்த கொடிய மிருகங்களை மிகவும் அலக்ஷியமாகக் கொன்று தம் உணவிற்கென எடுத்துவருவார்கள். இலக்கியத்தில் சிறிதளவுகூடப் பயிற்சியற்றும், நாகரிகமில்லாமலும் இவர்கள் இருந்தாலுங்கூட, அக்கால மன்னர்களும், அரசிகளும், பிரபுக்களும் இவர்களை ஆதரித்திருக்கிறார்கள். குறப்பெண்கள், தேன் கூடுகளிலுள்ள பலவகைப்பட்ட தேனைச் சேகரிப்பதையும், தினைப் புனம் காவல் செய்வதையுமே தங்கள் தொழிலாகக் கொண்டிருந்தார்கள். ஓழிந்த நேரங்களில், நகர்ப்புறங்களிற் சென்று அரசர்கள் அல்லது பிரபுக்கள் வீடுகளிலுள்ள பெண்டிருக்குக் குறி சொல்லிப் பரிசு பெற்றுத் திரும்புவார்கள்.

இத்தகைய குறச்சாதியார் நந்தமிழ்நாட்டில் பாவலர்களின் மனத்தையும் கொள்ளைகொண்டிருந்தார்கள். இவர்களது மாசற்ற ஒழுக்கத்தையும், நாட்டன்பையும், தெய்வபக்தியையும் கண்ட கவிகள், இக்குறவர்களின் வாழ்க்கைச் சிறப்பினைப் பாடல்களில் சித்திரித்திருக்கிறார்கள். அவற்றில் உயர்ந்த சுவையோடு விளங்கும் நூல்தான் திருக்குற்றாலக் குறவஞ்சியாகும். இதனைப் பாடிய கவியின் பெயர் திரிகூடராசப்ப கவிராயர் என்பது. தமிழன்னையின் எழிலணியென விளங்கும் இந்நூல் உயர்ந்த நாடகத் தமிழின் வகையைச் சேர்ந்தது.

இக்குறவஞ்சிக்கு வஸந்தவல்லி யென்னும் மங்கை கதாநாயகியாவாள். கொந்தளப்பூங் குழல் சரிய, காற்சிலம்புகள் ஒலிப்ப, மகரக்குழைகள் ஊசலாட இவ் வஸந்தவல்லி ஒருநாள் வீதியில்

பந்தடித்துக் கொண்டிருந்தாள். அப்பொழுது சிவபெருமான் இவள் திருஷ்டியில் படுமாறு வீதிவழியே பவனிவரலானான். இறைவனைக் கண்டவுடன் அவனது பொன்மேனியழகிலும் நடையழகிலும் ஈடுபட்டுத் தனது உளத்தைப் பறிகொடுத்து விட்டாள் வஸந்தவல்லி; தான் அன்புவைத்த தலைவன் திங்களை முடித்தவனென்றும், திரிகூட நாதனென்றும் தோழியர் மூலமாக அறிந்து கொள்கின்றாள். இறைவன்பால் ஊறிப் பொங்கித்ததும்பும் காதலைத் தனது இள நெஞ்சிலடைத்துக் கொள்ள ஆற்றாளாகி,

“முனிபரவு மினியானே முழுப்பலவின் கனிதானே
கனியில்வைத்த செந்தேனே கருத்துருக்க வந்தானே
தினகரன்போல் சிவப்பழகுந் திருமிடற்றில் கறுப்பழகும்
பனகவணிக் காதழகுங் கண்டாற் பாவையுந்தான் உருகிடாதோ
வாகனைக் கண்டுருகுதையோ! மயக்கமாய் வருகுதையோ !!
மோகமென்ப திதுதானோ? முன்னமேநா னறிவேனோ?”

என்று மிகவும் அழகாகப் பரமனை உருவகப்படுத்துகின்றாள். இதற்கு முன் இல்லாத ஓர் உணர்ச்சி இப்பொழுது உண்டாயிருப்பதால், அத்தகைய உணர்ச்சியைத்தான் மோகமென்பார்களோ வென்று ஐயுறுகின்றாள். நிறத்தின் செம்மையில் சூரியன் போன்றவனும் கண்டார் கருத்துருக்கும் ஆற்றல் வாய்ந்தவனும், முனிவர்களாலும் புகழ்ந்து போற்றப்படுவனும், அழகில் தன்னிகரற்றவனுமான இறைவன் வஸந்தவல்லியின் மனத்தை ஆகர்ஷித்துவிட்டான்.

அன்றையதினம் பௌர்ணமி. இரவில் சந்திரன் சுகுமாரனாக வானில் மந்தஹாஸம் செய்து கொண்டு செல்கிறான். இதற்கு முன்னை நாட்களில் சந்திரன் பொழிந்துவந்த வெண்ணிலவு இவளுக்கு இன்பம் அளித்தது; இவளைக் குளிர்வித்தது. ஆனால் இன்று விரகவேதனையில் தவிக்கும் வஸந்தவல்லிக்கு வெம்மையையளிக்கின்றது; துன்பஞ் செய்கின்றது. உடனே சந்திரனை நோக்கி,

“தண்ணமு துடன்பிறந்தாய்—வெண்ணிலாவே—அந்தத்
தண்ணளியை யேன்மறந்தாய் வெண்ணிலாவே
பெண்ணுடன் பிறந்ததுண்டோ வெண்ணிலாவே—என்றன்
பெண்மைகண்டுங் காயலாமோ—வெண்ணிலாவே”

என்றுமனம் வருந்திக் கூறினாள். பெண்ணுடன் இம்மதி பிறந்திருப்பானேல் தனக்கு இத்துணைத் துன்பத்தை யளிக்கமாட்டானென்றெண்ணுவது மிகவும் பொருத்தமுடைய கூற்றாகும். வஸந்தவல்லி என்ன கூறினாலும் செவிசாய்க்காது சந்திரன் வானில் ஊர்ந்து கொண்டே செல்கிறான். மீண்டும்,

"மோகம் வரக்காணே னென்றால் வெண்ணிலாவே—அந்த
வேகமுனக் கான தென்ன ?
நாகமென்றே யெண்ணவேண்டாம்—இது
வார்குழல் பின்னல் கண்டாய்"

என்று சந்திரனை ஏளனஞ் செய்கின்றாள். "சந்திரனே நீ ஓடவேண்டாம். இது உன்னை விழுங்கவரும் கரும்பாம்பல்ல. என் தலையின் வார்குழற் பின்னல். உன் வேகத்தையடக்கிக்கொள்" என்று நகைத்தாள். என்னசொல்லியுந்தானென்ன? தனது விரகவேதனை தீர்ந்தபாடில்லை. தனக்கு இத்தகைய துன்பத்தைச் சந்திரனுடன் சேர்ந்தளிப்பவன் மன்மதன்தானென்று அவனை நிந்திக்கின்றாள் :

"கைக்கரும் பென்ன கணையென்ன நீயென்ன—மன்மதா—இந்தச்
செக்கரும் பாவி நிலாவுமே போதாதோ? மன்மதா

*          *          *          *

பேரிகை யேன் ? அன்றிப் பூரிகை யேன்பிள்ளாய் மன்மதா—சிறு
பெண்பிள்ளை மேற்பொரு தாண்பிள்ளை யாவையோ? மன்மதா
வார்சடையீ தல்ல வார்குழற் பின்னல்காண் மன்மதா—நெற்றி
வந்தது கண்ணல்ல சிந்தூர ரேகைபார்! மன்மதா
நாரிபங் காளர்தென் னாரியநாட்டினர் மன்மதா—எங்கள்
நன்னகர்க் குற்றால நாதர் முன்செல்வாய்! மன்மதா!

"துணையறுமகளாகிய என்மீதோ மலர்களாகிய சுடுகணைகளை நீ தொடுக்கவேண்டும்? வெண்ணிலவு என்னை எரிப்பது போதாதென்று என்னைப் போருக்கிழுக்கின்றாய்? பெண்ணாகிய என்னைப் போருக்கிழுக்க இத்துணை கோபங்கொண்ட நீயுமொருவீரனா? தென்னாரிய நாடுடைய சிவனார், எங்கள் குற்றால நாதரிடம் போ மன்மதனே" என்று கூறுகின்றாள். சிவபெருமானிடம் மன்மதன் செல்லத்துணிய மாட்டானென்பது வஸந்தவல்லிக்குத் தெரியும்.

ஊரும், பேரும், உற்றாரும், பெற்றாருமில்லாத ஆண்டவன் மீது காதலுற்று வாடும் வஸந்தவல்லி தன் தோழியை அவன்பால் தூதாகச்சென்று தன்னிடம் அழைத்து வரவேண்டுமென்றும், வர மறுத்தால் மாலையையாவது நெஞ்சையாவது தரச்சொல்லிப் பெற்று வர வேண்டுமென்றும் வேண்டுகின்றாள். தன் தோழி எவ்வாறு இறைவனைச் சந்திப்பாள்? என்ற எண்ணம் கொஞ்சமாவது இவளுக்கில்லை. இவள் பக்திப்பெருங் காதலில் ஆழ்ந்து தன்னையே மறந்து தான் தன்தோழிக்குச் செய்ய முடியாததோர் கட்டளையை யிடுகின்றாள்.

இந்த நேரத்திற்குள்ளாகக் குறி சொல்லுதலில் திறமை வாய்ந்த மலைக்குறமக ளொருத்தி வஸந்தவல்லியின்முன் தோன்றுகின்றாள். தனது விரகநோய்க்குச் சஞ்சீவி மருந்துபோல வந்த குறமகளைப் பார்த்து அவளிருக்கும் மலைவளத்தைக் கூறுமாறு முதலில் சொல்கின்றாள். உடனே அக்குறமாது தொடங்குகின்றாள் :

"வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்
கானவர்கள் விழியெறிந்து வானவரை யழைப்பார்
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலும் தேர்க்காலும் வழுகும்
கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே.

"முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண் டாடும்
கிழங்குகல்லித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை யிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகம் வெடிக்கும்
வழங்குகொடை மகாராசர் குறும்பலவி னீசர்
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே."

ஆசிரியர் குறத்தியின் மனத்தோடு தமது மனத்தையும் ஒன்றவிட்டு அவளது எண்ணங்களையும், கூற்றையும் நெஞ்சைக் கவரும்படி மிகவும் இனிமையான கவிகளில் வெளியிடுகின்றார். நாட்டுவளத்தைப்பற்றி இக்குறமகள் மேல்வருமாறு பேசும் பகுதியினால் கல்வியறிவற்ற குறவர்களுக்கும் தேசாபிமானமும், தெய்வபக்தியும் இருந்திருக்கின்றன வென்பதை அறியலாம்.

"தக்க பூமிக்கும் முன்புள்ள நாடு சகல தேவர்க்கு மன்புள்ள நாடு
முக்கண்ணன்விளை யாடிய நாடு மூவர்பாடிப் புகழ்ந்திட்ட நாடு
திக்கெல்லாம் வளர்ந்தோங்கிய நாடு சிவத்ரோகமும் நீங்கிய நாடு
மைக்கண்ணாள்குழல் வாய்மொழி பாகர் வசந்தவாரிய
நாடெங்கள் நாடே!"

என்று கூறும்பொழுது சிவபக்தியில் பழுத்தவர்களாகவே இக்குறவர்கள் இருந்திருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

நாட்டுவளப்பம் கூறிமுடிந்தவுடன் வஸந்தவல்லி குறத்தியிடம் தன் கைகளை நீட்டித் தான் எண்ணியவற்றையும் அவை

நிறைவேறுமா என்பதையும் பார்த்துக் கூறுமாறு கேட்டாள். அதற்கு அக் குறமகள் சிவபெருமானைத் துதித்துக் கொண்டே கூறலானாள் :

"வாகனத்தி லேறிவரும் யோகபுருஷன்—அவன்
வங்காரப் பவனியாசைப் பெண்களுக்குள்ளே
தோகை நீயவனைக்கண்டு மோகித்தாயம்மே—அது
சொல்லப் பயந்திருந்தேன் சொல்வேன் முன்னே"

என்றதும், அவன் அணியும் மாலை, இருக்கும் ஊர், அவன் பெயர் முதலியவற்றைத் தெரிவிக்குமாறு கேட்டாள். அதற்கு,

"உன்னைப்போ லவனெனக் கறிமுகமோ
ஊரும் பேருஞ் சொல்வது குறிமுகமோ
பின்னையுந் தானுனக்குச் சொல்வேனம்மே
பெண்சேர வல்லவன்காண் பெண்கட்கரசே"

என்று விடையிறுத்தாள். இந்த விடை வஸந்தவல்லியின் ஆவலை அதிகப்படுத்துகிறது. அவள் மீண்டுங் கேட்கின்றாள் :

"வண்மையோ வாய்மதமோ வித்தைமதமோ—என்முன்
மதியாமல் பெண்சேர வல்லவனென்றாய்
கண்மயக்காதே யுண்மை சொல்லடி
காலக் குறவஞ்சிக் கன்னிமயிலே !"

என்று சினந்தும், நயந்தும் வினவினாள். குறிசொல்வதில் திறமை வாய்ந்த இக் குறமகட்கு இக் கேள்விக்குப் பதில் சொல்லவா தெரியாது? உடனே கூறுவாள் :

"பெண்ணரசே ! பெண்ணென்றால் திரியுமொக்கும்—ஒரு
பெண்ணுடனே சேரவென்றால் கூடவுமொக்கும்
திண்ணமாக வல்லவனும் நாதனுமொக்கும்—பேரைத்
திரிகூட நாதரென்று செப்பலாமம்மே !"

திரிகூட நாதரென்ற பேரைக் கேட்டவுடனேயே வஸந்தவல்லியின் தலை நாணத்தினால் கவிழ்ந்தது. இறைவனுக்கு எப்பொழுது தன் நெஞ்சை அளித்துவிட்டாளோ அப்பொழுதே அவன் உடைமைப் பொருளாகிவிடுகின்றாள். இத்துணை அழகாகத் தான் எண்ணியவற்றைக் கூறியதற்காகக் குறத்தியை அநேக ஆபரணங்களால் அலங்கரித்து அனுப்பலானாள்.

இதற்குள் தன் மனைவியாகிய குறச்சிங்கியைக் காணவில்லையென்று நாடுகளையும், காடுகளையும், மலைகளையும் தாண்டி வழியெல்லாம் விசாரித்துக் கடைசியாக இங்கு இக்குறமகளைச் சிங்கன்

சந்திக்கின்றான். சிங்கி தனது திறமையால் பெற்று அணிந்திருக்கும் நகைகள் அவன் கண்ணைப் பறிக்கின்றன. அந்த நகைகளைப் பெற்ற இடத்தைக் கூறுமாறு கேட்டான். அவளும் தான் அரசிகளிடம் குறிசொல்லிப்பெற்றதாக மொழிந்தனள். சிங்கன் அவளைப் பார்த்து, "தென்னாடெலா முன்னைத் தேடித்திரிந்தேன்—நன்னகர் குற்றால நாதரை வேண்டினேன், கண்டேன்" என்றதும் அக்குற மகளும் சிங்கனும் இறைவனைப் புகழ்ந்து ஆடிப்பாடிக் களித்தனர். இவ்வாறு கவி இக்குறவஞ்சியை முடித்திருக்கிறார்.

பாமரர்களும் அறிந்து கொள்வதற்கேற்ற எளிய நடை, எளிய சந்தம், விழுமிய கருத்து இவைகளால் இக் குறவஞ்சியின் பாடல்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதனை எழுதிய ஆசிரியர் திரிகூடப்பெருமான்மீது எவ்வளவுதூரம் ஆழ்ந்த பக்திகொண்டுள்ளாரென்பதை இதிலுள்ள கவிதைகள் நமக்கு எடுத்துச் சொல்கின்றன.

# கன்னித் தமிழ்

ச. முனிஸ்வாமி பிள்ளை

மக்கள் அனைவரும் ஒரு குலத்தினர்; ஆதலின் சகோதரர். இதுவே உயர்ந்த குறிக்கோள். இவ்வுணர்ச்சி உலகமெங்கணும் சிறிது சிறிதாகப் பரவி வருகின்றது. எனினும் சகோதரர்களுள் ளும் வேற்றுமைகளில்லையா? அத்தகைய வேற்றுமைகள் மனித குலத்திலுமுண்டு. 'வேற்றுமையில் ஒற்றுமை' காண்பதே வேதாந்த ஞானம். இதுவே இயற்கை கற்பிக்கும் உலக ஞானமுமாகும். இயற்கைப் பொருள்களெல்லாம் ஒன்றையொன்று ஒவ்வா நிலையில் அமைந்துள்ளன. இயற்கையின் ஒரு காட்சியைப்போல் பிறிதொரு காட்சி காண்கின்றதில்லை. ஓர் இலையைப்போல் மற்றோர் இலை யிருப்பதில்லை. ஒரு முகத்தைப்போல் ஒரு முகமிருக்கிறதா? இரண்டு கட்டை விரல்களேனும் தம்முள் முற்றிலும் ஒத்து விளங்கு கின்றனவா? இத்தகைய வேற்றுமைகளின்றி உலகமில்லை. எனி னும் வேற்றுமைகளினூடே ஒரு பொற்சரடுபோல் ஒற்றுமை மறைந்து ஒளிர்கின்றது. மக்கட் சமுகத்தை ஒருடம்பாகவும், அச் சமுகத்தின் பல வேறு பகுதிகளையும் உடம்பின் பலவேறு அங்கங் களாகவும் கருதுதல் வேண்டும். அங்கங்கள் உடன் பிறந்தாராக ஒத்துழைத்தாலன்றி, உடம்பு வளம் பெறுதலில்லை.

மக்கட் பகுதியினர் ஒவ்வொருவரும் தாம் உயர்வுற முயல்வது போலவே, மக்கட் சமுதாய முன்னேற்றம் கருதியும் உழைக்க முற் படல் வேண்டும். ஒவ்வொரு பகுதியார் வசிக்கும் நிலப்பகுதியும் பழக்க ஒழுக்கங்களும் பிறவும் சேர்ந்தே 'நாடு' என்ற நற்பெயரால் அழைக்கப் பெறுகின்றன. ஒவ்வொரு நாடும் தத்தமக்குரிய வழி களில் தற்சுதந்திரத்தோடு வளர்ச்சி பெறுதல் வேண்டும். அப்போது தான் உலக முன்னேற்றம் பலபல வண்ணங்களோடும் அழகுக ளோடும் திகழ்ந்தொளிர்வதாகும். ஒரு நாட்டாரின் வளர்ச்சியை உள்ளவாறு அளவிடும் உயரிய கருவி அந்நாட்டின் தாய்மொழியே யாகும். ஒரு காலத்தில் ஔவைப் பிராட்டியார், தமிழ்வள நாட்டு முடியுடை மன்னருள் ஒருவனை வாழ்த்தும்போது 'வரப்புயர' என்று வாழ்த்தியருளினாராம்; 'வரப்புயர நீருயரும், நீருயர நெல் லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயர முடியுயரு' மாதலின்.

அவ்வண்ணமே நாட்டு மக்கள் நலமுற்று உயர்தர வாழ்வு எய்த வேண்டுமென விரும்புவோர் 'தாய்மொழி உயர!' என்றே வாழ்த்தல் வேண்டும். தாய் மொழி உயர, இலக்கியம் உயரும்; இலக்கியம் உயரவே நாட்டுமக்கள் உயரிய வாழ்வு பெறுகின்றனர் ; மக்கள் உயர நாடும், நாடு உயர உலகமும் நலமுற்று வளர்ந்தோங்குகின்றன.

ஆடை, தன்னை அணிவோர் சிறப்பையும், பாஷை, தன்னைப் பயில்வோர் சிறப்பையும் வெளியிடுகின்றன. மக்கள் சீரும் சிறப்பும் பேரும் புகழும் பெற்றுப் பெருவாழ்வு வாழவேண்டுமெனின், அன்னார் தம் தாய்மொழியைப் பொன்னினும் மேலாகப் போற்றல் அவசியமாகும். ஒரு மொழியின் பெருமை அம்மொழியாளரான மக்களின் பெருமையெனின், அம்மொழியின் செம்மை அம்மொழிக்குரிய இலக்கியச் செம்மையே யாகும். அம்மொழியின் சிறுமையும் இலக்கியச் சிறுமையே. தமிழ் மக்கள் பண்டை நாளில் பெருவாழ்வு வாழ்ந்தாரென்பது அவர் தம் முன்னைப் பெருமையில் முளைத்தெழுந்த இலக்கியத்தில் எதிரொலி செய்கின்றது. நாம் இந்நாளில் வாழும் வாழ்வும், நமது தற்கால இலக்கியச் சிறுமையிலே பிரதிபலிக்கின்றது.

தமிழிலக்கிய உயர்வு தமிழ் மக்கள் உயர்வே. தமிழ் மக்கள் உயர்வு தமிழிலக்கிய உயர்வே. இவை ஒன்றினொன்று பிரிவுறாது இணைந்து பின்னிக் கிடக்கின்றன. தமிழ் மக்களே ஆதி மக்கள் என்றும், தமிழர் தாய்மொழியே மனித குலத்தின் ஆதித் தாய்மொழி யென்றும் பலரும் இந்நாள் நம் நாட்டில் கூறி மகிழ்வெய்துகின்றனர். இது நம் பழம்பெருமையே ; புதுப்பெருமையன்று. மூதாதையர் பெருமையே; நம் பெருமையுமன்று. முன்னோர் குலதனத்தோடு, பின்னோனும் வேண்டும் பொருள் தேடி வைத்தலே முறை; முதற்கண் நம் பழந்தனத்தை நவீன ஆராய்ச்சி யென்னும் அரிப்பிலிட்டு அரித்தெடுத்தல் வேண்டும். பழந்தனமெல்லாம் பெருந்தனமுமன்று. 'தொன்று தோன்றிய யாவையும் தூயன ; இன்று தோன்றிய யாவையும் தீயன' என்பார் கூற்று அறியாமையே. "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்பது தமிழ் மறையன்றோ?

தமிழ்மொழி உயர் தனிச் செம்மொழி யென்பதில் ஐயமின்று. தமிழ் உயர்மொழி; தமிழ் மக்கள் உயரிய நாகரிகமக்களாதலின், தமிழ் தனிமொழி; பிறமொழிக் கலப்பின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் வாய்ந்ததாதலின், செம்மொழி; இலக்கியச் செம்மை

பெற்றதாதலின், வடமொழி, லத்தின், கிரீக்கு, முதலான பண்டைப் பெருமொழிகளைப்போலவே தமிழ்மொழியும் உயர்தனிச் செம் மொழியே. எனினும் அம்மொழிகளைப்போல, நம்மொழி வழக் கிழந்த மொழியன்று. தமிழ் வாழும் மொழி - என்றும் கன்னிகை.

பண்டைத் தமிழர் மொழிப்பற்று வாய்ந்தவர். அவர்கள் தாய் மொழியையும் தாய் நாட்டையும் 'தமிழ்' என்ற ஒரே பெயரால் குறித்து வந்தார்கள். 'தமிழ்' என்னும் சொல் 'இனிமை' என்ற பொருள் தருவதிலிருந்தே தமிழ் மக்கள் தம் நாட்டையும் மொழி யையும் எவ்வாறு நேசித்தார்கள் என்பது புலனாகின்றது.

"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக்கிழிதருமிக்கு அருளினோன் காண்!" என்று தமிழ்ச் சைவர் இறைவனைப் பரவு கின்றார். "பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே" என்று பரம சைவ சித்தாந்திகளும், "தண் தமிழ்ச் சங்கத் தனி யிறையவனே" என்று தமிழ்நாட்டு வைணவரும் மனம் ஒருமித்துத் திருமாலை வழிபடுவதையும் தமிழர் ஆராய்வாராக. இவையெல்லாம் முன்னோர் மொழிப்பற்றைக் காட்டாவிடின் வேறெதைத்தான் காட்டுகின்றன? பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, சிந்தாமணி, சூளாமணி, சிலம்பு, மேகலை, தேவாரம், திருவாசகம், திருவாய் மொழி—இவைகளெல்லாம் தமிழ்த்தெய்வம் அழகு ஒழுகும் தன் திருமேனியில் விரும்பியணியும் நல்லணிகள். தமிழ் மாதின் அறிவுக் கண்ணே குறள்; கவிக்கிரீடமே கம்பன். இத்தகைய தமிழ்த் தெய் வத்திற்குக் காலத்துக் கேற்ற வேறு நல்லணிகள் சில அணிந்தாரு முண்டு. நாமும் இந்நாளில் நமது கடமையை மறவாது பணி செய்தலே நமக்கும் நம் சந்ததியாருக்கும் நாட்டிற்கும் அழியாத நலம் விளைப்பதாகும்.

# சரித்திரம்

## பூர்விக இந்தியாவும் ஜாவா சுமாத்ராத் தீவுகளும்

ஓ. பி. தேசிகன்

(முன் தொடர்ச்சி)

ராஜேந்திர சோழனின் புறநாட்டுப் படையெழுச்சியைக் குறித்து டாக்டர் கிருஷ்ணஸ்வாமி ஐயங்காரவர்கள் பின் வருமாறு கூறுகிறார்கள் :—

"இப்படை யெழுச்சியைப் பற்றியும், எந்த உத்தேசத்துடன் இது மேற்கொள்ளப்பட்டதென்பதையும் குறித்து நாம் ஐயமின்றி அறியுமுன், கடாரமென்பது யாதென்றும், அதைச் சுற்றி ராஜேந்திரன் வெற்றி கொண்டதாகக் கூறப்படும் பிரதேசங்களின் பெயர்கள் எவற்றைக் குறிக்கின்றன என்றும் ஆராய்வது அவசிய மானதாகும். இதுகாறும் கடாரம் என்னும் பிரதேசம் பர்மா வையே குறிப்பதாகக் கருதப்பட்டு வந்துள்ளது. அதன் தலைநகரான ஸ்ரீவிசயமென்பது பர்மாவிலுள்ள ப்ரோம் (Old Prome) என் னும் ஸ்ரீ க்ஷேத்ரமென்று தவறுதலாகக் கொண்டிருப்பதே அதற்குக் காரணமாகும். ஸ்ரீவிசயமென்பது கடலரண் அமையப் பெற்ற கடற்கரைப் பட்டினமாக வருணிக்கப் பட்டுள்ளதாதலின், ஸ்ரீவிசயத்தைப் பர்மாவுடன் சம்பந்தப்படுத்துவது சற்றேனும் பொருந்தாது. நமது கூற்றை வலியுறுத்துவதற்குப் பல சாக்ஷி யங்களும் ஆதாரங்களும் உள்ளன.

"தமிழ் நூல்களும் சோழ வமிசத்து மன்னர்களின் சாஸனங் களும் ஸ்ரீவிசயத்திற்கும் பர்மாவிற்குமிடையே யாதொரு ஸம் பந்தமு மில்லையென்பதைத் தெளிவு படுத்துகின்றன. தமிழ் நூல் களில் 'காழக'மென்றும், வடமொழியில் 'கடாஹ'மென்றும் காணப்படும் சொற்கள் கடாரத்தையே குறிக்கின்றன. பிரசித்தி பெற்ற 'லேடன்' பட்டயங்களும், ராஜேந்திரனது கல்வெட்டு களும்கூடக் கடாரமும் காழகமும் ஒன்றேயென்பதை வலியுறுத்து கின்றன. கலிங்கத்துப் பரணியில் கடாரம் கடலைபடுத்திருப்பதாகக்

கூறப்பட்டுள்ளது. ஆதலின் ஐராவதி நதியின் தீரத்திலெங்கேயோ உள்ள ப்ரோம் என்னும் ஸ்தலம் இதுவென்பது சற்றேனும் பொருந்துவதாகாது.

"சுமாத்ராவின் வடகிழக்குக் கடற்கரை யோரத்தில் 'கொர்த்தி' (Kerti) எனப் பெயர் வழங்கும் ஓர் ஜில்லாவே முற்காலத்தில் கடாரமென வழங்கியிருத்தல் வேண்டும். சுமாத்ராவில் அதற்குப் பின்னும் தெற்காகவுள்ளதோர் பகுதிக்கு ஸ்ரீவிசயமெனப் பெயர் வழங்கியிருக்கவேண்டுமெனக் கருதவேண்டியிருக்கிறது. அது வரையில் அப்பகுதி ஸ்ரீபோஜமென்ற பெயராலேயே அழைக்கப்பட்டு வந்தது. கி. பி. 10-ஆம் நூற்றாண்டு வரையில் இந்த ஸ்தலத்தை சீனதேசத்தினர் சி-லி-போஷி (Chi-le-foshi) அதாவது ஸ்ரீபோஜம் என்றே அழைத்து வந்திருக்கிறார்கள். 10-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு இவ்விடம் ஸன்-போ-ஷி யென்றும் (San-fo-shi) ஸன்-பத்-ஸாய் (San-fut-sai) என்றும் சீன மொழியில் வழங்கியது. இச் சீனப்பெயர் ஸ்ரீவிசயத்தின் மருவேயாகும். ராஜ ராஜ சோழனுடன் நேச பாவத்தை வளர்த்து வந்த கடாரத் தரசர்களான சூடாமணிவர்மனையும் அவனது குமாரன் மாறவிசயோத்துங்கவர்மனையும் குறித்துச் சாஸனங்கள் உரைக்கின்றன. மிகச் சமீப காலம் வரையில் நாகபட்டினத்திலிருந்த பௌத்த விஹாரத்தைத் தனது தந்தையின் ஞாபகார்த்தமாக அவரது பெயரினால் விஜயோத்துங்கவர்மன் கட்டி முடித்ததாகவும், அதனை நிர்மாணிப்பதற்குமுன் ராஜ ராஜ சோழனின் உடன்பாட்டை அக் கடாரத்து மன்னன் பெற்றதாகவும் பெரிய லேடன் பட்டயங்கள் கூறுகின்றன. மாறவர்மனுக்குப் பின் பட்ட மேறிய சங்கிராம விஜயோத்துங்க வர்மன் தனது நாட்டைச் சுற்றிச் சுமாத்ரா கடற்கரையோரம் முழுவதிலும், மலேயாத் தீபகற்பத்திலும் தமிழ் மன்னர்களால் ஜயிக்கப்பட்டிருந்த பிரதேசங்களை மீண்டும் தனது இராஜ்யத்துடன் அணைத்துக் கொள்ளக் கருதித் தனது இராஜ்யத்தை விஸ்தரிக்க முற்பட்டிருத்தல் வேண்டும். ஸ்ரீபோஜத்தில் அப்பொழுதுதான் தலையெடுத்து வந்த அம்மன்னன் எழுச்சியை முளையிலேயே கிள்ளியெறியும் பொருட்டாகத்தான் ராஜேந்திரன் தன் போர்முரசையொலிப்பதற்குப் பெரிதும் காரணமாக இருக்கவேண்டும். ஆதலின் இவ்வுத்தேசங் கொண்டவனாகவே ராஜேந்திரன் தனது கடற்படையைத் திரட்டினன்போலும்! சுமாத்ராவிற்குக் கடல் மார்க்கமாய்ச் செல்வது அக்காலத்தில் பல ஆபத்துக்களுக்கிடமாக இருந்தது. சோழ நாட்டுக் கடலோரத் துறைமுகங்களிலிருந்து, சுமாத்ராவிற்கு நேரடியாகக் கலங்களைச் செலுத்துவது மிகுந்த விபத்துக்களுக்

கிடந்தருவதாயிருந்த தென்று பாஹியான் எழுதியிருக்கிறார். ஆதலின் வட நாட்டுத் துறைமுகம் ஏதேனுமொன்றிலிருந்து தனது பிரயாணத்தைத் துவக்குவதே உசிதமானதாகவும், சுலபமான மார்க்கமாகவும் தோன்றியது. மேலும் ஸ்ரீவிசயத் தரசனுக்கும் கலிங்க நாட்டதிபனுக்குமிடையில் ஏதோ ஓர் விதமான தொடர்பு ஏற்பட்டிருந்ததாகவும் காணப்படுகிறது. ஏனெனில் ஸ்ரீவிசயப் பிரதேசத்தில் கலிங்க நாட்டிலிருந்து குடியேறியவர்களே மிகுதியும் இருந்து வந்தமையால், அதனை ஓர் விதத்தில் கலிங்கத்தின் குடியேற்ற நாடென்றே கூறுவது பொருந்தும். கடாரம் சுமாத்ராவேயன்றி வேறன்று என்பதற்கு அத்தாட்சியாக, அதனுடன் சேர்ந்தாற்போல் குறிப்பிட்டுள்ள ஸ்தலங்களின் பெயர்களைக் கவனித்தால் ஒருவாறு விளங்கும். மாநக்கவாரம் என்னும் பெயர் இப்போது நிக்கோபார் என்றழைக்கப்படும் தீவுகளே யென்பதில் ஐயமில்லை. அவை சுமாத்ராவிற்கு வடக்குத் திக்கிலிருப்பதாகக் கூறப்படுகிறது. மற்றொன்று இலாமுரித் தேசமென்பதே. அது சுமாத்ராவின் வடமேற்கு மூலையிலிருக்கும் ஓர் ஜில்லாவின் பெயர். அராபியர் அதை லம்பிரி யென்றும் லாமேரி யென்றும் (Lameri or Lambri) இருவிதப்பெயரால் அழைத்து வந்தனர். மாதமாலிங்கம் என்னும் பிரதேசம் க்ரா பூஸந்தி (Isthmus of Kra)யின் மீதுள்ள ஓர் முக்கியமான கடற்கரைப்பட்டினம்; காமலங்கா பலோங்கா (Kamalanka, Balonka) என்று முற்காலத்தில் அதற்குப் பெயர் வழங்கியது.

"தாகோபா நதியின் முகத்துவாரத்திற்குச் சமீபத்திலுள்ளதோர்பெரிய துறைமுகமே தக்கோலம்; தமிழர் இத் துறைமுகத்தை நோக்கியே அடிக்கடி பிரயாணம் செய்து வந்தனர். தாகோபோ (Takopa) ஜில்லாவிலுள்ள மற்றோர் கடற்கரைப்பட்டினம் மேவிலிபங்கமென்பதாகும். அதைப் பாங்-கா (Phang-ga) என்ற நாமதேயத்தால் வழங்குகிறார்கள் போலும்; லங்கா சோபம் அல்லது லங்கா சோகத்தில் பப்பேரா (Port Pappera)த் துறைமுகமோ அன்றி மலேயாத் தீபகற்பத்தின் மத்தியப் பிரதேசத்திலிருக்கும் லங்கா-ஸுபமோ இவைகளில் ஒன்று மாப்பப்பாளத்தைக் குறிக்கும் ஸ்தலமாக நினைக்க வேண்டியிருக்கிறது. மாயிருடிங்கம் சுமாத்ராவின் வடகோடியிலிருக்கின்றது. அதற்கப்பால் அக்காலத்தில் ஒருவரும் சென்றிருப்பதாகத் தெரியவில்லை. தற்காலத்தில் ரங்கூனை விளங்கும் ரிஷப சிருங்கபுரத்தையே அதற்கு ஒருவாறு ஒப்பிடலாம். மலேயாத் தீபகற்பத்தின் தென்கோடியிலிருப்பது மலையூர். ஸ்ரீபோஜத்திற் கடுத்து வடக்கே சுமாத்ராவின் கீழ்கடற்கரையில் பானி (Pani or Panei) என்ற பெயரால்

வழங்கும் இடமே பண்ணை யென்பது. விளைப்பந்தூர் என்னுமிட மொன்றையே நம்மால் நன்கு அடையாளங்கண்டுபிடிக்கக் கூட வில்லை.

''மேற்கூறியவைகளிலிருந்து ராஜேந்திர சோழ தேவன் கடாரத்தரசன் மீது போர் தொடுத்ததற்குக் காரணம், கடாரத்தரசன், அதுகாலைத் தமிழர் குடியேறிச் சோழர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த கீழ்த்திசை நாடுகளனைத்தையுமோ, அல்லது அவைகளில் குறிப்பிட்ட சிலவற்றையோ கைப்பற்றி அவைகளைத் தனது ஆட்சி முறைக்குட்படுத்துவதற்குப் பலமான ஏற்பாடுகளைச் செய்து வந்திருக்கவேண்டுமென்பதே. மேலும் சீன தேசத்திலிருந்து சோழ இராஜ்யத்திற்கும், ஸ்ரீவிசயத்திற்கும் சீன தேசத்திற்கும் இடையே அக்காலத்தில் அரசாங்கத் தூதுகள் இரண்டொன்று போய் வந்ததாகக் கூறும் வரலாறுகள் இக்கூற்றை அரண் செய்வதாக இருக்கின்றன. நமக்கு இதுகாறும் கிடைத்திருக்கும் ஆதாரங்களிலிருந்து நாளுக்கு நாள் தனது பலத்தைப் பெருக்கி, தனது இராஜ்யத்தின் எல்லைப் புறத்தை விஸ்தரிப்பதற்குப்பல்கால் ஆலும் இடைவிடாது முயன்று வந்த ஸ்ரீவிசயத்தரசனுக்கு விரோதமாக, கீழ்த்திசையிலுள்ள தன்தாதிக்கத்திற்குட்பட்ட நாடுகளில் தனது மேம்பாட்டைப் பின்னும் சாசுவதமானதொன்றாகச் செய்து கொள்ளும் பொருட்டாகச் சோழ வேந்தன் சீன தேசத்தரசனின் உதவியைப் பெரிதும் நாடித் தனது உத்தேசத்தை நிறைவேற்றிக் கொண்டான் என்பது தெளிவாகும்'' (Dr. S. Krishnaswami Iyengar—Rajendra, The Gangai konda Chola-Some great Rulers of India—Every man's Review for 1920, pp. 11-12)

எனினும் ராஜேந்திரன் கடாரத்தரசன் மீது கொண்ட வெற்றியானது தாத்காலிகமான தொன்றாகவேயிருக்கவேண்டும். ஏனெனில் கி. பி. 1068-ஆம் ஆண்டுச் சிலாலிகிதமொன்றில் வீரராஜேந்திர சோழ தேவன் தான் கடாரத்தை ஜயித்த போதிலும், அது அலை கடல்களுக்கப்பால், வெகு தூரத்திலிருந்தமையால், தான் அதைத் தோல்வியுற்ற மன்னனிடம் திரும்பவும் ஒப்புவித்து விட்டதாகப் பெருமை கொள்ளுகிறான். சில ஆண்டுகளுக்கப்பால் ஸ்ரீவிசயம் மீண்டும் தலை யெடுத்துச் சோழ மன்னர்களின் ஆதிக்கத்தை உதறி விட்டதாகத் தெரிய வருகிறது.

கி. பி. 13-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் கல்யாண மித்ரர் என்பவரால் எழுதப்பட்ட திபேத்திய நூல் ஒன்றுளது. அந்த நூலில் வங்காள புத்த பிக்ஷுவான தீபங்கரர் அல்லது அதிஸா என்னும் பெயர் வாய்ந்த பெரியார் சுவர்ணத்வீபத்திற்கு

யாத்திரை செய்த வரலாற்றைப் பற்றியதோர் குறிப்புக் காணப் படுகிறது. தீபங்கரர் வங்கநாட்டில் (கி. பி. 980-1053) பிறந்த வரேயாயினும் திபேத்தில் பௌத்தமதக் கொள்கைகளை இடைவிடாது பிரசாரம் செய்துவந்தார். பௌத்தசமயமானது அந் நாட்டில் வேரூன்றி அரசாங்க ஆதரவு பெற்றுத் தழைத்து ஓங்கிய தற்குப் பெரிதும் காரணராய் விளங்கியவர் அவரே. ஸரத்சந்திர தாஸ் என்பவரால் வரையப்பட்ட 'திபேத்து நாட்டில் இந்தியப் பண்டிதர்கள்' என்னும் நூலின் வாயிலாக, தீபங்கரரின் ஜீவிய சரித்திரத்தைக் குறித்து சில ரஸமான செய்திகளை யறியலாகும். அப்புத்தகத்திலிருந்து கீழ்க்கண்ட குறிப்பை எடுத்து எழுது கிறோம்:

"ஜம்புத்வீபத்திற்கு மிகவும் சமீபத்தில் நவரத்னங்களும், உலோகக்கனிகளும் மலிந்த நாடொன்றிருக்கிறது. அதற்குச் சுவர் ணத்வீப மென்று பெயர். லாமா க்ஸேர் க்ளிம்—பா (Lama gser glim—pa) என்பவர் இந்தத் தேசத்து அரசகுடும்பத்தில் உதித்தவர். புத்த தர்மத்தின் நுட்பங்களனைத்தையும் ஐயந்திரி பறக்கற்றுணர்ந்து, அதனுடைய அரிய உபதேசங்களின் விழுமிய கருத்துப்படி சீலமான வாழ்க்கையை நடத்தக்கருதிய அவர், ஜம்பு த்வீபத்திலுள்ள வஜ்ராஸனத்துக்கு (புத்தகயை) யாத்திரை செல்ல வேண்டுமென்று ஆர்வங்கொண்டார். அவர் அதன் பொருட்டுத் தமது தந்தையிடம் அநுமதி பெற்றுக் கொண்டார். வஜ்ரா ஸனத்தின் ஆசாரிய பீடத்தில் அவ்வமயம் மிகப் பிரவசித்திவாய்ந்த மஹா ஸ்ரீரத்னர் என்பவர் வீற்றிருந்தார். சுவர்ணத்வீபத்தின் இளவரசன் அவருடைய உயரிய வாழ்க்கை நெறியையும், உபதேச மொழிகளையும் கண்டு அதிசயித்து, அதனால் வசீகரிக்கப்பட்ட வனாய்த் தன்னை அவரது சீடர்களில் ஒருவனாக ஏற்றுக்கொண்டு, தன்ம மார்க்கத்தைத் தனக்குப் போதிக்க வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டான். ஆனால் ஆசாரியரோ இளவரசன் இவ்வுலக வாழ்க்கையின் இன்ப நலங்களனைத்தையும் துறந்து, அரசுரிமைப் பேற்றையும் உதறி யெறிந்துவிட்டு, ஓர் சாமானிய எளிய பிக்ஷுவின் துறவிக்கோலத்தைத் தாங்கினாலன்றி, தாம் அவனுடைய வேண்டுகோளுக்கிணங்க முடியாதென மறுத்துவிட்டார். அர சிளங்குமரன் அதற்கிசைந்து பிக்ஷுவின் காவி ஆடைகளை அணி யவும், ஆசிரியர் அவனுக்குத் தர்மகீர்த்தி என்று நாமகரணம் சூட்டினார்.

"தர்மகீர்த்தி அதற்கப்பால் சுவர்ணத்வீபத்திற்குத் திரும் பவும் சென்று தனது நாட்டில் அதுகாலைத் தீர்த்திக மதத்தைப் பின்

பற்றியிருந்த அனைவரையும் பௌத்தமதத்தைத் தழுவுமாறு செய்வித்தான். அவன் சுவர்ணத்வீபவாசியேயாயினும், அவனுடைய பரந்தஞானமும், நூற்புலமையும், கீர்த்தியும் கடல்களுக் கப்பாலுள்ள நாடுகளிலும் எட்டியிருந்தது.

"தீபங்கரர் வியாபாரிகளான சிலரின் அருந்துணையோடு மிகப்பெரிய மரக்கல மொன்றிலேறி சுவர்ணத்வீபத்திற்குப் பிரயாணமானார். அப்பிரயாணத்தைச் செய்து முடிப்பதற்குப் பல மாதங்களாயின. இந்தப் பிரயாணத்தினிடையில் சம்பவித்த கஷ்டங்கள் அளவிடப்படுவனவல்ல. கடுமையான புயற்காற்று அடிக்கடி வீசியதால் கடல் கொந்தளித்து, அலைகள் ஒன்றோடொன்று மோதிப் பிரயாணிகளின் மனத்தில் சொல்லவொண்ணா அச்சத்தையும், திகிலையுமூட்டி, அவர்களை யலைக்கழித்தன. அவ்வமயம் கீழ்த்திசை நாடுகளில் சுவர்ணத்வீபத்திலேயே ஏனைய இடங்களைக் காட்டிலும் பௌத்தமதக் கொள்கைகள் நிலைகொண்டு விளங்கின. அதற்குப் பெரிதும் கருவியாயிருந்த தர்மகீர்த்தியை ஜனங்கள் அக்காலத்திலிருந்த பெரியார்களனைவரிலும் மேம்பட்டவனாகக் கருதிக் கௌரவித்து வந்தார்கள். தீபங்கரர் 12 வருஷங்களுக்கதிகமாக இவ்விடத்தில் வாஸம்செய்து, புத்தபகவானின் அரியதத்துவோபதேசங்களைத் தர்மகீர்த்தியின் வாயிலாகக்கேட்டறிந்து கொண்டார். அதற்கப்பால் அவர் சுவர்ணத்வீபத்தினின்றும் மீண்டும் கப்பலேறி தாம்ரத்வீபத்தின் (இலங்கைத்தீவு) வழியாக இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார்."

* * * *

மேற்கூறியவைகளேயன்றி நேபாள தேசத்திய கையேட்டுப் பிரதிகள் பலவற்றினின்றும் இந்தியாவுக்கும் ஜாவா சுமாத்ராத் தீவுகளுக்குமிடையே தரைமார்க்கமாகவும், கடல்மார்க்கமாகவும் போக்குவரவுகள் அடிக்கடி நிகழ்ச்சிபெற்று வந்ததை யறிவிக்கும் சான்றுகள் பல காணக் கிடக்கின்றனவாம். 11-ஆவது நூற்றாண்டில் எழுதப்பட்டதாகக் கருதப்படும் நேபாளக் கையேட்டுச்சுவடியொன்றில் 'யவத்வீபத்தில் தீபங்கரர்' என்ற தலைப்புடன் ஓர் அழகிய சித்திரமும், அச்சித்திரத்தின் விளக்கமும் காணப்படுகின்றன. பூர்விக ஹிந்துக்கள் ஜாவா, சுமாத்ராஆகிய இரு தீவுகளையுமே 'யவத்வீப' மென்ற சிறப்புப் பெயரால் வழங்கிவந்தார்கள் என்பதை நாம் சொல்லவேண்டியதில்லை. அதே பிரதியிலுள்ள வேறொரு சித்திரத்திற்கு 'ஸ்ரீ விஜயபுரத்தில் லோகநாதர்' என்ற பெயர் அளிக்கப்பட்டுள்ளது. இதனினின்றும் நெடுங்காலமாகவே பாரதநாட்டு மக்களுக்குப் பிற நாடுகளைக் குறித்து

நன்றாகத் தெரிந்திருந்ததாயினும், 11-ஆவது நூற்றாண்டின் ஆரம்பத்திலேனும் நேபாளச்சித்திரக்காரர்கள் சுமாத்ராவைப்பற்றியும் ஸ்ரீவிசயத்தைப்பற்றியும் அறிந்திருந்தார்கள் என்பது வெளிப்படை.

மற்றும், குணாட்யர் என்பவர் எழுதியிருக்கும் ப்ருஹத்கதையைத்தழுவி ஸோமதேவரால் வரையப்பட்ட கதாஸரித்ஸாகரத்தில், பூர்விக இந்தியாவின் வர்த்தகச் சிரேஷ்டர்கள் சுவர்ணத்வீபத்தோடும், அதனையடுத்த நாடுகளோடும் உறவுபூண்டு அடிக்கடி பண்டமாறுதல்களைச் செய்துவந்ததை விளக்கும் சம்பவங்கள் பலவுள. கதாஸரித் ஸாகரமும் கி. பி. 12-ஆம் நூற்றாண்டிலேயே எழுதப்பட்டிருக்க வேண்டுமென்று ஆராய்ச்சியாளர்களில் அநேகர் கருதுகிறார்கள்; எனினும், அதைக்காட்டிலும் பழமை வாய்ந்த பெருங்கதை (ப்ருஹத்கதை)யின் அமைப்பையும், கதைப்போக்கையும் தழுவியே அது வரையப்பட்டதாதலின், தொன்றுதொட்டு இந்தியா பிற நாடுகளுடன் எத்தகையதான தொடர்பை வளர்த்து வந்துள்ளதென்பதை நமக்குச் சந்தேகமின்றி உணர்த்தும் ஆதாரநூலாக அதையேன் கருதக்கூடாது?

(தொடரும்)

# பெரிபுளூஸ்

ச. சோமசுந்தர தேசிகர்

(354-ம் பக்கத் தொடர்ச்சி)

47. **பா**ரிகசாவுக்கு அப்பால் உள்நாட்டிலுள்ள தேசத்தில் அரத்தியை[1] (*Arattii*), அரக்கோஸியை[2] (*Arachosii*), காந்தாரை[3] (*Gandaræi*), புச்சேபாலஸ் அலெக்ஸாந்திரியா[4] (*Bucephalus Alexandria*) என்னும் ஊர் அடங்கிய போசலை[5] (*Poclais*) என்ற பல நாட்டினர் வாழ்கின்றனர். இவர்களுக்கப்பால் பாக்திரியரென்னும் போரிடும் சாதியினர் இருக்கின்றனர்; அவர்கள் தங்கள் அரசரின் கீழ் வாழ்கின்றனர். அலெக்ஸாந்தர்[6] இவ்விடங்களிலிருந்து புறப்பட்டுத் தமிழகத்தையும் இந்தியாவின் தென் பாகத்தையும்[7] விட்டுக் கங்கை நாட்டில் நுழைந்தான்; இன்றும் பாரிகசாவில் கிரேக்க நாட்டில் அலெக்ஸாந்தருக்குப் பின்னாண்ட அபலோதோத்தஸ்[8] (*Apolodotus*) மீனாண்டர்[9] (*Menander*) இவர்களின் உருவங்களும் கிரேக்க எழுத்துக்களுமுடைய பழய டிராமி[10] நாணயமாகச் செலாவணியாகிறது.

---

47. (1) அராத்தியை: அராஷ்டி என்பதன் பாதகச் சொல். இது பஞ்சாபியரைக் குறிக்கும்.

(2) அரக்கோஸியை: ஆப்கானிஸ்தானத்திலுள்ள கந்தகார் நாட்டிலுள்ள சனங்கள்.

(3) காந்தாரை: காந்தார தேசத்திலுள்ளவர். காந்தாரம் என்பது காச்மீத்துக்குப் பக்கத்திலுள்ளது.

(4) புச்சேபாலஸ்: இஃது இப்பொழுது ஜீலம் என வழங்குகிறது.

(5) போசலை: புஷ்களாவதி யென்பதன் பாகதம். இது காந்தார நாட்டின் மேல் பாகத்திலுள்ளது.

(6) அலெக்ஸாந்தர்: இவன் கிரேக்க அரசன். இந்தியாவின் மேல் படையெடுத்து வந்தபோது இவன் சந்திரகுப்த மௌரியனால் தோற்கடிக்கப் பட்டுத் திரும்பினன் என்பது சரிதம். ஆனால் மீனாண்டர் என்பதைத் தவறாய் அலெக்ஸாந்தர் என்று எழுதிவிட்டதாகக் கருதுவர் ஷாப் ஆசிரியர்.

(7) தென்பாகம்: தக்ஷிணம், மராடம் முதலிய தேசங்கள்.

(8), (9) அபலோதோதஸும் மீனாண்டரும்: உரோமாபுரியி லரசாண்ட அரசர்.

(10) டிராமி யென்பது உரோம நாணயம்.

48. இந்த இடத்திலிருந்து உள் நாட்டில் முற்காலத்தில் இராஜதானியாகவிருந்த உசேனி[1] (*Ozene*) நகரமிருக்கிறது; இவ்விடத்திலிருந்து பாரிகசாவைச் சுற்றியுள்ள நாட்டுக்கு வேண்டிய பண்டங்களும், நம்முடைய வியாபாரத்திற்குரிய அகேட்,[2] கார்னேலியன்,[2] இந்திய மஸ்லீன், சாயத்துணி, நாட்டுத் துணி முதலிய பண்டங்களும் கொண்டு வரப்படுகின்றன. இந்தநாட்டு வழியாகவும் வட நாட்டிலிருந்து போசல நாடு வழியாகவும் சடாமாஞ்சியும் கஸ்பபிரணி[3], பரோபணிஸினி,[4] கபோலிதி[5] பக்கத்திலுள்ள ஸித்தியா நாட்டின் வழியாகவும் கோட்டமும் குங்கிலியமும் கொண்டு வரப்படுகின்றன.

49. இந்தப் பட்டினத்துச் சந்தைக்குச் சாராயம், செம்பு, ஈயம், நாகம், காரீயம், பவளம், கோமேதகம், மெல்லிய துணி, மற்றும் பலவித முரட்டுத்துணிகள், ஒரு முழ அளவுள்ள பளபளப்பான கச்சை, வாசனைக் கிராம்பு, கண்ணாடி, மனோசிலை[1] கருநிமிளை[2], நெரியாசம்[3], பொன் வெள்ளி நாணயங்கள், சிறிது அதிக விலை பெறாத சாந்துக் குழம்புகள் இறக்குமதியாகின்றன. இத்தலியிலிருந்து வரும் சாராயத்தை விருப்பமாகவும், லவோதிசி, அரபியாவிலிருந்து வருவதைச் சாதாரணமாகவும் கொள்ளுவர். நாணயங்களைக் கொண்டு வந்து இங்கே மாற்றும்போது ஊதிய முண்டு.[4] அரசனுக்காக அதிக விலையுள்ள வெள்ளிப் பாத்திரங்கள், பாடும்

48. (1) உசேனி: மாளவ தேசத்தின் தலைநகரான உச்சயினி பட்டணம்.

(2) அகேட், கர்னேலியன்: இரத்தினக்கற்கள் வகை.

(3) கஸ்பபிரணி: (Caspapyreni.) காசிப்புரம் என்பதன் திரிபு; காச்மீர தேசம்.

(4) பரோபணிஸினி: (Paropanisene.) இதுபொழுது இந்துகுஷ் மலைத்தொட ரென்று வழங்குகிறது.

(5) கபோலிதி: (Cabolite.) காபூல் தேசமான ஆப்கானிஸ்தானம்.

49. (1) மனோசிலை: முன்னாளில் பாரசிகத்திலிருந்து வந்தது; இப்பொழுது பர்மா சீனா முதலியவிடங்களில் அகப்படுகிறது.

(2) கருநிமிளை: (Antimony) இதனை வெள்ளைச் செம்பென்றுஞ் சொல்லுவர். இது முன்னாளில் கண்ணுக்கு மை செய்ய உபயோகப்பட்டு வந்தது. எகிப்து தேசத்தில் பென்னிஹாஸானிலுள்ள க்னும்ஹோடபு சமாதிக்கல் வெட்டில் (கி.மு. 1900) இது பாலைவனத்திலுள்ள ஆசியர்களால் கொண்டுவரப்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

(3) நேரியாசம்: தூபவகை; 12-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் கூட காணப்படுகின்றன.

(4) நாணயங்கள்: உரோம கிரேக்க நாணயங்கள் கலப்பற்றவையான தால் விலை அதிகம்.

ஸ்பையன்கள், அந்தப்புரத்துக்கு அழகுள்ள ஸ்திரீகள்,[5] நேர்த்தியான சாராயம், நேர்த்தியும் அழகுமுள்ள ஆடைகள், மேலான சாந்துக் கலவைகள் கொண்டுவரப்படுகின்றன. இங்கிருந்து சடாமாஞ்சி, கோட்டம், குக்கில், தந்தம், அகேட், கார்னேலியன் கற்கள், லிஸியம்,[6] பலவிதப் பருத்தியாடைகள், பட்டாடை, சாயத்துணி, நூல், திப்பிலி[7] மற்றும் பலவிடங்களிலிருந்து வரும் பண்டங்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எகிப்திலிருந்து இந்தப் பட்டணத்திற்கு வருபவர்கள் எபிபி (*Epiphi*) யென்ற ஜுலை மாதத்தில் வருகின்றனர்.

50. பாரிகசாவுக்கப்பால் கடற்கரை வடக்கிலிருந்து நேர் தெற்கேயோடுகிறது; அதனால் இந்தப் பாகத்திற்குத் தட்சிணபாதம்[1] என்று பெயர்; நாட்டு மொழியில் தக்கனே என்றால் தெற்கு என்று பொருள். இந்தக் கடற்கரைக்குக் கிழக்கிலுள்ள தேசம் வனாந்தரங்களும் மலைகளும் நிறைந்தது. அவ்விடங்களில் பலவிதமான காட்டு மிருகங்கள் சிறுத்தை, வேங்கை, யானை, பெரும் பாம்புகள், கழுதைப்புலி, பலவிதக்குரங்குகள் வாழ்கின்றன. பலவித ஜனங்கள் நெருங்கிக் கங்கை நாடு[3]வரை வாழ்கின்றனர்.

51. தெட்சிண பாதத்திலுள்ள அங்காடிப் பட்டினங்களில் இரண்டு முக்கியமானவை. பாரிகசாவிலிருந்து தெற்கே இருபது நாள் பயணமுள்ள பைதான்[1] இருக்கிறது; இதற்கப்பால் பத்து நாள் பயணத்தில், தகரா[2] என்ற பெரிய பட்டணமிருக்கிறது. இப்பட்டணங்களிலிருந்து பாரிகசாவுக்கு நல்ல பாதையில்லை

---

(5) ஸ்திரீகள்: இந்திய அரசர்களது அந்தப்புரத்திற்கு யவனச் சிறுமியர் ஏவலாளராய் அமர்ந்திருந்ததாகப் பத்துப் பாட்டில் காணப்படுகிறது.

(6) லிஸியம்: 39 (4)ன் குறிப்புப் பார்க்க.

(7) திப்பிலி: வடமொழியில் பிப்பலி என்று பெயர். இது கிழக்குத் தொடர்ச்சிமலை, சிம்மளம், வங்கம் முதலான விடங்களில் உண்டாகின்றது.

50. (1) தட்சிணபாதம்: அங்கிலத்தில் டெக்கான் என்பர்; விந்திய மலைக்குத் தெற்கிலுள்ள பிரதேசம்.

(2) காடுகள்: தண்டகாரணியம் போலும்.

(3) கங்கைநாடு: கங்கையாறு ஓடும் பிரதேசத்தைப் பெரிபுளுசில் கங்கைநாடென்றே சொல்லப்பட்டிருக்கிறது.

51. (1) பைதான்: (Pæthana), பிரதிஸ்தானமென்னும் தற்காலப் பைதான்; கோதாவரி நதி உற்பத்தியாகு மிடத்துக் கருகிலிருக்கிறது.

(2) தகரா: (Tagara) இது இப்பொழுது தேர் (Ter) என்று வழங்குகிறது; பைதானுக்குத் தென்கிழக்கில் 95 கட்டை தொலைவுள்ளது.

யெனினும் பண்டங்கள் வண்டியில் கொண்டு வரப்படுகின்றன; பைதானிலிருந்து அதிகமாகக் கார்னேலியனும், தகராவிலிருந்து சாதாரணத் துணி, மஸ்லீன், துப்பட்டி, கடற்கரையிலிருந்து உள்நாட்டு வழியாகக் கொண்டு வரப்படும் பண்டங்கள் வருகின்றன. தமிழகம் முடியக் கடற்கரைபோரம் ஏழாயிரம் ஸ்டேடியா தொலைவு. ஆனல் கடற்கரை நாடு இன்னும் அதிக தூரம்.

52. பாரிகசாவுக்கு அப்பால்[1] வரிசையாக இருக்கும் அங்காடிப் பட்டினங்களாவன; சுப்பாரா,[2] மூத்த சரகனஸ் (*Saraganus*) இருக்கும் நாளில் சட்டப்படி யமைந்த கல்லியாண நகரம்[3]. சந்தரஸ்[4] (*Sandares*) ஆட்சியின்கீழ் வந்த பிறகு இத்துறைமுகத்தில் வியாபாரம் துன்பமாயிருப்பதோடு அவ்விடம் சரக்கிறக்கும் கிரேக்க மரக்கலங்கள் காவலோடு[5] பாரிகசாவுக்குக் கொண்டுபோகவும் படுதல்கூடும்.

53. இந்தப் பிரதேசத்தில் கல்லியாணுவுக்கப்பால் பல பட்டினங்களிருக்கின்றன; செமில்லா[1], மண்டகோரா[2], பழைய[3]

---

52. (1) தெற்கில்.

(2) சுப்பரா: (Suppara); பம்பாய்க்கு அருகில் வடபக்கமாயுள்ளது; சோபாரா என வழங்கும்.

(3) கல்லியாண நகரம்: இதுபொழுது கல்யாணி யென்று வழங்கும் ஊர்.

(4) சரகனஸ்: சககுஷாண அரசர்களிற் சிலர்.

(5) காவல்: இந்தப் பாகம் சககுஷாணர் வசமிருந்ததால் தங்களுக்கு இறையிறுக்கும்பொருட்டுச் சிறைபிடித்துச் செல்லுதலுமுண்டு.

53. (1) செமில்லா: (Semylla); பம்பாய்க்கு 25 கட்டை தெற்கிலுள்ள செனல் என்ற ஊர்; முற்காலத்தில் இதற்குச் சம்ரவதி யென்று பெயர்.

(2) மண்டகோரா: (Mandagora); சாவித்திரி நதி முகத்துவாரத்திலிருக்கும் பாங்காட் (Bānkot) என்ற ஊர்; இது தாலமி கூறும் மந்தாகிரியோ வென்பது யோசிக்கத்தக்கது.

(3) பழையபட்னே: (Palæpatmæ); இதுபொழுது டாபோல் (Dābhol) என்று வழங்குகிறது.

(4) மெழிசிக்கரை: இது ராஜபூராயிருக்கலாம். இதனைப் பிளினி சிகெருஸ் (Sigerus) என்பர். பதிற்றுப்பத்தில் கிரேக்க (யவன)ரிருக்கை ஒன்று இருந்ததாகவும் அதனைச் சேரனொருவன் அழித்து யவனர்களையும் அவமானப் படுத்தினதாகவும் காணப்படுகிறது. கடலில் வரும் கப்பல்களைக் கொள்ளைக்காரர் மிகுதியும் துன்புறுத்தி வந்தனரென்பது கடற்கடம்

பட்னே, மெழிசிக்கரை[4], பைசாண்டியம்[5], தோகாம்[6], ஒருண போவஸ்.[7] செர்ஸிநோஸஸ் (*Chersenosus*)[11] என்ற விடத்திற்கு எதிரில் ஸெஸிகிரினி[8] (*Sesecracnae*), ஐகிடியை[9] (*Aegidii*), கனிட்டியை[10] (*Caenitae*) என்ற கப்பற் கொள்ளைக்காரர் நிறைந்த தீவுகளும், பின்னல் வெள்ளைத் தீவு[12] மிருக்கின்றன. பிற்பாடு நெளரா[13] (*Naura*), திண்டிஸ்[14] (*Tyndis*) என்ற தமிழகத்தின் முன் அங்காடிப்பட்டினங்களிருக்கின்றன. பின்னர் முசிரி[15], நெல்கிந்தா[16] (*Nelcynda*) என்ற இதுபொழுது முக்கியமா யிருக்கும் பட்டினங்கள் இருக்கின்றன.

---

பெறிந்து என்றும், கடல்பிறக்கோட்டிய வெல்கெழு குட்டுவன் என்றும் வரும் பதிற்றுப்பத்து அடிகளால் வலியுறும்.

(5) பைசாண்டியம்: (Bysantium.) இது கிரேக்க ஊர்; கிரேக்கர்கள் குடியேறியதால் இப்பெயர் பெற்றது; தற்போது விஜயதுர்க்கம் (Vijadorg) என்று பேர்பெறும்.

(6) தோகரம்: (Togarum); இதுபொழுது தேவகிரி (Devgarh) யென்று வழங்குகிறது.

(7). ஒருணபோவஸ்: (Aurannoboas); மால்வான் என்ற ஊர்; இங்கே சிவாஜியின் ஞாபகக்கல் நாட்டப்பட்டிருக்கிறது.

(8) ஸெஸிகிரினி: வெங்குர்லா தீவுகள்.

(9) ஐகிடியை: கோவா தீவு.

(10) கனிட்டியை. கார்வாருக்கு எதிரியிலுள்ள தீவுகள்.

(11) செர்ஸிநோஸிஸ் என்ற கிரேக்க மொழிக்குத் தீபகற்பம் என்று பொருள். கார்வார் என்ற ஊர் முன்னே கடலில் நீண்டிருப்பது இவ்வாறு கொள்ள நேர்ந்தது போலும்.

(12) வெள்ளைத்தீவு: இதுபொழுது பறவைத்தீவு என்றும் நித்ரான் (Nitrān) என்றும் வழங்குகிறது. கரையிலிருந்து 10 கட்டை தொலைவி லிருக்கிறது.

(13) நெளரா: ஷாப் இதனைக் கண்ணனூர் என்பர்; இது நறவு என்ற பழைய ஊர். 'சூடா நறவின் நாண்மகிழிருக்கை' என்பது பதிற்றுப்பத்து, 85; குடக்கோ இளஞ்சேறல் இரும்பொறையின் தலைநகர்; மங்களூர் என்பர். யூல் ஆசிரியர்.

(14) திண்டிஸ்: தொண்டி; இதுபொழுது கடலுண்டி யென வழங்கும்.

(15) முசிரி: முசிரிப் பெருந்துறை; பெரியாற்றின் கரையிலிருந்தது; அகம். 148 பார்க்க.

(16) நெல்கிந்தா: இப்பொழுது இதுவென நிச்சயிக்க முடியவில்லை.

54. திண்டிஸ் சேரபுத்திர நாட்டு[1] ஊர் ; கடலிலிருந்து பார்க்கும்போது தெரியும் கிராமம். அந்த நாட்டிலுள்ள முசிரி யென்ற ஊரில் அரேபியாவிலிருந்தும் கிரேக்க தேசத்திலிருந்தும் வரும் மரக்கலங்கள் நிறைகின்றன. அது ஆற்றோரமிருக்கிறது ; திண்டிஸிலிருந்து ஆறுவழியாகவும் கடல்வழியாகவும் ஐந்நூறு ஸ்டேடியா தொலைவு உள்நாட்டிலும், கடற்கரையிலிருந்து ஆற்றோரமாக இருபது ஸ்டேடியா தூரத்திலும் இந்த ஊர் இருக்கிறது. முசிரியிலிருந்து நெல்கிந்தா ஆறு வழியாகவும் கடல் வழியாகவும் ஐந்நூறு ஸ்டேடியா தொலைவு. அது பாண்டி நாட்டிலிருக்கிறது. இந்தப் பட்டினமும் கடற்கரையிலிருந்து நூற்றிருபது ஸ்டேடியா தூரத்தில் உள்நாட்டிலிருக்கிறது.

55. இந்த ஆற்றின் முகத்துவாரத்தில் பக்கரை[1] (*Bacare*) என்ற ஊர் இருக்கிறது ; இந்த இடத்திற்கு நெல்கிந்தேயிலிருந்து மரக்கலங்கள் ஊர் திரும்பும்போது வந்து கடலில் நங்கூரம் பாய்ச்சிப் பண்டங்களை யேற்றுகின்றன ; (இவ்வாறு செய்வது) அந்த ஆற்றில் மணல்திட்டுகளிருப்பதாலும் கால்கள் உருத்தெரியாமலிருப்பதாலுந்தான். இந்த இரண்டு பட்டினங்களுக்கும் உரிய அரசர் உள் நாட்டில் வசிக்கின்றனர். கடலில் வருபவர்களுக்கு அடையாளமாக அவர்களை வரவேற்பதுபோல் கருநிறமும் குட்டையுமான பாம்புகள் காணப்படுகின்றன; அவற்றின் கண்கள் சிவப்பாயிருக்கின்றன.

56. இவ்விடங்களில் மிளகும்[1] பச்சிலையும்[2] ஏராளமாகக் கிடைப்பதால் அவர்கள் இந்த அங்காடிப் பட்டினங்களுக்குப் பல பெருங் கப்பல்களை யனுப்புகின்றனர். முதலாவதாக அதிக நாணயம் வருகிறது ; நீலக்கல் சிறிது, மெல்லிய ஆடை, சித்திர ஆடை,

---

54. (1) சேரபுத்திரநாடு: (Cerobothra); சேரநாடு.

55. (1) பக்கரை: வைக்கரை என்ற கோட்டயத்திற் கருகிலுள்ள தோரூர்; The Tamils 1800 years ago, p. 60.

56. (1) மிளகு: வெகு காலமாக மலையாளக் கரையிலிருந்துதான் ஐரோப்பிய நாட்டுக்கு ஏற்றுமதியாயிற்று.

(2) பச்சிலை: இதனை யவன பாஷையில் மலபத்திரம் (Malabathrum) என்பர். இதனைப் பலர் பலவிதமாகக் கூறுவர். இது முற்காலத்தில் சியம் அன்னும் தேசங்களில் பயிர் செய்யப்பட்ட ஒரு சிறு செடி. இலை காரமுடையது. செடிகள் முட்கள் நிறைந்தன. இதனை நட்ட ஐந்து ஆறு மாதங்களில் அறுவடை செய்வர். இலையை வெயிலில் உலர்த்தினவுடன் ஒருவித நறுமணம் கமழ்கிறது என்று சீன கிரந்தங்களில் காணப்படுவதாக

கருங்கிமிளே, பவளம், வேலைசெய்யப்படாத கண்ணாடி, செம்பு, ஈயம், நாகம், பரிகசாவில் இறக்கப்படும் அளவு சிறிது சாராயம், மனோசிலை, அரிதாரம் என்பனவும், அந்த நாட்டார் கோதுமை வியாபாரஞ் செய்யாததால் மாலுமிகளுக்கு வேண்டிய அளவு கோதுமையும் இறக்குமதியாகின்றன. இங்கிருந்து கொட்டநாரா[3] (*Cottonara*) பிரதேசத்தில் விளையும் மிளகு மாத்திரம் ஏற்றப்படுகிறது. இது தவிர, நல்ல நேர்த்தியான முத்து, தந்தம், பட்டாடை, கங்கை நாட்டிலிருந்து சடாமாஞ்சி, உள்நாட்டிலிருந்து பச்சிலை, கிரிஸே தீவு[4] (*Chryse*) தமிழகக் கடற்கரைகளில் உண்டாகும் பளபளப்புள்ள கற்கள், இரத்தினம், நீலம், ஆமையோடு உள்ளிட்ட பலவகைப்பட்ட இரத்தினக் கற்கள் ஏற்றப்படுகின்றன. இவ்விடங்களுக்கு எகிப்திலிருந்து ஜூலை மாதத்தில் புறப்பட்டுப் பருவகாலத்தில் பிரயாணஞ் செய்கிறார்கள்.

57. முற்கூறியபடியுள்ள யாத்திரை முழுவதும் கானா, (*Cana*) யூதமோன் அரேபியாவிலிருந்து (*Eudaemon Arabia*) சிறு கலங்களில் கரையோரமாகச் செய்வது வழக்கம்; துறைமுகங்களின் இருப்பிடத்தையும் கடல் நிலைமையையும் நன்கு கவனித்து சமுத்திரத்தின் குறுக்கே முதன்முதலாகப் பிரயாணஞ் செய்தவர் ஹிப்பலஸ் (*Hippalus*) என்பவர். நமக்கு எல்ஷியன் காற்று அடிக்குங்காலத்தில் இந்தியாவில் கடலிலிருந்து பருவக் காற்று ஆரம்பித்து அடிக்கிறது; சமுத்திரத்தின் குறுக்கே இந்தக் காற்றில் செல்லும் வழியைக் கண்டு பிடித்தவரின் பேரான ஹிப்பாலஸ் என்றதையே இக்காற்றுக்கும் இட்டு அழைக்கின்றனர். அதுமுதல் இதுவரையில் கப்பல்கள் கானாவிலிருந்தும் லவங்கத் தீவுகளிலிருந்தும் நேரே செல்லுகின்றன; தமிழகத்திற்குச் செல்லுகின்ற மரக்கலங்கள் காற்றுக்கு அப்புறமாகச் செல்லுகின்றன; பாரிகசாவுக்கும் சித்தியாவுக்கும் செல்லும் கப்பல்கள் மூன்று நாட் பயணம் கடற்கரை யோரமாகச் சென்று அங்கிருந்து சமுத்திரத்தின் குறுக்கே தகுதியான பருவக் காற்றில் கரையைவிட்டும் குடாக்களை நீக்கியும் செல்லுகின்றன.

---

ஐரோப்பிய விற்பன்னரொருவர் எழுதியுள்ளார். (J. A. 1918, ii) தமிழ் நூல்களில் 'நேர்கட்டி செந்தேன் நிரியாசம் பச்சிலை—யாரமகிலுறுப்போடாறு' என்றும், 'அஞ்சனக்கட்டி நெரியாசம் பச்சிலை யாரமகிலுறுப்போரைந்து' என்றும் காணப்படுகிறது.

(3) கோட்டநாரா: குட்ட நாடு.

(4) கிரிஸே தீவு: சுவர்ண பூமி எனப்படும் சுமத்ரா தீவு.

(தொடரும்)



# டாக்கி

டாக்டர் எச். பரமேசுவரன்—பி. என். அப்புஸ்வாமி

இப் பிரபஞ்சத்திலே உள்ள பல்வேறு பொருள்களின் தத்துவங்களை அறிந்துகொள்ள வேண்டுமென்று விஞ்ஞான சாஸ்திரிகள் வெகுகாலமாக முயன்று வருகின்றனர். இத னுள்ளே நிகழும் ஆச்சரியகரமான நிகழ்ச்சிகளையும், காணப்படும் அற்புதமான தோற்றங்களையும், அவற்றுக்கெல்லாம் உரியனவாகும் காரணங்களையும் அவர் தேடித் திருவி ஆராய்ந்துவருகின்றனர். இம்முறையிலே, சிறிது சிறிதாகவேனும், மானுட வருக்கத்தின் அறிவுத் தொகுதியைப் பெருக்க முயலுகின்றனர். தாம் மிகப் பாடுபட்டுத் தேடி அறிந்துவரும் விஷயங்களின் அளவு சிறிதே யாயினும் பெரிதேயாயினும், அவ் வுண்மைகளைப் பிறர்க்கு எடுத்துக் கூறுவதில் அவர்க்கு அடங்கா மகிழ்ச்சி உண்டு. ஆதலால் இன்று எடுத்துக் கொண்ட விஷயத்தைப் பற்றி உங்கள் முன்னிலையில் பேசுவதில் உள்ள முழு மகிழ்ச்சியும் என்னுடையதே யாகும்.

பிற நாடுகளிலே இவ்வாறான பிரசாரங்களும் பிரசங்கங்களும் மும்முரமாக நடந்துவருகின்றன. இங்கிலாந்திலே லண்டன்மா நகரிலே ராயல் இன்ஸ்டிட்யூஷன் என்றொரு மகாசபை இருக் கிறது. அது தொடங்கப்பட்டபொழுது அதற்கு யாதொருவித மான சிறப்பும் இல்லாதிருந்தது. அக்காலத்திலே அது சின்னஞ் சிறிய சபையாகவே, மிகவும் தாழ்ந்த எளிய நிலையிலேயேதான் இருந்தது. இப்பொழுதோ அதன் பெருமைக்கும் கௌரவத் துக்கும் அளவே இல்லை. உலகிலெங்கணும் விஞ்ஞான சாஸ்திரிகள் கூடும் சபைகளுக்கெல்லாம் மேலானதாக அது தலைமை பெற்று இப்போது விளங்குகிறது. 'வெள்ளிக்கிழமை இரவு இங்கே வந்து பிரசங்கம் செய்யவேண்டும்' என்ற அழைப்புக் கடிதம் கிடைத்தால்,

---

இது சென்னைப் புத்தகாலயப் பிரசார சங்கத்தின் ஆதரவில் டாக்டர் எச். பரமேசுவரன் செய்த பிரசங்கத்தின் மொழிபெயர்ப்பு.

அதைத் தனக்கு உண்டாகிய மிகப்பெரிய கௌரவமாகவே எத்தகைய உயர்ந்த விஞ்ஞான சாஸ்திரியும் எண்ணும்படி அவ்வளவு மகிமை பெற்றுவிட்டது அந்தச் சபை. கேட்பவர் சிறந்த அறிவாளராயினும் கூடப் பொருள் விளங்காமல் திகைக்கும்படியான கடினமான முறையில் பிரசங்கம் செய்யும்படி அவன் அங்கே அழைக்கப்படுவதில்லை. அங்கே இரவில் 9-மணி முதல் 10-மணி வரை ஒரு மணிநேரந்தான் பேச அவகாசம் கொடுக்கப்படும். அந்நேரத்துக்குள் எந்தச் சாஸ்திரத்திலே அவன் விற்பன்னனாய் இருக்கிறானோ அந்த விஞ்ஞான சாஸ்திரத்தின் பகுதியிலே மிகவும் நூதனமாக அவன் தெரிந்துகொண்ட விஷயங்களைப் பற்றிப் பிரசங்கம் செய்யவேண்டும். பொழுதுபோக்காக அச்சபைக்கு அநேகம் சீமான்களும் சீமாட்டிகளும் வருவதுண்டு. அவர்களுங்கூடத் தான் கூறும் விஷயங்களை உல்லாசமாகக் கேட்டுப் பொருள் தெரிந்து கொள்ளும்படியாகவுள்ள மிகவும் எளிய நடையில் பிரசங்கம் செய்யவேண்டியதுதான் அவன் கடமை. அந்நாட்டிலே இப்படியாகப் பெரியார்களுக்கும் சீமான்களுக்கும் வயதானவர்களுக்கும் என்று தனித்தனியே பிரசங்கங்கள் நிகழ்த்தப்படுகின்றன. அதுபோலவே சிறுவர்சிறுமிகளுக்கு என்றும் பலவகையான பிரசங்கங்களும் அங்கே நிகழ்த்தப்பட்டு வருகின்றன. கிறிஸ்துமஸ் காலத்திலே புதுமாதிரி எஞ்ஜின்களைப்பற்றியும், டார்பிடோக்களைப் பற்றியும், ஏரோப்ளேன்களைப் பற்றியும் அழகழகான சின்னஞ் சிறிய மாதிரிகளைக் கண்முன்னே வைத்துக் காட்டி அவர்களுக்குப் பொருள் விளங்கும்படியாக எளிய நடையில் பெரியோர்களைக் கொண்டு பிரசங்கங்கள் செய்விக்கின்றனர். இவ்வகையான பிரசங்கங்கள் சிறுவர்களின் பொருட்டாகவே முக்கியமாய் நடத்தப்படினும் அங்குவந்து பிரசங்கங்களைக் கேட்போரில் சிலர் தள்ளாடும் கிழவர்களாயிருப்பார்கள்; அவர்களிற் சிலருக்கு இரண்டாவது முறை பாலியம் திரும்ப வந்துவிட்டதென்றுகூடக் கூறலாம்.

இன்று இங்கே பிரசங்கம் செய்யவேண்டும் என்று எனக்குக் கட்டளை பிறந்தபோது, லண்டன்மாநகரிலுள்ள அப் பெரிய சபையே என் நினைவுக்கு வந்தது. அப்பேர்ப்பட்ட பெரிய சபையை நாமும் ஒருவாறு ‘குருவிக் கேற்ற ராமேச்சுவரம்’ என்றபடியாக நம்முடைய சிறுமைக்குத் தக்கபடி பின்பற்றி நடந்துவரலாம். இக் காலத்திலே உலகெங்கணும் விந்தைவிந்தையான ஆராய்ச்சி விஷயங்கள் நூதனமாகக் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. அத் துறைகளிலேயே இருந்து பாடுபட்டுவரும் விஞ்ஞான சாஸ்திரிகள் கூட இவற்றை யெல்லாம் அப்போதைக்கப்போது அறிந்து

கொள்ள முடியாமலிருக்கிறது என்றால் பாமரர்களைப் பற்றிக் கேட்பானேன்? அவற்றை ஊன்றிப் படித்து அறிந்துகொள்ளுதற்குச் செலவிடவேண்டிய நேரங்கூடப் பாமரர்களுக்குக் கிடைப்பது அரிது. ஆதலால் அவ் விஷயங்களைப் பற்றி நன்கு அறிந்தவர்களை அழைத்துப் பிரசங்கங்கள் செய்யச் சொல்லி, அப் பிரசங்கங்களைக் கேட்டு, அவற்றை அறிந்துகொள்ளுவதுதான் எளிதான முறை. சிறு முயற்சிசெய்து பெரும்பயனைப் பெறும் வழி அது ஒன்றுதான். இவ் விஷயங்களை அறிந்துகொள்ளாமல் இருப்பதும் அவ்வளவு பொருத்தமாக இராது. பண்டைக்காலக் கொள்கைகளை மட்டிலும் கைக்கொண்டு தற்காலத்திலே வாழ்வது முற்றிலும் முடியாத காரியம்.

இன்று நான் டாக்கிகளைப்பற்றிப் பேசவேண்டுமென்ற கட்டளையைப் பெற்றிருக்கிறேன். நான் டாக்கிகளை நடத்தும் தொழிலாளி அல்ல; அவை எவ்வாறு காட்டப்படுகின்றன என்பதைப் பற்றி எனக்கு நேரில் சிறந்த பழக்கம் கிடையாது; நான் அடிக்கடி டாக்கிகளுக்குப் போவதும் இல்லை. ஆதலால் நான் சொல்லுவதெல்லாம் டாக்கிகள் எவ்வாறு விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு நிகழ்த்தப்படுகின்றன என்பது தானே தவிர வேறல்ல. டாக்கித் தொழிலானது விஞ்ஞான சாஸ்திரங்களைத் துணையாக உடையது. அவற்றின் மூலமாய் மட்டிலுமே அறிந்துகொள்ளக்கூடிய பற்பல பெரிய உண்மைகளையும் ஆராய்ச்சிப் பலன்களையும் அது ஆதாரமாக உடையது. ஆதலால் அவற்றைப்பற்றி மட்டிலும் எனக்குத் தெரிந்த அளவிலே சிற்சில விஷயங்களை உங்களுக்குச் சிறிது கூறுகிறேன்.

டாக்கியின் இரகசியந்தான் என்ன? நாம் எல்லாரும், பேசாத ஊமைச் சினிமாவைப் பன்முறை பார்த்திருக்கிறோமல்லவா? அத்தகைய காட்சியானது தனது முழுவளர்ச்சியையும் பெற்றுவிட்டது; அது மிகவும் திருந்திய செவ்விய முறையில் நடத்தப்பட்டு வருகிறது. ஆதலால்தான் அது நமக்கு அவ்வளவு இன்பத்தை ஊட்டுகிறது. அதில் யாதொரு குறையும் இருப்பதாகவே நாம் எண்ணுவதில்லை. சிற்சிலவேளைகளில் அதில் நாம் காணும் காட்சியானது நமது மனத்தை முற்றிலும் கவர்ந்து உருக்கி, நமது கண்களில் நீர்ததும்பி வழிந்தோடச் செய்கிறது. நம்மை வருத்துவதற்கு உலகத்தில் மெய்யாக நாள்தோறும் நிகழ்ந்துவரும் உண்மைத் துயரங்கள் போதாவோ? பொய்யாக நடித்துக் காட்டும் சினிமாவிலும் இன்னும் வேறு துயரங்களைக் கண்டு நாம் வருந்த வேண்டுமோ! 'நாம் காணும் காட்சிகள் மெய்யா, பொய்யா?

உண்மையா ? சித்திரமா ?' என்பதைக்கூட நாம் அச்சமயங்களில் உணருவதில்லை. அவற்றைக் கண்டு நாம் வருந்துவது உண்மை; நமது மனோவியாகூலமும் உண்மை. அவ்வளவு நேர்த்தியாக ஊமைச் சினிமாவில் நடித்துக் காட்டப்பட்டிருக்கிறது அக் காட்சி. அதை யாதொரு விதமாகவும் குறை கூறுவது இயலாததுதான் அல்லவா ?

ஆயினும் சிற்சில வேளைகளில் அக்காட்சியில் ஏதோ ஒரு குறை இருப்பதாக நமக்குத் தோன்றுகிறது. 'ஆகா ! இவ்வளவு அழகான காட்சியில் நமது கண்முன் வருவோர், நமக்குக் காது கேட்கும்படி பேசினால் இன்னும் எவ்வளவு நேர்த்தியாயிருக்கும் !' என்று நாம் சிற்சில வேளைகளில் எண்ணத்தான் எண்ணுகிறோம். மனிதரது குரலிலும் அக்குரலின் வசீகரத் தன்மையிலும் நாம் அவ்வளவு ஈடுபட்டிருக்கிறோம். அது நமது இன்பத்தை அதிகப்படுத்துவதற்கு உரிய ஓர் நற்சாதனமாய் இருந்துவருகிறது. அதனால்தான் 'சினிமாவோடு அதையும் பொருத்திவிட்டால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' என்ற நினைப்பு நமக்கு உண்டாகிறது. நமக்கு முன்னிலையில் நிகழ்வதாகத் தோன்றும் அக்காட்சியானது உண்மையாகவே நிகழத்தான் நிகழ்கின்றது என்னும் எண்ணத்தை நாம் கொள்ளுவதற்குக் குரலானது மிகவும் இன்றியமையாத சாதனமாயிருக்கும். குறை இன்னதென்று அறிந்து உரிய உபாயங்களால் அதை நீக்க முயலுதல்தான் பௌதிக சாஸ்திரி உலகத்துக்குச் செய்து கொடுக்கவேண்டிய உதவி. பிறவி ஊமையைப் பேசச் செய்வதை ஒப்பது, 'சினிமாவுக்குக் குரல் அளிப்பது எப்படி ?' என்னும் ஆராய்ச்சி. இவ் வரிய விஷயத்தைத் தம் தலைமேற்கொண்டு, இதற்கு ஒரு விடையளிக்கும் பொருட்டுப் பல்வேறு வகையான ஆராய்ச்சிகளை எல்லாம் அறிவாளர் செய்யத் தொடங்கினர்.

"இதில் என்ன கஷ்டம் இருக்கக்கூடும்? இது மிகவும் எளிது தானே ? இதைப் பற்றிச் சிரமம் எடுப்பானேன் ? கிராமபோன் இல்லையா ? நடர்கள் நாடகத்தை நடித்துக்காட்டி வரும்போது அவர்களைப் படம் பிடிக்கிறார்கள் அல்லவா ? அதே சமயத்தில் அவர்கள் பேசுவதையும் கிராமபோன் ரிகார்டில் எடுத்துவிடுவது தானே ? பிறகு சினிமாப் படத்தை விளக்கின் வழியாகக் காட்டும் போது கிராமபோன் ரிகார்டையும் அதே சமயத்தில் கிராமபோன் பெட்டியில் வைத்து வாசிக்கச் செய்துவிட்டால் நமக்குப் படமும் பேச்சும் கிடைத்துவிடாவா? இது எளிதல்லவா?" என்று சிலர் கேட்கலாம்; இவ்வாறுதான் நடக்கிறது என்று அநேகர் எண்ணியும் வருகிறார்கள்.

இதைப் பார்த்தால் இலேசாகத்தானே தோற்றுகிறது ! சற்றுச் சிறிய அளவிலேயாயினும் கிராமபோனனது பேச்சுக் குரலைக் கூடிய வரை தெளிவாகவே பிரதிபலிக்கிறது. பேசுவோர் குரல் அதிக மாக மாறுபடுவதும் இல்லை ; அதிகம் குறைவதும் இல்லை. இரண்டு மூன்று பேர்களாகச் சேர்ந்து ஒரு சிறிய அறையிலே பேசினுலும் சரி, அல்லது பாடினுலும் சரி, கிராமபோனனது அதை அநேகமாக ஒழுங்காகவே திரும்ப ஒப்பித்து விடுகிறது. ஆனல் இந்தப்படி கிராமபோன் பிரதிபலிக்கும் குரலை ஒரு பெருங் கூட்டத்துக்குக் கேட்கும்படியாகச் செய்வது மிகவும் கஷ்டமான காரியம். சிறு குரலை உரத்த குரலாகக் குணவேறுபாடுகள் பிற ஒன்றும் இன்றிப் பெருக்க வேண்டியிருக்கிறது. இது தான் முதல் கஷ்டம்.

இரண்டாவதாகவுள்ள கஷ்டம் என்ன என்றுல், விளக்கின் உதவியால் காட்டப்படும் படமும் கிராமபோனின் உதவியால் கிடைக்கும் குரலும் ஓரே அளவான, சமமான வேகத்தோடு செல்லாவிட்டால் நடிக்கும் காட்சியும் பேசும் பேச்சும் ஒத்து அமையாமற் போய்விடும். இவ் விரண்டும் கால அளவிலே இம்மிகூட மாறுபடாமல் ஒத்திருப்பது அத்தியாவசியமாகும். இவ் விரண்டுக்கும் கால ஒற்றுமையானது சம்பூர்ணமாக இருக்கவேண்டும். அல்ப சொல்பம் காலபேதம் இருந்தாலும் படம் வேறு பேச்சுவேருகவும், குரல் வேறு காட்சி வேருகவும் ஆகிவிடும். சினிமாக் காட்சிகளைப் பார்க்கப்போகும் நாம் எல்லாம் இதைக் கூர்ந்து கவனிப்போம் அல்லவா ? 'இது மிகவும் சிரமமான காரியமாயிற்றே, இவ்வளவேனும் அவர்கள் நமக்குக் காட்டுகிருர்களே, இவ்வாருன ஒற்றுமை இல்லாவிடில் போனல் போகிறது' என்று நாம் விட்டுவிடமாட்டோம் என்பது உறுதி. அப்படி வேறுபட்டால் அக் காட்சி நமக்குப் பூரணமான இன்பத்தைத் தராது. ஆகையால் நாம் அதைக் குறைகூறுவோம் ; நிச்சயமாய் அதிருப்தியும் அடைவோம்.

முதன் முதலில் இவ்வாருன காட்சிகளைத்தான் காட்டி வந்தனர். கிராமபோனைத் துணையாகக்கொண்ட சினிமாவேதான் சிறிது காலம் டாக்கீ என வழங்கிற்று. இது ஜனங்களுக்குத் திருப்தியாயில்லை என்பதைக் கண்டுகொண்டபின் இம் முறையைக் கையாளுவதை நிறுத்திவிட்டனர்.

இதற்கிடையில் ஆராய்ச்சிகள் மேன்மேலும் நடத்தப்பட்டு வந்தன. நூதனமான விஷயங்கள் கண்டு பிடிக்கப்பட்டன. அவற்றுள் ஒன்று என்னவென்றுல், ஒயர்லெஸ் எனப்படும் கம்பியில்லாத் தந்தி வேலையில் உபயோகிக்கப்படும் தேர்மையானிக் வால்வ் என்பது. (படம், 1, 2, 3, 4, 5, 6, 7.) இதைப் பார்த்தால்







படம் 2.

படம் 1.







படம் 4.

படம் 3.

தெர்மையானிக் வால்வுகள்.



படம் 5.




படம் 6.

மின்சார விளக்கின் பல்பைப் போலத் தோன்றும். இதன் உதவியைக் கொண்டு 12500 மைல் தூரம் வரையிலுள்ள பிரதேசங்களோடு கம்பியில்லாத டெலிபோன் மூலமாய்ப் பேச முடியும். பேச்சுக் குரலை அவ்வளவு உண்மையாயும் ஸ்பஷ்டமாயும் அது பிரதிபலிக்கும். இப்பூமியிலே ஒருவனை மற்றொருவனிடமிருந்து எவ்வளவு தூரம் பிரித்துவைத்தாலும் 12500 மைலுக்கு மேல் பிரிப்பது என்பது முற்றிலும் முடியாத காரியம். ஏனெனில் அந்தத்




படம் 7.
தேர்மையானிக் வால்வுகள்.

தூர அளவானது பூமியின் சுற்றளவிலே நேர்பாதி அள வாகும். பூமி உருண்டை வடிவமுள்ளதாய் இருப்பதால் ஒரு வனை ஒரு புறமாக 12500 மைலுக்கு அப்பாலுள்ள தூரத்திலே கொண்டு வைத்தால் அவன் மற்றொரு புறத்தின் வழி கணக்கிடும் போது 12500 மைலுக்குள்ளே வந்துவிடுவான். மேற்கூறிய தெர் மையானிக் வால்வின் உதவியைக் கொண்டு வெகு தூரத்துக்கு அப் பாலுள்ள ஒலியையும் பக்கத்திலிருந்து வரும் ஒலியைப் போலவே மிகவும் தெளிவாகக் கேட்கச் செய்யமுடியும். எவ்வளவு மெல்லிய சிறிய ஒலியையும் வேண்டுமளவு உரத்த பேரொலியாக அதைக் கொண்டு பெருக்கிக் கொள்ளலாம். ஒருவனது நெஞ்சுத்துடிப்பின் ஒலியை ஒருபெரும் சபையில் கூடியிருக்கும் திரள்திரளான ஜனங் கள் அனைவருக்கும் ஒருங்கே கேட்கும்படி செய்யலாம். இயற்கை யாகப் பிறக்கும் ஓர் ஒலியைச் சிறிதும் குணமாறுபாடின்றி அதன் இயல்பு மாருதபடியே பெருக்கவல்ல வன்மையை உடையது இச் சின்னஞ்சிறு கருவி. பெரிதான வெட்ட வெளியிடங்களில் கிராம போனனது உதவாது போகிறதென்பதை அறிந்து கொண்டதும் அக்குறையை நீக்க முயன்று, அதன் பொருட்டு இக்கருவியை உப யோகித்து வருகின்றனர்.

இரண்டாவதாக உள்ள கஷ்டம் கால ஒற்றுமை இல்லாததால், அதாவது காலபேதத்தால், ஏற்படுகிறது என்று கூறினேம். இதை நிவர்த்திக்கும் பொருட்டுப் பலர் மும்முரமாக வேலை செய்து வந்த னர்; மனித அறிவின் தீக்ஷண்ணியத்தால் இதை மீண்டும் மீண்டும் தாக்கி இதற்கு ஒரு பரிகாரம் தேடிக்கொள்ள முயன்றனர். கண் காட்சியைப் படம் பிடிக்கும்போதே, அதே சமயத்தில் கிராமபோன் ரிகார்டையும் தயார் செய்துகொண்டனர். அவ்வாறு செய்யும் போது கிராமபோன் ரிகார்டில் இலேசாகப் பதிந்துள்ள ஊசிக் கோடுகளை மிகவும் ஆழமாக்கினர். அதனல் அந்தப் பள்ளத்தின் வழியாக ஊசி ஓடும்போது சிற்றொலி பேரொலியாக மாற்றிப் பிரதி பலிக்கப்பட்டது. இவ்வாறு திருத்தப்பட்ட கிராமபோனனது எவ்வளவு பெரிய சபையாயிருந்தாலும் சபையிலுள்ளோர் அனை வருக்கும் எளிதில் காது கேட்கும்படி அவ்வளவு உரத்தகுரலை உடையதாய் இருக்கும். கிராமபோன் தட்டைச் சுழலச்செய்யும் மோட்டார் யந்திரத்தைக் கொண்டே சித்திரத்தைக் காட்டும் பில்ம் சுருளையும் (படச்சுருளையும்) சுழற்றும்படி செய்து வந்தனர். அதனல் இவ்விரண்டுக்கும் காலஒற்றுமை (காலசாமியம்) இருக்கும்

படி செய்துவர முயன்றனர் (படம் 8). இப்பொழுதும் சிற்சில டாக்கிகளில் இம்முறையை அநுஷ்டித்து வருகின்றனர். ஆனால்



படம் 8.

கிராமபோனையும் சினிமாவையும் ஒன்றாகப் பொருத்தி உண்டாக்கிய டாக்கீ.

இம்முறையானது அவ்வளவு சௌகரியமானதாக இல்லை. இதைக் கையாளும்போது பெரும் தொந்தரவு ஏற்படக்கூடும். சினிமா நடக்கும்போது சிற்சில வேளைகளில் பிலிம் சுருளானது (படச்சுருளானது) அறுந்துவிடும். சினிமாவுக்குப் போய் அனுபவமுள்ளவர் யாவரும் இதை நன்கு அறிவர். படம் ஒழுங்காய் அழகாய்த் திரையில் தோன்றிக் கொண்டிருக்கும் போதே திடீரென்று மின்னல் மாதிரிப் பளிச்சுப்பளிச் சென்று வெள்ளொளி தோன்றித் திரையில் படம் ஒன்றும் இல்லாது போய்விடும். அப்பொழுது வெறும் வெள்ளை வெளிச்சம் மட்டிலும் திரையின் மீது காணப்படும். இவ்வாறு வெள்ளை வெளிச்சம் தோன்றும்போதெல்லாம் படச் சுருள் அறுந்துவிட்டது என்பதை நாம் அறிவோம். கிராமபோனைத் துணையாகக் கொண்டு அதன் உதவியால் காலசாமியத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கும் காட்சிகளில் இவ்வாறு படச்சுருளானது அறுந்துபோக நேரிடும்போது கண்காட்சி நின்று போகும்; ஆனால் கிராமபோன் மட்டிலும் நில்லாது ஓடிக்கொண்டு தானிருக்கும். அதைத் தனியாக நிறுத்திய பிற்பாடுதான் அதுவும் நிற்கும். அதை நிறுத்திப் படத்தைச் சீர்திருத்தி மறுபடியும் காட்சியைத்

தொடங்கும்போது படமும் குரலும் ஒத்திருக்கும்படி இரண்டையும் சமப்படுத்தி வைப்பது அசாத்தியமான காரியம் என்றே சொல்லவேண்டும். நமது சென்னையிலுள்ள எல்பின்ஸ்டன் காட்சிச் சாலையில் மிக நெருங்கிய காலசாமியம் வேண்டாத விடத்து மட்டிலும் இம் முறையைக் கையாளுகின்றனர். காட்சியானது படச்சுருளாலும் பாட்டும் பேச்சும் அதனோடு பிணைக்கப்பட்ட கிராமபோனாலும் வெளியிடப்பட்டு வருகின்றன. கிராமபோன் ரிகார்டினின்று வெளிவரும் குரலைப் பெருக்கி அது யாவர்க்கும் கேட்கும்படி செய்யப்படுகிறது. மேலே சொன்னபடி இதிலுள்ள முக்கியமான தொந்தரவு என்னவெனில், படச்சுருள் அறுந்துபோனால், மீண்டும் காட்சியைத் தொடங்கும்போது காட்சியும் குரலும் ஒத்திருக்கும்படி செய்வது முடியாதது என்பதுதான்.

இதைச் சரிப்படுத்துவதற்கு ஓரே ஒரு வழிதான் உண்டு. அதாவது ஒலியையும் உருவத்தையும் ஓரே சமயத்திலே ஓரே படத்திலே படியச் செய்வதுதான் உசிதமான சாஸ்திரீய முறை. அப்பொழுதுதான் படம் அறுந்து காட்சி தோன்றாது நிற்கும்போது ஒலியும் கேட்காது நின்றுவிடும். திரும்பிப் படத்தைக் காட்டும்போது அறுந்ததால் விட்டுப்போன காட்சியின் அளவும் ஒலியின் அளவும் மிகச் சிறியனவாய்த்தாம் இருப்பன; ஆதலால் அவை விட்டுப்போயின என்பதுகூட நமக்குத் தோன்றாது. இந்த ஏற்பாடு, சொல்லுவதற்கு என்னவோ எளிதாகத்தான் இருக்கிறது; ஏடுகளிலும் புத்தகங்களிலும் எழுதி வைத்துக் கொள்ளும் அநேக விஷயங்களைப் போல் இதையும் அநுஷ்டிப்பது மிகவும் கஷ்டமான காரியம். 1925-ம் வருஷத்திலே இந்த நிலைமையில்தான் இத்தொழில் இருந்தது. இதை மாற்றிக்கொள்ள வழிதெரிந்தது; வகை தெரியவில்லை. அக் காலத்திலே புதிய புதிய பிலிம்களைச் செய்யும் தொழிலிலே மும்முரமான போட்டி ஏற்பட்டிருந்தது. அதுவரை ஈடில்லாத அமெரிக்காவோடு உலகிலுள்ள பிறநாடுகள் அப்பொழுது மும்முரமாய்ப் போட்டி போடத் தொடங்கின. நாம் கடைசிவரையில் எண்ணிப் பார்த்தால், சாஸ்திரத்தின் மேலும் அறிவின்மேலுமுள்ள பற்று மட்டிலும் இந்த உலகத்திலே அறிவையும் ஆராய்ச்சியையும் பெருக்குவதற்குத் தூண்டுகோலாக இருப்பதில்லை. இதைவிட முக்கியமான தூண்டுகோலாக இருந்துவருவது பொன்னின் மீதுள்ள ஆசையே. இந்த ஆசை தூண்ட அமெரிக்கர் மிகவும் சுறுசுறுப்பாயும் மும்முரமாயும் வேலைசெய்தனர்; மகாயுத்தத்தில் கலந்ததால் மற்றத் துறைகளை அதிகம் கவனிக்க முடியாத நிலையில் இருந்த, பிரிட்டிஷார், ஜெர்மனியர், பிரெஞ்சு

நாட்டார் முதலியோரைச் சினிமாப்போரில் அவர் எளிதில் வென்று விட்டனர். அமெரிக்க நாட்டினருக்கு மகாயுத்தம் என்னும் இட் பெரும் கவலை இல்லாதிருந்தது. ஆதலால் அவர்கள் இயற்றிய பிலிம்கள் எல்லாப் பிலிம்களுக்கும் மேலாகத் தலைசிறந்து விளங்கின. பிறகு, பிற தேசத்தாரெல்லாரும் தாம் இழந்துவிட்ட இத்தகைய லாபகரமான வியாபாரத்தை எப்படியாவது கைப்பற்றிக்கொள்ள வேண்டும் என்னும் ஆசையில் ஈடுபட்டனர். அப்பொழுது சினிமாவுக்கு எதிரிடையாக வந்திருக்கும் டாக்கி என்னும் புத்தப் புதிய துறைதான் மிகவும் சௌகரியமான துறை என்று அவர்களுக் குத் தோன்றிற்று. 'இந்த டாக்கியை அபிவிருத்தி செய்து பார்த்தாலென்ன? இது நூதனமானது. ஆகையால் நாகரிக உலகம் நமது வியாபார வலைக்குள் உடனே அகப்பட்டுவிடும்' என்று அவர்கள் எண்ணினர்கள். ஆகவே, அவர்கள் அனைவரும் இந்தத் தொழிலைப்பற்றி மும்முரமாக முழுமனத்துடன் ஏகாக்கிர சித்தத் துடன் வேலை செய்யத் தொடங்கினர். ஒயர்லெஸ் கம்பெனிகளுள் க்ரேட் வெஸ்டேர்ன் எலக்ட்ரிக் கம்பெனி என்பது மிகச் சிறந்த தொன்று. அக் கம்பெனியாரும் இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டனர். அவர்கள் முக்கியமாய் ஒரே ஒரு வழியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு அதை எப்படிச் சீர்திருத்திச் செம்மைப் படுத்துவது என் பதைக் கூர்ந்து ஆராய்ந்துவந்தார்கள். அதற்கு உரிய சோதனைகளை எல்லாம் நடத்திப் பார்த்தார்கள். ஒரே படத்தில் காட்சியையும் அதற்குரிய ஒலியையும் எப்படி அமையும்படி செய்யலாம் என் பதைக் கண்டுபிடிப்பதே அவர்கள் செய்து வந்த அந்த ஆராய்ச்சி. இவ்வாறு செய்துவிட்டால் குரலைப்பற்றியும் காட்சியைப் பற்றியும் வெவ்வேருகக் கவலைப்படவேண்டியதில்லை; இரண்டு கஷ்டங்களும் ஒரே வழியின் மூலமாய் நிவர்த்தியாய்விடும் என்று அவர்கள் கருதி ஞர்கள்.

ஆனல் இதில் பின்னெரு தொந்தரவு ஏற்பட்டது. ஒலியைக் கிராமபோன் தட்டில் அப்படியப்படியே ஊசி முனையால் பதிப் பிப்பதுதான் முன்னல் அவர் அறிந்து கையாண்டு வந்த முறை. இது சற்று எளிதாகவே இருந்துவந்தது. படத்தைக் காட்டும் பிலிம் சுருளோ மிகவும் மெல்லியது; ஒடிந்து போகக்கூடிய செல்லு லாய்டினல் ஆனது. அதன் மீது கூரிய வன்மையான ஊசி யின் முனையைக் கொண்டு ஒன்றையும் வரைய முடியாது. வரைய முயன்றல் செல்லுலாய்டு தாங்காது; கிழிந்து போகும். ஆதலால் ஒலியைப் பதிப்பதற்குப் பழைய முறை உதவாது போயிற்று. எனவே, உபயோகிக்கும் பொருளாகிய செல்லுலாய்

டுக்கு ஏற்றதாயுள்ள புதிய முறை ஒன்றைக் கண்டுபிடிப்பது அவசியமாயிற்று. அதுதான் படம் பிடிக்கும் முறை. 'ஒலியைப் படம் பிடிப்பது எப்படி ?' என்பது தான் பிதிர். இதை விண்டு இதற்கு விடையளித்ததுதான் விஞ்ஞான சாஸ்திரம் செய்த உதவி. அதனுல் தான் தற்காலத்து டாக்கிக்கு விஞ்ஞான சாஸ்திரம் ஆதாரம் என்று சொன்னேன்.

(தொடரும்)

---



கலிலியோ.

(அடுத்த பக்கம் பார்க்க.)

# கலிலியோ

முத்து ஐயங்கார்

இயற்கையில் நடப்பன வெல்லாம் சில விதிகளுக்குட்பட்டு நடக்கின்றன. அவ்விதிகளை ஆராய்ந்து தொகுப்பதே சாஸ்திரத்தின் நோக்கம். சாஸ்திரவளர்ச்சிக்கு இரு முறைகள் இன்றியமையாதன. சில பொருள்களை எடுத்துச் சில துறைகளில் அவைகளின் குண நடத்தைகளை ஆராயவேண்டும். இதை, ஆராய்ச்சி அல்லது சோதனை (Experiment) எனக் கூறலாம். ஆராய்ச்சியில் அறிந்ததைக் கொண்டு நாம் சோதிக்காத பொருள்களின் தன்மை, குணம் அல்லது நடத்தைகளைப் பற்றிச் சில பொது விதிகளை ஊகிக்கலாம். இதை ஊகம் (Deduction) எனக் கூறலாம். ஆகவே, ஆராய்ச்சி சாஸ்திரம் (Experimental Science), ஊக சாஸ்திரம் (Deductive Science) என இருபகுப்பாகச் சாஸ்திரத்தைப் பிரிக்கலாம். மேனாட்டு அறிஞர்களிற் சிலர் ஆராய்ச்சியில் கைதேர்ந்தவர்; சிலர் ஊகத்தில் நிபுணர்; சிலர் இரண்டிலும் வல்லவர்.

கலிலியோ என்பவர் ஆராய்ச்சியாளர்களில் மிகவும் உயர்ந்த பதவிக்கு உரியவர். கி.பி. 1564-ம் ஆண்டில் இத்தாலி நாட்டில் 'பைசா' (Pisa) என்னும் நகரில் இவர் பிறந்தார். இவரது தந்தை மிக்க அறிஞரெனத் தெரிகிறது. இயற்கைப் பொருள் சாஸ்திரத்தில் அவருக்குச் சிறிது ஞானம் உண்டு; அப்படிப்பில் சிறிதும் பொருள் லாபமில்லாததால், தம் மகனை ஒரு வியாபாரியாக்க எண்ணினர்; வயது வந்ததும் ஒரு மடத்தைச் சார்ந்த பள்ளியில் கல்வி பயில விட்டார். அங்கு மிக்க புத்திமான் எனப் பெயரெடுத்த கலிலியோ சங்கீதத்திலும் இலக்கியத்திலும் வல்லவரானர். இதையறிந்த தந்தை, தம் எண்ணத்தை ஒருவாறு மாற்றி, மகனைப் பைசா சர்வகலாசாலைக்கு அனுப்பி, பொருள் லாபமுடைய வைத்தியத் தொழிலைக் கற்கும்படி உத்திரவிட்டார்.

ஒரு நாள் பைசாக் கோவிலில் கடவுளைத் துதிக்கும் பொழுது, கயிற்றில் தொங்கி ஆடிய ஒரு விளக்கு, கலிலியோவின் கவனத்தை இழுத்தது. ஊசலைப்போல் ஆடிய அவ்விளக்கு ஒரு கோடியிலிருந்து மறுகோடிக்கு வரப் பிடிக்கும் நேரத்தைத் தம் கைநாடித் துடிப்பின் உதவிகொண்டு கணக்கிட்டார். விளக்கின் ஆட்டம்

மெல்லமெல்லக் குறைந்தாலும் இக்கால அளவு குறையாமலிருந்தது. வீடுசென்று ஒரு நுனியில் ஒரு கனத்த பொருளைக் கட்டித் தொங்கவிட்டார். அதை ஆட்டி விட்டு, கோவிலில் கண்டதை மீண்டும் ஆராய்ந்து அவ்வுண்மையை உறுதிப் படுத்தினர். இவர் கண்ட இவ்வுண்மையை அடிப்படையாகக்கொண்டே இக்காலத்தில் பெண்டுலம் (Pendulum) உடைய கடிகாரங்கள் அமைக்கப் பெற்றுள்ளன.

கலிலியோவின் குடும்பத்திற்கு நண்பரான ஒரு கணித வித்துவான் பைசா நகரில் வந்தார். அவரிடமிருந்து கலிலியோ கணிதம் கற்ருர்; யூக்லிட் என்பவருடைய க்ஷேத்ரகணித சாஸ்திரமும், ஆர்க்கிமிடீஸ் கண்ட உண்மைகளும் அடங்கிய புத்தகங்களைப் படித்தார். வைத்தியத்தில் இவருக்குப் புத்தி செல்லவில்லை. இதைக் கேட்ட தந்தை அவரைத் திருப்ப மிக முயன்றும் பயனில்லாமல் போயிற்று. முடிவில் அவரை இச்சைப்படி விட்டு விட்டார். இருபத்தாரும் வயதில் பைசா நகரத்துச் சர்வகலாசாலைக் கணித வித்துவானுகக் கலிலியோ நியமிக்கப்பட்டார்.

பொருள்களை அந்தரத்தில் விட்டால் அவை பூமியில் விழுகின்றன. ஒரே உயரத்திலிருந்து விடப்பட்ட பல பொருள்கள் ஒரே காலத்தில் பூமியை அடைகின்றனவா அல்லது நிறைக்கு ஏற்ப வெவ்வேறு காலங்களில் விழுகின்றனவா என்னும் கேள்வி கலிலியோவின் மனத்தில் உதித்தது. அதிகக் கனமுள்ளவை விரைவாகவும் குறைந்த கனமுள்ளவை மெல்லவும் பூமியை அடையுமென எல்லோரும் எண்ணியிருந்தனர். பூர்விக கிரேக்க ஞானிகளில் பெயர்பெற்ற அரிஸ்டாடில் (Aristotle) என்பவர் இப்படிச் சொல்லியிருக்கிருர். அவர் கொள்கைகளை அக்காலத்தில் கற்றவர்கள் வேத வாக்காகக் கொண்டிருந்தனர்; இக் கூற்று உண்மைதானு என்பதை ஒருவரும் ஆராயவில்லை.

இதைச் சோதனை செய்து, 'நிறை குறைவாயினும் அதிகமாமாயினும் பொருள்கள் ஒரே காலத்தில் பூமியை அடைகின்றன' என்று கலிலியோ அறிந்து கொண்டார்; இவ்வுண்மையைப் பலருக்கும் காட்ட விரும்பினர். பைசா நகரில் ஒருசாய்ந்த கோபுரமுள்ளது. உலகில் பெயர் பெற்ற ஏழு அதிசயங்களில் இதுவும் ஒன்று. கீழே ஜனங்களை நிறுத்திவிட்டு, அக் கோபுரத்தின் உச்சிக்குக் கலிலியோ ஏறினர்; ஒரு சிறு இரும்புக் குண்டையும் அதைப் போல் நூறுபங்கு நிறையுள்ள வேறொரு குண்டையும் ஒரே காலத்தில் உச்சியிலிருந்து கீழே விட்டார். இரு குண்டுகளும் ஒரே காலத்தில் பூமியை அடைந்து அரிஸ்டாடிலின் கூற்றைப் பொய்ப்பித்தன.

ஆனல் பஞ்சைப் போன்ற பொருள்கள் கீழே விழக் காலமாகிறதே என்றால், வாயு இல்லாத இடத்தில் எப்பொருளும் ஒரே காலத்தில் தான் விழுமென்பதும் நிரூபிக்கலாம். அரிஸ்டாடிலின் ஒரு கொள்கையை உண்மையன்று எனக் காட்டியதே காரணமாக அனேகர் கலிலியோவை வெறுத்தனர். பழைய புத்தகங்களில் கூறியிருப்பதெல்லாம் அவர்களுக்கு வேதம். அவற்றைக் கணமேனும் சந்தேகித்தால்கூட ஒருவன் பாபியாகி விடுகிறான். அத்தகைய விரோதிகள் பெருகிய காரணத்தால் கணித வித்துவான் பதவியைக் கலிலியோ விட நேர்ந்தது. வெனீஸ் சமஸ்தானத்தைச் சார்ந்த பாடுவா (Padua) என்னும் நகரில் ஒரு வித்துவான் பதவி கிடைத்தது. அங்கு நல்ல கீர்த்தியுடன் இவர் ஆறு ஆண்டுகள் கழித்தார்.

கலிலியோவின் முக்கிய ஆராய்ச்சிகள் வான சாஸ்திரத்தைப் பற்றியவை. முன் காலத்தில் டாலமி என்றொரு வான சாஸ்திரி இருந்தார். வானத்தின் அமைப்பைப் பற்றி அவர் பின்வருமாறு கூறிச் சென்றார்: "பூமிக்கு வெகு தூரத்திற்கப்பால் ஒன்றின்பின் ஒன்றாய்ப் பூமியைச் சூழ்ந்து கொண்டு எட்டுக் கோளங்கள் உள்ளன. இவைகளில் முதல் ஏழு கோளங்களில் முறையே சூரியன், சந்திரன் முதலிய ஏழு கிரகங்களும், எட்டாவது கோளத்தில் எல்லா நக்ஷத்திரங்களும் இருக்கின்றன. இக் கோளங்கள் வெவ்வேறு வேகத்துடன் சுழல்வதால், கிரக நக்ஷத்திரங்களின் வேக மாறுபாடுகள் ஏற்படுகின்றன." வெகு காலமாக மக்கள் இக் கொள்கையை நம்பி வந்தனர். கிருஸ்தவ மதத்திற்கே இக் கொள்கை முக்கியமெனச் சிலர் கருதினர். பூமியின் உபயோகத்திற்கும் அழகிற்கும் மேல் சொன்ன கோளங்களைக் கடவுள் படைத்தார் எனவும் வான அமைப்பில் பூமியே பிரதானம் எனவும் ஆசிரியர்கள் போதித்து வந்தனர்.

மேற்சொன்ன டாலமியின் கொள்கைப்படி, கிரகங்களின் எல்லாச் 'சார'ங்களுக்கும் காரணம் விளங்கவில்லை. இச்சமயம் காப்பர்னிகஸ் என்ற ஓர் அறிஞர், பூமிக்குப் பிரதான பதவியில்லையென்றும் சூரியனே நம் அண்டத்திற்குப் பிரதானமென்றும், சூரியன் ஒரு கிரகமல்ல வென்றும், சூரியனைச் சுற்றிச் செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி பூமி ஆகிய இவைகள் சுற்றுகின்றன வென்றும், சந்திரன் பூமியைச் சுற்றுகிறதென்றும் தக்க ஆதாரங்களுடன் காட்டினர். இக் கொள்கைப்படி பூமி தன்னைத் தானே ஒருதரம் சுற்றிக் கொண்டு சூரியனை ஒருதரம் சுற்றுகிறது. தன்னைத் தானே சுற்றும் காலம் ஒரு நாள்; சூரியனைச் சுற்றும் காலம் ஒரு வருஷம்.

இக் கொள்கையை ஐரோப்பா முழுவதிலும் சிலரைத் தவிர வேறு எவரும் ஆதரிக்கவில்லை.

இக் கொள்கையை நம்பியவரும் கலிலியோ காலத்தவருமான கெப்ளர் என்னும் ஒரு பேரறிஞர் சில அறிய உண்மைகளைக் கண்டறிந்தார். கிரகங்கள் சூரியனைச் சுற்றும் பொழுது எத்தகைய வடிவம் வரையப்படுகிறது? மற்றவர் ஆராய்ச்சிகளை வைத்து வெகு காலம் ஊகித்து, கிரகங்கள் வரையும் கோடு சரியான வட்டமன்று என்றும், கோழி முட்டை வடிவம் போன்ற எலிப்ஸ் (ellipse) என்னும் ஒரு வடிவம் என்றும் நிரூபித்தார். தவிர, கிரகங்கள் சூரியனைச் சுற்றிவரும் காலத்திற்கும், வரையும் வடிவத்தின் அளவிற்கும் சம்பந்த மிருக்கிறதென்பதையும் அது இத்தகையது என்பதையும் காட்டினர். ஆயினும் பிடிவாதம் கொண்ட அனேகர் பழைய டாலமியின் வான அமைப்பையே நம்பினர்; காப்பர்னிகஸின் அமைப்பைத் தூஷித்தனர்.

கலிலியோ காப்பர்னிகஸின் அமைப்பை முழுதும் நம்பினர். ஆனால் சில ஆண்டுகளுக்குத் தம் கொள்கையை வெளிக்காட்டவில்லை. பாடுவா நகரம் வந்து ஆறு வருஷங்கள் சென்றபின் வானில் புதிய வால் நக்ஷத்திரன் ஒன்று தோன்றியது. சில நாட்களுக்கு அதன் ஒளி அதிகமாகிப் பின் குறைந்து முடிவில் மறைந்தது. இதைப்பற்றிக் கலிலியோ சில பிரசங்கங்கள் செய்து, இதையே காரணமாகக் கொண்டு டாலமியின் அமைப்பை எதிர்த்துக் காப்பர்னிகஸ் அமைப்பை ஆதரித்துப் பேசினர்.

ஒரு ஹாலந்து நாட்டான் தூரதிருஷ்டிக் கண்ணாடி யொன்று செய்ததாகக் கலிலியோ கேள்வியுற்றார். மூக்குக் கண்ணாடியில் உபயோகப்படும் கண்ணாடிகளால் அது ஆக்கப்பட்டதென அறிந்தார். ஓர் இரவு சிந்தித்துத் தாமும் ஒரு கருவி செய்தார். மூக்குக் கண்ணாடியில் உபயோகப்படுவது தட்டையாயிராமல் இரு புறமும் வளைந்திருக்கும். வளைவுக்குத் தக்கபடி அது பொருளைப் பெரிதாக்கும். அதைப் பூதக்கண்ணாடி என்று கூறலாம். இத்தகைய இரு கண்ணாடிகளை ஓர் தக்க குழலின் நுனிகளில் பொருத்தி அதன் வழி பார்த்தால் தூரத்துப்பொருள் பெரிதாயும் அருகேயும் தெரியும். இதுவே தூரதிருஷ்டிக்கண்ணாடி. இக் கருவி யொன்றைச் செய்த கலிலியோ வானத்திலுள்ள கிரக நக்ஷத்திரங்களை அதைக் கொண்டு நோக்கினர். முதலில் சந்திரனை ஆராய்ந்தார். அவர் செய்த கருவி முப்பது மடங்கு பெரிதாக்கும் தன்மையது. அதன் வழி பார்த்ததில் சந்திரன் மேல் மேடுபள்ளங்கள் தென்பட்டன. பின் வியாழ கிரகத்தை நோக்கினர்; அது பெரிதாகத் தோன்றியது. தவிர,

அதைச் சூழ்ந்து வேறு நான்கு சிறிய கோளங்களும் காணப்பட்டன. இவைகள் வியாழனைச் சுற்றிச் சுற்றி வந்தன. வியாழன் பூமியைப் போல் ஓர் கிரகமானதையால் இச்சிறு கோளங்கள் நம் சந்திரனைப் போன்றவை. ஆகவே வியாழனுக்கு நான்கு சந்திரர்கள் உண்டு. வானத்தில் வேறு இடங்களை நோக்கித் தம் கருவியைத் திருப்பினார். புதிய பல நக்ஷத்திரங்களைக் கண்டார். சில இரட்டையாயிருந்தன. வானத்தில் களங்கமான ஒரு பெரிய வட்டமுண்டு. இதை வெண்பாதை (Milky Way) எனக் கூறுவர். இதை, ஆராய்ந்ததில், களங்கம் வெகு நெருக்கமான நக்ஷத்திரக் கூட்டத்தால் ஏற்பட்டதென்பதை அறிந்தார்.

தாம் கண்ட இவைகளைப் பலருக்கும் காட்டினார். பழைய வைதிகக் கொள்கைகளை இவை தகர்த்தன. அவற்றில் ஆழ்ந்து கிடந்த சில கிணற்றுத் தவளைகள் கடவுள் கொடுத்த தம் கண்களையும் நம்பவில்லை. சிலர் அக்கருவியைக் கொண்டு பார்க்க மறுத்தனர்; சிலர் சந்திரனுடைய அழகிய உருவத்தைக் கெடுத்துவிட்டதாகக் கலிலியோவைத் தூஷித்தனர்!

இவர்கள் வார்த்தைகளை லட்சியஞ் செய்யாது கருவிகொண்டு இவர் சனிகிரகத்தைக் கவனித்தார். அது வெகு நூதனமாகத் தோன்றியது. ஒரே கோளமாக இல்லாமல் அருகே இரண்டு ஒளியுள்ள பொருள்கள் தென்பட்டன. இவருடைய தூரதிருஷ்டிக் கண்ணாடி மிக்க உயர்ந்ததாக இல்லாததால், சனியின் உண்மைத் தோற்றத்தை இவர் அறியவில்லை. இக் காலக் கருவிகள் பொருளை நூற்றுக் கணக்கான மடங்கு பெரிதாக்க வல்லன. இக் கருவியொன்றால் பார்த்தால் சனியைச் சுற்றித் தட்டையான வளையமொன்று சுழலக் காணலாம். பின் வெள்ளியை ஆராய்ந்தார். அக்கிரகம் சந்திரனைப்போல் வளர்வு தேய்வு காட்டிற்று. பழைய டாலமி வானஅமைப்பின்படி இதற்குக் காரணம் கூறமுடியாது. காப்பர்னிகஸின் அமைப்பின்படி இது மிகப் பொருத்த முள்ளதே. கலிலியோவின் ஆராய்ச்சிக்குச் சூரியனும் தப்பவில்லை. சூரிய கோளத்தில் சில கரும்புள்ளிகள் (Sun-spots) தென்பட்டன. மேலும் அப்புள்ளிகள் ஒரே நிலையில் நிற்காமல் தோன்றியும் மறைந்தும் மெதுவாகச் சுழன்றுகொண்டு மிருந்தன. சூரிய கோளத்தில் சில இடங்கள் ஒளிகுன்றியும் உள்ளன என்பதைக் கலிலியோ அறிந்தார்.

ஒன்றின் மேலொன்றாய்க் கண்டுபிடித்த இப்புதிய விஷயங்களைப் பற்றிச் சிந்திக்க அவகாசம் வேண்டுமெனக் கலிலியோ எண்ணினார்.

அவரிடம் பல மாணவர்கள் படித்தனர். அவர்களில் செல்வாக்குள்ள ஒருவருடைய உதவி கொண்டு ப்ளாரன்ஸ் (Florence) நகரில் அதிக அவகாசமும் குறைந்த வேலையுமுள்ள ஒருபதவி சம்பாதித்துப் பாடுவாவை விட்டு அங்குச் சென்றார். முதலில் சுகமாகவே பொழுது போயிற்று; ஆனால் பின் துன்பங்கள் தொடர்ந்தன.

அவர் கண்டறிந்த உண்மைகள் கிருஸ்தவ மதத்திற்கே விரோதமானவை என எண்ணிய அனேகர் அவரைப் பகைத்தனர். கத்தோலிக்க மதத்தலைவரான போப்பிடம் கலிலியோவைப் பற்றி, மதத்திற்கு அபாயமான கொள்கைகளைப் பரப்புகிறாரென்றும், கலிலியோ நாஸ்திகரெனவும் தெரிவித்தனர். உண்மையிலோ நம் அறிஞர் மதப்பற்று மிக உடையவர்; தாம் கண்ட உண்மைகளுக்கும் மதத்திற்கும் யாதொரு தொடர்பு மில்லை என எண்ணியவர். இக் காலம் இவர் வயது எழுபது.

ரோமாபுரியில் போப் தம் பிரதானக் காரியதரிசிகளுடன் ஆலோசித்தார். கலிலியோவை ரோமுக்கு வரச்செய்தார். அவரை விசாரிக்கச் சபை யொன்று நியமித்தார். சபையோர் அவரைப் பல நாட்கள் விசாரித்தனர். முடிவில், தாம் கண்டறிந்தவைகள்யாவும் பொய்யென்று ஒப்பமிட வேண்டுமென்றும் இல்லாவிடில் உயிருடன் நெருப்பில் எரிபடத் தயாராக வேண்டுமென்றும் கலிலியோவிற்கு அறிவித்தனர். அப்பொழுது நம் அறிஞர் வயதாலும் கவலைகளாலும் வாடி யிருந்தார். நண்பர்களும், இவருடைய ஒரே பெண்ணும் கையொப்பம் வைத்துவிட்டு உயிருடன் வெளிவர வேண்டுமென வற்புறுத்தினர். மனமுடைந்த இவர், தாம் கண்டவை யெல்லாம் பொய்யென்று ஒப்பம் வைத்துவிட்டு வெளியேறினர். ஆர்செட்ரி என்னும் ஓர் ஊரில் வீட்டை விட்டு வெளியேறாமல் வசிக்கும்படி சபை உத்தரவிட்டது.

இங்கிருக்கும் பொழுது, பொருள்களின் சலனத்தைப் பற்றி ஒரு புத்தகம் எழுதினர். சில நாட்களில் வயதால் கண்கள் மங்கி விட்டன. அவருடைய மாணவர்களில் சிலரை அவருடனிருக்கப் போப் அநுமதி கொடுத்தார். எழுபத்தெட்டாவது வயதில் ஆவி நீத்துக் கலிலியோ உலகத்துன்பங்களிலிருந்து விடுபட்டார். அவர் காலத்தில் மக்களிடம் பரவியிருந்த அறியாமையாலும் மத வைராக்கியத்தாலும் அவர் பலதுன்பங்களை அடைந்தார்; முக்கியமாக முதுமைக் காலத்தில் வெகு கஷ்டங்களுக்கு இலக்கானர். ஆனல் இப்பொழுது அவரைப் போற்றாதாரில்லை.

# எறும்புகள்

எம். ஏகாம்பரநாதன்

ஓர் எறும்புப் புற்றின் அருகில் சிறிது உடைத்த அரிசியை இறைத்துவிட்டுப் பொறுமையாக எறும்புகளின் நடமாட்டத்தைக் கவனித்தால், சில எறும்புகள் புற்றிலிருந்து வெளி வருவதையும், மற்றும் சில வெளியேயிருந்து உட்செல்லுவதையும், சில எறும்புகள் ஏதோ சமாசாரம் பேசுவதுபோல் தலையை அருகில் வைத்துக்கொண்டு ஸ்பர்சக் கொம்புகளால் ஒன்றற்கொன்று தட்டிக்கொள்ளுவதையும், ஓர் எறும்பு அரிசித் துண்டைக் கண்டவுடன் மற்றவற்றிற்குச் சமாசாரம் தெரிவிப்பதையும், பிறகு ஒவ்வொன்றும் ஒவ்வொரு துணுக்கரிசியை இழுத்துக்கொண்டு புற்றிற்குப் போவதையும், ஓர் எறும்பு தனிமையாக ஒரு துண்டை இழுக்க முடியாதபோது வேறொரு எறும்பு அதன் உதவிக்கு வந்து இரண்டுமாகச் சேர்ந்து அதை இழுப்பதையும், மேடு பள்ளங்களில் அரிசித் துண்டை இழுத்துச் செல்லும்போது முன்பின் பாரங்களைச் சரிப்படுத்திக்கொண்டு போவதையும், ஓர் எறும்பிற்கு ஏதாவது விபத்து நேரிட்டால் இரண்டு எறும்புகள் அதை இழுத்துக்கொண்டு புற்றிற்குள் செல்வதையும் பார்க்கலாம். இவற்றை யெல்லாம் கவனிக்கும்போது தேனீக்களுடைய சமூக வாழ்க்கை ஞாபகத்திற்கு வரலாம். இச் சிறிய எறும்புகளும் சமூக வாழ்க்கைப் பிராணிகளேயாகும்.

தேனீக்களுள் உள்ளதுபோல எறும்புகளுள்ளும் ஐக்கியபத்யம், இராஜரீக ஏற்பாடு, வேலைப் பிரிவுகள், சுயநலமின்மை முதலான குணங்கள் அமைந்துள்ளன. சில எறும்புகளுக்குப் பிராணாபத்து நேரிடினும், சமுதாயத்தின் நன்மையையே முக்கியமாகக் கருதுவது இச்சமூக வாழ்க்கையில் கவனிக்கத் தகுந்தது.

ஓர் புற்றில் ஆண் எறும்புகள், பெண் எறும்புகள், அலிகள் என்று மூன்று சாதிகள் இருக்கின்றன. அலிகள் என்று கூறப்படுபவை ஜனனேந்திரியங்கள் நன்றாக முதிர்ச்சியடையாத ஸ்திரீகளேயாகும். இவ்வலிகளே எறும்பு நகரத்தில் ஊழியக்காரர்கள்; இவற்றிற்கு இறக்கைகள் இல்லை. புற்றிற்கு வெளியே காணும்


யுத்தவீர எறும்பு.

எறும்புகள் அநேகமாக அலிகள்தாம். இவ் வலிகளுள் சில பருத்த தலையுடனும் பலத்த தாடைகளுடனும் இருக்கின்றன; இவைகள் யுத்த வீரர்களாகும்; இவை புற்றைப் பாது காப்பதுடன், எறும்புகள் கூட்டமாக வெளியே செல்லும்போது அவற்றிற்குத் துணையாகச் செல்லும்.

எறும்பின் தேகமானது தலை, மார்பு, உதரம் என்று மூன்று பாகமாகப் பிரிந்து, மார்புப் பாகமானது மெல்லிய காம்பு போன்ற அமைப்பினால் உதரத்துடன் சேர்ந்து இருக்கிறது. தலையில் இரண்டு ஸ்பர்சக் கொம்பு களும், இரண்டு கண் களும், வாயில் இரண்டு தாடை களும், மார்புப்பாகத்தில் மூன்று ஜோடி கால்களும் இருக்கின்றன. இராஜா, இராணி என்று கூறும் ஆண் எறும்புகளுக்கும், பெண் எறும்புகளுக்கும் மட்டும் மார்புப் பாகத்தில் இரண்டு ஜோடி மெல்லிய இறக்கைகள் இருக்கின்றன. ஆனால் இவை வெகு காலம் இருப்பதில்லை. உதர பாகத்தின் அடியில் ஓர் விஷப்பை உண்டு. எறும்பு தன் தாடையினால் இறுகக் கடித்துப் பின்பாகத்தின் வழியாக விஷத்தை அக் காயத்தில் செலுத்தும்.


இராணி எறும்பு.


சாதாரண எறும்பு.

மந்திர சக்தியினால் ஓர் எறும்பின் உருவத்தைக் கொண்டு எறும்பின் நகரத்தினுள்ளே சென்று, அங்கு நடப்பதையும், இருப் பதையும் சற்றுப் பார்ப்போம்: புற்றினுள்ளே விசாலமான ரஸ்தாக் களும், பாதைகளும், குறுக்குப் பாதைகளும், தாழ்வாரங்களும், முற்றங்களும், அறைகளும், களஞ்சியங்களும் இருக்கின்றன. ஆயிரக் கணக்கான எறும்புகள் வெகு சுறுசுறுப்பாகக் குறுக்கும் நெடுக்கு மாக நடமாடித் தங்கள் வேலைகளைச் செய்கின்றன; சில எறும்புகள் ரஸ்தாக்கள் போட்டுக்கொண்டும், சில வீடுகள் கட்டிக்கொண்டும், சில குழந்தைகளைப் போஷித்துக்கொண்டும், சில இராணியாருக்கு ஊழி யம் செய்துகொண்டும் இருக்கின்றன; சில எறும்புகள் தேனீக்

களைப்போல் வெளியிலிருந்து ஆகாரத்தைச் சேகரித்து வருகின்றன; ஆனால் தேனீக்களைப்போல் இவை தேனை மாத்திரம் சேகரிப்பதில்லை. எறும்புகளுக்கு ஒரே விதமான ஆகாரம் என்ற பக்ஷபாதமில்லை; தித்திப்புப் பதார்த்தத்தில் பிரியம் அதிகமாக இருந்தாலும் எல்லாப் பதார்த்தங்களையும் தின்னும். இப்படி ஊழியக்காரர்கள் வேலை செய்யும்போது இராணி யெறும்பு சமுதாய விருத்தியின்பொருட்டு முட்டைக ளிடுகின்றது. தேனீக்களுடைய இராணியைப்போல், எறும்பு ராணிக்கும் சமுதாய விருத்தியே பிரதான வேலையாகும். ஊழியர்கள் தங்கள் சமுதாய விருத்தியை உத்தேசித்தே இராணி யாரை வெகு கவுரவமாகவும் ஆதரவுடனும் நடத்துகின்றன.

இராணி இடும் முட்டைகளைச் சில ஊழியக்காரர்கள் வெகு ஜாக்கிரதையாகச் சிற்றறைகளுக்குக் கொண்டுபோய்ச் சேர்த்து அவற்றிற்கு வேண்டியபடி உஷ்ணமான ஸ்திதியில் அறைகளை வைக்கின்றன. பிறகு இம் முட்டைகளிலிருந்து சிறு எறும்புப் புழுக்கள் வெளி வருகின்றன. தேன் புழுக்களைப் போலவே இப்புழுக்களும் முட்டைகளிலிருந்து வெளியே வந்தவுடன் தாமாக ஆகாரத்தைச் சேகரிக்கவும் உட்கொள்ளவும் கூடிய நிலைமையில் இல்லை. ஆகையால் தாதியர்கள் என்று சொல்லக்கூடிய சில ஊழியர்கள் இப் புழுக்களைப் போஷித்துப் பாதுகாக்கின்றன. முட்டைகளிலிருந்து இக் குழந்தைகள் வெளியே வந்தவுடன், தாமாகவே நடக்கக் காலில் பலமில்லாதபடியால் தாதியர்களே அந்த நிலையில் பாதுகாத்து அவற்றின் வேலைகளைக் காலக்கிரமத்தில் கற்றுக்கொடுக்கின்றன.

இறக்கை யற்ற ஊழியர்கள் இவ்விதம் முட்டைகளிலிருந்து வெளியே வந்து நகரத்தில் வேலை செய்கையில், இராணி இட்ட முட்டைகளிலிருந்து வரும் சில எறும்புகள் இரண்டு ஜோடி இறக்கைகளுடன் வெளி வருகின்றன. இவைகள்தாம் இராஜா, இராணி என்று கூறும் ஆண் எறும்புகளும், பெண் எறும்புகளுமாகும். இராணி எறும்புகள், இராணித் தேனீக்களைப்போல் அகுளையுடன் கூடியவையல்ல. ஒரே நகரத்தில் பல இராணி எறும்புகள் சமாதானமாக வசித்துவரும். இப்படி முட்டைகளிலிருந்து விருத்தியடைந்த ஆண்களும், பெண்களும் சிறிது நாட்கள் புற்றிலிருந்து, பறக்கும் ஸ்திதியை அடைந்து இளவெயிலுள்ள ஓர் நாளில் புற்றுக்கு வெளியே வந்து ஆகாயத்தில் பறக்கின்றன. இம்மாதிரி வெளிக் கிளம்பும் எறும்புகளைத்தான் நாம் புற்றிலிருந்து கிளம்பும் ஈசல்கள் என்கிறோம். இவ்வாகாய கமனத்தில்தான் ஆண் பெண்கள் இணைசேர்கின்றன. இப்படிச் சிறிது நேரம் பறந்த பிறகு ஆண்கள், பெண்கள் எல்லாம் பூமியில் வந்துவிடுகின்றன; இவ்விதம்

ஆகாயத்தில் பறக்கும்போதும், கீழே விழுந்தவுடனும் அநேக பக்ஷி களுக்கு ஆகாரமாகின்றன. சில ஜனங்கள் இவற்றை வறுத்துத் தின்கின்றனர். பக்ஷிகள் போன்ற பகைவர்களிடமிருந்து தப்பிய ஆண் எறும்புகள் இறக்கைகளை இழந்து மடிகின்றன. பெண் எறும்புகளுள் சில பிழைத்து வெகு கஷ்டத்துடன் தம்முடைய புற்றுகளை அடைகின்றன; ஊழியக்காரர் சகாயத்துடன் அருகில் இருக்கக்கூடிய வங்கு ஒன்றை அடைந்து அங்கு முட்டைக ளிட்டு வேறு நகரத்தை ஸ்தாபிக்கின்றன. பெண் எறும்பானது முட்டை யிட்டு வேறு ராஜ்யம் ஸ்தாபனம் ஆகும் வரையில் சிரம தசையில் இருப்பதாகவே சொல்லவேண்டும். இந்த ஸ்திதியில் முத லில் இடும் சில முட்டைகளையும், அவற்றிலிருந்து வரும் புழுக்களை யும் தின்று வருகின்றன; சில வேறு நகரங்களுக்குச் சென்று அங்குள்ள நகரவாசிகளால் ஆதரவுடன் ஏற்கப்படுகின்றன.

எறும்புகள் புதிய நகரம் ஸ்தாபனம் செய்யும் விதம் தேனீக் களுடையதிலிருந்து வித்தியாசப்படுவது கவனிக்கத்தக்கது. ஆண் எறும்புகளுக்கும் பெண் எறும்புகளுக்கும் இறக்கை இருப்பது அவற்றின் ஆகாய கமனத்தின் பொருட்டேயாகும். இந்தக் கமனத் தின் பிறகு புதிய நகரம் நிருமித்த இராணி, ஊழியக்காரர்க ளுதவி யால் ரஸ்தாக்கள் போட்டும், அறைகள் கட்டியும், முட்டைகளிட்டும் மேலும் மேலும் ஸந்ததி விருத்தி செய்கின்றது. எறும்புகளுள் பிள்ளையார் எறும்புகள், பேச்சைக்கால் எறும்புகள், சுள்ளெறும்பு கள், கறுப்புக் கட்டை எறும்புகள், முசுடுகள் என்ற பலவகை இருப்பது நமக்குத் தெரியும். சாதாரணமாக நமக்குத் தெரிந்த இந்த ஜாதிகளைத் தவிர இன்னும் பலவிதமான எறும்புகள் இருக்கின் றன. மனிதர்களுள் உள்ள மாதிரி வெவ்வேறு ஜாதி எறும்புகள் வெவ்வேறு விதமான ஆசாரங்களையும் வழக்கங்களையும் அனுஷ்டிக் கின்றன. சில எறும்புகள் தரையில் வளைகள் தோண்டி நகரங்கள் நிருமித்து வாழ்கையில், சில தம் நகரங்களை மரங்களின் மூலங்களி லுள்ள வங்குகளிலும், சில மரங்களின்மேல் இலைகளாலும் குச்சி களாலும் நிருமிக்கப்பட்ட நகரங்களிலும் வாழ்கின்றன.

மாமரங்களில் வாழும் செந்நிறமான முசுடுகளையும் அவற்றின் கூடுகளையும் அனைவரும் பார்த்திருக்கலாம். அவற்றின் கூடானது இலைகளாலும், குச்சிகளாலும் கட்டப்பட்டிருக்கிறது. இலைகளையும் குச்சிகளையும் ஒன்று சேர்த்து ஒட்டவைப்பதற்கு அவைகள் முட்டைகளிலிருந்து வெளிவந்த புழுக்கள் தங்கள் வளர்ச்சிக்குக் கட்டும் கூடுகளினுடைய வஸ்துவை உபயோகிக்கின்றன. எறும்புப் புழுக்களை வாயில் கவ்விக்கொண்டு இலைகளைச் சேர்க்கவேண்டிய

இடங்களில் அவற்றை அங்கங்கு ஒட்டவைத்து எடுக்கின்றன. இவ்விதம் செய்யும்போது பிசின் நூலினால் இலைகள் ஒட்டப்பட்டுத் தைக்கப்படுகின்றன. இக்கூட்டைப் பிரித்துப் பார்த்தால் உள்ளே இறக்கையுடன் கூடிய ஆண் பெண் எறும்புகளையும் இறக்கையற்ற அநேகம் ஊழியக்காரர்களையும், வளர்ந்துவரும் புழுக்களையும், பாப்பாக்களையும், புழுக் கூடுகளையும் காணலாம். இவற்றுள் ஆண் எறும்புகளும் பெண் எறும்புகளும் சிறிது பசுமை நிறமாக இருக்கும். இவ் வெறும்புவர்க்கத்தைத் தவிரக் கூட்டிலே சில வண்டுகள் இருப்பதையும் பார்க்கலாம். இவ் வண்டுகளை வெகு ஜாக்கிரதையாக எறும்புகள் தங்களுக்கு ஊழியம் செய்யவோ அல்லது வேறு விதங்களில் உபகாரமாக இருக்கும்பொருட்டோ வளர்க்கின்றன. எந்த விதத்தில் இவை எறும்புகளுக்கு உதவுகின்றனவென்பது நன்றாகப் புலப்படவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் எறும்புகள் வேறு பிராணிகளைத் தங்கள் பிரயோசனத்தின் பொருட்டு வளர்ப்பதைப் பற்றிச் சற்று கவனிப்போம்:

செடிப்பேன் (aphids) என்று கூறும் ஓர்விதப் பிராணி செடிகளில் வசித்து அவற்றின் சாரத்தை உரிஞ்சி அவற்றிற்குக் கெடுதல் விளைவிக்கிறது. இப் பிராணியின் தேகத்தில் தேன் போன்ற ஓர் தித்திப்பான திராவகம் உண்டாகிறது. எறும்புகள் இச்செடிப் பேன்களுள் சிலவற்றை ஆதரவுடன் ஸ்பர்சக் கொம்புகளால் தட்டிக் கொடுத்தால், அவை தேனை வெளிவிடுகின்றன. பசுக்கள் சில சொறிந்து கொடுத்தால் பால் சுரப்பது இதைப் படிப்போருக்கு ஞாபகம் வரலாம். எறும்புகள் அச்செடிப் பேன்களிடம் அடிக்கடி சென்று அவற்றைத் தட்டிக்கொடுத்துத் தாமும் தேனைப் பருகித் தங்கள் புற்றிற்கும் தேனைக் கொண்டுபோகின்றன. நாம் பசுக்களைப்



ரோஜாச்செடியில் செடிப்பேன்.

பாதுகாப்பதுபோல், எறும்புகள் இச்செடிப் பேன்களைப் பாதுகாக்கின்றன. அவற்றை எறும்பின் பசு என்று கூறலாம். அச் செடிப்பேன்கள் வாழும் செடிகளண்டை காவல் காத்து அவற்றைப் பகைவர்களிடமிருந்து இரட்சித்துத் தினந்தோறும் கிரமமாகத் தேனைக்கொண்டுவருகின்றன. பசுக்களுக்குக் கொட்டில்கள் கட்டுவதுபோல் எறும்புகள் அவை மழையில் நனையாமல் இருக்கும்பொருட்டு இலைத்துணுக்குகளால் கொட்டில்கள் கட்டுகின்றன.



1 2

செடிப்பேன்.

ஒரு விதமான எறும்புகள் வியவசாயிகள்போல் புற்றுகளின் அருகில் நிலத்தைச் சரிப்படுத்தி ஓர்விதமான தானியத்தை விதைத்துப் பயிர் செய்கின்றன. கதிர்கள் முற்றினவுடன் தாடைகளால் அறுவடை செய்து தானியங்களை மழைக்கு நனையாமல் சேர்த்து வைத்து வேண்டியபொழுது குற்றி உபயோகிக்கின்றன. இம் மாதிரியான எறும்புகள் நம்முடைய தேசத்திலும், பர்மா தேசத்திலும் மலைப்பிரதேசங்களில் வசிக்கின்றன.

தென் அமெரிக்கா தேசத்திலுள்ள ஓர் இனத்தைச் சேர்ந்த எறும்புகள் தங்கள் புற்றுகள் மழையினால் நனையாமலிருக்க இலைகளால் ஓர் பந்தல் போடுவதாகக் கூறுகின்றனர். இப் பந்தலுக்கு வேண்டிய இலைகளை மரங்களின் மீதேறிச் சிறு துணுக்குகளாகக் கத்தரித்துத் தங்கள் வாயில் தூக்கிக்கொண்டு வரிசையாகப் புற்றுக்கு அவை போவதைப் பார்த்தால், குடை பிடித்துக்கொண்டு போவது போல் தோன்றுவதால் இவற்றைக் குடை பிடிக்கும் எறும்புகள் என்று கூறுவதுண்டு.

தென் அமெரிக்காவிலுள்ள வேறொரு ஜாதி எறும்புகள் ஆகாரத்தின் பொருட்டு வேட்டைக்குச் சென்று வழியில் அகப்படும் சிறு பிராணிகளைக் கொன்று வெகு உற்சாகத்துடன் ஜயசின்னங்களைப் புற்றுக்குக் கொண்டுவருகின்றனவாம். சில சமயங்களில் வெவ்வேறு நகரத்து எறும்புகளுக்குள் சண்டை உண்டாகி, இந்த யுத்தத்தில் தோல்வியடைந்தவர்களை மற்றக் கக்ஷியார் சிறை பிடித்துத் தங்களுக்கு ஊழியம் செய்ய அடிமைகளாக்குகின்றனர். இம்மாதிரி தோல்வியடைந்த ராஜ்யத்திலிருந்து முட்டைகள், எறும்புப் புழுக்கள் முதலானவற்றையும் தூக்கிக்கொண்டு வந்து அவற்றைச் சரி

யாகப் பராமரித்து அவற்றினின்று வரும் எறும்புகளை அடிமைக ளாக்குகின்றன. இந்த அடிமைகள் சேர்க்கும் எறும்புகள் (Slave making ants) ஐரோப்பா தேசத்தில் சில பாகங்களில் இருக் கின்றன.

எறும்புகளின் அதிசய வாழ்க்கையைப்பற்றி விவரித்துக் கூறப் புகின் பக்கங்கள் பெருகுமாதலால், இதைப் படிப்போருக்கு இவ் விஷயத்தில் ஓர் அவா உண்டாகுமாறு சில அம்சங்கள் மாத்திரம் இங்குக் கூறப்பட்டன. இச் சிறு பிராணிகளையும் இவற்றின் நகரங் களையும் பரிசோதித்தல் சுலபமான விஷயமில்லையாதலால், இவை கதைகளோ என்று நினைத்தல் கூடும். ஸர் ஜான் லப்பக் (Sir John Lubbock) என்னும் ஓர் ஆங்கிலப் பிரபு எறும்புகளை வளர்த்து அவற்றைப் பரிசோதனை செய்யும்படியான அறைகளை வைத்து அவற்றின் வாழ்க்கையின் அதிசயங்களைக் கண்டு பிடித்த னர். இம்மாதிரியாகவே நம்முடைய தேசத்து எறும்புகளைப்பற்றி ரௌட்டன் (Wroughton) என்கிறவரும், தென் அமெரிக்கா முதலிய தேசங்களில் சிற்சில உயிர் நூலோரும் வெகு பொறுமை யுடன் கவனித்து வந்துளர். பிராணி வர்க்கத்தில், உன்னத ஸ்தா னத்தை வகிக்கும் மனிதர்களுள் காணப்படும் சமூகவாழ்க்கைக் குணங்களும், புத்திசாதுர்யமும் இத் தாழ்ந்த பிராணிகளில் காணப் படுவது வியக்கத்தக்கதே யன்றோ.



# குரங்குகள் பழம் தின்ற கதை

## (திண்டுக ஜாதகம்)

பி. என். அப்புஸ்வாமி ஐயர்

முன்னொரு காலத்திலே காசி நகரத்திலே பிரமதத்தன் என்ற அரசன் ஒருவன் அரசாண்டுவந்தான். அந்தக் காலத்திலே போதி சத்துவன் ஒரு குரங்காக அவதரித்தான். அவனும் அவனைச் சேர்ந்த எண்பதினாயிரம் குரங்குகளுமாக இமயமலைச் சாரலிலே வசித்துவந்தார்கள். அங்கிருந்து சிறிது தூரத்துக்கு அப்பால் சிறு கிராமம் ஒன்று இருந்தது. அதிலே சில காலங்களில் ஆட்கள் குடி இருப்பார்கள்; சில காலங்களில் அது ஆட்கள் இன்றிக் காலியாக இருக்கும். அந்தக் கிராமத்துக்கு நடுவே தும்பிமரம் (காட்டத்தி) ஒன்று இருந்தது. அந்த மரமானது நன்றாக ஓங்கி வளர்ந்து கொப்பும் கிளையுமாயிருந்தது. அதிலே சுவையுள்ள பழங்கள் நிறையப் பழுத்திருந்தன. அந்த ஊரிலே குடியாக ஆட்கள் இல்லாதிருக்கும்போது குரங்குகள் எல்லாம் அங்கே போகும்; மரத்திலிருக்கிற பழங்களைப் பறித்து வயிறு நிறையத் தின்னும்.

இப்படியிருக்கையிலே, பழம் பழுக்கும் காலத்திலே ஒரு முறை அந்த ஊரில் ஜனங்கள் குடி நிரம்பி யிருந்தார்கள். அதைச் சுற்றி மூங்கிலால் வேலி போட்டிருந்தார்கள். ஒரு கதவும் போட்டு அந்தக் கதவுக்குக் காவலும் வைத்திருந்தார்கள். அந்த மரத்தின் கொப்புகள் எல்லாம் அவற்றில் பழுத்துத் தொங்கியபழத்தின் கனத்தைத் தாங்க முடியாமல், வளைந்துகொண்டு கிடந்தன. அப்போது, "நாம் அதோ அந்த ஊரிலே போய்ப் பழத்தைத் தின்றுகொண்டிருந்தோமே. அந்த மரத்திலே இப்பொழுது பழம் பழுத்திருக்கிறதோ என்னவோ தெரியவில்லையே; அங்கே ஆட்கள் குடியிருக்கிறார்களா இல்லையா என்பதும் தெரியவில்லையே" என்று குரங்குகள் எண்ணத் தொடங்கின. கடைசியாக, அங்கே போய்ப் பார்த்து உளவு அறிந்துவரும்படி ஒரு சாரணக் குரங்கை அனுப்பின. அது போய்ப் பார்க்கையில் மரம் நிறையப் பழம் இருந்தது; ஆனால் ஊர் நிறைய ஆட்களும் இருந்தார்கள். மரம் நிறையப் பழம் இருக்கிறது என்பதைக் கேட்டவுடனே அந்தத் தித்திப்பான பழத்தைப் போய்த் தின்னவேண்டுமென்று குரங்குகள் ஆசைப்பட்டுத்

தீர்மானித்து விட்டன. ஆசையால் துணிவுகொண்டு, குரங்குக் கூட்டம் ஒன்று போய்த் தலைவனிடம் தெரிவித்தது. குரங்குத் தலைவன், "கிராமத்திலே ஆட்கள் குடியிருக்கிறார்களா? அல்லது ஊர் குடியில்லாமல் இருக்கிறதா?" என்று கேட்டது. "ஊர் நிறைய ஆட்கள் இருக்கிறார்கள்" என்றன குரங்குகளெல்லாம். "அப்படியானால் நீங்கள் போகக்கூடாது. மானுடர்கள் மிகவும் வஞ்சகர்கள்" என்றது. "அரசே, நாம் நடுநிசியில் போவோம். அப்பொழுது எல்லாரும் நன்றாகத் தூங்கிக்கொண்டிருப்பார்கள். நாம் வேண்டியதைத் தின்போம்!" என்றன அவை. இப்படியாக அந்தப் பெருங்கூட்டமானது தன் தலைவனுடைய அநுமதியைப் பெற்று, மலைச்சாரலிலிருந்து இறங்கிற்று. ஊர் அடங்கும் வரையில் அருகே இருந்த பெரும்பாறை ஒன்றின்மேலே உட்கார்ந்து காத்துக் கொண்டிருந்தது. நடு ஜாமத்திலே, ஊரார் அனைவரும் நன்றாகத் தூங்கிக் கொண்டிருந்தபொழுது, அக் கூட்டமானது மரத்தின் மேலேறிப் பழங்களைப் பறித்துத் தின்ன ஆரம்பித்தது.

பாதிராத்திரியிலே அவ் வூரான் ஒருவனுக்கு அவசரமாக எழுந்திருக்க வேண்டியிருந்தது. அவன் எழுந்திருந்து ஊருக்குள் போனான். அந்தக் குரங்குகள் இருப்பதைப் பார்த்தான். உடனே அவன் கூக்குரலிட்டான். வில்லையும் அம்பறாத்தூணியையும் எடுத்துக் கொண்டவர் சிலரும், கம்போ, கழியோ, மண்ணாங்கட்டியோ எந்த ஆயுதம் அகப்பட்டதோ அதைக் கையில் எடுத்துக் கொண்டவர் பலருமாக, ஊரார் அனைவரும் ஓடிவந்து மரத்தை வளைத்துச் சூழ்ந்துகொண்டார்கள். "அருணோதயம் ஆகட்டும்; அவைகளை எல்லாம் பிடித்து விடலாம்" என்று அவர்கள் எண்ணமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அந்த எண்பதினாயிரம் குரங்குகளும் இந்த ஜனக் கூட்டத்தைப் பார்த்தன. அவைகளுக்குப் பயத்தால் பிராணன் போய்விட்டதுபோல் ஆகிவிட்டது. "நம்முடைய தலைவனைத் தவிர நம்மைக் காப்பாற்றுவார்கள் யாருமில்லை" என்று எண்ணி அவனிடம் இவ்வாறு முறையிட்டன:

"விற்பிடி கையினர் வீக்கிய தூணியர்
வீரர்க ளெங்களைச் சூழ்ந்துகொண்டார்
பற்றிய கத்தியர் சுற்றின ரெங்கெங்கும்
பாரகத் தேதுணை வேறிலையே!"

இதன்மேல் குரங்கு அரசு அவர்களைத் தேற்றி, "பயப்படாதீர்கள். மனுஷ்யர்களுக்கு எத்தனையோ காரியம் உண்டு. இப்

பொழுதுதான் நடு ஜாமம் ஆயிருக்கிறது. அவர்களும் உங்களைக் கொன்றுவிடுவோம் என்று சூழ நின்று கொண்டிருக்கிறார்கள். ஆனாலும்கூட அவர்கள் இந்தக் காரியத்தைச் செய்ய ஒட்டாதபடி வேறு ஏதாவது காரியத்தை அவர்களுக்குக் கொடுப்போம்'' என்று மீண்டும் சொல்லிற்று. குரங்குகளைத் தேற்றும்பொருட்டு மீண்டும்,

"சொந்தவே லையிவர்க் கெத்தனை யோஉண்டு
துரிதமாய்க் கூட்டங் கலைந்துவிடும்
இந்தப் பழங்க ளனைத்தும் பசிபோக
இருந்து புசித்திளைப் பாறிடுங்கள்''

என்று சொல்லிற்று.

இவ்வாறு அந்தக் குரங்குத் தலைவன் கூட்டத்துக்கு ஆறுதலை அளித்துக்கொண்டிருந்தது. இப்படித் தினையளவாய் உள்ள ஆறுதலைக் கூட அப்பொழுது பெற்றிராவிட்டால் அவை யாவும் மனமுடைந்து செத்துப் போயிருக்கும். அந்தத் தலைவன் குரங்குகளைத் தேற்றியான பிறகு, "எல்லாக் குரங்குகளையும் ஒன்றாகத் திரட்டுங்கள்'' என்று உத்தரவிட்டது. அப்படி அவைகளைத் திரட்டியபோது ஒரு குரங்கைமட்டிலும் காணவில்லை. அது தான் அரசனுடைய மருகன் ஆகிய சேனகன் என்னும் குரங்கு. அந்தக் கூட்டத்திலே சேனகன் இல்லையென்று தலைவனிடம் குரங்குகள் வந்து கூறின. குரங்கரசு, "சேனகன் இங்கே இல்லையானால், நீங்கள் துளிகூடப் பயப்படவேண்டாம். உங்களைக் காப்பாற்ற அவன் வழி தேடிக்கொடுப்பான்'' என்றது.

குரங்குகள் மலையைவிட்டுப் புறப்பட்டபோது சேனகன் தூங்கிக் கொண்டிருந்தது. பிறகு சிறிது நேரத்துக்கெல்லாம் அது விழித்துக் கொண்டது. சுற்று முற்றிலும் யாரையும் காணவில்லை. அவை சென்ற தடத்தைப் பார்த்துக்கொண்டே பின்தொடர்ந்து வந்தது; வந்தபோது ஜனங்கள் எல்லோரும் பரபரப்பாகப் போவதைக் கண்டது; "ஓகோ! நமது கூட்டத்துக்கு ஏதோ அபாயம் வந்துவிட்டது'' என்று எண்ணிக் கொண்டது. அந்தச் சமயத்திலே கிராமத்தின் வெளி ஓரத்திலே இருந்த குடிசை ஒன்றிலே, மூட்டிய அடுப்பின் முன்னே கிழவி ஒருத்தி அயர்ந்து தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்தது. வயலுக்குச் செல்லுகின்ற ஊர்க்குழந்தை ஒன்றைப் போலப் பாவனை செய்துகொண்டு, கையில் நெருப்புக் கொள்ளி ஒன்றை எடுத்துக்கொண்டது. பிறகு காற்றடிக்கும் பக்கமாகப் போய் நின்றுகொண்டு அந்தக் கொள்ளியால் ஊருக்கு

நெருப்பு வைத்தது. உடனே ஊர் நெருப்புப் பிடித்துக்கொண்டு எரிய ஆரம்பித்தது.

அப்பொழுது அங்கிருந்த ஜனங்கள் எல்லாரும் குரங்குகள் எக்கேடு வேண்டுமானாலும் கெட்டுப்போகட்டும் என்று விட்டுவிட்டு நெருப்பை அவிக்கும் பொருட்டு ஓடோடியும் வந்தனர். அப்பொழுது குரங்குகளெல்லாம் ஒரே ஓட்டமாக மூலைக் கொன்றாக ஓடிவிட்டன. ஒவ்வொரு குரங்கும் சேனகனுக்கென்று ஒவ்வொரு பழத்தைப் பறித்து எடுத்துக்கொண்டுவந்து கொடுத்தது.

[இது முடிந்ததும் சத்துவர் பின்வருமாறு சொன்னார்: "அந்தக் காலத்தில் சேனகனாயிருந்தவன் மகாநாம சக்கன். புத்தருடைய சிஷர்கள் தாம் அந்தக் குரங்குக் கூட்டம். நான் தான் அக்கூட்டத்தின் அரசன்."]

# லக்ஷ்மி அம்மாள் பள்ளிக்கூடம்

## அம்மணி அம்மாள்

லக்ஷ்மி அம்மாளின் பள்ளிக்கூடத்தைப் பற்றி நான் அதிகமாய்க் கேள்விப்பட்டிருந்தேன். ஆனல் இதுவரையில் அதைப் பாக்கும்படியான ஸந்தர்ப்பம் ஏற்படவில்லை. வண்டி போய் நின்றவுடன் வாயிற்காப்பவன் கதவைத் திறந்தான். வண்டியை உள்ளே நிறுத்தினன். அங்கே யாரும் கண்ணுக்குத் தென்படவில்லை. ஆனல் முன்புறம் தோட்டத்தில் கண்ணைக் கெட்டியாய், 'கண்ணுமூச்சி' விளையாட்டுக்குக் கட்டிக் கொள்வது போலக் கட்டிக்கொண்டிருந்த, ஸுமார் பன்னிரண்டு வயதுள்ள பெண்ணை, அவளைவிட நான்கு வயது குறைவாயுள்ள ஒரு சிறு பையன், புஷ்பப்பாத்திகளுக்கிடையில், ஜாக்கிரதையாய்க் கையைப்பிடித்துக் கூட்டிக் கொண்டு போய்க் கொண்டிருந்தான்.

வண்டிச் சத்தம் கேட்டவுடன் அப்பெண் நின்று, "யார் வந்தது?" என்று கேட்டதாகத் தோன்றிற்று. அச்சிறுவன் என்னைப் பற்றி அவளுக்குச் சொல்லியிருப்பான் என்றும் தோன்றிற்று. பிறகு அவர்கள் போய் விட்டார்கள். நான் உள்ளே போனதும் அங்கிருந்த ஓர் அழகிய பெண் என்னை லக்ஷ்மி அம்மாளிடம் கொண்டுபோய் விட்டு விட்டுப் போய் விட்டாள்.

அந்த அம்மாள், நான் எதிர் பார்த்தபடியே, ஸுமார் நாற்பத்தைந்து வயதுள்ளவளாகவும், பக்ஷத்துடன் கூடிய சிரித்த முகமுடையவளாகவும், மற்றவர் கஷ்டத்திற்கு அனுதாபப்படக்கூடியவளாகவும் காணப்பட்டாள். தலைமயிர் கொஞ்சம் நரைத்து முகம் கம்பீரமாயும், பெருந்தன்மையுடையதாயும் இருந்தது. கண்களில் கருணை பொழிந்தது. கொஞ்ச நேரம் ஏதோ விஷயங்களைப் பற்றிப்பேசின பிறகு, அந்த அம்மாள் ஏற்படுத்தியிருக்கிற ஸுலபமான படிப்பு முறைகளைப் பற்றிச் சில கேள்விகள் கேட்டேன். அதற்கு அந்த அம்மாள் சொன்னதாவது: "பாருங்கள், நாங்கள் இங்கே அதிகமாய் ஒன்றும் பாடம் கற்றுக் கொடுக்கிறதில்லை.

---

ஈ. வி. லூகாஸ் என்பவர் எழுதிய *'School for sympathy'* என்பதைத் தழுவி எழுதப்பட்டது.

இங்கே என்னிடம் வருகிற சிறுமிகளுக்கும் சிறுவர்களுக்கும் கட்டாயப் பாடல்கள் மிகவும் கொஞ்சம்; கூட்டல், கழித்தல், பெருக்கல், எழுதல், படித்தல் முதலிய ஸாதாரணப்படிப்பு மாத்திரம் தான் கற்றுக் கொடுக்கப்படுகிறது. மற்ற விஷயங்களை அவர்களுக்குப் படித்துக் காட்டி ஸுலபமான நடையில் விளக்கிக் காட்டுகிறோம். அந்த ஸமயம் அவர்கள் நேராய் உட்கார்ந்து கை கால்களை அசைக்காமல் கவனத்துடன் கேட்க வேண்டியது.''

"ஆனால் உங்கள் நூதன முறையைப்பற்றி நான் அதிகமாய்க் கேள்விப் பட்டேனே!'' என்று நான் சொன்னேன். லக்ஷ்மி அம்மாள் சிரித்துக்கொண்டு, "ஆ! அதுவா? வந்துவிட்டேன். அதைப்பற்றிச் சொல்கிறேன் : ஸாதாரணமாய் வெளி விஷயங்களை வியவஹரித்து அதைப் பற்றின ஞானம் புகட்டுவதே கல்வியின் பயனுய்க் கருதப்படுகிறது. உதாரணமாய் ரஸாயனம் (Chemistry) முதலிய சாஸ்திரங்களில் இப்படி இப்படி நடக்கிறதென்கிற அறிவு புஸ்தக மூலமாய்ப் புகட்டப்படுகிறது. ஆனால் இந்தப் பள்ளிக்கூடத்தின் முக்கிய நோக்கம், எந்த விஷயத்தையும் தனதாகப் பாவித்து நடக்கும் யோசனை சக்தியை விருத்தி செய்வதே. நல்ல பிரஜையாயிருக்க வேண்டும், தயவுள்ளவனுயிருக்க வேண்டும், எல்லாரையும் தன்னைப் போலப் பாவிக்கவேண்டுமென்று புஸ்தகங்களில் படித்தால் நடத்தையில் காணமுடியாது. நடத்தையில் அவற்றின் கருத்தைக் காண்பிக்க வேண்டுமென்று யோசித்து, நான் இதை ஆரம்பித்திருக்கிறேன்.

"மற்றவர்களைக் கவனித்து அவர்களின் ஸுகதுக்கங்களைத் தனதாகப் பாவித்து நடக்கவேண்டும் என்னும் கீதா வாக்கியத்தின் ரஹஸ்யத்தை ஒட்டியே என்னுடைய எண்ணமும் இருக்கிறது. அதை நிறைவேற்ற வேண்டுமென்பதுதான் வெகு நாளாய் இருந்த என் கோரிக்கை. அதற்கு அநுகூலமாய்ச் சில பெற்றோர்களும் என்னை நம்பி அவர்கள் குழந்தைகளை அனுப்பியிருப்பதால் காரியத்தை நடத்த முடிகிறது. ஜன்னலின் வழியாய்ச் சற்று எட்டிப் பாருங்கள்'' என்றாள்.

ஜன்னலண்டை போய்ப்பார்த்தேன். பெரிய தோட்டமும் குழந்தைகள் விளையாடுமிடமும் தெரிந்தன. "என்னபார்க்கிறீர்கள் ?'' என்று லக்ஷ்மி அம்மாள் கேட்டாள்.

"அழகான தோட்டத்தையும் அநேக ஸந்தோஷமுள்ள குழந்தைகளையும் காண்கிறேன். ஆனால் அவர்கள் எல்லாரும் இருக்க வேண்டியபடி தேகஸௌக்யமுள்ளவர்களாகவும், சுறுசுறுப்புள்ளவர்களாகவும் இல்லை யென்பதை அறிய எனக்கு வருத்தமாயிருக்கிறது.

நான் இங்கே வந்தபோது, ஒரு சிறு பெண் கண்ணில் ஏதோ வியாதியினால் கட்டுக்கட்டப்பட்டு ஒரு பையனால் அழைத்துக்கொண்டு போகப்படுவதைப் பார்த்தேன். இப்போது அதேமாதிரி இன்னும் இரண்டுபேரைப் பார்க்கிறேன். ஒரு பெண் பாவம்! நொண்டி போல் தோன்றுகிறது. கைக்கடியில் கட்டை வைத்துக்கொண்டு, மற்றவர்கள் விளையாடுவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறாள்'' என்று நான் சொன்னேன்.

அந்த அம்மாள் சிரித்துக்கொண்டு, "இல்லை, இல்லை; நிஜமாய் அவள் நொண்டி இல்லை; இன்றைக்கு அவள் நொண்டியாய் நடிக்கும் நாள். நீங்கள் பார்த்த மற்றக்குழந்தைகளும் குருடு இல்லை; இன்றைக்கு அவர்கள் குருடாய் நடிக்கும் நாள்'' என்றாள்.

நான் ஆச்சர்யத்தினால் ஸ்தம்பித்துப் போனதைப் பார்த்து மறுபடியும் அந்த அம்மாள் சொன்னாள்: "எங்களுடைய நோக்கத்தின் ஸாராம்சம் இது தான். இவ்விதமான துரதிர்ஷ்டத்தின் கஷ்டத்தை இக்குழந்தைகள் தாங்களே அநுபவித்து அறிந்து கொள்வதற்காக இவர்களை இந்த மாதிரியான துரதிர்ஷ்டமுள்ளவர்களைப்போல் நடிக்கச்சொல்லுகிறோம். ஒவ்வொரு குழந்தைக்கும் ஒரு குருடாய் நடிக்கும் நாள், ஒரு நொண்டியாயிருக்கும் நாள், ஒரு செவிடாயிருக்கும் நாள், ஓர் ஊமை நாள் உண்டு. குருடாயிருக்கும் நாளில் அவர்களுடைய கண்கள் நன்றாய்க் கட்டப்படுகின்றன. இடுக்கால் பார்ப்பதைக் கௌரவக்குறைவாய்க்கருதுகிறார்கள்; ராத்திரியே கண்ணைக்கட்டிவிடுகிறார்கள்; காலையில் எழுந்திருக்கும்போது கண் தெரியாதவர்களைப்போல எழுந்திருக்கவேண்டியிருக்கிறது. இதனால் மற்றவர்கள் உதவியை அவர்கள் தேடவேண்டியிருக்கிறது. மற்றக் குழந்தைகளை அவர்களுக்கு உதவி செய்து, அவர்களைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போகச் சொல்லுகிறோம். இது குருடாய் நடக்கிறவர்களுக்கும், உதவி செய்பவருக்கும், அநுபவ ரூபமாய் நல்ல அறிவை உண்டுபண்ணுகிறது.

"கண்ணில்லாத குறை அவர்களுக்குத் தோன்றுதபடி ஒவ்வொருவரும் மிகவும் பக்ஷமாய் நடத்துகிறார்கள். இது ஏதோ ஒரு வேடிக்கை மாதிரி இருக்கிறது. இருந்தபோதிலும், அன்று பொழுது போவதற்குள், யோசனை சக்தி கொஞ்சங்கூட இல்லாதவர்களுக்குக்கூட குருடாயிருந்தால் எப்படியிருக்குமென்பது தெரிந்து போய்விடும்.

"குருடாயிருக்கிற நாள் தான், உண்மையாகவே, கஷ்டம். ஆனால் ஊமையாயிருக்கும் நாள்தான் அதிகக் கஷ்டமென்றும், அதை

நினைத்தாலும் பயமாயிருக்கிறதென்றும், சில குழந்தைகள் சொல்லு கிறார்கள். இதில் வாயை மூட முடியாததனால், குழந்தைகள் மனதைக் கட்டுப்படுத்திப் பேசாமலிருக்கிறார்கள்'' என்று சொல்லித் தோட்டத்தில் வந்து, "குழந்தைகள் இதை எப்படி விரும்புகிறார்க ளென்று பாருங்கள்'' என்று சொல்லி என்னை ஸந்தோஷத்துடன் கூடிய, கண்ணைக்கட்டியுள்ள ஒரு பெண்ணிடம் கூட்டிக் கொண்டு போனாள்.

"இதோ ஒரு கனவான் உன்னோடு பேசவந்திருக்கிறார்'' என்று சொல்லி லக்ஷ்மி அம்மாள் என்னை அங்கே விட்டு விட்டுப் போய்விட்டாள்.

"நீ இடுக்கால் கொஞ்சமாவது பார்க்க மாட்டாயா?'' என்று நான் கேட்டேன். "ஓ! கூடாது. அப்படி ஏமாற்றக் கூடாது. குருடாயிருந்தால் இவ்வளவு கஷ்டமாயிருக்குமென்று நான் நினைக்க வேயில்லை. ஒவ்வொரு நிமிஷமும் எதிலாவது போய் முட்டிக்கொள் வோமென்று தோன்றுகிறது. உட்கார்ந்திருப்பதுதான் பயமில் லாதிருக்கிறது'' என்று அவள் சொன்னாள்.

"உன்னைக் கூட்டிக் கொண்டுபோகிறவர்கள் பக்ஷமாய் நடத்து கிறார்களா?'' என்று கேட்டேன்.

"ஸுமாராய் நடத்துகிறார்கள். என்னுடைய முறை வரும் போது நான் எப்படி நடப்பேனோ அவ்வளவு ஜாக்ரதையாயில்லை. ஒருதரம் குருடாய் அனுபவித்தவர்கள் ஜாக்ரதையாய் நடத்துவார் கள். அப்பா! பார்க்காமலிருப்பது மிகவும் பயங்கரமானது. நீங்கள் கொஞ்சம் செய்து பார்க்கிறீர்களா?'' என்று கேட்டாள். "நான் உன்னை எங்கேயாவது கூட்டிக்கொண்டு போகட்டுமா?'' என்றேன். "ஆ, அப்படியே கொஞ்ச தூரம் போவோம். அங்கே காணப்படுகிற வஸ்துக்களைப்பற்றி நீங்கள் எனக்குச் சொல்லவேண்டும். குருடு நாளைத்தவிர மற்ற நாளெல்லாம் எனக்கு இதைப்போல அவ்வளவு கஷ்டமாயிராது. இன்றைக்கு முடிந்து விட்டால் எனக்கு நிரம்ப ஸந்தோஷமாயிருக்கும். ஒரு காலைக் கட்டிக்கொண்டு, நொண்டி போலக் கட்டையை வைத்துக்கொண்டு குதிப்பது வேடிக்கையாய்த் தானிருக்கும். கையைக் கட்டிக்கொண்டிருப்பதுகூடக் கொஞ்சம் கஷ்டமாய்த்தானிருக்கும். ஏனென்றால் சாப்பாடுகூட ஒருவர் வாயில் எடுத்துப் போடவேண்டிருக்கும். இருந்தாலும் பாதக மில்லை. ஒரு நாளைக்குச் செவிடாயிருப்பது எனக்கு லக்ஷியமில்லை. ஆனால் குருடாயிருப்பது நிரம்பப் பயங்கரமாயிருக்கிறது! எந்தச் சமயத்தில் எதில் முட்டிக் கொள்வோமோ என்று நினைத்து நினைத்

றுத் தலைவலி எடுக்கிறது. இப்பொழுது நாம் எந்த இடத்திலிருக்கிறோம்?'' என்று கேட்டாள்.

''விளையாடுமிடத்திலிருக்கிறோம், வீட்டை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறோம். லக்ஷ்மி அம்மாள் மாடியில் தாழ்வாரத்தில் உயரமான ஒரு பெண்ணுடன் உலாத்திக் கொண்டிருக்கிறாள்'' என்று சொன்னேன்.

''அந்தப் பெண் என்ன உடுத்துக்கொண்டிருக்கிறாள்?'' என்று கேட்டாள். ''பச்சைச்சிற்றாடை கட்டிக்கொண்டு வெள்ளைச்சொக்காய் போட்டுக்கொண்டிருக்கிறாள்''

''அது ருக்மணி யென்று நினைக்கிறேன். தலைமயிர்நீளமாய்ப் பின்னித் தொங்க விட்டிருக்கிறாளா?''

''ஆமாம், நீளமாய்ப் பின்னித் தொங்க விட்டிருக்கிறாள்; மிகவும் அடர்த்தியாயுமிருக்கிறது.''

''ஆமாம், அவள் ருக்மணிதான். அவள் தான் தலைமை வகிக்கும் பெண்; நிரம்ப நல்லவள்.''

''தோட்டத்தில் ஒரு கிழவன் ரோஜாப் புஷ்பங்களைப் பறித்துக் கொண்டிருக்கிறான்'' என்று நான் சொன்னேன்.

''ஆம், அவன் தோட்டக்காரக் குப்பன். அவனுக்கு நூறு வயதிருக்கும்.''

''கட்கதண்டம் வைத்துக்கொண்டு, சிவப்புப் புடவை கட்டிய மாநிறமுள்ள ஒரு பெண் இதோ வருகிறாள்'' என்றேன்.

''ஆம் அவள் கமலா'' என்று அப்பெண் சொன்னாள்.

இப்படி நாங்கள் நடந்து கொண்டேபோனோம். இந்தப் பெண்ணை இவ்விதமாய்க் கூட்டிக்கொண்டு போனதனால், நான் நினைக்காமலே அதிகமாய்ப் பிறர்க்குத் தகுந்தபடி நடக்கிற என்னுடைய சக்தி விருத்தியடைந்து விட்டதென்று கண்டேன். சுற்றிலுமுள்ள விஷயங்களை மற்றவர்கள் அறியும்படிச் சொல்லும் அவசியத்தினால் அவ்விஷயங்கள் இன்னும் மனோகரமாய்த் தோன்றுகின்றன.

லக்ஷ்மி அம்மாள் வந்து என்னை அனுப்பியபோது எனக்கு அவ்விடத்தை விட்டுப்போக மனம் வரவில்லை யென்று சொன்னேன்.

அதற்கு அந்த அம்மாள், ''என்னுடைய முறை உங்களுக்குப் பிடித்திருக்கிறதை உணர ஸந்தோஷப் படுகிறேன்'' என்றாள்.

நான் நடந்து வீட்டுக்குப் போகும்போது அடியில் வரும் குறளை ஞாபகப்படுத்திக்கொண்டே போனேன்:

''அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை.''

# சுகுமாரன்

ச. முனிஸ்வாமி பிள்ளை

பஞ்சத்தால் பாழ்பட்ட இடங்கள் பலவற்றுள் ஒரிஸ்ஸா ஒன்றாகும். 1866-ஆம் ஆண்டில் ஒரு பெரும் பஞ்சம் அந்த ஜில்லாவைத் தாக்கி, மூன்று வருடங்களாக அங்கு நிலைத்து, ஜீவராசிகளை நசுக்கி வாட்டிற்று. மழை யென்பதே அங்குத் தலைகாட்டவில்லை. குடிகளெல்லாம் ஆகாரமின்றிப் பசிப்பிணியின் வாய்ப்பட்டு அல்லலுழன்றனர்; சூரியனோ ஜீவராசிகளைச் சுட்டெரித்தான். கஷ்டங்களோ அதிகரித்தன. கிராமங்களில் தானியமே இல்லாமற்போயிற்று. அடுத்த கிராமங்களிலிருந்து தானியங் கொண்டுவர வசதியுங் கிடையாது. அதனால், அந்தோ! பல நாட்களாக ஒரு பருக்கை அன்னம்கூட இல்லாமல் பதை பதைத்து இறந்த குடும்பங்கள் எண்ணிறந்தன! இத்தகைய கஷ்டங்களுக்கிடையிலும், சூரியனது கொடுமைக்குத் தப்பி வறளாது கிடந்த சிறு திட்டுக்கள் போல, சில புண்ணிய சீலர்கள் ஜனங்களுக்கு உபகாரம் புரிந்தனர். ஆயினும் போக்கு வரவு வசதியும் தக்க பாதைகளும் அமையாதிருந்த அக்காலத்தில் அவர்களுடைய உபகாரம் எம்மட்டு!

இத்தகைய கஷ்டங்கள் நிறைந்த அக்காலத்தில் அந்த ஜில்லாவின் ஒரு சிறு கிராமத்தில் சுகுமாரன் என்னும் ஓரேழைச் சிறுவன் தனது தாய் தந்தையரோடும் தம்பியோடும் ஒரு சிற்றகத்தில் வசித்தான். ஜில்லா முழுவதையும் வாட்டி வருத்திய அப்பஞ்சம் சுகுமாரனது குடும்பத்தையும் விட்டிலது. அக்குடும்பத்தினரும் அளவற்ற கஷ்டங்களுக்கு ஆளாயினர். அவர்களுடைய சிறு நிலம் இரண்டு முறைகளாகப் பயன் தரவில்லை. ஆடு மாடுகளும் அவர்கள் உணவுக்காக விலை போயின. தாயும் தந்தையும் தங்கள் பாகத்தை மக்களுக்கீந்து மாதக் கணக்காகத் தினமொருபிடி அன்னமே புசித்தனர். அவர்களது குடும்ப நகைகளையும் விற்று உணவு வாங்கினர். ஆயினும் அந்தச் சொற்ப உணவு எத்தனை நாளைக்கு வரும்? பின்னும், பணத்திற்கு உணவு கிட்டாத நாளும் வந்து விட்டது. ஆதலால் மறுநாளுணவு பெறும் வழியறியாது பெற்றோர் திகைத்தனர்.

அதனையறிந்த சுகுமாரன் இனித் தான் உணவு தேடவேண்டுமென எண்ணங் கொண்டான். ஆகவே, அவன் மறுநாள் ஒரு

வரும் அறியா வண்ணம் வீட்டை விட்டுப் புறப்பட்டு, நாள் முழுவதும் கதிரவனது கொடிய கிரணங்களால் தீய்க்கப்பட்டு, உணவுக்காக அலைந்து திரிந்து முடிவில் இளைத்த காலுடனும் களைத்த முகத்துடனும் வீடு வந்து சேர்ந்தான். அவனது ஆயாசத்தைக் கண்ட அன்னை அவனுக்கு ஒரு பிடி யன்ன மளித்தாள். அவன், "அம்மா, நான் இன்றைக்கு வயிறுறப் புசித்துவந்தேன்; இது எனக்கு வேண்டாம்'' எனக் கூறி, அதை மறுத்தான். தனது அருமைப் புதல்வனின் அறிவான வார்த்தைகளைக் கேட்ட தாயின் கண்களில் நீர் பெருகிற்று. பின்பு தனது பாகத்தைத் தன் தம்பி உண்ணக் கண்ட நமது உத்தமச் சிறுவன் உவப்பெய்தினான்.

ஒவ்வொரு நாளும் சுகுமாரன் இங்ஙனமே விடியற் காலையில் வீட்டை விட்டு உணவு கொணரச் செல்வான்; சில நாட்களில் வெறுங்கையோடு வீடு திரும்புவான்; ஏதாவது இலை, கனி, ஒரு பிடி மாவு முதலியன கிடைக்கும் நாட்களில் அவற்றை மலர்ந்த முகத்துடன் கொண்டுவந்து தனது மாதாவிடம் கொடுத்து மகிழ்வான். இங்ஙனம் சில நாட்கள் சென்றன. அவனது தந்தைக்கோ அடியெடுத்து வைப்பதும் அசாத்தியமாயிற்று. அவர், தாமிருப்பதால் ஒருதவியும் குடும்பத்திற்கில்லை என்றும், தாம் இல்லாவிடில் தம்முடைய பாகம் தம் மக்களுக்குக் கிடைத்து அவர்கள் பசியை ஆற்று மென்றும் உணர்ந்தார். ஆதலால் அவர் ஒருநாள் தம் மனைவியை யழைத்து, "என் அருமைக் காதலியே, நான் பிரயாணம் செய்யப் போகிறேன். கடவுள் உங்களைக் காப்பாராக!'' எனக் கூறி விட்டு நகர்ந்து கொண்டே தம் வீட்டை விட்டு அருகிலிருந்த ஒரு காட்டுக்குச் சென்றார். அந்தக் காட்சி அவர் மனைவிக்கு வெந்த புண்ணில் வேலுருவியது போலிருந்தது. ஏனெனில், அவர் கூறிய பிரயாணம் எதுவென அவளுணர்வாள்; அது சென்றவர் திரும்பி வாராத பிரயாணமேயாம்.

சீக்கிரத்தில் அவளுக்கும் படுக்கையை விட்டெழ முடியாத நிலைவந்தது. அந்தோ! குடும்ப பாரம் முழுதும் இப்பொழுது சுகுமாரன் தலையிலேயே விழுந்தது. அவன் தம்பியைத் திருப்தி செய்வானா? தாயைத் தேற்றுவானா? இத்தனை இடுக்கண்களும் அவனது தைரியத்தைக் குறைத்தில. அவன் தனது வழக்கத்தைவிடாது தினமும் வெளியில் உணவு சம்பாதிக்கச் செல்வான்; நல்ல வேளையாக ஏதாவது ஒரு சிறிது கிடைத்தால் அதைத் தன் தம்பிக்கும் தாய்க்கும் கொடுத்துத் திருப்தி யடைவான்.

ஐயோ பாவம்! அத்தகைய நாட்களும் ஒழிந்தன. இனி என்ன செய்வான்? தனது தாயின் உடலில் ஊசலாடிக் கொண்டிருந்த

குற்றுயிரைக் காப்பாற்ற எவரிடம் உணவு கேட்பதெனத் தெரியாது திகைத்தான். அவன் எலும்பு மனிதனானான். அவனது தம்பியோ அழுத வண்ணமிருந்தான். பல தினங்கள் ஒரு சிறிது உணவுமின்றிக் கழிந்தன. இத்தனை கஷ்டங்களுக் கிடையிலும் தனது குடும்பத்தைக் காப்பாற்றுவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருந்த சுகுமாரன் தனது முயற்சியினின்றும் பின் வாங்கினானில்லை. அவனது தசையற்ற மெல்லிய கால்கள் அவனைத் தாங்காவாயினும், அவன் யாராவது ஒருபிடி யன்னம் கொடுப்பார்களா என்னும் ஆவலுடன் வெகுதூரம் தள்ளாடிக் கொண்டே செல்வான்.

ஒரு நாள் அவன் பெருங்கஷ்டத்துடன் தன்வீட்டை விட்டு உணவு தேடும் நோக்கத்துடன் வெகு தூரம் சென்று விட்டான். நடந்தகளைப்பினால், தெய்வாதீனமாகக் கதிரவனது கிரணங்களுக்குத் தப்பியிருந்த ஒரு மரத்தடியில் சற்றுப் படுத்து இளைப்பாறினான். அவனுக்கருகில் ஒருமாது பக்கத்துக்கிராமத்திலிருந்து வாங்கி வந்த சிறிது அரிசியைச் சமைத்துக் கொண்டிருந்தாள். அந்த வாசனையை யுணர்ந்த சுகுமாரனுக்கு அளவிலாத ஆவல் எழுந்தது. உடனே அவன் அவளிடம் மெல்லச் சென்று, "அம்மணி! நான் சாப்பிட்டு மூன்று நாட்களாயின; ஒரு பிடி அன்னம் கொடுத்தால் நலமாக விருக்கும்" எனக் கெஞ்சினான். கருணை மிக்க அம்மாதும் தான் சமைத்ததில் சிறிது தந்தாள். அதனை அவன் அவளெண்ணியபடி ஆத்திரத்துடன் உண்ணாது தனது கந்தற் குட்டையில் ஒரு துண்டு கிழித்து அதில் பத்திரப் படுத்தி வைப்பதைக் கண்டு அவள் ஆச்சரியங்கொண்டாள்.

உடனே சுகுமாரன், அநேக மைல் தூரத்திலிருந்த தனது வீடு நோக்கிப் புறப்பட்டான். ஓரடி எடுத்து வைப்பதென்றால் அவனுக்குப் பகீரதப் பிரயத்தனமாக விருந்தது. அவனது பாதங்களோ, சூரியனது அதிகாரத்தை யெல்லாம் தாமே பெற்றது போல் காய்ந்த சுடு மணலில் நடந்ததனால் கொப்புளித்தன. ஆயினும் அவற்றை யெல்லாம் கவனியாது அவ்வருமைக் குமாரன் கைகளை ஊன்றி நகர்ந்து நகர்ந்து சென்றான். நடுவில் அவனுக்குத் தான் வைத்திருந்ததில் ஒரு பருக்கைச் சாதத்தை உண்ண அடக்க முடியாத அவாவெழுந்தது. ஆயினும் மறுகணத்திற் கெல்லாம் பசியால் வருந்தும் அவனது தாயைப் பற்றிய கவனம் அவனது ஆசையை யடக்கிற்று. வெகு நேரம் ஆய்விட்டது. ஆதவனும் சுகுமாரனைச் சுட மனமில்லாது கருணை கொண்டவன் போல் அத்தமித்தான். பகலும் போயிற்று; இரவும் வந்தது. ஆனால் சுகுமாரன்

மாத்திரம் தன் வீட்டிற்கு வெகு தூரத்திலிருந்தான். களைப்பு மீறியதால் அவன் சாலை ஓரத்தில் சற்று அயர்ந்தான். அப் பொழுது அவனுக்கு, சீக்கிரம் எழுந்து தாய்க்கு உணவு கொண்டு போவோமென்னும் எண்ணம் பூரணமாக விருந்தது. தான் வைத் திருந்த மூட்டையைத் தன் சட்டையில் பத்திரப் படுத்தி வைத்துக் கொண்டான். படுத்தவுடனே அவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை; துயில் கொள்ளப் பேரவா உண்டாயிற்று. ஒரு நட்சத்திரத்தை உற்றுப் பார்த்தான். தன் தகப்பன் தன்னருகிலிருப்பதாகச் தெரிந் தது—ஆமாம், அவன் தனது தகப்பன் சென்ற விடத்திற்குத்தான் செல்லப் போகிறான். சிறிது நேரத்திற் கெல்லாம் அயர்ந்து துயின் றான்.

அந்தோ! பரிதாபம், படுத்த சுகுமாரன் எழவேயில்லை. சந்தி ரனும், அவன் தன் தாய்க்காகத் தன் நலத்தையும் ஒழித்த அருஞ் செய்கைக்காக மெச்சினது போல் அவன்மீது குளிர்ந்த கிரணங் களைப் பொழிந்தான். மறு நாள் அவ்வழியே சென்ற ஒரு பெரியார் அவன் உயிரோடிருக்கிறானா எனப் பார்த்தார்; அவன் தன்னிடத்தில் உணவிருந்தும் பசியாலிறந்தமைக்குக் காரணம் தெரி யாது ஆச்சரியப் பட்டார். நமது சுகுமாரன் தன் தாய்க்காகக் கொண்டு போன உணவைத் தான் உண்ணலாகாதென்றெண்ணித் தன்னலத்தைக் காட்டிலும் தன் தாய் நலத்தையே எண்ணினான் என்றும் அவர் பின்னர் உணர்ந்திருப்பார். இவனன்றோ தன் தாய்க்குகந்த குமாரன்! இவனது செய்கையன்றோ பொன்னிலும், மணியிலும் மேம்பட்டது! பல்லோராலும் புகழப்படுவது!

# வக்கீலின் மனைவி

வி. அனந்தகிருஷ்ணன்

மதுரையில் வக்கீல் வகுளாபரணமையரைத் தெரியாதவா மிகச்சிலரே. சொற்பவயது; அதிகப்பிரக்யாதியுடையவர்; ஸ்ரீ தேவியின் சீமந்த புத்திரனாய் விளங்கினர். கோமளம் அவருக்கேற்ற மனைவிதான். அவரை மன்மதன் என்றால் அவளை மேனகை, ரம்பை முதலியவர்களிலும் மேம்பட்ட அழகுடையவள் எனக்கூற லாம். இருவருக்கும் கலியாணம் முடிந்து சுமார் ஐந்து வருஷம் இருக்கலாம். பாக்குக் கடித்தாற் போலிருக்கும் இவர் வீட்டு விஷ யங்கள்.

நாட்கள் செல்லச் செல்லக் கோமளத்திற்குத் தன் புருஷ னுடைய குணம் பிடிக்காமல் போயிற்று. எடுத்ததற்கெல்லாம் 'சள்' என்று சீறி விழுந்தார் ஐயர். முதலிலேயே அவருடைய குணம் தெரிந்திருந்தால், கலியாணமே செய்து கொண்டிருக்கமாட் டாள். இரண்டு வயது கூட நிரம்பாத ராகவன் முகத்திற்காக எல்லாவற்றையும் 'சிவனே' என்று பொறுத்துக் கொண்டிருந்தாள்.

கொஞ்சங் கொஞ்சமாய் வக்கீலின் விஷயங்கள் வெட்ட வெளி யாயின. அவர் சற்றும் இரக்கமற்றவரென்றும், பண விஷயத்தில் வெகு கண்டிட்புள்ளவரென்றும், கேஸ்கள் விஷயத்தில் நீதி, அநீதி என்றாராயாமல் தலையிடுகிறவர் என்றும் இன்னும் பலவிதமாகவும் கேள்வியுற்றாள். அவள் மனம், அலையில் மோதுண்டு தத்தளிக்கும் மரக்கலம் போன்று இருந்தது; அறிவு நிலை கலங்கி நின்றாள்.

மழை 'பிசு, பிசு'வென்று தூறிக் கொண்டிருக்கிறது. காற் றும் கோரமாய் வீசுகிறது. சாயங்கால வேளை. ஓர் முக்காடிட்ட ஸ்திரீ வீடு வீடாய்க் கவனித்துக் கொண்டே வருகையில், ஐயர் வீட்டு முன் நின்றாள். சிறிது நேரத்தில் ஒரு வேலைக்காரி கதவைத் திறந்ததும், "அம்மா! உனக்குக் கோடி புண்ணியமுண்டு. இத்தனை நாளாய் நான் பிரவேசிக்கமுயன்றும் என்னை அடித்துத் துரத்தி விட்டார்கள். இப்பொழுது தான் சமயம் வாய்த்தது" என்று சொல்லிக்கொண்டே உள்ளே சென்றாள் புதுமனுஷி.

இவையெல்லாவற்றையும் கோமளம் தாழ்வாரத்திலிருந்தே கவ னித்தாள். அந்த ஸ்திரீ வக்கீலின் ஆபீஸ் அறைக்குட் செல்லவே,

கோமளம் ஓடி வந்து கதவண்டையில் நின்று கொண்டாள். உள்ளே வக்கீலுக்கும் அந்தப் பெண்ணுக்கும் சூடான சம்பாஷணை நடந்த தென்று அவர்களின் உரத்த சத்தத்தால் தெரிய வந்தது. ஏதோ 'பணம்' என்றும், 'கொள்ளையடித்தாய்' என்றும், 'அநியாயம்' என் றும் கேட்டது. கோமளம் உள்ளே ஓடிவிட்டாள். அந்த ஸ்திரீ வெளியே போகும்பொழுது, "நீ நாசமாய்ப் போக! உன் குடும்பம் மண்ணாய்ப் போக!" என்று வைத்து கொண்டே சென்றாள்.

வக்கீல், முகத்தில் கடுகு வெடிக்க, தலையைக்கவிழ்த்திக்கொண்டு மேஜையின் முன் உட்கார்ந்திருந்தார். கோமளம் அன்றுதான் விக சித்த ரோஜா மலரையொத்த வதனத்துடன் தன் பக்கத்தில் நிற்பதை யுங் கவனித்தாரில்லை.

"என்ன உங்களைத் தானே!" என்றாள் அவள்.

"என்னைத் தான், இப்பொழுது எதற்கு?"

"நான் வெகு நேரமாய் நின்று கொண்டிருந்ததையும் கவனி யாமல் அப்படி..."

"சரி சரி உள்ளே போய் அலுவலைப் பார், போ!"

கோமளத்தின் முகம் பச்சோந்திபோல் உடனே மாறியது. கோபத்தினால் முகம் கறுத்தது. "என்ன, எனக்கு ஒன்றுந்தெரியா தென்று நினைக்கிறீர்களா?" என்றாள்.

"உனக்கு என்ன தெரியும்?"

"இப்பொழுது வந்துவிட்டுப் போன ஸ்திரீ...பணம்... அநியாயமாய்..."

"நீ கண்டாயோ அநியாயம் என்பதை?"

"வாங்கின பணத்தைத் திரும்பக் கொடுக்காவிட்டால் அது அநியாயமாகாதோ?"

"ஏதேது, அதிகமாய்ப் போகிறதே. உள்ளே போகிறாயா, உதை வேண்டுமா?"

கோமளம் உள்ளே சென்று விட்டாள்.

கதவண்டையிலிருந்து 'ஒட்டு'க்கேட்டுக் கொண்டிருந்துவிட்டு உள்ளே ஓடினாள் என்று சொன்னேனல்லவா? அப்பொழுது கோமளம் தன் வேலைக்காரி செண்பகத்தை, அந்தப் புதிய மனுஷி யிருக்கும் வீட்டைத் தெரிந்து கொண்டு வரும்படி அனுப்பினாள். அதற்குப் பிறகுதான் கணவரறைக்கு வந்தாள்.

மறுநாள், வக்கீல் கோர்ட்டுக்குப் போயிருக்கும் சமயத்தில், செண்பகம் சொன்ன விலாசத்தைக் கொண்டு, முதனாள் வந்த

ஸ்திரீயின் வீட்டிற்குச் சென்றாள். தன்னை இனம் சொல்லிக்கொள்ளாமல் அவளிடம் வார்த்தையாடினதில், சமாசாரத்தை யறிந்து கொண்டாள். அதாவது, அந்த ஸ்திரீயின் கணவன் வியாபாரத்தில் நஷ்டமடைந்தபொழுது, கடன்காரர்கள் வாரண்டு பிறப்பித்தார்களாம். அதற்குப் பயந்து தன்னிடம் ரொக்கமாக இருந்த இருபதினாயிரம் ரூபாய்களையும் வக்கீல் வகுளாபரணமையரிடம் கொடுத்தாராம். இருவரும் பிராண சிநேகர்களாதலால் எழுத்தில் ஒன்றும் எழுதவில்லை. கஷ்டம் நீங்கின பின்பு அந்த ஸ்திரீயின் கணவர் வக்கீலிடம் பணங்கேட்டபொழுது பணம் தரவேயில்லையென்று ஒரே அடியாய்ச் சாதித்து விட்டார். இதே விசாரமாகச் சில நாட்களில் அவர் மாண்டார். அவருக்குப் பிறகு அந்த ஸ்திரீ அநேக தடவை வக்கீலிடம் பேச எத்தனித்தாள். ஆனால் உள்ளே செல்ல அனுமதி கிடைக்கவில்லை. இவ்வளவே. இந்த விருத்தாந்தத்தைக் கேட்டதும், கோமளத்தின் இதயத்தில் கூரிய அம்புகள் பல தைத்தாற்போல இருந்தது. அந்த ஸ்திரீயிடம் சொல்லிக்கொள்ளாமலே வீட்டிற்கு ஓடி வந்து விட்டாள்.

ஒரு சந்தேகம் ஏற்பட்டது கோமளத்திற்கு. 'ஒரு வேளை அவள் சொன்னது அடியோடு பொய்யாயிருந்தால்?' என்று நினைத்தாள். அதைக் கண்டறிய எண்ணினாள்.

வக்கீல், களைப்பு மிகுதியால் அயர்ந்து நித்திரை செய்தார். அப்பொழுது அவர் அறைக்குள் ஓர் கரிய உருவம் நுழைந்து தன் கையிலிருந்த விளக்கைப் பிரகாசப்படுத்தி, வக்கீலின் முகத்தில் நன்றாய்ப் படும்படி வைத்தது. பிறகு, "அடே துரோகி! என் பணத்தை எடுத்துக் கொண்டு ஏமாற்றினை யல்லவா? என் பெண்டாட்டி சோற்றுக்குத் திண்டாடுகிறாளே? இதோ பார், உன் குழந்தையைக் கொன்று போடுகிறேன்!" என்று உரக்கக் கத்தவே, வக்கீல் விழித்துக் கொண்டார். அப்பொழுது அவருக்கு அறிவு தெளியவில்லையாதலால் அவ்வுருவத்தைக் கண்டு பயந்து, "இதோ கொடுத்து விடுகிறேன், இதோ கொடுத்து விடுகிறேன்" என்று அலறியதும் விளக்கு, திடீரென்று அவிந்தது; உருவமும் மறைந்தது.

நித்திரை மயக்கம் தெளிந்தது; "இதென்ன வெட்கக்கேடு! இருட்டைக் கண்டு பயந்தேனே?" என்று தனக்குள்ளே சொல்லிச் சிரித்துக் கொண்டார். மீண்டும் விளக்கேற்றி வீடெங்கும் சோதனை செய்தார். கோமளமும் ராகவனும் இவ்வுலகப்பற்றையே ஒழித்தவர்கள் போல உறங்கினார்கள். 'பிரமை' என்று தீர்மானம் செய்து கொண்டு மீண்டும் கண்ணயர்ந்தார் ஐயர்.

மறுநாட் காலையில் பழையது சாப்பிட்டுக் கொண்டிருந்தார் வக்கீல். மடியில் ராகவன் படுத்துக்கொண்டு, கைகளையும் கால்களையும் ஆகாயத்தில் நிறுத்திக்கொண்டிருந்தான். சாதத்திற்குத் தயிர் வார்த்துவிட்டு, "அந்தப் பணத்தைத் திரும்பக் கொடுத்து விடுங்களேன். நமக்கோ ஏராளமாக ஈசுவரன் கொடுத்திருக்கிறான். பாவம், அவள் ஒரு வேளைச் சோற்றுக்கும் விதியில்லாமல் திண்டாடுகிறாள்!" என்று கெஞ்சினாள் கோமளம்.

"போடி நாயே! உனக்கென்ன இதைப்பற்றியெல்லாம் கவலை. பின்னே எப்படித் தான் பணம் சேர்ப்பது?" என்றார் வக்கீல்.

* * * *

கோர்ட்டிலிருந்து வந்ததும், வழக்கம் போல் காப்பி வராததால் மனைவியைக் கூப்பிட்டார் ஐயர். ஒரு பதிலையுங்காணோம். வீடெங்கும் தேடினார்; "கோமளம், கோமளம்!" என்று கூவினார்; எங்கும் காணோம். பணப்பெட்டியின் பக்கத்தில் போகும்பொழுது, அதன்மேல் காணப்பட்ட ஓர் காகிதத்தைப் பிரித்தார். அதில் பின் வருமாறு வரையப்பட்டிருந்தது:

சட்டத்தினால் மட்டும் என் கணவராய் இருக்கும் மனிதருக்கு,

இனி உமக்கும் எனக்கும் யாதொரு சம்பந்தமும் கிடையாது. பெயருக்கு மட்டும் நான் உமக்கு மனைவி. உமக்கு மானம் என்பது கிடையாது. பணம் ஒன்றே பிரதானம். உம்மிடம் இருக்கும் ஒவ்வொரு காசும் ஏழைகளின் இரத்தத்துளியாகும். ஆகையால் நான் உம்முடன் அவைகளைப் பகிர்ந்து கொள்ளத் தயாராக இல்லை. நான் சத்தியமாய் மறுமணம் செய்து கொள்ள மாட்டேன். என்னைப் பற்றிய எண்ணத்தையே நீர் விட்டுவிடலாம்.
—கோமளம்

குறிப்பு: அன்று பிசாசாய் வந்து பயமுறுத்தி உண்மையையறிந்து கொண்டது நான்தான்.

# உபாத்தியாயர் பகுதி

## இராப் பள்ளிக்கூடங்கள்

எம். எஸ். சுப்பிரமணியன்

ஒரு தேசம் மேம்பாடடைவது அத்தேச மக்கள் பெறும் கல்வியை சார்ந்திருக்கிறது. ஏனைய நாடுகளெல்லாம் சிறப்புற்று விளங்க நமது பாரத நாடு இவ்வளவு துர்ப்பாக்கிய தசையிலிருப்பதற்குக் காரணம் ஜனங்களிடம் போதுமான அளவு கல்வி பரவாததே. நமது நாட்டை நாம் ஞான பூமியென்று சொல்லிக் கொள்ளுகிறோம். எனினும் இந்நாளில் இந்நாட்டைப்போல் அஞ்ஞானத்தில் மூழ்கியிருப்பது இவ்வுலகில் வேறெந்நாடுமே இல்லை என்னலாம். ஜனசங்கியைப் பிரகாரம் இந்நாட்டில் அரைக்கால் வாசிப் பேருக்குமேல் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாயிருக்கின்றனர். மேல் நாடுகளில் கட்டாய இலவச ஆரம்பக்கல்வி அமுலுக்கு வந்து ஜனங்கள் கல்வியைப் பெற்று அதன் பயனாக அவர்கள் சீரும் சிறப்பும் எய்தப் பெற்று மிக உன்னத நிலையிலிருக்கின்றனர். எனவே நம் நாட்டினரும் மற்ற நாட்டினரைப் போல் மேன்மையுற வேண்டுமானால் இலவச ஆரம்பக்கல்லூரிகளைக் கிராமந்தோறும் ஏற்படுத்தி ஜனங்களைக் கட்டாயமாகக் கல்விபயிலும்படி செய்ய வேண்டும். துரைத்தனத்தார் இது விஷயத்தில் மிகுந்த கவனம் செலுத்துவதோடு ஜனங்களும் ஊக்கத்துடன் ஒத்துழைக்க வேண்டும்.

தவிர, இளமையிற் பற்பல காரணங்களினால் கல்விபயிலாது வயிற்றை நிரப்ப வெவ்வேறு தொழில்களைச் செய்து ஜீவிக்கும் ஏழைத் தொழிலாளர்கள் அநேகர் நிரக்ஷர குக்ஷிகளாய்க் கைச்சாத்திடவும் அறியாது 'கிறல்' போடும் வழக்கம் எத்துணை பரிதாபமாயிருக்கிறது! அந்தோ! வேதங்களுக்கு உறைவிடமும், கம்பன், காளிதாஸன், திருவள்ளுவர் ஆதிய எண்ணிறந்த புலவர்கள் பிறந்து வளர்ந்ததும், 'பல்விதமாயின சாத்திரத்தின் மணம் பாரெங்கும் வீசும்' நாடு என்று பெயர் பெற்றதுமாகிய இந் நாட்டில் இவ்வேழைத் தொழிலாளர்கள் தங்கள் உறவினருக்கு ஒரு கடிதம் எழுத வேண்டுமானால் அலைந்து திரிந்து கற்றவர் ஒருவரைத் தேடி அவரை நயந்து, பல்லிளைக் காட்டிப் பரிதவித்து இரகசியமாக எழுத வேண்டியதையும் பலரறியச் சொல்லி எழுதச் சொல்வதையும்,

அப்படியே இரகசியக் கடிதம் வந்தாலும் பிறரைக் கொண்டு வாசிக்கச்செய்வதையும் சர்வ சாதாரணமாக நாம் பார்க்க நேரிடுகிறதை நினைந்தால் நம்மனம் மிகவும் நோகிறது. யாரிட்ட சாபமோ! கலிகாலக் கொடுமையோ! யாமறியோம். இன்னுருடைய பரிதாப நிலைமையை உணர்ந்து இவர்களுக்கு எண்ணையும் எழுத்தையும் போதித்து இவர்களை முன்னுக்குக் கொண்டுவர வேண்டியது தேச முன்னேற்றத்தில் சிரத்தை கொண்ட ஒவ்வொருவரின் கடமையுமாகும். கூட்டங்கள் கூடி மேடைகளில் நின்று கம்பீரமாகப் பேசிப் பிறர் தம்மைப் புகழ அதில் மகிழ்ந்து நிற்பதைத் தவிர, தேசத்தின் முன்னேற்றத்திற்குரிய இச் சாதாரண விஷயங்களில் பிரவர்த்தித்துத் தொழிலாளருக்கு எழுத்தறிவித்து மேல் நிலைக்குக் கொண்டு வருபவர்கள் மிகச்சிலரே. தொழிலாளர்கள் தங்கள் வேலையைவிட்டு இரவுதான் திரும்புவார்களாகையால் அவர்களுக்குக் கல்வி கற்பிக்க இராப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டியது அவசியம். இப் பள்ளிக்கூடங்களில் தொழிலாளருக்கு இலவசமாகக் கல்வி கற்பிக்கவேண்டும். இவற்றை ஒவ்வொரு கிராமத்திலும் ஏற்படுத்தி அவர்களிடமுள்ள அறியாமையைப் போக்கி, கல்வியறிவைப் புகட்டுவதில் ஒவ்வொரு தேசபக்தனும் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்.

இது வரையில் இரவுப் பள்ளிக்கூடங்களின் அவசியத்தைப் பற்றிக் கூறினோம். இனி இப் பள்ளிக்கூடங்களை நிர்மாணிப்பதைப் பற்றியும், பாடங்கள், வேலைசெய்யும் நேரம் முதலியவற்றைப் பற்றியும் சிறிது சொல்லுவோம்.

எந்தக் காரியத்தை நடத்துவதற்கும் பணம் அவசியம். தனவான்களிற் சிலர் மாதவாரியாகவோ, வருஷவாரியாகவோ கொடுக்கும் திரவியத்தைக் கொண்டு இராப் பள்ளிக்கூடங்களை நடத்தலாம்; என்றாலும் இடையில் அவர்கள் கொடுக்கும் நன்கொடையைச் சில காரணங்களினால் நிறுத்திவிட்டால் பள்ளிக்கூடம் நடைபெறாமற் போய்விடும். ஆகையால் இப்பேர்ப்பட்ட தர்மகாரியத்திற்கு மூலதனம் ஒன்றை ஏற்படுத்தி விட்டால் காரியஸ்தர் யாராயிருந்தாலும் வெகுகாலம் தடையின்றி நடைபெறும். மூலநிதியைச் சேர்ப்பதற்குச் செல்வர்களும் இவ்விஷயத்தில் அனுதாப முள்ளவர்களும் கொடுக்கும் நன்கொடையையும் மாதந்தோறும் கொடுக்கும் திரவிய சகாயத்தையும் தவிர, கீழ்ச் சொன்ன விதங்களையும் அனுஸரிக்கலாம்: 1. பள்ளிக்கூடத்தின் நன்மைக்கு அதிர்ஷ்டச் சீட்டுகளை (Raffle)க்கூட்டி, 'பிரைஸ்' தொகைகள் போக எஞ்சியதைப் பள்ளிக்கூடத்தின் நிதிக்கு எடுத்துக் கொள்ளுதல், (2) பள்ளிக்கூடத்திலும்,

இன்னும் ஜனங்கள் வந்து போகக்கூடிய பொதுக் கட்டடங்களிலும் உண்டியல் பெட்டிகளை வைத்து ஜனங்களிடம் இது விஷயமாய்ப் பிரசாரம் செய்து அவர்கள் விருப்பப்படிப் போட்ட பணத்தைச் சேகரித்தல், (3) மிக்க கியாதி பெற்ற சங்கீத வித்வான்கள், நாடகக் கம்பெனியார் இவர்களைப் பள்ளிக்கூடத்தின் நன்மைக்காக இரண்டொரு கச்சேரிகள், ஆட்டங்கள் முதலியவற்றை நடத்தி அவற்றின் மூலம் வசூலாகும் தொகையை உபயோகித்துக் கொள்ளுதல். இவ்வாறு பற்பல விதங்களால் சேரும் தொகையைச் சரியான பாங்கியில் போட்டு அந்த மூலதனத்தினின்று வரும் வட்டியைக் கொண்டு பள்ளிக்கூடத்தை நடத்துதல் மிகச் சிறந்ததாகும். இக் காரியம் யாவும் கண்ணிய முள்ளவர்களாயும் பொதுஜனஸேவையில் ஈடுபட்டவர்களாயுமுள்ள கனவான்களடங்கிய ஒரு கமிட்டியின் மேற்பார்வையில் இருக்க வேண்டும். சம்பளம் கொடுத்து உபாத்தியாயர்களை நியமிப்பதே சிலாக்கியம்.

தொழிலாளருக் கேற்பட்ட பள்ளிக்கூடம் அவர்களிருக்குமிடத்திற்கு அருகே யிருக்க வேண்டும். பள்ளிக்கூடம் ஆரம்பிக்கும் நேரம் அவர்கள் வேலையினின்று நேராகத் திரும்பி வரும் சமயத்திற்குச் சரியாக இருக்க வேண்டும். பள்ளிக்கூடம் நடக்கும் காலம் சுமார் இரண்டுமணி நேரத்திற்கு அதிகப்படக் கூடாது. பகல் முழுதும் வேலை செய்து களைத்திருப்பார்களாதலால் அவர்களுக்கு இரண்டு மணி நேரத்துக்குமேல் இருந்து படிப்பது மிகவும் சிரமம் ஆகும். அறுப்புக் காலங்களிலும் மற்றும் விசேஷ உற்சவ காலங்களிலும் பள்ளிக் கூடத்திற்கு விடுமுறை கொடுக்கலாம்.

இரவுப் பள்ளிக்கூடங்களில் நடைபெறத் தக்க பாடமுறைகளில் சில விஷயங்களை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். தொழிலாளர்கள் வயதானவர்களானபடியால் சிறுவர்கள் போலல்லாமல் எதையும் சீக்கிரத்தில் கிரகித்துக் கொள்வார்கள். அவர்களுக்குச் சிறுகக் கற்பிக்க வேண்டுமென்பது மில்லை. சிறுவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பது போலல்லாமல் வேறு முறையை அனுசரித்து விஷயத்தைக் கொஞ்சம் அதிகமாகவும் சீக்கிரம் அபிவிருத்தியாகும்படியும் கற்பிக்க வேண்டியது. வேலையிலிருந்து வந்ததும் களைத்திருப்பார்களாதலால் கடினமான பாடங்களை முதலில் ஆரம்பிக்காமல், உற்சாகம் தரத்தக்கதும் படிப்பினையுள்ளதுமான சிறு கதைகளைச் சொல்லுதல், பக்திரஸமுள்ள பாடல்களைப் பாடல் முதலியவற்றை நடத்துதல் நலம். எடுத்த புஸ்தகத்தை எழுதல், கையெழுத்துப் பிரதிகளைப் படித்தல், கடிதம் எழுதல், கணிதம், பூகோளம், தேச சரித்திரம், இராஜாங்க முறை முதலியவற்றைக்

கற்பிக்க வேண்டும். வாரம் ஒன்று அல்லது இருமுறை சுகாதார விஷயமாகவும், சன்மார்க்க விஷயமாகவும் தேர்ந்த பெரியோர்களைக் கொண்டு பிரசங்கங்கள் புரியும்படி செய்யலாம். தொழிலாளர்கள், தங்களையும் தங்கள் இருப்பிடங்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ளவும், நற்குணங்களுடையவர்களாவும் தன்மதிப்புள்ளவர்களாவும் இருக்கவும் செய்ய வேண்டும். தெய்வபக்தி, மத விஷயத்தில் சமரச உணர்ச்சி இவை அவர்களிடம் வேரூன்றும்படி செய்தல் நன்று. இந் நோக்கத்தை இனிது நிறைவேற்றும்படிக்கு இராமாயணம், பாரதம், புராணம் முதலியவற்றிலுள்ள கதைகளை வாசிக்கும்படியும் கேட்கும்படியும் தூண்டுவது ஒருவாறு பலன் தருவதாகும். உலக விஷயங்களைத் தெரிந்து கொள்வதற்காகப் பத்திரிகை வாசிப்பதற்கு ஆசையைத் தூண்டவேண்டும். இவ்விதமாகப் பற்பல விதங்களில் ஏழைத் தொழிலாளருக்கு அறிவு புகட்டி வரவேண்டும். இவ்வித இராப்பள்ளிக்கூடங்கள் கிராமங்கள்தோறும் ஏற்பட்டு ஒழுங்காக நடந்துவரின் கல்விமணம் எங்கும் கமழ்ந்து அஞ்ஞான இருள்போய் ஞான உதயமாகித் தேசம் மேன்மையாக விளங்குமென்பதில் ஐயமுண்டோ!

ஆகையால் தேச பக்தர்களே! வீணில் காலத்தைப் போக்காது இப்படிப் பட்ட நற்பணியில் பிரவேசித்து ஏழைத் தொழிலாளர் சகோதரர்களைக் கைதூக்கி விடுங்கள். செல்வச் சீமான்களே! நீங்கள் விருந்துக் கச்சேரிகளிலும் வீண் ஆடம்பரத்திலும் செலவழிக்கும் பெரும்பொருளில் சிறிதையேனும் இத் தர்மத்திற்கு உதவிப் பேரும் புகழும் அடைவீர்களாக!

"இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
  இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
  ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
  பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
  ஆங்கோர் ஏழைக் கெழுத்தறி வித்தல்"

என்று காலஞ் சென்ற தேசபக்த கவி சுப்பிரமணிய பாரதியார் சொன்னபடி வித்தியாதானமே மற்றத் தான தருமங்களினும் சிறந்தது. ஆகையால் செல்வர்கள் பணத்தைக் கொடுத்து உதவியும், தேச பக்தர்கள் இவ்விஷயமாய் உழைத்து இரவுப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி ஏழைத்தொழிலாளருக்கு எழுத்தறிவித்தும் பாரதநாடு சமீப எதிர்காலத்தில் முன்னை நிலையினும் மேலான நன்னிலையினை அடையுமாறு உபகரிக்க முற்படுதல் வேண்டும்.



# குழந்தைகள் கதை



## மூன்று கரடிகள்

ஒரு காட்டில் மூன்று கரடிகள் இருந்தன. ஒன்று அப்பா கரடி, ஒன்று அம்மா கரடி, ஒன்று பாப்பா கரடி. ஒரு நாள் அவர்கள் வெளியே விளையாடப் போனார்கள். அவர்கள் வீட்டைத் திறந்து வைத்து விட்டார்கள்.





ஒரு பெண் காட்டில் தனியே வந்தாள். அவள் பெயர் பத்மா. பத்மா கதவு திறந்து இருந்த வீட்டைப் பார்த்தாள். அந்த வீடு தான் கரடிகளின் வீடு.

பத்மா அந்த வீட்டினுள் போனாள். அங்கே மூன்று நாற்காலிகள் இருந்தன. ஒன்று அப்பா கரடியின் நாற்காலி; அது நிரம்பப் பெரியதாக இருந்தது. ஒன்று அம்மா கரடியின் நாற்காலி; அதுவும் கொஞ்சம் பெரியது. ஒன்று பாப்பா கரடியின் நாற்காலி. பத்மா அதில் உட்கார்ந்தாள்; அது 'படீர்' என்று ஒடிந்து விட்டது.



அங்கே ஒரு மேஜையின்மேல் மூன்று கிண்ணங்கள் இருந்தன. கிண்ணங்களில் பால் இருந்தது. பெரிய கிண்ணத்தில் பால் மிகவும் சூடாக இருந்தது. பத்மா அதை எடுத்ததும் கொட்டிவிட்டாள். கொஞ்சம் பெரிய கிண்ணத்தில் உள்ள பாலில் சர்க்கரை இல்லை. சிறு கிண்ணத்திலுள்ள பால் ஆறியும் தித்திப்பாயும் இருந்தது. பத்மா அந்தப் பாலைக் குடித்தாள்.



பால் குடித்ததும் அவளுக்குத் தூக்கம் வந்தது.




படுத்துக்கொள்ள அங்கும் இங்கும் பார்த்தாள். மூன்று கட்டில்கள் இருந்தன. ஒன்று மிகப் பெரிய கட்டில்; அதன் மெத்தை கல்லாய் இருந்தது. இரண்டாவது கொஞ்சம் பெரிய கட்டில்; அதன் மெத்தையும் கொஞ்சம் கடினமாயிருந்தது. மூன்றாவது கட்டில் சின்னக் கட்டில்; அதன் மெத்தை மெத்தென்று இருந்தது. பத்மா அதன் மேல் படுத்துக்கொண்டாள்; படுத்ததும் தூங்கிவிட்டாள்.

பிறகு மூன்று கரடிகளும் வீட்டிற்கு வந்தன. அப்பா கரடி தன் நாற்காலியைப் பார்த்தது. அம்மா கரடி தன் நாற்காலியைப் பார்த்தது. பாப்பா கரடி தன் நாற்காலியைப் பார்த்தது; பாப்பா கரடியின் நாற்காலி ஒடிந்து கிடந்தது.



“ஐயோ! என் நாற்காலியை யாரோ ஒருவன் ஒடித்துவிட்டான்! கூ! கூ!!” என்று அதுகத்தினது.



அப்பா கரடி தன் பால் கிண்ணத்தைப் பார்த்தது; பால் எல்லாம் கொட்டிக் கிடந்தது.

அம்மா கரடி தன் பால் கிண்ணத்தைப் பார்த்தது; பால் கொஞ்சம் குறைந்து இருந்தது.

பாப்பா கரடி தன் பால் கிண்ணத்தைப் பார்த்தது; "பாலை யாரோ குடித்து விட்டான்! கூ! கூ!!" என்று கத்தினது.

"யாரோ ஒரு திருடன் இந்த வீட்டிற்குள் வந்திருக்கிறான்!" என்று மூன்று கரடிகளும் அங்கும் இங்கும் ஓடின. அப்பா கரடி தன் கட்டிலைப் பார்த்தது; மெத்தை கலைந்து இருந்தது. அம்மா கரடி தன் கட்டிலைப் பார்த்தது; மெத்தை கலைந்து இருந்தது.



பாப்பா கரடி தன் மெத்தையைப் பார்த்தது; "இதோ திருடன்! இதோ திருடன்!" என்று கத்தினது.

பத்மா இந்தச் சத்தத்தைக் கேட்டாள்; உடனே விழித்துக் கொண்டாள். மூன்று கரடிகளையும் பார்த்தாள். அதிகப் பயமாக இருந்தது. எதிரில் ஒரு ஜன்னல் திறந்து இருந்தது. அதன் வழியாக வெளியே குதித்தாள்; ஓட்டமாக ஓடித் தன் வீட்டிற்கு வந்துவிட்டாள்.



அவள் அம்மா குழந்தைக்குப் பாலும் பழமும் கொடுத்தாள்.



[எஸ். ஜகந்நாதன்.]

# குழந்தைகள் விளையாட்டு

## கிள்ளாப்பரண்டி

[கீழ்வரும் பாட்டு, குழந்தைகள் நாலைந்து பேர்கள் கை விரலைத் தரையின்மேல் வைத்துக்கொள்ள ஒருவர் இந்தப் பாடலைச் சொல்லக் கடைசியில் முடிந்ததும் கையை மடக்கவேண்டும்.]

கிள்ளாப்பரண்டி, கீப்பரண்டி!
மாப்பரண்டி, மல்லிகை மூச்சி!
உங்களப்பன் தலையிலே என்ன மூச்சி?
(ஒரு குழந்தை இவ்வாறு கேட்க, மற்றொரு குழந்தை சொல்வது:)
முருக்க மூச்சி.
(முன்பு சொன்ன குழந்தை மீண்டும் சொல்லும்:)
முருக்க மூச்சி பிடிச்சவனே!
முந்நாழி மாம்பழம் தின்றவனே!
ஆனி மாம்பழம் தின்றவனே!
அப்பச்சி கையை மடக்கு.
(மாட்டேனென்று ஒரு குழந்தை சொல்லும்.)
மாட்டேன்னு வல்லேன்னு
வல்லப்பன் தங்கையைக் கொல்லேனு!
தார்தார் வாழைக்காய்,
தாம்பரம்போலக் கோபுரம்,
புதுப்பெருமாள் மண்டபம்,
பூமாதேவி கையை மடக்கு. [வி. எஸ். பா.]

---

## ஊசியும் தட்டானும்

கதை கதையாம் காரணமாம்!

காரணத்தில் ஓர் உழக்காம்
அப்பம் சமைக்க, குழக்கட்டை கூத்தாட,
நண்டு கதைசொல்ல, நாச்சிமார் கேட்க,
குருடன் படிக்க, செவிடன் கேட்க, சப்பாணி தாளம்கொட்ட,
உழுதுவந்த மாட்டுக்குப் புல்பிடுங்கப் போனேன்;
புல்லெல்லாம் மண்ணாய்ப் போச்சு;
மண்ணலம்பத் தண்ணீருக்குப் போனேன்,
தண்ணீரெல்லாம் மீனாய்ப் போச்சு;
மீன்பிடிக்க வலைக்குப் போனேன்,
வலையெல்லாம் பீத்தலாய்ப் போச்சு;
பீத்தல் தைக்க ஊசிக்குப் போனேன்,
ஊசியும் தட்டானும் ஒக்க மடிந்தான். [வி.எஸ். பார்த்தஸாரதி]

## விடு கதைகள்








குழந்தாய்! மேலேயுள்ள படங்களைப் பார்த்து, பின் வரும் விடுகதைகளுக்குள் ஒவ்வொன்றுக்கும் எது சரியான பதில் என்று தெரிந்துகொள் :

1. இரண்டு கண் படைத்திருக்கும்; இரண்டு காலுண்டு; வயிற்றிலே கத்தியைக் கட்டிக்கொண்டு வந்தவர்களை வெட்டி விழுங்குவான். இவனைப் பாக்குத் தின்னும் பித்தன் என்று அழைப்பது பொருந்தும். இவன் யார்?

2. சிமிழும் சிமிழும் சேர்ந்தாற்போல, மாதர் கொண்டை முடித்தாற்போல, மஞ்சள் பூசிக் குளித் தாற்போல, சிவப்பு ரத்தினங்கள் குவித்தாற்போல. அது என்ன?

3. வாய் கூசாமல் பேசுவான்; இராப் பகல் உறங்கமாட்டான்; உணவு உண்ணுன்; நீர் அருந் தான்; இரு கைகளாலே ஜாடை காட்டுவான்; சுவரில் ஏறி நிற்பான்; எப்பொழுது கேட்டாலும் அப் பொழுதே பொழுதுரைப்பான். அவன் யார்?

4. உடம்பு எல்லாம் உரோமம் உண்டு; வால் நீண்டிருக்கும்; மரமேறித் தாவுவான்; பழம் தின் பான்; அணிலுமல்ல. கிளைகளைப்பிடித்து ஊஞ்சலாடு வான்; நாம் எப்படிச் செய்யினும் அப்படிச் செய் வான்; இலங்காபுரிக் கோட்டையைத் தாண்டினவன் இவனே. அவன் யார்?

5. பட்டையுண்டு, கட்டையில்லை; இலையுண்டு, கிளையில்லை; பூவுண்டு, காயுண்டு, பழமுண்டு, விதை யில்லை. விதையில்லாமல் கன்றுகள் ஈனுவான். ஒரு குலை ஈன்று தன் உயிர் விட்டிடுவான். அவன் யார்?

6. பட்சியிற் சிறந்த பட்சி; சிறகை விரித்தாடும் பட்சி; அமரர்கோனைக் காத்த பட்சி; ஆயிரங் கண் பெற்ற பட்சி. அது என்ன?

# குழந்தைகள் பாட்டு



## கழுதை

கழுதைக்குச் சேணமிட்டு,

கடிவாளமும் மாட்டி,

கடம்பூர்ப் பாதையிலே

கடுகி நடக்கும் வண்ணாரே!

கழுதைக்கேன் கொம்பில்லே?

கண்டறிந்து சொல்லுமே.

[சூடாமணி.]



## வளையல்

வளையல் வாங்க வில்லையோ !—நல்ல
வளையல் வாங்கவில்லையோ !
வெள்ளி வளை, புள்ளி வளை,
கள்ளமில்லா நல்ல வளை,
தேன் வளை, பாகு வளை,
மேலான தங்க வளை,
மஞ்சள் வளை, முடுகு வளை,
மாதர்கள் விரும்பும் வளை,
பம்பாய் வளை, பார்சி வளை,
பர்மாவில் விற்ற வளை,
சின்ன அம்மா மார்களே !
பெரிய அம்மா மார்களே ! [சூடாமணி.]




# புடைவைகள்

வி. விசாலாக்ஷி அம்மாள்

'பூணத் தெரிந்தால் மட்டும் போதுமா? பேணத் தெரிய வேண்டாமா?' என்று ஒரு சொல் உண்டு. இது போலவே, புடைவைகளை வாங்கினால் மட்டும் போதாது; அவைகளைச் சரிவரக் காப்பாற்றிவைக்கத் தெரிந்திருப்பது அவசியம். நல்ல புடைவைகளை வருஷக் கணக்கில் மடித்து அப்படியே உள்ளே வைத்துவிடக் கூடாது. இரண்டு மூன்று மாதங்களுக்கு ஒரு தடவையாவது எடுத்து, சற்று நேரம் உடுத்திக் கொள்ளுவதே நலம். இவ்விதம் செய்வதால் புடைவையின் பளபளப்புக் குன்றாமல் இருக்கும். இதற்கு ஆங்கிலத்தில் 'காற்றாடல்' என்று சொல்லுகிறார்கள். 'காற்றாடும் படி'ப் புடைவைகளை உடுக்கா விட்டால், அவைகளின் பளபளப்புக் குன்றுவதுடன், சாயம் வெளுத்தும், புடைவை மடிப்பு விழுந்த இடங்களில் மங்கியும் காணும். மேலும், நல்ல நல்ல புடைவைகளை வெயிலில் போடவே கூடாது. புடைவைகளைக் கட்டிக் கொள்ளாமல் சற்றுநேரம் வெளியில் பிரித்துக் காற்றாடும்படி வைக்க இஷ்டப் படுகிறவர்கள், நிழலான, வெளிச்சமான, காற்றோட்டமுள்ள இடத்தில் கொடி கட்டி, புடைவைகளை அதன் மேல் பிரித்துப் போட்டு வைக்கவேண்டும்.

மறுபடியும் புடைவையை மடித்துவைக்கும்பொழுது, பழைய மடிப்பு இருந்த இடம் வெளுத்தோ அல்லது மங்கியோ காட்டினால், அந்த மடிப்புகளைத் தவிர்த்துப் புதிய மடிப்புகள் வேறு இடங்களில் விழும்படி மடிப்பதே உசிதம். புடைவைகள் தட்டுத் தட்டாக வெளுத்துக் காணும் பக்ஷத்தில், வேறு சாயம் தோய்த்து விட்டால் நன்றாக இருக்கும். உடுத்த புடைவையை உடனேயே மடிக்கக் கூடாது; அரைமணி நேரம் வரையிலாவது, கொடியிலோ, அல்லது 'ஸ்டாண்டு' மேலே காற்றாடும்படி பிரித்துப்போட்டு வைத்திருந்து, பிறகே மடித்து உள்ளே வைக்கவேண்டும்.

இலேசான நிறங்கள் உள்ள புட்டாப் புடைவைகள் மடித்துச் சாதாரணமாக உள்ளே வைப்பதாலேயே கெட்டு விடுகின்றன. புட்டாக்கள் பட்டின்மேல் கரையாக விழுந்து புடைவையை அவலக்ஷணமாகச் செய்து விடுகின்றன. இந்தப் புடைவைகளை மறுபடி சாயம் தோய்த்தாலும் அவ்வளவு நன்றாக இராவாதலால், மடித்து உள்ளே வைக்கும்பொழுது மடிப்புக்களுக்கு நடுவில் மெல்லிய 'டிஷ்யூ'க் கடுதாசிகளையோ, அல்லது வெள்ளைத் துணியையோ வைத்து மடிப்பதே நலம். முடியுமானால், இரண்டாக மடித்துப் பெரிய பீரோக்களில், ('வார்ட் ரோப்') கொக்கிகளில் அப்படியே தொங்கவிடலாம்.

புடைவைகளை மடித்து வைக்கும் பெட்டியிலோ, பீரோவிலோ, கற்பூரத்தை ஒரு துணியில் முடிந்து வைப்பதால் ராமபாணம் முதலிய பூச்சிகள் புடைவைகளை நாசம் செய்யாமல் இருக்கும். மருவை நிழல் உலர்த்தலாக உலர்த்திப் பொட்டலங்களாகச் செய்து துணிகள் வைக்கும் பெட்டிகளில் வைத்தால், பூச்சிகள் வராமல் இருப்பதுடன் நல்ல வாசனையாகவும் இருக்கும் என்று கூறுகிறார்கள். நல்ல புடைவைகளை ஜாக்கிரதையாகப் போற்றிவைத்தால் வருஷக் கணக்கில் அப்படியே அழகாக இருக்கும். மேலும், இவ்விதம் வைக்கப்பட்ட புடைவைகள், நாளடைவில், புதுப்புடைவைகளுக்கு இல்லாத ஒருவித சோபையுடன் விளங்கும்.

## மாங்காய் மாம்பழம் இவைகளின் சாதம்

'மாங்காய்க் காலத்தில் மாங்காய் தின்னுவிட்டால் வீங்கித் தூங்கிச் சாவார்கள்' என்று ஒரு நாடோடி வசனமுண்டு. மாங்காயைப் பலவிதங்களில் பக்குவம் செய்து சாப்பிடலாம். கீழே மாங்காய், மாம்பழம் இவைகளினால் சித்திரான்னம் தயாரிக்கும் முறைகளை எழுதுகிறேன்.

### மாங்காய் ரஸச் சாதம்

மாங்காயை மேல் தோலைச் சீவி விட்டு, கொப்பரைத் துருவு மணையின் மேல் தேய்த்தால் கீழே துருவல்கள் விழும், மாங்காயை இவ்விதம் துருவி உரலில் போட்டு மர உலக்கையால் நன்றாக இடித்து மெல்லிய வெள்ளைத் துணியில் போட்டு ரஸத்தைப் பிழிந்து எடுத்துக் கொள்ளவேண்டும். பிறகு எலுமிச்சம்பழச் சாதம் கலப்பது போல் கலந்து, எலுமிச்சம் பழ ரசத்துக்குப் பதிலாக மாங்காய் ரசத்தை உபயோகிக்க வேண்டும். இந்தச் சாதம் தயாரிப்பதற்கு ரசம் எடுப்பதற்கான மாங்காய், நல்ல புளிப்புள்ளதாயும் முற்றினதாயும் இருக்க வேண்டும்.

### மாங்காய்ச் சாதம்

இதற்கு மாங்காய் அதிகப் புளிப்புள்ளதாக இருக்கக் கூடாது; பச்சரிசி மாங்காய் போன்ற முற்றிலும் தித்திப்பான மாங்காயும் உத

வாது. மாங்காயைத் தோலைச் சீவித் துருவிக் கொள்ளவேண்டும். பிறகு ஒரு பாணலியில் பெருங்காயம், கடுகு, கடலைப் பருப்பு, அல்லது உளுத்தம் பருப்பு, வேண்டிய அளவு துண்டு செய்த பச்சை மிளகாய், கறிவேப்பிலை இவைகளைத் தாளிதம் செய்து, இதில் கொஞ்சம் தேங்காய்த் துருவலைப் போட்டுக் கிளறி, அது சற்றே சிவந்ததும், மாங்காய்த் துருவலை அதில் கொட்டிக் கிளறி இலேசாக வதக்கிக் கொள்ளவேண்டும். இதைச் சாதத்தில் கொட்டி, பக்குவமாக உப்புப் பொடி சேர்த்து, உருக்கின நெய் விட்டுக் கலந்து உபயோகிக்க வேண்டும். இந்தச் சாதம் வாய்க்கு ருசியாகவும், ஆரோக்கியமாகவும், மணமாகவும் இருக்கும். இதனுடன் சாப்பிடுவதற்கு உருளைக் கிழங்கு, வாழைக்காய் இவைகளை வறுவலாக வறுத்து, டொமாடோ, வெங்காயம் இரண்டையும் நறுக்கி, புளிப்பில்லாத தயிரில் 'ஸாலட்' செய்து வைக்கலாம்.

## மாம்பழ ரஸச் சாதம்

இது தென் இந்தியர்களால் சகஜமாகச் செய்யப்படும் சித்திரான்னமல்ல. கால்படி அரிசியை நன்றாகக் களைந்து வடிய வைத்துக் கொள்ளவேண்டும். பிறகு ஒரு பாணலியில் கொஞ்சம் நெய்யை விட்டு அதில் களைந்த அரிசியைக் கொட்டி, சற்றே சிவக்கும் வரையில் வறுத்துக் கொள்ளவேண்டும். தித்திப்பான நாருள்ள மாம்பழங்களை வாங்கி அலம்பிக் கசக்கிப் பிழிந்து, அந்த ரஸத்தை வடிகட்டிக் கொள்ளவேண்டும். அரிசி கால்படியானால் பழ ரசம் ஒரு படி வேண்டும். மாம்பழ ரசத்தை ஒரு ஈயம் பூசின பாத்திரத்தில் விட்டுக் காய்ச்ச வேண்டும். அது கொதி கண்டவுடன் தயாராக வறுத்து வைத்திருக்கும் அரிசியை அதில் கொட்டிக் கிளறி மூடவேண்டும். அரிசி சுமாருக்கு வெந்த பதம் பார்த்து, பன்னிரண்டு பலம் சர்க்கரையையும், கொஞ்சம் திராக்ஷைப் பழம் வாதுமைப் பருப்பு இவைகளையும் அதில் கொட்டிக் கிளறவேண்டும். அடுப்பைப் பிரித்துச் சாதத்தைக் கொஞ்ச நேரம் வரையில் தணல் மேலே வைக்கவேண்டும். வாதுமைப் பருப்பை முதலிலேயே தோலை நீக்கி வறுத்தும், திராக்ஷைப் பழத்தைக் குச்சி முதலியவைகள் இல்லாமல் பொறுக்கி வறுத்தும் சாதத்தில் போடவேண்டும். இதில் ஐந்தாறு பலம் நெய்யைக் கொட்டிக் கிளறி, கொஞ்சம் தூளாக உடைக்கப்பட்ட கற்கண்டுத் துண்டுகளையும் போட்டுக் கலந்து உபயோகிக்க வேண்டும். மதுர அன்னங்கள் பிடித்தவர்களால் இது ஒரு ருசிகரமான அன்னமாகக் கொண்டாடப்படுகிறது.




**வி**டுமுறை நாட்கள்:—சாந்திநிகேதனத்தில் கோடைகால விடுமுறைக்குப் பிள்ளைகள் போகுமுன் கவி ரவீந்திர நாத தாகூர் ஓர் உபந்யாசம் செய்தார். விடுமுறை நாட்களின் உட்கருத்து என்ற விஷயத்தைப்பற்றிப்பேசினர். அவர் பேசியதன் சாரம் பின்வருமாறு:—சிறுவர்கள் பள்ளிக்கூடத்துக்குப் போய்ப்படிக்கும் நாட்களைவிட உண்மையான அறிவையடைய விடுமுறை நாட்களில் அதிக சந்தர்ப்பம் கிடைக்கும். அறிவை மூளைக்குள் செலுத்துவதென்பது எப்போதும் முடியாது. வெளி அனுபவத்தால் உண்மையறிவு கொஞ்சம் கொஞ்சமாய் உட்செல்லும். நித்தியமாகச் செய்யும் வழக்கப்படி வேலைகளிலிருந்து மனது விடுவிக்கப்பட்டால்தான் அது உண்மை அறிவு சம்பாதிக்கத்தக்க கருவியாகிறது. தேகமாகிய இயந்திரத்துக்கு வேலையிலிருந்து ஓய்வு அவசியந்தான். ஆனல் பணமுதலிய சம்பாதனைக்கு ஆசைப்படாமல் அறிவையும் குணத்தையும் சம்பாதிக்க ஆசையுள்ள சிறுவர்களுக்கு நீண்ட விடுமுறை—ஓய்வுகாலம்—மிக்க அவசியமானது. இக்காலம் உபாத்தியாயர்களிடத்தும் இயற்கையிடத்தும் கிரகித்த விஷயங்களை உருப்படுத்தியமைக்கவும் உபயோகப்படும். ஓய்வெடுத்துக் காலம்கழிக்கும்போதுதான் முதல்தரமான யோசனைகள் தோன்றும். பாடபுத்தகங்களை உருப்போடப் பிள்ளைகளுக்குக் கற்பிப்பதில்லை. பிள்ளைகள் நல்ல மேம்பட்ட கல்வியறிவுடையவர்களோடும் இயற்கை வனப்போடும் கலந்து மனதையும் தேகத்தையும் பழக்கச் சொல்லிக்கொடுக்கப்படுகிறது. தாங்கள்செய்திருக்கும் காரியங்களைப் பரிசோதித்துப்பார்த்து மனதில் புதிதாகத் தோன்றும் எண்ணங்களைப் பக்தியோடு ஏற்று விடுமுறை நாட்களை நல்ல விதமாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

—சு. மீ.

உயர்ந்த அழுத்தம் (High Pressure):—சமுத்திரக்கரையில் வாயுவின் அழுத்தம் (Pressure) ஒரு சதுர அங்குலத்திற்குச் சுமார் 15 பவுண்டு. வாயுக்களை வெகு அழுத்தத்திற்குட்படுத்தினல் அவை திரவம் போலாகின்றன. ரஸத்தைச் சதுர அங்குலத்திற்கு 1760000 பவுண்டு அழுத்தத்திற்குட்படுத்தினல், அது சாதாரண உஷ்ணநிலையிலும் திடப்பொருளாகிறது. 60000 பவுண்டு அழுத்தத்தில் எண்ணெய் ஓடக்கூடாதபடி கெட்டியாகிறது; மெழுகுகள் உருக்கைப் போல் திடசக்தி காண்பிக்கின்றன.

—போ. ப.

உலோகங்கள்:—உலோகங்களில் மிகவும் லேசானது லிதியம் என்பது. அது நீரில் பாதிகனமுள்ளது; கெட்டியைப்போல் மிதக்கக்கூடியது. மிகவும் கனமுள்ள உலோகம் ஓஸ்மியம் (Osmium). அது நீரைப்போற் பதினன்கு மடங்கு கனமுள்ளது.

—ஜக.

**பேசுங் கடிகாரம் :**—சாஸ்திர அறிவின் வளர்ச்சியால் கடிகாரம் பேசும்படி செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதப் பேசுங் கடிகாரம் பாரிஸ் நக்ஷத்திரச் சாலையில் வைக்கப்பட்டிருக்கிறது. சரியான மணியென்ன வென்று டெலிபோனில் கேட்பவருக்கு அது விடை யளிக்கிறது. மணி என்னவென்று தெரிந்து கொள்ள விரும்பினால் கடியாரத்தைப் பார்த்து மணி சொல்லக்கூடிய டெலிபோன் உத்தியோகஸ்தரை இனிக் கேட்கவேண்டியதில்லை. மணி கேட்போருடைய வேண்டுகோள் தானாகவே அந்தக் கெடியாரத்துடன் சம்பந்தத்தை ஏற்படுத்திக்கொள்ளும். பிறகு அந்த இயந்திரமானது டெலிபோன் மூலம் மணி, நிமிஷம், விநாடி இவைகளை அறிவிக்கும். ஸினிமாக்களில் நகர்ந்து கொண்டே பேசும் படங்களிலிருக்கும் மூன்று துண்டுகளைப் போன்று இது அமைக்கப் பட்டிருக்கிறது. ஸினிமாக்களில் பேசுவது அல்லது பாடுவதுபோலில்லாமல் முதல் துண்டில் 24 மணிகளுக்கும் வார்த்தைகள் இருக்கின்றன. இரண்டாவது துண்டில் 60 நிமிஷம் வரை ஒவ்வொரு நிமிஷத்திற்கும் வார்த்தைகள் இருக்கின்றன. மூன்றாவது துண்டில் ஒவ்வொரு 10 விநாடிகளுக்கும் வார்த்தைகள் இருக்கின்றன. இந்த மூன்று துண்டுகளும் கெடியாரத்துடன் சம்பந்தப்பட்டிருக்கின்றன. எந்த நேரத்திலும் அக்காலத்தியமணி, நிமிஷம், விநாடி இவைகளைக் காட்டக்கூடிய ஸ்திதியில் இவை இருக்கின்றன. மணி என்னவென்று யாரேனும் கேட்டால் இந்த மூன்று துண்டும் ஒன்றின்பின் ஒன்றாக மணி, நிமிஷம், விநாடி இவைகளைச் சொல்லுகின்றன. —சு. மீ.

**சீனர்கள் பழக்கங்கள் :**—சீனர்களுடைய பழக்க வழக்கங்கள், பொதுவாக மற்ற நாட்டாருடைய பழக்க வழக்கங்களுக்கு நேர்மாறானவையா யிருக்கின்றன. உதாரணமாக, சீனர்கள், தங்கள் ஆகாரத்தின் கடைசி பாகமாகவே குழம்பைச் சாப்பிடுகிறார்கள். விருந்துக்கு யாரையேனும் வரவழைத்தால், அவருடன் கைகுலுக்குவதை விட்டு, யார் அழைத்தனரோ அவரே தம்கையைக் குலுக்கிக்கொள்கிறார். சீனர்கள், துக்கத்திற்கு அறிகுறியாக வெள்ளை ஆடைகளை அணிகிறார்கள். தவிர, சிறுவர்கள், தங்களுடைய பிற்காலத்தில் இன்ன இன்ன துறையில் இறங்கிச் சம்பாதிக்க வேண்டுமென்பதற்கு ஒரு விநோதமான முறை அநுசரிக்கப்படுகிறது. பெற்றோர்கள் ஒரு கூடையில், ஒரு நாணயம், ஒரு புஸ்தகம், ஒரு பேனா, ஒரு ப்ரஷ், ஒரு மோதிரம், ஒரு செருப்பு இப்படியாகப் பல சாமான்களைப் போட்டு வைக்கிறார்கள். பையனை அழைத்து 'விருப்பமானதை எடு' என்று சொல்கிறார்கள். சிறுவன் நாணயத்தை எடுத்தால் அவன் ரொக்க வியாபாரியா யிருப்பானென்று தீர்மானிக்கிறார்கள் ; புஸ்தகத்தை எடுத்தால் அவன் கல்விமானாய் இருப்பானென்று நிச்சயிக்கப்படுகிறது. அதற்குத் தகுந்தாற்போலவே, அவர்களுக்குக் கல்விப் பயிற்சி செய்விக்கப்படுகிறது. —ஸ்ரீ. சே.

**இங்கிலாந்தில் மாம்பழ வியாபாரம் :**—ஏப்ரல் மாதம் பம்பாயிலிருந்து புறப்பட்ட ஒரு கப்பலில் வியாபாரத்துக்காக 60 ஆயிரம் மாம்பழங்கள் அனுப்பப்பட்டன. அவற்றோடு அரசர்பெருமானுக்கென 60 சிறந்த பழங்களும் அனுப்பப்பட்டன. கவர்னர், புதிதாக ஆரம்பிக்கப்பட்டுள்ள இந்த வியாபார

விஷயத்தில் அதிக அக்கறை கொண்டு தாமே நேரில் சென்று பழங்கள் அனுப்பப்படும் விதத்தைக் கவனித்தார். அங்கிருந்தவர்கள், பழத்தைக் கட்டி அனுப்பும் விதத்தைப் பற்றிக் கவர்னருக்குச் சொன்னார்கள். கப்பலில் குளிர்ந்த இடத்தில் இந்தப் பழங்கள் சேர்த்து வைக்கப்படுவதையும் அவர் நேரில் சென்று பார்த்தார். சென்ற வருஷந்தான் முதல் முதலாக இங்கிலாந்தோடு இந்தியா மாம்பழவியாபாரம் செய்ய ஆரம்பித்தது. இந்த வியாபாரம் அபிவிருத்தி யடைய, கவர்னரும் மாகாணக் கவர்ன்மெண்டாரும் விசேஷ உதவிசெய்து வருகிறார்கள். சென்ற தடவை மேனுட்டில் பலவிடங்களுக்குச் சரிவரப்பங்கிட்டுப் பழங்களை அனுப்பாததால் சரியான பலன் கிடைக்கவில்லை; ஆனால் இந்த வருஷம் தக்க ஏற்பாடுகள் செய்திருப்பதால், இங்கிலாந்திலும் மற்றப் பிரதேசங்களிலும், இந்திய மாம்பழங்களுக்கு அதிக கிராக்கியிருக்கும். சென்ற வருஷம் ஒரு டஜன் மாம்பழம் 6 ஷிலிங் முதல் 25 ஷிலிங்வரை விற்றது. ஆனால் இந்த வருஷம் இன்னும் விலை அதிகரிக்குமெனத் தெரிகிறது. ஜூன் மாதம் முடியும்வரை 15 நாளைக்கு ஒருதரம் புதிதாகப் பழம் அனுப்பப்பட்டு வரும். பம்பாய் மாகாண மாம்பழ வியவசாயிகள் சங்கத்தலைவர் மிஸ்டர் பிரேம்ராய் பாட்லிவாலா இந்த வியாபாரம் பலப்பதற்கான ஏற்பாடுகளை முக்கியமாகக் கவனித்துவருகிறார். தக்க வழியில் இந்த வியாபாரத்தை நடத்தினல் நல்ல லாபம் கிடைக்குமென அவர் கூறுகிறார். —சு. மீ.

ஜாவா ராமாயணங்கள்:—ராமசரிதமானது கி. மு. 2-வது நூற்றாண்டுக்கு முன்பு ஜாவாத்தீவில் திட்டமான உருக்கொள்ளாவிட்டாலும் கி. பி. 968-ம் வருஷம் முதல் 1000-ம் வருஷம் வரையில் ஜாவாவை ஆண்ட வாடியான் ஏற்படுத்திய கட்டடங்களின் பீடங்கள் போன்ற பகுதியில் செய்யப்பட்டுள்ள கல்வெட்டு வேலைகளாலும், 12-வது நூற்றாண்டில் அங்கோரில் ஏற்பட்ட கோயில்களில் செய்யப் பட்டுள்ள சித்திர வேலைகளாலும், ஜாவாவில் 9-வது நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்ட பிராம்பாணன் கல்வெட்டு வேலைகளாலும் கிருஸ்து பிறந்த பின்பு ஏற்பட்ட முதலாவது ஆயிரம் வருஷங்களில், ராமாயணம் பிறநாடுகளிலும் பிரக்யாதி பெற்றதென்பது தெரியவருகிறது. சையாம், ஜாவா பாலி முதலிய பல விடங்களிலுள்ள ராமகின், ஸ்ரீராதராமா, ஹிரிகாத் ஸ்ரீரிராமா, ராமகினிங், ராம கிடங், ராமாயண சாஸகா, ராமோ ஆகிய இலக்கியங்களில் ராமசரிதம் சொல்லப்பட்டிருக்கிறது. யோகீஸ்வரா என்பவர் எழுதிய ராமாயணம் கி. பி. 1094-ம் வருஷத்தில் எழுதப்பட்டிருந்ததென்று ஒருவர் கணக்கிட்டிருக்கிறார். சில டச்சுப் போறிஞர்கள் இது 10-வது நூற்றாண்டுக்குப்பிறகு எழுதப்பட்டதென்று கூறவிரும்பினாலும் நான் டாக்டர் போயர் பாட்ஜாலாவைப்போல் கி. பி. 978-ம் வருஷத்தில் எழுதபட்டதாகக் கருதுகின்றேன். இது 26 சர்க்கங்களைக் கொண்டது. ஆனால் இந்திய ராமாயணத்திலிருப்பது போன்று இது காண்டங்களாகப் பிரிக்கப்படவில்லை. உத்தரகாண்டமானது ஓர் அனுபந்தம் போலுள்ளது. இது இந்தியாவில் சமஸ்கிருத ராமாயணத்தில் சேர்க்கப்படுமுன்பே ஜாவா ராமாயணத்தில் சேர்க்கப்பட்டு விட்டதாக ஒரு டச்சு அறிஞர் அபிப்பிராயப்படுகின்றார்.

இது 27711 ஸ்லோகங்களைக்கொண் டிருக்கிறது. இந்த ராமாயணம் பாலித் தீவிலுள்ள ராமகிடங் என்ற இலக்கியத்திலிருந்து வித்தியாசப் படுகிறது. பாலித்தீவு இலக்கியமான ராமகிடங் என்ற புத்தகத்தில் சீதையின் சுயம் வரத்தில் மகா பாரதக் கதையிலுள்ள சில தீரர்கள் கலந்து கொள்ளுவதாக எழுதப்பட்டிருக்கிறது. ராமகிடங்கிற்கும் ராம கிலாங்கிற்கும் சில விஷயங்களில் சம்பந்த மிருந்துவந்தது. எல்லா இலக்கியங்களிலும் கதைப் போக்கு ஒரேமாதிரியாக இருக்கிறது. யோகீஸ்வரா தமது ராமாயணத்தின் 5-வது சர்க்கத்தில் ராவணன் சைவ சந்நியாசியாக வந்து சீதையைத் தூக்கிச் சென்றதாக விளக்கியிருக்கிறார். ராமாயண சாஸக் என்றபுத்தகத்தில், ஹனுமான் லங்கைக்குப் புறப்படுவது வரையிலுள்ள கதையையே காணோம். இந்த 3 ராமாயணங்களுள்ளும் சில ஒற்றுமைகளிருந்து வந்திருக்கின்றன. ராமகிலிங் என்ற புத்தகம் தமிழ் ராமாயணத்தை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டதாக ஒரு போறிஞர் கூறுகிறார். பழைய ஜவானியப் பதிப்பிலிருந்து ராமகிலிங் என்ற இலக்கியம் எங்கு வித்தியாசப்படுகிறதோ அங்கு அது மலேயாவிலுள்ள ராமாயணத்திற்கும் மதுரை ராமாயணத்திற்கும் ஒத்திருக்கிறது. கதைப் போக்கு, சண்டைவரை ஒரேமாதிரியாக இருக்கிறது. சீதையின் அக்கினிப்பிரவேசம் வருணிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இதனுடன் ராமாயண சாஸகா என்ற இலக்கியத்தை எழுதியவர் திருப்தி அடையவில்லை. அவர் இந்திய ராமாயணத்கில் கண்டதுபோல சீதையைக் காட்டில் பிரஷ்டம் செய்யாமல் வெட்டிவிடும்படி உத்தரவிடப்பட்ட தாகவும் லக்ஷ்மணன் சீதையைவெட்ட அழைத்துப்போய் ஒரு நாயைவெட்டி அதன் சுவாசாசயத்தை ராமனுக்கு அனுப்புவதாகவும் வருணித்துள்ளார். எல்லாப் பதிப்பிலும் ராமனுக்கும் அவனது குமாரர்களுக்கும் நடக்கும் சண்டை வருணிக்கப்பட்டிருக்கிறது. இறுதியில் ராமன் சீதையுடன் சமாஸமாகப் போவதாக அவை கூறுகின்றன. இவ்விடத்தில் கதை வால்மீகி ராமாயணத்திலிருந்து வித்தியாசப்படுகிறது. ஜாவாத் தீவிலுள்ள ராமாயணத்தின் உத்தர காண்டத்திலுள்ள சம்ஸ்கிருத சுலோகங்கள் தெலுங்கு ராமாயணத்திலுள்ளவற்றைப் போலிருக்கின்றன. காகாவின் இலக்கியங்களில் சில இந்திய ராமாயணத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. சுமண ஸந்தகா அஜனுக்கும் இந்துமதிக்குமுள்ள காதலை வருணிக்கிறது. இது காளிதாசனது ரகுவம்சத்திலுள்ள வருணனையை ஒத்திருக்கிறது. அர்ச்சுனவிஜயம், ஹரிகிராயா என்ற காவ்யங்கள் உத்தர காண்டத்தை ஆதாரமாகிக் கொண்டிருக்கின்றன. சுதசோமா, வீரதந்திரா என்றகாவியங்களும் ராமாயணத்தைஆதாரமாகக் கொண்டிருக்கின்றன.

—ஸ்ரீமான் ஹிமான்சுபூஷண சர்க்கார் பிரசங்கம்—சு. மீ.

சிறகில்லா ஆகாய விமானம் :—வான் டீ லா என்பவர் சிறகின்றி ஒரு ஆகாய விமானம் கட்டியிருக்கின்றனராம். அது வெகு வேகமாகச் செல்லக் கூடுமாம். அதைக் கட்டுமுறையில் தேர்ச்சி ஏற்பட்டபின், அது மணிக்கு 300-லிருந்து 400 மைல்கள் வேகம் செல்லக் கூடுமென்று எதிர் பார்க்கப் படுகிறது.

கறையில்லா உருக்கு :—(Stainless steel). ஆகாய விமானங்கள் கட்டுவதில் இது மிகவும் உபயோகமாகும். அதிகப் பளுவின்றியிருப்பதுடன், மிக்க வலியுள்ள ஓர் உலோகக் கலவை (alloy) யாகவுமுள்ளது. திராவகங்கள் இதைக் கரைப்பதில்லை. ஆகாய விமான யந்திரங்களின் அசைவினல் இவ்வுருக்கு பலஹீனப் படுவதில்லை. மேலும் இவ்வுலோகம் காந்த சக்திக்கு அகப்படாததால், அதனாலும் நன்மையே. —மூத்து.

ரேடியம் :—(Radium). மிகவும் அரிய இவ்வுலோகம் அதிக விலையுயர்ந்தது. ஒரு 'கிராம்' என்ற நிறையுள்ள ரேடியத்தின் விலை சுமார் 2 லக்ஷம் ரூபாயாகும். நியூ யார்க்கு என்ற பட்டணத்திலுள்ள ஒரு ஆஸ்பத்திரியில் 10 கிராம் ரேடியமிருக்கிறதாம்; அதிக ஜாக்கிரதையுடன் பாதுகாக்கப்படுகிறது. பஸிபிக் மகா சமுத்திரத்தின் அடியில், அதிக ரேடியம் இருக்கிறதாம் ; இது ஆராய்ச்சியால் வெளியாயிருக்கிறது. —போ. ப.

அலுமினிய பாத்திரங்கள்:—அலுமினியம் அபூர்வ குணங்கள் கொண்ட ஓர் உலோகம். காய்ச்சி, அடித்து நீட்டிக் கொள்ள முடிந்த உலோகங்களுள் இது ஒன்று. தங்கத்தைப் போன்று இதைத் தகடாகவும், கம்பியாகவும் மாற்றலாம். இதை வேண்டும் அளவுக்கு நீட்டிக் கொள்வதற்கு இரும்பைப் போன்று அதிகமான உஷ்ணம் தேவையில்லை. சாதாரணமாகக் குளிர்ச்சியுடனிருந்தால் கூட இதை அடித்து வேண்டிய அளவுக்கு மாற்றிக் கொள்ளலாம். இம்மாதிரி செய்வதால் இந்த உலோகம் கனத்தையும், பிரகாசத்தையும் பெறுகின்றது. ஆதலால்தான் அச்சில் வார்க்கப்பட்ட பாத்திரங்களைவிட, காய்ச்சி அடித்துச் செய்யப்பட்ட சமையல் பாத்திரங்கள் அதிகக் கனமாகவும், மிருதுவாகவுமிருக்கின்றன. மற்ற எல்லாப் பாத்திரங்களையும்விட லேசாகவும் ஆனல் அழுத்தமாகவும் துருப் பிடிக்க இடமில்லாமலும் இருப்பதுடன்கூட அலுமினியம் மற்றொரு முக்கியமான குணத்தையும் உடைத்தாயிருக்கிறது. அது என்ன வென்றால் விரைவில் சூட்டைக் கிரகித்துக் கொள்ளுவதுதான். இந்தக் குணம் காரணமாகவே அலுமினியப் பாத்திரங்கள் மிகவும் உபயோகமானவையாக விளங்குகின்றன. இன்று அலுமினியப் பாத்திரங்களைத் தயாரிக்கும் தொழில் விசேஷமாக அபிவிருத்தியடைந்திருக்கிறது. பெரிய பெரிய தொழிற்சாலைகள் இதற்காக ஏற்படுத்தப்பட்டு அங்குப் பெரிய பெரிய இயந்திரங்களும் ஆயிரக்கணக்கான தொழிலாளிகளும் வேலை செய்து வருகின்றனர். இந்தத் தொழிற்சாலைகளில்தான் களிம்பு கலந்த உலோகமானது கண்ணைப்பறிக்கும் பாத்திரங்களாக மாறுகின்றது. அமெரிக்கா தேசத்திலுள்ள ஆர்க்கன்ஸாஸ் என்னுமிடத்தில்தான் நல்ல பாத்திரங்களாக அமையக்கூடிய நல்ல களிம்பு கலந்த உலோகம் ஏராளமாகக் கிடைக்கின்றது. மற்ற உலோகங்களைப் போலல்லாது, உருக்குவதற்கு முன்னம் அலுமினியத்தை நன்றாகச் சுத்தப்படுத்திக்கொள்ள வேண்டும். இந்த உலோகம்—இதற்கு "பாக்ஸைட்" எனப்பெயர்—கிழக்கு ஸெயிண்ட் லூயிஸுக்குக் கப்பலில் ஏற்றியனுப்பப்படுகிறது. இந்த இடத்தில் ரஸாயன முறை மூலமாக முதலில் ஸோடியம் அலுமினேட்டாகவும், பிறகு அலுமினியம் ஹைட்ரோட்டாகவும்

மாறுகின்றது. சுத்தமான அலுமினியமாக வரவிருக்கும் வெள்ளைப் பவுடர் நியூயார்க், மாஸீனு, நயாக்ரா நீர்வீழ்ச்சிக்கும், அல்கேவா, டென்னென்ஸி அல்லது பாடினுக்கு அனுப்பப்படுகின்றது. இவ்விடங்களில் மிகவும் குறைந்த செலவில் ஏராளமான மின்சார விசை கிடைப்பதால், அதன் சூட்டைக் கொண்டு அலுமினியத்திலேயே ஒரு திநுசான உலோகமாகச் செய்யப்படுகின்றது. இது பிறகு மறுபடியும் உருக்கப்பட்டு, அலுமினியக் கம்பிகளாகவும், அலுமினியத் தகடுகளாகவும் மாற்றப்படுகின்றது. இந்தத் தகட்டிலிருந்தே பாத்திரங்கள் செய்யப்படுகின்றன. அச்சு மூலமாகத் தயாரிக்கப்படுவனவற்றைத் தவிர, மற்றவை யாவும் இந்தத்தகட்டிலிருந்தே தயாரிக்கப்படுகின்றன. சமையலுக்கு வேண்டிய அழுத்தமும் கனமும் வாய்ந்த பாத்திரங்கள் இந்தத் தகட்டினுல்தான் கிடைக்கும். அலுமினியத்தகடுகள் பெரிய பெரிய அரைக்கும் இயந்திரங்களில் ஏற்றப்பட்டு, வேண்டிய அளவுக்கும், கனத்திற்கும் கொண்டு வரப்படுகின்றன. இப்படிச் செய்யப்படுகையிலேயே இந்த உலோகம் இறுக்கி, கெட்டியாகப்படுகின்றது. இதுதான் அலுமினியப் பாத்திரங்கள் செய்யப்படும் விவரம். இலேசாயிருத்தல், விலை குறைவு, பாத்திரங்களைச் சூடாக்குவதிலுள்ள செலவுக் குறைவு, முதலிய எவ்விஷயத்தைக் கவனித்தாலும் இருபதாவது நூற்ருண்டின் நவீன முற்போக்கிற்கும், விஞ்ஞான அபிவிர்த்திக்கும் ஏற்றவை அலுமினியப்பாத்திரங்களே எனக் கூறலாம்.
—சு. மி.

**உண்மை வேண்டும்** :—தமிழா, உனது வேலைகள் அனைத்திலுமே பொய்க் கதைகள் மிதமிஞ்சி விட்டன. உனது மதக் கொள்கைகள் லௌகிகக் கொள்கைகள், வைதிக நடை, லௌகிக நடை எல்லாவற்றிலுமே பொய்கள் புகுந்து தலைதூக்கி ஆட இடங் கொடுத்து விட்டாய். இவற்றை நீக்கிவிடு. வீட்டிலும், வெளியிலும், தனிமையிலும், கூட்டத்திலும், எதிலும், எப்போதும் நேர்மையிருக்கவேண்டும். உண்மையிருக்கவேண்டும். நீயும் பிறரை வஞ்சிக்கலாகாது. பிறரும் உன்னை வஞ்சிக்கலாகாது. பிறர் பிறரை வஞ்சிப்பதையும் நீ இயன்றவரை தடுக்கவேண்டும். எல்லாப் பேறுகளைக் காட்டிலும் உண்மைப் பேறுதான் பெருமை கொண்டது. உண்மை தவங்களுக்கெல்லாம் உயிர். உண்மை சாஸ்திரங்களுக்கெல்லாம் வேர். உண்மை இன்பத்திற்கு நல்லுறுதி. உண்மை பரமாத்மாவின் கண்ணுடி. ஆதலால் தமிழா, எல்லாச் செய்திகளிலும் உண்மை நிலவும்படி செய். பாரதியார்.

**கடம்பு** :—இஃது ஒரு மரம். இதனில் இரண்டுவகை உண்டு. செங்கடம்பு வெண்கடம்பு என்பன அவை. இது கார்காலத்தில் மலரும். முருகக் கடவுள் இதன் மலர் மாலையை அணிந்திருத்தலின், 'கடம்பன்' என்று வழங்கப்படுகிறுர். இதன் பூ உருள்போல இருக்கும். பூங்கொத்து மாலை தொடுத்தாற்போல் இருக்கும். தமிழ் இலக்கியங்களில் இதன் மலரைப்பற்றிய செய்திகள் பல காணப்படும்.
—ஸ்ரீ. சே.

**பந்தும் பாவையும்** :—வெற்றியிற் சிறந்து பகைவர்களுக்கு அஞ்சாது வாழும் அரசர்கள் தங்கள் இராசதானியின் மதில்வாயிலில் பந்தையும் பாவையையும் தொங்கவிட்டிருத்தல் பண்டைக்கால வழக்கம். பகைவர்கள் எல்

லோரையும் பெண்களாகப் பாவித்து, அவர்கள் வந்தால் அவற்றை யெடுத்து விளையாடலாமென்னும் நோக்கத்தோடு அவை அங்கே வைக்கப்படும்.

—ஸ்ரீ. சே.

முருகனது கோடி :—முருகக்கடவுளது கொடி சேவலென்பதை யாவரும் அறிவர். ஏனைய கடவுளர்களிற் பெரும்பாலோருக்கு எது வாகனமாக இருக்கிறதோ அதுவே கொடியாகவும் இருக்கிறது. அதுபோலவே முருகனுடைய வாகனமாகிய மயிலும் முருகனது கொடியாக இருக்கிறது. திருமுருகாற்றுப்படை, புறநானூறு, அகநானூறு முதலிய சங்கநூல்களில் அக் கடவுளுக்கு மயிற்கொடியும் கூறப்பட்டிருக்கின்றது. —ஸ்ரீ. சே.

தழை :—மனிதன் நாகரிகம் வாய்ந்து பல செயற்கைப் பொருள்களை உண்டாக்குவதற்கு முன்பு இயற்கைப் பொருள்களை அப்படியே பயன்படுத்திக் கொண்டான். நாளடைவில் ஆராய்ச்சி வளர வளரத் தனக்கு வேண்டிய பொருள்களை விஸ்தரித்துக்கொண்டு பல செயற்கைப் பொருள்களை இயற்றினன். மனிதனுடைய பழங்கால உணவு பச்சை மாமிசம், கிழங்கு, பழம் முதலியனவாம் .உடை தழை முதலியன. அந்த உடையைச் சற்றுப் பிற்காலத்தில் மலையில் வாழும் மக்கள் உடுத்து வந்தனர். பசுந்தழைகளோடு மலர்களை அழகாக இணைத்து உடைபோல ஆக்கி மகளிர்கள் மலைகளில் உடுத்து வந்தனர். அவ்வுடை தழையெனப்படும். தமிழ்ப் பொருளிலக்கணத்துள் அகத்திணையில் இத்தழையைப் பற்றிய செய்தி ஒன்று கூறப்படுகிறது : ஒருபெண்ணினிடத்தே காதல் பூண்ட ஒருவன், அவள் தன் தோழியோடு தினைப்புனத்திற் கிளியோட்டிக் கொண்டிருக் கையில், இந்தத் தழையென்னும் உடையொன்றைக் கைக்கொண்டு அவர்கள் முன் செல்வான். அவர்களோடு பேசித் தலைவியின் நட்பைப் பெறவேண்டுமென்றூன். ஆசை உடையவனுகி, "இந்தத் தழை மிகச்சிறந்தது ; இதனை இந்தப் பெண் அணிவதற்காக நான் மிக்க சிரமப்பட்டுக் கொணர்ந்தேன்" என்று சொல்லித் தோழிமூலமாய் அந்தப் பெண்ணிற்கு அதனைக் கொடுப்பான். இந்த வரலாற்றினல் அந்தத் தழையுடை மிக்க அழகும் கைத்திறனும் அமைந்த ஒன்றாக இருக்கவேண்டுமென்று புலப்படுகின்றதல்லவா?

—ஸ்ரீ. சே.

வேலன் :—மலை நாட்டில் முருகனுக்குப் பூசை செய்பவன் வேலனென்று அழைக்கப் படுவான். இவன் உடுக்கையை முழக்கி முருகனை வழிபடுவான். கழற்சிக் காயைக்கொண்டு நிமித்தம் பார்ப்பான். மலை நாட்டு மக்கள் தங்களுக்கு ஏதேனும் இடையூறு நேர்ந்தால் இவனை அழைத்து முருக பூசை செய்யும்படி சொல்வார்கள். இது பழையகால வழக்கம். வேலை வைத்துக் கொண்டிருப்பதால் இவனுக்கு வேலன் என்னும் பெயர் வந்தது. படிமத்தான் என்றும் இவன் கூறப்படுவான். இவனுக்கு முருகனது ஆவேசம் வருவதுண்டு. இவன் செய்யும் முருகனது வழிபாட்டை வெறியாட்டு என்பார்கள். இக் காலத்தில் பூசாரி என்று வழங்கப்படும் ஒரு சாமியாரைப்போல அக் காலத்தில் இருந்தவனென்று தெரிகிறது.

—ஸ்ரீ. சே.




**கான** வித்யாப் பிரகாசினி—இரண்டாவது தொகுதி : [பெருங்குளம் ஸங்கீதவித்வான் ஸ்ரீமான் வி. ஸ்ரீநிவாஸையங்காரவர்களியற்றியது ; ஸ்ரீ கானவித்யா பிரஸ், ஸ்ரீ வைகுண்டம் ; விலை ரூ. 2-8-0]

இப்புத்தகம் இந்து ஸங்கீதம், கீர்த்தனைகள், இராகலக்ஷணம் என்ற மூன்று வகுப்புகளுடைத்து; முதல் வகுப்பில் ஸ்வரபேதங்கள், ச்ருதிக்கணக்குகள், தாளவகைகள் முதலியவைகளைப்பற்றி வடமொழியிலுள்ள ஸங்கீதநூல்களிற்கூறியிருக்கும் விஷயங்கள் பிரமாணங்களுடன் எடுத்துக் காட்டப் பட்டிருக்கின்றன. இரண்டாவது வகுப்பில் 14 கீர்த்தனைகள் அவைகளுக்கு உரிய ஸ்வரங்களுடனும் சிட்டாஸ்வரங்களுடனும் பதவுரை பொழிப்புரைகளுடனும் அச்சிடப்பட்டிருக்கின்றன. மூன்ருவது வகுப்பில் 72 மேளகர்த்தா இராகங்களிற்கும் அவைகளில் ஜன்யமான 1077 இராகங்களிற்கும் ஆரோஹண அவரோஹண ஸ்வரங்கள் அகராதியாக அச்சிடப்பட்டிருப்பதுடன் சில இராகங்களின் லக்ஷணங்கள் ஸஞ்சாரக்கிரமம் முதலியன விரிவாய்க்கூறப் பட்டிருக்கின்றன. இப் புத்தகம் ஸங்கீதவித்வான்களுக்கும் வித்தியார்த்திகளுக்கும் மிகவும் உபயோகமாயுள்ளதென்பதில் சந்தேகமில்லை.

டி. எஸ். ரா.

பொருளாதார நூல்-முதல் புத்தகம்: [ஸ்ரீமான் ஜெ. எஸ். பொன்னையா நாடாரால் இயற்றப்பட்டது ; விலை ரூ. 1-0-0]

உலகில் மாந்தர்களுக்கு இன்றியமையாதனவான பொருள்களை ஈட்டலும் பகுத்தலும் மாற்றலும் அவசியமான செயல்களாகும். தற்காலத்திய நாகரிகத்திற் கேற்றபடி இச்செயல்களுக்குரிய சாதனங்களின்னவை யென்பதும் அவைகளைப் பற்றிய முக்கிய நியம விதிகளின்னவை யென்பதும் யாவரும் அறியவேண்டிய விஷயங்களாகும். இவைகளைப் பள்ளியில் பிள்ளைகள் நம் தாய்ப் பாஷையாகிய தமிழில் கற்பதற்கும் உபயோகமாக இச்சிறு புத்தகம் எழுதப்பட்டிருக்கிறது, இங்கிலீஷ்ப் பாஷையில் பயிற்சியில்லாதவர்கள் மேல் நாட்டாரால் அதிகமாகப் பாராட்டப்படும் பொருளாதார சம்பந்தமான விதிகளும் நியமங்களும் இன்ன தன்மையவையென்று உணர்வதற்கும் சாதனமாயிருக்கும் இச்சிறு நூல். இவ்விஷயங்களைப்பற்றிப் பெரிய நூல்களையும் இவ்வாசிரியர் இயற்றியுதவுவாரென நம்புகிறோம். டி. எஸ். ரா.



மாருதி இலங்கையை யெரித்தபின்னர் வருந்துதல்.




# மாருதி இலங்கையை யெரித்த பின்னர் வருந்துதல்

டி. எஸ். இராமச்சந்திரையர்

அனுமான் கடலைக் கடந்து இலங்கையில் சீதையைக் கண்டு அசோகவனத்தை யழித்து அரக்கர்களை யொழித்து இராவணனால் தன் வாலிடை யிடப்பட்ட தீயினால் இலங்கை முழுதும் எரித்து வாலின் தீயைச் சமுத்திரத்தில் தோய்த்து அணைக்கும்பொழுது சீதையும் எரிந்தனளோவென அச்சமுற்று வருந்துதலைக் குறிக்கின்றது முன்பக்கத்திலுள்ள படம்.

இலங்கை எரிவதையும் அரக்கர்கள் நடுங்கி அலைவதையும் கண்ட அனுமான் இலங்கையை எரியூட்டி என்ன காரியஞ் செய்தேன் அந்தோவென்று நடுங்கிச் சிந்திக்கலானான்: "எழுகின்ற கோபத்தைத் தங்கள் புத்தியால் நெருப்பை நீரால் அவிப்பதுபோல் அடக்கும் புருஷ சிரேஷ்டர்களே தன்யர்கள். கோபத்தால் ஒருவன் எந்தப் பாபத்தைத் தான் செய்யமாட்டான்? கோபிஷ்டன் குருக்களையுங்கூடக் கொன்று விடுவான். சாதுக்களைக்கூடச் சொல்லத் தகாத வார்த்தைகளால் தூஷிப்பான். அவனுக்குச் செய்யத்தகாததின்ன தென்பதும் சொல்லத்தகாததின்ன தென்பதும் தெரியா. துர்ப்புத்தியினால் கெட்டேன். ஆலோசிக்காமல் சீதையையும்எரித்துவிட்டேன். இலங்கை முழுவதும் எரிந்தபொழுது சீதையும் எரிந்திருப்பாள். அதனால் அவள் கணவனும் இறந்தவனேயன்றோ! இதுவரையில் யான் முயன்றுவந்த காரியங்களனைத்தும் வீண்போயின. கோபத்தை மேற்கொண்டதனால் எனது முயற்சியெல்லாம் அடியோடு நாசமாயின. இலங்கையில் எரியாதது ஒன்றும் காணப்படவில்லை. ஆகையால் சீதையும் எரிந்திருப்பாளென்பதில் ஐயமில்லை. புத்தி மோசத்தால் ஒன்று நினைக்க ஒன்றாய் முடிந்தது. இனி என்

பிராணனை விட்டுவிடுவதே யுக்தமென்று நினைக்கிறேன். வடவா முகாக்கினியிலாவது வீழ்வேன். இச்சரீரத்தைச் சமுத்திர வாசிகளாகிய ஜீவன்களுக் கிரையாக்குவேன். எப்படி இனி உயிரோடு சுக்ரீவன் அல்லது இராமலக்ஷ்மணர்கள் முகத்தில் விழிப்பேன். குரோதத்தின் தோஷத்தால் எனது குரங்குத் தன்மையை லோகமெங்கும் விளங்கச் செய்தேன். கோபம் கொடிது; யாவராலும் தடுக்கொணாது. சீதை இறந்தால் அவர்களிருவரும் இறந்தவர்களே. அவர்கள் நாசத்தால் சுக்ரீவனும் சுற்றத்தாருடன் நசிப்பான். இது கேட்டுத் தர்மாத்மாவாகிய பரதன் சத்துருக்னனுடன் எப்படி உயிர் வாழ்வான்? இக்ஷ்வாகு வம்சம் நாசமடையவும் பிரஜைகளனைவரும் சோகமடைந்து மரிப்பார்கள். ஆகையால் பாக்கியமில்லாத நான் கோபம் காரணமாக உலகத்தை அழித்தவனாகி விட்டேன்.''

இவ்வாறு சிந்தித்திருப்பவனுக்கு முன்னர்ப் பலனைக் கொடுத்தவைகளான நல்ல சகுனங்களுண்டாகவே பின்னும் யோசிக்கலானான்: "ஒரு வேளை சீதை தனது மகிமையினால் காப்பாற்றப்பட்டிருப்பாள். கற்பினாற் காக்கப்பட்டவளை அக்னியெப்படித் தீண்டுவான்? இராமனுடைய பிரபாவத்தாலும் சுகிருத்தாலும் சீதை எரிக்கப்படாமலிருப்பாள். பரதன் முதலிய மூவர்களுக்கும் தெய்வமாயும் இராமனுக்கு மனதிற்கினிய மனைவியுமானவள் எப்படி இறப்பாள்? அல்லது எல்லாவற்றையும் எரிக்கும் தன்மை வாய்ந்த அக்னிபகவான் என் வாலைச் சுடாமலிருக்கையில் எப்படி சீதையைச் சுடுவார்?'' பின்னும் கடலிடை மைனாகமலை எழுந்து கூறியதையும் நினைந்து ஆச்சரியமடைந்தான். "தபஸினாலும், சத்தியத்தாலும், கற்பினாலும் விளங்குபவளை அக்னி தீண்டான். அவள் அக்னியையே நாசப்படுத்துவாள்.'' இவ்வாறு எண்ணியிருக்கையில் சாரணர்கள் ஆகாச மார்க்கத்தில் செல்லுகையில், "அனுமான் அரக்கர்கள் மனைகள் தோறும் தீயிட்டதனால் நிருதர்கள் பெண்டிர்மக்களுடன் கோலாகலமாய்த் திரிகூட சிகரத்திலிருந்து ஓடுகிறார்கள்; இலங்கை நகர் முழுவதிலும் எரியாதவிடமில்லை. ஆனால் ஜானகிமாத்திரம் எரிக்கப்படவில்லை. இதுதான் வெகு ஆச்சரியம்!'' என்று சொன்னதைக் காதில் கேட்டான். அவன் நிமித்தங்களாலும் சாரணர்கள் வாக்கியத்தாலும் திருப்தியடைந்தான். பின்னர் அசோக மரத்தடியிலிருந்த சீதையைக் கண்ணாரக் கண்டு வணங்கி விடைபெற்றுச் சென்றான்.

வால்மீகி தம் இராமாயணத்தில் அனுமான் அச்சமுற்றுச் சிந்தித்ததையும் பின்னர் மனந்தேறின வகையையும் விரிவாக இவ்வாறு கூறியிருக்கக் கம்பர் இவ்விஷயத்தை மிகவும் சுருக்கிக் கூறியுள்ளார். அனுமான் தன் வாலைக் கடலில் தோய்க்கும் பொழுது,

விட்டியர் விஞ்சையர் வெந்தீ
வட்ட மூலத்திரு வைகும்
புட்டிரள் சோலை புறத்தும்
சுட்டில தென்பது சொன்னர்.

ஆகாயத்திற் செல்லும் விஞ்சையர்கள் சீதைவைகும் பக்ஷிகள் நிறைந்த சோலையின் எல்லையிற்கூட அக்னி பிரவேசிக்கவில்லை யென்று சொன்னர்கள்.

வந்தவர் சொல்ல மகிழ்ந்தான்
வெந்திறல் வீரன் வியந்தான்
உய்ந்தன னென்ன வுயர்ந்தான்
பைந்தொடி தாள்கள் பணிந்தான்.

அச்சொற்கேட்டு மகிழ்ந்தவனய் வியப்படைந்து பிழைத்தே னென்று நினைந்து உற்சாகமடைந்து சீதைகளின் தாள்களில் பணிந்தான்.

பார்த்தனள் சானகி பாரா
வேர்த்தெரி மேனி குளிர்ந்தாள்
வார்த்தையென் வந்தனை யென்னப்
போர்த்தொழின் மாருதி போனன்.

அனுமானைக் கண்ட சானகி அவனுக்கென்ன நேர்ந்ததோ வென்ற பயங்கொண்ட மனது குளிர்ந்து, வந்த காரியமென்ன வென்னலோடும் அவளைக் கண்டதனலேயே திருப்தி கொண்டு மாருதி போனன்.

சீதையினுடைய பிரபாவத்தையும் இராமனது மகிமையையும் நன்கறிந்த அனுமான் அவள் அக்னியினல் எரிக்கப்பட்டிருப்பாளென்று அதிகமாகப் பிரலாபிப்பது தகாதெனக் கருதிக் கம்பர் இவ்விஷயத்தைச் சுருக்கிக் கூறினர் போலும்.




## கல்லாக் கலை

பி. ஸ்ரீ.

நமது முன்னோர், கலைகளை அறுபத்து நாலாகப் பிரித்திருந்தார்கள். தற்காலத்திலோ இத்தனை கலைகள் என்று கணக்கிட முடியாதபடி அவை பெருகி வளர்ந்து வருகின்றன.

கலைகள் அறுபத்து நாலாக இருந்த காலத்தில்கூட, கல்விக்குக் கரையில்லை என்ற அபிப்பிராயம் இருந்தது. இவ் வபிப்பிராயம் இக்காலத்திலுள்ள எண்ணிறந்த கலைகளைக் குறித்து எவ்வளவு உண்மையாகும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

இந்தக் கலையைக் கற்க வேண்டும், அந்தக் கலையைக் கற்க வேண்டும், இன்ன கலையால் இன்ன பயனுண்டு என்று இவ்விதமாகப் பலவேறு கலைவாணர்களும் நமக்கு இடைவிடாது உபதேசம் செய்து வருகிறார்கள். இதைக் குறித்து எனது இளமையில் நடந்த ஒரு விஷயம் இப்பொழுது ஞாபகம் வருகிறது:

"நமது உடலைக் குறித்து நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? உடலைக்கொண்டல்லவா வாழ்க்கை நடைபெறவேண்டியிருக்கிறது? சுவரை வைத்தல்லவா சித்திரம் எழுதவேண்டும்? எனவே, உடல் நூல் கற்கவேண்டியது அவசியமாகும்" என்று என்னுடன் படித்த நண்பன் ஒருவனிடம் வாதம் செய்தேன். அவன் உடனே பூமி சாஸ்திரத்தின் அவசியத்தை வற்புறுத்திப் பேசினான். "உடலைக் காட்டிலும் அவசியமானது பூமி அல்லவா? பூமியை வைத்தல்லவா உடல் நிற்க வேண்டும்? பூமி இல்லாவிட்டால் உடல் எவ்வாறு அதன்மேல் தங்கி நிற்கும்? எனவே உடல் நூலைக் காட்டிலும் பூமி சாஸ்திரம் அவசியமாகக் கற்கத்தக்கது" என்று சொல்மாரி பொழிந்தான். இது இளைஞர் வாதமேயாகும். எனினும் இதுபோன்ற பலகாரணங்களைத்தான் கலைஞர்களும் தத்தம் கலைகளின் அவசியத்தை வற்புறுத்துவதற்காகச் சொல்லிவருகிறார்கள்.

ஒரு காலத்தில் ஒரு மரக்கலத்திலே மூன்று சாஸ்திர நிபுணர்கள் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். மரக்கலம் கரையை நெருங்கி வந்துகொண்டிருந்தது. அப்பொழுது சாஸ்திரிகளில் ஒருவனான கணித சாஸ்திரி, மரக்கலத்திலிருந்த மாலுமிகளை நோக்கி, 'உங்களுக்குக் கணித சாஸ்திரம் தெரியுமா?' என்று செருக்கோடு கேட்டான். 'தெரியாது' என்று மாலுமிகள் ஒப்புக் கொண்டார்கள். 'அப்படியானால் உங்கள் வாழ்க்கையில் கால் பங்கு வீணாகி விட்டது' என்று சாஸ்திரி சொன்னான்.

இரண்டாவது சாஸ்திரி வேதாந்தி; அவன் அவர்களைப் பார்த்து, 'உங்களுக்கு வேதாந்தம் தெரியுமா?' என்று கேட்டான். அவர்கள் 'தெரியாது' என்றார்கள். 'அப்படியானால் உங்கள் வாழ்க்கையில் பாதி வீணாகி விட்டது' என்று வேதாந்தி இறுமாப்போடு சொன்னான்.

மூன்றாவது சாஸ்திரி வான சாஸ்திரி; அவன் மாலுமிகளைப் பார்த்து, 'கப்பலோட்டிகளே! உங்களுக்கு வான சாஸ்திரம் தெரியுமா?' என்று மிடுக்காகக் கேட்டான். 'தெரியாது' என்று அவர்கள் பதில் சொன்னார்கள். 'அப்படியானால் உங்கள் வாழ்க்கையில் முக்கால் பங்கு வீணாகி விட்டது' என்று அவன் சொன்னான்.

இவ்வாறு இவர்கள் பேசிக்கொண்டிருக்கையில், கடுங்காற்றும் மழையும் திடீரென்று தோன்றின. காற்று விரைவில் புயல் காற்றாக முதிர்ந்தது. அலைகள் மலைகளைப்போல் கிளம்பின. கடலின் கொந்தளிப்பு அதி பயங்கரமாக இருந்தது. மரக்கலம் சில நிமிஷங்களில் அமிழ்ந்துவிடும் என்பது தெளிவாயிற்று. அப்பொழுது கப்பலோட்டிகள் மேலே குறித்த மூன்று சாஸ்திரிகளையும் பார்த்து, 'ஓ, சாஸ்திரிகளே! உங்களுக்கு நீச்சல் கலை தெரியுமா?' என்று கேட்டார்கள். சாஸ்திரிகள் 'தெரியாது' என்று கையை விரித்தார்கள். 'அப்படியானால், உங்கள் வாழ்க்கை முழுமையும் வீணாகி விட்டது' என்று கப்பலோட்டிகள் சாஸ்திரிகளை நோக்கிச் சொன்னார்கள்.

கணித சாஸ்திரமும், வேதாந்த சாஸ்திரமும், வான சாஸ்திரமும் அறிந்திருந்த சாஸ்திரிமாருக்கு நீச்சல் சாஸ்திரம் தெரியாததால் அவர்கள் உயிரை இழந்து விட்டார்கள். கணிதக்கலை முதலிய கலைகளை அறியாத கப்பலோட்டிகளுக்கு நீச்சல் கலை தெரிந்திருந்ததால் அவர்கள் தப்பிப் பிழைத்தார்கள். நாம் தற்காலக் கல்விச் சாலைகளில் பல வேறு கலைகளைக் கற்று வருகிறோம். அவற்றின் அவசியத்தையும் பெருமையையும் அறிந்து வருகிறோம். வாழ்க்கைக் கலை ஒன்று தான் நாம் அறியாதது! வாழ்க்கை ஒரு கலை

என்பதையே அறிந்து கொள்ளவில்லை. எனினும் நாம் இன்னும் கற்கவேண்டிய கலைகள் வேறு பல இருக்கின்றன என்று நமது ஆசிரியர்கள் பயமுறுத்திக்கொண்டே யிருக்கிறார்கள்.

இனி, நாம் கற்கவேண்டிய எத்தனையோ கலைகளுக்கிடையே, **கல்லாதகலை** ஒன்றாவது இருந்தால் அது எவ்வளவு சௌகரியமாக இருக்கும்!

## இருவகைக் கலைகள்

தோண்டித் தோண்டி ஆராய்ச்சி செய்வதன் பயனாக நமக்குக் கிடைத்திருக்கும் குலதனமே கலைகளாகும். கலைகளைப் பொதுவாக அறிவுக்கலைகளென்றும் அழகுக்கலைகளென்றும் இருபெரும் பிரிவுகளாகப் பிரித்தல் கூடும். அறிவுக்கலைகள் நமது அறிவைக் கூர்மை செய்து பண்படுத்துகின்றன. அழகுக் கலைகள் நமது உள்ளத்தை—உணர்வை—வசமாக்கி மலரச் செய்கின்றன.

தற்காலத்தில் அறிவுக்கலைகளை நாம் 'ஸயன்ஸ்' அல்லது விஞ்ஞான நூல் என்று அழைக்கிறோம். அழகுக் கலைகளை 'ஆர்ட்' (Art) என்று ஆங்கில அறிஞர் கூறுவதுண்டு. கூத்து (நடனம்), இசை (சங்கீதம்), ஓவியம் (சித்திரம்), சிற்பம், கவிதை முதலியன அழகுக் கலைகள். அழகுக் கலைகளில் தலைசிறந்து விளங்குவது கவிதையேயாகும்.

இத்தகைய கலைகளை 'இருள்தீர் கலை'கள் என்று ஔவையார் கூறுவர். இக் கலைகளால் மனிதன் அறிவுப் பயிற்சி பெறுவதோடு, தன் இதயத்தையும் ஒரு பேரின்பப் பூங்கோயிலாகச் செய்து கொள்ளுகிறான். இங்ஙனம் மூளையும் இதயமும் ஒருங்கே பண்படுவதுதான் 'கல்சர்' (Culture) அல்லது கேள்விச் செல்வத்தின் தனிப்பெரும் பயன். எனவே அறிவுக் கலையையும் அழகுக் கலையையும் கலைமகளின் இரண்டு கண்கள் என்று சொல்லலாம்.

அழகுக் கலைகளின் இடையே தலைமை பெற்று விளங்கும் கவிதையை நாம் **கல்லாக் கலை** என்று கருதுதல் கூடும். காரணம் என்ன? அறிவுக் கலைகள் பகுத்தறிவின் பயனாகப் பிறக்கின்றன. கவிதையோ அவ்விதமாகப் பிறப்பதில்லை.

மக்கள் மனம் இரு வகைப்படும். ஒன்று பகுத்தறிவைத் தூண்டும் புறமனமாம். மற்றது உள் மனம் (Sub-Conscious Mind) என்பது. இவ்வுள் மனத்தைக் குறித்து நவீன மனநூலார் இன்னும் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். இவ் வுள்மனத்தின் முக்கிய அம்சங்கள் மனோதர்மம் (Imagination), கற்பனைத்திறம், உள்ளொளி (Intuition) முதலியன. பகுத்தறிவைப் படைத்துணையாகக்

கொண்டு வாழ்க்கைப் போரில் முற்பட்டு நிற்கும் புறமனத்தினின்று அறிவுக் கலைகள் பிறக்கின்றன. மனோதர்மம் முதலிய அம்சங்களைத் தன்னகத்தே கொண்ட உள்மனத்தினின்றும் பொங்குகின்றன கவிதை முதலிய அழகுக் கலைகள்.

கடலில் ஒரு பனிக்கண்டம் (Iceberg) மிதந்து வருகிறது என்று வைத்துக் கொள்வோம். வட கடலில் யாத்திரை செய்வோர் இப்பனிக் கண்டங்களைக் குறித்துச் சொல்லும் விஷயங்களை நீங்கள் கேள்வியுற்றிருக்கலாம். இப்பனிக் கண்டங்களின் ஒரு சிறு பகுதிதான் கடல் நீரின் பரப்பிற்கு மேலே காணப்படுகிறது. பனிக் கண்டத்தின் பெரும்பகுதியும் நீருக்குள் மூழ்கி வருவதுண்டு. அவ்வண்ணமே நமது மனோசக்தியின் பெரும் பகுதியும் உள் மனத்துள் மூழ்கிக்கிடக்கிறது. ஒரு சிறு பகுதியே புறமனமாகப் புலனாகிறது. பெரும்பகுதியும் மனோசக்திகளை மக்கள் உபயோகிப்பதில்லை என்று ஆசிரியர் ஜேம்ஸ் முதலிய மனநூல் நிபுணர்கள் சொல்லுகிறார்கள். கவிஞன் எப்படியோ இச் சக்திகளை ஒருவாறு உபயோகித்துக் கொள்ளுகிறான். இவ்விஷயத்தை வேறொரு திருஷ்டாந்தத்தாலும் விளக்கலாம்.

ஒரு வீட்டிற்குள் பெருவள்ளலாகிய எஜமானன் வீற்றிருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அவன் முன்பின் யோசனை செய்யாது நாம் கேட்பதை யெல்லாம் அள்ளி அள்ளி வழங்குகிறான். ஆனால் புறவாசல் காப்போன் அதி ஜாக்கிரதையாக இருந்து ஒருவரையும் உள்ளே விடுவதில்லை. இக் காவலாளனை எப்படியாவது வசீகரித்து விட்டால் நாம் வீட்டிற்குட் சென்று எஜமானனது இன்னருள் பெறுதல் கூடும். புறவாசல் காப்போனே புறமனம். உள்ளிருக்கும் எஜமானன்தான் உள்மனம். காவலாளியை எவ்வாறு கடந்து செல்வது? இவ் வாராய்ச்சியை நாம் இங்கே செய்ய விரும்பவில்லை. ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் இங்கு வற்புறுத்துவோம்.

கவிஞன் எவ்விதமாகவோ காவலாளியாகிய புறமனத்தைக் கடந்து சென்று உள்மனமாகிய எஜமானனை அடைகிறான். அந்த எஜமானனிடமிருந்து தனக்கு வேண்டிய மனோதர்மம், உள்ளொளி முதலியவற்றை அள்ளிக்கொள்ளுகிறான். இதனால் பகுத்தறிவின் பயனாகிய அறிவுப் பயிற்சியால் அடையப்பெறாத ஞானத்தையும் கவிஞன் அடைந்து விடுகிறான்.

அத்தகைய ஞானம் இவ்வுலகில் உண்டோ என்றும் பலரும் ஐயுறுதல் கூடும். ஒரு சிறுவன் கணித சாஸ்திரத்தில் நிபுணர்களும் பிரமிக்குமாறு மனக்கணக்காகப் பெருங்கணக்குகளையும் செய்து

முடிப்பதை நாம் அபூர்வமாகப் பார்க்கிறோம். இவ்வாறே சங்கீதத்திலும் வேறு சில அருங்கலைத் துறைகளிலும் பயிற்சி பெறாது தேர்ச்சி பெற்றுள்ள இளைஞர் இவ்வுலகின் சில பகுதிகளில் சிற்சில சமய விசேஷங்களில் காணப்படுவதுண்டு. இவர்களெல்லாம் நமக்குள் புதைபொருளாக இருக்கும் உள்மனத்தின் உள்ளொளிக்கே சான்று தருகிறார்கள். உண்மைக் கவிதையில் உள்மனத்தின் உள்ளொளியினைப் பெரிதும் காண்கிறோம்.

### அருள் வாக்கு

"உள்ளத்தில் உண்மையொளி உண்டாயின்
வாக்கினிலே ஒளி உண்டாகும்"

என்று பாரதி கூறுகிறார். இயற்கையில் ஒவ்வொரு மனிதனுக்கும் உள்மனத்தின் உண்மையொளி உண்டு என்பது சில பேரறிஞர் கருத்து. ஆனால் இவ் வுண்மையொளி பலரிடத்தும் மறைபொருளாகவே அடங்கிக் கிடக்கிறது. இது பொங்கி வெளிப்படும் பொழுதுதான், ஒருவனது வாக்கு அல்லது வார்த்தையும் ஒளி பெறுகின்றது. இவ்வாறு ஒளிபெறும் வாக்கே கவிஞன் வாக்கு. கவிஞனது நாவிலே அறிவுத்தெய்வமாகிய கலைமகள் நர்த்தனம் செய்கிறாள் என்று புராண பாஷையில் கூறுவதும் இக்கருத்தையே வேறொரு வகையில் வெளியிடுவதாகும்.

" ஆர்த்தசபை நூற்றொருவர்
ஆயிரத்தொன்றாம் புலவர்
வார்த்தை பதினாயிரத்தொருவர் "

என்று ஔவையார் கூறியுள்ளார். உள்ளொளியின் பயனாக வெளிப்படும் வார்த்தை கவிஞனுக்கே உரியது என்பதும், அத்தகைய அருள்வாக்கு ஆபூர்வமாகவே வெளிப்படுமென்பதும் ஔவையார் குறிப்பு.

கம்பரும் கவிஞனது அருள்வாக்கின் இலக்கணத்தை,

"சொல்லொக்கும் கடிய வேகச் சுசெரம்"
"செவ்விய, மதுரம் சேர்ந்தன, பொருளில்
சீரிய, கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞர் "

என்ற செய்யுட்பகுதிகளில் வெளியிடுகிறார்.

### கவிதை என்றால் என்ன?

அழகுக் கலைகளின் பேரரசாகிய கவிதையின் இலக்கணத்தை, நாம் இலக்கண நூல்களின் வாயிலாக அறிந்து கொள்வது

இயலாது. நன்னூலார், செய்யுளின் இலக்கணத்தைக் கூறும் சூத்திரத்தை நோக்குங்கள்:

> "பல்வகைத் தாதுவின் உயிர்க்(கு)உடல்போல், பல
> சொல்லால் பொருட்(கு)இடனாக, *உணர்வினின்
> வல்லோர் அணிபெறச் செய்வன செய்யுள்"

என்பது சூத்திரம். பொருளே உயிரென்றும், அப்பொருளுக்கு உடலாக அமைவதே கவியென்றும் நன்னூலார் சொல்லுகிறார்.

உடம்பாகிய கவியும் பல சொற்களால் அமையவேண்டுமாம். அறிவுத்திறன் வாய்ந்தவர்களே செங்கல் அடுக்குவதுபோலப் பல சொற்களை அடுக்கிச் செய்யுள் செய்யவல்லோர் ஆவராம். பல சொற்களைச் சேர்த்து இங்ஙனம் செய்யுள் செய்வதில் அணிகளும் அமைதல் வேண்டுமாம். இவ்வாறு செய்யப்படுவது செய்யுளாக இருக்கலாம். ஆனால் பாட்டாக அமைதல் கூடுமோ? அன்பர்களே! சிந்தியுங்கள்.

பாட்டு இவ்வாறு செய்யப்படுவது அன்று. செய்யுள் (Verse) வேறு, பாட்டு (Poetry) வேறு என்பதை நாம் ஒப்புக்கொள்வது சௌகரியமாக இருக்கும். பாட்டு இயல்பாகப் பிறக்கிறது; செய்யுள் செய்யப்படுகிறது.

பாட்டு அல்லது கவிதையும் காதலைப் போலவே ஆக்கப்படும் பொருள் அன்று; அதற்குச்சில வெள்ளைச் சொற்களே போதும். அது அறிவுத்திறமைக்கு அடங்கி அமைவதன்று. அது அணியிலக்கணத்தின் 'சுமைதாங்கி'யும் அன்று.

பழைய இலக்கண நூலாரைப்போலவே, தற்கால ஆராய்ச்சி அறிஞர்களும் கவிதை இன்னதென்று வரையறுப்பதில் பெரிதும் இடர்ப்படுகிறார்கள். 'கவிதை என்றால் என்ன?' என்ற கேள்விக்கு இவர்கள் 'கவியால் செய்யப்பட்டது கவிதை' என்று பதில் சொல்லுகிறார். 'கவி என்றால் யார்?' என்று மீண்டும் நாம் இவர்களைக் கேட்கிறோம். இவர்களோ பளிச்சென்று 'கவிதை செய்வோன் கவிஞன்' என்று சொல்லுகிறார்கள். நன்னூலாரைக் காட்டிலும் எவ்வளவு சாமர்த்தியமாக இவர்கள் தப்பித்துக் கொள்ளுகிறார்கள்! எனினும் அவரைப்போலவே இவர்களும் இடர்ப்படுகிறார்கள் என்பது தெளிவு.

---

*உணர்வு என்பது இச் சூத்திரத்தில் 'அறிவு' என்ற பொருளிலேயே உபயோகிக்கப்படுகிறது.

உண்மைக் கவிதை இயல்பாகப் பொங்கிவரும் என்பது பாரதி பாட்டின் பின்வரும் அடிகளினால் ஒருவாறு புலனாகும்:

"ஆற்றங் கரைதனிலே—தனி
ஆனதோர் மண்டப மீதினிலே தென்றல்
காற்றை நுகர்ந்திருந்தேன்—அங்குக்
கன்னிக் கவிதை கொணர்ந்துதந்தாள்—அதை
ஏற்று மனமகிழ்ந்தே—அடி
என்னோ டிணங்கி மணம்புரிவாயென்று
போற்றிய போதினிலே—இளம்
புன்னகை பூத்து மறைந்து விட்டாள் அம்மா!"

கலைமகள் கன்னிக்கவிதையாகிய முதலாவது பாட்டைத் தனக்குக் கொணர்ந்து தந்தாள் என்று பாரதி கூறுகிறார். ஒரு புத்தகம் அல்லது ஒரு மலரைத் தாம் பிறரிடமிருந்தும் பெற்றுக் கொள்வதுபோல், அக் கவிதையையும் அவர் பெற்றுக் கொண்டாராம். அவ்வாறு கிடைத்த பாட்டை ஏற்றுக்கொண்டு நமது கவிஞர் பெருமகிழ்ச்சி அடைகின்றார். தமக்குக் கலைத்தெய்வத்தின் அருள் கிடைத்துவிட்டது என்ற களிப்பு, அவருக்கும் அத்தெய்வத்திற்குமுள்ள நெடுந்தூரத்தை அதிசமீபமாக்கி விடுகிறது! இந் நிலையில் அவர் 'அடி' என்று அத்தெய்வத்தோடு தோழமை பேசத் துணிந்து, 'என்னோடு இணங்கி மணம்புரிவாய்!' என்று போற்றுகிறார். ஆனால் அத்தெய்வம் இளநகையரும்பி மறைந்து விடுகிறது!

பாரதியாருக்குக் கிடைப்பது கவிதா தேவியின் இளம்புன்னகையே யாகும். அத்தேவி அவரை மணந்து கொள்ள ஒருப்படவில்லை. அவள் மணமாலையும் கையுமாக எங்கேயோ ஒரு கம்பர் அல்லது ஒரு ஷேக்ஸ்பியரைத்தேடிச் செல்லுகிறாள்!

கவிதையும் காதலும் இயல்பாகவே உதித்தெழுகின்றன. இவற்றை அடக்கியாளும் எந்திரமாவது கருவியாவது விஞ்ஞான சாஸ்திரிகளால் நாளிதுவரையில் கண்டு பிடிக்கப்படவில்லை. இனி, அவர்கள் அத்தகைய கருவியைக் கண்டுபிடிக்கப்போவதுமில்லை. உள் மனத்தின் உள்ளொளியே பாட்டாகப் பொங்குகிறது. இதனைப் புறமனத்தின் காரியமான பகுத்தறிவால் கட்டுப் படுத்துவது ஒருவருக்கும் இயலாததே.

"துடிக்குதென் உதடும் நாவும்
.................. சொல்லுசொல் லெனவே வாயில்
இடிக்குது குறளி அம்மே!
இனிக்குறி சொல்லக் கேளே!"

என்று குற்றாலக் குறவஞ்சியில் குறி சொல்லும் குறப்பெண் முன்னுரையாகப் பேசுகிறாள். இக் குறப்பெண்ணின் நிலை, கவிஞனது நிலையுமாகும்.

'ஓவியப்புலவனுக்குக் கை உணரும்; காவியப்புலவனுக்கு நா உணரும்' என்பது உண்மையினும் உண்மை. உண்மைக் கவிஞனுக்கு உதடும் நாவும் விரைந்து துடி துடிக்கின்றன. 'நான் முன்னே! நான் முன்னே!' என்று சொற்கள் வந்து விழுகின்றன. கவிஞனுக்குள்ளிருந்து வேலை செய்யும் குறளி அவனது உள்மனத்தின் உள்ளொளியே யாகும்.

கவிஞன் கருவிலேதிருவுடையவன். வடமொழியில் அவனை 'கர்ப்பஸ்ரீமான்' என்று கூறலாம். அவன் காரிகையும் நிகண்டும் கற்றுக் கவிபாடும் பண்டித ஜாதியைச் சேர்ந்தவனல்லன். எனினும் உத்தமக்கவிஞனுக்குப் பிறப்புரிமையோடு தக்க அறிவுப்பயிற்சியும் இன்றியமையாததாகும். இயற்கை நுண்ணறிவோடு செயற்கையான கல்விப்பயிற்சியும் அமையப் பெறாதவன் மகா கவியாக விளங்கப் போவதில்லை. அவன் ஒருவேளை 'ஊமைக்கவி'யாகவேயிருந்துவிடுவான். கவிதா தெய்வத்தின் மெய்யருளோடு கல்வித் தெய்வத்தின் இடைவிடாத ஆராதனையும் முதல் தரமான கவிஞனிடம் தக்க முறையில் கலந்து அமைந்திருக்கு மென்பது திண்ணம்.

## கவித்வசக்தி

இயற்கையாக ஒருவனிடம் அமைந்துள்ள கவித்வ சக்தியில் மூன்று அம்சங்கள் முக்கியமாகக்காணப்படுகின்றன. அவையாவன. (1) சௌந்தரிய உணர்ச்சி அல்லது அழகுக் காதல், (2) மனோதர்மம் அல்லது கற்பனைக் கண், (3) ஓசை இன்பத்தை உணரும் செவி.

அழகுக் காதல் தக்க பயிற்சியால் கவிச்சுவையாகிறது. கற்பனைக் கண் தக்க பயிற்சியால் எத்தகைய காட்சிகளையும் கனவுகளையும் கண்முன் காட்டும் சக்தி பெறுகின்றது. இப்பயிற்சியால் கவிஞனது செவியும் உண்மைக் கவிதையின் ஓசையின்பத்தை உணரும் பேராற்றல் பெறுகின்றது.

இரும்பைக் காந்தம் இழுப்பது போல், கவிஞனது அழகுக் காதல் கவிதைக்கு இன்றியமையாத அழகுப் பொருள்களை ஆகர்ஷித்து அவற்றைச் சுவையோடு பக்குவமாக்கித் தருகிறது. கற்பனைக் கண், புற உலகைப் பார்ப்பது போல் மக்களது அக உலகையும் ஊடுருவிப்பார்க்கிறது; நிஜ உலகை உற்று நோக்குவதுபோல்

கனவு லோகத்தையும் உற்று நோக்குகிறது. கவிஞனது பண்பட்ட செவியோ கள்ளநாணயத்தை நொடிப்பொழுதில் கண்டுபிடித்து விடும் 'ஷ்ராபி'ன் (shroff) செவியைப்போல் ஆகிறது.

கவிதை யுலகிலும் ஓசைக்குறைவான நாணயங்களுண்டு; ஈய ரூபாய்களுண்டு; ஓட்டிலே சுண்ணும்பைத்தடவி 'இதுதான் ரூபாய்!' என்று ஏமாற்றுவோரும் உண்டு. இவற்றையெல்லாம் கவிஞன் செவி எளிதில் பிடித்து விடுகிறது.

சுருங்கக்கூறுமிடத்து, அழகுக் காதலும் விசேஷ மனோ தர்மமும் வாய்ந்த கலைஞனது உள்மனத்தினின்றும், கல்லாக் கலை யாகிய கவிதை நாதத்தோடு பொங்கும் ஓர் ஞானகங்கையாகப் பெருகிவருகிறது என்று சொல்லலாம். இதனையே 'சொல்லின் செல்வம்' என்றும் 'செஞ்சொற் கவியின்பம்' என்றும் கம்பர் கூறுகிறார்.

கவியுலகில் கள்ளநாணயக்காரரும் மோசக்காரரும் இருப்பது போல் கழைக் கூத்தாடிகளும் உண்டு; சொற்களைக்கொண்டு செப்பிடு வித்தை காட்டுவோரும் ஜாலம் செய்வோரும் உண்டு. இவர்களெல்லாம் இலக்கணக் கவிஞராக இருக்கலாம். உண்மைக் கவிஞர் அல்லர்.

"பாமாலை கட்டஇன்சொல்
பாவாணர் தேடுதல்போல்
பூமாலை கட்டமலர்
போயெடுக்கும் பாங்கியர்கள்"

என்று கூறும் புலவன் கவித்வசக்தியின் மர்மத்தை அறிந்து கொள்ளவில்லை. பூமாலை கட்டுவதற்கு நன்மலர்களைப் பொறுக்கி யெடுப்பதுபோல் இன் சொற்களைத் தேடிப் பொறுக்கி எடுத்துப் பாமாலை கட்டும் பாவாணர், உண்மைக் கவிஞர் அல்லர். சொற் களில் இல்லாத இன்பத்தைச் சொற்களினிடையே பெருக்கெடுத் தோடும்படி செய்யவல்ல கவிஞன், சிரமப்பட்டு நிகண்டுகளிலிருந்தும் அகராதிகளிலிருந்தும் சொற்களைத் தேடிப் பிடித்துக் கோத்து வைப் பதில்லை.

அவன் ஓர் அற்புத மந்திரவாதி. தன் மாத்திரைக் கோலை உயர்த்துகிறான்! உடனே வார்த்தைகள் ஓசை யின்பத்தோடு எப் படியோ வந்து விழுகின்றன! அத்தகைய கவிஞன் பாட்டின் உண்மையான இயல்பை எப்படியாவது கண்டு கொள்ளுகிறான். பாடிப்பாடிப் பழகிவருகையில், மேலும் மேலும் 'தெய்வமாக்கவி' இன்னதென்பதைத் தெரிந்து கொள்ளுகிறான்.

"பாவியல் கண்டுபல
பாடித் தெரிந்துபெருங்
காவியத்தைப் பாடிக்
கவிஞர்அரங் கேற்றுதல் போல்"

என்று பாடும் கவிஞன் கவித்வசக்தியின் இரகசியத்தை ஒருவாறு தெரிந்து கொண்டான் என்றே கருதல் வேண்டும்.

## முடிவுரை

உண்மைக் கவிதையில் பொருளும் அமைப்பும் ஒருங்கே அழகு பெற்று விளங்குகின்றன. கட்டழகியான பெண் ஒருத்திக்கு ரூபசௌந்தரியமும் குண சௌந்தரியமும் ஒருங்கே இன்றியமையாதன அன்றோ? அப்படியே கவிதைக்கு அமைப்பு அல்லது ரூபமும் வேண்டும்; பொருள் அல்லது குணமும் வேண்டும். இவற்றோடு ஓசை யின்பமும் இன்றியமையாதது; சிருஷ்டி உற்சாகத்தோடு கூடிய விசேஷ மனோதர்மமும் இன்றியமையாதது.

'இறைவன் கழல் ஏத்தும் இன்பம் இன்பமே', 'செல்வன் கழல் ஏத்தும் செல்வம் செல்வமே' என்று பக்த மணிகள் கூறுவர். ரசிகமணிகளோ, 'செவிச் செல்வமே எமது தனிப்பெருஞ் செல்வம்; கவியின்பமே எமது பேரின்பம்!' என்று இறுமாந்து கூறுகிறார்கள்.

# செர்வாண்டிவ்

பி. ஏ. பாஷ்யமையங்கார்

செர்வாண்டிஸ் ஸாவீட்ரா என்பவர் முந்நூறுண்டுகளுக்கு முன்பு டான்க்விக்ஸாட் என்ற ஒரு சிறந்த கதையை எழுதினர். அந்நூல் எழுதியபோது அவருக்கு வயது அறுபது. அவர் தம் மனைவி, புதல்வி, மைத்துனி முதலிய பலர் அடங்கிய பெருங்குடும்பத்தை நிர்வகிக்கமுடியாமல் வறுமையால் நலிவுற்று ஸ்பெயின் நாட்டிலேயுள்ள மாட்ரிட் நகரிலே ஒரு சிறு வீட்டிலே இரண்டு அறைகளில் வசித்துத் தம் ஜீவனோபாயமாக ஆசிரியத் தொழிலை மேற்கொண்டார். இளமையில் படைக்கலப் பயிற்சி பெற்றுப் போர்வீரராகத் திகழ்ந்தனர். மூரியருக்கும் ஸ்பெயின் நாட்டினர்க்கும் ஏற்பட்டபகை முதிர்ந்து 700 வருஷங்கள் வரை நடைபெற்று வந்து ஒரு பெரும் போராக முடிந்தது. ஸ்பெயின் நாட்டினர் தேக உரமும், படைவன்மையும் பெற்று அக்காலத்தில் உலகிற் சிறந்த வீரர் எனப் பேரும் புகழும் கொண்டு விளங்கினர். மூரியரை வெற்றி கொண்டதோடமையாது ஐரோப்பிய நாடுகளனைத்திற்கும் பெரும் பீதியை விளைவித்து வந்து இங்கிலாந்துடனும் கடற்போர் புரிந்து வெற்றிகொள்ளத் தீர்மானித்தனர். இரண்டாம் பிலிப் அரசாண்ட அக்காலத்துக் கிருஸ்தவரல்லாதார் பட்டு வந்த இன்னல்கள் இத்தன்மையவெனக் கூறவொண்ணுது.

ஐரோப்பாவிலுள்ள கிருஸ்தவ நாடுகள் ஒன்று கூடித் துருக்கியரோடு பொருத காலத்தில் 1571-ம் ஆண்டிலே லெபாண்டோவில் நடந்த கடற்போரில் செர்வாண்டிஸ் சிறந்த போர் வீரர் என்று புகழ்பெற்றுர். அவர் தாம் ஜுரத்தால் பீடிக்கப்பட்டிருந்ததையும் பொருட்படுத்தாது போர்க்குப் போக முனைந்து தமக்கு அபாயத்தை விளைவிக்கக்கூடிய முன்னணியில் நின்று போரிட்டு மார்பில் இரண்டு காயங்கள் பெற்றதோடு தம் இடது கையையும் இழந்துவிட்டனர். இச்சண்டைக்குப் பின்னும் அவர் அருங்காரியங்கள் பல செய்து கிருஸ்தவப்படைகட்குத் தளகர்த்தராயிருந்த ஆஸ்ட்ரியா நாட்டு டான்ஜானிடமிருந்து ஸ்பெயின் நாட்டு மன்னனுக்குக் கடிதம் பெற்று ஊக்கமும் களிப்பும் மிகுந்தவராய்த் தம் நாட்டுக்குப் பிரயாணமானுர். ஸ்பெயின் நாட்டார் வெருட்டியடித்த பின்னர்

மூரியரிற் சிலர் பல விடங்களிற் சென்று சுயமாக மாகாணங்களை ஏற்படுத்திக் கொண்டு வாழலாயினர். துருக்கியின்கீழ் அங்ஙனம் ஸ்தாபிக்கப்பட்ட மாகாணங்களுள் ஆல்ஜியர்ஸ் என்பதும் ஒன்று. அங்கிருந்த மூரியர் கப்பற் கொள்ளையடித்து அத்துறைமுக வழியே செல்லும் ஐரோப்பியருக்குப் பெருந்துன்பம் இழைத்துவந்தனர். அவர்களைச் சிறைபிடித்துக் குறிப்பிட்ட தொகையைக் கொடுத்தால் தான் தம் கையினின்றும் தப்பலாமென்று சொல்லி ஏராளமான பணத்தைப்பறித்து வந்தனர். ஒரு சமயத்தில் ஏககாலத்தில் 25,000 கைதிகளைப் பிடித்து வருத்தினர். அக்காலத்தில்தான் இவர்கள் உயிர் பிழைத்துத் தப்பிவரவேண்டுமென்பதற்காக இங்கிலாந்து நாட்டிலே கோயில்களில் ஜபங்கள் நடைபெற்றன.

சேர்வாண்டிஸும், அவர் சகோதரரும் யுத்தமுகத்தினின்றும் கப்பலேறித் தம் நாட்டுக்குத் திரும்பிவரும் வழியில் மூரியர் தம் நெடிய படகுகளுடன் அக் கப்பல் மீது பாய்ந்து எதிர்க்கலாயினர். அவர்களிடமிருந்து தப்புவதற்குச் சேர்வாண்டிஸ் செய்த முயற்சி யொன்றும் பயன்படவில்லை. கப்பல், பகைவர் வசமாயிற்று. மூரியர் அக் கப்பலிலிருந்த அனைவரையும் கைதிகளாக்கினர். சேர்வாண்டிஸும் பிடிபட்டார். தம் நாட்டுக்கும் உலகிற்கும் பேருதவியைச் செய்யும் அறிவும் ஆற்றலும் பெற்றிருந்த சேர்வாண்டிஸ் தம் இளமைப் பருவத்தில் ஐந்தாண்டுகள் மூரியருடைய கைதியாய்ப் பெரிதும் அல்லலுற்று வந்தனர்.

அவ் வைந்தாண்டுகளும் சேர்வாண்டிஸ் எப்படி நடந்து கொண்டாரென்று அவருடன் கைதிகளாயிருந்த சிலர் மூலம் அறிகிறோம். அவ்வாறு உண்மையைக் கூறுவதே நமக்குப் பெருவியப்பையும் அச்சத்தையும் தருகின்றது. இத்தகைய அற்புதம் அமைந்த சரித்திரத்தை வேறெங்கும் காண முடியாது. சேர்வான்டிஸ் இந்த இடர்களை உற்றபோது சிறிதும் மனம்சோர்ந்தவரல்லர். எப்போதும் நல்ல காலம் சீக்கிரத்தில் பிறக்கும் என்னும் திடமான நம்பிக்கை யுடையவராய் இருந்தார். எவ்விதத் துன்பத்திற்கும் அவர் முகம் சுளித்ததில்லை. எத்தனையோ தந்திரங்களைச் சொல்லித் தம்முடன் கைதியாயிருந்த மற்றவரையும் உற்சாகப்படுத்தி வந்தார். பகைவர் இழைத்த கொடுமையையும் அவமானத்தையும் மிகவும் பொறுமை யோடு சகித்து வந்தார். அங்கிருந்து தப்பிச் செல்லுவதற்கு அவர் செய்த முயற்சிகள் ஒன்றிரண்டல்ல; அவர் அம்முயற்சிகளில் வெற்றி பெற்றிருக்கவும் கூடும். அநேகமாய்த் அவர் செய்த காரியங்கள் இடையூறொன்றுமின்றிப் பலனடையுந் தருவாயில் அவரைச் சேர்ந் தோருடைய சதிச்செயலாலேயே அவர் காரியம் முழுதும் வெளிக்கு

வந்து அவலமாயிற்று. ஒரு சமயம் அவர் தம்மைச் சேர்ந்த பதினைந்து கைதிகளை ஒரு குகையில் ஒளித்து உணவு முதலியவை அளித்துப் பகைவர்களுக்குக் காட்டாது பாதுகாத்து வந்தார். முடிவில் தம்முடைய நண்பன் ஒருவனுடைய சதிச்செயலால் அப் பதினைவரும் பிடிபட்ட காலத்து செர்வாண்டிஸ் சிறிதும் மனந் தளராது முன் வந்து பிழைமுழுவதையும் தாமே ஏற்றுக் கொண்டு அவர்களைத் தண்டனையினின்றும் தப்புவித்தார். இவரது அஞ்சா நெஞ்சத்தைக் கண்டு இராஜப் பிரதிநிதியாகிய ஹாஸன்பாசாவும் திகைப்புற்றான். ஹாஸன் கன்னெஞ்சினன்; பகைவரிடம் சிறிதும் தாக்ஷணியம் இல்லாதவன்; எத்தகைய தீத்தொழிலுக்கும் பின் வாங்காதவன்; அத்தகைய கொடியவனும் செர்வாண்டிஸைச் சித்திர வதை செய்யவாவது கொல்லவாவது துணியவில்லை. 'இந்த நொண்டி ஸ்பெயின் நாட்டினனிடமிருந்து நான் என்னைக் காத்துக் கொள்ளக்கூடுமாயின் என் நாட்டுக் கிருஸ்தவப் பிரஜைகளையும் என் கப்பல்களையும் என் நகரையும் பத்திரமாகப் பாதுகாக்கக் கூடும்' என்று மிகுந்த பயத்தோடு வெறுப்போடும் அவன் சொல்லியிருப்பதாகக் கேள்விப்படுகிறோம்.

முடிவில் செர்வாண்டிஸைப் பிடித்து ஆயுள்முழுதும் அடிமையாக்கித் துன்புறுத்தத் தீர்மானித்து அவரை ஹாஸனின் படகில் கட்டிக் கான்ஸ்டாண்டிநோபில் நகருக்குக் கூட்டிச் செல்லத் தொடங்கினர். அச்சமயத்தில் அவர் தப்பவேண்டி அவர் மீது பகைவர் விதித்திருந்த தொகையை அவர் குடும்பத்தார் எங்கெங்கோ பலவிடங்களில் முயன்று சேர்த்து அனுப்பினார்கள். அவர் சகோதரர் அதற்கு முன்பே விடுதலையாயினர். வந்த பணத்தைப் பெற்றுக் கொண்டு செர்வாண்டிஸை விட்டு விட்டனர். அவர் சுயேச்சை பெற்று ஸ்பெயின் திரும்பியபின் முன்னிலும் தம் குணங்களில் சிறந்து விளங்கலானார்; கஷ்டங்களை யனுபவித்து உலகியல் அறிவு படைத்தவரானார். அவருக்கிருந்த ஊக்கமும், மனவெழுச்சியும் களிப்பும் பன்மடங்கு சிறந்து தோன்றின. அல்ஜியர்ஸில் கைதிகளாயிருந்த தம் நாட்டாரின் இழிநிலைமையை விளக்கிக் கட்டுரைகள் எழுதிப் பொதுஜன உதவியை நாட முயன்றார். ஆனால் அவர் முயற்சிகள் யாவும் வீணாயின. ஜீவனோபாயத்தைக் கருதி அவர் திரும்பவும் போர்வீரனாகிப் போர்ச்சுகலிலும் அஸோர்ஸிலும் உத்தியோகம் பார்த்து வந்தார்.

மீண்டுவந்தபின் ஸ்பெயின் நாட்டுப் பெண் ஒருத்தியை மணம் புரிந்து ஆசிரியத்தொழிலைக் கொண்டு குடும்பத்தை நிர்வகித்து வந்தார். எவ்வளவு உழைத்தாலும் இவர் வறுமை இவரை விட்டு

நீங்கவில்லை. இருபது வருஷகாலம் மிடித்துன்பத்தால் நைந்தார். இக் காலங்களில் அவர் பார்த்துத் தள்ளிய வேலைகள் இத்தனைதான் என்று சொல்ல முடியாது. தேசமுற்றும் சுற்றி ஆர்மடா வென்னும் பெரிய போர்க்கப்பலுக்கு வேண்டிய சாமான்கள் வாங்கும் வேலையில் சிறிது காலம் அமர்ந்திருந்தார். இதிலிருந்து ஸ்பெயின் நாட்டுப் பற் பல பாகங்களிலும், ஜனங்களுடைய வாழ்க்கை நிலைமையையும், சாலை களிலும் சத்திரங்களிலும் பிரயாணிகளின் நடைநொடிபாவனைகளை யும் அறிவதற்குப் போதுமான சந்தர்ப்பம் வாய்த்தது. இவ்வறிவு அவர் டான்க்விக்ஸாட் எழுதுவதற்குப் பெரிதும் உபகாரமாயிற்று.

டான் கவிக்ஸாட்டின் முதற்பகுதி 1605-ஆம் ஆண்டிலே வெளி யாயிற்று. அப் புத்தகம் வெளிவந்த க்ஷணமே அவர் புகழும் பெரு மையும் யாண்டும் பரவலாயின. ஆயினும் அவருடைய வறுமை மட்டும் நீங்கவில்லை. வெடிமருந்து கண்டு பிடிக்கப்பட்டபின் உண்மைஞானமும், அருஞ்செயல் புரிந்து நாட்டில் தம் புகழை நிறுவி நலமளிக்குந் தகைமைவாய்ந்த வீரர்களும் இங்கிலாந்து முதலிய நாடுகளினின்றும் அறவே ஒழிந்தும், ஸ்பெயின் நாட்டில் மட்டும் பேருக்கு வீரர்களென்று தம்மைச் சொல்லிக் கொண்ட சிலர் இங்குமங்கும் வாழ்ந்து வரலாயினர். மூரியருக்கும் ஸ்பெயின் நாட்டாருக்கும் நடைபெற்று வந்த பெரும் போரே இதற்குக் காரண மென்று சொல்லலாம். ஆயினும் போலி வீரமும், அதற் குரிய வெளிச்சடங்குகளுமே பிரதானமாகக் கருதப்பட்டு வந்தன. நாட்டில் மூரியர் இழைத்த கொடுமைக்கு ஆற்ருது துன்புற்ற மக்கள் பலர் இருந்தனர். நாட்டிற்கு க்ஷேமத்தை அளிப்பதற்கு முன் பல தீமைகளைக் கடிந்து ஒழித்தல் அவசியமாயின. இருந்தும் தியாகமும், ஆண்மையும், பெருந்தன்மையும் இக் காலத்துத் தோன்றிய வீரர்களிடம் காண்பது அருமையாயிற்று. எனினும், ஜனங்கள் மட்டும் பண்டைக் காலங்களில் விளங்கிய வீரர்கள், அவரியற்றிய அரும் செயல்கள், அரக்கர், கோட்டைகள், நற்குல மகளிர், சூனியக்காரர், மந்திரவாதிகள் என்பவர்களைப்பற்றிய கதை களைக் கேட்பதில் ஆர்வம் மிகுந்திருந்தனர். அக் கதைகளிற் கூறப் பெற்றவை யனைத்தும் உண்மையே யெனவும் கொண்டிருந்தனர்.

செர்வாண்டிஸுக்கும் இத்தகைய விசித்திரமான கதைகளையும், சரித்திரங்களையும் படிப்பதற்கும், கேட்பதற்கும் பிரியம் அதிகம். அக் கதைகளுட் சிலவற்றைப் புத்தகங்களிலுள்ளபடியே மனப் பாடமும் செய்திருந்தார். அவரும் படிப்போர்க்கு இன்பம் ஊட்டும் வகையில் வீரத்தைப் பொருளாகக் கொண்டு கதையொன் றெழுதத் தீர்மானித்தார். டான்க்விக்ஸாட் என்னும் விநோதச் சரித்திரத்தை

இயற்றலானர். அது கேவலம் வசைக் கிரந்த மட்டுமென்று. தமக்கென வாழாது பிறர்க்குரியராய் வாழும் சிறந்த வீரமக்கள் தமது தியாகம் வெளிப்படப் புரிந்துவந்த அருஞ்செயல்களும் அவர்கள் படைத்த தீரமும், பெருந்தன்மையும், பொதுவாக வீரமக்களிடமிருக்க வேண்டிய பெருங்குணங்கள் யாவும் விளங்கும்படி அந்நூல் இயற்றப் பெற்றுள்ளது. 'க்விக்ஸாட்' என்பது வழக்கில் மூடத்தன்மையும், பயனற்ற காரியஞ் செய்தலில் உறுதியும் உடையவனைக் குறிக்கும். க்விக்ஸாட் போலிருப்பவனைப் பிறர்கண்டு நகைப்பர்; எனினும், கீழ்மையாவது அச்சமாவது சுயநலமாவது க்விக்ஸாட்டினிடம் காணப்படா வென்பதற்குச் சிறிதும் ஐயமில்லை.

இக்கதை நிகழ்ந்ததாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இடமாகிய லாமாங்கா என்பது ஸ்பெயின் நாட்டிலே ஒன்றுக்கும் பிரயோஜனப்படாத வறுநிலமாகும். கோடை நாட்களில் சூரிய வெப்பமும், மாரிகாலத்தில் குளிர்காற்றின் கடுமையும் சகித்திற்கரியனவாம். அங்கு வாழும் ஜனங்கள் கல்வி வாசனையறியாது வறுமைப்பிணியில் உழன்று வாழ்ந்தனர். அங்குள்ள பாதைகள் மரங்களற்றுப் புழுதி படிந்திருந்தன. அங்குள்ள விடுதிகளும் சத்திரங்களும் மிகவும் கேவலமான நிலைமையிலிருந்தன. ஆயினும் அவ்வூர்வழியாகச் செல்லும் பாதை மாட்ரிட்டிலிருந்து டோலிடோவுக்கும் ஸ்பெயின் நாட்டிலே பட்டு வியாபாரத்திற் சிறப்புற்று விளங்கும் முர்ஷியா நகரத்துக்கும் பிரயாணம் செய்தற்குச் சாதகமாயிருந்தது. ஆகையால் அப்பாதையில் எப்போதும் ஜனங்கள் கூட்டம் கூட்டமாகக் கூடிச் சென்றுகொண்டேயிருப்பார்கள்.

டான்க்விக்ஸாட் ஒரு சாதாரணக் கதையெனினும் உலகிற்றோன்றிய இலக்கியங்களுட் சிறந்து விளங்குவதற்குக் காரணம் என்னவென்பதையும், அதிலுள்ள பெருமையைக் குறிக்கும் மிகவும் சுவையுள்ள பகுதிகள் எவ்வெவை யென்பதையும் அறியவேண்டுமாயின் அக்கதையிற் கூறிய சம்பவங்களைச் சுருக்கி உரைப்பது அவசியமாகும்.

ஓர் எளிய பித்தேறிய வீரன், நெட்டையாய் மெலிந்த தோற்றமுடையவன், பார்ப்போர் நகைக்கும்படியான படைக்கலந் தாங்கியவன், தன் மேனிபோல் மெலிந்த உடலமைந்த குதிரையை உடையவன், ஒரு கிராமத்தில் எளிய வாழ்க்கை நடத்தி வந்த குடியானவனொருவனைத் தனக்குரிய துணைவனாகக் கொண்டவன்; இத்தகைய ஆண்மகனொருவன் தன் புரவிமீது, அவன் துணைவன் கழுதை யொன்றின்மீது ஏறிக்கொண்டு தொடர உலகிற்குத் தம் பிரதாபம் விளங்க அருஞ்செயல் புரியுமாறு தேச

சஞ்சாரம் செய்யப் புறப்பட்டான். சேர்வாண்டிஸுக்கு வேறெந்த ஆசிரியனுக்கும் இல்லாத ஆற்றல் அமைந்திருந்தது. ஒவ்வொரு பொருளும் அவர் விவரிக்கும்போது சுவை மிகுந்து மகிழ்ச்சியூட்டுதற்குரியதாய்த் திகழ்ந்து விளங்கும். அவர் கூறுவது யாதும் நமது மனத்திற்கு எழுச்சியையும் வியப்பையும் விளைவிக்கும். இது மட்டோ! கதை சொல்லுவதில் சேர்வாண்டிஸுக்கு இருந்த திறமை வேறெந்த ஆசிரியர்க்கும் இல்லை. கதைப் போக்குத் தட்டுத்தடையின்றியும் இயற்கைக்கு முரணுமலும் தொடர்ச்சியாக அமைந்துள்ளது. மக்களைப்பற்றியும், பொருள்களைப்பற்றியும், இடங்களைப்பற்றியும் கூறமிடத்து எவ்வளவு விரித்துச் சிறுசந்தர்ப்பங்களைப்பற்றியும் விடாது சொல்லமுடியுமோ அவ்வகையில் பரக்கக் கூறி வருணிப்பர். படிப்பவர்கள் நூலிற் காணும் விஷயங்களைத் தம் கண்ணெதிரில் நேரில் அநுபவிப்பது போல் அநுபவித்து இன்பமெய்துவர். (மூன்நூறு ஆண்டுகட்கு முன் ஸ்பெயின் நாட்டின் சமூகநிலைமையை யறிவதற்கு இக் கதை சாதகமாக இருத்தல்போல் வேறெந்தச் சரித்திரமும் இல்லை யென்று திட்டமாகக் கூறலாம். அவர் நூல் முழுவதும் நகைச்சுவை ததும்பக் காண்கிறோம். ஒருவரையும் புண்படுத்தாது வேடிக்கையாகவே அரும் பொருள்களைச் சந்தர்ப்பம் வாய்க்கு மிடமெங்கும் விளக்கி விரித்துரைப்பர்.) எந்த வகுப்பினரிடத்தும் பகையைக் காட்டாமலே படிப்பவர்களைக் குலுங்கக் குலுங்க நகைத்து இன்புறும் வகையில் கதையை அமைத்துச் செல்வர். சரித்திர பாத்திரங்களின் செயல்களையும் குணங்களையும் படிக்கும்பொழுது அடக்கமுடியாத சிரிப்பு உண்டாகின்றதென்றாலும் அவர்களிடத்தில் அன்பும் இரக்கமும் உதியாமலிருப்பதில்லை. இத்தனை நகைச் சுவை பொதிந்திருப்பினும் அந்நூலுக்கென்று ஒரு தனித்த காம்பீர்யம் இருப்பதை உணர்கிறோம். டான்க்விக்ஸாட்டின் செயல்கள் நமக்கு நகைப்பை விளைப்பது உண்மையே. இருந்தாலும் வீரர்க்குரிய ஆண்டகைமைக்குத்தக நடக்க வேண்டுமென்பதை அவன் ஒருபோதும் மறந்தவனல்லன். சாங்கோ சுயநலமும் விவேகமும் கொண்ட குடியானவனுன யஜமானனிடத்தில் உண்மையாக நடந்து கொண்டான். அவன் தன் கழுதையினிடத்தில் வைத்த அன்பிற்கு அளவேயில்லை. அவன் வீட்டில் இருந்தோரும் பேதைமையைத் தமக்கு அணிகலமாகக் கொண்டிருந்தனரெனினும் டான்க்விக்ஸாட்டினிடம் அளவு கடந்த அன்போடு ஒழுகிவந்தனர். இதனுலன்றே அவனும் தான் பிரியப்பட்டதைச் செய்யாமல், தனக்குச் சிறந்ததென்று அவர்கள் நினைத்து வந்ததையே செய்து வந்தான்!

(டான்க்விக்ஸாட்டின் இரண்டாம் பகுதி, முதற் பகுதி வெளி வந்த பத்து வருஷங்கள் கழிந்து 1615-ம் ஆண்டில் வெளியாயிற்று.) செர்வாண்டிஸினுடைய கிரந்தம் ஆரம்பம் எவ்வளவு சிறப்போடமைந்திருக்கிறதோ அத்துணைச் சிறப்பு ஒரு சிறிதும் குன்றாதபடி முடிவுவரை அமைந்திருக்கிறது. செர்வாண்டிஸ் இரண்டாம் பகுதியை முடிக்கும் முன்னரே வேறோராசியர் இவர் அநுமதி பெறாமலே 'டான்க்விக்ஸாட்டின் இரண்டாம் பகுதி' என்னும் பெயரிய நூல் ஒன்றை வெளிப்படுத்தி விட்டார். அதையறிந்து வெகுண்ட செர்வாண்டிஸ் கதாநாயகன் மரிக்கும்படி சோகரஸமான முடிவுடன் தம் கதையை அமைத்திருப்பது ஓர் அதிசயமன்று.)

(தாம் இயற்றிய சிறந்த இக் கிரந்தம் பூர்த்தியானபின் செர்வாண்டிஸ் வெகுகாலம் ஜீவித்திருக்கவில்லை.) அவருடைய புகழ் ஸ்பெயின் நாட்டுக் கப்பாலும் வெகுதூரம் வரையில் பரவியிருந்தது. எனினும் அவரோடு பிறந்த வறுமைத் துன்பம் அவரை விட்டு நீங்கியபாடில்லை. ஆயினும் அவருடைய மதியின் தெளிவிலேனும் கற்பனாசக்தியிலேனும் சிறிதும் சோர்வு ஏற்பட்டதேயில்லை. டான் க்விக்ஸாட் முடிந்ததும், மேலும் பல புத்தகங்கள் எழுதத் துணிந்தார். அவர் மரிக்குமட்டும் தம் காலத்தை வீணாக்காது பெரிதும் உழைத்து வந்தார். ஆயினும் அவர் தேக நிலைமை வரவரக் குன்றி அவருக்குள்ள வலிமையும் ஒழிந்தது. (தாம் எழுதின கடைசிப் புத்தகத்தின் முகவுரையில், "என் மதியிடம் விடை பெறுகிறேன்; என் கற்பனைகளுக்கு விடைகொடுக்கிறேன்; முடிவு பெறட்டும். என் நண்பர் பலரிடம் விடை பெறுகிறேன். ஆயினும் மறு பிறப்பில் மீண்டும் உங்களையெல்லாம் களிப்போடு சந்திக்க வேண்டுமென்னும் விருப்பத்தோடு நான் என் வாழ்வை முடித்துக் கொள்ளுகிறேன்" என்று எழுதினர்.)

இவர் மண்ணுலகை நீத்த அன்றே ஆவன் நதிக்கரையிலேயுள்ள ஸ்ட்ராட்பர்டில் உலகத்தில் சிறந்த நாடகாசிரியர் என எந்நாட்டினரும் புகழும் பெருமை படைத்த ஷேக்ஸ்பியர் மகாகவியும் தமது பூதவுடம்பை நீத்தனர்.) என்றும் மறைந்தழியாத புகழையும் கீர்த்தியையும் தமது நூல்முகமாக நிறுவிய செர்வாண்டிஸை ஷேக்ஸ்பியர் ஒருவர்க்கே அடுத்தவராகச் சொல்லலாம்.

# சரித்திரம்

## பூர்விக இந்தியாவும் ஜாவா சுமாத்ராத் தீவுகளும்

ஓ. ப. தேசிகன்

(முன் தொடர்ச்சி)

சற்றேறக்குறைய ஆயிரம் வருடத்திற்கு மேலாக இந்தியாவுக்கும், கீழ்த்திசை நாடுகளுக்குமிடையே நிலவிவந்த உறவின் முறையையும், அந்த உறவின்முறை ஏற்படுவதற்காதாரமான போக்குவரத்துமார்க்கங்களையும் நாம் ஒருவாறு குறிப்பிட்டோம். எனினும் இப் பிறநாட்டுக் குடியேற்ற நிகழ்ச்சிகளாலும், வர்த்தகப் பண்டமாறுதல்களாலும், சமயப்பிரசாரத்தினாலும் இவ்விருநாடுகளின் நாகரிக சமய சமூக வாழ்க்கையும், கலாபிவிருத்தியும் சிறிதளவேனும் பாதிக்கப்பட்டனவா அல்லது மாறுதலை யடைந்தனவா என்பதைக் குறித்துச் சிலவற்றைக் கூறுவது பொருத்தமற்றதாகாது.

கிருஸ்துசகாப்தத்தின் ஆரம்பகாலம் முதலாகவே திராவிடர்களுக்கும் மலேயாத்வீபகற்ப வாசிகளுக்குமிடையே கடல்மார்க்கமாகச் சம்பந்தம் ஏற்பட்டிருந்ததாக இதற்குமுன் பலவிடங்களில் கூறப்பட்டுள்ளது. இந்தியாவின் கீழ்த்திசைக் கடற்கரைப்பட்டினங்களிலிருந்து இந்திய மஹாஸமுத்திரத்தின் வழியாக ஆப்பிரிக்காக் கண்டத்தையும் மலேயா தீபகற்பத்தையும் இணைத்துவைக்கக்கூடிய அளவிற்கு மிகவும் மும்முரமான கடற்போக்குவரத்துகள் பூர்வகாலந் தொட்டு நிகழ்ச்சி பெற்றுவந்தனவென்பதை நாம் உறுதியாகக் கூறமுடியும். இப் பிரம்மாண்டமான கடல்மார்க்கத்தில் டாப்ரபேன் (Tapropane) என்ற பெயரால் அழைக்கப்பட்ட இலங்கைத்தீவில் மாலுமிகள் சிலநாட்கள் தங்கிச் சிறிது சிரமபரிகாரம் செய்துகொண்ட பின்னர்த் தாம் மேற்கொண்ட பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்திவந்ததாகத் தெரியவருகிறது. பண்டைக்காலத்துக் கிரேக்கநூலாசிரியர்களும் ஏனையோரும் இந்தியா, மலேயா, ஆப்பிரிக்கா ஆகிய மூன்றுதேசங்களிலுமுள்ள பற்பல

கடற்கரைப் பட்டினங்களின் பெயர்களைப்பற்றி எழுதிவைத்திருக்கும் குறிப்புகளை மேலெழுந்தவாரியாகப் பார்க்குமிடத்து ஓரே குழப்பமாகக் காணப்படலாமாயினும், நவீன பூகோள ஆராய்ச்சிகளின் வாயிலாகக் கூர்ந்து நோக்குங்கால் அவைகளின் பொருள் ஓரளவு விளங்காமற்போகாது. எவ்வித ஆபத்தையும் பொருட்படுத்தாத கலங்கா மனவுறுதியும், நெஞ்சத்துணிவும் வாய்ந்த பூர்விக இந்தியமாலுமிகள் இலங்கையிலிருந்து ஜாவாவிற்கும் ஜாவாவிலிருந்து மடகாஸ்கருக்கும் கொந்தளிக்கும் கடலிடையே தங்கள் கலங்களைத் துணிவுடன் செலுத்திவந்தனர் என்பதை இது காலை மறுப்பார் எவருமிலர். பாஹியனும் அவருக்குப்பின் குணவர்மனும் (கி பி. 400) முற்றிலும் பழக்கமான இக்கடற்பாதையின் வழியாகவே மேற்கூறிய நாடுகளுக்குச் சென்றிருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. ஆசியாகண்டத்திலிருந்து பிறநாடுகளுக்குக் குடியேறி அங்கே நிலையாகத் தமது குடும்பத்தோடு வசிக்கவேண்டுமென்று விரும்பிய மக்களுக்கு மலேயாத் தீபகற்பமானது ஓர் வழியாகவும், தூரத்தாலும், நாகரிகத்தாலும் பழக்க வழக்கங்களாலும் வேறுபட்டிருந்த வியாபாரிகளுக்கும் ஏனையோருக்கும் ஓர் தங்குமிடமாகவும் அமைந்து நாகரிக உலகில் அதுகாலை மிகவும் உன்னதமானதோர் ஸ்தானத்தை வகித்து வந்தது.

சுமாத்ராவில் மலேய வகுப்பினர் இந்திய நாகரிகத்தின் சேர்க்கையால் தமது வாழ்க்கை நிலைமையிலும், இலட்சியங்களிலும் வெகுதூரம் முன்னேற்ற மெய்தியவர்களாய் விளங்கினர்கள். மலேயா பாஷையில் மிகவும் பழமைவாய்ந்த பிறமொழிச் சொற்கள் யாவும் வடமொழிச் சொற்களே யென்று பல அறிஞர்கள் கருதுகிறார்கள். அந்தப் பாஷையில் சமயம், ஒழுக்கம், வானசாஸ்திரம், தாவர சாஸ்திரம் முதலியவைகளைக் குறிப்பிடும் பற்பல வார்த்தைகளும் தினசரியில் வழங்கும் சொற்பிரயோகங்கள் பலவும், பெரும்பாலும் ஸம்ஸ்க்ருத வார்த்தைகளாகவோ அல்லது அதன் மரூஉக்களாகவோ இருப்பதாகக் கூறப்படுகிறது. அவர்களுடைய சமய வாழ்க்கையிலே, மிகவும் மதிப்பிற்குரியனவாக அவர்கள் வணங்கி வழிபடும் தெய்வங்கள் ஹிந்துக்களின் கடவுள்களே; அதற்கடுத்தபடியாகவே மலேயக் கடவுளர்கள் போற்றப்படுகின்றனவாம்.

### இந்திய சாவக நாகரிகம்

கி. பி. 9-ஆம் நூற்றாண்டில் மூன்றாவது முறையாக ஹிந்துக்கள் பிறநாடுகளில் குடியேறத் தொடங்கினர்கள். இக்குடியேற்றமானது பெரும்பாலும் தென்னிந்தியாவிலிருந்தே நிகழ்ச்சி பெற்ற

தாகத் தெரியவருகிறது. இக்காலத்தில்தான் ஸ்ரீவிஜயம் (சுமாத்ரா) திடீரென்று நாகரிகக் கலாபீடமாக உயர்வெய்தியது. அந்நாகரிக மேம்பாட்டின் செல்வாக்கும், வியாபகமும் ஜாவாவில் மாத்திரமே யன்றி, இந்தியாவிலுங்கூடப் பரவியது. முன்கூறிய நாளந்தா சாஸனமே இக்கூற்றுக்கு அரண் செய்வதற்குப் போதுமானது.

இந்தியாவின் பாரமார்த்திக லட்சண லட்சியங்களால் தூண்டப் பெற்றவர்களாய், அதனுடைய உன்னதமான லட்சியங்களுக் கிணங்கிய முறையில் ஜாவாவாஸிகள் உலகப்பிரசித்தி பெற்ற போரோ புதூர் (Boro Budur) சிற்பங்களை இந்தக் காலத்திலே தான் கட்டி முடித்தார்கள். கீழ்த்திசைச் சிற்ப விளக்கங்களின் அணியிலே அதற்கிணையாக ஒப்பிடக்கூடிய சிற்பங்களும், காட்சி ஸ்தலங்களும் சிலவேயுள. ஸ்ரீஈசான விஜயதர்மோத்துங்கன் (கி. பி. 950) காலந் தொடங்கி, ஜாவாத் தீவு முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆண்டு வந்த திரிபுவனோத்துங்க தேவனுடைய காலம் வரையில் புத்த சமயமே ஜாவா மன்னர்களின் அரசாங்க மதமாகத் திகழ்ந்து வந்தது. எனினும் இதரமதங்களையும் பின்பற்று வோர் இராமற் போகவில்லை. சைவமதக் கோட்பாடுகளைத் தழுவி வந்தவர்களின் எண்ணிக்கையும் மிகவும் அதிகமானதாகவேயிருந்த தாகத்தெரிய வருகிறது. இதன் காரணமாகவே 10, 11, 12-ஆம் நூற்றுண்டில் ஜாவாவை யடுத்துள்ள கம்போடியாவில் (காம் போஜத்தில்) அப் பிரதேசத்தை யாட்சி புரிந்த மாங்—க்மேர் களின் சிற்பக்கலையானது தனது உச்ச நிலையினை யெய்தியிருந்தது. அதே காலத்தில் ஜாவாவில் மிகவும் பிரஸித்தி வாய்ந்த (Prambanam), ப்ராம்பனம், பனதரம் (Panataram) ஆகிய இரு பெருங்கோயில்களிலும் வைதிகமதச் சிலாவிக்ரஹங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருத்தல் வேண்டும். கம்போடியாவிலோ 9-ஆவது நூற் றுண்டில் உலகப்பிரசித்தி பெற்ற அங்கோர் தோம் (Angkor Th'om) சிவாலயமும், இணையற்ற சிற்ப லட்சணம் பொருந்திய அங்கோர்-வாட் (Angkor-Vat) விஷ்ணுவாலயமும் கட்டி முடிக் கப்பட்டன. பின்சொன்ன கோயிலின் நிர்மாண வேலைகள் பரம விஷ்ணு லோகன் என்னும் காம்போஜத் தரசனல் கி. பி. 1150-ஆம் ஆண்டில் பூர்த்தியடைந்ததாகச் சொல்லப்படுகிறது.

"இந்தச் சிற்ப விளக்கங்களின் மாட்சியானது இன்றளவும் ஹிந்துக்களின் நாகரிகக் கலையுணர்விற்கும், சிற்ப நேர்த்திக்கும் அருஞ்சான்றுகளாகத் திகழ்ந்து காட்சியளிக்கின்றன. அப் பிர தேசவாஸிகளான க்மேர்களின் இயற்கையறிவையும், நிருமாணத்

திறமையையும் கடந்து, அவை உன்னதமாகச் சோபிப்பதால், ஆராய்ச்சியாளர்களில் பலர் அந்த இராச்சியத்தின் இறைமாட்சிக்கும், இந்தியாவிலிருந்து ஆங்குக் குடியேறி கி.பி. 8-ஆம் நூற்றாண்டு முதல் 14-ஆம் நூற்றாண்டு வரை அதனை யாண்டு வந்த ஹிந்து மக்களே பெரிதும் காரணமாயிருந்திருக்க வேண்டுமென்று கருதுகிறார்கள்'' என்று முசியே. காபாதோன் (Mon. Cabaton) என்பவர் எழுதியுள்ளார்.

### போரோ புதூர் சிற்பங்கள்

போரோ-புதூர் (Boro-Budur) சிற்பத்தை, ''இவ்வுலகத்தின் அற்புதக் காட்சிகளில் ஒன்றாகக் கருதத்தகும்'' என்று சிற்ப இலக்கண நிபுணர்கள் கூறுகிறார்கள். அது ஏழு நிலைகள் அல்லது அடுக்குக்களாலாய பிரம்மாண்டமானதோர் கட்டடம் ஆகும். அதனுடைய அடித்தலம் குறுக்கு நெடுக்கில் சற்றேறக்குறைய 400 சதுர அடிகளுக்கு மேலிருப்பதாகக்கணக்கிடப்பட்டுள்ளது. எனினும் அவ்வளவு விசாலமாக இருப்பதனாலேனும், அதனுடைய சிற்ப நேர்த்தியையும் கட்டடங்களின் அமைப்பையும் உத்தேசித்தேனும் அத்துணைப் புகழுரைக்குப் பாத்திரமானதாக அது இருக்கவில்லை. அதனுடைய அழகு அதனுடன் முடிவு பெறவில்லை; ஆனால் ஒவ்வோர் அடுக்கிலும், இவ்வுலகம் கண்டிரா அத்துணையற்புதத் திறமை வாய்ந்த சிற்பிகள் தமது உளியினால் செதுக்கியிருக்கும் சிற்ப உருவங்களின் ஒப்புயர்வற்ற அழகினாலேயே போரோ புதூர் அவ்வளவு சிறப்பு வாய்ந்ததாக மிளிர்கிறது. சிற்பங்களின் ஒவ்வோர் அணுவிலும் உயிரோடு அறிவும், அறிவோடு இன்பமும் செறிந்திலங்கக் கடவுள் காட்சிகளையும், இயற்கைத் தோற்றங்களையும் பெருமிதமாகத் தீட்டிவைத்திருக்கும் அவர்களது உழைப்பின் பெருமையே பெருமை! ''இந்தச் சிற்ப வடிவங்களை ஒன்றன்பக்கத்தி லொன்றாக ஒழுங்காகப்பரப்பிவைத்தால் சுமார் 3 மைல்களுக்கதிகமான இடத்திற்குமேல் வியாபித்திருக்கும்'' என்று கூறப்படுகிறது. அவற்றின் மேன்மையைக் குறித்து எழுதியிருக்கும் ஹாவெல் துரையவர்கள், ''போரோ புதூர் சிற்பிகளின் பாரமார்த்திகலட்சியமானது தமது சிற்பத்தொழில் சம்பந்தமான கடுமையான விதிமுறைகளின் கட்டுத்தளைகளை உதறியெறிந்து, கலா வல்லுநர்களும், சிற்ப இலக்கண சாஸ்திரிகளும் 'இது ஸரி, இது தப்பு' என வருணிக்கும் குணதோஷ வரம்பு நிலையையும் கடந்து தெய்விகமும் ஆவேசமும் மலிந்த வார்த்தைகள் அதனைச் செவியுறுவோரின் உள்ளத்தில் ஆழமாகப் பதிவதைப் போன்ற அத்தகைய நீடித்த உணர்ச்சியை

உண்டாக்குகின்றது. தெய்விகச் சிறப்பின் உற்சாகம் பொங்கித்ததும் பும் இவ்வற்புதச் சிற்ப வடிவங்களின் உயர்வைக் கருதுகையில், இவற்றிற்கிணையாக ஒப்பிட்டுக் கூறக்கூடிய ஐரோப்பியச் சிற்பங் களைக் காண்பதே அரிது............இந்தப் போரோ புதூர் சிற்பிகள் இயற்கையின் உண்மைக் காட்சிகளை உள்ளது உள்ளவாறு சித் திரித்து உருவகப்படுத்தும் அருந்திறனை விசேஷ அளவில் வாய்க்கப் பெற்றிருந்தனர்...அவர்களது உழைப்பும், தொழிற்றிறமையும் பாரமார்த்திக கைங்கரியங்களின் பொருட்டாகவே பெரிதும் அர்ப் பணம் செய்யப்பட்டன. அந்த உத்தேசத்தை வெற்றிகரமாக நிறைவேற்றிவைப்பதில் இவ்வுலகத்தில் வேறெந்த நாட்டிலும், வேறெக்காலத்திலும் காணமுடியாத அவ்வளவு விசுவாஸத்துடன், அவ்வளவு உண்மையுணர்ச்சியுடன் அவர்கள் தமது கடமையைத் திறம்படச் செய்து முடித்திருக்கும் அழகைக் கருதுகையில், இவ் வுலகத்தின் நாகரிக நற்கலைச் சரித்திரம் ஆரம்பித்த நாள் தொடங்கி இன்று வரை உருவச் சிற்பங்களைச் சித்திரிக்கும் உயர்தரத் தொழிலாளிகளின் அணியில் அவர்களே முதன்மையான ஸ்தா னத்தை வகிப்பதற்கு உரிமை பெற்றிருக்கிறார்கள் என்று கூற வேண்டும்.

"...ஐரோப்பாவின் எல்லைக்குள்ளே இது போழ்து உயிர் வாழ்ந்திருக்கும் எந்தச் சிற்பியும் அத்தகைய பேரழகு வாய்ந்த சித்திரங்களையேனும், அல்லது சிற்ப வடிவங்களை யேனும் தோற்றுவிப்பதற்கு மனதாற்கூட சிந்திக்கமுடியாத இந்நிலையில், இந்த மகத்தான கலையின் ஸம்பிரதாயங்களும், எஞ்சிய சின்னங்களும் இந்தியாவின் பற்பல பகுதிகளில் இன்னும் உயிர் பெற்று இலங்குவது பிரத்யக்ஷமாகவிருக்கையில்—நாம் ஐரோப்பிய இலக்கணங்களையும் ஸம்பிரதாயங்களையும் தழுவிய முறையில்—ஐரோப்பியக் கலாசாலைகளில் போதிக்கப்படுவது போன்று, இவ்விரு நிருமாணக்கலைகளையும் போதிப்பதற்காக இந்தி யாவில் பாடசாலைகளையேற்படுத்தியும், அத்தேசத்துக் கட்டடங் களில் அலங்கார வேலைப்பாடுகளை இயற்றி அழகுபடுத்துவதற்காகச் சிற்ப நிபுணர்களை அனுப்புவித்தும், இன்னும் வருஷாந்தரக் கண் காட்சிகள் போன்ற ஆடம்பரங்களின் வாயிலாகவும் இந்தியர்களின் கலையுணர்வையும், நாகரிக நற்சுவையையும் அபிவிருத்திக்குக் கொண்டு வருவதற்காகப் பெருமுயற்சிகள் எடுத்துக் கொண்டு வரு வதாகக் கருதி வீண்பெருமை பாராட்டி வருகிறோம்" என்று அணிந்துரை கூறியுள்ளார்.

* * * *

ப்ராம்பனம் சிற்பங்களைப் பற்றியெழுதுமிடத்து ஜாவாவில் (ப்ரிட்டிஷ்) கவர்னர் பதவியை வகித்திருந்தவரும், கீழ்த்திசை நாடுகளின் நாகரிக, சரித்திர ஆராய்ச்சியிலீடுபட்டிருந்தவருமான ஸர். ஸ்டாம்போர்ட் ராபில்ஸ் (Sir Stamford Raples) என்பவர், "எனது வாழ்நாள் முழுவதும், மனித உழைப்பின் சரித்திரத்தில் இவ்வளவு உன்னதமானவையும் பரிபூர்ணமாய்ச் சோபிப்பனவுமான அரிய வேலைப்பாடுகளுக்குச் சமமாகக் கருதக்கூடிய உதாரணங்களை —சிற்ப விளக்கங்களை—நான் வேறெங்கும் கண்டதில்லை. இவ்வளவு குறுகிய ஸ்தலத்தில், மிக மிக நெருக்கமான இடத்திற்குள்ளாக இடந் தெரியாமல் செறிந்து கிடக்கும் சிற்பங்களைத் தோற்றுவிப்பதற் காதாரமாயுள்ள உயர்தர சாஸ்திரீக அறிவும், நாணயமும், கலையுணர்வும் இது போழ்து மறைந்துவிட்டதை நினைக்கும்போது வருந்தாதார் ஒருவருமிரார்" என்று தமது ஆழ்ந்த உணர்ச்சியை வெளியிட்டிருக்கிறார்.

## முடிவுரை

மேனாட்டுக் கலாவல்லுனர்களின் அளவு கடந்த புகழ்ச்சிக் குரியனவாயிருக்கும் போரோ புதூர் சிற்பங்களின் தாயகம் இந்தியாவேயென்பதை மறுப்பார் ஒருவருமிலர். அது அனைவராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதோர் உண்மையாகும். ஏனெனில் இச்சிற்பங்களால் விளக்கமுறும் சம்பவங்கள் யாவும் பௌத்தமத நூல்களிலும், ஹிந்துக்களின் பூர்விக மதக்கிரந்தங்களிலும் காணப்படும் வரலாறுகளையே பெரும்பாலும் குறிப்பிடுகின்றன. பெர்குஸன் (Pergusson) என்ற சிற்பக்கலை நிபுணர், போரோ புதூர்ச் சிற்பங்களை நிருமித்த தொழிலாளிகள் மேற்கிந்தியாவிலிருந்தே ஆங்குக் குடியேறியவர்களென்றும் அந்தச் சிற்பங்களின் இலட்சணங்களும், அலங்கார வேலைப்பாடுகளும் அஜந்தா, நாஸிக் முதலிய இடங்களிலுள்ள குகைக்கோயில்களின் தன்மையையே பெரும்பாலும் ஒத்தனவாகவிருப்பதால் அதைக் குறித்து ஸந்தேகிப்பதற்கே இடமில்லையென்றும் உறுதியாகக் கருதுகிறார்.*

ஜாவாத் தீவிலுள்ள பூர்விக ஆரிய பௌத்த சின்னங்கள் இயற்கையில் அழிவு சக்திகளால் அடியோடு அழிந்து போகாமல் அவைகளைக் கண்டு பிடித்து, அவற்றின் அருமையை உலகிற்கு வெளிப்படுத்திய மகத்தான பெருமை ஸர் ஸ்டாம்போர் ராபிள்ஸ் என்பவருக்கே உரியதாம். அவருடைய அரிய முயற்சியினால் தான் போரோபுதூர் சிற்பங்களனைத்தும் மக்களின் நினை

* Havell's Indian Sculpture & Painting, p. 130.

வினின்றும் அறவே அகன்றுவிடாமல், இது போழ்து உலகத்தின் பற்பல பகுதியிலுள்ள யாத்திரீகர்களும் கண்ணுற்று அதிசயிக்கும் பேறு பெற்று விளங்குகின்றன. மண்மேடிட்டு, முள்ளும் புதரும் செறிந்து கிடந்து பாழாய்க்கிடந்த அந்த ஸ்தலத்தை மழையினலும், மணற்சரிவுகளாலும் உருக்குலைந்து போகாதவாறு பாதுகாத்து உலகத்தின் அற்புதக்காட்சி விநோதங்களில் ஒன்றாக விளங்கும் அளவிற்கு அதைப் பிரபலப்படுத்திய அந்தப்பெருந்தன்மை வாய்ந்த ஆங்கிலேயக் கனவான்பால் வருங்காலச் சந்ததியார் எவ்வளவோ கடப்பாடுடையர். பூர்விக ஞாபகச் சின்னங்களைப் பாதுகாப்பதற்கான சட்டங்கள் இயற்றப்படுவதற்கு வெகு நாட்கள் முன்னதாகவே இவ்விஷயத்தில் அவர் காட்டிய சிரத்தையும், உற்சாகமும் மிகவும் பாராட்டத்தக்கன. இந்திய சாவக நாகரிகத்தைக் குறித்து நாம் ஆதாரத்துடன் துணிந்து எழுதுவதற்கு அவரது அரும்பிரயாசைகளும், ஆராய்ச்சித் திறனுமே பெரிதும் காரணமாக இருக்கின்றன என்று கூறுவது அதிசயோக்தியாகாது.

(முற்றும்.)

# பெரிபுளூஸ்

ச. சோமசுந்தர தேசிகர்

(433-ம் பக்கத் தொடர்ச்சி)

58.[1] **வை**க்கரைக்கு அப்பால் கருஞ்சிவப்பு மலையும்[2] பாளியா[3] (*Paralia*) என்று பேருடைய நாடும் கரையோரமாகத் தெற்கே

---

58. (1) உவில்லியம் வின்சேண்டு என்பார் பின்வருமாறு மொழி பெயர்த்துள்ளார்:—"இழவக்கரை அல்லது செம்மலையைக் கடந்தவுடன் எதிர்ப்படும் நாடு பாண்டிய அரசாட்சிக்குட்பட்டது; அது பாளியா வென்றழைக்கப்படும். நேர் தெற்கு வடக்காயுள்ளது. முத்துச் சலாபங் குளிக்கும் கொற்கை வரையிற் செல்லுகிறது. கொற்கை பாண்டிய அரசாட்சிக்குட்பட்டது. ஆனால் செம்மலையை விட்டவுடன் முதலிற் காணப்படும் துறைமுகம் பலிதை. அதற்கடுத்தது குமரி. அங்கு நல்ல கோட்டையும் துறைமுகமும் உண்டு. ஈண்டுப் புண்ணியத்தை உத்தேசித்த யாத்திரிகர்கள் பிரமசாரிகளாய் நீராடற்பொருட்டுக் கூடுகின்றனர். பெண்டிரும் ஆடவரும் இக் கூட்டத்தி லுண்டு; முன்னர் ஒரு தேவி இவ்விடம் வந்து மாதமொருமுறை நீராடிய தாகப் புராணங்கள் கூறும்." (Periplus by W. Vincent.)

வைக்கரை கோட்டயத்திற்குப் போகும் இறங்கு துறையிலுள்ளதோரூர். இதனை யவனாசிரியர்களெல்லாம் பக்கரே (Bakarei) என்றெழுதி இருந்தவிடந் தெரியாது மயங்கினர். இம் மயக்கத்தை முதன்முதல் தீர்த்து வைத்தவர் வே. கனகசபைப் பிள்ளையாவர். அவர் எழுதியுள்ளதிலிருந்து இப்பொழுதுள்ள கொச்சி முதலிய நாடுகள் கலி 3100 ஆகிய, கி. பி. முதல் நூற்றாண்டில் இருந்ததில்லை யென்பதும், பெரியாற்றின் முகத்துவாரத்தி லுள்ள முசிரி (அகம். 148) கடற்றுறைப் பட்டினமாகவே விளங்கிற்றென் பதும் வெளியாகும்.

(2) செம்மலை: வர்க்கள்ளி என்று சொல்லப்படும் சிவப்புக் கற்கள் நிறைந்த விடம். இது 8°42'N அக்ஷாம்சத்திலிருக்கிறது.

(3) பாளியாநாடு: கால்டுவெல் பாதிரியார் தமது திராவிட ஒப்பிலக் கணத்தில் (பக். 96) மூன்று பாளியாக்கள் உண்டென்றும், அவை தாலமியால் கூறப்பட்ட சோழபாளியா ஒன்றும், தொரங்கிபாளியா ஒன்றும், பெரிபுளூவில் கண்ட பாளியா ஒன்றுமாகு மென்பர். பெரிபுளூசில் கண்டது ஆய் நாடும் காரி நாடும் ஆகும். அதாவது தென்திருவாங்கூரும் தென்திருநெல்வேலி நாடுமோம். இதனுள் குமரித்துறையும் கொற்கைத்துறையு மடங்கும். பர்னல் (Burnel) சொல்லுகிறபடி திருவாங்கூருக்கு மறுபெயரான புாளி

செல்லுகின்றது. அதனில் முதலிடம் பலிதா[4] (*Balita*) என்று பேர்பெறும்; அங்கே நல்ல துறையும் கடற்கரையோரமாக ஊரு மிருக்கின்றன. இதற்கப்பால் குமரி[5] யென்றோர் இடமிருக்கிறது; இங்கே குமரி முனையும் துறைமுகமு மிருக்கின்றன. இங்கே தம் பிற்றை நாளைக் கழிக்க விரும்புகிறவர்களும் நீராட விரும்புகிறவர்களும் பிரமசரியம் காக்க விரும்புகிறவர்களும் கூடுகின்றனர்; ஸ்திரீகளும் அதேமாதிரி செய்கின்றனர். அதற்குக்காரணம் இங்கே ஒரு பெண் தெய்வம் வாழ்ந்து நீராடினதாகக் கூறப்படுகின்றது.

---

என்பது ஒப்புக்கொள்ளத்தகாதது. கிரேக்கர் தாம் வந்த காலத்து ஏதாவது ஒரு நாட்டை அங்ஙனமே தங்கள் பாஷையில் கூறிப் பொருளும் காட்டுவர். அங்ஙனமிருந்ததாகத் தோற்றவில்லை. குண்டர்ட் பேராசிரியர் (Dr. Gundert) தமது மலையாள அகராதியில் கோட்டையம் அரசர்களுக்குச் சொந்தமான ஒரு கோட்டைக்குப் புரளி என்று பெயரென்றும், அவர்களுக்குப் புரளீசன் என்று பெயரென்றும் கூறுவர். இது வஞ்சி பூபதி என்பதுபோல் இவர்கள் முன்னர் ஆண்ட நாட்டின் ஞாபகார்த்தமாகக் கொண்டதுபோலு மென்பர். கனகசபைப் பிள்ளையவர்கள் இதனைப்பற்றி யொன்றும் கூறியதாகத் தோன்றவில்லை. ஆயினும் இதுவே பஃறுளி யாற்றினுட்பட்ட பஃறுளி நாடாகவிருக்கவேண்டு மென்று தோற்றுகிறது. பஃறுளி என்பது பறுளி என்றும் புரளி என்றும் ஆவது இயற்கை. அதனைக் கேட்ட யவனர் பாளியா என்று பேரிட்டழைத்தலும் இயற்கையே. பஃறுளி யென ஓர் ஆறுண்டெனவும் அது குமரிக்குத் தெற்கிருந்ததெனவும் இலக்கியம் கூறும். கால்டுவெல் மேற்றிராணியார் அறியாமையால் அவ்வாறிருக்கக் காரணமில்லை என்று கூறினர். இது பின்னர்க் கடல்கொண்டதென்பது சிலப்பதிகாரம் காடுகாண்காதை, 17—22-ம் அடிகளுக்குள்ள அடியார்க்கு நல்லார் உரை மேற்கோளால் இனிது விளங்கும்.

(4) பலிதா: விழிஞம் விழியம் என்றாகி அத்துச் சாரியை பெற்று விழியத்து என்றாக அதனைப் பலிதாவென யவனர் எழுதினரென்பர் சிவராஜ பிள்ளை. (The Chronology of Ancient Tamils, p. 177.) 'வானவரம்பன் வெளியத் தன்ன' என்பது அகம். 359. திருவனந்தபுரத்துக் கருகில் ஒரு சிற்றூராக விருக்கிறதென்றும் குலோத்துங்க சோழபட்டணம், இராஜேந்திர சோழபட்டணம் என்று பேர் என்றும் எழுதுவர் தேசிகவிநாயகம் பிள்ளை. (கலைமகள், i, 589.)

(5) குமரி: குமரித்துறையைப் பற்றி அதிக மெழுதவேண்டியதில்லை. காசி முதல் கன்னியாகுமரிவரை என்னும் பழமொழியே போதியதாம். இஃது அன்றுதொட்டே பேர்போனதென்பதற்கு, "மாமறை முதல்வன் மாடலனென்போன், மாதவ முனிவன் மலைவளங்கொண்டு, குமரியம் பெருந்துறை கொள்கையிற் படிந்து" என்னுஞ் சிலப்பதிகார (XV 13—15) அடிகளே போதிய சான்றாம்.

59.[1] குமரியிலிருந்து தெற்கே [2]முத்துச்சலாபமிடு மூரான கொற்கை வரையில் இந்நாடு பரவுகிறது. (சலாபம் சிறையாளர்

---

59. (1) உவில்லியம் வின்சேண்டு மொழிபெயர்ப்பு:—"குமரியிலிருந்து இந் நாடு கொற்கை முத்துச் சலாபம் குளிக்கும் இடம் வரை பரவுகிறது; சலாபம் அடிமைகளாலேனும் சிரச்சேத தண்டனையாளர்களாலேனும் செய்யப்படுகிறது; இக் கண்டத்தின் தென்பாகமெல்லாம் பாண்டிய நாட்டில் ஒரு பகுதியாகும். கொற்கையை விட்டவுடன் காணப்படுவது அர்காலஸ் வளைகுடா; இதே பேருடைய நாடொன்று உள்நாட்டிலிருக்கின்றது. இங்கேதான் எபிதோரஸ் (Epidorus) என்ற தீவில் குளிக்கப்படும் முத்துக்கள் முழுமையும் துளையிடப்பட்டு வாணிகத்திற்குத் தயாரிக்கப்படுகின்றன; இத் தீவிலிருந்தே முத்துக்கள் கோத்து நெய்த மஸ்லீன்கள் கொண்டுவரப்படுகின்றன."

(2) முத்துக்கள்: நவரத்தினங்களிலொன்றென்பது யாவருமறிந்தது. இவைகள் கன்னியாகுமரிப் பக்கத்தில் அதிகமாகவும் மீன் பிசல் பக்கங்களிற் சிறிதளவும் கிடைக்கின்றன. ஆயினும் இந்நாட்டைத் தவிர வேறு இடங்களில் முத்துக்கள் கிடைத்ததாக அறிந்தாரொருவருமில்லை. முத்துக்கள் சிப்பிகள் என்னும் ஒருவகை மீன்களிலிருந்து எடுக்கப்படுகின்றன. அம் மீன்களின் செதில்களினிடையில் மணல் முதலியவை புகுந்து உறுத்த அவைகளைச் சுற்றிச் சதை வளருகிறதென்பர் இக்காலத்தார். சுவாதி நக்ஷத்திரம் உதயமாகும் காலத்தில் விழும் மழைத்துளியை உண்ட மீன் வயிற்றில் இத்துளி முத்தாகிறதென்பர் பெரியார். முத்துக்கள் நிலத்திலும் நீரிலும் கிடைக்கும். நிலத்திற் கிடைப்பவற்றைத் தலசம் என்றும், நீரிற் கிடப்பவற்றைச் சலசம் என்றும் சொல்வர். பூமியில் உண்டாகுமிடங்கள் மூங்கில், பாம்பின் தலை, பன்றிக்கொம்பு, நெற்பயிர், கரும்பு, யானைக்கோடு, நீரில்சங்கு, மேகம், சிப்பி, மீன்தலை இவைகளோடு சிங்கம், ஸ்திரீகள் கண்டம், கொக்கின் கழுத்து என்பவற்றிலும் கிடைக்குமாம். இவற்றின் விரிவைப் பரஞ்சோதி திருவிளையாடல் மாணிக்கம் விற்ற படலம் 53-வது செய்யுள் முதல்வருஞ் செய்யுள்களிற் காணலாம்.

பிளினி (Pliny) என்னும் யவனாசிரியர் பின்வருமாறு கூறுகிறார்: 'அலெக்ஸாந்திரியா பிடிபட்ட பிறகே முத்துக்கள் உரோமில் அதிகமாக உபயோகத்துக்கு வந்தன. ஆயினும் அவைகள் முதன்முதலாகச் சில்லா (Cylla) வின் காலத்திற்றான் தெரிந்தது. விலையுயர்ந்த நவரத்தினங்களுள் தலைமையடைந்திருந்தது முத்தே . . . . அதிகமாக இது தாம்பிரபாணித் தீவில் கிடைக்கிறது. நான் ஒரு சமயத்தில் கெயஸ் (Caius) சக்ரவர்த்தியின் ராணியான லோலியா பாலினா 400,00,000 (நாலு கோடி) செகஸ்டர் விலையுள்ள முத்தும் மரகதமும் தன் காது, கழுத்து, தலை முதலான விடங்களிளெல்லாம் அணிந்திருந்ததைக் கண்டேன். கிளியோபாட்ரா அந்தோனி என்பாள் ஒரு கோடி விலை மதிப்புள்ள விருந்தொன்று நடத்துவதாகக் கூறி அந்தப்படி

களால்[3] குளிக்கப்படுகின்றன.) இந்நாடு பாண்டியருக்குச் சொந்தம். கொற்கைக்குமேல் வளைகுடாப்புறமாகக்[4] கரைநாடொன்று[5] போகிறது; இந்த நாட்டிற்கு உள்நாடு ஒன்றிருக்கிறது. அதற்கு அர்கரு[6] (*Argaru*) தேசமென்பது பேர். இந்தப் பக்கமுள்ள கடற்கரைகளில் சேகரமாகும் முத்துக்களெல்லாம் அவ்வூருக்கே கொண்டு போகப்படுகின்றன. இவ்விடமிருந்துதான் மற்ற ஊர்களுக்கு அர்காடிக்[7] (*Argaritic*) என்ற மஸ்லீன் உடை ஏற்றுமதியாகிறது.

---

செய்த விருந்தில் விலையுயர்ந்த முத்தொன்றைக் காடியில் கரைத்துக் கொடுத்தாள். இதுமாதிரியாக யவனர்களே அதிகமாக முத்துக்களை முற்காலத்தில் விலைக்கு வாங்கினர்.

(3) கொற்கை : இது தென் சமுத்திரக் கரையிலிருப்பது. அந்நாளில் பாண்டிய இளவரசனின் இருப்பிடமாகும். முத்துச் சலாபம் ஆங்கு நடந்ததால் அங்கு இளவரசன் வசித்துவந்தனன் போலும். சிலப்பதிகாரம், மதுரைக்காஞ்சி. பார்க்க.

(4) அர்கரு வளைகுடா அல்லது அர்கால வளைகுடா : என்பது திருமறைக்காடான வேதாரண்யத்தின் தென்கோடியாகும். கோடிக்கரையினின்றும் ராமேசுரம் வரையிலுள்ள கடல் என்பர் கால்டுவெல். தாலமி கோரு என்றது இதனை யெனக்கூறி அது கோடியினின்று திரிந்த விதத்தையும் காட்டுவர். கனகசபைப் பிள்ளை ஆர்கலி என்று கொண்டு கடல் என்பர்.

(5) கரைநாடு: தாலமி என்பார் இதனைக் கரோயாய் (Kareoi) என்றும் இது திருநெல்வேலிக்குத் தெற்கிலுள்ளதென்றுங் கூறுவர். கரைநாடு என்றதைக் கோஸ்டு கண்ட்ரீ (Coast Country) என்று மொழிபெயர்த்து விட்டனர். கரை என்றும் காரை என்று நீட்டி எழுதவும் மேல்நாட்டு மொழிகளில் ஒரே எழுத்துத்தான் உபயோகப்படுகிறது. அதனுல் இஃது இன்னதென நிச்சயித்துச் சொல்வதற்கில்லை. கரையார் அல்லது பரதவர் நாடு என்பர் சிலர். ஆனல் கொற்கைக்கு மேலுள்ளது சோழ தேசமென்று எல்லோரும் கூறுகின்றனர். ஷாப் என்பார் சோழமண்டலக்கரையிலிருந்து இது கரையென நின்றதென்பர். ஆயினும் மண்டலமென்று உண்டானது பிற்காலத்தே யென்றெண்ணவேண்டியிருக்கிறது.

(6) உறையூர்: அப்பாஷையில் அர்கரு (Argaru) என்றெழுதப்பட்டிருக்கிறது. இச்சொல் உறையூர் என்பதற்குச் சரியான கிரேக்கமொழி என்பர் ஷாப்.

(7) அர்கரடிக் மஸ்லின்: "தஞ்சை திருச்சி ஜில்லாக்களில் நெய்யப்படும் ஆடைகள் வெகு காலமாகப் பேர்போனது ; உரோமுக்கு வந்த நேர்த்தியானதுகில்கள் சோழ தேசத்திலிருந்து தான் வந்திருக்கவேண்டும். இந்தியா

60. தமிழகத்திலிருந்தும்[1] வடக்கிலிருந்தும் இந்நாட்டுக்கு[2] வரும் கப்பல் தங்கும் அங்காடிப் பட்டினங்களும் துறை முகங்களும் பல இருக்கின்றன. அவை பின் வருமாறு வரிசையாகவிருக்கின்றன: முதலில் கமரா[3] *Camara*), பிறகு படுகா[4] (*Poduca*), பிறகு சோபாத்மா (*Sopatma*); இவற்றில் நாட்டுக்கலங்கள் தமிழகம் வரையில் செல்லுகின்றன; ஒரே மரத்தில் செய்யப்பட்ட [5]சங்காராவென்ற மரக்கலங்களும் இருக்கின்றன; ஆயினும் கிரிசே,

---

வின் இப்பாகத்திலிருந்து தான் முகம்மதிய ராஜாங்கத்தில் அதிக ஆவலோடு வாங்கிய சரிகை வேலை செய்த துகில்கள் வாங்கப்பட்டன'' என்பர் ஷாப்.

பலவிதமான ஆடைகளிருந்தனவென்றும் பட்டில் 30 விதமிருந்தன வென்றும் கூறுவர் டாக்டர் கிருஷ்ணசாமி ஐயங்கார். இந்த அர்காரிடிக் என்பது மதுரையைக் குறிக்கலாமென்றும் அதற்கு ஆதாரம், ரகுவம்சம் VI. 59-வது சுலோகமாமென்றும் கூறுவர். ஆயினும் பத்துப்பாட்டு ளொன்றான பொருநராற்றுப் படையில் "நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந், தரவுரியன்ன வறுவை நல்கி'' (81) என்று காணப்படுகிறது. உரையில் 'கட்டிக் கொண்டவர்களைக் கண்ணுற் பார்க்க முடியாத பூ வேலை செய்த பாம்புச் சட்டை போன்ற துகில்' என்பர். முன்னர்த் துகில், கலிங்கம் என்ற பெயருடைய நூலினுற் செய்த ஆடைகளிருந்தன. ஆவியன்ன அவிர் நூற்கலிங்கம், கோபத்தன்ன தோயாப் பூந்துகில், காம்பு சொலித்தன்ன அறுவை, கண்பொருபுகூஉ மொண்பூங் கலிங்கம், மென்னூற் கலிங்கம், பட்டு நீக்கித் துகிலுடுத்து, தூசுடை, அம்மா சூர்ந்த அவிர்நூற் கலிங்கம், என்னுந் தொடர்களை யாராய்க. பட்டினும் பருத்தியினும் ஆடை நெய்தலில் அன்று முதல் இன்று வரை சோழதேசமே பேர்போனது என்பர். இன்றும் ஆவியன்ன அவிர்நூற் கலிங்கம் நெய்தலிற் றிறமை வாய்ந்த துகிலி உடையையும் அதுவே பேராய் வாய்ந்த துகிலி என்னும் ஊரையும் கவனிக்க.

60. (1) தமிழகம் என்று இந்தப் புத்தகத்தில் கூறியிருப்பதெல்லாம் சோநாட்டைத் தானென்று கொள்ளவேண்டும். அப்படிக் கொண்டால் பல தொடர்களுக்குப் பொருள் விளங்கும்.

(2) இந்நாடு: உறையூர் நாடான சோழ தேசம்.

(3) கமரா: காவிரிப்பூம்பட்டினம்.

(4) படுகா: ஷாப் புதுச்சேரியென்பர். புதுச்சேரி பிரஞ்சுக்காரர் வந்த பிறகு உண்டான பட்டினம். படுகையென்ற சொல் யவன மொழியில் நீட்டி யெழுதப்பட்டிருக்கிறது. இது பறங்கிப்பேட்டை யல்லது கூடலூராகவிருக்கவேண்டும்.

(5) சங்காட: மலையாளக் கரையில் சங்காடம் என்ற படகு வகை இன்றும் வழங்கும்.

கங்கை நாடு இவற்றிற்குச் செல்பவை பெரியனவாய்க் கொலந்தியா (*Colandia*)[6] வெனப் பேர்பெறும். இந்த விடங்களில் தமிழகத்திற் செய்யப்பட்ட எல்லாப் பண்டங்களும், எகிப்திலிருந்து வரும் பண்டங்களிற் பெரும்பாகமும், பாரியாவிலிருந்து வரும் பண்டங்களும் இறக்குமதியாகின்றன.

61. இதனை யடுத்துள்ள நாட்டின் போக்கு[1] கிழ் முகமாக, மேல் புறம் முன்னோரால் தப்ரபேனி[2] (*Taprobane*) என்று சொல்லப் பட்ட பலிசிமுந்து[3] (*Palaesimundu*) தீவிருக்கிறது. இதன் வட பாகம்[4] ஒரு நாட் பயணமுடையது; தென்பாகம் மேல் புறமாக நீண்டு மெதுவாக அவினியாக் கரையை யெட்டிப் பார்க்கிறது. இங்கே முத்து, அரதனங்கள், மஸ்லீன், ஆமையோடு என்பவைகள் உண்டாகின்றன.

62. இவ்விடங்களுக்குச் சமீபமாக மஸேலியா[1] (*Masalia*) என்ற பிரதேசமிருக்கிறது. இஃது உள்நாட்டுக்கு எதிரில் கடற்

---

(6) சோபட்டினம் : சோ - அரண், எயில் ; எயிற் பட்டினம். இது இப்பொழுது மரக்காணம் என்று வழங்கும். சிறுபாணாற்றுப்படையில் வரும் 'படுவிற் பட்டினம் படரின்' என்பது இதனையே குறிக்குமென்பது 'திரு மன்னிவளர இருநிலமடந்தையும்........................தண்டாற் கொண்ட கோப்பரகேசரி பன்மரான ஸ்ரீ இராஜேந்திர சோழ தேவற்கு யாண்டு எட்டாவது ஜயங்கொண்ட சோழமண்டலத்து ஒய்மா நாட்டுப் பட்டின நாட்டுப் பட்டிநத்து ஸ்ரீபூமீஸ்வரமுடைய மஹாதேவற்கு.........' என்றும், 'திருமகள் போல......ஸ்ரீ கோவிராஜ ராஜ ராஜ கேசரிவர்மர்க்கு யாண்டு பதிநேழாவது அருமொழி மூவேந்த வேளார் ஒய்மா நாட்டுப் பட்டின நாட்டு பட்டிநத்திருந்து ஊர்களை வினவாநிற்க......' என்றும், 'எயிற்பட்டினமான விக்கிரமசோழச் சதுர்வேதி மங்கலம்' என்றும், 'எயிற்பட்டினத்து மகாஸபையோம்' என்றும் மரக்காணத்திலுள்ள சிவன் கோயில் கல்வெட்டுக்கள் காணப்படுவதால் தற்போதைய மரக்காணந்தானென்பது நிச்சயமாகும்.

61. (1) நாட்டின் போக்கு: பெரிபுளூசை எழுதியவர் முசிரி, வைக் கரைக்கு இப்பால் வராமல் பிறர் சொல்லியதைக் கேட்டே எழுதியவரென்பது அறிஞர் பலர் அபிப்பிராயம்.

(2) தப்ரபேனி: சிங்களத் தீவான சிலோன் (Ceylon).

(3) பழசைமுந்து: பாலி சீமந்தி என்ற வடமொழியின் மரூஉ என்பர். இது சிலோனையே குறிக்கும்.

(4) வடபாகம்: வேதாரணியம் கோடிக்கரையிலிருந்து சிங்களத்துக்குப் போவதாக இது குறிக்கிறது. வடபாகம் யாழ்ப்பாணம். தென்பாகம் அநுராதபுரம், கொழும்பு முதலான இடங்கள்.

62. (1) மஸேலியா: மசூலிப்பட்டணம்.

கரையில் வெகு தூரம் பரவியிருக்கிறது. அங்கே அதிக மஸ்லீன்[2] நெய்யப்படுகிறது. இத்தேசத்திற்கப்பால் கிழக்கு நோக்கிக் கடலைக் கடந்தால் தோசரினி[3] (*Dosarene*) என்ற பிரதேசமிருக்கிறது. இங்கிருந்து தொசரினிக் என்ற தந்தம் கிடைக்கிறது. இதற்கப்பால் நாடு வடபுறமாய்ச் செல்லப் பல முருட்டுச் சாதியினர் அங்கு வசிக்கின்றனர். அவர்களுள் ஒருவகையினர் தட்டை மூக்குள்ள காட்டு மிராண்டிகளான கிராதா (*Cirrhadac*) என்பார்; பர்கஸி (*Bargysi*) யென்போர் மற்றொரு வகுப்பினர்; குதிரை முகம், நீண்டமுகமுடைய பிணந்தின்னிகள் ஒரு வகுப்பினர்.

63. இதற்கப்பால்[1] போக்கு மறுபடி கீழ்ப்புறம் திரும்புகிறது. கடல் வலது புறமாகவும் கரை இடது புறமாகவும் வைத்துச் சென்றால் கங்கை நாடு தோன்றுகிறது; அதற்குச் சமீபமாகக் கடையிடமான கிரிஸே தீவு[2] (*Chryse Island*) இருக்கிறது. கங்கை நாட்டுக்குச் சமீபத்தில் நீலநதியை யொத்த கங்கையாறு உற்பத்தியாகி ஓடிவருகிறது. அதனுடைய கரையில் கங்கை[3] யென்ற பேருடைய அங்காடிப்பட்டினமுண்டு; இது வழியாகப் பச்சிலை, கங்கை நாட்டுச் சடாமாஞ்சி, முத்து, கங்கை நாட்டது என்ற மிக நேர்த்தியான மஸ்லீன் என்பவைகள் வருகின்றன. இவ்விடங்களுக்கு அருகில் தங்கச் சுரங்கங்கள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. கல்டிஸ் (*Caltis*) என்ற பொன்நாணய மொன்று வழங்குகிறது. சூரியன் உதயமாகுமிடத்திற்குக் கீழ் ஜனங்கள் வசிக்கும் கடைசி பூமியான ஒரு தீவு இந்த நதிக்கு எதிரில் இருக்கிறது; அதற்குக் கிரிஸே என்று பெயர்; எரித்திரேயன் கடலில் உள்ள ஊர்களில் அகப்படும் ஆமையோடுகளில் அங்கு அகப்படுவது முதற்ரமானது.

---

(2) மஸ்லீன்: ஆஸ்கா உப்பாடை முதலியவைவற்றைக் குறிக்கும்.

(3) தோசரினி: இது ஒரிசாவென்று பலர் கருதுகின்றனர். அவர்கள் மூல எட்டில் மசூலியாவிலிருந்து 'கிழக்கு நோக்கிக் கடலைக் கடந்தால்' என்றிருப்பதைக் கவனிக்கவில்லை. இது பர்மா, சீனு முதலிய தேசத்தைக் குறிக்கும். அதற்கப்பாலுள்ளோரே தட்டை மூக்குடையோர்.

63. (1) இதற்கப்பால் என்றது மசூலிப்பட்டணத்திற்கப்பால்.

(2) கிரிஸே: இக்கிரேக்கச் சொல்லுக்குப் பொன் என்று பொருள். ஸ்வர்ண பூமியெனப்படும் சாவகம்.

(3) கங்கை: இதுபொழுது தாம்லூக் என்று கூறும் தாமிரலிப்தி என்ற ஊர்.

64. வடக்கில் இந்தப்பிரதேசத்திற்கப்பால் வெளிப்புறமுள்ள கடல் திஸ்[1] (*This*) என்ற நாட்டில் முடிகிறது: அங்கே தீனி (*Thinae*) என்றொரு பட்டணமிருக்கிறது; அங்கிருந்து பாரிகசாவிற்கு பாக்திரியா வழியாகக் கால் நடையாகவும், தமிழகத்துக்குக் கங்கையாறு வழியாய்க் கப்பல் மூலமாகவும் கோராப்பட்டு, பட்டு நூல், பட்டுத் துணி இவைகள் வருகின்றன. திஸ்தேசம் செல்லக் கூடியதல்ல. அங்கிருந்து வருபவர் மிகக்குறைவு. இந்தத் தேசம் துருவநக்ஷத்திரத்துக்குக் கீழும் போண்டஸ், காஸ்பியன் கடல் இவற்றுக்கு அப்பாலுமிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதற்கப்பால் மியோடிஸ் ஏரி இருக்கிறது; இவைகளெல்லாம் சமுத்திரத்தில் விழுகின்றன.

65. ஆண்டாண்டு தோறும் திஸ்நாட்டு எல்லையில் சிறிய உடலும் அகன்று தட்டையான முகமும், நல்ல சுபாவமுமுள்ள ஒரு வகையினர் வருகின்றனர். அவர்களைப் பிஸதி (*Besatae*) சாதியினர் என்கின்றனர்; அவர்கள் முழு நாகரிக மற்றவர். அவர்கள் பெண்டு பிள்ளைகளோடும் திராட்சையிலையால் முடைந்த கூடை போன்ற கூடைகளிலும் மூட்டைகளிலும் பண்டங்கள் கொண்டு வருகின்றனர். அவர்கள் தங்கள் நாட்டிற்கும் திஸ் நாட்டிற்கும் இடையில் சந்திக்கின்றனர். அங்கே அவர்கள் கூடைகளைப் பாயாக விரித்துக்கொண்டு பல நாளிருந்து விருந்து நடத்திப் பின்னர் உள்நாட்டுக்குத் திரும்புகின்றனர். பின்னர் அவர்கள் திரும்பி வருவதைப் பார்த்துக் கொண்டிருக்கும் நாட்டு மக்கள் பாய்களைச் சேகரிக்கின்றனர். அம்முடைவிலிருந்து பெட்ரிஸ் (*Petris*) என்ற நார்களைப் பொறுக்குகின்றனர். அவர்கள் இலைகளை ஒன்றன்மேலொன்றாக நெருக்கி அடுக்கி உருண்டையாகச் சுருட்டி ஒலி நாரினால் குத்திக் கட்டுகின்றனர். அவை மூவகையாகப் பிரிக்கப்படுகின்றன. பெரிய இலைகளாலானவை பெரிய உருண்டைப் பச்சிலையென்றும், சிறிய இலைகளாலானவை நடுத்தர உருண்டையென்றும், மிகச் சிறிய இலைகளாலானவை சிறு உருண்டையென்றும் சொல்லப்படும். இவ்வாறு மூன்றுவகைப் பச்சிலையுண்டு; அவை சேகரிக்கப்படும் அந்த ஜனங்களாலேயே இந்தியாவுக்குக் கொண்டுவரப்படுகின்றன.

66. இவைகளுக் கப்பாலுள்ள பிரதேசம் அதிகக் குளிராலும் மழையாலுமோ அன்றித் தெய்வக்கோட்பாட்டாலோ செல்ல முடியாமலிருக்கிறது.

(முற்றும்.)

---

64. 1. த்ஸின் (TS'in) என்ற சீனதேசம்.




# கோலார் தங்கச் சுரங்கம்

எம். கிருஷ்ணமூர்த்தி ஐயர்

## 1. சுரங்கத்துக்குள் தங்கத்தூள் கலந்த பாறைகளை வெட்டிச் சேகரித்தல்

மிகச்சிறந்த உலோகங்களில் தங்கம் ஒன்று. இது மனிதனுக்குப் பலவகையிலும் உபயோகமாகிறது. மேலும் உலகத்திலுள்ள ஜனங்களில் இந்தியர்கள் தங்கத்தை அதிகமாக உபயோகிக்கிறார்கள். இவ்வுலோகம் தென்னாப்பிரிக்காவிலுள்ள டிரான்ஸ்வால், ரொடீஷியா நாடுகளிலும், ஆஸ்திரேலியா, கானடா, இந்தியா முதலிய இடங்களிலும் கிடைக்கிறது. உலகத்தில் வருஷத்தில் மொத்தம் 197 லக்ஷம் அவுன்ஸ் எடையுள்ள தங்கம் வெட்டியெடுக்கப்படுகிறது. அதில் பெரும்பாகம் அதாவது 103 லக்ஷம் டிரான்ஸ்வால் நாட்டிலேயே அகப்படுகிறது. ஓர் அவுன்ஸ் என்பது சுமார் 3 பவுன் எடையுள்ளது. அதன் மதிப்பு சற்றேறக் குறைய 60 ரூபாயாகும். இந்தியாவில் கோலார், அனந்தபூர், வடபர்மாவிலுள்ள வ்டசிண்டுவின், பஞ்சாப் ஆகிய இவ்விடங்களில் தங்கம் அகப்படுகிறது.

| இடம் | எடை அவுன்ஸில் | மதிப்பு ரூபாயில் |
|---|---|---|
| கோலார் | 3,81,723 | 2,16,54,394 |
| அநந்தபூர் | 2395 | 1,37,320 |
| சிண்டுவின் | 48 | 4,169 |
| பஞ்சாப் | 42·5 | 1,645 |

முன்கண்ட அட்டவணையில் 1927-ம் ஆண்டு மேற்கண்ட இடங்களில் கிடைத்த தங்கத்தின் எடையும், மதிப்பும் குறிக்கப்பட்டிருக் கின்றன.

மேற்கூறிய புள்ளிவிவரங்களிலிருந்து இந்தியாவிற் கிடைக்கும் தங்கத்தில் 100-க்கு 99·2 பங்கு தங்கம் கோலாரிலேயே அகப்படுகிறது என்பது தெரியவரும். இப்பொழுது கோலாரி லுள்ள தங்கச்சுரங்கத்தைப் பற்றியும் அங்குத் தங்கம் வெட்டி யெடுத்துச் சுத்தம் செய்யும் மாதிரியையும் கவனிப்போம்.

கோலார் மைசூர் ராஜ்யத்தின் கீழ்ப்பாகத்திலுள்ள ஓர் ஜில்லா. இது சமுத்திரமட்டத்துக்கு சுமார் 2500 அடி உயரத்திலுள்ளது. நிலம் பழமையான பாறையாலானது. இங்குள்ள தங்கச்சுரங்கத்துக் குத் தனியாக ஓர் இருப்புப்பாதை போடப்பட்டுள்ளது. இதற்கு, 'கோலார் தங்க வயல் இருப்புப்பாதை' (Kolar Gold Fields Railway) என்று பெயர். இதன் நீளம் மொத்தம் 10 மைல்தான். இப்பாதை சென்னை-பங்களூர் பாதையில் சென்னையிலிருந்து 178 மைல் தூரத்திலுள்ள பௌரிங்பேட்டை (Bowringpet) ஜங் ஷனிலிருந்து பிரிகிறது. மிகவும் வேகமாகப் பிரயாணம் செய்யும் வண்டியில் சென்னையிலிருந்து 6 மணி நேரத்தில் இங்கு வந்து சேரலாம். கோலார் தங்க வயல் இருப்புப் பாதையில் முதலாவது ஸ்டேஷனான நைன்ரீவ்ஸ் (Nine-reefs) பௌரிங்பேட்டையி லிருந்து 5-வது மைலிலுள்ளது. அதற் கடுத்தாற்போல் 6-வது மைலில் கோரமாண்டல், 7-வது மைலில் ஊர்காம், 9-வது மைலில் சாம்பியன், 10-வது மைலில் மாரிக்குப்பம் ஆகிய ஸ்டேஷன்கள் உள்ளன. மாரிக்குப்பத்தில் இருப்புப்பாதை முடிவடைகிறது. தங்கச் சுரங்கவேலை நைன்ரீவ்ஸ் ஸ்டேஷனுக்கு அருகிலேயே ஆரம்ப மாகிறது என்று சொல்லலாம். மேற்கூறிய ஊர்களிலெல்லாம் ஊர் காம் (Oorgaum) நகரமே மிகவும் முக்கியமானது. நாங்கள் காலை 6-மணிக்கு ஊர்காம் போய்ச் சேர்ந்தோம். முன்னேற்பாட்டின்படி எங்களை ஒரு சுரங்க உத்தியோகஸ்தர் ஸ்டேஷனில் சந்தித்துச் சுரங்கத்துக்கு அழைத்துச் சென்றார். சுற்றுப் பக்கத்தில் எங்குப் பார்த்தாலும் கருமையான கல்லும், சல்லியும், பாறையும் தவிரப் புல் பூண்டு வகை யாதொன்றும் காணப்படவில்லை. கண்ணுக் கெட்டிய வரையில் தொழிற்சாலைகளும் அவைகளினிடையில் ஆங்காங்குத் தலை தூக்கி நிற்கும் புகை போக்கிகளுமே காணப்பட்டன; இடை யிடையில் சிற்சில வீடுகளும் காணப்பட்டன. எங்களுடன் வந்த உத்தியோகஸ்தர் சுரங்கத்தில் 4000 அடி கீழே இறங்க வேண்டு மென்றும், அங்குத்தான் தங்கம் வெட்டி யெடுப்பதைப் பார்க்கக்

கூடுமென்றும் ஏதேதோ பேசிக்கொண்டு வந்தார். அவை யெல்லாம் எங்களுக்குப் பகற்கனவுபோல் தோன்றின.

15 நிமிஷங்கள் நடந்து சென்று ஓர் சுற்றுச்சுவருக்குள் நுழைந்தோம். அங்கு முதலில், பாறைகளில் துவாரம் செய்வதற்கு உதவும் பல முகங்களோடு கூடிய கோடரிகளையும் தமர்களையும் தயார் செய்யும் உலையைப் பார்த்தோம். அந்த உலை சாதாரணமாய் நிலக்கரி எரிவதினல் ஏற்பட்டதல்ல; மின்சார சக்தியினாலானது. அதில் சுமார் 2000 அல்லது 3000 டிகிரி உஷ்ணங்கூட உண்டாக்கப்படுகிறது. பின், மாடியின்மேலுள்ள அறைக்குச் சென்றோம். அங்கு ஓர் உத்தியோகஸ்தர் தமக்கெதிரிலுள்ள ஓர் பலகையைப் பார்த்தவண்ணமாகவே யிருந்தார். அப்பலகையில் 100,200,... 1000,...2000 அடிகள் என்ற குறிப்புக்கள் காணப்பட்டன. அதன்மேல் ஓர் முள் மேலும் கீழும் நகர்ந்து கொண்டிருந்தது. கூலியாட்களை எடுத்துச் செல்லும் கூடு எவ்வளவு தூரத்திலிருக்கிறதென்பதை மேற்கூறிய முள் பலகையில் காட்டுகிறது.

பின்பு சுரங்க வாயிலண்டை போனோம். அங்கு 18 அடி சதுரமுள்ள ஓர் மேடை அமைக்கப்பட்டிருக்கிறது. இம்மேடை நான்கு சமசதுரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. பக்கங்கள் அழுத்தமான மரங்களால் ஆனவை. இவ்விதம் ஏற்பட்ட நான்கு துவாரங்கள் ஒவ்வொன்றும் 6 அடி சதுரமிருக்கும். இந்த வாயில்கள் வழியாய்த்தான் ஜனங்களை ஏற்றிச் செல்லும் கூடு மேலும் கீழும் நகர்ந்து செல்லுகிறது. சுரங்கவாசலுக்குமேல் இரண்டு ராட்டினங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு ராட்டினத்தின் மேலும் உலோகத்தினலான கயிறு நகர்ந்து கொண்டிருக்கிறது. கயிற்றின் ஒவ்வொரு கோடி முனையிலும் ஓர் கூடு தொங்கிக் கொண்டிருக்கிறது. இவ்விதம் இரண்டு ராட்டினங்களிலிருந்தும் மொத்தம் நான்கு கூடுகள் நான்கு துவாரங்கள் வழியாகவும் நகருகின்றன. கயிற்றின் நீளம் 6000 அடி, அதாவது ராட்டினத்தின் ஒரு பக்கத்திலுள்ள கூடு தரைமட்டத்திலிருக்கும் போது மற்றொரு கூடு அதிலிருந்து 6000 அடி ($1\frac{1}{8}$ மைல்)க்குக் கீழே யிருக்கும். கூடு சுமார் 21 அடி உயரமுள்ளது. அது ஒன்றன் கீழ் ஒன்றாய் 3 அறைகளாகத் தடுக்கப்பட்டுள்ளது. ஆகவே ஓர் அறையின் உயரம் 7 அடி, அதன் அகலம் $3\frac{1}{2}$ அடி, நீளம் $3\frac{1}{2}$ அடி. கூட்டின் பக்கங்கள் உறுதியான இரும்புத்தகடுகளாலானவை. காற்றோட்டம் ஏற்படுவதற்காகப் பக்கங்களில் துவாரங்கள் அமைக்கப் பட்டுள்ளன. ஒவ்வோர் அறைக்கும் ஒவ்வோர் கதவுண்டு. $3\frac{1}{2}$ அடி நீளம், $3\frac{1}{2}$ அடி அகலம், 7 அடி உயரமுள்ள அந்தக் கூட்டின் ஒவ்வோர் அறையிலும்

12 கூலிகள் போவது வழக்கமாம். நாங்கள் 11 பேர் அதில் அடைக்கப்பட்டோம்.

சுரங்க வழி நேர் செங்குத்தாகக் கீழே செல்லுகிறது. இதற்குச் செங்குத்தான சுரங்க மார்க்கம் (vertical shaft) என்று பெயர். தங்கம் எடுப்பதற்காக மேலேயிருந்து வெட்டிக் கொண்டு போயிருக்கிறார்கள். முதலில் 100 அடி தூரம் கீழே துவாரம் செய்து கொண்டுபோய், அவ்விடத்தில் புழங்குவதற்கு இடைவெளி செய்து கொண்டு பக்கத்திலுள்ள தங்கம் கலந்த கற்பாறையை வெட்டியெடுப்பார்களாம். அங்கு வேலை முடிந்ததும் மறுபடியும் 100 அடி கீழே சென்று அதைச்சுற்றி வேலைசெய்ய ஆரம்பிப்பார்கள். இவ்விதம் 100 அடிக்கு ஒரு ஸ்டேஷன் வீதம் கட்டிக் கொண்டு போவது வழக்கமாம். மேலேயுள்ள ஸ்டேஷன்களுக்கு அருகில் வேலை முடிந்துவிட்டால் அதை மூடிவிடுவார்கள். இம்மாதிரியாக ஊர்காம் சுரங்கத்தில் 60-வது ஸ்டேஷன் வரையில் போயிருப்பதாகத் தெரிந்து கொண்டோம். மேலே ஏற்பட்ட இடைவெளிகளை அடைக்கச் சவுக்குக் கட்டைகளையும் கருங்கற் சல்லிகளையும் உபயோகிக்கிறார்கள்.

நாங்கள் 40-வது ஸ்டேஷனுக்குப் போகிறதாக டெலிபோனில் சொல்லிவிட்டுக் கூட்டுக்குள் நுழைந்து கதவைத் தாளிட்டுக் கொண்டோம். 'ரைட்' (right) சொன்னதுதான் தெரியும்; கூடு வெகு வேகமாய் கிர்—ர்—ர் என்று இறங்க ஆரம்பித்தது. நிமிஷத்துக்கு 2000 அடி வீதம் கூடு நகர்ந்து செல்லக் கூடும். எங்குப் பார்த்தாலும் ஒரே இருள். பக்கத்தில் கட்டைகள் புரளுவதால் ஏற்பட்ட சத்தம் எங்களுக்கு அதிகமான பீதியை ஏற்படுத்தியது. நாங்கள் ஒவ்வொரு க்ஷணமும் கயிறு அறுந்து கூடு பாதாள லோகத்துக்குப் போவதாகவும் எண்ணங் கொண்டோம். எங்கள் மனது அப்போது படாத பாடுபட்டது. இரண்டு நிமிஷத்தில் கூடு 40-வது ஸ்டேஷன், அதாவது 4000 அடி மட்டத்தில் சென்று திடீரென்று நின்றது. இந்த இரண்டு நிமிஷமும் எங்களுக்கு 2 யுகங்கள் போல் தோன்றின. கதவைத் திறந்து கொண்டு வெளிவந்தோம். அது ஒரு சிறிய தொழிற்சாலைபோல் காணப்பட்டது. அங்கு வேலை செய்துகொண்டிருந்தவர்களினிடமிருந்து 42-வது ஸ்டேஷனுக்கு அருகில் தங்கம் வெட்டுவதாக அறிந்து கொண்டு மறுபடியும் கூட்டிலேறி ஓர் க்ஷணத்தில் 42-வது ஸ்டேஷன் போய்ச் சேர்ந்தோம். தரைமட்டத்திலிருந்து 4200 அடி கீழேயுள்ள அந்தவிடம் ஓர் பெரிய தொழிற்சாலை போல் காணப்பட்டது. அங்குச் சுமார் 100 ஜனங்கள் வேலை செய்து

கொண்டிருந்தார்கள். அங்குள்ள யந்திரங்கள் 15 அல்லது 20 அடி குறுக்களவுள்ளன. இவ் வியந்திரங்கள், பிரித்துச் சிறிய பாகங்களாகச் சாய்ந்த சுரங்க வழியின் (slanting shaft) மூலமாகக் கீழே கொண்டு செல்லப்பட்டு ஒன்றுசேர்க்கப்பட்டிருக்க வேண்டுமென்று யூகித்துக் கொண்டோம்.

அங்கு வேலைசெய்து கொண்டிருந்த ஆட்களினிடமிருந்து அந்த மட்டத்துக்கு சுமார் 60 அடிக்குக் கீழ் தங்கம் வெட்டியெடுக்கிறதாகக் கேள்விப்பட்டோம். அங்கிருந்து (நேர்வடக்கென்று இப்பொழுது ஞாபகம்) சுமார் 100 கஜதூரம் நடந்து சென்றோம். அங்கு எங்களுக்குக் குறுக்கே ஓர் பாதை போவதைக் கண்டு அதன் வலது பக்கம் திரும்பினோம். அங்கெல்லாம் வெளிச்சம் கிடையாது; நாங்கள் எடுத்துச்சென்ற லாந்தல் வெளிச்சம் தான். அங்குள்ள காற்று மிகவும் உஷ்ணமானது. காற்றோட்டம் ஏற்படுத்த ஆங்காங்குக் காற்றடிகள் ஏற்பட்டுள்ளன. மேலும் அசுத்த ஆகாயத்தால் ஆபத்து நேரிடாவண்ணம் ஆங்காங்குச் சூத்திரக்கதவுகள் அமைக்கப்பட்டுள்ளன. நாங்கள் சென்ற பாதை மிகவும் குறுகலானது. அது 5 அடி அகலமும் 7 அடி உயரமுமிருக்கும்; கீழே $1\frac{1}{2}$ அடி இடை வெளியிட்டுத் தண்டவாளங்கள் போடப்பட்டிருந்தன. இந்தத் தண்டவாளங்களின் வழியாய்த் தங்கத் தூள் காணப்படும் சல்லிகள் நிறைந்த டிராலிகள் இழுத்துக் செல்லப்படுகின்றன. சாமான்களும், தங்கம் காணப்படும் சல்லிகளும் சாய்ந்த சுரங்க வழியின் மூலமாகவே எடுத்துச் செல்லப் படுகின்றன.

மேலேகூறிய குறுகலான பாதை வழியாக வெகு ஜாக்கிரதையாய்ச் சென்றோம். பக்கத்திலுள்ள பாறைகள் கரடுமுரடானவை. மேலே சில விடங்களில் பாறைகள் தொங்கிக்கொண்டும் வேறு சில விடங்களில் நீட்டிக் கொண்டுமிருந்தன. இவ்விதமான சுரங்கத்தின் வழியாகப் போகும் போதுதான் தங்கத்தூள் கலந்த பாறையைப் பக்கங்களில் கவனித்தோம். சாதாரணமாய்ப் பழுப்பு (grey) வர்ணமுள்ள பாறையினிடையே வெண்மையான நரம்புகள் ஓடுவதைக் கண்டோம். இந்தக் கோடுகள் சந்தனக் கல்லில் காணும் வெள்ளை நரம்புகளை ஒத்திருக்கின்றன. இவ்விதம் நரம்பு ஓடும் பாகத்தில் தான் மிகச் சிறிய தங்கத்தூள் மினுக்குமினுக்கென்று தென்படுகிறது. சற்றுத் தூரத்தில் ஓர் துவாரத்தையும் அதன் கீழே வழி ஒன்று செல்வதையும் கண்டோம். அங்கே சுமார் 30 அடி உயரமுள்ள இரண்டு ஏணிகள் ஒன்றன்கீழ் ஒன்றாய் வைக்கப்பட்டிருந்தன. இரண்டாவது ஏணியில் பாதிதூரம் இறங்கிக் கீழே பார்த்

தோம். அங்கே ஓர் குகைபோன்ற குறுகிய இடத்தில் மூன்று மனிதர்கள் கௌபீன தாரிகளாய் வேலை செய்வதைக் கண்டோம். அவர்கள் இருந்த விடத்துக்கும் எங்களுக்கும் சுமார் 10 அடி தூரம் இருக்கும். அவர்கள் கையிலுள்ள சிறிய மெழுகுவர்த்தியின் உதவியைக் கொண்டே வேலைசெய்ய வேண்டும். அவர்கள் தேகம் சாம்பல் பூத்துக் கண்பஞ்சடைந்து காணப்பட்டது. பூமியின்மேல் என்ன நடக்கிற தென்பதைக் கவனிக்காமல், தரை மட்டத்திலிருந்து 4260 அடிக்குக் கீழ்த் தங்கள் கடமையை அதிகப் பொறுப்புடனும் உண்மையுடனும் செய்து வரும் அவர்களுடைய குணம் எங்களுக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணியது.

அவர்கள் தங்கள் கையிலுள்ள பல முகங்களோடு கூடிய தமர்களால் தங்கத்தூள் காணப்படும் பாறைகளில் துவாரம் செய்து அதில் வெடி மருந்து வைத்துத் தூரத்திலிருந்து கொண்டு மருந்துக்குத் தீவைப்பார்களாம். உடனே பாறைகள் ஆங்காங்கு வெடித்துவிடும். வெடிப்புக்குப் பக்கத்திலுள்ள பாகத்தைத் தட்டிவிட்டுக் கூடைகளில் வாரி டிராலிகளில் போட்டு மேலே கொண்டு போவார்கள். தங்கத்தூள் தென்படாத சல்லிகளை எறிந்து விடுவார்கள்.

ஆகவே சுரங்கத்துக்குள் நடக்கும் வேலை தங்கத்தூள் காணப்படும் கற்களைச் சேகரிப்பதே. மற்ற வேலைகள் யாவும் சுரங்கத்துக்கு வெளியிலே நடைபெறுகின்றன. சுரங்கத்துக்குள் இரவு பகல் என்ற வித்தியாசமே கிடையாது. இரவு பகல் 24 மணி நேரமும் வேலை நடக்கிறது. சுரங்கத்தில் இறங்கினவர்கள் 8 மணி நேரம் வேலை செய்யவேண்டும். அவர்கள் வெளியேறியவுடன் வேறு கூலியாட்கள் சுரங்கத்தில் இறங்கி வேலை செய்வார்கள். இவ்விதம் வேலை செய்பவர்களில் அநேகமாய் யாவரும் தமிழர்களே. இவர்கள் ஜாக்கிரதையாய் வேலை செய்யும் பொருட்டு ஆங்காங்குத் தமிழ்ப் பாஷையிலேயே 'அபாய அறிவிப்புகள்' எழுதித் தொங்கவிடப் பட்டுள்ளன. சுரங்கத்தில் வேலை செய்யும் ஆட்கள் தினமொன்றுக்கு 8 அணு முதல் $1\frac{1}{4}$ ரூபாய் வரையில் சம்பாதிக்கிறார்கள். சுரங்கத்துக்குள் சுமார் $7\frac{1}{2}$ மணிக்கு நுழைந்த நாங்கள் வெளிவர 10 மணி ஆயிற்று. அதாவது சுரங்கத்தை உள்ளே சுற்றிப்பார்க்க 2 அல்லது $2\frac{1}{2}$ மணி நேரம் பிடித்தது.

## 2. தங்கத்தைப் பிரித்தெடுத்துச் சுத்தம் செய்யும் விதம்

தங்கத்தூள் நிறைந்த சல்லிகளை உடைத்துப் பொடி செய்து, தங்கத்தை மட்டும் வேறாகப் பிரித்துச் சுத்தம் செய்யும் காரியமெல்

லாம் சுரங்கத்துக்கு வெளியிலேயே நடத்தப்படுகின்றன. தங்கத்தைப் பிரித்தெடுக்கக் கீழ்க்கண்ட மூன்று முறைகளைக் கையாளுகிறார்கள்:—

(1) பாதரசத்தில் தங்கத்தூளைக் கரைத்து வேறுபடுத்தல்.

(2) கம்பளியை உபயோகித்துத் தங்கத்தூளைப் பிரித்தல்.

(3) பொட்டாஷியம் சயனைடை உபயோகித்துத் தங்கத்தைப் பிரித்தெடுத்தல்.

### (1) பாதரசத்தில் தங்கத்தூளைக் கரைத்து வேறுபடுத்தல்

தங்கத்தூள் கலந்த கருங்கல் சல்லிகளை உடைத்துப் பொடி செய்யும் அறை சுமார் 100 அடி நீளமும் 40 அடி அகலமுமுள்ளது. இந்த அறை வெகு கவலையுடன் பாதுகாக்கப்படுகிறது. இதற்குள் பக்கத்துக்கு 5 வீதம் 10 பெரியதகடுகள் சாய்வாகப் பொருத்தப் பட்டுள்ளன. ஒவ்வொரு தகட்டின் நீளம் 8 அடியும், அகலம் 5 அடியும் இருக்கலாம். தகடுகளின் மேல் பக்கத்தில் பாதரசம் கனமாசத் தடவப் பட்டிருக்கிறது. தகடு நீளப் போக்கில் மேல் பக்கம் உயர்ந்தும் அடிப்பக்கம் சுமார் 6 அங்குலம் தாழ்ந்தும் அமைந்திருக்கிறது. இத் தகடுகளின் தலைப்பாகத்தில் தங்கத்தூள் காணப்படும் கருங்கல் சல்லிகள் மெதுவாக விழுந்து கொண்டிருக்கின்றன. அக் கற்களை இரும்புலக்கைகள் மின்சார சக்தியால் நகர்ந்து குத்துகின்றன. இவ்விதம் ஏற்பட்ட தங்கத்தூளோடு கூடிய கருங்கற் பொடியை அடித்துக் கொண்டுபோகத் தகட்டின் மேல் பாகத்திலிருந்து தண்ணீர் கீழே ஓடிக்கொண்டிருக்கிறது. இவ்விதம் அடித்துக் கொண்டு வரும்போது தங்கம் கனமானதால் தங்கத்தூள் ஆங்காங்கே தங்கிவிடப் பாறுங்கல் தூள்மட்டும் தண்ணீருடன் தகட்டின் அடிப்பாகத்திலுள்ள வாய்க்காலில் வந்து விழுகிறது.

தங்கத்தூள் பாதரசத்தில் கரைந்து போகும் தன்மை உடையது. சாதாரணமாக நமது நாட்டில் தட்டார்கள் பொடியான தங்கத்தைப் பாதரசத்துடன் தேய்த்துச் சேகரித்து அதை மறுபடியும் குகையில் போட்டுக் காய்ச்ச, பாதரசம் ஆவியாய்ப் போன பிறகு தங்கம் மட்டும் பொத்தான் போல் தங்கிவிடுவதை அநேகர் பார்த்திருக்கலாம். இங்கு நடக்கும் வேலையும் இதை ஒத்திருக்கிறது. ஆங்காங்குத் தங்கிய தங்கத்தூள் பாதரசத்தில் கரைந்து போகிறது. மேலும் பக்கத்திலுள்ள வேலையாட்கள் அடிக்கடி ஓர் துணியால் பாதரசத்தைத் தேய்த்துக் கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் தேய்ப்பதினால் வெண்ணெய்போன்ற ஓர் வெண்மையான பொருள் ஏற்படுகிறது. இது பாதரசமும் தங்கமும் கலந்த ஒரு

கலவை (amalgam) வஸ்து. இதைச் சேகரித்த 15 நாளைக்குப் பின் தங்கம் மட்டும் கீழே தங்கிவிடுகிறது. அதை மறுபடியும் காய்ச்சி மின்சார சக்தியால் (Electrolysis) சுத்தம் செய்கிறார்கள். மேலே ஆவியாகப் போன பாதரசத்தையும் விடாமல் குளிரவைத்து மறுபடியும் உபயோகிக்கிறார்கள். இவ்விதம் 100-க்கு 60 பங்கு தங்கம் பிரித்தெடுக்கப்படுகிறது.

### (2) கம்பளியை உபயோகிக்கும் முறை

பால்போல் தோன்றும் பாறைத்தூள் கலந்த தண்ணீரில் இன்னும் 100-க்கு 40 பங்கு தங்கம் இருக்கிறது. இதையும் பிரித்தெடுக்க வேறு முறையைக் கையாளுகிறார்கள். பாதரசம் தடவப் பட்டுச் சாய்ந்து அமைந்திருக்கும் தகடுகளின் அடியில் வந்து சேரும் கலவைத் தண்ணீரை மறுபடியும் அம்மாதிரியே சாய்ந்து அமைந்துள்ள பலகைகளின்மேல் பொருத்தப்பட்ட முரட்டுக் கம்பளியில் ஓடும்படி செய்கிறார்கள். இவ்விதம் ஓடும்போது தங்கத்தூள் பாறைத்தூளைவிடக் கனமானதால், அவைகள் மட்டும் கம்பளியின் இடுக்குகளில் சிக்கிக் கொள்ளுகின்றன. இவ்விதம் மொத்தத் தங்கத்தில் 100-க்கு 20 பாகம் பிரிக்கப்படுகிறது. தங்கம் பொட்டாஷியம் சயனைடு (Potassium Cyanide) என்னும் திராவகத்தில் கரையக் கூடியது. ஆகவே பெரிய தொட்டிகளில் இந்தத் திராவகத்தை ஊற்றி மேற்கூறிய கம்பளியைக் கொண்டுபோய் நனைப்பார்கள். கம்பளியின் இடுக்குகளில் தங்கிக் கொண்டிருந்த தங்கத்தூள் முழுவதும் திராவகத்தில் கரைந்துவிடும். பின்பு திராவகத்திலிருந்து தங்கத்தை வேறுபடுத்துகிறார்கள்.

### 3. பொட்டாஷியம் சயனைடில் கரைத்துப் பிரித்தல்

மேற்கூறிய இரண்டு முறைகளிலும் பிரிக்கப்படாமல் வெகு சன்னமான மணலுடன் கலந்திருக்கும் தங்கம் 100-க்கு 20 பங்காகும். இதைப் பிரித்தெடுப்பது மிகவும் கடினம். ஆகவே கரைத்தெடுப்பதே சுலபமானது. ஆயினும் இதுவரையில் பாறைத்தூள் பலவித இயந்திரங்களினால் பொடி செய்யப்பட்டிருப்பதால் அதில் இந்தக் கலவைப் பொருளைப் பொட்டாஷியம் சயனைடில் கரைப்பதற்கு முன் அதிலுள்ள இரும்புத்தூளை நீக்க வேண்டிய தவசியம். ஆகவே காந்தத் தகடு பதித்த வாய்க்காலின் வழியே மேற்கூறிய கலவை ஜலத்தை ஓடும்படி செய்கிறார்கள். காந்தத் தகட்டில் இரும்புத்தூள் மட்டும் ஒட்டிக் கொள்ளுகிறது. பாறைத் தூளும் தங்கத்தூளும் நீருடன் கலந்து ஓடுகின்றன. இதிலுள்ள தங்கத்தைப் பிரிக்கும் விதத்தைக் கவனிப்போம்; சுமார் 30 அடி

குறுக்களவும் 10 அடி உயரமுமுள்ள பெரிய வட்டமான தொட்டிகளில் பொட்டாஷியம் சயனேடு என்னும் உப்பு கரைக்கப்பட்டிருக்கிறது. சில தொட்டிகள் 15 அல்லது 20 அடி உயரமுள்ளன. இவ்விதம் சுமார் 10 தொட்டிகள் காணப்பட்டன. ஒவ்வொரு தொட்டியின் மேல் குறுக்கே பாலம் போடப்பட்டிருக்கிறது. பெரிய காற்றாடிகளைப் போல் அமைந்த துடுப்புகளால் திராவகம் மெதுவாகக் கலக்கப்படுகிறது. இவ்விதத் தொட்டிகளில் மணலும் தங்கத்தூளும் கலந்த ஜலத்தைக் கொண்டு வந்து சேர்த்துக் கலக்குகிறார்கள். தங்கம் மட்டும் முழுவதும் திராவகத்தில் கரைந்து விடுகிறது. இனி மணலை வேறுபடுத்த வேண்டுவது அவசியம். ஆகவே மணல் கலந்த திராவகத்தைக் கெட்டியான பெரிய துணிப் பைகளின் வழியாய் வடிக்கட்டி மணலையெடுத்து வெளியே கொட்டி விடுகிறார்கள். இவ்விதம் பல வருஷங்களாகக் கொட்டிய மணல் இப்பொழுது வெண்மையான ஓர் பெரிய குன்றுபோல் காணப்படுகிறது. திராவகத்தில் கலந்த தங்கத்தை மின்சார சக்தியைக் கொண்டு (Electrolysis) வேறுபடுத்துகிறார்கள்.

ஒரு டன் அதாவது ஒரு வண்டித் தங்கத்தூள் காணப்படும் சல்லிகளிலிருந்து ஓர் அவுன்ஸ் தங்கமே கிடைக்கிறது. இது சுமார் 4 பவுன் அதாவது 60 ரூபாய் விலையுள்ளது. இது வரையில் கோலாரில் அகப்பட்ட தங்கத்தில் 1905-ம் வருஷத்தில்தான் அதிகமாக வெட்டி யெடுக்கப்பட்டிருக்கிறது. அவ்வருஷத்தில் 6,16,758 அவுன்ஸ் தங்கம் கிடைத்ததாம். இந்த வேலை முழுவதும் ஓர் ஐரோப்பியக் கம்பெனியாரால் நடத்தப்பட்டு வருகிறது. மைசூர் அரசாங்கத்தின் அனுமதியின் பேரில் இவர்கள் இவ்வேலை செய்து வருகிறார்கள். இவர் அந்த அரசாங்கத்துடன் செய்து கொண்ட ஒப்பந்தம் 1940-ம் வருஷம் முடிவாகிறதாகத் தெரிகிறது. தங்க வயல் ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு பூமியின் மேல்பரப்பில் எல்லை கட்டப்பட்டுள்ளதாம். ஒவ்வொரு கம்பெனியும் தங்கள் தங்கள் எல்லைக்குள்தான் தங்கம் வெட்டி யெடுக்கவேண்டும். இங்கு நடக்கும் வேலைக்கு வேண்டிய மின்சார விசை முழுவதும் சிவசமுத்திரம் நீர் வீழ்ச்சியிலிருந்து கொண்டு வரப்படுகிறது. இவர்களுக்கு அதிகமான சக்தி வேண்டி யிருப்பதால் யூனிட்டுக்கு 3 பை வீதம் விலை கொடுத்து வாங்குகிறார்கள். இவ்விதம் மைசூர் அரசாங்கத்துக்குக் கொடுக்கும் தொகை மட்டும் 80 லக்ஷம் ரூபாயாகிறதென்று தெரிகிறது. இதைத் தவிர அந்த அரசாங்கத்துக்குக் கப்பமாக 20 லக்ஷம் ரூபாய் வேறு கொடுக்கிறார்கள். இந்தச் சுரங்கங்கள் சம்பந்தமாக சுமார் 86000 ஜனங்கள் வேலை செய்கிறார்கள்.

# அறுப்பறுக்கும் யந்திரம்

ஸ்ரீ.

ஐரோப்பாவும் அமெரிக்காவும் செல்வத்தில் கீழ்த்தேசங்களை விட ஆயிரமடங்கு மேன்மையுற்று விளங்குவதன் காரணம் முக்கியமாக நாட்டின் வளமும், நாட்டார்படும் சரீரப் பாடும் அல்ல; மேல் நாட்டார் சாஸ்திரப் பயிற்சியில் தேர்ந்து வினை பொருள்களின் பலனைச் சிறிதேனும் வீணாக்காது முழுவதும் பெற்று யந்திரங்களைக்கொண்டு கைத்தொழில்களைப் பெருக்கி, வியாபாரத்தில் முன்னேற்ற மடைந்திருப்பதுதான் அந்நாடுகளின் செல்வவிருத்திக்கு முக்கிய காரணங்கள்.

ஏறக்குறைய அறுபது வருஷங்களுக்குமுன், ஒருவர் புதிதாக உண்டாக்கின அறுப்பறுக்கும் யந்திரம் ஒன்று முதல் முதல் பிரசித்தி பெற்றது; குடியானவர்கள் அதை உபயோகிக்கத் தொடங்கினார்கள்; நாட்டின் வியவசாயம் அதனாலடையக்கூடிய முன்னேற்றத்தை உத்தேசித்து, பார்லிமெண்ட் சபையார் அதை அமைத்தவருக்குத் தக்க ஸம்மானம் செய்தார்கள். அந்த யந்திரம் இங்கிலாந்திலும் பிறநாடுகளிலும் வழங்கலாயிற்று; ஆனால் கொஞ்ச நாளில் வியவசாயிகள் அதைவிட்டு மறுபடியும் கூலியாளையும் அரிவாளையும் தேட ஆரம்பித்தார்கள். பார்லிமெண்டாரின் ஸம்மானச் சிறப்புப் பெற்ற அந்த யந்திரம் தினசரிப் பழக்கத்துக்குச் சரிவரவில்லை. அதன் அமைப்பு அதியுக்தியான பொருத்தங்கள் வாய்ந்தது; அது அடிக்கடி சீர்கெட்டுவிடும்; அதை நோக்குவது கிராமாந்தரத் தொழிலாளிகளாலாகும் காரியமல்ல; அதன் கதி இப்படியாயிற்று.

பல வருஷங்களுக்குப்பின் மற்றொரு நாட்டில் ஏற்பட்ட அறுப்பறுக்கும் யந்திரம் ஒன்று முன்னுக்கு வந்தது. அது கதிரைமட்டும் அறுத்துத் தாளை நிற்கவிடும்; அதனால் ஆங்கிலேயக் குடியானவர்களுக்குப் பயன் ஏற்படாமற்போகவே அவர்கள் அதையும் தள்ளிவிட்டனர்.

அமெரிக்க வியவசாயி ஒருவருடைய குமாரரான மெகார்மிக் என்பவர்தான் கடைசியில், உபயோகத்துக் கேற்ற அறுப்பு யந்திரம் ஒன்றை அமைத்துச் சித்திபெற்றார். "நூற்கும் யந்திரம், நெசவு யந்திரங்களுக்குச் சமமாக, பயிர்த்தொழிலின் பெரும்பாட்டைக் குறைக்கும் கருவி இது" என்று அது புகழ் பெற்றது. தளராத பொறுமையும் விடாமுயற்சியும் கொண்டுதான் மெகார்மிக் அந்த

யந்திரத்தைப் பூர்த்திசெய்ய முடிந்தது. புதிய கருவிகளை நியமிப்பவர்கள் எல்லாருக்கும் முதலிற் பலவித இடையூறுகள் ஏற்படுவது சகஜம்; அவைமட்டுமின்றி, இந்தக் கருவி பயிர்த்தொழிலைச் சார்ந்ததாயிருந்ததால், அதிக காலதாமதமும் ஏற்பட்டது. அறுப்புக்காலத்தில், அதாவது வருஷத்தில் இரண்டு மூன்று வாரங்களுக்கு மட்டுந்தான், அந்த யந்திரத்தின் வேலையைச் சோதித்தறிய முடியும்; அப்பொழுது அதில் ஏதோ ஊனம் இருப்பதாகத்தெரிந்தால், அதைப் பழுது பார்த்து முடியுமுன் அறுப்புக்காலமாய்விடும்; யந்திரம் திருத்தமாய் வேலை செய்கிறதா என்று பரீக்ஷிக்க ஒரு வருஷம் காத்திருந்து, அப்பொழுது மற்றொரு பழுது வெளிப்பட்டால், அதைத்திருத்தி அடுத்த வருஷத்தை எதிர்பார்த்திருக்க நேரிடும். இந்தச் சோதனைகளின் சரித்திரத்தைச் சொல்லும்பொழுது மெகார்மிக் சொல்லுகிறார்:

"என் தகப்பனார் ஐக்கியமாகாணங்களில், வர்ஜினியா மாகாணத்தில் ராக்பிரிட்ஜ் என்ற ஊரில் ஒரு குடியானவர். 1816-ஆம் வருஷத்து அறுப்பில், குத்திட்டு நிற்கும் பல குழாய்களைக் கொண்டு கதிரறுக்கமுடியுமா என்று அவர் ஒரு பரீக்ஷை பார்த்தார். 1831-ஆம் வருஷத்தில், திரும்பவும் அதேமாதிரி மற்றொரு பரீக்ஷை செய்து பார்த்து அது உதவாதென்று விட்டுவிட்டார். அப்பொழுதுதான் என் கவனம் இவ்விஷயத்தின்மீது சென்றது. அந்த அறுப்பு நாளிலேயே நான் ஒரு கருவி செய்து முடித்து எங்கள் நண்பர் ஒருவர் பின்பு 'ஓட்ஸ்' கதிர் அறுக்கும் சமயத்தில் அதை உபயோகப்படுத்திப் பார்த்தேன். அதில் இப்பொழுது என்னுடைய 'அறுப்பான்' உள்ள தானிய மேடை இருந்தது; தானியத்தைச் சேர்த்து உள்ளேதள்ள ஒரு சுற்றும் கருவி இருந்தது; அது இதற்கு முன்பே சிலரால் உபயோகப்படுத்தப் பட்டதாம்; ஆனால் நான் அதைச் சில புது ஏற்பாடுகளுடன் இணைத்துப் பிரயோகப்படுத்தினேன்.

"அந்த யந்திரம் அமைத்ததுதான் இப்பொழுதுள்ள 'அறுப்பானு'க்கு அடிப்படையாயிருப்பது என்று சொல்லவேண்டும். ஆனால் இடையில் கணக்கற்ற சங்கடங்கள் ஏற்பட்டன. யந்திரத்தின் வேலையைச் சோதித்துப் பார்ப்பது அறுப்புக்காலத்தில் வருஷத்தில் சிலவாரங்களில் மட்டுமே சாத்தியமாயிருந்தது. இப்படியாக, 1834-ஆம் வருஷந்தான் எனக்கு அந்த அறுப்பானுக்குத் துரைத்தனத்தாரிடமிருந்து அனுபவத் தனியுரிமை (patent) கிடைத்தது. இதற்குள் என் தகப்பனாரும் குடும்பத்தாரும் இந்த வீண்வேலையை விட்டுவிட்டு, என்சொந்த நிலத்தைக் கண்காணித்

தால் ஏதேதோ லாபம் வருமே யென்று எனக்கு அடிக்கடி உபதேசம் செய்தார்கள். 1840-ஆம் வருஷம்வரை யந்திரங்கள் ஒன்றும் விலையாகவில்லை; ஐந்து வருஷங்களுக்கப்புறம் சில சீர்த்திருத்தங்கள் செய்து நான் இரண்டாவது அனுபவத் தனியுரிமை பெறும் வரை அந்த யந்திரங்களால் ஒருவருக்கும் அதிக உபயோகமுமில்லை. பயிரைச் சோதித்துப்பிடிக்கும் பிடிவிரல்கள், அறுக்கும்வாள், அரிவாள் தட்டாமலிருப்பதற்கு ஓர் இரும்புக்கூடு, இவைபோலும் சிலவற்றைத் திருத்தி யமைத்தபின் யந்திரம் பூர்த்தியடைந்தது. அதுவரை என் முயற்சிகளால் பணத்துக்கும் பொழுதுக்கும் கேடுண்டாயிற்றே யொழிய வேறொன்றுமில்லை. அதுமுதல் யந்திரம் வரவர அதிகச் செலவாகி இப்பொழுது வருஷத்துக்கு ஆயிரம் யந்திரங்களுக்குமேல் விலையாகின்றன.''

இங்கிலாந்தில் 1851-ஆம் வருஷத்தில்தான் முதன்முதல் இந்த யந்திரத்தின் வேலை ஜனங்களுக்குக் காட்டப்பட்டது. அதுவரை யாரும் கேட்டறியாத ஓர் அமெரிக்கக்கருவி கோதுமைப் பயிரை அறுப்பதுமன்றி அவ்வேலையை வெகுதிருத்தமாகவும் செவ்வையாகவும் செய்து முடிப்பதைப்பார்த்து ஆங்கிலேயக் குடியானவர்கள் ஆச்சரியப்பட்டார்கள். "இந்த யந்திரம் வேலைசெய்வதைப் பார்ப்பது ரயில் ஓடுவதை முதல்தடவை பார்த்த அவ்வளவு புதுமையாயிருக்கிறது!'' என்று துரைத்தன ரிபோர்ட் ஒன்றில் அதிசயித்து எழுதியிருந்தது. அமெரிக்காவிலிருந்து வந்த இந்த யந்திரத்தை இங்கிலாந்தில் பரீக்ஷித்துப் பார்த்துக் கொண்டிருந்த பொழுது ஒரு விநோத சங்கதி வெளிப்பட்டது: அந்தச் சமயத்தில் பெல் என்ற ஸ்காட்டிஷ் கனவான் ஒருவர் தாம் அமைத்த 'அறப்பான்' யந்திரம் அமெரிக்க யந்திரத்துக்குத் தாழ்வில்லையென்றும், சில விதங்களில் அதைவிட மேம்பட்டதே யென்றும், அது கண்டு பிடிக்கப்பட்டது பல வருஷங்களுக்கு முன்பே யென்றும் ருசுவாயிற்று. ஆரம்பத்தில் அறுப்புயந்திரங்களில் தவறுகள் ஏற்பட்டதைக் கொண்டு, ஆங்கிலேய வியவசாயிகள் அவ்விஷயத்தில் உபேக்ஷையாயிருந்துவிட்டதால் பெல் பலவருஷங்களாகத் தம் யந்திரத்தைச் சோதித்து வெளிக்கொண்டு வரவில்லையாம்; இருப்பதையே மறந்திருக்கும் சமயத்தில் அமெரிக்க அறுப்பானைப்பற்றிய பிரஸ்தாபம் பிறக்கவே அவர் தம் யந்திரத்தை வேண்டாத சாமானறையிலிருந்து வெளியிலெடுத்தாராம்; ஆகவே, வியவசாயிகளின் மனத்தளர்ச்சியும் உபேக்ஷையும் காரணமாக நாட்டுக்குப் பல வருஷங்களாகக் கிடைத்திருக்கக்கூடிய கனத்த லாபம் வீணாய்ப் போயிற்று!

# டாக்கி

டாக்டர் எச். பரமேசுவரன்—பி. என். அப்புஸ்வாமி

(445-ம் பக்கத் தொடர்ச்சி)

ஒலியைப் படம் பிடிப்பது எப்படி என்று சொல்லுகிறேன், கேளுங்கள். நீங்கள் பேசுகிறீர்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். உங்கள் பேச்சுக் குரலை மைக்ரபோன் என்னும் ஒரு விந்தையான கருவியானது பெறுகிறது. அக்கருவியின் வழியாக மிக நுண்ணிய மின்சாரக் கர்ரெண்ட் ஒன்று ஓடிக்கொண்டிருக்கிறது. ஒலியால் உண்டாகும் அசைவுகள் மைக்ரபோனில் உள்ள கார்பனைச் சற்று அதிகமாகவோ குறைவாகவோ தாக்கி நசுக்கி வருகிறது. அதனால், அதற்கேற்றபடி அதன் உள்வழியாக ஓடும் மின்சார ஓட்டமானது மிகுந்தோ குறைந்தோ போகிறது. இம் முறையால் ஒலியின் மாறுபாடானது அதற்குத் தகுந்த மின்சார மாறுபாடாக மாறுகிறது. இப்பொழுது ஒலியை மின்சாரமாக மாற்றியாய்விட்டது. பிறகு இந்த மின்சார ஓட்டத்தை மற்றொரு டெலிபோன் வழியாக ஓடச்செய்தால் அது மீண்டும் ஒலியாக மாறிக் கேட்கும். ஆனால் உடனே இவ்வாறு செய்வதில்லை. இந்த வகையால் மாறுபடும் இலேசான மின்சார ஓட்டத்தை முதன்முதலில் பெரிதாக்குகிறார்கள். சின்னஞ் சிறிய மின்சார மாறுபாட்டையும் பென்னம் பெரிய மின்சார மாறுபாடாக மாற்றி அமைத்துக் கொள்ளலாம். இப்படி அளவில் மாறுபட்ட மின்சார ஓட்டமானது பெரிய லௌட் ஸ்பீகர் என்னும் பேசும் கருவியுள்ள பெரிய டெலிபோனைப் பேசச் செய்யும் வன்மை பொருந்தியதாகி விடுகிறது. அறையின் அளவுக்கும் விஸ்தாரத்துக்கும் ஏற்றபடியாகக் குரலை வேண்டியபடியெல்லாம் பெருக்கிக் கொள்வது எளிதாகி விடுகிறது. இதுதான் ஒலியைப் பெரிதாக்கும் முறை.



மைக்ரபோன் அமைப்பு.

மேற்கூறியவாறு மின்சார ஓட்டத்தை டெலிபோன் வழியாவது லௌட்ஸ்பீகர் வழியாகவாவது போகவிடாது, அதை ஒரு எலெக்ட்ரிக் பல்பின் வழியாகப் போகச்செய்தால் அது பல்பை ஜ்வலிக்கச் செய்யும். தெர்மையானிக் வால்வ் என்பதன் அத்தியாச் சரியமான குணத்தினால் இவ்வாறு செய்ய முடிகிறது. இதுவும் ஆனபிறகு, நாம் இன்னொரு கருவியைத்தேடி உபயோகிக்க வேண்டியிருக்கிறது. அதுதான் நியான் விளக்கு என்பது. சாதாரணமாக உள்ள மின்சார விளக்கு நமக்கு இத்தொழிலுக்குச் சிறிதும் பயன் படாது. ஆகையால் நாம் நியான் விளக்கைத்தான் உபயோகித்தாக வேண்டியிருக்கிறது. சாதாரண மின்சார விளக்கானது கரெண்டு நின்றுபோகும் க்ஷணத்திலேயே அவிந்து போவதில்லை. விளக்கினுள்ளே ஜொலித்துக் கொண்டிருக்கும் கம்பியானது மின்சார ஓட்டம் அற்றுப்போனவுடன் சிறிதுசிறிதாக வெண்மை நிறத்தை இழந்து செந்நிறத்தை அடைந்து பிறகுதான் ஒளியற்றுப் போகிறது. நாம் பேசும்போது நமது பேச்சானது அப்படியே துல்லியமாய்ப் பிரதிபலிக்க வேண்டும். ஆதலால் அதற்குச் சரி இணையாயுள்ளது எதுவோ அதுதான் பயன்படுமே தவிர வேறொன்றும் பயனுள்ளதாய் இருக்காது. நியான் விளக்கை உபயோகித்தால் தான் இவ்வாறான ஒற்றுமை ஏற்படும்; ஒலிக்கு ஏற்றபடி ஒளியிருக்கும்.

ஒரு பல்பின் உள்ளிருக்கும் காற்றையெல்லாம் அகற்றி அதற்குப் பதிலாகச் சிறிதளவு நீயான் எனப்படும் ஒருவகைக் காற்றுப் பொருளை அதனுள் விடுகின்றனர். அப்படிப்பட்ட பல்புதான் நியான் விளக்கு. அளவின் குறைவாலும் இயல்பாகவும் மெல்லியதாக உள்ள நீயான் காற்றின் வழியாக மின்சார ஓட்டமானது ஊடுருவி ஓடினால் விளக்குப் பிரகாசமாக ஜ்வலிக்கும். ஓட்டத்தை நிறுத்திய அந்நொடியிலேயே விளக்கும் ஒளியற்றுப் போகும். ஆதலால் இவ்வகையான கருவியை உபயோகித்தால், ஒலியின் மாறுபாட்டுக்கும் ஏற்றத்தாழ்வுக்கும் ஏற்றபடி விளக்கொளியின் மாறுபாடும் ஏற்றத்தாழ்வும் உண்டாகும். இரண்டும் ஒன்றையொன்று முற்றிலும் ஒத்திருக்கும். ஆகவே நமது பேச்சுக்கேற்றபடி விளக்கானது கண்சிமிட்டிவரும். பாஷையானது நமது எண்ணங்களை வெளியிடுகிறது என்பது உண்மைதான். ஆயினும் ஒரே ஓர் எண்ணத்தைப் பல்வேறு பாஷைகளின் மூலமாக வெளியிடலாமல்லவா? உதாரணமாக ஒன்று சொல்லுகிறேன்: சமீபகாலத்துக்குள்ளே ஆப்டோபோன் என்று பெயரிடப்பட்ட ஒரு நூதனக் கருவியை நிருமித்திருக்கின்றனர். அதன் துணையால் குருடன்

படிக்க முடியும். எப்படித் தெரியுமா? ஒரு டெலிபோனை உபயோகிப்பதால் அவன் ஒரு பாஷையை அறிந்துகொண்டிருக்கிறான். இரண்டு வருஷம் உபயோகிப்பதால் அவன் காலத்திலே அவன் ஆப்டோபோன் பாஷையை நன்கு படிக்க வல்லவனாகி விடுகிறான்.

அதுபோலவே, இந்த விஷயத்தில் என்ன நடக்கிறதென்றால் மின்சார சக்தியானது நம்முடைய குரலை ஒலிவ்டிவமாக மாற்றி விடுகிறது. நாம் ஒலியைப் படம் பிடிக்க வேண்டும் என்று எண்ணினோமல்லவா? ஒளியைத்தான் படம்பிடிக்க முடியுமேயன்றி ஒலியை நேராகப் படம் பிடிப்பது இயலாது. ஆதலால் ஒலியைப் படம் பிடிப்பதற்கு, முதலாவது ஒலியை ஒளியாக மாற்றிக் கொள்ள வேண்டும். ஒலி மாறுபாடுகள் ஒளிமாறுபாடுகளாகத் தோற்ற வேண்டும். இவ்வாறு மாறித் தோன்றுகின்ற விளக்கின் எதிரே குறுகிய கோடுபோன்ற துவாரம் ஒன்றை விட்டு அதற்கு நேராகப் படம்பிடிக்கும் பில்மை வைக்கவேண்டும். அப்பொழுது ஒளியில் மாறுபாடுகள் ஒவ்வொன்றும் ஒழுங்காகச் சரியாக ஒளியின் மூலமாகப் படம் பிடிக்கும்.

இம்முறையைப் பின்பற்றுவதால் மனிதக் குரலையும் ஒளியாக மாற்றி அதையும் படம் பிடித்துவிட முடியும். நமக்கு ஒலி கேட்க வேண்டுமாயின் நாம் செய்ய வேண்டியதெல்லாம் இம் முறையைத் தலைகீழாகத் திருப்பி மீண்டும் நடத்துவதே.

ஒளி மாறுபாடுகளை மீண்டும் ஒலி மாறுபாடுகளாக எப்படி மாற்றுவது? இது ஸேலீனியம் என்று சொல்லப்படும் ஒரு பொருளின் உதவியைக் கொண்டு செய்யக்கூடும். ஸெலீனியமானது ஒளிக்கிரணங்களால் மிகவும் இலேசான அளவில் பாதிக்கப்படுகின்றது. ஸெலீனியக் கட்டி ஒன்றை வைத்து அதன்வழியாக மின்சார சக்தியைப் பாயச்செய்தால் ஓரளவுள்ள சக்தி அதன் வழிப் பாய்ந்தோடும். ஆனால் அதன்மேல் ஒளிக்கிரணம் படும்படி செய்தால், அப்பொழுது முன்னைவிட அதிகமான அளவில் அதன்வழி மின்சாரசக்தி ஓடத் தலைப்படும். இதற்குக் காரணம் என்னவென்றால், ஒளியானது அதன்மீது படும்போது அப்பொருளின்கணுள்ள தடுக்கும் சக்தி சற்றுக் குறைந்துபோகிறது. அதனால் அதன்வழி ஓட முயலும் மின்சார சக்தியை முன்போல அவ்வளவு வன்மையுடன் அது தடுக்கத் திறமையற்றுப் போகிறது. ஆதலால்தான் முன்னைவிட ஜாஸ்தியான அளவிலே கர்ரெண்டானது அதன்வழி ஓடுகிறது. இந்த விதியைக் கொண்டு அநேகம் ஏற்பாடுகளைச் செய்து கொள்ளலாம். பில்மில் ஒளி நிழல் என்னும் பேதங்களுக்கு ஏற்றபடி யெல்லாம் ஸெலீனியமானது மின்சார சக்தி கூடுதே

லாகவோ குறைவாகவோ தன் வழியாக ஊடுருவிச் செல்லுதற்கு வழிவிடும். இந்த மின்சார ஓட்டம் செல்கின்ற மார்க்கத்திலே டெலிபோன் ஒன்றை வைத்துப் பிணைத்துவிட்டால் அந்த டெலி போனானது பிரதிபலித்து நமக்குப் பேச்சைத்தரும். நமக்கு வேண் டும் அளவு ஒலியைப் பெருக்குவது கடினமல்ல. இவ்விதமான முறையை அநுசரித்தால் மேஜையின்மேல் ஓர் எறும்பை வைத்து அது நடக்கும்போது உண்டாகும் அடி ஓசையைக்கூட நமக்குக் கேட்கும்படியாகப் பெருக்கிவிடலாம். ஆதலால், நாம் என்ன செய்ய வேண்டுமென்று கோரினோமோ அதைச் செய்து முடித்து விட்டோம்.

ஒலி அசைவுகளை முதலில் மின்சார சக்தியாக மாற்றி னோம்; பிறகு அவற்றை ஒளி அசைவுகளாக மாற்றினோம்; பிறகு அதே முறையினால் அவற்றை மீண்டும் ஒலி அசைவுகளாக மாற்றிக் கொண்டோம். இனிச் செய்ய வேண்டியது ஒன்றுதான் பாக்கி: அதாவது இவ் வொளியைக் காட்சியோடு ஒத்து நடக்கச் செய்வது தான். இவ் விரண்டையும் ஒரே சமயத்தில் ஒரே படத்தில் பட மெடுப்பது சாத்தியமல்ல. ஆதலால் இதற்கு ஒரு வழி கண்டு பிடித்திருக்கிறார்கள். ஒரே சமயத்தில் ஒரே வேகத்தோடு காட்சிப் படம் ஒன்றும் ஒலிப்படம் ஒன்றும் வெவ்வேறாக வெவ்வேறு பில்ம்களில் எடுக்கிறார்கள். இரண்டையும் அவற்றிற்குத் தகுந்த முறையில் தயார் செய்கிறார்கள். பிறகு இரண்டு படங்களையும் சேர்த்து ஒன்றாக்குகிறார்கள். அவர்கள் உத்தேசமானது எவ்வளவு கைகூடியிருக்கிறது என்பதை நினைப்பின் நமக்கு மிக்க ஆச்சரியம் உண்டாகிறது.

இன்னொன்றையும் கவனிக்கவேண்டும்: புதிதாகக் கண்டுபிடித்து விட்டேனென்று, இதுவரை இல்லாத பெரிய அளவிலே—நாம் எழுதும் காகிதத்தைப் போலப் பெரிதான அளவிலே—ஒரு பில்மை உண்டாக்கினால் அது யாருக்கும் பயன்படாது. இதுவரை உப யோகித்து வந்துள்ள சினிமாக்கருவிகளும் யந்திரங்களும் ஒன்றுக் கும் உதவாது போய்விடுமல்லவா? ஆதலால் நாம் புதிதாய் எந்த வகையான பில்மை உண்டாக்கினாலும் பழைய அளவை மட்டிலும் விடாது கைப்பிடித்துவருவது முற்றிலும் அவசியம். அப்பொழுது தான் பழைய் கருவிகளை அப்படியோ அல்லது ஒரு சிறிதளவு மட்டிலும் மாற்றி அமைத்துக்கொண்டோ சினிமாவை நடத்த முடியும். முக்கால் அங்குல நீளமும் முக்கால் அங்குல அகலமு முள்ள ஒரு சதுரந்தான் பில்மில் உள்ள ஒவ்வொரு படத்தின் அள வும். இந்த முக்கால் அங்குலச் சதுரத்துக்குள்தான் காட்சிப்படம்

பிடிக்கப்படுகிறது. இதற்கு ஒரு புறத்தில் அரைக்கால் அங்குல அளவுள்ள விளிம்பு இருக்கிறது. ஒலி ரிகார்டு முழுவதும் இந்த அரைக்கால் அங்குல இடத்துக்குள்ளே திணிக்கப்படுகிறது. இந்த விளிம்போரத்திலே கண்ணுக்குத் தெரியுமோ தெரியாதோ என்றபடி மிக மெல்லியனவாய் மயிர்போலிருக்கும் கோடுகள் அநேகம் காணப் படுகின்றன. இவைதாம் ஒலியை உள்ளபடி பிரதிபலிக்கவல்ல கோடுகள். அவை யாவும் இச் சிறு இடத்திலே நெருக்கமாய் அமைந்திருக்கின்றன.

இவ்வளவு காரியங்களையும் செய்துகொண்ட பிறகு சினிமாக் கருவியை வழக்கம்போல் உபயோகிக்கலாம். அப்பொழுது காட்சித் தோற்றமும் ஒலித் தோற்றமும் ஒருங்கே நமக்குக் கிடைக்கும். இப்படிச் சொல்வது ஏதோ ஒரு கணக்கைப் போட்டுக் காட்டுவது போல் எளிதானதாகத்தான் தோன்றுகிறது. ஏட்டுச் சுரைக்காய் கறிக்காகாதது போல, இவ்வாறு சாஸ்திரம் பேசித் தீர்மானிப்பதற்கும் தொழிலைச் சரிவர இயற்றுவதற்கும் எவ்வளவோ பேதம் உண்டு. அவற்றுள் ஒன்றை எடுத்துக் கூறுகிறேன்: சினிமாவிலே நமது கண்ணின் முன்னுலே தோன்றும் பில்மானது ஜலம் ஓடுவது போல் ஒரே தொடர்ச்சியாக ஓடுவதில்லை. அது அப்படித் தொடர்ச்சியாக ஒரே ஓட்டமாக ஓடுமாயின் நமது கண்ணுக்குத் தெளிவாக ஒன்றும் தெரியாது. நாம் பார்ப்பதெல்லாம் பனியில் மறைந்தது போல் மங்கலாகத் தான் தெரியும் நாம் காணும் காட்சியானது நமது கண்ணிற்கு இயற்கைக் காட்சியாகத் தோற்ற வேண்டுமாயின் ஒவ்வொரு படமும் நமது கண்முன் வந்து ஒரு க்ஷணநேரம் அப்படியே நிற்கவேண்டும்; அதன் பிறகு அது விலகிப்போகவேண்டும். அதை அடுத்து அடுத்துப் படங்களும் அவ்வாறே நமது கண்முன் வந்து நின்று நின்று விலகவேண்டும். அப்பொழுதுதான் நமக்குச் சரியானபடி கண்காட்சி தரும். ஒவ்வொரு சினிமாவிலும் இவ்வாருகிய நிகழ்ச்சிகள் பிரதி நிமிஷத்திலும் பதினறு முறை நிகழ்கின்றன. காட்சிப்படமானது நொண்டி நொண்டி நடந்தால் ஒலியின் பாடு என்னவாகும்? ஒலிப்படமும் இவ்வாறே நின்று நின்று அசைந்து விலகினல் நமக்குக் கேட்கும் ஒலி மிகவும் வேடிக்கையாயிருக்கும். நமது முன்னின்று பேசுபவனுக்கு ஏதோ ஒரு விதமான திக்கலோ வலிப்போ நடுக்கமோ வந்து விட்டதென்று நமக்குத் தோன்றுமே யொழியக் குரல் சீராக இருக்காது. ஆதலால் ஒலியைக் காட்டும் படம் ஒரு மாதிரியும் காட்சியைக் காட்டும் படம் மற்றொரு மாதிரியும் நம் முன் இயங்க வேண்டும். ஒலியைக்காட்டும் படமானது ஒரே தொடர்ச்சியாகத்

தங்காமல் தயங்காமல் இயங்கவேண்டும்; காட்சிப்படமோவெனில் நின்று நின்று இயங்கவேண்டும்.

ஆதலால் ஒலியும் காட்சியும் ஒத்து நிகழும் பொருட்டும் டாக்கியானது மெய் நிகழ்ச்சிதான் என்ற பிரமையை நமக்குத் தரும் பொருட்டும் இவ் விரண்டுக்கும் உள்ள வேற்றுமைகளைத் கவனித்து அவற்றுக்குத் தகுந்தபடியான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டும்.

அவற்றைச் செய்துகொண்டபின்பும் வேறுசில தொந்தரவுகள் இருந்து வருகின்றன. நாம் இயற்றிக் கொண்ட கருவிகளும் நாம் உபயோகிக்கும் பொருள்களும் நாம் நினைத்தபடியெல்லாம் நடப்பதில்லை. துரிதமாக நிகழ்ச்சி நடைபெறும் பொழுது ஸெலீனியம் மிகவும் தொந்தரவு கொடுக்கிறது என்பது அறியப்பட்டது. சாதாரண மின்சார விளக்கு துரிதமாக அவிந்துபோவதில்லை, அது வேகமற்றது, என்று சொன்னோமல்லவா? அது போலவே துரித வேலைக்கு ஸெலீனியமும் உதவுவதில்லை. கூர்ந்து கவனித்துப் பார்த்தால் அதன் மூலமாக உண்டாகும் பிரதிபலனம் ஸம்பூர்ணமாய் இருப்பதில்லை, குறை வுள்ளதாகவே யிருக்கிறது என்பது தெரியவந்தது. அதனால் இன்னும் பற்பல ஆராய்ச்சிகளைச் செய்யத் தொடங்கினர். போடோ எலெக்ட்ரிசிடி என்று சொல்லப்படும் பௌதிக சாஸ்திர குணத்தைத் தமக்குத் துணையாகக் கொண்டார்கள்.

வாகுவம் என்று சொல்லப்படுகின்ற காற்றில்லா வெட்ட வெளியிலே சுத்தமான மேற்பரப்பையுடைய பொடாசியத் துண்டையாவது துத்த நாகத் துண்டையாவது வைத்து அதன் மீது ஒளிக்கிரணங்களைப் படும்படி செய்தால், அப்பொழுது ஒளியின் தீக்ஷண்ணியத்துக்குத் தகுந்தபடி அதிகமாகவோ குறைவாகவோ எலெக்ட்ரான்கள் அதினின்று வெளியே எறியப்படுகின்றன. ஒளியின் அளவுக்குத் தகுந்தபடி நடக்கின்ற நிகழ்ச்சியல்லவா இது? இம்மாதிரியான நிகழ்ச்சி எங்காவது ஏதாவது உண்டாவென்று தானே நாம் ஆராயப்புகுந்தது? ஆயினும் இதிலும் ஒரு குறை இருக்கிறது. இது மந்தமாகவும் பலவீனமாகவுந் தான் நடை பெறும். ஆனல் இதனுல் நமக்குத் தொந்தரவு அதிகம் இல்லை. பெருக்கும் கருவிகளைக் கொண்டு இதை எளிதில் பெருக்கிக் கொள்ளலாம். எலெக்ட்ரான்களின் இயக்கத்தினுல் நிகழும் நிகழ்ச்சிகள் யாவும் ஒழுங்காகவும் மூலத்தை முற்றிலும் ஒத்தனவாயும் இருக்கும் என்பதற்கு ஐயமில்லை. எலெக்ட்ரான் மிகவும் சின்னஞ்சிறிய பொருளாயிருப்பதால் அதற்கு அசைவின்மையாகிய ஜடத்துவம் கிடையாது. இந்த விசேஷகுணத்தையும் உபயோகித்துக்கொள்ளுகிறோம். ஆத

லால் ஸெலீனியம் செல்லுக்குப் பதிலாக சோடியம் அல்லது பொடாசியம் பூசிய சிறிய போடோ எலெக்ட்ரிக் செல்லை உபயோகிப்பதுதான் விசேஷம். முன்போலவே ஒலியால் அசைவுறும் ஒளியை இத்தகைய செல்லின் வழியாகப் போகச் செய்கிறார்கள். ஒளியின் மாறுபாட்டுக்கு இணங்க அதன் வழியே செல்லுகின்ற கர்ரெண்டின் அளவும் துல்லியமாக மாறுபடுகிறது. அதன் மீது படும் ஒளியின் அளவு இம்மியளவு மாறுபட்டாலும் அதே முறையாகிய அதே அளவில் அதன் வழி ஓடும் கர்ரெண்டின் அளவும் மாறுபடுகிறது. ஆதலால் இந்த ஏற்பாடு மிகவும் துல்லியமானது, மிகவும் நம்பத்தக்கது, முற்றிலும் உண்மையானது. டாக்கிக்கு அடி ஆதாரங்களான சாஸ்திரீய தத்துவங்களெல்லாம் இவைதாம். ஆனால் இத்தத்துவங்களை மட்டிலும் அறிந்து கொள்ளுதல் மட்டும் போதாது. விஞ்ஞான சாஸ்திர உண்மைகளை அடிப்படியிலே வைக்கவேண்டும். அதன் பின்பு தொழில் முறை தெரிந்தவர்கள் அவற்றை ஆராய்ந்து அறிந்து ஆதாரமாகக் கொண்டு தமக்கு வேண்டிய கருவியை எவ்வாறு இயற்றுவது என்பதைப் பற்றி ஒரு சுமாரான முடிவுக்கு வரவேண்டும். இதன் பின்புதான் மூன்றாவது படி. இவ்வாறு மனத்தில் கொண்ட முடிவுகளுக்கு ஏற்றபடி கருவிகளை இயற்றிப் பார்த்துப் பரீக்ஷை செய்து எண்ணியபடி யெல்லாம் ஒழுங்காக அவை நடந்தேறுகின்றனவா என்பதை நேராகப் பரிசோதித்து உறுதி கொள்வதுதான் கடைசிப்படி. இதுதான் மிகவும் முக்கியம் இதில் தேறாவிட்டால் மற்றவை எல்லாம் ஒன்றுக்கும் பிரயோசனமில்லை.

(தொடரும்)



# பழைய தெருவிளக்கு

கே. எஸ். நடராஜ சர்மா

வெகு நாளாகத் தன் கடமையைச் செவ்வையாகச் செய்து வேலையிலிருந்து விலகும் தருணமடைந்த ஒரு பழைய விளக்கு, கடைசி நாளில் தன் தூணில் நின்றுகொண்டு தெருவை விளங்கச்செய்து கொண்டிருந்தது. அப்பொழுது அதன் நிலை கடைசிமுறை ஆடும் ஒரு நாட்டியப் பெண்ணை ஒத்திருந்ததென்று கூறலாம். மறுநாள் காலை அவளைப் போலவே விளக்கும் நிர்க்கதியாக வேண்டியது தானே! 'நாளைக்கு' என்ற வாக்கு நம் விளக்குக்கு எவ்வளவு விசாரமான எண்ணங்களைக்கிளப்பியது! ஏனென்றால் அது நாளை நகரத்தார் கூடும் சபைக்குப் போகவேண்டும். அப்பொழுது நகர அதிகாரிகள் அதைப் பரிசோதிப்பார்கள். அங்கே அதைக் குக்கிராமங்களுக்கு அனுப்புவதா, அல்லது உருக்கி வேறு விதமாக மாற்றுவதா என்பது தீர்மானமாகும். உருக்கி விடுவதால் விளக்குக்கு விசேஷக் கவலையில்லை. எந்த உருவை அடைந்தால்தான் என்ன? ஆனல் பழைய உருவுடன் பூர்வ ஞாபகமும் போய் விடுமோ என்பதே அதன் முக்கிய வருத்தம். என்ன நேர்ந்தாலும் நேரிடாவிடினும் அதற்கு இராக்காவற்காரனையும் அவன் மனைவியையும் பிரிய மனமில்லை. அது என்று தெருவை அடைந்ததோ அன்றே அவனும் அந்த உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டான். அப்பொழுதுஅவன் மிகச் சுறுசுறுப்புள்ள வாலிபனு யிருந்தான். இப்பொழுது எத்தனை வருஷங்கள் ஆய்விட்டன!

இராக் காவற்காரன் மனைவி முதலில் சற்றுக் கர்வமுடையவளாகவே இருந்தாள். பகற்பொழுதில் விளக்கை ஏறிட்டுப் பார்ப்பதேயில்லை. ஆனல் நாளடைவில் அவளுடைய குணம் மாறி விட்டது. தன் கையாலேயே விளக்கை மினுக்கித்துடைத்து எண்ணெய் விட்டுப் பரிபாலித்து வந்தாள். மிக்க யோக்கியர்களான அவ்வயோதிகர்கள் விளக்குக்கென்று ஏற்பட்டுள்ள எண்ணெயில் ஒரு துளியும் அபகரிக்கவில்லை.

இன்றிரவுதான் அவ்விளக்கு, கடைசிமுறை தெருவில் நிற்கப் போவது. முன் கூறியபடி மறுநாள் காலை நகரசபையை அடையப்

---

இது ஹான்ஸ் ஆண்டர்ஸன் எழுதிய ஒரு கதையைத் தழுவி எழுதப் பட்டது.

போகிறது. ஆகையால் அது துக்கத்துடன் ஒளிகுன்றி எரிவதும் ஓர் ஆச்சரியம் அன்று.

அப்பொழுது அதன் மனதில் பல எண்ணங்கள் எழுந்தன. அது எவ்வளவு மனிதர்களுக்குத் தன் ஒளியை அளித்திருக்கிறது! எத்தனை காட்சிகளைக் கண்டிருக்கிறது! அதன் அநுபவம் நகரத் தலைவர்க்குக் கூட உண்டோ என்பது ஸந்தேஹம். ஆனால் விளக்கு இவைகளை எல்லாம் வெளிவிட்டுச் சொல்வதில்லை. அது நற்குணம் உள்ள விளக்காதலால் ஒருவரையும் இழிவாகக் கூறக்கூடா தென்று அதற்குத் தெரியும். அதிலும் இராஜாங்கத்தையா?—இத் தகைய குணங்களையுடைய தன்னை எல்லாரும் மறந்து விடுவார் களே என்னும் ஏக்கத்தால் அதன் சுடர் எப்பொழுதும் அசைந்து கொண்டே இருந்தது. ஆனால் சிலராவது விளக்கின் ஞாபகத்தை மனதில் வைத்துக் கொண்டிருப்பார்களென்று அது நம்பிற்று. ஏனெனில் சில நாட்களுக்குமுன் ஓர் அழகிய வாலிபன் விளிம் பில் பொற்பொடி பூசி நறுமணம் கமழும் கடிதம் ஒன்றைக் கையில் ஏந்திநின்றான். அது ஒரு பெண்ணின் மெல்லியகையால் எழுதப் பட்டது. இருமுறை அக்கடிதத்தைப் படித்து முத்தமிட்டான். பிறகு, "என்னிலும் பாக்கியவான் உலகில் யாரிருக்கிறார்" என்று சொல்வதுபோல விளக்கை ஏறிட்டுப்பார்த்தான். அவன் காதலி யிடமிருந்து வந்த முதற் கடிதத்தின் பொருளை அவ்விளக்கும் அதன் உதவியால் அவனுமே அறிவார்.

தவிர வேறிரண்டு காட்சிகளும் அந்த விளக்கின் ஞாபகத்தில் தோன்றின. தெருவில் ஓர் அழகிய இளம் பெண் உயிர் நீங்க, அவள் உடலை மலர் பரப்பிய வாகனத்தில் சுமந்து சென்றார்கள். இருவரிசையாக அமைந்த தீவட்டிகள் விளக்கை மங்கச்செய்தன. கூட்டங் கூட்டமாக மனிதர்கள் மெல்லப் பின் தொடர்ந்து சென் றார்கள். தீவட்டிகளின் பிரகாசம் திகைத்து நின்ற விளக்கை விட்டு மறைந்ததும் ஒரு மனிதன் தூணில் சாய்ந்து நின்று துயராற்றாது அழுதான். இவர்கள் விளக்கை மறந்துவிட மட்டார்கள் என்பது தான் விளக்கின் நம்பிக்கை.

வேலையை இழக்கும் காவற்காரனுக்காவது அவன் பின் வருப வன் யார் என்று தெரியும். அவனுக்குச் சில புத்திமதிகள் கூறலாம். ஆனால் விளக்கு அப்படியல்ல; பின்பற்றி வருபவரைத் தெரிய வழியில்லை. இல்லாவிடில் எவ்வளவு நற்புத்திகள் போதித்திருக்கும்! மழை, மூடுபனி, சந்திரிகை, காற்றடிக்கும் திசை இவை இவ்விளக் குக்குத் தெரிவது போல் வேறு ஒருவருக்கும் தெரியாது.

அந்தநேரம் தெருக்கோடியைச் சுற்றி வந்த காற்று விளக்கின் சாளரத்தின் வழியாக உட்புகுந்து சொல்லிற்று: "விளக்கே! நான் கேட்ட சமாசாரம் மெய்தானா? நீ நாளை இவ்விடம் விட்டுப் போகிறாயாமே? ஆகையால் நான் உனக்கு ஒரு பரிசு அளிக்க விரும்புகிறேன்: அதாவது, நான் உன் மனதுள் சென்று வீசி, முன்பு நிகழ்ந்த காட்சிகளையும் வசனங்களையும் மறதி உண்டாகாமல் தங்கும்படி செய்கிறேன். தவிரவும் உன்முன் பேசுவதையும், வாசிப்பதையும் அறியும்படியான நிர்மல சக்தியையும் உனக்கு அளிக்கிறேன்".

விளக்கு இவ்வொப்புயர்வற்ற வெகுமதிக்காகக் காற்றைத் தாழ்ந்து வந்தனம் செய்து கேட்டது: "நான் இவ்வீதியை விட்டுப்போனதும் என்னை உருக்கிவிடுவார்களே? அப்பொழுது என் அறிவும் போகுமாயின்..." அதற்குக் காற்று, "கிழவிளக்கே! ஏன் உனக்கு வீண் வருத்தம்?" என்று சீறிப் பதில் உரைத்தது. அப்பொழுது மேக மறைவில் இருந்த சந்திரன் வெளித் தோன்றினான்.

"சந்திரனே! இவ்விளக்குக்கு என்ன கொடுக்கப்போகிறாய்?" என்று காற்று கேட்டது.

சந்திரன், "ஒன்றுமில்லை. நான் இப்பொழுது க்ஷீணதசையை அடைந்திருக்கிறேன். விளக்கு எப்பொழுதாவது எனக்கு வெளிச்சம் தந்திருக்கிறதா?" என்று சொல்லி மேகத்தினுள் மறைந்து கொண்டான். விளக்குக்காகக் காற்று, கெஞ்சிக் கேட்டது சந்திரனுக்குப் பிடிக்கவில்லை. அப்பொழுது திடீரென்று இருண்ட மேகங்களிலிருந்து ஒரு நீர்த்துளி விளக்கின்மீது விழுந்தது. அது மேகங்கள் அனுப்பிய வெகுமதி. "ஒரு நாள் நீ என்னை மிகச்சிறந்த பரிசென மதிக்கலாம். உனக்கு உயிரில் வெறுப்பு உண்டாகும் பொழுது உன் உடலுள் புகுந்து உன்னைத் துருப்பிடித்துச் சாம்பலாகும்படி செய்கிறேன்" என்றது அந் நீர்த்துளி. விளக்குக்கு இது நல்ல வெகுமதியாகத் தோன்றவில்லை. காற்றின் அபிப்பிராயமும் அப்படித்தான். பிறகு காற்று, "வேறொருவரும் விளக்குக்குப் பரிசு அளிக்கமாட்டார்களா?" என்று உரக்கக் கூவிக்கேட்டது. அப்பொழுது வானத்திலிருந்து சுடர்ப்பொறி பின் தொடர ஒரு நக்ஷத்திரம் விழுந்தது. விளக்கு மகிழ்வுற்றுப் பொன்னொளி பரப்பி நின்றது. ஏனென்றால் காந்தி மிகுந்த நக்ஷத்திரங்கள் நம் விளக்கின் மேல் வைத்த அன்பைக் காட்டி அதற்கு அளித்த பரிசின் அறிகுறியன்றோ இப்பொழுது நிகழ்ந்த காட்சி! ஆகாயத்தில் விளங்கும் நக்ஷத்திரங்களே இவ் விளக்கின் குறிக்கோள். அவைகளைப்போல்

தானும் பிரகாசிக்க முயன்று அவ் வுன்னத பதவியை அடைய விரும்புவதே அதன் கருத்து. நக்ஷத்திரங்கள் அளித்த பரிசு என்ன வென்றால் நாம் பார்ப்பதையும் அறிவதையும் நம் அன்பர்களுக்குத் தெரியச் செய்வதே. நாம் அநுபவிப்பதை நம் அன்பரும் பகிர்வ தன்றோ சிறந்த சுகம்? ஆகையால் இப்பரிசே மிக்க விலையுயர்ந்த தென்று கருதி விளக்கு மகிழ்ந்து நின்றது.

இதைக் கண்ட காற்று விளக்கை நோக்கி, "உன் எண்ணங்கள் உன்னைக் கனப்படுத்துகின்றன. ஆனால் உன் அரிய சக்தி பிறர்க்கு உதவவேண்டுமானால் உன்னுள் மெழுகுவர்த்தியை வைக்கவேண்டும். நக்ஷத்திரங்கள் இதைக் கவனிக்கவில்லை. அவைகளுக்கு எல்லா வெளிச்சமும் மெழுகுவர்த்தியிலிருந்து வருவதாகவே எண்ணம். எனக்கு நேரம் ஆகிறது. நான் போய் வருகிறேன்" என்று சொல் லிப்போயிற்று. விளக்கு மெழுகுவர்த்திக்கு எங்கு போகும்!

மறுநாள் மாலையில் விளக்கு ஒரு பழைய நாற்காலியில் சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. அது எவ்விடத்தில் என்று நினைக்கிறாய்? இராக்காவற்காரன் வீட்டில். நெடுநாளாக அவன் உழைத்ததற்காக அவன் வேண்டுகோளுக்கு இணங்கி நகரசபையார் அவனுக்கே அவ் விளக்கைப் பரிசாக அளித்து விட்டார்கள். இருபத்து நாலு வருஷங் களாக அவன் பாதுகாத்து வந்ததால் அவ்விளக்கை அவனுடைய குழந்தை போலக் கருதி வந்தான்; அவனுக்கு வேறு குழந்தை களும் இல்லை.

இராக்காவற்காரனும் அவன் மனைவியும் இராப்போஜனம் செய் யும் சமயம். அப்பொழுது அவர்கள் விளக்கை மிகவும் பக்ஷமுடன் அடிக்கடி பார்த்தார்கள். மேஜைமேலேயே அதனை வைத்துவிட இசைவார்கள்போல் தோன்றிற்று. அவர்கள் வசிப்பது பள்ளத் தாக்கான இடம். குளிருக்கு மிகவும் அடக்கமாக இருக்கும். பல கைக்கதவுகள் குளிர்காற்றைத் தடுத்தன. எல்லாம் மிகவும் சுத்த மாகவே யிருந்தது. படுக்கையைச் சுற்றிலும் பலகணிக்கு முன்னும் வெள்ளைத்திரைகள் தொங்கின. ஜன்னல் தட்டில் விசித்திரமான இரண்டு பூச்சட்டிகள் இருந்தன. இவைகள் யானை வடிவத்தில் மண் ணாற் செய்தவை. சுவரில் ஒரு சித்திரம் தொங்கிற்று. அதன் அருகில் ஒரு கடிகாரம் 'டிக்டிக்' என்று ஓடிக்கொண்டிருந்தது.

விளக்குக்குத் தான் இருப்பிடம் விட்டு மாறி இருப்பதால் உலகம் முழுவதும் தலைகீழாக மாறிவிட்டதாகத் தோன்றிற்று. ஆனால் இராக்காவற்காரன் தன்னைப் பார்த்து மழையிலும், பனியி லும், தெள்ளிய வேனில்மாலையிலும், நெடுங்குளிர் இரவிலும்

உறைந்த பனியிலும் நேர்ந்த சம்பவங்களைப்பற்றிச் சொல்லும் பொழுதெல்லாம் உலகம் சீரடைந்து விட்டதாகத் தோன்றும். இவை எல்லாம் அதன் கண்முன் நடப்பவை போலத் தெளிவாக விளங்கின.

இருவயோதிகரும் சுறுசுறுப்பும் தொழிலில் ஊக்கமும் உடையவர். வீண் பொழுது போக்கார். ஞாயிற்றுக்கிழமை மாலைகளில் கிழவன் புத்தகம் வாசிப்பான். அது சாதாரணமாக யாத்திரைப் புத்தகமாயிருக்கும். ஆப்பிரிக்காவில் பரந்த காடுகளில் மதயானைகள் யதேச்சையாகத் திரிவதைப்பற்றி வாசிப்பான். அப்பொழுது அவன் மனைவி பரபரப்புடன் பூச்சட்டியில் அமைத்த யானைகளைப் பார்த்து, "இதன் ரூபந்தானே! என் மனதில் நன்றாகப்பதிகிறது" என்பாள். அப்பொழுது விளக்கு, தன்னுள் மெழுகுவர்த்தியை வைக்கவில்லையே என்று வருந்தும். ஏனென்றால், அப்பொழுது தான் கண்டு மகிழ்வது போலவே இருகிழவர்களும் அவர் நினைப்பன வெல்லாம் கண்ணெதிரில் கண்டுகளிக்கலாமன்றோ? "உயர்ந்த மரங்களும், இணைந்த கொம்புகளும், குதிரை ஏறித்திரியும் வனசரர்களும், உயர்ந்த பார்வையுடன் காட்டில் திரியும் யானைக் கூட்டங்களும், இன்னும் பலவிதக் காட்சிகளும் அவர்கள் கண்முன் தோன்றும். என்னுடைய அரியசாமர்த்தியத்தால் என்ன பயன்? எண்ணெயும் திரியும் தவிர வேறொன்றும் வைக்கமாட்டார்களே!" என்று ஏங்கிற்று.

ஒரு நாள் மெழுகுவர்த்தித் துண்டுகள் அவ்வறையில் குவிக்கப்பட்டன. பெரிய துண்டுகளை எரிக்கவும் சிறிய துண்டுகளை நூலில் தேய்க்கவும் எடுத்துக்கொண்டார்கள். ஆனால், ஒருவருக்காவது ஒரு துண்டை அவ்விளக்குள் வைக்கத் தோன்றவில்லை.

"ஏன் என் விசேஷசக்தியை இவர்கள் உணராதிருக்கிறார்கள்? பலவிஷயங்கள் என் மனத்தில் தோன்றுகின்றனவே! ஆனால் ஒன்றையும் பிறர்க்கு அளிக்க இயலவில்லையே. நான் இச்சுவரை விலையுயர்ந்த திரையாகவோ, அல்லது அடர்ந்த காடாகவோ, அல்லது அவர்களென்ன நினைக்கிறார்களோ அதுவாகவோ மாற்றக்கூடும் என்று அவர்களுக்குத் தெரியவில்லை" என்றெண்ணியது. ஆனால் அவர்கள் விளக்கைத் துடைத்துச் சித்தமாக்கி எல்லார் கண்ணுக்கும் தட்டுப்படும் இடத்தில் வைத்திருந்தார்கள். சிலர் அதை ஒன்றுக்கும் உதவாத குப்பை என்றார்கள். ஆனால் கிழவன் இதைக் கவனிக்கவில்லை.

இராக்காவற்காரன் பிறந்த நாள் அணுகிற்று. அன்று கிழவி விளக்கண்டைவந்து புன்சிரிப்புடன், "என் கிழவன் கௌரவத்திற்

காக இன்று உன்னை ஏற்றப் போகிறேன்'' என்றாள். அது கேட்ட் விளக்கு ஈயம் பூசிய விளிம்புகளால் சலசலத்தது. அது, அவ் விளக்கு தான் அடையப்போகும் வெளிச்சத்திற்காகச் சந்தோஷ முற்றதற்கு அறிகுறியாகும். அன்றிரவு கிழவி விளக்குக்கு எண்ணெய் விட்டு எரியவைத்தாள். மெழுகுவர்த்தியின் ஞாபகம் அவளுக்கு வரவில்லை. அது அன்று இரவுமுழுதும் எரிந்தது. ஆனல் நக்ஷத்திரம் அளித்த வெகுமதி இப் பிறப்பில் பயன்படா தென்று அறிந்துகொண்டது.

அன்றிவு அதற்கு ஒருகனவு உண்டாயிற்று. அது வரு மாறு: வயோதிகர்கள் இறந்து விட்டார்கள். விளக்கையும் இரும்பு உருக்கும் உலைக்குக் கொண்டுபோய் விட்டார்கள். அப் பொழுது அதற்கு உண்டான பயத்துக்கு அளவில்லை. துருப்பிடித் துப் போகும் சக்தியிருந்தும் அதை உபயோகிக்கவில்லை. உலையில் அதை உருக்கி மிக அழகிய மெழுகுவர்த்தி விளக்காக மாற்று வதாகத் தோன்றிற்று. மனிதர் கற்பனையில் எவ்வளவு வடிவழகு வாய்க்குமோ அவ்வளவு அழகு வாய்ந்த ஒரு தேவதூதனது திரு உருவை அடைந்து கையில் ஒருமலர்க்கொத்தை ஏந்தி நிற்பதாகத் தோன்றிற்று. மலர்க்கொத்தின் நடுவே, மெழுகு திரி வைக்கும் இடம். இவ்விளக்கு ஒரு பசுங்கம்பளம் விரித்த மேஜைமேல் வைக்கப்பட்டிருக்கிறது. அது ஓர் அழகிய அறை. நாற்பக்கங்களி லும் புத்தகங்கள் நிரம்பியிருந்தன. அது ஒரு கவியின் உறைவிடம். அவர் எழுதப்போகும் பொருள்களெல்லாம் உருவுடன் அவர் கண் முன் தோன்றின. இருண்டவனங்களும், நாரை உலாவும் அழகிய புல் தரைகளும், கொந்தளிக்கும் கடலைக்கடக்கும் கப்பல்களும், மாசு மறுவற்ற வானமும், எண்ணிறந்த நக்ஷத்திரங்களும் ஒன்றன் பின் ஒன்றாகத் தோன்றி மறைந்தன.

கனவு தெளிந்தது; "இவ்வளவு சக்தி என்னிடம் இருக்கிறதா? என்னை மெழுகுதிரிவிளக்காக மாற்றிவிடட்டும்'' என்று ஆசைப்பட் டது. பிறகு, "இப்பொழுது கூடாது. இவ்விருவரும் உயிருடன் இருக்குமளவும் இவரைவிட்டுப் பிரியக் கூடாது. இவர்கள் என்னை எவ்வளவு அன்புடன் ஆதரிக்கிறார்கள்! என்னை நன்றாய்த் துடைத்து எண்ணெய் நிரப்பி வைக்கிறார்கள். அங்குத் தெருவில் பிரகாசிக்கும் விளக்குக் கூட்டத்துக்கு என்ன மரியாதை நடக் கிறதோ அது எனக்கும் உண்டு. அதனல் அவர்களுக்குச் சந் தோஷந்தான்'' என்று சொல்லிக் கொண்டது. அன்று முதல் அவ் விளக்குக்கு ஒருவிதமான அமைதி உண்டாயிற்று.

# ஸயன்ஸிற்குப் பலி

ந. பி.

“நான் போனதரம் டெல்லி சட்டசபையில் மெம்பராக இருந்த பொழுதே இந்த யோசனை செய்தேன். சிநேகிதர்கள் முட்டுக்கட்டை போட்டார்கள். இப்பொழுதாவது அந்த யோசனையைப் பூர்த்தி செய்து அனுப்பிய தொகுதிக்குத் துரோகம் செய்ததாக முடியும். இனிப் பொறுக்கமுடியாது”

இப்படிப் பேசியவர் விசுவநாத அடவியார், எம். எல். ஏ. எதிரிலிருந்தவர் டாக்டர் சேதுராவ். சீமையிலும் ஜெர்மனியிலும் ஸயன்ஸில் டாக்டர் என்னும் பட்டத்தைப் பெற்றவர். சேதுராவ் கேட்டார்: “அடவியார்வாள், முகம் சிவந்து விட்டதே உங்களுக்கு! பேசின விஷயம் என் காதிற்கென்று கருதப்பட்டதனால் கொஞ்சம் வெளிப்படையாய்ச் சொன்னால் என்னால் ஆன உதவி புரிகிறேன்.”

“உண்மையில், ராயர்வாள், யுத்தத்திற்காகக் கொலைக்காற்று, ஆகாயவிமானம், விஷவாசனை, டார்பீடோ இவைகளை ஸயன்ஸ் பண்டிதர்கள் கண்டு பிடித்ததிலிருந்து எனக்கு ஆக்ரோஷம். வரவர ஹிம்சை செய்வதற்கும் கொல்வதற்கும் அல்லது பொழுது போக்கிற்கும் ஈச்வரன் கொடுத்த உயர்ந்த மூளையை மேல் நாட்டுப் பண்டிதர்கள் செலவழிப்பதைப் பார்த்தால் அடுத்த யுத்தத்தில் மனிதன் பூண்டற்றுப்போவான் என்று தோன்றுகிறது. இதைத்தான் புத்தியின் வியபிசாரமென்று நான் சொல்லுவேன். இந்த விஷமபுத்தி நமது இந்தியருக்குள்ளும் பரவிவருவது எனக்குச் சஹிக்க வில்லை. எதற்காக நமது ஜனங்கள் வெடிகுண்டும் துப்பாக்கியும் பழக்கிக் கொள்ள வேண்டும்? இதெல்லாம் நமக்கு வேண்டாம். இவைகளைத் தடுப்பதுதான் சுத்தசைவனுகிய என் நோக்கம். சரிதானா?”

“அடவியார்வாள், நான் இது விஷயத்தில் முந்திக்கொண்டு விட்டேன். பொது ஜனங்களுக்கு எந்த விதத்திலும் ஹிம்சை செய்யக் கூடிய கருவிகளையோ, சக்திகளையோ, நமது தேசத்தில் கண்டு பிடிப்பதோ பரவச்செய்வதோ, இவை தண்டனைக் குரிய செய்கை

யென்று ஒரு சட்டம் தயாரித்திருக்கிறேன். அதற்கு உட்பிரிவுகள், அமுலுக்குக் கொண்டுவரும் வழிகள் இவைகளைக் கொஞ்சம் கண்டு தயாரித்திருக்கிறேன். இதுதான் அந்த மசோதாவின் நகல்.''

"அடே, ஆச்சர்யமாயிருக்கிறதே டாக்டர்வாள் சொல்வது! சீமையிலும், ஜெர்மனியிலும் ஸயன்ஸில் நிபுணரென்று மெடல்களும் பவுனும் பரிசுபெற்ற நீர் புகையை எதிர்த்துப் பாயும் புலி போல் நான் சொல்லுவதை எதிர்ப்பீரெனப் பார்த்தேன். ஊசி வெடிக்கட்டுப்போல் 'பிஸ்ஸென்று' வீட்டீரே. காரணம்?''

"அப்படிக்கேளும், காரணம். இந்த 'பில்லை' பார்த்தாகட்டும்.''

"இந்த அவசரத்தில் முடியாது. காரணத்தை முதலில் சொல்லும்.''

"அப்படியென்றால் இதைக்கேளும்" என்று ராயர் ஆரம்பித்தார் :

"வெகுநாளாக ஸயன்ஸ்பேர் வழிகள் கடவுளைப்போல் ஸ்வதாவில் சிருஷ்டி செய்யத்தலைகீழாக நின்றுவருகிறார்களே தெரியுமா? சிலர் இரண்டொரு ரஸாயன வஸ்துக்களைச் சேர்த்து உயிருண்டாக்க முயன்று வருகிறார்கள். சிலர் மனிதனைப்போல இரும்பு அல்லது இதர உலோகங்களில் யந்திரங்கள் செய்து மின்சார விசைகளை அதற்குள்வைத்துப் பார்த்தார்கள். இதுவரையில் அவர்கள் எண்ணம் முழுதும் கைகூடியதாகச் சொல்லக்கூடாது. ஆனால் சமீபத்தில் கடவுளுக்கே ஆபத்து வந்துவிட்டதெனச் சொல்லலாம். எச். மே என்பவர் ஓர் ஆளைத் தயார் செய்திருக்கிறார். கடவுள் இப்பொழுது என்ன யோசிக்கிறார் என்று தெரியவில்லை. அந்தப் புது சிருஷ்டிக்கு ஆல்பாவென்று நாமகரணம் செய்யப்பட்டிருக்கிறது. உடலெல்லாம் இரும்புக்கூடு. கண், வாய், மூக்கு, செவி அவ்வளவும் உண்டு. மின்சாரத்தால் அவ்வளவு உறுப்புக்களும் வேலை செய்கின்றன. ஆல்பா சாதாரணக் கேள்விகளுக்கெல்லாம் பதிலளிக்கிறதாம்; உலாவுமாம். நம் தேசத்து வெற்றிலைப்பெட்டி மிராசுதார் மாதிரி வைத்துங் கொள்ளலாம். பகுத்தறிவு இருப்பதாகத் தெரியவில்லை; தானாகவும் ஒன்றும் செய்யாது. ஆகவே ஆல்பாவிடம் கொஞ்சம் உஷாராகப் பழகவேண்டுமாம். ஆல்பா ஒரு வேளை இரைந்து கத்தினால் அவ்வூரிலிருக்கும் அவ்வளவு கண்ணாடிகளும் நொறுங்கிப் போகின்றவாம். இன்னும் அதன் பிரதாபங்கள் பலவாம். அவைகளெல்லாம் இந்தச் சந்தர்ப்பத்திற்கு வேண்டியதில்லை.

"முக்கியமாக, ஆல்பாவைச் சிருஷ்டி செய்தாரே அவர் அந்தச் சிருஷ்டியை முடித்த தினத்திலிருந்து வெளியே செல்லுவதை நிறுத்திவிட்டார். தன் பிள்ளையின் பேரில்—அதாவது ஆல்பாவின்

மீது—அவருக்குக் கங்கு கரையில்லா மோகம். மற்றொரு பக்கத்தில் பெரிய திகில். அவர் சொல்வாராம்: 'தட்டுக்கெட்டு நான் வெளியே போகும் வேளையில் வீடு கூட்டியோ அல்லது வேறுயாராவது வந்து எக்கச்சக்கமாய் வாய்திறந்து பேசிவிட்டால் ஆல்பாவின் இரும்புக் கைகளுக்கு இரையாவார்களே. அதைத் தடுப்பதற்கு நான் இனி வெளியே போவதில்லை என்று பிரதிஞ்ஞை, ஆல்பாவின் சிருஷ்டி கர்த்தர் ஆல்பாவின் அடிமையானேன்' இவ்வெண்ணங்களை அனு சரித்துத்தான் சாப்பாடு, தூக்கம். இச்சமயங்களைத் தவிரப் பாக்கி நேரங்களில் ஆல்பாவை மே என்பவர் பிரியாமலிருந்தார். இதற்குப் பாராவென்றும் செல்லலாம்; கடுங்காவல் தண்டனை யென்றும் சொல்லலாம்.

"அடவியார்வாள், இதெல்லாம் இரண்டு மாதத்திற்கு முந்திய சமாசாரம். அப்பொழுது பேப்பர்களிலெல்லாம் ஆல்பாவின் பேச்சுத்தான். மே என்பவரைப்பற்றி முழக்கந்தான். ஆல்பாவின் படமும் வந்திருந்தது.

"பிறகு கொஞ்சநாள் வரையில் இவர்களைப்பற்றி ஒரு பிரஸ் தாபமும் காணோம். எனக்கு மாத்திரம் இது விஷயம் படித்தது முதல் கொண்டு மனதில் அகாரணமானபயம். நான் என்ன மெடல் வாங்கியிருந்தால் என்ன ஐயா; பயம் பயந்தான். நீங்கள் கேட் பீர்கள்: ஆல்பா சீமையிலிருந்தால் இந்தியாவில் உனக்கென்ன வென்று. அதுதான் எனக்கும் புரியவில்லை. பொறுங்கள், இப் பொழுது ஒன்று தோன்றுகிறது. சீமை, இந்தியா, ஆல்பா இவ் வளவும் என் மூளைக்குள் பதிந்துகிடக்கும் எண்ணங்கள்தானே, உருவுகள்தானே. அதனால் சீமை ஆல்பாவைப்பற்றி........அது போகட்டும். பிறகு விசாரிப்போம் அந்தத் தத்வத்தை.

"போன மாதத்தில் பேப்பர்களில் பார்த்திருப்பீர்களே, ஆல் பாவின் கோபமென்று கொட்டை எழுத்துக்களில் எழுதியிருந் ததை; இல்லையா? சரி. நான் அதைப்பார்த்தவுடன் என் ரக்தா சயம் சட்டென்று ஒரு நொடி நின்றுவிட்டது. மெய்பதற வாசித் துப்பார்த்தேன். எச். மே என்ற விநோத ஸயன்ஸ் நிபுணர் ஆல் பாவிடம் ஏதோ பொழுது போக்கிற்காக வார்த்தையாடிக் கொண் டிருந்த காலத்தில் திடீரென்று தம் குரல் கரகரப்படைந்ததன் பயனாக ஸ்தாயிவித்யாஸம் ஏற்பட்டு, அந்த வித்யாஸத்தை ஆல்பா உணரு முன்னமேயே எட்டி ஓட முயற்சி செய்தும் அது பயன் படாமல், தென்னைமரம் சாய்வதைப்போல், ஆல்பாவின் வலதுகை முதலாளியின் முன்கையில் விழுந்து, எலும்புகளை ஒடித்துவிட்ட தென்றும், மே ஆஸ்பத்திரியில் இருப்பதாகவும் படித்தேன். அடவி

யார்வாள், பயத்தின் காரணம் அப்பொழுதுதான் தெரிந்தது. உயிருக்கு ஒரு சூக்ஷ்ம உணர்ச்சி உண்டு. அதைத் தர்க்கத்தினாலாவது, புத்தியினாலாவது சட்டங்களினாலாவது ஆராய்ச்சியினாலாவது நிச்சயிக்க முடியாது. எறும்புகள் மழை வருவதற்கு முதல் நாளிலேயே முட்டைகளை எடுத்துக்கொண்டு நல்ல இடங்களைத் தேடிப் போவதைப் பார்த்தீரா! அவ்வுணர்ச்சியின் காரியந்தான் அது.

"பேப்பரைப் படித்தேனென்று சொன்னேன். கணக்காய்ச் சொன்னால் அந்தப் பக்கத்தை—இல்லை, அந்த இடத்தை மட்டும் படித்தேன் என்று சொல்லவேண்டும். பாக்கியைப் படிக்க மனது இடம் கொடுக்க வில்லை; ஒரே குழப்பமுண்டாயிற்று. இருப்புக் கொள்ளவில்லை; மேல்நாட்டு நிபுணர்கள், கொலைக்கருவிகள், விஷக் காற்றுக்கள், பொழுதுபோக்கு விமானங்கள், ஆல்பாக்கள் இவைகளைச் செய்வதன் தாத்பர்யத்தைப்பற்றி யோசித்தேன். எனக்கு அவைகளில் வெறுப்பு அதிகப்பட்டது. ஜனங்களுக்கு அவைகளினால் என்ன ஸௌகரியம்? கடவுளுடன் மேற்படி நிபுணர்கள் போட்டி போடுகிறார்களாம்; வென்றுவிடுவதாகக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார்களாம். செய்யட்டும், அந்தக் கக்ஷியைப் பற்றிப் பேசினால் வளரும்."

"அது மற்றொரு நாள் ஆகட்டுமே" என்றார் அடவியார்.

"ஆகட்டுமே" என்று சொல்லிவிட்டு ராயர்மேலே சொன்னார்: "நான் சொன்னது போல, அடவியார்வாள், அன்று முழுவதும் ஒரே கலக்கம். பிராமணர்கள் பயந்தவர்கள், சோதாக்கள் என்று ஓர் அபிப்பிராயம் உண்டு. நான் குழம்பியதற்கு அது காரணமல்ல. ஆல்பாவின் குணத்தைப்பற்றி எண்ணினபோதெல்லாம் பல பல எண்ணங்கள் உதித்தன. மே என்பவர்மேல் அடங்கா அனுதாபம். கடாவை வளர்ப்பானேன்; அது மார்பில் பாயும்படி விடுவானேன்? இதெல்லாம் சனியனை வலியில் கல்யாணம் பண்ணிக் கொண்டது போலத்தானே? இப்படி நினைத்துக்கொண்டு அன்று மத்யானம் நாற்காலியில் யெல்லாம் சாய்ந்திருந்தேன். வழக்கமில்லாத வழக்கம் செய்தால் இப்படித்தான். ஏதாவது பத்து நிமிஷம் இருந்திருக்கும். பிறகு கண்ணுக்கு முன்னே பெரிய எழுத்துக்களில் எழுதியிருந்தது:

## ஆச்சரியமான கொலை!

நுங்கம்பாக்கத்தில் டாக்டர் சேதுராவ் என்பவர் வீட்டில் வீடு கூட்டும் பாப்பாயி கோரமாகக் கொலைசெய்யப்பட்டாள். ஏதோ இரும்பு சம்பந்தமான கருவிகளால் தாக்கப்பட்டதாக ஊகிக்கப்படுகிறது. கொலையின் காரணம் தெரியவில்லை.

“இந்தச் சமாசாரத்தைப் பார்த்த வியப்பு முடிவதற்குள்,—கேளுங்கள்!—ஒரு ஜெயில் தென்பட்டது. கீழெல்லாம் ஈச்சம் பாய் விரித்திருந்தது. சுவரெல்லாம் மூட்டைப்பூச்சி. நான் உள்ளிருந்த படியே வெளியே உலாத்திய பாராக்காரரை ‘எதற்காக ஐயா என்னை அக்ரமமாக ஜெயிலில் அடைத்திருக்கிறீர்கள்?’ என்று கேட்டேன். பாராக்காரர் சொன்னார்: ‘உங்கள் வீடுகூட்டி கொலையுண்ட சம்பந்தமாக நீர் கைது செய்யப்பட்டிருக்கிறீர்.’ ‘ஆமாம், எனக்கென்ன சம்பந்தம் அதில்’ என்று வேகத்துடன் கேட்டதற்கு, பாராக்காரர் ‘ஸெஷன்ஸ் கோர்ட்டில் ருஜுப்படுத்தும் ஐயா, இங்கே விடைக்காதே’ என்று நாஸூக்காய்ப் பதில் கொடுத்தார். பாராக்காரருடன் நடந்த இந்த ஸல்லாபத்திற்குப் பிறகு தலையெழுத்தை நினைத்துக்கொண்டேன். அட பாவமே!

“அடுத்தபகுதி; தஞ்சாவூர் ஸெஷன்ஸ் கோர்ட்டு.”

“குறுக்கிடு வதை மன்னிக்க வேண்டும் டாக்டர்வாள்! நுங்கம் பாக்கத்தில் கொலை என்று சொல்லித் தஞ்சாவூர் செஷன்ஸ் கோர்ட் டென்றால் கொஞ்சம் ‘நாகபட்டணம்’ சம்பந்தமிருப்பது போலிருக் கிறதே” என்றார் அடவியார்.

“கொஞ்சம் பொறுக்கவேணும், எல்லாம் விளங்கும்” என்று சேதுராவ் மறுபடியும் சொன்னார். “தஞ்சாவூர் செஷன்ஸ்கோர்ட் டென்றேனல்லவா? கூட்டம் தாங்கவில்லை. குற்றவாளிக் கூட்டில் நான் நின்று கொண்டிருந்தேன். அடவியார்வாள், ஆச்சர்யப்படக் கூடாது நான் செல்வதைக்கேட்டு. எனக்கு வக்கீல் கிடையாது. ஜட்ஜ் என்னைக் கேட்டார்: ‘டாக்டர்வாள் வாதி தரப்பு சாக்ஷிகள் சொல்லியதைக் கேட்டீர்களா? கொலைக் குற்றத்திற்குப் பதி லென்ன? குற்றவாளியா, அல்லவா?’ நான், ‘குற்றவாளியல்ல’ என்று சொல்லிவிட்டு எழுத்துமூலமாக ஒரு ஸ்டேட்மெண்ட் நீட்டினேன். அதில் சொல்லியிருந்த விஷயம்:

‘வீடு கூட்டி பாப்பாயி கொலையுண்டதில் எனக்கு யாதொரு வித சம்பந்தமுமில்லை. நான் ஒரு மாதத்திற்கு முந்தி ஐரோப்பிய ஸயன்ஸ் காங்கிரஸுக்குப் போய் சில வைதிக ஸயன்ஸ் கொள்கைகளை—ஸயன்ஸிலும் வைதிகம் உண்டு—பலமாகக் கண்டித்தும், அஹிம்ஸா தர்மத்தை அனுசரித்து ஸயன்ஸை விளக்கியும் மூன்று லெக்சர்கள் செய்ததில் கொஞ்சம் கக்ஷியும் அபிப்பிராயபேதமும் ஏற்பட்டதில், உடனே பாம்பே திரும்பி வந்துவிட்டேன். பாம்பேயிலிருந்து திரும்பி சென்னபட்டினம் வந்த அரைமணி நேரத்திற்குள் நான் கைது செய்யப்பட்டேன். ஸயன்ஸ்

காங்கிரஸில், ஆல்பாவின் சிருஷ்டி மிகவும் வினோதமான தென்று ஸ்தோத்திரம் செய்துவிட்டு, பிறகு அதே லெக்சரிலேயே மிகுந்த வணக்கத்துடனும் முழு உணர்வுடனும் ஆல்பாவின் மாதிரி ஸயண்டிஸ்டுகள் சிருஷ்டி செய்வது அர்த்த மில்லாததென்றும், அபாயகரமானதென்றும், அதைச் செய்தவரைக் கொண்டே ஆல்பாவை அழிக்கும்படி உத்திரவிட வேண்டுமென்றும், அந்த யுக்தியை இதரர்களுக்குத் தெரிவிக்காமலிருக்கும்படி மேற்படியாரிடம் கடவுள் சாக்ஷியாக வாக்குறுதியும் வாங்க வேண்டுமென்றும் பேசினேன். இந்த அபிப்பிராயம் மேல் நாட்டுக்குப் பிடிக்கவில்லை; ஆல்பாவை ஆக்கியவருக்கு வேப்பெண்ணெயாயிருந்தது. கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது. சற்று அமைதி ஏற்பட்ட பிறகு மேற்படி மே என்பவர் எழுந்திருந்து என்னைப்போல் பேசுகிறவர்கள் இயற்கையால் அருளப்பட்ட சிருஷ்டி சக்தியை—கற்பனையுக்தியை—உபயோகித்து மாசுபடியாமல் வைத்திருக்கச் சக்தியற்ற பேடிகளென்றும், ஸயன்ஸின் வெற்றிகளைப் பழிப்பவர் மானிட வகுப்பின் எமன்களென்றும், அவர்களை ஒழிப்பதும் இகழ்வதும் ஸயண்டிஸ்டுகளின் முதல்வேலையாக வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் ஆரவாரத்துடன் பேசிச் சண்டைச்சங்கை ஊதினர். அவர் பேச்சு ஏராளமான கரகோஷத்தை எழுப்பிற்று. எனக்கு மனம் உடைந்துவிட்டது. அடுத்த நாளே நான் இந்தியாவுக்குத் திரும்பிப் பிரயாணமானேன். இந்தக் கொலைக்கும் ஸயன்ஸ் காங்கிரஸில் ஏற்பட்டபேச்சுக்கும் சம்பந்த மிருக்கிறதென ஊஹிக்கிறேன். வீடு கூட்டி பாப்பாயி நுங்கம்பாக்கத்தில் என் பங்களாவில் ஆல்பாவினால் அடிபட்டுக் கொலையுண்டாள் என்பது என்னுடைய நிச்சயமான கொள்கை. கேவலம் வீடு கூட்டியை—கிழவியை—கொல்வதில் எனக்கென்ன பயன்? யோசித்துப் பாருங்கள். தவிரப் போலீசாரால் என்னிடமிருந்து வாங்கி இப்பொழுது தாக்கல் செய்யப்பட்டிருக்கும் பட்டங்களும் மெடல்களும் என் கல்வித்திறமையைக் காட்டும். இத்துடன் என்னால் தாக்கல் செய்யப்படும் அத்தாட்சிகள்—இங்கிலாந்து, ஜர்மனி, வங்காளம், இவ்விடங்களிலிருந்து—என் உயர் குணத்தையும் மேல் நோக்கத்தையும் காண்பிக்கும். இன்னொரு விஷயம் முக்கியமானது: கோர்ட்டார் அவர்கள் பப்ளிக் பிராஸிகியூட்டர், போலீஸார் ஆகிய எல்லோரும் என்னுடன் நுங்கம்பாக்கத்திற்கு கிளம்பிப் போய் ஸ்தலத்தைப் பார்வையிட்டால் சந்தேகம் தெளிந்துவிடும். அப்படிக்குச் செய்ய முடியாவிட்டால் எனக்கு மரண தண்டனை உண்டாகலாம்; உங்களுக்குக் கடவுளின் தண்டனை நிச்சயம். இவ்வளவுதான்.

"அடவியார்வாள்! என் ஸ்டேட்மெண்டு முடிந்தது. ஊசி விழுந்தால் கேட்கக்கூடிய அந்த ஸப்தம் உடனே கலைந்தது. மறுபடி 'உஸ் பேசாதே' என்ருன் கோர்ட்டு டபேதார். பப்ளிக் பிராஸி கியூட்டர் எழுந்திருந்து தம் கவுன்களில் உள்ள வாலைப்பிடித்துக் கொண்டு வெண்ணெய் போன்ற குரலில் சொன்னுர் : 'குற்றவாளி யின் கடைசிவிண்ணப்பம் நிறைவேற்றக் கூடியதல்ல. எந்த தேசத்துச் சட்டமும் அதற்கு இடம் தரவில்லை. அது நாவல்களில் பொருத்தமாய் இருக்கலாம். இந்தியன் பீனல்கோடிலாவது கிரி மினல் சட்டத்திலாவது அதற்கு இடமில்லை. அக் கோரிக்கை கோர்ட்டை அவமதிப்பாக இருக்கிறதே யன்றி வேறில்லை. ஆகவே கோர்ட்டார் அவர்கள் ஜட்ஜ்மெண்டுக்கு முந்தி ஜூரர்களுக்குச் சொல்லவேண்டியதைத் தயவுசெய்து சொல்லும்படி பிரார்த்திக்கி றேன்.'

"கோர்ட்டார் அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. நான் மறுபடியும் சொன்னேன்: '10000 குற்றவாளி தப்புவதாயிருந் தால் கூட நிரபராதியான ஒருவனுடைய நகங்கூட நோவக்கூடா தென்பது கிரிமினல் சட்டத்தின் அஸ்திவாரமென்று கோர்ட்டார் அவர்களுக்கு நான் ஞாபகப்படுத்த வேண்டியதில்லை. பிராஸி கியூட்டர்வாள் சொல்வதில் பொருளில்லை.'

"ஜட்ஜுக்கு என்ன தோன்றிற்ருே என்னவோ, இரவே யாவரும் புறப்படுவோம் என உத்திரவு போட்டார். அடுத்தநாள் காலை எழும்பூர் ஸ்டேஷனை அடைந்தோம். பிளாட்பாரத்திலெல் லாம், வண்டிகளின்மேலெல்லாம் 'நுங்கம்பாக்கத்திற்கு ஜனங்கள் எக்காரணத்தைக் கொண்டும் போகக்கூடாதென்று எச்சரிக்கை செய்யப்பட்டிருக்கிருர்கள். போனுல் அபாயம். போலீஸ் கமிஷனர்' என்று பெரிய பெரிய தாள்களில் அச்சடித்து ஒட்டப்பட்டிருந்தது. என்னைத் தவிர மற்ற எல்லோருக்கும் திகில். முகம் புதுக் கடுதாசு போல் ஆய்விட்டது அவ்வளவு பேருக்கும். நான் பக்கத்திலிருந்த வனை, 'என்ன விசேஷம் நுங்கம்பாக்கத்தில்?' என்று வினவிய தற்கு அவன், 'அங்கே ஏதோ ஜடாமுனிபோல்—மன்னுர்சாமி போல் தெருவில் ஒன்று நின்று கொண்டிருக்கிறதாம் ; ஜனங்கள் பயந்து ஜார்ஜ் டவுனுக்கு சென்றுவிட்டார்களாம்; பட்டினத்தையே அழிக்க வந்த புது எமன்!' என்று சொல்லி முடித்தான்.

"பப்ளிக் பிராஸிகியூட்டர் ஜட்ஜினிடத்தில் 'எனக்கு வேலை போனுலும் போகட்டும், நான் ஊருக்குத் திரும்பிப்போகப் போகிறேன்' என்று சொன்னது என் காதில் விழுந்தது. மற்ற

வர்களும் அப்படியே சொன்னார்கள். நான் அமைதியுடன் 'கோர்ட்டார் அவர்களே! நண்பர்களே! நான் ஊகித்த விஷயம் சரியாகப் போய்விட்டதென்பது இங்கேயே உங்களுக்குத் தெரிந்திருக்கலாம். அப்படிக்கில்லாவிட்டால் நுங்கம்பாக்கத்திற்கே போவோம். உங்களுக்கு யாதொரு தீங்கும் வராமல் பார்த்துக்கொள்ளுகிறேன்' என்று தைரிய மூட்டினேன்.

"பிறகு நுங்கம்பாக்கத்திற்குச் சென்றோம். தெருக்களெல்லாம் வெறிச்சென்றிருந்தது. அப்பொழுதுதான் பிளேக் வந்தால் தெருக்கள் எந்தநிலைமையில் இருக்குமெனத் தெரிந்தது. ஸ்மசானத்தில்கூட கொஞ்சம் கலகலப்பு உண்டு; நுங்கம்பாக்கத்திலோ அன்று நடுக்குறும் தனிமை. என் பங்களாவுக்குப் போய்ச்சேரும் குறுக்குச் சந்து வந்ததும் ஜட்ஜ் கொஞ்சம் தயங்கினார். 'பரவாயில்லை, வாருங்கள், நான் இருக்கிறேன். ஒரு வார்த்தை மாத்திரம் ஞாபகமிருக்கட்டும். ஆல்பா இருக்கும் இடத்தில் தயவு செய்து மவுனம் சாதியுங்கள், ஜாக்ரதை' என்றேன்.

"சந்து திரும்பினோம். அந்த இடத்திலிருந்து பங்களா நாற்பது அடி இருக்கும். பங்களாவின் வாசலுக்கு எதிர்த்தாற்போல் தெருவில் ஆல்பா கைகாட்டி மரம் போல் ஒரு கையையும் இடுப்பில் மற்றொரு கையையும் வைத்துக்கொண்டு நின்றது. எனக்குப் பின்னால் வந்த பிராஸிகியூட்டர் ஆல்பாவைக் கண்ணுற்றதுதான் தாமதம், ஐயையோவென்று கத்திக்கொண்டு கீழேவிழுந்து மூர்ச்சையானார். சப்தத்தைக் கேட்டு ஆல்பா எங்களை நோக்கி வந்தது வெகுவேகமாயும் பயங்கரமாயும். ஜட்ஜ் ஓட்டம் பிடித்தார். எனக்கு ஆல்பாவின் பாஷையும் சூக்ஷ்மமும் தெரியுமென்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன். 'அன்பார்ந்த ஆல்பா! காலைவந்தனம்' என்று குளிரச் சொன்னேன். ஆல்பா சிரித்துக்கொண்டே 'சௌக்கியமா' என்று குசலப் பிரச்னம் பண்ணியது. 'உட்காரு' என்றேன். நான் இல்லாவிட்டால் பிராஸிகியூட்டரும் பாப்பாயி கோஷ்டியைச் சேர்ந்திருப்பார்.

"இதற்குள் ஓடிப்போன ஜட்ஜ் வகையறுக்கள் புதுக்குரலைக் கேட்டதும் மெதுவாகத் திரும்பி வந்தார்கள். எதிரும் புதிருமாக நானும் ஆல்பாவும் சம்பாஷிப்பதைப் பார்த்து எல்லோரும் மூக்கில் விரலை வைத்தார்கள். எல்லாருக்கும் பயம் தெளிந்துவிட்டது. பிறகு எனக்கும் ஆல்பாவுக்கும் நடந்த பேச்சை ஒரு குறுக்கெழுத்துப் பேர்வழி—ஷார்ட்ஹாண்டு ரைடர்—எழுதிக் கொண்டார். அதாவது:

நான்: ஆல்பா! நீ எனக்குத் தெரியாமலும் என் உத்திர வில்லாமலும் என் பங்களாவில் புகுந்ததைப்பற்றி மிகவும் வருத்த மாயிருக்கிறது.

வேறு வார்த்தையைப் பிரயோகிக்கக்கூடாது இப்பொழுது.

ஆல்பா: டாக்டரே! என் சிருஷ்டிகர்த்தரை ஸயன்ஸ் காங்கி ரஸில் பொதுமக்களுக்கு முன்பு நீர் ஏசியதை அவர் மறக்கவில்லை. உமக்குத் தகுந்த சிக்ஷை விதிக்கும்படி என்னைத் தூண்டி அனுப்பி னார். அவ் வுத்தரவைச் சிரமேற்கொண்டு உம்முடைய பங்களாவை அடைந்து ஹாலில் அமர்ந்திருந்தேன்.

நான்: சும்மா இருந்திருக்கக்கூடாதா? பாப்பாயி—கேவலம் வீடு கூட்டி—அவளை ஹிம்ஸை செய்வானேன்? என்னைச் சிக்ஷை செய்தால் அர்த்தம் உண்டு. ஆல்பா, உனக்குப் புத்தியில்லையா?

ஆல்பா: ஆம், எனக்குப் புத்தியில்லைதான். ஆனால் நான் செய்யக் கூடியது அப்பொழுது வேறு ஒன்றுமே இல்லாமல் போய் விட்டது. எனக்கும் இது விஷயத்தில் மனத்தில் புண்தான். வீடு கூட்டி ஹாலில் வந்து என்னைப் பார்த்ததும் 'ஐயையோ! பூதம்' என்றாள். அந்தச் சப்தத்தின் அலை என்னை எவ்விடத்தில் தாக்கு மென்று உனக்குத் தெரியும். சப்தம் என் பேரில் பட்டால் ஸ்வா தீன மற்றவனாவே னென்றும் உமக்குத்தெரியும். அந்தச் சப்தம் கேட்டதுதான் தாமதம். என் கால் ஓர் அடி எடுத்துவைத்தது; என் கை பாப்பாயிக்கு இரண்டு அடிகொடுத்தது. அவள் ஹோ, கொலையென்று அலறி விழுந்தாள். இதுதான் கதை.

நான்: "ஆல்பா! நிரம்ப நன்றாயிருக்கிறது, உன் கார்யமும் யோக்யதையும். திரும்பிப்போ பங்களாவுக்கு" என்று சொல்லிப் பிடரியிலிருந்த ஒரு திருகாணியைத் திருப்பிவிட்டேன். சாயங் காலத்தில் மேய்ச்சலிலிருந்து மாடுதிரும்ப நமது வீட்டிற்குள் நுழைவதுபோல் ஆல்பா என் பங்களாவுக்குள் நுழைந்தது. ஒரு வரும் வாய்திறக்கவில்லை.

'கோர்ட்டார் அவர்களே! இனி என்னை விடுவிக்கவேண்டி யதுதானே' என்றேன். அப்பொழுது ஜட்ஜின் முகம் மிகவும் குரூரம் கொண்டிருந்தது. பதிலாக, 'டாக்டர்வாளே! நடுத் தெருவில் உம்மைக் குற்றவாளி யல்லவென்று இட்லியில் உத்தரவு எழுதிக்கொடுக்க முடியாது. தஞ்சாவூருக்குப்போய்ப் பாக்கி விசா ரணைக்குப் பிறகுதான் தெரியும்' என்று எரிந்து விழுந்தார்.

"அடவியார்வாள், சுவாரஸ்யப்படவில்லையா? என்ன கொட் டாவி விடுகிறீர்களே."

"இல்லை ராயர்வாள். பாக்கி நடக்கட்டும்."

"மறுபடி தஞ்சாவூருக்கு வந்தோம். மறுபடியும் ஸெஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை. விடுதலை என்று ஒரே வார்த்தைதானே; விசாரணைக்கென்ன இருக்கிறதென்று கேட்பீர்கள் நீங்கள். அது தான் வேடிக்கை. என்னை மறுபடியும் ஸ்டேட்மெண்டு கொடுக்கும் படி ஜட்ஜ் உத்தரவிட்டார். நுங்கம்பாக்கத்தில் நடந்ததை யெல் லாம் எழுதிக்கொடுத்தேன். விசாரணைமுடிந்தது. ஜட்ஜ் ஜூரர் களுக்குச் சொல்லவேண்டியதை நீட்டி முழக்கிச் சொல்லாமற் சுருக்கமாக முடித்தார். 'நீங்கள் சாக்ஷியத்தை யெல்லாம் கேட் டீர்கள். நுங்கம்பாக்கத்தில் நடந்ததையும் பார்த்தீர்கள். இனி சந்தேகத்திற்கு இடமென்ன? டாக்டர் என்று மலைக்காதீர்கள். இவர் பெரிய பெயர்வழி. நுங்கம்பாக்கத்தில் நாம் பார்த்ததெல் லாம் ஹிப்னடிஸம்; தெருவில் மாஞ்செடி முளைக்கச் செய்வதைப் போன்ற கட்டுக்கதை. அதுகூடச் சரியல்ல. நாம் ஒருவரும் நுங் கம்பாக்கத்திற்கே போகவில்லை. இதெல்லாம் ஒரு தோற்றம். ஆகவே டாக்டர் சேதுராவைப் போன்ற மந்திரவாதிகளையும், யந்திரவாதிகளையும், ஸயண்டிஸ்டுகளையும் உலகினில் சுயேச்சையாய் விட்டிருப்பது, பாம்பை இடுப்பில் கட்டிக்கொண்டது போலாகும். ஸயன்ஸிற்குப் பாப்பாயி பலியிடப்பட்டிருக்கிறாள். இனி ஆலோசி யுங்கள்.'

"அதுவரையில் நான் குற்றவாளிக் கூட்டில் எனக்கென்ன பயமென்று அலக்ஷியமாக நின்றுகொண்டிருந்தேன். இவ்வார்த்தை களைக் கேட்டதும் வெடிகுண்டு விழுந்ததுபோல் திடுக்கிட்டேன். இருந்தாலும் விசை ஜூரர்களிடமல்லவா இருக்கிற தென்று கொஞ்சம் மனதைத் தட்டிக்கொடுத்துப் பார்த்தேன். தேறுத லடையும் வழியைக் காணோம். அதற்குள் ஜூரர்கள் உள்ளே வந்து நாற்காலிகளில் அமர்ந்தார்கள். கோர்ட்டார் அவர்கள் 'ஜூரர் களே! குற்றவாளியா அல்லவா?' என்று கேட்டார்.

'குற்றவாளிதான்' என்று பதில்.

'ஏகோபித்த அபிப்பிராயமா அல்லது—'

'ஏகோபித்த அபிப்பிராயம்தான்.'

என்காதில் விழுந்த வார்த்தைகளை நம்பக்கூடவில்லை. கழுத்தை நீட்டிக் காதை வளைத்துப் பார்த்தேன். ஜட்ஜானவர் 'நீர் பாப்பாயி யைக் கொலைசெய்ததாகக் கண்டு பிடிக்கப் பட்டிருக்கிறது. ஆனால் ஸயன்ஸின் மீதுள்ள மோகத்தால்—மூட மோகத்தால்—அன்புக் கண்ணை இழந்து, ஒரே எண்ணத்தின் வலைக்குள் சிக்கித் தடுமாற்ற

மடைந்த காலத்தில், ஆல்பாவின் மூலமாய்—வேண்டுமென்றல்ல, ஆராய்ச்சி தோரணையில்—இக்கொலை செய்திருப்பதால் உமக்குத் தீபாந்திர தண்டனை என்ற சிறிய சிக்ஷை விதிக்கப்பட்டிருக்கிறது. அந்தமான் தீவுக்கு மாற்றல்' என்று முடித்தார். எனக்கு மூச்சில்லை அப்பொழுது. மார்பு அடிக்கக்காணோம். கால் மரத் திருந்தது.........

"மறுபடி அந்தமான், அந்தமான் என்ற கூக்குரல். அந்தமானே என்று கண்விழித்துப் பார்த்தேன். அடவியார்வாள்; ஆல்பா, ஸெஷன்ஸ் கோர்ட்டு, குற்றவாளி ஒன்றையும் காணோம். நான் எனது பழைய நாற்காலியிலேயேதான் சாய்ந்தவண்ணமிருந்தேன். காலின்மீது சாயங்காலத்துத் தங்க வெயில் அடித்துக் கொண் டிருந்தது. வாசலில் என் சம்சாரம் நவராத்ரி கொலுசாமான் வாங்கிக் கொண்டிருந்தாள். என் பேரன் கிட்டு அந்த மான் அந்த மானென்று ஒரு பொம்மைக்குப் பிடிவாதம் செய்தான். அப் பொழுதுதான் விளங்கிற்று அவ்வளவும். இதுபற்றித்தான் பெரிய வர்கள் மத்யானத்தில் தூங்காதே என்று சொல்லுகிறார்கள் போலும்!

"அடவியார்வாள், இதுதான் மசோதா பிறந்ததற்குக் காரணம்" என்று நிறுத்தினர் சேதுராவ்.

"சரிதான் அதெல்லாம் டாக்டர்வாள். கயிறு திரிப்பது உங்கள் தொழில் அல்லவே; இதையெல்லாம் கவனித்தால் கொஞ்சம் அசம்பாவிதமாக........."

"அப்படித்தான் ஐயா இருக்கும். பகல் கனவு காலவரம்பு, நடைவரம்பு, இடவரம்பு இவைகளுக்குள்படவில்லை யென்பது சாதாரணமாக உங்களுக்குத் தெரியாதா? தள்ளும் கதையை. மசோ தாவை எடும்; பரிசீலனை செய்வோம்" என்றார் டாக்டர் சேதுராவ்.

# மரமல்லிகையும் பாரிஜாதமும்

கே. குருஸ்வாமி

“அம்மா, மாலை வேளையில் இந்தச் செவ்வானம் எவ்வளவு அழகாயிருக்கிறது பார்! நாள் முழுதும் வெயிலும் மேகத்தின் நிழலும் ஒன்றையொன்று துரத்தி விளையாடின. இப்பொழுதோ மேகங்களெல்லாம் ஒன்று கூடி மஞ்சள் நீர் குளித்துக்களிக்கின்றன. நம் சிவன் கோயில் கோபுரத்தின் பின் ஸூர்யனின் கிரணம் உருக்கி வார்த்த பொன்போல் பாய்கிறதே! அதோ பார் வயல்கள்! அறு வடையாகிவிட்டால் பின் அவைகளுக்கு அழகேது?”

இவ்வாறாகப் பாதி தனக்குள்ளும், பாதி தன் அன்னையின் செவியில் விழுமாறும் சொல்லிக் கொண்டிருந்தாள் ஜகதம்; பிறகு தான் நின்றிருந்த ஜன்னலை விட்டு மற்றொரு ஜன்னலண்டை போய், தெருவில் பையன்கள் ஆடிக் களைத்து வீடு செல்வதையும், வானில் நக்ஷத்திரங்கள் தோன்றுவதைப்போல் ஒவ்வொன்றாக வீட்டின் முன் விளக்குகள் தோன்றி அலங்கரிப்பதையும் நோக்கி நின்றாள்.

ஜகதாம்பாளுக்கு வயது பதினைந்து நிரம்பி விட்டது. அவள் ஹிருதயத்தினுள் இளங்காதல் கூடுகட்டிக் குயில்போல் நின்றது. அவள் முகம் அரும்பி அலர்ந்து திகழ்ந்த இன்ப மலரே போல் விளங்கியதில் என்ன ஆச்சரியம்? அவள் புக்ககம் செல்வதற்காகக் குறித்த நாளும் நெருங்கி விட்டதல்லவா? ரம்யமான தன் மனக் கோட்டையின் காந்தியில் ஈடுபட்டு, எதிர்காலம் எல்லாம் இருகரையும் புரண்டு இருமருங்கும் சோலைகளும் நகரங்களும் பொலிவுறுமாறு பாய்ந்து செல்லும் ஆறு போல் அழிவற்றுத் தன் கண்முன் தோன்றக் கண்டாள்; மயங்கி நின்றாள்.

“ஜகதம்! பூக்காரி வரும்போது இன்றைக்குக் கொஞ்சம் சேர்த்து வாங்கு. யாராவது இன்றிரவு வரலாம். ஸ்வாமி விளக்கையும் ஏற்றி வை. பொழுது போயிற்று” என்று எச்சரித்தாள் அன்னை.

மங்கையின் செவியில் இது யாதும் விழவில்லை; “அத்தான் வீட்டு வாசலில், அம்மா! பவளமல்லிகை ஒரு பக்கமும் மரமல்லிகை ஒரு பக்கமும் உண்டல்லவா? குழந்தையா யிருக்கும்போது

பார்த்தது; எத்தனை வருஷமாயிற்று? நன்றாக இன்னும் நினைவிருக்கிறது. இந்த நாளில் அந்த இரண்டும் பூத்துச் சொரியும்!'' என்றாள் ஆவலுடன்.

''ஆமாம்! பூவைப்பற்றியும் மாலையைப்பற்றியும் நினைத்துக் கொண்டேயிருந்தாயானால், குழந்தாய், நாளைக்கு அகத்துக்காரியமெல்லாம் எப்படிச் செய்வாய்? உன் புக்ககத்திலோ ஒத்தாசைக்கு ஒரு பிராணி கிடையாது. உன் அத்தான் வீடு திரும்பியதும், 'மல்லிகையைப் பார்!' என்றால் அவர் வயிறு நிரம்பிவிடுமா?''

''அதெல்லாம் நான் பார்த்துக்கொள்வேனம்மா. அத்தான் வீடு சின்னதாயிருந்தாலும் எத்தனை அழகு! சின்னத் தோட்டம். அதைத் தாண்டினதும் குளத்துக்குப் படிக்கட்டு. படிக்கட்டு ஓரமாய்த் தாழம்பூப் புதர். அப்படித்தானே, அம்மா?''

''இதையெல்லாம் எப்போது பார்த்தாய்? படம் எழுதினது போல் வர்ணித்து விட்டாயே!''

''என்னை நீ ஒரு தடவை ப்ருஹத்தின் அகத்தில் விட்டிருந்தாயல்லவா? எனக்கென்ன ஆறு வயதோ, ஏழு வயதோ இருக்கும். அத்திம்பேர் 'காம்ப்' போகும்போது ஒரு நாள் என்னையும் அழைத்துக்கொண்டு போனார். 'உன் அத்தானுக்கு வாழ்க்கைப் பட்டாயானால் இதெல்லாம் உன் ராஜ்யம், ஜகம்' என்றார் என்னைப் பார்த்து. அத்திம்பேர் என்னை எப்போதும் 'ஜகம்' என்று தான் கூப்பிடுவார். அப்பொழுது அத்தையிருந்தாளங்கே......'' என்று சொல்லிக்கொண்டே ஜகதம் விளக்கையெல்லாம் ஏற்றிப் பூவாங்கி வைத்துவிட்டு, மறுபடியும் கவியும் இருளில் வாயிற்பக்கம் பார்த்தாள்; ''அம்மா! நம்மகத்துப் பக்கம் யாரோ வருகிறாற்போலிருக்கிறது. அதுயார்?...காமுதான். காமு வருகிறாளம்மா'' என்றாள்.

''வேலையென்ன அவளுக்கும் எனக்கும்? மறுபடியும் புருஷன்காரன் அவளைக் 'கவனித்திருப்பான்' போலிருக்கிறது. சொல்லியழ என்னிடம் வருவாள். ஆனால், பார்த்தா லென்னவோ அங்கலாப்பாய்த்தானிருக்கிறது, பாவம்!'' என்று சொல்லிவிட்டுப் பார்வதியம்மாள் வேலையின்மேல் கவனமாய்ச் சமையலறைக்குள் போய் விட்டாள்.

காமு சற்று வயது முதிர்ந்தவள். லக்ஷணமில்லை. புடைவை யுடுத்தியிருந்தது அலங்கோலமாய்த் தானிருந்தது. ''ஆ, இண்ணிக்கி எவ்வளவு எறுக்கமாயிருந்தது! மூச்சுத் தெணறித்து. இப்போதான் வாயுபகவான் கொஞ்சம் மனஸு வெச்சு ஸ்வாஸம் விட ஆரம்பிச்சிருக்கார்....என்ன ஜகதம், அம்மா காரிய மாயிருக்

காளோ ?'' என்று கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தாள் காமு அம்மாள்.

"ஆமாம் ; உட்காருங்கள். சமையல் ஆகவேணும் என்கிற தாக அம்மா இப்போதுதான் உள்ளே போனாள். காரியமெல்லாம் இப்போது அவள் தான்.''

"ந்யாயந்தானே, குழந்தே? இன்னமே அவதானே ஒண்டியா எல்லாம் பண்ணியாகணும். நோக்குந்தான் காரியம் இப்போ என் னமா ஓடும்? முகூர்த்தம் வெச்சிருக்குன்னு சொன்னா ; வர வெள்ளிக்கிழமையோன்னோ? உன்நாள் அது. இன்னிக்கி நீ சிறு பொண்; நாலு நாள்ளே ஒரு ஆத்து யஜமானி!''

மேலே அவள் வீட்டுச் சம்பவங்களைப் பற்றிக் கேட்கக் கூசின வளாய், ஜகதம் சற்று மௌனமாயிருந்தாள். ஆனால் தானாக ஆரம் பித்து விட்டாள் காமு அம்மாள்: "இப்போ எல்லாமென்னமோ நாளெல்லாம் நன்னாத்தானிருக்கு. நேத்தெக்கி நடந்தாப்பலே நென விருக்கு நேக்கு என் தொரக்ஷி. நல்ல மழை நாள். திடீர்னு பிடிச் சுண்டுது அட மழை. அப்போ, காத்து வேறே பலம்மா. உள்ளே மந்த்ரம் பாடியாறது—ஆசீர்வாதம். மாட்டுக் கொட்டில் மழேலே ஒக்காந்து போச்சுன்னு ஓடி வந்து சொன்னார் மச்சினர். மின்னலா வது மின்னல்! இடியும் கொஞ்சமாவா யிடிச்சுது? பக்கத்திலே எங்கேயாவது இந்த இடி நிச்சயமா விழுந்திருக்கணும்னு மத்தீலே மத்தீலே பேசிக்கிண்டா. இதெல்லாம் ஒரு ஸூசகமாக்கும், ஒரு சகுனமாக்கும்னு அப்போ எட்டித்தா என் புத்திக்கி?....இந்தப் பழங்கதெயெல்லாம் நோக் கென்னத்துக்கம்மா? நீ மகாராஜியா யிருப்பே...இது தான் முகூர்த்தப் பொடவெயோ?'' என்று பாதி கட்டுப் பிரித்துச் சாய்வு நாற்காலியின்மேல் வைத்திருந்த புடைவை யைப் பார்த்துக் காமு கேட்டாள். "ஆமாம்'' என்று சொல்லி ஜகதம் புடைவையைத் தலைப்பும் உடலும் தெரியும்படி மடிப்புப் பிரித்துக் காட்டினாள்.

"ரொம்ப நன்னாயிருக்கே! நோக்கு ரொம்பவும் பொருந்தி யிருக்கு, அம்மா ; நாஸூக்காயிருக்கு'' என்று 'ஸர்டிபிகேட்' கொடுத்துவிட்டுத் தனக்காகத் தன் கல்யாணத்தில், பேசியிருந்ததை விட இருபத்தைந்து ரூபாய் அதிகம் போட்டுத் தன் புருஷன் புடைவை யெடுத்துக் கொடுத்ததைப்பற்றிச் சொன்னாள்.

இதைக் கேட்டதும் ஜகதத்துக்கு ஒரு விதமான ஆச்சரியம் உண்டாயிற்று ; தயங்கிக்கொண்டே, "உங்களை நான் ஒன்று கேட்

கலாமா? அந்தக்காலத்தில்....உங்கள்மேல் அவ்வளவு......பிரியமா அவருக்கு?'' என்ருள்.

''ஸந்தேஹமென்ன? அந்த நாள்ளே நான் அழகுன்னே யாரும் சொல்லுவா. ஒரு நாள்கூட ஆத்துக்குத் தாமஸமா வரமாட்டார். கண்ணுக்குக் கண்ணுத்தான்-உள்ளங்கையிலே வச்சிக்கிண்டு தாங்கினர்.''

"ஆனல்...உங்களுக்கும்... அவர்மேல் பிரியம் இருந்ததா?''

"பிரியத்துக்கு ஏன் கேக்கணும்? ஒன் மாதிரி, நன்னு விபரந் தெரிஞ்சப்பறந்தான் நேக்குங்கல்யாணம். ஏ, அப்பா, ஓடம்பே பூரிச்சுப் போச்சே! எத்தனை குதூகலம், எத்தனை கர்வம் நேக்கு அப்போ!''

"ஆனல் ...இப்படி, இதே மாதிரி, தோன்றிற்று? அவர் மேலிருந்த பிரியத்தால் உலகத்திலெல்லாம் ஒரு தனி களை, தனி சோபை உண்டாகி ஜ்வலிக்கிறது போல் தோன்றிற்று?''

"ஆமாம், நீ சொல்றது போலத்தான், ஒரு தனி களை, தனி தேஜஸ், ஊரெல்லாம் என் கண்ணுக்கு அப்போ'' என்று காமு பெருமூச்செறிந்தாள்.

"உங்களுக்குப் பரஸ்பரம் இருந்த அன்பினுலா?''

"ஹா ஆமாம்!''

"ஆனல், இப்பொழுதோ?''

"என்ன?''

"இப்பொழுது?''

இதுவரை பேசியதால் காமுவின் முகத்தில் தோன்றிய இனிமையும் தண்மையும் கணத்தில் மறைந்தன. வெறுப்பினுலும் கோப வெறியினுலும் முகம் கடுகடுத்தது.

"என்ன சொன்னே? லோகததுலே நரக வேதனேன்னு வேறே கிடையாதுன்னு, கிடையாதுதான். ஆமாம், எலியும் பூனையும் தான். இதோபார்!'' என்று கூறினவள் தன் மேற்கையிலிருந்த வெட்டுக் காயமொன்றைத் திறந்து காண்பித்தாள். தன் மார்பினருகிலும் காண்பிக்கப்போகும் ஸமயத்தில் ஜகதம் பயந்தவளாய், "வேண்டாம், வேண்டாம்!'' என்று அலற, "ஒண்ணுமில்லே. போனவாரம் கெடச்சதைத்தான் காட்லாமின்னு நெனச்சேன்'' என்ருள் காமு.

"ஓ, நான் அதைப் பார்க்கவேண்டாம்; என்ன கொடுமை!'' என்று கூறி ஜகதம் யோசனையிலாழ்ந்தாள். "அன்பிருந்தது

இப்படியா முடியும்? நேசமும் அழிந்து, கடைசியில் எல்லா இன்பமும் குலையத்தானு இவ்வளவு பாவனையும்?.........அதெப்படி நேர்ந்ததம்மா? குடியினலோ? அல்லது அவர் கவனத்தை வேறு எவளேனும் கவர்ந்து விட்டாளா?''

"அப்படியெல்லாம் ஒண்ணுமில்லே. ஏதோ ஜாடா குடி கிடையாதுன்னு மாத்ரம் சொல்ல முடியாது; அவ்வளவுதான்... வாஸ்தவத்திலே என்னன்னு, கொஞ்சங் கொஞ்சமா அதுவா அப்படிப் போயிடுத்து.''

"ப்ரியம் எல்லாம் மாறி, வெறுப்பா?''

"ஆமாம். காரணம் என்னமோ திட்டமாச் சொல்லத் தெரியல்லே நேக்கு. ஆத்துக்காரருந் தானும், ஏதோ, கதேலே படிக்கிறுளே, அந்தமாதிரீன்னு நெனச்சூட்ரது எளசிலே; பாட்டும் பூவும் கொஞ்சறதுமாயிருக்கப்போறேம்னு; கிளிப்பிள்ளே யாட்டமா ஜாஸ்தி எதிர்பாத்தா, ஜாஸ்தி ஏமாத்தம்தான். எல்லாருக்கும் நாளடவிலே விஷயம் புரியறது, கொஞ்சங் கொஞ்சமா. அப்புறமா, 'வேண்டாத பொண்டாட்டி கால் பட்டாக் குத்தம், கைபட்டாக் குத்தம்.' முத்திப்போனு, விடிஞ்சேந்திருந்தா சண்டையும் பூசலும் தான்.''

"அப்படியோ?...ஸரித்தான்.''

"மொதல்லே, ஆசையும் பாசமுமா இருக்கிறபோது, கண், லோகத்தை நேராப் பாக்கவே பாக்காது. எல்லாம் ஸ்வப்பனத்திலே காண்றுப்பலெத்தான். முழிச்சிக்கிண்டா மாயமாப்போய்டும்! குடிமாதிரித்தான்னு வெச்சுக்கோயேன். வெறி தெளிஞ்சதும், அப்போ தலெ வேதனே பண்றுப்பலே, இப்போ, இப்போ மனஸு வேதனே பண்றது; ஆத்மா புழுவாத் துடிக்கறது....அம்மா வெளீலெயே வரக்காணுமே? என்ன சமயல் பண்று இன்னிக்கி? நான் போய்ப்பாக்கறேன்...இந்தா, பொடவெயெ மடிச்சுவை. பூவெல்லாம் இன்னும் தொடுக்கல்லே போல்ருக்கே'' என்று சொல்லிக் கொண்டு காமு உள்கட்டிற்குள் நுழைந்தாள்.

காமு அம்மாளே, "உள்ளே போங்கள்'' என்று மரியாதைக்குச் சொல்லக்கூட ஜகதத்திற்கு நா எழவில்லை. வாங்கின உதிரிப்பூ தாழ்வாரத்தின் ஓரத்தில் அப்படியே கிடந்தது. கூடத்து விளக்கைத் தூண்டிவிட வேண்டுமென்பதையும் மறந்தாள். அவள் மனத்தில் இருள்போல் உயிரின்றி, உருவின்றித் துயரம் கவிந்து கொண்டது.

அண்டை வீட்டிலிருந்து பெண்களின் மெல்லிய குரலில் பாட்டு, வீணையின் ஒலியுடன் சேர்ந்து கேட்டது. பிறகு அதுவும் நின்றது. 'க்ரீச்' என்று வண்டியொன்று வாசலில் வந்து நின்றதையும் அவள் கவனிக்கவில்லை; அதிலிருந்து இறங்கி ஒரு சிறுவன் வெகு வேகமாய் உள்ளே ஓடி வந்ததையும் அவள் பார்க்கவில்லை. சிறுவனுக்கு வயது சுமார் பதின்மூன்றிருக்கும். தந்தம்போல் மெல்லிய உடல் அழகும் சுறுசுறுப்பும் நிறைந்த அவயவங்கள்; புன்னகை தவழும் முகம். ஜகதம் கவலையினால் சோர்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்ததும் சிறுவன் படியின்மேல் சற்று நின்றான். அவளும் தலை நிமிர்ந்து அவனைப்பார்த்தாள்; திடுக்கிட்டு மெய்சிலிர்த்தாள். பிறகு வீணே ஏமாந்தவள் போல், "நீதானா, ஸுந்தரம்! அதென்ன அப்படி நின்றாய்? வா, எப்போது வந்தாய்? எப்படி வந்தாய்? கூட யார் வந்திருக்கிறார்?" என்று கேட்டாள்.

"அதெல்லாம் அப்றம். நீயேன் இப்போ இப்படி ஒக்காந்துகிண்டிருந்தே?" என்று அவள் சற்று முன் உட்கார்ந்திருந்ததைப் போல் முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு ஸுந்தரம் உட்கார்ந்து காட்டினான்.

"தடியா! பரிகாசம் பண்ணுகிறாயா? போக்கிரித்தனம்!" என்று ஜகதம் அவனைப் பிடிக்க முயன்றாள்.

"அது போகட்டும். என்னைக்கண்டதும் தூக்கி வாரிப் போட்டுண்டு முழிச்சயே. அது என்னத்துக்கு; சொல்; இப்பவே சொல்" என்று பையன் அவளுக்ககப்படாமல் பின்னால் குதித்துக் கொண்டு கேட்டான்.

"அதுவா? சாயல் அப்படியேயிருந்தது. இருட்டிலே உயரம் கூட முதலில் ஸரியாய்த் தெரியவில்லை. தத்ரூபம். அவர்தானுக்கும் என்று தோன்றிற்று. என்னை யறியாமல் திடுக்கிட்டுப் போனேன். அப்படியேவா உரித்து வைத்திருக்க வேண்டும்?"

"இதானா ஸமாசாரம்? இப்பொ தெரிஞ்சது,—என் கன்னத்திலே கையை வெச்சுக்கிண்டு யோசனேலே முழுகிப் போய்ட்டேனு. அம்மா, சீதையம்மா! கவலெப்பட்டு நொந்து போகாதெங்கோ, அசோக வனத்திலே. ராமச்சந்திரமூர்த்தி கிட்டே போய்ச் சேந்துடலாம். இன்னும் அஞ்சு, இல்லே, நாலுநாள் தானிருக்கு. நானிருக்கேன். நேராய்க் கொண்டுபோய்ச் சேக்கறேன். அதுக்கேன் இத்தனை சோகம்?" மிகவும் அனுதாபப் படு

பவன் போல் ஸுந்தரம் நடித்துவிட்டுப் பிறகு கடகடவென்று சிரித்தான்.

"நேற்றைய பயல். எல்லாம் தெரிந்த கிழவனைப்போல் பேசு கிறதைப் பார்!...ஊரிலே என்ன சேதி? எப்போது புறப்பட்டாய்? யார் கொண்டு வந்து விட்டார்?" என்று ஜகதம் தன் சிறிய அத்தானும் மைத்துனனுமான ஸுந்தரத்தைக் கேட்டாள்.

"அதெல்லாம் அப்புறமாகட்டும். அண்ணு ஒரு ஊஞ்சல் புதிசாப் போட்டிருக்கான். கொல்லேலே தணிஞ்ச மாமரம் ஒண்ணு இருக்கோல்லியோ; அதிலே மாட்டியிருக்கு. மாடியுள்ளுலே பட மெல்லாம் பெரிசா வாங்கி மாட்டியிருக்கான். நோக்குப் புடிக்கும்னு, அதென்ன—ஸகுந்தலை ஜனனம், அப்றம், அர்ஜுன ஸந்யாஸி— ஸுபத்ரை, இந்த மாதிரி. மாடீலே போய்ப் படங்களைப் பாக்றதும், கீழே யிறங்கி ஊஞ்சலை ஆட்டிப் பாக்றதும், ரோஜாப்பதியன் எவ்வளவு துளுர் விட்டிருக்கூன்னு பாக்ரதுந்தான் அண்ணுக்கு வேலை நாள்பூரா. வேலக்காரி சவுந்தரம் இப்போ வரதில்லே. அவ மருமகளாம், காவேரிதான் வரா. அவளுக்கு ஓங்கிட்ட இப்படி நடந்துக்கணும், அப்படியிருக்கணும்னு வாயோயாதெ உத்தரவு தான். அவளெப் பூத்தொடுக்கக் கத்துக்கணும் நன்னுன்னு சொல்லி வச்சிருக்கான். என்னென்னமோ ஏற்பாடு! நீயோன்னு தூணைக் கட்டிக்கிண்டு உம்ணு மூஞ்சியா ஒக்காந்திருக்கே!" பையன் ஒரு வாறு பேசி ஓய்ந்தான்.

ஜகதம் காதில் இவன் வார்த்தைகளில் பாதி விழுந்தது, பாதி விழவில்லை; தன் மனோராஜ்யத்திலேயே பின்னும் ஆழ்ந்தவளாய் நின்றுள். பழைய ஆசை நினைவுகளும் விருப்பங்களும் முன்னிலும் பலமாகத் தோன்ற, அவள் முகத்தில் புதியதோர் ஒளி பரவலாயிற்று. சற்றுத் தூரத்திலிருந்து ஓர் ஊர்வலத்தின் மேளவாத்யம் கம்பீரமாகக் கேட்டது. பையனும் குழலை யொத்த தன் குரலில் ஒரு பாட்டினடியைச் சொல்லிச் சட்டென்று நிறுத்தினுன்; விஷமக் குறிப்புத் தோன்ற நகைத்தான். காமு அம்மாளின் மொழிகளால் தோன்றிய இருண்ட உருவங்கள் அவள் மனத்தினின்று ஒவ்வொன்றுய் மெல்ல நழுவின.

ஜகதம் கூடத்தின் மேல்புறமிருந்து ஏதோ சிறுசப்தம் கேட்கச் சட்டென்று அப்பக்கம் திரும்பினுள்; திறந்திருந்த பூஜை அலமாரியிலிருந்து ஒரு பூ கீழே விழுவதையும் தீபத்திலிருந்து ஒரு சுடர் நக்ஷத்ரம் போல் பாய்வதையும் கண்டாள். உள்ளே காமு அம்மாள் வீடு செல்ல விடை பெறுவது அவள் காதில் விழுந்தது.

"அது போகட்டும், ஸுந்தரம். ஆத்து வாசலில் பாரிஜாதமும் மரமல்லிகையும் பூக்க ஆரம்பித்து விட்டதோ? சொல்" என்று கேட்டுக்கொண்டே வழியைவிட்டு ஜன்னலண்டை கடுகிப் போய்நின்றாள் அப்பெண்.

"பூ வென்னமோ நெறயத்தான் பூக்கறது. ராத்ரி யெல்லாம் கம்முன்னு வாஸனே. ஆனல் போது விடிஞ்சா, ஒண்ணுவிடாதே பொறுக்கி எங்கேயோ போறது. எங்கேன்னு மாத்ரம் சொல்ல மாட்டேன்."

ஜகதத்துக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு நிமிஷத்தில் அவளுடைய உள்ளம் எண்ணாத தெல்லாம் எண்ணித் தவித்தது. 'அந்தப் பூ எங்கே போகும்?...' இதற்கு விடையை யறிய அவள் மனம் பதைத்தது.

"அதைத்தான் சொல்லேன். சொன்னல் ஒரு புதுக் கதைப் புஸ்தகம் தருவேன். சொல்" என்றுகேட்டாள் ஜகதம்.

"அண்ணா படிக்கற உள்ளுலே ஒன் போட்டோ மாட்டி யிருக்கோன்னோ?......மேலே சொல்ல மாட்டேன். இந்தா லெட்டர். வேணுப்பாரு; நான் அம்மாமியைப் பாக்கணும்" என்று சொல்லி மறைத்து வைத்திருந்த ஒரு கடிதத்தை அவள் மடியில் போட்டுவிட்டு ஸுந்தரம் உள்ளே ஓடிவிட்டான்.

ஒரு பெரிய பயம் நீங்கினவளைப்போலப் பெருமூச்சுவிட்டாள் ஜகதம். உள்ளம் பூரிக்க, மார்புவிம்முற, மயிர்க் கூச்செறிய நின்றாள். அவளுடைய தூயமனதில் அப்பொழுது மூண்ட கனலைத் தணிவித்துக் குளிர்வித்தது அவள் கண்ணிலிருந்து அரும்பிக் கன்னத்தின் மேல் ஊர்ந்த மகிழ்ச்சி நீர்த்துளியேயாம் என்று நாம் சொல்லவும் வேண்டுமோ?

# குரங்குச் சன்யாசி கதை

## (ஆதிச்சுப்பட்டான ஜாதகம்)

### பேஞ

மூன்னெரு காலத்திலே பிரமதத்தன் காசியில் ஆண்டு கொண்டிருக்கையில், காசியிலுள்ள ஒரு பிராமணகுலத்திலே போதிசத்துவன் வந்து பிறந்தான். வயது வந்ததும் அவன் தக்ஷ சிலைக்குச் சென்று அங்கே கல்வியை முற்றும் கற்றான். பிறகு சன்னியாசியாகிச் சகலமான சக்திகளையும் சித்திகளையும் பெற்றான். அவனிடம் கல்வி கற்க ஏராளமான சீஷர்கள் வந்து கூடினார்கள். அவர்களுடன் இமயமலைச் சாரலில் அவன் வாழ்ந்து வந்தான்.

அங்கே வெகு காலம் வசித்துக்கொண்டிருந்தான். பிறகு ஒரு நாள் உப்புப் புளி முதலிய மளிகைச் சாமான்கள் வாங்குவதற்காக, மலைச் சாரலிலிருந்து இறங்கி மலையோரத்திலே எல்லைப்புறத்திலே யுள்ள கிராமம் ஒன்றை அடைந்தான். அதிலே பர்ணசாலை யொன்றில் தங்கினான். அவனும் அவன் சீஷர்களுமாகப் பிக்ஷை எடுக்க வெளியில் போயிருக்கும் தறுவாய்களில் எல்லாம், விஷமக் குரங்கு ஒன்று அக் குடிசையில் புகுந்து அங்குள்ளவைகள் எல்லா வற்றையும் தலைகீழாக்கிவிடும். குடங்களிலிருந்து ஜலத்தைக் கொட்டும்; பானைகளை உடைக்கும்; அவர்கள் அக்கினி வளர்த்து வந்த சிற்றறையையும் அல்லோல கல்லோல மாக்கிவிடும். இவ்வாறு அது செய்துகொண்டு வந்தது.

மழைக்காலம் முடிந்ததும் அந்தப் பிக்ஷுக்கள் தம் இருப்பிடத் துக்குத் திரும்பவேண்டுமென்று எண்ணினார்கள். ஏனென்றால், 'இப்பொழுது மலைகளிலே இலைகளும் பழங்களும் முதிர்ந்து பழுத் திருக்கும்' என்று அவர்கள் எண்ணினார்கள். ஊரார்களிடம் விடை பெற்றுக் கொண்டார்கள்.

அப்பொழுது அவ்வூரார், "நாங்கள் நாளைக்குப் பர்ணசாலைக்கு வந்து பிக்ஷையிடுவோம். நீங்கள் போகுமுன் உணவு உண்டு விட்டுப் போகவேண்டும்" என்று சொன்னார்கள். அதன்படி, மறு நாள் அவர்கள் அங்கே உண்ணுவதற்கேற்ற நல்ல உணவுகளையும் குடிப்பதற்கேற்ற நல்ல பானங்களையும் நிறைய எடுத்துக்கொண்டு

சென்றார்கள். அதைப் பார்த்துக் குரங்கு, "இந்த ஜனங்களை ஏமாற்றி, அவர்கள் எனக்கும் அன்னம் இடும்படி செய்து விடுவேன்" என்று தனக்குள்ளே எண்ணிக்கொண்டது. ஆகவே பிச்சை கேட்கின்ற சாதுவைப் போல் வேஷம் போட்டுக் கொண்டது. பிக்ஷுக்கள் நின்று கொண்டிருந்த இடத்துக்கு அருகில் போய் நின்று கொண்டது. சூரியனைப்பார்த்து ஜபம் பண்ணுவதுபோல் பாசாங்கு செய்து கொண்டிருந்தது. அதைக் கண்ட ஜனங்கள் 'ஆசாரசீலர்களோடு கூட வாழ்பவர்கள் தாமும் ஆசாரசீலர்கள் ஆகிவிடுகிறார்கள்' என்று நினைத்து இவ்வாறு சொன்னார்கள்:

"எத்துணை தாழ்ந்த பிராணியே யாயினும்
ஏய்ந்திடு சீல மிலதாகுமோ?
சுத்தமாய்க் கேவல வானர மும்செபம்
சூர்யனைப் பார்த்திங்குச் செய்குதுபார்!"

இம்மாதிரியாக அந்த ஜனங்கள் குரங்கின் குணங்களைப் புகழ்ந்து பேசினார்கள். ஆனால் அதைக்கண்ட போதிசத்துவன், "விஷமக் குரங்கு செய்த செயல்களைப் பற்றி நீங்கள் ஒரு சிறிதும் அறியீர்கள். ஆகையால்தான், துளிகூடப் புகழுக்கு உரியதல்லாத அதைப் புகழ்ந்து கொண்டாடுகிறீர்கள்" என்று பதில் சொன்னான். மேலும் சொன்னான்:

"இந்தப் பிராணியை ஏத்துகி றீர்மெத்த
இன்னதன் துர்க்குணம் நீரறியீர்
முந்தியித் தூய நெருப்பைக் கெடுத்துப்பின்
மோதிக் குடத்தை யுடைத்ததுவே."

அது அப்படிப்பட்ட கெட்ட குரங்கு என்று கேள்விப்பட்ட உடனே ஜனங்கள் தடிகளால் அதை அடித்துப் புடைத்தனர்; மண்ணாங்கட்டிகளை அதன்மீது வீசி எறிந்தனர். பிறகு பிக்ஷுக்களுக்குப் பிக்ஷை அளித்தனர். அந்த அறிவுடையோர்கள் இமய மலைக்குத் திரும்பிச் சென்றனர். அங்கே இடைவிடாது தவம் செய்து பிரமலோகத்தை அடைந்தனர்.

[இவ்வாறு பேசி முடிந்ததும் குரு முன் பிறப்பை அறிவித்தார்: "இந்தப் பாசாங்குக்காரன்தான் அந் நாளில் குரங்காயிருந்தான். புத்தருடைய சீஷர்கள்தாம் மலையில் வாழ்ந்து வந்த அறிவுடையோர்கள். நான்தான் அவர்களுடைய தலைவன்."]

# உபாத்தியாயர் பகுதி

## குருடர்கள் கல்வி

ஒ. ப. தேசிகன்

வீதி முனைகளில் நின்று கொண்டு பிக்ஷை யெடுத்து வயிறு வளர்ப்பதைத் தவிரக் குருடர்களால் யாதொரு நல்ல காரியமும் செய்ய முடியாது என்றதோர் தவறான எண்ணம் பெரும்பான்மை யான ஜனங்களிடையே பரவி யிருப்பது மிகவும் ஆச்சரியகரமாகவே யிருக்கிறது.

பாமர ஜனங்கள் அந்தகர்கள் என்ற மாத்திரத்திலே அவர்க ளனைவரும் தரித்திரம், தள்ளாதவர், வயது முதிர்ந்தோர், அறி வீனர் என்று பலவாறு பொருள் கொண்டு நாடுகின்றனர். அந்தகர் களின் ஏழ்மையையும், அஞ்ஞானத்தையும் குறித்து அவ்வாறு மக்கள் கருதுவது உண்மையிலேயே சரியாக இருக்குமாயின், அஃது எந்தவிதத்திலும் பார்வை யிழந்த துர்ப்பாக்கியசாலிகளின் குற்றமேயாகாது. அதற்கு மாறாக அக்குற்றம் எண்ணிக்கையில் பெரும் பான்மையாகவுள்ள ஜன சமூகத்தையே சார்ந்ததாகும். குருடன் ஏழ்மைத்தனத்தில் வருந்தினால் அவனை அந்நிலையிலே கிடந்துழலுமாறு செய்வித்தது ஸமூகந்தான். ஏனெனில் அவனை வீடு வீடாகவும், வாயில் வாயிலாகவும், ஊர் ஊராகவும், பட்டணம் பட்டணமாகவும் அலைந்து, பயங்கரமான வறுமையை யெதிர்த்துப் போராடி வயிறு வளர்க்கவும், மனிதர்களின் இரக்கமற்ற— கொடிய—இழிவு வசனங்களையும் கடுஞ்சொற்களையும் கேட்டு மனம் புண்ணாகி வருந்துமாறு அத்தகைய நிர்ப்பந்தமான நிலைமைக்குட் படுத்தி வைத்திருப்பதும் இக்கொடிய ஸமூக வாழ்க்கை முறையே யாம்! உண்மையில் அங்கஹீனர்களின் சம்ரக்ஷணையை யேற்றுக் கொள்ள வேண்டிய பொறுப்பு ஸமூகத்தைச் சார்ந்ததே யன்றோ?

அன்றியும் தண்ணீரைக் கண்டவுடன் மிக்க ஆவலுடன் அதில் நீந்தி விளையாடிக் களிப்பதற்கு விழைந்து செல்லும் ஓர் வாத்துக் குஞ்சைப் போன்ற அத்தகைய சந்துஷ்டியான மனோபாவத்துடன் யாசகத் தொழிலில் அவர்கள் தம்மை யீடுபடுத்திக் கொள்கின் றனரா? ஆனால் விசாலமான இவ்வுலக வாழ்வில் அஃதொன்றைத் தவிர அவர்கள் வேறு எந்த வழியைத்தான் பின்பற்றுவது?

மனிதனுனவன் தன்னைச் சுற்றிலுமுள்ள நிலைமைகளாலேயே பெரிதும் இயக்கப்படுகிறான். மற்றவர்கள் அனைவருக்கும் எளிதில் கிடைக்கக் கூடிய கல்வி வசதியானது குருடர்களுக்கு மட்டில் மறுக்கப்படும் போது, அவர்களுடைய அறிவுச் சக்தியை விளக்கம் செய்வதற்கு யாதொருவிதமான ஸாதனத்தையும் அமைத்துக் கொடுப்பதற்குச் சமூகமாவது அரசாங்கமாவது முன் வராமலிருக்கும் வரையிலும்—அந்தகர்களைத் திருஷ்டியுள்ள மனிதர்களைக் காட்டிலும் எவ்விதத்திலும் தாழ்ந்தவர்களென்று நினைப்பது முற்றிலும் தவருகும். தங்களிடம் இயற்கையாகவே அமையப் பெற்றிருக்கும் தேகபலத்தையும், புத்திநுட்பத்தையும், திறமையையும் உபயோககரமான வழியில் பயன்படுத்துவதற்கு, தகுதியான கல்வித் திட்டத்தின் வாயிலாகவும் இதர சாதனங்களின் வாயிலாகவும் அவர்களது அறிவாற்றல்களை முன்னுக்குக் கொண்டுவரும் வகையில் அவர்களுக்குச் சந்தர்ப்பம் அளிக்கப்படுமாயின், அப்பொழுது குருடர்களென இழிவாகக் கருதப்படும் மக்கள் முழுப்பார்வையும் பெற்று இறுமாப்படைந்திருக்கும் நம்மவர்கள் அடைந்திருப்பதாகக் கருதும் உயர்நிலையை எளிதாக எய்திவிடுவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

மனிதவர்க்கத்தில் குருட்டுத்தனம் என்னும் இருள் வாழ்க்கை தோன்றிய நாள் முதல், அதன் கொடுமைகளை மற்றவர்களைக் காட்டிலும், அதனை யனுபவிக்கும் துர்ப்பாக்கியம் பெற்றோரேனும் உணர்ந்திருக்கிருர்கள். துன்பமயமான இவ்வுலக வாழ்க்கையில் தம்முடைய நிலைமை கொடியதினுங் கொடியதா யிருப்பதை யெண்ணி அவர்கள் கலங்குகின்றனர். அவர்களை யறிந்தோர் அவர்களை அலட்சியம் செய்கின்றனர் ; நண்பர்கள் அவர்களைவிட்டு விலகி அப்பால் செல்கின்றனர்; இதனை உணர உணர அவர்களது மனோவேதனை அதிகரிக்கிறது. தாம் எந்நேரமும் தனிமையாகவே யிருக்கவேண்டி யிருப்பதையும், பிறருக்குத் தாம் எப்பொழுதும் அடிமைப் பட்டிருப்பதையும், பிறருடைய துணைவலி எந்நேரத்திலும் தமக்கு இன்றியமையாததாக இருப்பதையும் நினைக்க அவர்களது மனம் பதைக்கிறது.

அன்றியும் லௌகிக வாழ்வில் பலர் கூடி யின்புற்றிருக்குமிடங்களில் அவர்களது மத்தியில் பழக நேருங்காலங்களில் கூட ஜனங்கள் குருடனை வேண்டுமென்றே புறக்கணித்து விடுகின்றூர்களாதலின், அவன் தனது வீட்டிலேயே தனித்திருப்பதைக் காட்டிலும் அதற்கு வெளியில் சஞ்சரிப்பதும் எவ்விதத்திலும் தனக்கு இன்பம் பயப்பதாயில்லை யெனினும், ஓரளவு மனோநிம்மதியையும்

ஆறுதலையும்கூட அளிக்கக் கூடியதாயில்லை யென்பதை யெண்ணிச் சித்தங் கலங்குகின்றான். இத்தகைய காரணங்கள் பலவற்றாலும் அவன் தனது வீட்டில் பொழுதுபோக்குவதையே—அதாவது காலத்தைக் கடத்துவதையே—சிறந்ததென்று கருதுமாறு நேரிடுகின்றது. நாளடைவில் ஒரே ரீதியான இவ்வாழ்க்கையும் வெறுப்பையளிக்கக் கூடியதாகவும், சந்துஷ்டியற்றதாகவு மிருப்பதாக அவனுக்குத் தோன்றுகிறது.

### 'ப்ரேயில்' அக்ஷரங்கள்—குருடர்களின் கதிமோக்ஷம்

குருடர்களாயிருப்பவர் தம்மை மூடியிருக்கும் இருள் திரையை விலக்குவதற்கு ஓரளவு கல்விப் பயிற்சியேனும் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டால் அது அவர்களுக்கு வாய்க்கக் கூடிய பெரும் பேறுகளில் ஒன்றாகும். ஆனால் அத்தகைய அரும் பெருமையும் பாக்கியமும் ஒரு சிலருக்குக் கூட வாய்ப்பதில்லை. புற உலகத்துடன் பேச்சு வார்த்தை நடத்தவும், தனது தொடர்பை வளர்த்து வரவும் அவர்கள் விரும்புவது ஸஹஜமேயாம். அல்லது அவர்கள் பொழுதுபோக்கிற்காகவேனும் ஏதாவது அறிந்துகொள்ள முயல்கிறார்கள். ஆதிகாலம் முதல் மனிதர்களுக்கு ஆழ்ந்த கவலையை யளித்து வந்த இச்சிக்கலான பிரச்னையைத் தீர்த்து, அவர்களுக்கு உதவிபுரிவதற்காக, இடைவிடாமல் எத்தனையோ முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன. ஸ்பர்ச உணர்ச்சியே அந்தகர்களுக்கு மற்றவைகளைக் காட்டிலும் பெரிதும் உதவியாயிருப்பதாகத் தெரிய வருவதால் மரக் கூடங்களில் எழுத்துக்களை உயரமாக வெட்டுவித்து அவைகளைத் தடவிப் பார்த்து எழுத்துக்களைத் தெரிந்துகொள்வதன் மூலம் அவர்களுக்கு அக்ஷர ஞானத்தையும், எழுத்துக்களின் பேதங்களையும் கற்பிக்கலாம் என்பதை ஒரு சிலர் கண்டறிந்தனர். நாளடைவில் குருடர்களின் பிரச்னையை இவ்வழியாகவே ஒருவாறு சமாளிக்கக் கூடுமென்று அறிஞர்கள் கருதத் தலைப்பட்டனர். இப்பொழுது குருடர்களுக்கான பள்ளிக் கூடங்களில் வழங்கும் முறை இதுதான்.

முதன் முதலாக இவ்விஷயத்தில் டாக்டர் மூர் (Dr. Moor's type) என்பவருடைய அக்ஷரங்களைக் கொண்டு பரிசோதனைகள் செய்யப்படலாயின. அதனால் குருடர்களின் வாழ்க்கைச் சுமையைச் சிறிதேனும் சுலபமாகச் செய்யலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. எனினும் அதனால் குருடர்களுக்குப் படிப்பதற்குச் சிறிது சௌகர்யம் ஏற்பட்டதேயன்றி எழுத்து ப்ரச்னை தீரவில்லை. மற்றவர்களைப்போல் தாமும் கொஞ்சமாவது படிக்க முடியுமென்

பதை யறிந்தவுடன் குருடனானவன் தான் ஏன் ‘எழுதுவதற்கும்’ முயற்சிக்கக் கூடாது என்று நினைக்கத் தலைப்பட்டான். அவனுடைய ஆவல் நாளடைவில் வளர்ந்து வரவே, முசியோ. சார்ல்ஸ். பேர்பியர் (Mons. Bebier) என்ற, பிரெஞ்சு பீரங்கிப் படையதிகாரி யொருவர் தற்காலத்தில் வழங்கும் உயரமான எழுத்துக்களை (Raised Point)க் கண்டு பிடித்தார். முசியொர் லூயி ப்ரேயில் என்பவர் அதைப் பெரிதும் சீர்திருத்தி அபிவிருத்திக்குக் கொண்டு வந்தார். அந்தக உலகை முழுவதும் அவருக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளது எனக் கூறுவது மிகையாகாது.

அவருடைய அக்ஷர அமைப்பு முறைக்கு ‘ப்ரேயில் முறை’ (The Braille system) என்று பெயர் வழங்கி வருகிறது. லூயி ப்ரெயில் என்னும் பெயர் வாய்ந்த அவரும் ஓர் அந்தகரே. அவர் தமது அபாரமான புத்தி நுட்பத்தால் 1899-ஆம் வருடத்தில் தம்மைப் போன்ற குருடர்களும் கல்வி வசதியைப் பெறுவது சாத்யமாகும்படியான ஓர் புதிய மாதிரியான அக்ஷரத்தை உலகத்திற்கு வெளிபபடுத்தினர். அதன் பயனாக இன்று அந்தக உலகமுழுவதும், மனிதவர்க்கத்தின் உத்கிருஷ்டமான இலக்கியங்களின் சுவை நயங்களையுங்கூடப் பார்வையுள்ளவர்களைப்போலவே அவ்வளவு எளிதாக அறிந்து அனுபவித்துப் பரவச மடையச் சாத்யமாகிறது. குருடர்களுக்கு அஃதோர் தெய்விக வரப்ரஸாத மென்றே கூறலாமன்றோ?

இதுபோழ்து உலக முழுவதும் ‘ப்ரெயில்’ முறையைப் பின்பற்றியே குருடர்களுக்குக் கல்வி கற்பிக்கப் படுகிறது. அதனின்றும் உலகத்திலுள்ள பல வேறு மக்கட் பிரிவினரும் தமது மொழிகளின் அமைட்புக்கும், தன்மைக்கும் ஏற்றவாறு பிரெஞ்சு, இங்கிலீஷ், ஸ்பானிஷ், ருஷ்ய, ஜர்மனிய, இத்தாலிய பாஷைகளிலும் அம்முறையைத் தழுவிய சாதனங்களை யமைத்துக் கொண்டு, குருடர்களும் தமது துயரங்களைச் சொற்பகாலமாவது மறந்திருப்பதற்குச் சிறிய அளவில் முயற்சித்து வருகிறார்கள்.

## பிரசித்தி பெற்ற சில குருடர்கள்

பார்வை யிழந்தும், இதரர்கள் அனுபவிக்கும் சௌகரியங்களைப் பெறுமலும் இருப்போருக்குத் தக்கவாறு கல்வி வசதி செய்து கொடுக்கப் பட்டால், நாம் எதிர் பார்ப்பதைக் காட்டிலும் அவர்கள் அதிக உபயோகமுள்ளவர்களாக இருப்பார்களென்பதையும், மிகப் பெரிய காரியங்களைச் சாதிக்கும் அரிய ஆற்றலுங்கூட அவர்களிடம் அமைந்திருப்பதையும் நாம் காணலாம். அவர்

களுடைய மனோ பாவங்களும் புத்தி நுட்பமும் அபாரமானவை. தவிரவும் துரதிஷ்டவசத்தால் ஏதேனுமோர் இந்திரியத்தின் உபயோகத்தை யிழந்திருக்கும் அங்கவீனருக்கு அறிவாற்றலும், யூக சக்தியும் மிகவும் அதிகமாயிருப்பதாக ஜனங்களிடையே ஓர் நம்பிக்கை இருந்து வருவதும் தவறன்று. இதை மெய்ப்பிப்பதற்கு அளவிற்கு மிஞ்சிய ஆதாரங்களுள்ளன. அந்தக வாழ்க்கையின் இன்ப துன்பங்களையும் ஆசையபிலாஷைகளையும் அவர்களது மனக் கிளர்ச்சியையும் உள்ளத் தோற்றங்களையும் படம் பிடித்தது போல் விக்டர் ஹ்யூகோ (Victor Hugo), கவி ரவீந்திரர் (Rabindranath Tagore), பிரசித்திபெற்ற வங்கக் கதாசிரியரான பங்கிம் சந்திர சட்டோபாத்யாயர், டி. எல். ராய் முதலிய மேதாவிகள் அவ்வளவு அழகாகத் தமது உயர்ந்த நாவல்களில் சித்திரித்துக் காட்டியிருக்கிறார்கள். அதைப் படிப்போர் குருடர்களின் வாழ்க்கையிலுள்ள துயரங்களையும், கொடுமைகளையும், வேதனைகளையும், உல்லாசத்தையும் ஒருவாறு நிதானித்தறியலாகும்.

கண் பொட்டையானபின் காப்டன் இவான் பிரேஸர் (Captain Evan Fraser) என்பவர் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் சபையின் அங்கத்தினராக இருந்து 1924 முதல் 1929-ஆம் ஆண்டு வரையில் தமது கடமைகளை மிகவும் பொறுப்புடன் சாமர்த்தியத்தோடும் விவேகத்தோடும் ஆற்றி வந்ததை உலகறியும். அன்றியும் ஐரோப்பிய மஹாயுத்தத்தின் ஆரம்ப நாட்களில் அன்னிய நாட்டு மந்திரிப்பதவியை (Minister for foreign affairs) உலகம் புகழும் கீர்த்தி பொருந்த நிர்வகித்துவந்த ஸர் எட்வர்ட் கிரே (Sir Edward Gray) என்பவர் தமது முதிர்ந்த வயதில்—அதாவது அறுபதாவது வயதிற்குப்பின்—தமது திருஷ்டியை யிழந்து, அதன் பின் குருடர்களுக்கான பள்ளியில் பயின்று உலகவர்த்தமானங்களைப் பற்றி உடனுக்குடன் அறிந்து வந்ததையும் தமது அனுபவ ராஜதந்திர ஞானங்களை யுதவி வந்ததையும் வழக்கமாகப் பத்திரிகைகளைப் படிப்பவர்கள் அறிந்திருக்கலாம். 19-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் ஹென்றி பாஸெட் (Henry Fawcett) என்ற ஓர் குருடர் இங்கிலாந்தில் போஸ்ட் மாஸ்டர் ஜனரல் பதவியை வகித்து வந்ததுமன்றி பல வருடகாலம் வரையில் பார்லிமெண்ட் அங்கத்தினராகவும் இருந்து வந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

நமது தமிழ் நாட்டிலும் சென்ற தலைமுறையில் புல்லாங் குழலில் இன்னிசைகளை யெழுப்பி அற்புதமான கானரஸத்தைப் பொழிந்து கேட்போரனைவரையும் மோகவயப் படுத்திய வேணு

கானம் ப்ரம்மஸ்ரீ சரப சாஸ்திரிகளவர்களேயும், கேட்போரின் உள்ளத்தையும் கவனத்தையும் ஒருங்கே வசீகரித்து நவரஸங்களின் இன்பங்களேயும் உள்ளது உள்ளவாறு அவர்களது முகத்திலே தோற்றுவிக்கும் அற்புதத்திறமை வாய்ந்த அண்டமின் சிவராம பாகவதர் அவர்களேயும் பற்றிக் கேள்விப் படாதார் யார் ?

தவிர தற்சமயம் குருஸாமி யென்ற அந்தகவாலிபர், காலஞ் சென்ற ஸ்ரீமான் எஸ். ராமானுஜத்தைப் போன்று கணித விற்பத்தியில் அபாரமான மூளேச் சக்தி யுடையவராய் எவ்விதக் கடினமான கணக்குகளேயும் கடிதம் எழுதுகோல் முதலிய உதவியின்றி மனதினுலேயே செய்து முடிக்குந் திறமையுடையவராக இருப்பதும், கிருஷ்ணமூர்த்தி என்னும் சிறுவர் புல்லாங்குழலில் அரிய தேர்ச்சி பெற்று மற்றவர்களே மகிழ்வூட்டுவதும் யாவரும் அறிந்த விஷயமேயாம்.

மிஸ் ஹெல்லன் கெல்லர்—உலகத்திலேயே அதிசயமாது

இவ்வுலகத்திலுள்ள ஸ்த்ரீரத்னங்களில் மிஸ் ஹெல்லன் கெல்லர் என்னும் அமெரிக்கமாதையும் அவருடைய அபாரமான கீர்த்தி விசேஷங்களேயும் பற்றிக் கேள்வியுருதார் மிகச்சிலரேயிருக்கக் கூடும். அவருடைய அரும்பெருங் கீர்த்தியையும், அதிசயிக்கத் தக்க புத்தி தீக்ஷண்யத்தையும் பற்றி எழுதுவதற்கு இச்சிறு கட்டுரை இடந்தராது. அந்தக உலகத்தினுல் எத்தகைய அரிய செயலாற்ற முடியுமென்பதை விளக்குவதற்கு அவரினும் சிறந்த உதாரணத்தை நாமெங்கும் காணமுடியாது. இவ்வுலகத்திலுள்ள ஒப்புவமை யில்லா அதிசய சம்பவங்களில் மிஸ் கெல்லரின் வரலாறும் ஒன்ருகக் கருதப்படுவது மிகவும் நியாயமானதே யாகும். உண்மையில் அவரை உலகத்தின் எட்டாவது அதிசயமாகக் கூறலாம். மிஸ் ஹெல்லன் கெல்லர் (Miss Hellen Keller) 1880-ஆம் வருஷம் அமெரிக்காவிலுள்ள அலபாமா (Alabama) மாகாணத்தின் வடபகுதியிலுள்ள டஸ்கம்பியா (Tuscumbia) என்னுமிடத்தில் பிறந்தார்.

பிரசித்திபெற்ற அமெரிக்கக் கதாசிரியரான மார்க் ட்வேயின் (Mark Twain) என்பவர் சென்ற 19-வது நூற்ருண்டில் உலகத்தாரின் கருத்தையும் மதிப்பையும் ஒருங்கே கவர்ந்தவர் இருவரேயென்றும், அவர்கள் நெப்போலியன் சக்ரவர்த்தியும் (Emperor Napoleon Bonaparte) மிஸ் ஹெல்லன் கெல்லர் (Miss Hellen Kelleon) என்ற மங்கையர் திலகமுமாவர் என்றும் ஓரிடத்தில் கூறியிருக்கிருர்.

மிஸ் ஹெல்லன் கெல்லர் 18 மாதச் சிறு குழந்தையாக இருந்த காலமுதல் இன்றுவரையில் யாதொரு மனித உருவத்தை யும் தம் கண்களால் பார்த்ததில்லை. தமது ஸகோதரப் பிறவி களின் தீங்குரலோசையைக் கேட்டது மில்லை. அதனுடன் அவர் தம் மனக்குறிப்பை வாயால் உணர்த்தவும் இயலாத ஊமையு மாவார். ஸ்பர்ச சக்தியையும், வாஸனை உணர்ச்சியையும் தவிரப் பஞ் சேந்திரியங்களில் வேறு புலன்களில் உதவியையும், இன்பத்தையும் பெற்றிராத அவர், இவ்வுலகில் வேறு ஒருவராலும் கடக்க முடியாத மலைபோன்ற இடையூறுகளனைத்தையும் கடந்து தமது அமானுஷ்ய மான திறமையாலும், முயற்சியாலும் பிறவிக் குருடர்களுக்கு மட்டுமே யன்றிக் கட்புலனைப் பெற்றுத் தவறான நெறிகளில் செல்லும் நமக்குங்கூட ஓர் நல்வழிகாட்டியாக விளங்குகிறார்.

அவர் தமது 19-வது வயதிலேயே அதாவது 1889-ஆம் ஆண்டில் லத்தீன், கிரீக், பிரெஞ்சு, இங்கிலீஷ் ஆகிய ஐந்து மொழிகளிலும் தேர்ச்சி பெற்று, பொருளாதாரம் (Economics), சரித்திரம் (History), தத்துவ சாஸ்திரம் (Philosophy) ஆகியவற்றில் பரீக்ஷை கொடுத்து பி. ஏ. பரீக்ஷையில் முதல் வகுப்பில் தேறினார் என்பதைக் கவனிக்கும்போது நம்முடைய வியப்பு அளவு கடந்த தாகிறது. அவர் பரீக்ஷை கொடுக்கும்போது ஓர் தனியறையில் உட்கார்ந்து கொண்டு ஓர் டைப் அடிக்கும் யந்திரத்தின் உதவி யினால் தமது விடைகளை யெழுதி முடித்ததாகக் கூறப்படுகிறது.

சாதாரணமாக அறிவுள்ளவர்கள் ஒரு பாஷையிலேயே தேர்ச்சி பெறுவது எவ்வளவு சிரமமான காரிய மென்பதை நாம் அனு பவத்தி லறிந்திருக்கும்போது செவிட்டூமையும், அந்தகருமாகிய அவருடைய சாமர்த்தியத்தை என்ன வென்று புகழ்வது!

அவர் தமது 18-வது பிராயத்திலேயே தமது சுய சரித் திரத்தை வரைந்திருக்கிறார். அதனுடன் கவிதை யுள்ளமும், கற் பனை சக்தியும் மிகுதியும் வாய்க்கப் பெற்றிருக்கும் அவர், "நவீன ஸ்த்ரீ" (The Modern woman), "தொழிலாளரின் உரிமை" (The worker's right) என்ற அருமையான இரு கட்டுரை களையும், "எனது வாழ்க்கையின் வரலாறு" (The story of my life) "நான் வாழும் உலகம்" (The world I live in), "அந்தகாரத்தின் வெளியே" (Out of the darkness) என்ற அரிய நூல்களை உரை நடையிலும், "கற்சுவற்றின் கானம்" (The song of the stone wall), "அந்தகாரத்தின் கீதம்" (A Chant of darkness) என்ற கவிதை நூல்களையும் இயற்றி உலகப்

பிரசித்தியடைந்திருக்கிறார். அன்றியும் அவர் பொது ஜனங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டத்தக்க பிரஸங்கங்கள் செய்து வருகிறார். ஸ்த்ரீ சுதந்திரத்திற்காகவும், அடிமைகளின் உரிமைகளுக்காகவும் போராடுகிறார். திருஷ்டியையும் செவிப்புலனையும் பேசும் சக்தியையும் இழந்திருப்பவரும், தம்முடைய சொந்தக் குரலையும் பிறர் பேசுவதையும் கேட்க முடியாதவரும், தாம் சொல்வதைக் கேட்பதற்காக வந்திருப்போரின் முகத்தைப் பார்க்க முடியாதவரும் ஆன ஒரு ஸ்த்ரீ வாய் மொழியாகப் பிரஸங்கங்கள் புரிவதும் கேட்கப்படும் கேள்விகளுக்கு உடனுக்குடன் விடையளிப்பதும் போன்ற இவ்வதிசயக் காட்சியினும் புதுமையானது இவ்வுலகில் வேறு ஏதேனுமுளதா?

(தொடரும்)




## பண்டிகைகள்

எஸ். ஜகந்நாதன்

வெயில், மழை, பனி

1. வியாழன் இரவு நலல மழை

27. செவ்வாய +
28. புதன்
இரவு மழை

காய்கறி

1932
ஸெப்டம்பர்

மரம்

4. ஞாயிறு
பிள்ளையார் சதுர்த்தி
15. வியாழன். ○
29. ௸. ●
30. வெள்ளி
நவராத்திரி
ஆரம்பம்.

பண்டிகை, விரதம்

ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி தினம் பால கிருஷ்ணனுக்கு நாகப்பழம் விளாம்பழம் முதலியவைகளை நிவேதனம் செய்கிறார்கள். சிலர் கிருஷ்ணனுக்குக் கருநாகப் பழத்தில்தான் பிரியம் என்கிறார்கள். பிள்ளையார் சதுர்த்திக்கும் நாகப்பழம், விளாம்பழம்,

கொய்யாப்பழம், பிரப்பம் பழம் முதலியவைகளை நிவேதனம் செய்கிறார்கள். பிள்ளையார் இவற்றை யெல்லாம் கேட்கிறாரா? அல்லது வேறு ஏதேனும் காரணமுண்டா? என்று நாம் ஆலோசிக்கவேண்டும். வேறு ஒரு காரணம் இருக்கிறது. இந்தப் பண்டிகை தினம் வருகிற ஆகஸ்டு, ஸெப்டம்பர் மாதங்களில் இப்பழங்கள் தாம் ஏராளமாய்க் கிடைக்கின்றன. ஆகையினால் அவற்றையே நாம் கடவுளுக்கு அர்ப்பணம் செய்து புசிக்கிறோம். ஆகவே ஒவ்வொரு மாதத்திலும் என்ன என்ன மரங்கள் தளிர்க்கின்றன, புஷ்பிக்கின்றன, பழுக்கின்றன, இலைகளை உதிர்க்கின்றன என்று கண்ணால் பார்க்கவேண்டும். மேலும் ஒவ்வொரு மாதத்திலும் எந்த எந்தக் காய் கறிகள் நமக்கு ஏராளமாகக் கிடைக்கின்றன என்றும் பார்த்தறிய வேண்டும். ஸெப்டம்பர் அக்டோபர் மாதங்களில் பாரிஜாத புஷ்பம் கிடைக்கிறபடியால் அப் புஷ்பத்தையே சரஸ்வதி பூஜை தினம் சரஸ்வதி அம்மனுக்கு மாலை கட்டிச் சாத்துகிறோம். மேலே படத்தில் காட்டிய பிரகாரம் ஒவ்வொரு மாதத்திலும் நாம் கண்ணாற் பார்க்கக்கூடிய இயற்கைத் தோற்றங்களையும் அவை நாளுக்கு நாள் மாறிவருகிறதையும் கவனித்துக் குறிப்பு வைத்துக் கொள்ளுவது நல்லது. இக்குறிப்பில் காய் கறிகளைப் படங்கள் மூலமாயும் காட்டலாம் என்பதைத் தெரிவிக்கவே முன்னுள்ள படம் காட்டப்பட்டிருக்கிறது.

# சிறுவர் தொழிற்பயிற்சி

என். ஆர். சேஷாச்சாரி

## சிறுவீடும் தாழ்வாரமும்

சிறுவர்களே, ஓய்வுநேரத்தில் இந்தத் தடவை ஒரு பெரிய வஸ்துவைச் செய்யக் கற்றுக்கொள்ளுங்கள். ஓரழகிய சிறுவீடும் தாழ்வாரமும் அட்டையினால் கட்டப் பழகிக் கொள்ளுங்கள்.



24½ அங்குல நீளமும் 9 அங்குல அகலமுமுள்ள ஒரு பருமனை அட்டையை எடுத்து, படம் 1-ல் குறித்துள்ளபடி கோடுகளை வரையுங்கள். கறுப்பாயுள்ள பாகங்களை யெல்லாம் மிச்சமில்லாமல் ஒழுங்காய்க் கத்தரித்து எடுங்கள். கத்தரிக்கோலினால் கத்தரித்தெடுப்பதைவிடக் கத்தியின் முனையால் நாலைந்து தடவை அழுத்திக் கோடு கிழித்தால் கறுப்பான பாகங்கள் தனித்தனியாய்த் துண்டுகளாய் விழுந்து விடும். அந்தத்துண்டுகள் பிற்பாடு வேணுமாகையால் வீணென்று எறிந்து விடாதேயுங்கள். புள்ளிக் கோடுகளின் மீது பாதி ஆழம் வரையில் கூரான கத்தியின் முனையால் அழுத்திக் கிழியுங்கள். அந்தக் கோடுகளின் மீது ஒடியாமல் மடித்து நிறுத்துங்கள். இரண்டு நீளச்சுவர்களும், இரண்டு அகலச் சுவர்களும், ஒரு வாயிற்படியும், மூன்று ஜன்னல்களும், இரண்டு சாளரங் (Ventilators) களும் சேர்ந்து (படம் 1-ல் A, B) உள்ள ஒரு வீடுபோல் இருக்கிறதல்லவா ?

ஆனால் இவ்வீட்டிற்கு மேலே கூரையில்லையே ; கூரையில்லா வீட்டில் எப்படிக் குடியிருக்க முடியும் ? வெயிலில் காய்ந்து மழையிலும் பனியிலும் நனைந்து கஷ்டப்படும்படி நேரிடுமல்லவா ? அதோடு வீட்டிலுள்ள சொத்துக்களுக்குப் பந்தோபஸ்து இல்லாமல் திருடர்களுக்குத் திறந்த வெளியாயிருக்குமல்லவா ? இவ்வித அசௌகர்யங்களை யெல்லாம் தடுக்க ஒரு கூரையை அமைப்போம். இன்னொன்று செய்யவேண்டியது பாக்கியிருக்கிறது. அதாவது பந்துக்களும் சிநேகிதர்களும் வந்தால் சௌகரியமாய் உட்காருவதற்கும் குழந்தைகள் தங்கள் குழந்தைகளாகிய பொம்மைகளை வைத்துக் கொண்டு விளையாடுவதற்கும் ஒரு தாழ்வாரம் அவசியமென்று தெரிகிறது.

அதற்கு 12''×10'' அளவுள்ள ஒரு கனத்த அட்டையை எடுத்து, படம் 2-ல் காட்டியபடி பொட்டுக் கோடுகள் வரைந்து கத்தியினால் பாதி ஆழம் அறுத்து மடியுங்கள். படம் 1-ல் குறித்திருக்கும் (பு) என்ற புச்சங்களை யெல்லாம் வீட்டின் உட்பக்கமாய்ப் பாதிமடித்து அவைகளின் மீது கொஞ்சம் பிசினைத்தடவி 12''×10'' அளவுள்ள கூரையை அமையுங்கள். (படம் 4-ல் குறித்துள்ள A, B என்ற இரண்டு கூரைகளும் C என்ற தாழ்வாரமும் இப்பொழுது கட்டப்பட்டு விட்டன. பிறகு தாழ்வாரத்தைத் தாங்கி நிற்பதற்கு இரண்டு கம்பங்கள் வேண்டும். அதற்குக் குச்சிகளைச் சீவிப் பென்சில் கனமும் 7½ அங்குல நீளமும் உள்ள இரண்டு குச்சு அமையுங்கள். ஒழுங்கான குச்சுகள் இல்லையேல் பழுப்புக் காகிதம் (Brown paper) அல்லது ஏதாவது வர்ணக்

காகிதத்துண்டுகள் இரண்டை யெடுத்து மெல்லிய குச்சுகளைப் போல் சுருட்டி அவை பிரியாதிருக்கும்படி ஒட்டி 7½'' நீளத்திற்குக் கத்தரித்துக் கம்பங்களாக நிறுத்தலாம்.

வீட்டின் சுவர்கள் சுத்தமாயும் பார்ப்பதற்கு அழகாயும் இருப்பதற்கு என்னசெய்வது? லேசான நீல நிறம் அல்லது வெண்மை நிறக்காகிதத்தைச் சுவர்களின் நீளம், அகலம், உயரங்களுக்குத்தக்கவாறு கத்தரித்து ஒட்டுங்கள். ஜன்னல் கம்பிகளுக்கு, படம் 3-ல் காட்டியவாறு இஷ்டமான வர்ணக்காகிதத்தைக் கத்தரித்து ஒட்டுங்கள். முதலில் ஜன்னல்களுக்காகத் துண்டித்து எடுத்த ஒவ்வோர் அட்டையையும் நீளவாட்டத்தில் இரண்டு சரிபாதியாக வெட்டிக் கொண்டு உள்ளும் புறமும் வர்ணக்காகிதங்களை ஒட்டுங்கள். ஜன்னலொன்றுக்கு இரண்டு கதவுகள் வீதம் வைத்து ¾ அங்குல அகலமுள்ள சிறுகாகிதத்துண்டால் கதவுகளின் இரண்டு ஓரங்களையும் சுவரையும் சேர்த்து ஒட்டி விடுங்கள். இந்தத்துண்டுக் காகிதம் ஜன்னலின் கீல்கள் (Hinges) போலக் கதவுகளைத் திறக்கவும் சாத்தவும் சௌகரியத்தைத் தருகிறது. (படம் 3. A, B)ல் காட்டியிருக்கிறபடி ஒவ்வொரு கதவின் ஓரத்திலும் மத்தியில் ஒரு சிறு துண்டு நூலைத்தொங்கவிட்டு இருமுனைகளிலும் முடி போடுங்கள். அந்நூலைப் பிடித்திழுத்துக் கதவுகளை மூடலாம், திறக்கலாம். வாயிற்கதவுக்காக வெட்டி யெடுத்த துண்டையும் இருபாதியாக்கி ஜன்னல்களைப்போலவே சுவரோடு ஒட்டவைத்து நூலைத் தொங்கவிடுங்கள். இஷ்டமான வர்ணக்காகிதத்தை ஒட்டலாம். படம் 4-ல் காட்டியிருப்பதைப்போல் A, B என்ற கூரைகளுக்கும் C என்ற தாழ்வாரத்தின் சார்புக்கும் பழுப்புநிறக் காகிதத்தை ஒட்டி ஓடுகளைப்போல் கோடு கிழித்து விடுங்கள்.

சிறுவர்களின் சின்னச் சின்னக்கையால் சின்ன வீடுகட்டப்பட்டு முடிந்து விட்டது. சின்னப் பொம்மைகளும் சிறுவர் சிறுமிகளும் சிரித்து விளையாடுவதைக்கண்டு களியாத கல்நெஞ்சப் பெற்றோர்களும் உலகில் இருப்பரோ? ஒரு பொழுதும் இரார்.

# குழந்தைகள் பாட்டு

## சங்கடங்கள்!

அரிசி இருக்குது, பருப்பிருக்குது ;
அடுப்புக்கில்லாத சங்கடம்!
காற்றடிக்குது, தூள் பறக்குது ;
கதவில்லாத சங்கடம்!
பெண்டாட்டி வந்து முன்னே நிற்கிருள் ;
புடவை யில்லாத சங்கடம்!
தாசன் வந்து வாசலில் நிற்கிருன் ;
காசில்லாத சங்கடம்!

[தி. கோ. ஆராவமுதன்.]

---

## கண்ணுடிப் பாட்டு

1. மாமாடா மாமா!
மாமரமாஞ் சோலே!
நான் வருகிற வேளே!
நிலேக்கண்ணுடி—நிலேமேல்
நிற்கிற கண்ணுடி!
சாவித்திரி எடுத்துப்
பார்க்குங் கண்ணுடி!

2. ஜிம்ஜிமிச்சாங் கண்ணுடி!
சிங்காரக் கண்ணுடி!
என்னேப் பெற்ற அம்மாளுக்குப்
பொன்னுலே கண்ணுடி!

[தி. கோ. ஆராவமுதன்.]

# விடு கதைகள்








பிள்ளைகளே! மேலேயுள்ள படங்களைப் பார்த்துக் கீழேயுள்ள விடுகதைகளுக்கு எது சரியானவிடை என்று தெரிந்து கொள்ளுங்கள்.

1. பள்ளிக்குப் புறப்படும் பாலர்கள் பாய்ந்து வாருங்கள் ; கடவுளைக் கும்பிடக் கோயிலுக்குக் கடுகி வாருங்கள் ; புகை வண்டி ஜல்தியில் புறப்படுகிறது ; ஜல்தி நடவுங்கள் என்று பலரைப் பார்த்துப் பரபரப்புடன் அழைக்கிருன் ; அவன் யார் ?

2. என் அப்பன் சொறியன், ஆத்தாள் சடைச்சி, அண்ணன் விழியன், நான் சர்க்கரைக்குட்டி ; நான் யார் ?

3. (அ) ஆழக்குழி வெட்டி அதிலே ஒரு முட்டையிட்டு அண்ணாந்து பார்த்தால் தொண்ணூறு முட்டை ; அது என்ன ?

(ஆ) ஓகோ மரத்திலே உச்சாணிக் கிளையிலே ஒரு செம்பிலே ஜலம் வைத்திருக்கிறது ; அது என்ன ?

(இ) உருண்டை வடிவமாயிருக்கும், உலகமல்ல ; உடம்பெல்லாம் உரோமம் உண்டு, குரங்குமல்ல ; உச்சியிற் குடுமியுண்டு, அந்தணனுமல்ல ; மூன்று கண்ணுமுண்டு, சிவனேயல்ல ; உடைத்தால் வெளுத்து இருக்கும் ; ஒரு குளம் ஜலம் தேங்கியிருக்கும் ; அது என்ன ?

4. "கிர் கிர்" என்று சத்தம் கேட்கிறது, மோட்டாருமல்ல ; தரையிலே காணும், உயரப்பறக்கிறது ; இறக்கையுண்டு, கருடனேயல்ல ; ஆளைத் தூக்கிச் செல்லுகிறது, மூட்டையைச் சுமந்து செல்லுகிறது, கடலைக் கடக்கிறது, மலையைத் தாண்டுகிறது, நாட்டை அடைந்து நகரத்து ஜனங்களை இறக்குகிறது ; அது என்ன ?

5. செக்கச் சிவந்திருக்கும், மஞ்சளாயுமிருக்கும், கண்ணைக்கவரும், தின்றால் காரும், விண்டால் கொட்டையில்லை, முன்னே வருகிருன் அதன் கொட்டை போல என்பார் ; அது என்ன பழம் ?

6. இரட்டைக் குதிரை, ஜோடியாகவே போகும்; ஒன்று இல்லையேல் மற்றொன்று நடவாது ; முள்ளிலும் போகும், கல்லிலும் போகும்; மேட்டிலும் ஏறும், பள்ளத்திலும் இறங்கும் ; தண்ணீரைக் கண்டால் தயங்கி நிற்கும் ; அவை எவை ?




# சிரிப்பு

வி. விசாலாக்ஷி அம்மாள்

'அவள் முகத்தில் லக்ஷ்மி எப்பொழுதும் தாண்டவம் ஆடுகிறாள்; சிரித்த முகத்தைப் பார்த்தாலே பாவம் போகும்' என்று மலர்ந்த முகமுடையவர்களைக் குறித்துச் சொல்லுவதுண்டு. 'அவர்கள் வீட்டுக்குப் போனால் வா என்று சந்தோஷத்துடன் அழைப்பதில்லை; எதுக்குத்தானோ தெரியவில்லை; அக்கா, முகத்தில் எப்பொழுதும் நர்த்தனம் ஆடுகிறாள்' என்று சற்றுக் கடுகடுப்பாகு முகத்தை வைத்துக் கொள்ளும் சுபாவத்தை உடையவர்களைக் குறித்துச் சொல்லுவதும் உண்டு.

சிரிப்பதும், சிரிக்காமல் இருப்பதும் அவர் அவர்கள் சுபாவத்தையும், அச் சமயத்தில் மனதில் குதூகலம் நிறைந்திருப்பதையும் பொறுத்ததே; 'இதற்கு என்னசெய்வது?' என்று கேட்கலாம். சமுதாய வாழ்க்கையில் நடந்து கொள்ள வேண்டிய முறைகள் சில உள்ளன அல்லவா? யாராவது ஒருவர் வீட்டிற்கு வந்தால் அவர்களை மலர்ந்த முகத்துடன் வரவேற்கவேண்டும்; அதுதான் மரியாதையான நடத்தை என்பது அநேகமாக எல்லாரும் ஒப்புக் கொள்ளும் விஷயமே; மேலும், எந்த வீட்டின் எஜமானி தினப்படி வாழ்க்கையில் ஏற்படும் சில்லறை இடையூறுகளை அதிகமாகப் பொருட்படுத்தாமல், சந்தோஷமுடையவளாக இருக்கிறாளோ அந்த வீடு வசிப்பதற்கு ஒரு ரம்மியமான கிருகமாக இருக்கும்.

சாதாரணமான ஒரு நடுத்தரக் குடும்பத்தில், மாலை வேளையில், பகலெல்லாம் ஓர் அறையில் அடைபட்டு வேலை பார்த்ததால் அலுத்துப் போய் ஆபீஸிலிருந்து வீட்டு எஜமானனும், பள்ளிக்குச் சென்று களைத்த குழந்தைகளும் வீடு வருகிறார்கள். இவர்களை

வீட்டு எஜமானி மலர்ந்த முகத்துடன் வரவேற்பதால் இவர்கள் களைதீர்ந்து களிப்படைகிறார்கள். இதற்குப் பதிலாக, அவர்களை ஏதாவது குறைகூறி வீட்டில் நடந்த சில்லறைச் சங்கடத்தைச் சொல்லி முகத்தைத் தூக்கிக்கொண்டிருந்தால், 'போதும்' என்று அவர்கள் மறுபடியும் வெளியில் சென்று விடுகிறார்கள். எல்லாரும் மனிதர்கள்தாம்; எல்லாருக்கும் கோபமும் சலிப்பும் ஏற்படத்தான் செய்யும்; வீட்டு எஜமானியும் பகல் எல்லாம் வேலை செய்து அலுத்து இருப்பது சகஜந்தான். இருந்தாலும், வீடு ஓர் இன்ப நிலயமாக இருப்பதற்கு வீட்டின் எஜமானியே முக்கிய ஏதுவாக இருக்கிறாள். தானும், தன்னைச் சேர்ந்தவர்களும் சந்தோஷமாக வாழப்பிரியப்படுகிறவள், தன் வீட்டில் ஏற்பட்ட அசந்தர்ப்பங்களை உடனே முகத்தைச் சுளித்துக் கொள்ளாமல் சமயோசிதமாகக் கூறவேண்டும். அப்பொழுது கேட்கிறவர்களும் அனுதாபத்துடன் காது கொடுத்துக் கேட்பார்கள். எல்லாருக்கும் சுகம் உண்டு.

மாதர்கள், நல்ல வீட்டு எஜமானிகளாக இருக்க விரும்பினால், சமயோசிதமாக நடந்து கொள்ளவும், கூடிய வரையில் தங்கள் கோபதாபங்களை அடக்கிச் சந்தோஷமாக இருக்கவும் பயின்று கொள்ள வேண்டும். இதை ஆண் பெண் என்ற இரண்டு வகுப்பினர்களுக்கும் ஏற்பட்ட பொதுவிதியாக் கூறலாம். நாகரிக வாழ்க்கையின் இன்றியமையாத விதிகளில் இது ஒன்று. சற்றுச் சிரமம் எடுத்து மனதைப் பயிற்சி செய்வதால் இந்தக் குணம் ஏற்படும்.

சமயோசித புத்தி இல்லாமல் எதையாவது கூறிவிடுவதே பல மனஸ்தாபங்களுக்கும், சண்டைகளுக்கும் காரணமாகின்றது. மஹாபாரத யுத்தத்துக்குப் பல முக்கிய காரணங்கள் உண்டு. திரௌபதி சிரித்ததும் இதில் ஒன்றாகும். மாளிகையைக் கட்டின சிற்பியின் வன்மையில் மயங்கின துரியோதனன், நிலத்தை நீரென்றும், நீரை நிலமென்றும் நினைத்துத் தடுமாறினான்; இதைக் கண்ட திரௌபதி ஏளனமாக நகைத்தாள். சமயோசிதமின்றி இவள் இவ்விதம் சிரித்தது, அவன் மனதில் தீராப் பகையை மூளச் செய்தது; பிறகு சூதாட்டத்தில் தருமபுத்திரர் எல்லாவற்றையும் தோற்று விட்டதும், திரௌபதியைச் சபைக்கு அழைத்து வரச் சென்ற துச்சாதனன், 'பொன்னைச் சிரிக்கும் பூங்கோயில் புனல்வாவியிலன் றெங்கள்குல, மன்னைச் சிரித்த செங்கனிவாய் மாறா திரங்கி யழுதாற்ற, மின்னைச் சிரிக்கும் நுண்ணிடையாய் வேந்தர்க் கெதிருன் மெய்க்கணவன், தன்னைச் சிரிக்க விருக்கின்ற சளநீ காணிற்

றரியாயே’ என்று கூறி, அன்று அவள் சிரித்தது தங்கள் மனதில் எவ்வளவு தூரம் ஆத்திரத்தைக் கிளப்பினது என்பதை வெளிக் காட்டினன். எந்த வீட்டின் எஜமானி சமயோசித புத்தி உடைய வளாய், சில்லறை இடுக்கண்களைப் பொருட்படுத்தாமல், குதூகல மனமுடையவளாய் இருக்கிறளோ, அந்த வீடு அதில் வசிப்பவர் களையும், அதற்கு வரும் விருந்தினர்களையும் களிக்கச் செய்து இன்ப நிலயம் என்ற பெயரைப் பெறும் தகுதியுடன் விளங்கும்.

## தேங்காய்ப்பால் ஹலுவா

தேங்காய் நல்லதாக, முற்றினதாக இருக்கிறதா என்பதைக் கவனித்துத் துருவிக்கொள்ள வேண்டும். ஒரு சாதாரணப் பருமன் உள்ள தேங்காய்த் துருவலுக்கு ஒருபிடி அரிசி என்ற கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டும் ; துருவலையும் அரிசியை யும் உரலில் போட்டுக் கொஞ்சம் ஜலம் விட்டு அரைத்துப் பாலைப் பிழிந்து மறுபடியும் அரைத்துப் பாலைப் பிழிந்து கொள்ள வேண் டும். இந்தப் பாலை ஒரு மெல்லிய வெள்ளைத் துணியினல் வடிகட்டிக் கொள்ள வேண்டும். திட்டமாகச் சர்க்கரை போட்டுப் பாலை அடுப்பில்வைத்துக் காய்ச்ச வேண்டும். பால் நன்றாக வற்றி ஹலுவா பதம் வந்ததும் அடுப்பை விட்டு இறக்கிக் கொஞ்சம் ஏலரிசிப்பொடி தூவிக் கிளறி, நெய் தடவின தட்டத்தில் கொட்டி விடவேண்டும். சர்க்கரைக்குப் பதிலாக வெல்லம் போடலாம் ; சர்க்கரையுடன் கொஞ்சம் குங்குமப்பூப் போட்டால் வாசனையாக இருக்கும். தேங்காய்ப் பாலானதால் நெய் விட்டுக் கிளறவேண்டிய அவசியமில்லை. வேண்டுமானல் அடிப்பிடிக்காமல் இருப்பதற்காகச் சிறிதளவு நெய் சேர்த்துக் கொள்ளலாம். இந்த ஹலுவா மலச்சிக்கலைக் கண்டிப்பதுடன் சரீரத்துக்குப் புஷ்டியை யும் அளிக்குமாம்.




போட்டோக் கருவியின் உபயோகங்கள்:—சாதாரண உபயோகங்களுக்குப் போட்டோப் பிடிப்பதை யாவரும் அறிவோம். தினசரிப் பத்திரிகைகளில் போட்டோப்படங்கள் அச்சேறிவருவதைக் காண்கிறோம். இவைகளுக்கு உபயோகிக்க "லைன் பிளாக்", "ஆப்டோன்பிளாக்" என்ற அச்சுக்கள் வார்ப்பதிலும் போட்டோக்கருவி உபயோகமாகிறது. மைக்ராஸ்கோப் (Microscope) என்ற பூதக்கண்ணாடியினுடன் இக்கருவியை உபயோகித்துக் கண்ணுக்குப் புலனாகாத கிருமிகளைப் படம்பிடிக்கின்றனர்; இதனால் கிருமிகளின் தன்மைகளை ஆராய்வது எளிதாயிற்று. தூரதிருஷ்டிக் கண்ணாடியுடன் நமது கருவியைச் சேர்த்துக் கிரகங்களையும் நக்ஷத்திரங்களையும் படம் பிடிக்கின்றனர். வானசாஸ்திர வளர்ச்சிக்குப் போட்டோக்கருவி யொரு முக்கிய காரணம். பலகோடி மைல்களுக்கு அப்பாலுள்ள சாதாரணக் கண்ணுக்குப் புலனாகாத வெகுசிறிய நக்ஷத்திரங்களும் போட்டோப் படத்தில் பிடிபடுகின்றன. அருகேயுள்ள கிரகங்களின் தன்மைகளையும் அறியச் சாத்தியமாகிறது. கண்ணுக்குப் புலனாகாத எக்ஸ்ரே (x-ray) போன்ற சில கிரணங்கள் போட்டோத்தகட்டிற்குப் புலனாவதால் அவைகளைப் படம் பிடிக்கவும் இக் கருவி உபயோகமாகிறது. ஓடும், பேசும் படக்காட்சிகளுக்கு எடுக்கும் படங்களுக்குச் சில அதிகவேலைப்பாடுள்ள போட்டோக் கருவிகளை உபயோகிக்கின்றனர். —முத்து.

சிருஷ்டிகாலம்:—சூரியனும், அதைச்சுற்றிவரும் கிரகங்களும் முன் ஒரு நெருப்புக் கோளமாக விருந்தனவென்பதும் பின்னால் ஒரு காலத்தில் கிரகங்கள் சூரியனைவிட்டுப் பிரிந்தனவென்பதும் இக்கால விஞ்ஞான சாஸ்திரிகளின் கொள்கை. கிரகங்கள் பிரிந்த காலத்தைச் சிருஷ்டியின் துவக்கமென்னலாம். அக்காலம் இற்றைக்குச் சுமார் முந்நூறு கோடி வருஷங்களுக்கு முன்னிருக்கலாமென்று பலகாரணங்களைக் கொண்டு சாஸ்திரிகள் ஊகிக்கின்றனர். நமது பஞ்சாங்கங்களில் சிருஷ்டி தொடங்கி 1955885034 (சுமார் இருநூறுகோடி) வருஷங்களாகின்றன வென்று எழுதப்பட்டிருக்கிறது. விஞ்ஞான சாஸ்திரிகளின் ஆராய்ச்சிக்கு இஃது ஒருபுடை ஒத்திருப்பது கவனிக்கத்தக்கது. —முத்து.

ரேடியம்:—கனடா தேசத்தில் எளிதில் போகமுடியாத ஓரிடத்தில் 'ரேடியம்' என்ற தனிப்பொருள் (Element) கலந்த மண் இருக்கின்றதாம். ஆகாயவிமானத்தில் சென்ற ஒருவர் இதைக் கண்டுபிடித்து அம் மண்ணைக் கொணர்ந்து ரேடியத்தைப் பிரித்தெடுத்தனராம். இங்கு ரேடியம் அதிகமாக விருப்பதால் இப்பொருளின் விலை கூடிய சீக்கிரம் இறங்கலாமெனத் தோன்றுகிறது. இதுவரை பெல்ஜிய நாட்டிலிருந்தே உலகமுழுமைக்கும்

ரேடியம் அனுப்பப்பட்டு வந்தது; அவர்கள் வைத்ததே அதற்கு விலை. ரேடியத்தால் சில வியாதிகள் குணமாவதால் அது வைத்தியசாலைகளுக்கு அவசியமாகிறது. அதன் மிக உயர்ந்த விலையால் அனேக வைத்தியசாலைகளில் அப்பொருளில்லாத குறை கூடிய சீக்கிரம் நீக்கப்படலாம். (Scientific American) —முத்து.

ஆகாய அலைகள்:—ஓரிடத்திலிருக்கும் மின்சாரமாறுபாட்டால் ஆகாயத்தில் மின்சார அலைகள் உண்டாக்கப் படுகின்றன. இவ் வலைகளைக் கொண்டே இக்காலத்தில் தந்தியில்லாமல் செய்தியனுப்பும் தொழில் நடைபெற்றுவருகின்றது. ஒளியும் அலைரூபமாகவே செல்லுகிறதென்றும் அவ்வலைகளுக்கும் முன்சொன்ன மின்சார அலைகளுக்கும் பரிமாணத்தைத் தவிர யாதொரு பேதமுமில்லை யென்றும் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒரு குளத்திலுண்டாகும் நீரலைகளைக் கவனித்தால் சில பெரியவையாகவும் சில சிறியவையாகவு மிருக்கக் காணலாம். கடலில் தோன்றும் அலைகள் மிகப் பெரியவை. இதேபோல் ஆகாயமாகிற கடலில் தோன்றும் அலைகளில் சில நீளமானவை; சில குறுகலானவை; சில மிகவும் சிறியவை. தந்தியின்றிச் செய்தி யனுப்ப உபயோகிக்கும் 'மின்சார அலைகள்' மிக நீண்ட அலைகள். ஒளியலைகள் குறுகியவை. எக்ஸ்ரே (x-ray) என்ற கிரணங்கள் ஒளியலைகளைக் காட்டிலும் குறுகியவை. எக்ஸ்ரேயை விடக் குறுகலான காமாரேஸ் என்ற கிரணங்களு மிருக்கின்றன. வெகு குறுகிய அலைக்கிரணங்களால் வியாதிக் கிருமிகளைக் கொன்றுவிடக் கூடுமென்று கண்டுபிடித்திருக்கின்றனர். —முத்து.

அணுக்கள்:—கண்ணுக்குத் தெரியாத கோடிக்கணக்கான அணுக்களாலேயே இவ்வண்டத்திலுள்ள எப்பொருளும் ஆக்கப்பட்டிருக்கிறது. கண்ணுக்குத் தெரியாத பொருள்களால் தெரியக்கூடிய பொருளுண்டாவதெப்படி என்ற கேள்விக்கு விடையாக ஆசிரியர் கிப்சன் (Gibson) ஓரழகிய உவமை கூறுகிறார். "நாம் நிற்குமிடத்திலிருந்து ஒரு விசாலமான ராஸ்தா படிப்படியாக உயர்ந்து கொண்டே சில மைல் தூரத்திலுள்ள ஒரு மலையுச்சியை யடைகிறதென்று வைத்துக்கொள்வோம். ஒரு மனிதன் நம்மைப் பிரிந்து ரஸ்தாவழியே மலையுச்சியை நோக்கிச் செல்லுகிறான். அவனது உருவம் சிறுத்துக் கொண்டே சென்று முடிவில் நமது கண்ணுக்கு மறைந்து விடுகிறது. ஆயினும் அவன் ரஸ்தாவிலேயே யிருக்கிறான். வெகு தூரத்திற்குச் சென்று விட்டபடியால் அவனுருவை நாம் காணமுடியவில்லை. இப்பொழுது மலையுச்சியிலிருந்து ரஸ்தாவழியே நம்மை நோக்கி ஒரு பெரிய சைனியம் வந்தால் அது ஒரு கரிய பாய் விரித்தாற்போல ரஸ்தாவில் காணப்படும். சைனியத்திலுள்ள ஒவ்வொரு வீரனையும் நம்மால் காணவியலாது. ஒரு வீரனுக்கும் மற்றொருவனுக்கும் இடையிலுள்ள வெளியையுங் காண முடியாது; ஆயினும் மொத்தத்தில் அச் சைனியத்தைப் பார்க்கிறோம். இதே போல் அணுக்களை நாம் காணாவிடினும் அவைகளாலான பொருள்களைக் காண்கிறோம்." —முத்து.

பாம்பின் பல் :—நாகத்தின் விஷப்பற்கள் நான்கு. அவற்றின் பெயர் காளி, காளாத்திரி, யமன், யமதூதி யென்பன. அப்பற்களுள் விஷப் பையிலிருந்து விஷம் வருவதற்குத் துளைகள் இருக்கின்றன. அதனால் "கடுவொ டொடுங்கிய தூப்புடை வாலெயிறு" என்று அப் பல்லைக் கூறுவர். நஞ்சுடனே உறைக்குள்ளே கிடந்த வெள்ளையான பல்லென்பது இதன் பொருள். பாம்பு கடிக்கும் பொழுது இந்தத் துளையின் வழியாக விஷம்வந்து கடிக்கப் படுபவன் இரத்தத்திற் கலந்து விடுகிறது. —ஸ்ரீ சே.

அசோக :—இஃது ஒரு மரம். ஜைனர்களுடைய கடவுளர் 'அருகன்' இதன் கீழே இருப்பதாக நூல்கள் கூறும். பிண்டி என்றும் இம்மரம் கூறப் படும். இதன் தளிர் சிவந்த நிறமாக இருக்கும். அதனைக் காதிற் செருக்கிக் கொள்வது வழக்கம். முருகக் கடவுளும் அத் தளிரைக் காதிற் செருகியிருப் பாரென்று ஒரு பழைய தமிழ் நூல் கூறும். ஸ்ரீ. சே.

யானைமதம் :—யானைக்கு மூன்று மதம் உண்டென்பர். காது, கபோலம், பீஜம் என்னும் மூன்றிடங்களிலும் அவை பிறக்கும். எழிடங்களிலிருந்து உண்டாகு மென்றும் கூறுவர். யானை அதிமதூரத் தழையைத் தின்றால் மதம் பெருகுமாம். யானையின் மதம் மணமுடையதாக இருக்கும். வேங்கை மலரின் மணம்போலவும் எழிலைப்பாலையின் மணம்போலவும் அந்த மதம் மணக்குமென்று தெரியவருகிறது. மற்ற வாசனைப் பொருள்களோடு யானை மதத்தையும் சேர்த்துப் பயன் படுத்துவதும் உண்டு. ஸ்ரீ. சே.

முல்லைவளர்த்தல் :—முல்லைமலர் கற்பிற்கு அறிகுறி. அதற்குக் கற் பென்றே பெயர் உண்டு. மங்கையர் கற்பின் குறியாக அதனைச் சூட்டிக் கொள்வார். முல்லைக்கொடியைத் தம் வீட்டில் வளர்த்தலும் உண்டு. உமா தேவியாரும் ஒரு முல்லைக்கொடி வளர்த்து வருகிறாரென்று தக்க யாகப் பரணி யென்ற நூலிற் காணப்படுகிறது. ஸ்ரீ. சே.

அவரை நிழல் :—அவரை நிழல் இருந்தால் மனிதனுடைய அறிவு மந்தமாய்விடுமாம். வடமொழி நைஷதத்தை இயற்றிய ஸ்ரீ ஹர்ஷகவி மிகவும் உயர்ந்த கற்பனையும் கடினமான நடையையும் அமைத்துப் பாடுவார். அவர் நைஷதம்பாட ஆரம்பிக்கிறபொழுது அவருடைய குரு, அவரைநிழலின் கீழி ருந்து அதனைப் பாடச் சொன்னாராம். சாதாரணமாகப் பாடினால் மிகவும் கடினமாக இருக்குமென்றெண்ணினர். அவரைநிழலிலிருந்து பாடியபின் கூட நைஷதமானது கடினமாகவே யிருக்கிறதென்கிறார்கள். இதனால் அவரை நிழலின் தன்மை தெரிகிறது. தமிழ் விடுதூதென்னும் நூலில், "அவரைத், தேடுநிழற் சிந்தனையிற் றேம்பினேன்" என்று ஓரடி காணப் படுகிறது. அவரையின் நிழலில் இருப்பாரது கவலை போன்ற கவலையி னாலே மயங்கினேனென்பது அதன் பொருள். ஸ்ரீ. சே.




**து**ருவன் : [வரகவி திரு. அ. சுப்பிரமணிய பாரதி இயற்றியது. எ. ஸ்ரீராமுலு செட்டி அண்டு கோ. திருவல்லிக்கேணி ; விலை அணா 3.]

இச் சிறு புத்தகம் துருவன் என்னும் பக்தசிகாமணியின் சரித்திரத்தைத் தெள்ளிய இனிய நடையில் பள்ளிப் பிள்ளைகளுக் குபயோகமாகும் வண்ணம் கூறுகிறது. சிறுவர்களுக்கு நமது மதத்தி லன்புண்டாவதற்கும் நல்லொழுக்கம் படிவதற்கும் இம்மாதிரியான சிறு புத்தகங்கள் அவசிய மென்பது சொல்லாமலே விளங்கும். பள்ளிக்கூடங்களில் பாடம் வைப் பதற் குரியதெனக் கருதியிருப்பதால் இதில் காணப்படும் அச்சுப் பிழைகள் இல்லாமலிருந்தால் நலமாயிருக்கும்.

தமிழ் இலக்கியம் தற்காலம் : [எ. வி. சுப்பிரமணிய ஐயர் எழுதியது, சாரதா அண்டு கோ; திருநெல்வேலி; விலை ரூ. 1.]

இச்சிறு புத்தகத்தில் தமிழ் இலக்கியங்களின் பண்டைக்கால நிலைமை யும் தற்கால நிலைமையும் சுருக்கமாய்க் கூறப்பட்டிருக்கின்றன. இப்பாஷை யின் தற்காலத்திய தாழ்ந்த நிலைமையை நீக்குவதற்கு வசன காவியங்கள் அவசியமென்றும், அஃதன்றி வடமொழியின் கலப்பால் முன்னர்த் தமிழில் சிறந்த சாஸ்திர நூல்கள் ஏற்பட்டதுபோல் இப்பொழுது ஆங்கில பாஷை யின் சேர்க்கையால் தத்துவசாஸ்திர நூல்களும் பிற காவியங்களும் ஆக்கப் பட வேண்டுமென்றும் கூறப்பட்டிருக்கிறது. அன்றியும் ஆங்கிலப் பதங் களுக்குச் சரியான தமிழ் மறுமொழி கிடைக்காதவிடத்து அப்பதத்தையே யுபயோகிக்க வேண்டுமென்றும் கூறுகிறார். இக்காவியங்கள் இயற்ற எத்தனையோ பேர் இரண்டு பாஷைகளையும் நன்குணர்ந்திருந்தால் இவ்விஷ யத்தில் அதிகக் கஷ்டமுண்டாகாது. நவீன முறைப்படிப் பழைய இலக்கி யங்களைக் குறித்து ஆராய்ச்சிசெய்து எழுதுவது அவசிய மெனவும் கூறுகிறார். இவ்வாறான முயற்சிகள் தமிழின் முன்னேற்றத்திற்கு அவசிய மென்பதில் ஐயமில்லை.

288. கூனி மூத்த குரங்கெனக் கையிலோர்
கோல்பி டித்தே யிருமிக் குலேகுலேந்
தேனே யோரிக மூக்கிழ மாகின்ற
இளமை நாளு மியல்பென் றிருப்பனே. (21)

289. கோழை வாதம்பித் தென்கின்ற மூவரும்
குடியி ருக்குங் குரம்பையிற் றூனுழைந்
தூழி யூழியுந் துச்சிலென் னுததில்
உறைவ னென்ன வுவந்தே யிருப்பனே. (22)

290. தவஞ்சு ருக்கிச்செய் தானஞ் சுருக்கிநற்
றரும நன்னெறி தானுஞ் சுருக்குமே
அவம்பெ ருக்கி யவலம் பெருக்கிமற்
றரிய பாதக மைந்தும் பெருக்குமே. (23)

291. விண்ணி னூடும் வெதுப்பழல் போன்றெரி
வெய்ய வன்னிரை யத்தும் விசையினல்
மண்ணி னூடும் வருவதும் போவதாய்
மாறி மாறி மணியூச லாடுமே. (24)

292. கற்ற றூனுங் கருத்துறக் கற்றன
கருத றூனும் பிறர்க்கவன் காதலாற்
சொற்ற றூனு முணவு குறித்தலாற்
சுருப நன்னெறி தோய்வதற் கல்லவால். (25)

293. இன்ன தன்மை யிழுதை யரசனுக்
கென்று மென்று மிரும்பவ மீண்டவே
துன்னு துன்மதி மந்திரி சூழுமச்
சூழ்ச்சி யார்க்குந் துணியப் படாததால். (26)

---

289. "புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட், டுச்சி லிருந்த வுயிர்க்கு" (குறள், 340) என்பதும், 'வாத முதலியவற்றின் இல்லாய உடம்புகளுள் ஒதுக்கிருந்தே போந்த உயிர்க்கு' (பரிமேல்.) என்ற உரையும் இங்கே அறிதற்குரியன.

290. "அறஞ்சுருக்கு மவலம் பெருக்குமே" அஞ்ஞவதைப்.

291. "நிரையத் தோடு நெடுவான் முகட்டொடுந், தரையத் தோடுந் தனியூச லாடுமே" (அஞ்ஞவதைப்.), "உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத் தடுமாறி யுழலு மாக்கள்" திருவிளை.

293. பவம் - பிறவி. ஈண்ட - அடைய. "இந்த மன்னனுக் கென்றும் பவங்கொள, வந்த துன்மதி மந்திரி யாகுமே" அஞ்ஞவதைப்.

294. தான மில்லை தவமில்லை வண்புகழ்
தானு மில்லை தருமமு மில்லையால்
மான மில்லை மடவார்தங் கற்பிலை
மற்று மொன்றில்லை மாத்தா ளொழுக்கமே. (27)

295. நடலை வாழ்க்கை நிலையா நயப்புற
நாட லின்றி நலங்கொள் படிவமும்
முடலை யாக்கைய தாக வியப்புற
மூக நீதி முடிய மொழியுமால். (28)

296. நீதி யற்றமை தன்னை நினைப்புற
நெடிய மூவுல கத்து நிரல்பட
ஓதி மற்றவர்க் கித்துணை யாயினும்
உணர்த்த வல்லா ரொருவரு மில்லையால். (29)

297. வழுவி நின்று மயங்கி மயங்கிவாய்
மாறி வைகலு மாறு வரும்பவம்
தழுவி நின்று தரணியு ளோர்படும்
தாழ்வு தம்பிரான் றானே யறியுமால். (30)

## சிவஞான தேசிகர் அவதரித்தல்

298. பாச வஞ்ஞன் பழிமா சுலகெலாம்
படர்ந்து மூடும் பரிசு பரானந்தத்
தேசு பெற்றுய ருங்கரு ணையன்
திருவு ளந்தனிற் சென்றேறி விட்டதால். (31)

வேறு

299. மற்ற வஞ்ஞன் மடியத்தன் பேரருள்
முற்று மோர்வடி வாகி முதல்வனே. (32)

---

294. வண் புகழ் - கொடுத்தலால் உண்டாகும் புகழ். மா - விலங்கு. "அற்பு மில்லை யருந்தவ மாதரார், கற்பு மில்லை கழிந்தா ளொழுக்கமே" அஞ்ஞவதைப்..

295. நடலை வாழ்க்கை : " நடலை வாழ்வுகொண் டென்செய்திர் நாணிலீர்" (திருநா. தே.) மூக நீதி : " மூகநீதி முடிய மொழிவதே " அஞ்ஞ வதைப்.

296. " முறையை யற்றமை மூவுல கத்தினும், இறைய வர்க்கறி விப்பாரு மில்லையே " அஞ்ஞவதைப்.

பி - ம். ' நிரம்பட '

299. " தன்பே ரருண்முற்றுந் தானோர் வடிவாயே " அஞ்ஞவதைப்.

300. கயிலை மால்வரை நீங்கிக் கனிவினால்
மயிலை மால்வரை வந்துதித் தோங்கியே. (33)

301. ஆன நாம மவனியு ளோர்சிவ
ஞான தேசிக னென்றேத்த நண்ணியே. (34)

## சிவஞான தேசிகர் பிள்ளைப்பருவ விளையாட்டு

302. அலையெ டுத்த வுலகி னருந்தவம்
தலையெ டுப்பத் தலையெடுத் தூந்தியே. (35)

303. ஒழுக்க முற்று முலகந் தவழ்ந்திட
விழுப்ப முற்றுத் தவழ்ந்து விளங்கியே. (36)

304. வேத நன்னடை மேம்பட மேம்படு
போத நன்னடை போற்றி நடந்தரோ. (37)

305. விச்சை யல்லது வேறொன்றின் மேலெமக்
கிச்சை யில்லென் றிருகா தலைத்தரோ. (38)

306. மூட நீதி முழங்குஞ் சமையப்புள்
ஓட வம்போ ருகக்காங் கொட்டியே. (39)

## ஞானக்கோலம் கொள்ளல்

307. தலைம யங்கிய தத்துவ ஞானநூல்
நிலைபெ றும்படி யாய்ந்து நிலவியே. (40)

308. பிறவி நீள்பகை பேர்ப்பா ரிவரென
அறையு ஞான வருட்கழல் வீக்கியே. (41)

309. அற்ற நீக்கி யபிமான மென்பவை
செற்ற ஞானத் திருவுடை சாத்தியே. (42)

310. இதர நூனெறி யேகாமெய்ஞ் ஞானமாம்
உதர பந்த முவப்பொடு சேர்த்தியே. (43)

311. கோதி னஞ்ஞ னுயிரைக் குடிப்பதோர்
தீதின் ஞான வுடைவாள் செருகியே. (44)

---

302. அலை - அல்லை ; அஞ்ஞானத்தை.

307. நிலவி - நின்று.

308. "பிறவிப் பகைவெல்வார் பிறிதற் றொருதானை, அறிவுற் றவரென்றே யறையுங் கழலிட்டே" அஞ்ஞவதைப்.

311. ஞானவாள் : "என் னவிரோத ஞானச் சுடர் வடிவாள்" கந்தரலங்காரம்.

பி - ம். 'கோத வஞ்ஞன்'

312. கமல யோனி கருத்துங் கடந்ததோர்
விமல ஞான வியன்முடி சூடியே. (45)

313. ஈன வஞ்ஞ னெனும்பாசன் பட்டிட
ஞான பட்டந்த னன்னுதற் கட்டியே. (46)

314. ஊன வஞ்ஞ னுறும்பழி கேட்கிலா
ஞான குண்டல நன்கா தணிந்தரோ. (47)

315. வளரு மஞ்ஞன் மடியத் திருப்புயம்
கிளரு ஞானவண் கேயூரந் தாங்கியே. (48)

316. தூய ஞான சுகானந்த முத்திரை
ஆய வாழி யணிவிரல் சேர்த்தியே. (49)

317. எங்கு மாமண மேறமெய்ஞ் ஞானவண்
குங்கு மாதி குளிர்சாந்து பூசியே. (50)

318. குணம ருது குலவுமெய்ஞ் ஞானமாம்
மணம ருத மலர்மாலை சாத்தியே. (51)

319. கூரு மஞ்ஞன் குலையமெய்ஞ் ஞானமாம்
வீர சங்கிலி பூண்டு விரும்பியே. (52)

320. ஆசி லாத வருள்பொழி ஞானமாம்
மாசி வார மணிவடந் தாங்கியே. (53)

321. சங்க மற்ற சதானந்த வாரிதிச்
சங்க மெங்குந் தழங்கித் தழையவே. (54)

322. பகரி னெங்கும் பரந்தொடுங் காததாம்
நிகரின் ஞானக் கவிகை நிழற்றவே. (55)

323. முதிரு ஞானமுந் நீர்த்திரை யாகிய
எதிரில் வெண்சா மரைக ளிரட்டவே. (56)

324. இணக்க மற்ற வியன்ஞான மாகிய
பிணக்க மற்ற பதாகை பிறங்கவே. (57)

325. தூய ஞான சுதர்சனச் சக்கிரம்
மாய வஞ்ஞன் மறுகச் சுழலவே. (58)

---

312. கமலயோனி - பிரமன்.

315. கேயூரம் - வாகுவலயம்.

316. ஆழி - மோதிரம்.

324. பதாகை - பெருங் கொடி.

## படைகள்

326. கடக்க லாதசங் கற்பங் கடந்ததென்
படைக்கை சான்ற பதாகினி சூழவே. (59)

327. தடையொன் றின்றிச் சலியா வியன்பொறை
நடையொன் றின்மணி நற்றேர் மலியவே. (60)

328. தேசு மேவு செயறீர் குரகதம்
மாசி லாது மருங்குற மன்னவே. (61)

329. அவாவின் மூரி யசல மெனுமர
சுவாவின் மாட்சி யுலகம் வியப்பவே. (62)

## சிவஞான தேசிகர் சுகாசனத் தேறல்

330. ஏறு புள்ளன மென்பவை யாதியா
ஏறு மூர்திக ளெல்லா மிரங்கவே. (63)

331. வெறுத்த செய்தி விரகில்வெங் காலனைக்
கறுத்த பாத கமலஞ் சிவப்பவே. (64)

332. உய்தி யெய்த வுலக முழுவதும்
செய்த புண்ணிய மெல்லாந் தெரியவே. (65)

333. அரணி லஞ்ஞ னவனையொன் றுருவுன்னித்
தரணி தோயத்தன் றாமரைத் தாள்களே. (66)

334. இடரு ழந்தங் கிமையவர் தேடவிங்
கடர்செய் தெங்கு மடியவர் போற்றவே. (67)

335. வேதங் காணரு மேதக்க வன்செயல்
ஓது மாறெவ னென்றல கோதவே. (68)

336. எந்தை யெம்பிரா னெங்குரு நாயகன்
வந்து பூமிசை மானிடர் வாழவே. (69)

337. இன்ன வண்ண மிகன்ஞான கேசரி
துன்னு யோக சுகாசனத் தேறியே. (70)

---

326. என் - என்று சொல்லப்படுகின்ற. பதாகினி - கொடிப் படை.

328. தேசுமேவு குரகதம், செயல்தீர் குரகதம்.

பி - ம். 'செயிர்தீர் குரகதம்'

329. பி - ம். 'உலக மதிப்பவே'

333. "உம்ப ரானவர்க் கரிய தாணுவிவ் வுணர்வி லானையொன் றுருக வுன்னியே, தம்பி ரானருட் கருணை யாலயன் தானும் வந்தனன் றரணி தன்னிலே" அஞ்ஞவதைப்.

## ஒற்றர் அஞ்ஞனிடம் சென்று தெரிவித்தல்

338. இருந்த காலையி லென்றுந் தெளிவிலா
முரிந்த பாசமன் முன்னோடி யொற்றரே. (71)

வேறு

339. முந்து நான்மறை முடியில் வைகிய
மூல காரணன் ஞால மீதினில்
வந்து தித்தனன் மனித னுவெனும்
வார்த்தை யெங்கணும் வார்த்தை யென்னவே. (72)

340. இடுக்க ணின்றியிங் கின்று காறுமே
இனிது வாழுமற் றென்னை யீசனுர்
வடுக்கொண் மானிட னுகி வென்றிட
வந்து ளாரெனும் வார்த்தை வார்த்தையோ. (73)

341. இல்லை யொன்றுமே யென்னு நீருமின்
றிங்கு வேறுள போலி யம்பினீர்
சொல்லு மென்னலு மின்று சொல்லுகோம்
தொல்லை மாநிலஞ் சொல்லும் வண்ணமே. (74)

342. சமய மோதுவார் தம்மை வம்மெனத்
தாமு மங்குள தன்மை கண்டிலம்
அமைய வோதுவா ரோது கின்றவா
றறிய வோதின மரச வென்னவே. (75)

## அஞ்ஞன் கூற்று

343. சொன்ன சொல்லினை மெய்ய தென்பவர்
சுற்ற முற்றவுஞ் சூறை கொள்ளென
மன்ன வன்னிகல் கொண்டு துன்மதி
மந்த்ரி தன்னெடு மலைவ தென்னவே. (76)

---

340. " இனிதினல் வாழு மென்னை யீசனென் ஞெருவன் வெல்ல, மனிதனய் வந்தா னென்னும் வார்த்தையும் வார்த்தை யாமோ " அஞ்ஞ வதைப்.

பி - ம். ' வந்தனரெனும் '

341. "ஒன்றில்லை யெனுநீரு மொன்றுண்டு போலே யுரைத்தீர்க ளென வொற்றர்தாம், இன்றில்லை யென்ஞதி ரேமிந்த வுலகத்தி னியல்கூறி னேமென்னவே " அஞ்ஞவதைப்.

342. தாமுமென்றது சமய மோதுவார்களை.

பி - ம். ' ஓதினமமர்க வென்னவே '

343. " சொன்ஞர்கள் சொன்னத்தை மெய்யென் றிருந்தார்கள் சுற்றஞ் சிறைச்செய்கவே " அஞ்ஞவதைப்.

பி - ம். ' சொல்வினை மெய்ய தென்பவர் ' ' மலைவ தென்னவே '

### வேறு

344. காமன் முதல படைத்தலைவர்
கலங்கா வயவ ரவரிருப்பச்
சேம மில்லா தவர்போலச்
செருவுக் கயர்தல் திறனன்றால். (77)

345. என்று கூறு மமையத்தின்
எழுந்து காமன் றன்னுடைய
வென்றி கூற வறிவில்லா
வேந்தைத் தொழுது விளம்புவனால். (78)

### காமன் கூற்று

346. செய்ய மேனி செம்பாகம்
கறுக்க வந்தச் சிவனுரை
எய்த வாளி யிருப்பவுமற்
றென்னைக் கறுப்பார் வெறுப்பாரே. (79)

347. கோலி யெய்யு மலர்ப்பகழி
கூசித் தொடுப்பப் பாலாழி
மாலின் மார்பின் வடுக்கண்டும்
வருவா ரமர்க்கு வெருவாரே. (80)

348. பூவி லொன்றும் புண்ணியனார்
புதல்வி பொம்மன் முலைதோய
ஏவி லொன்றில் வணக்கியநான்
ஈண்டை மனிதர்க் கெளியேனால். (81)

349. பொன்னு டாளும் யானையொரு
பூனை யாகிப் புறம்போத
அந்நா ளாண்மை செய்தாரும்
அயலா ரேமற் றியானலனால். (82)

---

346. கறுப்பார் - கோபிப்பார். வெறுப்பாரே : ஏகாரம் எதிர்மறை. "பண்டொர் நாண்மலர் பட்டின்று மக்கறைக், கண்டன் மேனிசெம் பாகங் கறுத்ததே" (அஞ்ஞவதைப்.), "விடைவல் லோனும், பாதாதி கேசாந்தம் பாதியுடல் கறுத்து" பிரபோதசந்த்ரோதயம், 26 : 6.

347. மார்பின் வடுவென்றது திருமகள் இருக்கும் இடத்தைக் குறித்தது. "வேலை ஞாலத் தவரென்னை மீறவோ, மாலின் மார்பின் வடுக்கண்டு வைத்துமே" அஞ்ஞவதைப்.

348. புண்ணியனார் - பிரமதேவர். புதல்வி யென்றது திலோத்தமையை. வணக்கிய - வளைத்த. "விதியு மென்றன் விதியினை வெல்லுமோ, மதிய ழிந்து மகட்கு மயங்குமே" அஞ்ஞவதைப்.

350. அள்ளி யவுண ருயிர்குடித்த
அயிலோன் புயபூ தரமனைத்தும்
வள்ளி படர மலர்பறித்துத்
தொடுத்தே னின்று விடுத்தேனே. (83)

351. மதியா ரான கலாதரனர்
மயங்கிக் குருவின் மனையாளைத்
துதியா ரிமையார் பலர்காணத்
தோயப் பொருதார் பிறரேயால். (84)

352. நன்று போல முன்னெய்தி
நஞ்சு போல நனிகாந்திக்
கொன்று ஞாளி யெனப்பெருமால்
கொடுப்பேன் வென்று படுப்பேனல். (85)

353. பெற்றாள் வயினுந் தன்வயிற்றுப்
பிறந்தாள் வயினு மோருதரத்
துற்றாள் வயினு முறவுள்ளம்
ஒர்வா ளியினு லுடைப்பேனல். (86)

354. எண்ணு மாறே துணிவிப்பன்
இசையார் தமையு மிசைவிப்பன்
நண்ணு மாறே முன்னெடுபின்
நாடா வண்ண நலிவேனல். (87)

355. சாந்தங் கொண்ட தபோதனரும்
தடமென் முலையார் தம்பிறகே
காந்தங் கொண்ட விரும்பென்னக்
கவ்விச் சுழலக் கலக்குவனல். (88)

356. தண்ணென் மதியை யழலென்றும்
சாந்த மதனை விடமென்றும்
வண்ண மலரை யரமென்றும்
மயங்கத் தியங்க மலைப்பேனல். (89)

357. கொந்தார் மலர்ப்பூந் தாதளைந்து
குளிர்ந்து மெல்லக் குலவிவரு
மந்தா நிலமாந் தேர்கடவின்
மாற்ற வெனையா ராற்றுவரே. (90)

---

350. அயிலோன் - முருகக் கடவுள்.

358. சித்த மெவையுந் தனைப்போலத்
தெருமந் திருள வருங்கங்குல்
மத்த யானை மேற்கொண்டால்
வாகை புனைவார் மானிடரே. (91)

359. தரங்க வுததி யெனவிண்ணிற்
ருவுஞ் செவ்வாய்ப் பசுங்கிள்ளைத்
துரங்க மேறி யுகைக்குங்காற்
றேலார் ஞான நூலாரே. (92)

360. பொன்னிற் குலவு மோரிரண்டு
பொருப்பு விருப்பி னுடன்பரித்து
மின்னிற் குலவு மென்படைக்கு
மெலியா தெவரே வலியாரே. (93)

361. மேவுந் தேமா மலர்க்காவின்
விரைத்தா தாடித் தளிர்கொழுதிக்
கூவுங் குயிற்கா களவொலியாற்
குழையார் மற்றெவ் வுழையாரே. (94)

362. ஓவா விரவா மும்மதத்த
உபய வயக்கோட் டொருத்தலின்மேற்
ருவா மதிவெண் குடைகண்டாற்
ருங்கி நிற்பா ரீங்காரே. (95)

363. காவி லன்றி லிருந்திரங்கக்
கழுநீர் மலர்ந்த கழிக்கானற்
ருவில் கடற்பே ரிகை முழங்கிற்
றரிப்பார் துறவு பரிப்பாரே. (96)

வேறு

364. பொருப்புச்சிலை யேமுதல் புன்சிலையென்
கருப்புச்சிலை யின்வலி காட்டுவதே. (97)

365. எந்நா ணுள நாள்பல வெத்துணையும்
என்னுணுள பூவிடை யேறுவதே. (98)

---

359. தரங்க உததி - அலைகளையுடைய கடல்.
360. பரித்து - தாங்கி. படை யென்றது பெண்களை.
362. ஒருத்தல் - யானை. தாங்கி - தடுத்து.
364. பொருப்புச் சிலை - மேருமலையாகிய வில்.
365. பி - ம். 'என்னுணுள நாள்பல'

366. அஞ்சாவலர் வெங்கணை யெங்கையவேல்
அஞ்சாவலர் வெங்கணை யங்குளதே. (99)

367. புண்வேலெறி தப்பினும் போர்ப்படையின்
கண்வேலெறி தப்பினர் காணெவரே. (100)

368. அங்கங்குமி றங்திற மங்களமென்
சங்கங்குமி றிற்சமர் வேறுளதே. (101)

369. பொருப்புக்குடை யார்முதல் பூண்முலைமா
மருப்புக்குடை யாரெவர் மன்னவனே. (102)

370. எத்தேர்நிலை வுற்றிடி னும்பொருவ
தத்தேரணி பெற்றக லல்குலதே. (103)

வேறு

371. போதுவிரி காவுமொளி பொங்குமண லாறும்
பூகவன முந்தடமு மோடைபொலி கின்ற
தாதுவிரி கானலொடு தாவிலிசை யெழுநம்
தாரணிவி டாதெனது போரணிவி டாதால். (104)

372. பாலிதுகொல் தேனிதுகொல் பாகிதுகொ லினிய
பழமிதுகொ லமுதிதுகொல் பண்ணிதுகொல் காம
நூலிதுகொ லெனமகளிர் நுவலுமொழி யுளதேல்
நுண்ணுணர்வு ளுதெனது நோன்மையும ளுதால். (105)

373. சேவின்மணி யோசையொடு செய்யகுழ லோசை
செவிப்புல னுழைந்தளவி லேயுருகி நைந்து

---

368. அம் களம் என் சங்கம் - அழகிய கழுத்தென்னும் சங்கு.

369. பொருப்புக் குடையார் - திருமால்.

371. "தேனிலவு பூகவன முந்தடமு மியாறுஞ் செய்யவிசை யேழுமுயி ருய்யவரு காலும், வானிலவு மாளிகையும் வாணிலவு மென்கை மாமலருமுள்ளளவும் வந்துணர்வு ளுதே " (அஞ்ஞவதைப்.), " மேவுமென் னுதவியாம் வீணையு மேடையும், காவுநன் னதிகளுங் கலவையும் புதுமணற், பாவுதண் குன்றமும் பஞ்சவா சமுநறும், பூவுமுள் ளளவுமார் போதமுள் ளார்களே " பிரபோத. 26 : 16.

371. பூகவனம் - கமுகந் தோட்டம்.

பி - ம் 'யேழும்'

372. நோன்மை - வன்மை.

தாவின்மயல் கொண்டுவிழு மானிடர் தமக்கே
சமர்க்குடைவ னேஸினிய தென்சமர் தரைப்பால். (106)

வேறு

374. மறந்தவர்க ளல்லர்மட மாதரை மனத்திற்
றுறந்தவர்கள் போல்வரவர் சொல்லுமொரு சொல்லோ. (107)

375. கனவின்மட மாதரியல் கண்டுருகு வாரே
நனவினவ ரியல்கரண நசைபெருக லாரோ. (108)

376. வள்ளவள வுள்ளமுலே வஞ்சியிடை நல்லார்
உள்ளளவு மிங்கெனேயு டைப்பவரு முண்டோ. (109)

வேறு

377. கண்வலேப் பட்ட மீனம் பிழைத்தலு மொருகாற் காண்டும்
பெண்வலேப் பட்ட மாந்தர் பிழைத்ததுண் டாகிற் பேசும். (110)

378. புணர்முலேத் தூகம் பூட்டிப் புருவவில் லுருவக் கோலி
உணர்வற வல்குற் பொற்றே ரூர்வரேல் யாவ ருய்வார். (111)

வேறு

379. தொடுப்பனவு மைங்கணேயே தொல்லுலக மொருமூன்றும்
படுப்பனவு மவைகொண்டே பராசயமு மெனக்கின்றே. (112)

380. ஒருருவை யீருருவா யுடைக்கின்ற துலகம்பே
ஈருருவை யோருருவா யிசைக்கின்ற தெனதம்பே. (113)

381. பூவாளி யீதென்பார் பொருளறியார் பொருளறிவார்
பூவாளி யீதென்பார் பொருவாளி யைங்கையுமே. (114)

## கோபன் கூற்று.

வேறு

382. என்று காம னிகலேற் றிருத்தலும்
துன்று கோபன் றெழுதிது சொல்லுவான். (115)

---

373. சேவின் மணி - காளையின் கழுத்திற் கட்டப்படும் மணி.
377. கண் என்றது வலேயின் இடை வெளியை.
379. பராசயம் - தோல்வி.
380. 52-ம் தாழிசையைப் பார்க்க.

## வேறு

383. தெள்ளியது வெனச்சிவனர் செழுங்கமலா சனர்சென்னி
கிள்ளியது மென்னுடைய கெம்பீரம் பிறிதின்றால். (116)

384. கடல்கனலச் சிலைகோலிக் கரைகோலிப் பசுந்துளவோன்
உடல்கனலத் தசமுகனை யொறுத்ததுமென் னூற்றமதால். (117)

385. பார்த்தோர்க்குப் பழியாகப் பசுங்கதிர்கால் வெண்மதியை
வேர்த்தோனும் வேறலனென் விதிபிழையா விநாயகனுல். (118)

386. சூரறுத்து மலையறுத்துத் துரிசறுத்தோ னவுணர்கிளை
வேரறுத்து நிலைநிறுத்தும் விசயமுமென் விசயமதால். (119)

387. நக்கனர் வெகுண்டேவ நனிவீர பத்திரனர்
தக்கனர் மகஞ்சாயச் சாடியதென் சதுராமால். (120)

388. குரங்குமுக வெனவயிரங் கொண்டிருபஞ் சானனனைக்
குரங்குகளி னழிகவெனக் கொதித்ததுமென் கொற்றமதால். (121)

389. சந்திரனை வைதழன்ற தக்கனே வகல்வானத்
திந்திரனை வைதழன்ற விருந்தவனு மென்வசமால். (122)

390. சீர்முகந்த முனிவையச் சீறியெதிர் வைதழல
நீர்முகந்த நிருபனுமென் னெறிபிழைத்தா னல்லனல். (123)

391. இரக்கமின்றி யயலொருவ னிடுந்தசைகண் டிகலாசை
அரக்கனென்ற விருந்தவனென் னுணைவழி நின்றவனல். (124)

392. திருந்துமொரு மகப்பரியைத் தேடறுபா னுயிரவர்
அருந்துகளாய் விழக்காயு மவனுமென தடித்துகளால். (125)

---

383. கெம்பீரமென்பது இங்கே ஆழமென்னும் பொருளையுடைய தன்று. "ஓதிமனையோர், சிரமறச் செய்ததார் தேர்வுறுதார்களே" பிரபோத. காமனுதியர் வீர. 26.

384. "மறுக வுக்கிரத் தொழில ரக்கர்தம் மனமும் வாரியு மதிளிலங் கையுங், தெறுகனற் கொளச் சிலைவ ளைத்ததும் சிரமு திர்த்ததஞ் சினமிகுத் தவே" அஞ்ஞவதைப்.

386. விசயம் - வெற்றி.

388. இருபஞ்சானனன் - இராவணன். கொதித்தவன் நந்தி.

389. இருந்தவன் - தூர்வாசர்; கௌதமமுனிவரெனினுமாம்.

390. முனி - வசிட்டர். நிருபன் - கல்மாஷபாதன் என்னும் அரசன்.

391. இருந்தவன் - வசிட்டர்.

392. அறுபானுயிரவர் - சகரர். அவன் - கபிலமுனிவர்.

பி - ம். 'மகத்தவரத் திகழுமாக வாயிரமு மருந்துகளாய்' அரக்கன் என்ற - அரக்கனுகக் கடவாயென்று சபித்த.

393. அணியாக முடிசூடி யகல்விசும்பு புரப்போனைப்
பணியாகப் பணித்தவனு மென்பணியிற் பயின்றேனால். (126)

## அஞ்ஞன் கோபனைப் புகழ்தல்.

394. வெங்கோபன் றனுமிள வேனில்வேள் போலுநெடும்
பொங்கோத நிலத்தென்னைப் புரவலனும் புகழ்ந்தனனால். (127)

## கோபன் மீண்டும் கூறல்.

395. போலுமென வறிவுற்ற புரவலனர் புகழ்தலுமே
சாலுமிது சாலுமெனச் சலனணிச் சாற்றுவனல். (128)

396. வென்றிடினுங் காமனையே வெல்வதன்றி மற்றெனைத்தாம்
பொன்றிடினும் வெல்லவொரு பூதரையுங் கண்டிலனால். (129)

397. அடுங்காமன் பொடியாக வழல்கொழிக்கு மொருகுளத்தார்
கொடுங்கோபற் குடைந்தன்றே கொடிமதின்மூன் றெரித்தனரால். (130)

398. வீரத்தி னெனக்குடைந்தோ வேள்கணைக்கோ வேதமுனி
தாரத்தின் சிரந்துணிப்பத் தனையனுடன் சாற்றியதால். (131)

399. வேளைவென்ற வீடுமனர் வீறுபதி னுயிரந்தேர்
ஆளைவென்று சோடவிழ்ப்ப வழன்றதுநீ ரறியீரால். (132)

400. சேர்ந்தாரை யெழிப்பதுசெந் தீயதுதா னிகரோநான்
சார்ந்தாரை யழித்தவர்தஞ் சார்பினையு மழிப்பேனல். (133)

401. நகையுமுவ கையுமழிக்கு நானொழிய வேறுசில
பகையுமட வேண்டுமோ பவங்கடியும் படிவர்க்கே. (134)

---

393 புரப்போன் - நகுஷன். பணியாக - பாம்பாகும்படி. பணித்தவன் - அகத்திய முனிவர்.

395. சலன் - கோபன்.

397. குளத்தார் - நெற்றியையுடையவர். அழல் கொழிக்கும் குளத்தார் என்றது ஒரு நயம்.

398. வேத முனி - ஜமதக்கினி. தனையன் - பரசுராமர்.

400. ''சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும், ஏமப் புணையைச் சுடும்'' (குறள். 306.) சார்பென்றது முற்றத் துறந்து தவஞானங் களாற் பெரியராய்க் கேட்டார்க்கு உறுதி மொழிகளை இனியவாகச் சொல்லுவாரை.

401. பவம் - பிறப்பு. படிவர் - துறவிகள். ''நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற், பகையு முளவோ பிற'' (குறள். 304) என்பதும், 'துறவாற் புறப்பகையிலராயினும் உட்பகையாய் நின்று அருண் முதலிய நட்பினையும் பிரித்துப் பிறவித் துன்பமுமெய்துவித்தலான், அவர்க்குச் சினத்தின் மிக்க பகையில்லையாயிற்று' என்ற அதன் விசேட உரையும் இங்கே அறிதற்குரியன.

402. எனையெதிர்ந்தான் கேடுநில மிலக்காக வெடுத்தங்கை
தனையெறிந்தான் காமுலகிற் றப்புகினுந் தப்பாதால். (135)

## உலோபன் கூற்று.

### வேறு

403. கோப னின்னதன் கொற்றம் புகலலும்
லோபன் வென்றி நுவலத் தொடங்குவான். (136)

404. மலையோடி மிசையேற மலைவிப்பன் மற்றும்
அலையோடி வசையேற வலைவிப்பன் யானே. (137)

405. மிகுபார சுமைகொண்டு வேசரிக ளொப்ப
உகுபார வழிசெல்ல வுலைவிப்பன் யானே. (138)

### வேறு

406. தாயுண்டோ தாதையுண்டோ தாரமுண்டோ தான்பயந்த
சேயுண்டோ தானுண்டோ வெனைச்சேருந் திருவிலிக்கே. (139)

407. உடையுண்டோ வயிறார வுண்டியுண்டோ கனவினுமோர்
கொடையுண்டோ குருவுண்டோ வெனையெதிருங் குணமிலிக்கே.(140)

408. பாரோடு விண்வரினும் பற்றுள்ள முற்றுள்ளார்க்
காரோடு முறவுண்டோ வருளுண்டோ வவர்தமக்கே. (141)

409. காடில்லை யரணில்லை கடலில்லை மலையில்லை
பீடில்லை நானுளனேற் பெருமிதமு மின்றேயால். (142)

410. தாயினைவிற் றமைவர்கொண்ட தாரமும்விற் றமைவர்பெற்ற
சேயினைவிற் றமைவர்நான் சேர்ந்தமையு மமையத்தால். (143)

---

402. எதிர்ந்தான் - ஏற்றுக் கொண்டவன். "சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு, நிலத்தறைந்தான் கைபிழையா தற்று" குறள். 307.

404. "அடலோப னெழிலேவ ரமைவார்க ளடையக், கடலோடு மலையோடு தமோறல் காணே" (அஞ்ஞ.), "தங்குபுவி மாந்தரெவர் தாமுமுணர் வின்றிப், பொங்கிரவு நண்பகலோர் போதுமொழி யாதே, அங்கடவி நாடுமலை யாழ்கட லிவற்றூே, டெங்குமுலை கின்றதமெ னிச்சையிய லன்றோ" பிரபோத. காமனுதியா. 37.

405. பி - ம் 'வேசரிக்கொப்ப'

408. "பேரோத நோான போராசை கூர்போ, தாரோடு முண்டோ வொரன்பென்ப தங்கே" அஞ்ஞ.

411. கீர்த்திதனை யகற்றுவார் கிளர்பழிக்கு நாணுூர்
ஆர்த்திதனை யகற்றுவார் நானகலா தமைவேனேல். (144)

412. துறந்தார்க்கு மாதுலர்க்குந் தொடர்பின்றித் தன்பால்வந்
திறந்தார்க்குங் களைகண்ணு வெய்துவரோ யானெய்தின். (145)

413. ஓதுதொழி னிலையவர்க்கு முயர்கான நிலையவர்க்கும்
ஏதுதொழி லெனமதிக்கு மிடர்களைய விசைவேனே. (146)

414. தென்புலத்தா ரொடுதெய்வம் விருந்தொக்க லானென்ற
ஐம்புலத்தா ரோம்புதலங் கடைவாரோ யானடையின். (147)

415. பார்த்தனையிங் கிவர்க்கொக்கும் படைக்கென்று பகர்வதுமோர்
சாத்தனையிந் திரனென்று சாற்றலுமென் சமற்காரம். (148)

416. மாலென்று முருகனென்றும் வறியவராம் பறவைக்கோர்
ஆலென்றும் புகழ்வதுமென் னுணையினு லாமன்றே. (149)

417. நவநிதிக்கு மிறையவனை நட்புற்றும் நானேவ
அவனிதிக்கு முடியவுழந் தானுமைய மெடுத்தனனுல். (150)

418. வாமனனுய் மாவலிபால் மண்ணிரந்து மால்பின்னர்
வாமனனுய் முழுதெய்த வளர்ந்ததுமென் வலியாமால். (151)

419. பொன்னுலகு புரந்தருளும் புரந்தரனு மங்கர்கோன்
தன்னுலகு புகுந்திரப்பப் பணித்ததுமென் சதுராமால். (152)

---

411. ஆர்த்தி - துன்பம். அகற்றுவார் - பெருகச் செய்வார்.

412. "துறந்தார்க்குந் துவ்வாத வர்க்கும் இறந்தார்க்கும், இல்வாழ்வா னென்பான் துணை" குறள். 42.

414. "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங், கைம்புலத் தோம்ப றலை" குறள். 43.

415. பார்த்தனை - அருச்சுனனை ; "மிடுக்கிலாதனை வீமனேவிறல் விசயனேவில்லுக் கிவனென்று......கூறினுங்கொடுப் பாரிலை" தே. சுந்தர. சாத்தனை இந்திரனுக்கு ஒப்பாகச் சொல்லுதல் இறப்ப உயர்ந்த ஆனந்த வுவமையாகும் ; யா. கா. ஒழிபு. சூ. 9, உரை. சமற்காரம் - சாதுரியம்.

417. இறையவன் - குபேரன். அவனிதிக்கு முடிய - அவனியி லுள்ள திசைகள் முழுவதும்.

418. வாம் மனனுய் முழுது எய்த - தாவுகின்ற மனத்தையுடைய வனுகி மூன்றடி முழுமையையும் அடைய.

417 - 8 "ஆலஞ்சேர் மிடற்றானு மையத்திற் குழந்திலனோ, மாலும் போய் மாவலிபான் மண்வேண்டி நின்றிலனோ" (அஞ்ஞ), "பலியீசனு மெடுத்தான், மாவலியை மூவடிமண் மாயனுமிரந்தான்" பிரபோத. காமனு தியர். 36.

419. அங்கர்கோன் - கன்னன். உலகு - தேயம்.

420. நொய்தாய நீர்தனிலும் நுண்ணியது நெய்யதிலும்
வெய்தாய புகைபதிலு மெலிவர்நான் வெகுண்டக்கால். (153)

421. ஈயீட்டு மதுவென்ன விருநிதிக ளெத்திசையும்
போயீட்டு மதுவன்றிப் புசிக்கநான் பொருந்தேனல். (154)

422. சொல்லாத பொய்யுளதோ தொடர்ந்தனனே னுலகாளும்
சல்லாபம் பெறவன்றே தருமனும்பொய் சாற்றியதால். (155)

423. கவிகையெடுத் தயலொருவன் கடும்பரிப்பின் கறங்குவராற்
சிவிகையெடுத் தயலொருவன் சேவடியும் வருடுவரால் (156)

## மோகன் கூற்று.

### வேறு

424. உலம்பியின்ன வண்ணமங்கு லோபனின் றுரைத்தலும்
வலம்படுந் திறத்துமோகன் வாய்திறந்து கூறுவான். (157)

425. ஈசனும மில்லையாக வென்னையொப்ப யாவனே
நேசனாகி யெங்குமாய் நிறைந்துநிற்க வல்லனே. (158)

426. நாடநாட வென்னையோர்ந்து நல்லநல்லவென்றுமேல்
ஓடவோட வவதியின்றி யோடவல்லன் யாவனே. (159)

427. நிலையில்வாழ்வு கானனீரி னீரதென்ன யாவர்தாம்
உலைவிலாம லுள்ளகாறு முணரவல்ல ருரைமினே. (160)

428. சத்தைமித்தை யாகவேறு தலைமயக்கி நிலையிலா
மித்தைசத்தை யாகவே விளைப்பதேயென் விசயமால். (161)

429. பெருவிருப்ப மன்றியே பிடித்துநா னலைப்புழி
அருவருப்பு முண்டுபோலு மங்கியொத்த வர்க்குமே. (162)

---

420. "நீரினு நுண்ணிது நெய்யென்பர்" (நாலடி) என்ற செய்யுளைப் பின் பற்றி வந்தது.

421. "உடாஅது முண்ணாதும்" (நாலடியார்) என்ற செய்யுளைப்பின் பற்றி வந்தது.

422. "உரையாத பொய்யுண்டோ வுலோபனே யுற்றக்கால், தரை யாளும் பொருட்டன்றே தருமனும்பொய் சாற்றினனே" அஞ்ஞ.

423. பரிப்பின் - குதிரைக்குப் பின்னே.

424. உலம்பி - முழங்கி.

425. "ஈசனெனி யோரிடத்து நிகழா வண்ண மெவ்வுருவுந் தன் னுருவா யெங்குந்தானும், ஆசையவன்" அஞ்ஞ.

பி - ம் 'என்னை யொத்து'

427. நீரின் நீரது - நீரினது தன்மையை உடையது.

429. அங்கி - நெருப்பு. ஒத்தவர் - தூய்மையை உடையவர்; என்றது ஞானிகளை.

430. தூக்கமீது சுகமெனச் சுத்தவெட்ட வெளியிலே
எக்கியாரும் வீழநா னிந்த்ரசாலம் வல்லனே. (163)

431. பழுதைசீறு மரவெனப் பதறியோடி யஞ்சிவீழ்ந்
திழுதையாய் மருங்கொடிந் திடவியற்ற வல்லனே. (164)

432. மலத்தின்வீழ்ந்து சூகரம் வாய்மடுப்ப மற்றதும்
நலத்ததாக வாக்குவே னுனலாமல் யாவனே. (165)

433. நரம்பெலும்பு தோல்வழும்பு நாறுமூளை பீளையாம்
வரம்பிலூனை மாதராய் மயக்குவிக்க வல்லனே. (166)

## அகங்காரன் கூற்று

434. என்றுகூறி மோகனங் கிருத்தலு மெனக்கெதிர்
ஒன்றுமில்லை யென்றகங் காரனின் றுரைப்பனல். (167)

## வேறு

435. வம்சமதிற் பெரியேன் வடிவதனிற் பெரியேன்
வாழ்வுமிகப் பெரியேன் வாய்மைதனிற் பெரியேன்
அம்சமதிற் பெரியே னுண்மைதனிற் பெரியேன்
ஆரெனையொப் பவரெனு வமைபவன்யா னலனே. (168)

436. சோதிமிகப் பெரியேன் றொல்புகழிற் பெரியேன்
சுற்றமதிற் பெரியேன் கொற்றமதிற் பெரியேன்
ஓதிமிகப் பெரியே னுண்மைதனிற் பெரியேன்
ஒப்பவர்யா வரெனு வுயர்பவன்யா னலனே. (169)

437. கேள்விதனிற் பெரியேன் கேதமதிற் சிறியேன்
கேழ்மைதனிற் பெரியேன் கீழ்மைதனிற் சிறியேன்
வேள்விதனிற் பெரியேன் வீணதனிற் சிறியேன்
மிக்கவர்யா வரெனு விழைபவன்யா னலனே. (170)

438. தானமதிற் பெரியே னூனமதிற் சிறியேன்
தவமதனிற் பெரியே னவமதனிற் சிறியேன்
மானமதிற் பெரியே னீனமதிற் சிறியேன்
மற்றெவரொப் பவரெனு மலைபவன்யா னலனே. (171)

---

433. பி - ம். 'பூளையாம்.'

435. வம்சமதிற் பெரியேன்: "உங்களினெண் மடியான் வம்சமதிற் பெரியேன்." அஞ்ஞ.

436. ஓதி - ஞானம்.

437. கேதம் - துயர்.

வேறு

439. உங்களினு மெண்மடங்கு பதின்மடங்கு நாமுயா
உயர்ந்தோ மென்னுத்
தங்களிற்ரு மிகல்புரியப் புரிவதன்றே வெனதுபெருந்
தலைமை யாதல். (172)

440. நீயடா வெனக்கொப்பாய் நில்லடா நில்லென்று
நிறுத்திப் பின்னர்
வாயெடா வகைபுரிந்து மதர்ப்பதன்றே வெனதரச
வாகை யாதல். (173)

441. தானேநான் மறையோதுஞ் சதுமுகன்மா லவனெனக்குத்
தரமோ வொப்பான்
நானேநா னெனவுயரு நல்லாண்மை பெரிதுடையேன்
நானே யாமால். (174)

442. மாருகத் துறக்கமொன்று மறுக்கமற வகுப்பனென
மதித்துப் போந்து
வேருகப் படைத்தவனு மென்னேவல் பிழையாமல்
விளைத்தோ னுமால். (175)

மற்சரன் கூற்று

வேறு

443. நம்மத முற்று மிம்முறை யென்ன
நாட்டி மதத்த னீட்டி யுரைப்ப
விம்மித முற்றுத் தம்முறை முற்றும்
விற்சர நேரு மற்சர னேதும். (176)

வேறு

444. இம்மையினும் விபவங்க ளத்துணையுங் கெடுத்தென்னை
எதிர்ந்தான் றன்னை
அம்மையினு நிரயத்தி னழுந்திலனே லெனையழுக்கா
றலனென் பீரால். (177)

---

442. படைத்தவன் - விசுவாமித்திர முனிவர்.

444. விபவங்கள் - ஆக்கங்கள். எதிர்ந்தான் - ஏற்றுக்கொண்டவன். அம்மை - மறுமை. “ அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும் ” குறள், 168.

445. கொடுப்பதனைக் கொடாதவகை கோட்டிவிய வெனையெதிரிற்
குபேர னேனும்
உடுப்பதுவு முண்பதுவு மின்றாகக் கிளையினொடும்
ஓறுப்ப னேயால். (178)

446. பண்போய குறளுருவாய்ப் படியிரக்கு மொருவனுக்குப்
பழுதொன் றூற்றிக்
கண்போய வவனன்றிக் கண்ணுடைய நீருமென்போர்
காணீர் போலும். (179)

447. அறிவினொ டுருவாக்கம் யார்மாட்டுக் கண்டிடினும்
அவைபொ றாது
செறிவினொ டறச்சீறிப் புழுங்குவதன் றோவெனது
செய்கை யாதல். (180)

## துன்மதி கூற்று

448. அழுக்காற்றா னிவ்வண்ண மறைந்தமைய விவையனைத்தும்
அறையக் கேளா
இழுக்காற்றா னிறைவனொடு துன்மதிமந் திரியிவ்வா
றியம்பு வானல். (181)

449. ஞானமே தன்மவித்த காமமெனு மொருநான்கும்
நந்த நந்தும்
ஊனமே லொன்றுமிலா நம்படையி னூக்கமெவர்
உரைக்க வல்லார். (182)

---

445. வியவு - ஏவுகின்ற; "கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்ப தூஉம், உண்பதூஉ மின்றிக் கெடும்." குறள், 166.

பி - ம். 'கொட்டிவிய.'

446. குறளுரு - வாமனாவதாரம். கண்போய அவன் - சுக்கிராச் சாரியார்.

447. "அன்னியற் கறிவுரு வாக்கங் கண்டுகே, டுன்னியுட் பொறு மையா முருவி னேனுடன், தன்னிலுட் புழுங்குமத் தன்மை யேவடி, வென்னுமென் னசூயையை யாவர் வெல்வரே." பிரபோத. காமனுதியர் வீரலாபச். 64.

449. வித்தம் - பொருள். "ஞான மாசில் தன்மவித்த காமநாம நாலை யும், ஈனமாக்கு நம்படைக்கொ ரெல்லைசொல்வ தெம்மனே." அஞ்ஞ.

450. அன்னவனும் வியந்துரைப்ப வஞ்ஞனெனுங் கொடும்பாச
அரச னம்மா
முன்னவனு மொருவனுண்டோ வெனவிருந்தான் சேனையுந்தான்
முழங்கிற் றேயால். (183)

## ஞானவினோதன் கூற்று

### வேறு

451. எந்தை யெங்கோன் சிவஞான தேசிகன்
இரும ருங்கினு மெங்கு மிருக்குநற்
சிந்தை யன்பாற் கனிவோரின் முன்புறச்
செய்த மாதவன் சென்றெதி ரெய்தியே. (184)

452. போற்றி போற்றிமெய்ஞ் ஞான புரந்தர
போற்றி போற்றியென் றேபுண்ட ரீகத்தை
மாற்றி யேற்றம் வழங்குசெஞ் சேவடி
மௌலி தாழ்த்து வணங்கி வணங்கியே. (185)

453. கலையொ துக்கித்தன் வாய்புதைத் தெம்பெரும்
கருணை நாயக கண்டருள் செய்கென
நிலையொ துக்கிவெம் பாசன் விளைத்தமை
நின்று விண்ணப்பஞ் செய்தய னிற்பவே. (186)

### வேறு

454. பழியுற்ற பாசமன்ன னவனல் வையம்
படுந்துயரங் கேட்டருளிக் கருணை மாரி
பொழியுற்ற திருக்கடைக்கண் சாத்திப் பாத
புண்டரிக மடியர்முடி பொலிய வைத்தே. (187)

455. வேதனு ரணனறியாப் பாதஞ் சூட்ட
மேதினிமே லெழுந்தருளும் விமல போத
நாதனர் திருக்கடைக்கண் பெற்று ரன்றே
நானதுவா னேனென்னு நலத்தி னரே. (188)

456. எம்பிரா னெங்கோமா னெங்க ளையன்
எமையாளுஞ் சிவஞான குரவ னென்னும்
தம்பிரா னடிசூடப் பெற்று ரன்றே
தற்சொரூ பானந்தந் தனைப்பெற் றாரே. (189)

---

451. மாதவன் - ஞான வினோதன்.

455 - 6. இவை படர்க்கைப் பரவல்.

457. வன்பாசத் தளையறுத்து மயக்கந் தீர்ந்து
மாமாயா புரமழிப்பார் வானோர்க் கெய்தா
நின்பாத புண்டரிக நீங்கா ரன்றே
நீங்குவா ரெவருலகி னீங்க வல்லார். (190)

வேறு

458. நன்மையில்லை தீமையில்லை சுசீலமு மில்லை
நாடுவதொன் றிலைபுரியு நற்றவமு மில்லை
மென்மையில்லை வன்மையில்லை விருப்புவெறுப் பில்லை
மேலோய்நின் பதகமலம் விடாதவருக் கன்றே. (191)

459. குலமில்லை குணமில்லை குறியதுவு மில்லை
கோலமில்லை கரணமில்லை குளிர்புனலு மில்லை
நலமில்லை வழியில்லை யாச்சிரம மில்லை
நற்கருணை லயநின்று ணயந்தவருக் கன்றே. (192)

வேறு

460. பாலருட னுன்மத்தர் பசாச ரென்னப்
பாடியுமா டியுமவைகள் பயிலா தேயும்
சீலமுட னினிதிருந்துந் தனித்து மெங்கும்
திரிபவர்நின் றிருவடிக்கீழ்ச் செறிந்தா ரன்றே. (193)

461. வார்பொருது பணைத்திறுமாந் தெழுந்து விம்மும்
வன்முலையின் மூழ்கிடினு மயக்கந் தீர்வார்
சீர்பெருகு சிவஞான தேசி காநின்
திருவடியே யன்றியார் தீர்க்க வல்லார். (194)

## சிவஞானதேசிகர் ஞானவினோதனைப் போர்புரிய விடுத்தல்

462. இவ்வண்ணம் பலவியம்ப வினிது நோக்கி
எந்தைபிரா னியன்ஞான வினோத னைச்
செவ்வண்ண மஞ்ஞனவ னவி யுண்டு
திரும்புகென வருள்செய்தான் செய்த லோடும். (195)

---

457. "வருபாசக் கட்டறுத்து மாமாயா புரமழித்து மயக்கந் தீர்வார், சொருபானந் தாநினக்குத் தொழில்செய்வார் பிறராலும் தொலைக்க லாமோ.' அஞ்ஞ.

461. "கச்சொருவுங் கனதனத்தார் கலவியினும் புலவியினும் கலக்கந் தீர்வார், மெய்ச்சொருபா னந்தநினை மெய்ப்படத்தாம் பெற்றவரே வேறார் வல்லார்." அஞ்ஞ.

457 - 61. இவை முன்னிலைப் பரவல்.

## ஞானவிநோதன் அகலுதல்

463. எங்கோமா னெம்பெருமா னெங்க ளீசன்
இணையடித்தா மரைமுடிமே லினிது சூடித்
தங்கோமான் றனைவிடைகொண் டகன்று னன்னோன்
தனித்தானை யெழுச்சியெவர் சாற்ற வல்லார். (196)

## ஞானவிநோதன் படைத்திறம்

வேறு

464. தேசுப டாத யோக வாசி பூணுவ
தீமைபொ ருது மாக மூடி யோடுவ
சீர்தவ ருமல லேக வீதி போவன
சீலம்வி டாத மோன வீர ரூர்வன
மாசுப டாத வேத கீத வோசைய
மாலையு ருது வாச ஞதி வீசுவ
வாய்மையு லாவி ஞான தீர மேபெறு
மாரத ராசி கோடி கோடி கோடியே. (197)

465. தூய்மையு ருத வாதை சாகை சாடுவ
சோதிய லாத மோக சாலம் வீசுவ
தோடமி லாத வேக போக மேவுவ
சோகமு ருத மோன வீர ரேறுவ
வாய்மையு ருத மூக யூக மோதுவ
மானமி லாத யோக வீதி போவன
மாமத மாறி ஞான தீர மேபெறு
வாரண ராசி கோடி கோடி கோடியே. (198)

466. வேரொடு மூல மாயை மாய வேறுவ
வேறறும் யோக மான வீதி போவன
மீளரு மூழி யூழி மீள மீள்வன
வீரிய மோன சீல ரேறி யாடுவ
பாரொடு கீழு மேலு மோடி நீடுவ
பாவும ஞதி கூடொ ஞது தாவுவ
பாசவி ரோத ஞான தீர மேபெறு
பாய்பரி ராசி கோடி கோடி கோடியே. (199)

467. ஊனமி லாத வேத நீதி போவன
ஓகைவி டேதம் யாது மோவி லாதன
ஊறுப டாதகேள்வி வாள்வி டாதன
ஊசன்ம ஞதி சாய வேக மாவன

தானத போத ஞதி மேவி வீறுவ
தாழ்வுப டாத மோன வாகை சூடுவ
தானச மாதி ஞான தீர மேபெறு
தாணையி ராசி கோடி கோடி கோடியே. (200)

வேறு

468. மலைய டங்கலும் பொடிபட விடிபட
மகித லங்களுந் தொலைபட வுலைபட
மகர பந்தியுஞ் சிதறிட வுதறிட
வருண சிந்துவுங் கதறிட விதறிட
நிலைய டங்கலுங் குலைபட வலைபட
நெடிது கொண்டலுஞ் சொரிதர நெரிதர
நெறிம யங்கிடும் பொழுதினு மொழிவறு
நிலையி னின்றுதம் பரிசென மகிழ்வரே. (201)

469. மலைய சந்தனம் புழுககி னறுவிரை
மணநி றைந்தகுங் குமநறை பளிதமும்
வகுள சண்பகங் கருமுகை யிவைகொடு
வழிப டுந்திற மகிழ்வினு மகிழ்விலர்
அலைகு லைந்திடும் படிமயிர் மயிர்தொறும்
அரியி னுஞ்சுடுங் கனலிடை முழுகென
அழலி லுந்தினும் பிறபிற புரியினும்
அசைவ தொன்றினுஞ் செறிவில ரமைவரே. (202)

வேறு

470. உரையிடையான் மறந்தொழிந்தே னுவகைகலுழ்ச் சியுமவருக்
குளவா லூழின்
வரையிதுநாங் கழித்தனமென் றின்புறுவர் துன்புறுவர்
வருத்தி னோர்க்கே. (203)

---

468. மகரபந்தி - மகாமீன் வரிசை. வருணசிந்து - கடல்.

469. புழுகு, அகில், நறுவிரை. பளிதம் - பச்சைக் கற்பூரம். வகுளம் - மகிழ். "சந்தன குங்குமங்கள் புழுககில் தண்பளி தஞ்சொரிந்து மகிழ்விலர், நொந்தன கொண்டரிந்து நகரென நொந்திலர் முந்தையென்று நகுவரே." அஞ்ஞ.

470. வருத்தினோர்க்கு - வருத்தினோர் பொருட்டு. "தம்மை யிகழ்ந் தமை தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தா - லும்மை, யெரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று, பரிவதூஉஞ் சான்றோர் கடன்." நாலடி.

471. அருண்ஞான விறல்வாய வடல்வினையைச் செகுக்குநெறி
அறிய வோதின்
வருமாய வினைதுடைப்பா ருணர்வதனுன் முன்னைவினை
மாந்தி மாய்ப்பார். (204)

472. அருந்தன்முதற் ஞெழிலொப்ப வகமொவ்வா ஞானவிற
லவரை வேறு
வருந்திமுதற் காண்பரிதான் மற்றவர்தம் மளவையெவர்
வருக்க வல்லார். (205)

473. மேலோடு கீழினுக்கு மேலோடு கீழாகி
மேவு திக்கின்
பாலோடு சூழினுக்குஞ் சூழாகுந் தானைநிலை
பகர்வ தேயால். (206)

வேறு

474. அவ்வாறு நிறைந்தபெருஞ் சேனை நோக்கி
அஞ்ஞனவன் றன்னைநீ ரழிக்கு நீதி
எவ்வாறு கூறுகென வருள லோடும்
எய்திநிரு பகன்சரண மிறைஞ்சிச் சொல்வான். (207)

## நிருபகன் கூற்று

வேறு

475. அழிந்தபுன் மலங்க ளாதி
அருவருப் பவையே யன்றி
ஒழிந்தவை யெவையோ கூற
ஒள்ளிழை யார்க ளென்றே. (208)

476. முன்பொடு பின்பெ லாமும்
மூளையும் வழும்புந் தோலும்
என்பொடு நரம்பு மாய
இறைச்சிப்போ ரதுவே யன்றோ. (209)

---

471. வரும் மாயவினை - ஆகாமியம். முன்னைவினை - பிராரத்தம். மாந்தி - அனுபவித்து.

472. "எண்ணி லாதவியல் ஞான வீரர்தமை யெண்ண லாகுமள வெங்ஙனே, கண்ணில் வேறுபட வின்மை யாளொருவர் காணு மாறரியர் காணுமே." அஞ்ஞ.

473. "கீழி லாதபடி கீழு மேலுமதின் மேலி லந்தபடி கெழுமியே, சூழி லாதபடி சூழ தானைநிலை சொல்ல லாகுமள வல்லவே" அஞ்ஞ.

475. "தோராதா ரல்லரோ சேயிழையா ரெனத்திகைப்பார், ஆராயு மறிவுடையார்க் கருவருப்பே யல்லவோ." அஞ்ஞ.

477. விழுக்கொடு வெண்ணஞ் சல்லா
உகிர்மயி ருமிழ்கட் பீளை
புழுப்பயில் கின்ற பொல்லாப்
புலாற்பொதி யதுவே யன்றோ. (210)

478. வாய்மையொன் றிலாத புல்லர்
மயங்குவர் தளும்பு புண்ணீர்த்
தூய்மையொன் றிலாத புன்றோற்
றுருத்திதா னதுவே யன்றோ. (211)

வேறு

479. சிக்கறு து சுருண்டுநாறிய
செறிமயிர்த்திர ளதனைநீர்
மிக்கறுது திரண்டகாரென
வினவுவார்சிலர் வீணரே. (212)

480. கறையழுக்கொடு வேர்வைதுற்றிய
கடியநெற்றியை நெடியவெண்
பிறையொழுக்கம தென்றுமால்கொடு
பேசுவார்சிலர் பேயரே. (213)

481. ஊழல்கொண்டு குறும்பிபற்றிய
ஊன்முடக்கினை யுயர்தரு
நீழல்கொண்டுல வூசலென்று
நிகழ்த்துவார்சில நீசரே. (214)

482. புல்லிதாமென் மயிர்குருத்தெழு
புருவமென்பது வெருவுபோர்
வில்லிதாமென மொழிவரேயருள்
விளைவிலார்சில வெறியரே. (215)

483. புற்புதம்மென நீர்நிறைந்தழி
பூளைநாறிய புண்களை
அற்புதம்மென வயில்கள்ளென்பவர்
அறிவிலார்சில ரவர்களே. (216)

---

477. சீவக. 1584.

481. ஊன் முடக்கு என்றது காதினை.

483. புற்புதம் - நீர்க்குமிழி. புண்களென்றது கண்களை.

J

484. பாசிபற்றிய புரையைமென்குமிழ்
பகரினெக்கும தென்பரே
வேசிபற்றிய பொழுதுமால்வழி
விட்டசிந்தையின் மெலிவரே. (217)

485. கோழையூறிய வாய்விளிம்பொரு
கொவ்வையென்று குறிப்பரே
ஏழைமானிட ராயினர்சிலர்
இருமைதானு மிழப்பரே. (218)

486. வெய்யபல்லெனும் வெள்ளெலும்பினை
மெல்லென்முல்லை யரும்பொடு
துய்யநித்தில மொக்குமென்றணி
சொல்லுவார்சில சுமடரே. (219)

487. ஊத்தையாகிய வாயையாம்பலை
ஒக்குமென்ன வுரைப்பரே
சீத்தையாகிய வேண்மலர்க்கணை
சிந்தைநொந்து திகைப்பரே. (220)

488. புலவருமம லிடந்தொறுஞ்செறி
புரைகடுற்றமு கத்தினை
நிலவருமம லெழுந்தசந்திரன்
நிகர்க்குமென்பவர் நீசரே. (221)

489. துளைபடுங்கள மதனைமுத்தணி
சுரிமுகப்பணி லம்பசும்
கிளைபடுங்கமு கென்பர்மாய
கிலேசமேவுமி லேசரே. (222)

490. தோல்பொருந்திய தடியைநல்லதொர்
தூயவேயிணை சொல்வரே
மால்பொருந்திய நெஞ்சராகி
மயங்குவார்சிலர் மனிதரே. (223)

---

484. புரை என்றது மூக்கை. மால் - மயக்கம்.

485. வாய்விளிம்பென்றது இதழை; "எச்சிறங்கு வாய்விளிம்பு பவளமென்பர்." பிரபோத. நிருபகாதியர். 11.

486. "தாளமென்ப . . . . பழுதுறும்பல் லென்பை யின்ன பகர்வதென்ன பாவமே.' பிரபோத. நிருபகாதியர். 10.

491. தசைநிரம்பி யெழும்புடைப்பிரு
சயிலமென்பர் சழக்கரே
நசைநிரம்பி யனங்கனுக்குளம்
நைந்துநொந்தற நலிவரே. (224)

வேறு

492. சிறுமைபுரி சேயிழையார் சிங்காரங் களுமொன்று
மறுமைபுரி மாதவரு மதிப்பரோ மதியாரால். (225)

493. சல்லாபம் பெற்றபெருந் தனிநடையார் தடமுலையார்
உல்லாச நடையினையு மொன்றாகக் கொள்வாரோ. (226)

494. மெய்யாய வுரைபயில்வார் விளங்கிழையார் விளம்புகின்ற
பொய்யாய வுரையையுமோர் பொருளாகப் போற்றுவரோ. (227)

495. முற்றின்ப முற்றிருக்கு முனீந்திரரு மொய்குழலார்
சிற்றின்ப மற்றதுமோர் சிறப்பாகச் செறிவாரோ. (228)

496. இயலாய நோக்கினையே யெய்தினோ ரேந்திழையார்
மயலாய நோக்கினையு மற்றொன்று மதிப்பாரோ. (229)

497. ஓங்குகொடி மதவேளுக் குறுமீனம் படைமடவார்
தாங்குகொடி வாய்மைபடை தயிரியமென் சக்கிரமால். (230)

498. தையலா ருடற்பாவை தானென்றிற் படும்படவே
மையலார் வேளுயிரு மாளுமொரு நொடிவரையின். (231)

வேறு

499. இனைய வண்ண நிருபகன் கைதொழு
திறைவன் பாத மிறைஞ்சி யுரைத்தலும்
அனைய வண்ணம் பொறையன் முதல்வன
தடிவ ணங்கி யறிய விளம்புவான். (232)

பொறையன் கூற்று

வேறு

500. தீதுறுநா வுடையார்கள் சீறவரே லவர்களுடன்
வாய்திறவா திருந்துவிடு மதுவன்றோ வன்பாதல். (233)

---

497. மதவேளுக்குக் கொடி மீனம் என்க.

498. படும் - அழியும். “பூவைமார்பொடி யாகவேபொடி யாகி வேளு யிர் போகுமே” அஞ்ஞ.

500. “மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்களுடன், பேசாம லிருந்துவிடு மஃதன்றோ பெருந்தகைமை” (அஞ்ஞ.), “காய்தறு கண்ண

501. வன்சொல்லால் வைதாரை வாழ்த்தினர்போல் மதித்தென்றும்
இன்சொல்லா லவர்பகைதா னிடிப்பதன்றோ வெனதாண்மை. (234)

502. வறுத்தாலு மிடித்தாலும் வாளதனுன் மயிர்தோறும்
அறுத்தாலு மியல்பென்னு மதுவன்றோ வவிரோதம். (235)

503. மிகைகொண்டு கடுங்கோபன் மேல்வருங்கா லவனையிள
நகைகொண்டு வென்றுவிடு மதுவன்றோ நல்லாண்மை. (236)

504. வசையேது வசையல்லா வாழ்த்தேது வாழ்வென்னும்
நசையேது நசையல்லா நலிவேது நாடுங்கால். (237)

505. தமராவார் பிறராவார் தாமற்று லென்னுடனே
அமராவார் பிறரேயோ வடுங்கோப னுரேயோ. (238)

506. இவ்வாறு பொறையனெடுத் தியம்புதலு மடிவணங்கிச்
செவ்வாறு செப்புவான் செப்பரிய சந்தோடன். (239)

## சந்தோடன் கூற்று

507. நிலையாய பேரின்ப நிரதிசயப் பொருளுடையார்
தொலையாய வழிபொருளும் பொருளாகச் சூழ்வாரோ. (240)

---

ராங் கயவர் கைமிகத், தீதுறும் வாசகஞ் செப்பி னுலெதிர், வாய்திற வாமையா மென்ன மன்றிவே, றேததை வெல்வதற் கியன்ற செய்கையே" பிரபோத. நிருபகாதியர் வீர. 28.

501. "வைததனை யின்சொல்லாற் கொள்வானும்" (திரிகடுகம், 48); "வைதாரை வாழ்த்தினர்போன் மதித்தென்று மறக்கொடுமை, செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல்" அஞ்ஞ.

503. "முனிவெனுங் கொடுந்தழல் மூண்ட போததிற், பனிவருந் தண்புனல் பரவி னுலென, நனிமுக மலர்ந்துமா நகைபு ரிந்துநல், இனியசொல் லவர்க்கெதி ரியம்பல் செய்வனே" பிரபோத. நிருபகாதியர். 29.

505. "இகழாவ தேது புகழேது தேரி லிவையாவு மாவதுரையே, அகழ்வார்க ளியாவ ரருள்வார்க ளியாவ ரதுபோக மாகு மவையே" அஞ்ஞ.

507. தொலை ஆய-தொலைதலர்கிய. அழிபொருள்-அழிகின்ற பொருள்; மிக்கபொருளுமாம். "நன்றுந்திய நெஞ்சத்திடை நாடித்தெளி வுற்றே, என்றுந்தனி நிலைபெற்றிடு மின்பப்பொரு ளுடையார், துன்றும்பெரு வெள்ளத்திடை தோன்றுங்குமி ழியைப்போற், பொன்றும்பொரு ளையுமேயொரு பொருளாய்நினை வாரோ" (பிரபோத. நிருபகாதியர். 58); "என்றும் பொருவரிய வின்பப் பொருளுடையார், பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ" அஞ்ஞ.

508. பேய்விண்டு கேட்டாலும் பெரிதுமுவந் தருள்வதன்றி
வாய்விண்டு கேட்பாரோ மாசற்ற நாவுடையோர். (241)

509. திருந்தித்தாம் வளனெய்திச் சிறப்புறுமா றெண்ணுரோ
வருந்தித்தா முழந்தாலும் வாராது வாராதால். (242)

510. எத்துணையும் போகங்க ளெய்திடினு மாசையுண்டேல்
அத்துணையு மேன்மேலு மவாய்நிற்ப தமையாதால். (243)

511. ஆராத பேராசை யற்றவரே மற்றெவர்க்கும்
வாராத பேரின்ப வளனெய்து மாட்சியரால். (244)

512. ஏகாத நல்குரவு மின்பமெனக் கொண்டிரக்கப்
போகாத புகழன்றே புகழினுக்கும் புகழாதல். (245)

513. சாம்போது படைத்தபொரு டானெங்கே யிவனெங்கே
போம்போது வெவ்வேறாப் போவதுமப் பொருளேயால். (246)

514. ஓதினல் வயிறுள்ள தொருசாணே யொருசாணும்
ஏதினு லமையாதா லெவன்கொலோ வெவன்கொலோ. (247)

515. நிராசையெனுஞ் சுடர்வாளா னேரெதிர்ந்த வுலோபனைநான்
பராசயமொன் றில்லாமற் பற்றியடல் புரிவேனல். (248)

வேறு

516. மாறு கொண்ட வுலோபனை வெல்வகை
வணங்கி நின்றுசந் தோடன் வருத்தலும்
வீறு கொண்ட விவகார பராமுகன்
வெய்ய மோகனமர் வெல்வகை சொல்லுவான். (249)

---

508. "புன்பாவி வாணள் புலர்ந்தாலு மெய்வெள், ளென்பா யுகுந்தாலு மில்லாமை யென்னும், வன்பாடு நல்லோர்கள் வாய்விண்டு தம்மேல், அன் பாளர் தம்பாலும் அறியச்சொ லாரே" பிரபோத. நிருப. 43.

509. "வருந்தி யழைத்தாலும் வாராத வாரா" (வாக்குண்டாம்); "வருந்தினும் வாராது வாராது தானே" (அஞ்ஞ.); "வாராத தார்தாம் வருந்தினும் வாராதே" பிரபோத. நிருப. 41.

512. "இல்லாத பொழுதின்ப மிஃதென்று பிறர்பாற், செல்லாத செல் வென்ப செல்வாய செல்வே" அஞ்ஞ.

514. "வாதாகி நுகர்கின்ற வயிறுள்ள தொருசாண், ஏதாலி தமை யாதி தென்னேயி தென்னே" (அஞ்ஞ.); "அண்டாத பேராவ லமையாத தென்னே, விண்டாவு மலைபோல வேண்டுங்கொல் வெண்சோ, றுண்டாலும் வயிறுள்ள தொருசா ணிதற்கோ, கண்டார்கள் பின்சென்று கையேற்கு மாறே" பிரபோத. நிருப. 44.

## விவகாரபராமுகன் கூற்று

517. அளவி லாதசன னங்க டோறும்
அளவி லாமல்வரு மன்னையு மத்தனும்
பிளவி லாதவரை யொப்பதை யன்றிப்
பிறிது முண்டுகொ லாமிது பொழுதினும். (250)

518. புழுவு திக்கு முடம்பின் மலத்திற்
புக்கு டன்புழுவ தொப்பதை யன்றி
வழுவு திக்கு முடம்பினை யொப்ப
வத்து தித்த புழுக்களும் வேறே. (251)

519. இன்னு மேதிலர்கண் முன்னும தொப்பார்
இரண்டு நாளையிடை வாழ்பவ ரன்றே
அன்னை தாதைமனை யன்புறு மைந்தர்
ஆதி யாயகிளை யாவையு மன்றே. (252)

520. சுற்ற முற்றுமொரு கொள்ளி கொளுத்தித்
தூர நின்றகல்வ ராருற வாவார்
சுற்று முற்றவுட லும்முத வாதாற்
றும லாமலுற வேது தமக்கே. (253)

521. அலைய டங்கவினி யாடுது மென்று
ஆழி யின்கரை யணைந்தவ ரொப்பார்
நிலைய டங்கமனை வாழ்வி லிருந்தே
நீத்து நாமென நினைத்துழல் வாரே. (254)

---

517. "அத்தனொ டன்னைக் கன்புசெய் கின்றா ரளவில் பிறப்புற் றவையவை தோறும், எத்தனை தாயுந் தந்தையு முற்றா ரித்தனை யன்றோ விவர்களு மிங்கே" (அஞ்ஞ.); "அன்புற்று மாதாபி தாவென்னு மவர்தாம், முன்பெற்ற சென்மங்கள் முடிவில்லை யவைதோ, றின்புற்ற தாய் தந்தை யெங்கேய தன்றோ, பின்பெற்ற பேரும் பெறத்தக்க பேறே" பிரபோத. நிருப. 48.

518. புழுக்களென்றது குழந்தைகளை; "சால வுதிக்கும் புழுவுட றன்னில் தகவின் மலத்தோ டொழுகு முடம்பே, போல வுதிக்கும் புழுவினை யென்னே புத்திர னென்றே புந்திசெய் வாரே" (அஞ்ஞ.); "சடமீது கிருமிப்பை தானென்றன் மலமோ, டிடர்மேவு புண்ணோ டெழக்கண்ட துண்டே, உடன்மீதிவ் வுடல்போ லுதிக்கின்ற புழுவைத், திடமான மக வென்று சீராட்ட லென்னே" பிரபோத. நிருப. 50.

520. "தம்முற வாவார் தாமல தின்றே" (அஞ்ஞ.); "தாமேயல் லாதெவர் தமக்குரியர் தாமே" பிரபோத. நிருப. 49.

521. நீத்தும் - துறப்போம். நாலடி. 332.

522. ஒருங்கி யாவினையும் விட்டவர் விட்டார்
ஒன்றா விட்டிலரும் விட்டில ரோடி
மருங்கு மல்கிவரு சைவல மொப்ப
வந்து மூடிவிடும் வழியது வாக. (255)

523. உறவ தாகுமிழி பந்தம தோடே
உற்ற பந்தமவை யெத்துணை யேனும்
துறவ தாகும்யம தண்டமெ டுத்தே
துகள்ப டும்படி தகர்த்தடல் வேனுல். (256)

வேறு

524. பரவியெதிர் விவகார பராமுகனுர் பகருதலும்
பகரொ ணாத
வாகுணனு கியசாந்தன் வாய்புதைத்துத் தனதாண்மை
வகுப்ப னேயால். (257)

சாந்தன் கூற்று

525. குலனில்லேன் வலனில்லேன் புகழில்லேன் மேலாய
குணனு மில்லேன்
புலனில்லே னலனில்லே னெனப்பணிந்து மதத்தன்வலி
போக்கு வேனுல். (258)

526. அறம்புரியே னறந்திறம்பா வரும்பொருளீட் டிலன்காதல்
அமைந்த காமத்
திறம்புரியேன் வீடில்லே னெனத்தாழ்ந்து மதத்தனுரை
செகுப்ப னேயால். (259)

527. தவம்புரியே னிரப்பவர்க்கொன் றேதேனு மளித்தறியேன்
சார்பு மில்லேன்
அவம்புரிவே னலனல்லே னெனவடங்கி மதத்தனடல்
அழிப்ப னேயால். (260)

528. பொல்லாரோ டிணங்கவல்லேன் போவதுவு மாவதுவும்
புத்தி செய்யேன்
நல்லாரோ டிணங்குகிலே னெனத்தாழ மதத்தனடு
நடுங்கு வானுல். (261)

---

522. சைவலம் - நீர்ப்பாசி.

525. வலன் - வெற்றி. புலன் - அறிவு.

527. சார்பு - பெரியார் துணை.
பி-ம். 'அவம்புரியேன்'

529. புன்மைக்கே நனிபெரியேன் பொறிவழிபோ யறிவழிந்து
புலம்பு கூர்வேன்
நன்மைக்கே நனிசிறியே னெனத்தாழ்ந்து மதத்தன்வலி
நலிவ னேயால். (262)

530. நான்பெரியே னென்போன்முன் னுன்பெரியே னென்னுது
நல்லோய் நீயே
தான்பெரிய னுன்சிறியே னெனக்குழைந்து மதத்தனொடு
தாக்கு வேனல். (263)

531. புழுவிற்குங் குணநான்கே யெனக்குமஃ தென்றாலும்
புரியும் பொல்லா
வழுவிற்குப் புழுவொவ்வா யான்பெரிய னெனமதத்தன்
வலிநில் லாவால். (264)

532. வணங்குவரி சிலைவாளி தைக்குமெனும் வழக்காலிவ்
வையந் தன்னில்
வணங்குமஃ தியாவதென வணங்குவதன் றேநன்கு
மதிப்பே யாதல். (265)

533. ஆழ்வதரு மணிமிதப்ப தாழியிடைத் துரும்புதலை
அதனிற் பெய்யத்
தாழ்வதுயர் வதுவென்னத் தாழ்வதன்றே வெனதுபெருந்
தலைமை யாதல். (266)

534. எல்லவர்க்கு மொப்பதன்றே யென்றாலும் பணிவாதல்
இருமைத் தாய
செல்வருக்கே மேலுமொரு செல்வமெனச் செல்வதன்றே
செல்வ மாதல். (267)

---

529. புலம்பு - வருத்தம்.

530. பி-ம். 'என்போர்முன்'.

531. வழுவிற்கு யான் பெரியன் என்க. "புழுவுக்குங் குணநான் கெனக் கும்மதே, புழுவிற்கிங் கெனக்குள்ள பொல்லாங் கில்லை, புழுவினுங் கடையேன் புனிதன்றமர், குழுவுக் கெவ்விடத்தேன் சென்று கூடவே" தே.

532. வணங்கு - வளையும்.

533. ஆழியிடை அருமணி ஆழ்வது; துரும்பு மிதப்பது. "வலி தன்றே தாழுந் துலைக்கு" நீதிநெறி.

534. "எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளும், செல்வர்க்கே செல்வந் தகைத்து" குறள்.

வேறு

535. சாந்தனடி பணிந்தினைய வாறு கூறத்
தம்பிரா னிருசரணந் தலைமேற் கொண்டு
போந்தமுத சீலனூர் மகிழ்ந்து தாஞ்செய்
பொருபோரின் றிறமனைத்தும் புகல்கின் றூரால். (268)

## அமுதசீலன் கூற்று

வேறு

536. தன்னுயிர்க்கு நலம்வேண்டு மதுபோலத் தராதலத்து
மன்னுயிர்க்கு நலம்வேண்டு மதுவன்றோ வாழ்வாதல். (269)

537. தன்னுக்கந் தனக்குவகை தலைவருமேற் பிறன்மாட்டு
மன்னுக்கந் தனக்குவகை வாராத வகையெவனல். (270)

538. அறிவாக்க முருவாதி யயலார்த மிடைக்காணிற்
பிறவாக்கம் வேண்டுவரோ வதுதமதாப் பெட்டுயர்வர். (271)

539. நான்பெற்ற பேறுலகம் பெறுகென்பார் நலனயலார்
ஏன்பெற்று வாழ்வரென விகலுமா றெவ்வாறூல். (272)

540. எல்லாருந் தமைப்போல்க வென்பார்முன் னிகலேற்றுப்
பொல்லாத மாற்சரியன் போர்புரித லெவ்வாறூல். (273)

வேறு

541. இன்ன தன்மையின வெந்தைபி ரான்முன்
எய்தி வம்மர்பல ரெத்தனை கோடி
அன்ன தன்மையினி லோதுத லோடும்
ஐய னும்மக மகிழ்ந்தன னன்றே. (274)

542. இந்த வண்ணமியன் ஞானவி னோதன்
ஏற்ற மிக்கபடை யாவு மிறைஞ்சித்
தந்தம் வென்றிதழு வுந்தொழி றம்மிற்
றூழ்வி லாதவகை சாற்றுத லோடும். (275)

---

536. "எல்லாரு மின்புற் றிருக்க நினைப்பதுவே, அல்லாமல் வேறொன் றறியேன் பராபரமே" தாயுமானவர் பாடல்.

538. பெட்டு - விரும்பி.

539. "நான் பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" திருமந்திரம்.

540. இகல் ஏற்று - பகையை மேற்கொண்டு. மாற்சரியன் - பொறாமை. "எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின், தெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே" தாயுமானவர் பாடல்.

541. பி - ம். 'மகிழ்ந்தன னன்றோ'

## ஞானவிநோதன் போர்க் கேகல்

543. தானை கண்டருளி யின்புறு காலத்
தலைவ னங்கிவிடை கொண்டறி வில்லான்
சேனை யொன்றொழிய வெல்லுது மென்னாத்
திண்மை யோடுமெதிர் சென்றன னன்றே. (276)

## ஞானவிநோதன் படையின் செயல்

### வேறு

544. மறைகளே வாசியா வாய்மையே பாகனா
மன்னு தத்வத்
துறைகளே தேர்களா வேறினர் சூடினார்
துணைவர் தாளே. (277)

545. போதகம் போதகம் தேர்வகை தேர்வகை
புன்மை யுற்ற
சாதகந் தீர்வகை வாசியே வாசியார்
தம்மை யொப்பார். (278)

546. பிறிவிலா ஞானதேர் புரவிகா லாளிவை
பெரிது மெய்தி
அறிவிலா னமருமா யாபுரங் குறுகினின்
றார்த்த வன்றே. (279)

547. வரவொடு போக்கிலா வகையினாற் சூழ்கென
மாசில் சேனை
விரைவொடு வஞ்சகன் வாழுமா யாபுரம்
விரவ முற்றும். (280)

## வாயில் காவலர் அறிவித்தல்

### வேறு

548. பெற்றமூரு மவனலன் பிரமனல்லன் மாலலன்
மற்றைமூவர் மூலமே வந்ததென்ன வாயிலோர். (281)

---

543. அறிவில்லான் - அஞ்ஞானது.

544. வாசி - குதிரை. "வித்தக வேதங்க ளேவாசி யாவே மெய்த் திற னேநின்ற வோர்பாக னாவே, தத்துவ மாகின்ற தேரேறி னாரே தற்சொரு பானந்தர் தாள்சூடி னாரே" அஞ்ஞ.

545. போதகம் - ஞானம், யானை. தேர்வகை - விசாரம், தேரினது வகைகள். வாசி - வாசியோகம், குதிரை. தம்மை யார் ஒப்பாரென்க. "வாசியி லாவாசி யேவாசி தானும், போதமே போதக மாந்தேர்வு தேர்தாம் போல்பவ ரேவீர ரேதோது மாறே" அஞ்ஞ.

549. அகம்புகுந் தடங்கவே யடங்கலும் மவதியே
சகம்புகுந்த வென்றுகண்டு தம்முளே யடங்கவே. (282)

550. எங்குமாய் நிறைந்துநின்ற விறைவனேயொர் வடிவெடுத்
திங்குமேவு கின்றன னென்றுசொல்லு மெல்லையே. (283)

## அஞ்ஞன் படைவீரர் கூற்று

551. ஏகதேசி யாகவே யெங்குமாய் நிறைந்தவர்
போகவந்த வேதுவேது புகல்கவென்பர் சிலர்களே. (284)

552. அருவமென்ற வீசனு ரகன்புவிக்க ணெய்தவந்
துருவமெய்து மாறுநன்று நன்றெனு வுரைப்பரே. (285)

### வேறு

553. அறிவி லன்புர மழிந்ததினி யென்றுமொழிவார்
அமையு நந்துழனி யென்றமைவு வந்துவிடுவார்
செறியு நந்தவ முடிந்ததினி யென்றுகெளிவார்
தெரிய வுஞ்சமய மொன்றுமிலே யென்று திரிவார். (286)

554. ஒன்றி யெங்குமுற நின்றபொரு ளின்றுபடிமேல்
உருவெ டுத்துவரு கின்றதென வுற்றுமொழிவார்
வென்றி கொண்டணைய விங்குவரு கின்றவிரகோ
மிகவு நன்றென வியந்துநகை கொண்டுதொழுவார். (287)

555. குலம டங்கலு முடிந்தது முடிந்ததெனவே
குடிகெ டும்படி புகுந்ததறி வென்று குலைவார்
சொலமு டிந்திறுவ தொன்றென மொழிந்தகணியார்
சொலவு மின்றுதலை வந்ததென நின்றுசுழல்வார். (288)

---

551. பி - ம் 'போகம் வந்த'

553. துழனி - ஆரவாரம். "சமய மென்பனவு மொன்றுமில தென்று மொழிவார் தவமுடிந்தது முடிந்ததென நின்றுசமைவார், அமையு நந்துழனி யென்றமைவு வந்துவிடுவார் அறிவி லன்புர மழிந்ததினி யென்றயருவார்" அஞ்ஞ.

554. விரகு - தந்திரம். "மருவி யெங்குமுற நின்றபொரு ளின்றுபுவி மேல் வடிவு கொண்டுவரு கின்றதென நின்றுமொழிவார், அருவ மென்று மொழி கின்றபொரு ளிங்குவருதற் கடிமை யென்றுசிலர் நின்றுநகை கொண்டுவிடுவார்." அஞ்ஞ.

555. "குடிகெ டும்படி புகுந்ததுணர் வென்றுதளர்வார் குலம டங் கலு முடிந்ததென நின்றுகுலைவார், முடிவில் வந்துறுவ தொன்றென மொழிந்தகணியார் மொழியு மின்றுதலை வந்ததென நின்றுகுலைவார்" அஞ்ஞ.

556. மொழிவ தென்கொல்பவ முழுதுமிது பொழுதுகெடுவீர்
முடிய வந்தடர்தல் காணுமினி யென்றமொழிவார்
அழிவ தென்கொலினி யஞ்ஞனுடை நாமமறவே
அழியு மென்றயர்வர் தங்களி னடங்கவிவையே. (289)

## வீரர் அஞ்ஞனுக்கு அறிவித்தல்

### வேறு

557. தீமையுற்ற தானையஞ்ஞ தீரனுக்கு வீரர்போய்
வாய்மையுற்ற ஞானசேனை வந்ததென்று கூறவே. (290)

558. முன்னைவெல்ல வந்தசேனை மூவர்சேனை யாதலால்
என்னைவெல்ல வந்தசேனை யாவர்சேனை யென்னவே. (291)

559. உம்பரும்ப ரீசனென்ன வூதுசின்ன வோசையே
இம்பரெங்கு மானதே யாமறிந்த தென்னவே. (292)

## அஞ்ஞன் கூற்று

### வேறு

560. செப்பரிய காமன்முதல் வீரரமர் வென்றடுவர்
தேகமுள னாகிலவனை
ஒப்பரிய சோதியெனி னென்கணெதிர் நிற்பதிலை
ஒல்வதல வெல்வதுவுமே. (293)

561. உடைந்தவர்க ளன்றியெவர் மண்ணவரில் விண்ணவரில்
உற்றமறை செற்றபடியே
அடைந்தவர்கள் மாரன்முத லானபடை வீரரை
அடர்ந்துசெரு வென்றவர்களே. (294)

562. அங்கமதி லிந்திரிய மனதினொடு புந்தியுயிர்
ஆங்கார மிங்கிவைகளின்
சங்கமெனு மேழணியி லொன்றுவிடு விப்பினும்
தானையொரு தலைவனிவனே. (295)

---

558. "மூவர்சேனை யென்கண்முன்பு நிற்கவில்லை மொய்ம்பினோ, டியாவர்சேனை யென்னைவெல்ல விங்குவந்த தென்னவே" அஞ்ஞ.

559. "யாவர்சேனை யென்னயா மறிந்ததில்லை யெங்கணும், தேவதேவ தேவனென்ற சின்னவோசை யென்னவே" அஞ்ஞ.

560. "ஏகமுத லோனருவ னாகினமர் செய்யவவ னென்கணெதிர் நிற்க வலனே, தேகமுள னேலவனை மாரன்முதல் வீரர்படை சிந்துவர்கள் சிந்தி விடவே" அஞ்ஞ.

பி - ம் 'வெல்வதவமே'

562. "ஓதுமுத லிந்திரிய முள்ளுமனம் புந்தியுயி ரோங்கியவ கங் காரமுமிங், கியாதுமுள சங்கமெனு மேழணியி லொன்றுவிடு விக்கினவ னிங் கிறைவனே" அஞ்ஞ.

563. மாறுகெட வாகையுட னென்னையட வந்தவனை
வந்தெதிர் கலந்தவுடனன்
வீறுகெட மீளினெனை யஞ்ஞபதி யென்றழைபல்
வேறுபெய ரிட்டழையுமே. (296)

564. இன்னவகை கூறிமத ஞதிபடை யத்தனையும்
ஏவியிறை வன்படையுடன்
அன்னவகை போர்புரிக வென்னவறி வன்படையொ
டஞ்ஞபதி படைபொருததே. (297)

## அஞ்ஞன்படை அஞ்சுதல்

### வேறு

565. கடாவிடை யாகிய தேர்வகை காண்டலும்
கடாவிடை யாகிய தேர்வகை கண்டில. (298)

566. புலனெனப் பெயரிய போதகந் தோன்றலும்
புலனெனப் பெயரிய போதகந் தோன்றில. (299)

567. கதிசேர் கரணக் கடும்பரி பாய்தலும்
கதிசேர் கரணக் கடும்பரி பாய்ந்தில. (300)

### வேறு

568. அஞ்சாம லறிவன் படைத்தானை காண
அஞ்ஞன் படைத்தானை யணியாக வெழுமே
எஞ்சாம லீராறு ரவியும் புகுந்தால்
இரியாம லிருண்முற்று மெதிர்நிற்கு மன்றே. (301)

---

563. "ஆண்டகைய ஞகினெனை யஞ்சுத லொழித்துவரு மவனை யெதிர் கண்டளவில்யான், மீண்டிடுவ ஞகினெனை யஞ்ஞவர சென்றழையல் வேறுபெய ரிட்டழையுமே" அஞ்ஞ.

565. கடாவிடையாகிய தேர்வகை - கடாவும் விடையுமாகிய விசார வகைகள், கடாவுகின்ற நடுவிலுள்ளனவாகிய தேர்களின் வகைகள்.

566. புலன் - அறிவு, தன்மாத்திரை. போதகம் - ஞானம், யானை.

567. கதி - நற்கதி, நடை. கரணம் - யோககரணங்கள், ஆடல் வகை.

568. "அறிவின் பெருஞ்சேனை கண்காண வெதிரே அஞ்ஞன் கொடுஞ்சேனை யஞ்சாம லெழவோ, எறிவெங் கதிர்ச்செல்வ ரெத்திக்கு மெழவே இரியாம லிருணிற்கி னிதுநிற்கு மெதிரோ" அஞ்ஞ.

## ஞானவிநோதன் போர்புரியக் கட்டளையிடல்

வேறு

569. தீக்கு நின்றவம ரஞ்சி யோடுவது
செய்க லாததிறல் வீரரை
மாய்க்கு கென்றருள வீரர்வீரனை
வணங்கி மற்றிது வகுப்பரால். (302)

## ஞானவிநோதன் படைவீரர் அவனை வினவுதல்

வேறு

570. பாச ராசனுர் படையு நம்பெரும்
படையும் வேறறி பரிசு பான்மையிற்
பேசு வீரென வறிவு றுந்திறம்
பெரிய வன்பினிற் பேசு வானரோ. (303)

## ஞானவிநோதன் தன்படைக்கும் அஞ்ஞன் படைக்கும் உள்ள வேற்றுமை கூறல்

571. மாதர் பூண்முலை மருவி வாழிலென்
மன்னு மெய்த்தவ வடிவு பூணிலென்
கோதில் வாய்மையைக் கண்ட தூயவர்
கொண்ட கொள்கையே கொள்கை யாகுமால். (304)

572. தேறு மோனமா ஞான போதனுர்
செய்த செய்கையே செய்யு மாதவம்
கூறும் வாசகம் யாவு மந்திரம்
கொண்ட கோலமே கோல மாகுமால். (305)

வேறு

573. நன்றிதுதீ திதுவென்று ணுடார்க ணவையிலோர்
நவையு ளாரும்
நன்றிதுதீ திதுவென்று ணுடார் ளாயினுந்தான்
நாடின் வேறால். (306)

---

570. பி - ம் 'பெய்யு மன்பினில்'

571. "விண்டிருந்தென்மெய் கண்டுளோர்தவ வேடமேவியென் கோடி மாதரைக், கொண்டிருந்தெனவர் செய்ததேதவங் கொண்டகொண்டதே கோல மாகுமால்" அஞ்ஞ.

573. தான்: அசைநிலை.

574. குற்றமிது குணமிதெனக் குறியார்கள் குறியுடையார்
குறியி லாரும்
குற்றமிது குணமிதெனக் குறியார்க ளாயினுந்தான்
குறிப்பின் வேறால். (307)

575. அறம்பாவ மவையிரண்டு மறியார்க ளறிவுடையார்
அறிவி லாரும்
அறம்பாவ மவையிரண்டு மறியார்க ளாயினுந்தான்
அறியின் வேறால். (308)

576. வெறுப்பதிது விழைவதிது வெனத்தெரியார் மேலானோர்
மேலல் லாரும்
வெறுப்பதிது விழைவதிது வெனத்தெரியா ராயினுந்தான்
வேறு வேறால். (309)

577. விலக்கீது விதியீது வெனத்தெளியார் மேலானோர்
மெய்யி லாரும்
விலக்கீது விதியீது வெனத்தெளியா ராயினுந்தான்
வேறு வேறால். (310)

வேறு

578. பகைநட்பு நொதுமலிது வென்றங் கொன்றும்
பாரார்கள் பயன்றெரிவார் பயனி லாரும்
பகைநட்பு நொதுமலிது வென்றங் கொன்றும்
பாரார்க ளாயினுந்தான் பார்க்கின் வேறால். (311)

579. தேசமிது காலமிது வென்றங் கொன்றும்
தேரார்க டேர்ந்துள்ளார் தேர்வி லாரும்
தேசமிது காலமிது வென்றங் கொன்றும்
தேரார்க ளாயினுந்தான் றேரின் வேறால். (312)

580. ஆக்கமிஃ தழிவதிது வென்றங் கொன்றும்
ஆயார்க ளாய்ந்துளோ ராய்வி லாரும்
ஆக்கமிஃ தழிவதிது வென்றங் கொன்றும்
ஆயார்க ளாயினுந்தா னாயின் வேறால். (313)

581. மேன்மையிது கீழ்மையிது வென்றங் கொன்றும்
வினவார்கள் விளவுணர்ந்தோர் விளைவி லாரும்
மேன்மையிது கீழ்மையிது வென்றங் கொன்றும்
வினவார்க ளாயினுந்தான் வினவின் வேறால். (314)

---

581. பி - ம். 'வினையுணர்ந்தோர் வினையிலாரும்'

582. இழிகுலநற் குலமீதா லென்றங் கொன்றும்
எண்ணுர்க ளியல்புணர்ந்தோ ரியல்பி லோரும்
இழிகுலநற் குலமீதா லென்றங் கொன்றும்
எண்ணுர்க ளாயினுந்தா னெண்ணின் வேருல். (315)

583. செயிர்த்தவர்பா லருள்வாரு மருளி லாரும்
சிந்தனைநோந் திறமொத்துந் தெரியி னெவ்வார்
செயிர்த்தவர்பா லருளுடையா ரவர்க்கு நோவார்
தீதுடையார் தமதுடம்பிற் செயிர்க்கு நோவார். (316)

584. செயவேண்டுந் தவஞான வொழுக்கத் தோரும்
தீம்பருஞ்செய் யாமையினற் சேர்ந்துஞ் சேரார்
செயவேண்டுந் தவமெல்லாஞ் செய்து தீர்ந்தார்
தீதிலார் தீததனுற் றீர்ந்தார் தீயோர். (317)

585. கற்றுணரத் தகுங்கல்வி மேலா னேரும்
கயவரும்விட் டொழிந்தமையா லொத்து மொவ்வார்
கற்றுணரத் தகுங்கல்வி யெல்லா நல்லோர்
கற்றெழிந்தார் கரிசதனுற் கயவர் நீத்தார். (318)

586. கனிந்துகனிந் திருந்திரங்கிச் சோரு மாற்ருற்
கற்றவரு மற்றவரு மொத்து மொவ்வார்
கனிந்துகனிந் தருணேக்கிற் சோர்வர் கற்ருேர்
காரிகையார் மருணேக்கிற் சோர்வார் கல்லார். (319)

587. வேறுபகுத் தொன்றினையுங் காணு வாற்ருல்
மேலோருங் கீழோரு மொத்து மொவ்வார்
வேறுபகுத் தொன்றினையுங் காணுர் மேலோர்
வியாபகத்தாற் கீழோர்தம் வெளிற்ருற் காணுர். (320)

---

583. "தம்மை யிகழ்வன தாம்பொறுப்ப தன்றிமற், றெம்மை யிகழ்ந்த வினைப்பயத்தான்—உம்மை, எரிவாய் நிரயத்து வீழ்வர்கொ லென்று, பரிவதூஉஞ் சான்ருேர் கடன்" (நாலடி.); "கற்றவரு மற்றவரு மொருவர் செய்யுங் கடுமையினிற் கலுழும்வகை யொத்து மொவ்வார், செற்றவர்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் நல்லார் தீயுடன்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் தீயார்" அஞ்ஞ.

585. நல்லோர் கற்றெழிந்தார்: "கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்" திருவா.

586. "உள்ளமழிந் தருமன்பர்க் கன்றி யோரா வுலகர்திறத் தினு முண்டங் கொவ்வார் மாதா, கள்ளவிழிக் கழிந்துருவா ரறியா ரீசன் கலந்த விழிக் கழிந்துருவார் கவலை யற்ருேர்" அஞ்ஞ.

587. வெளிறு - அறிவின்மை.

588. மண்டிவரு மகவருடத் தீம்பால் கொங்கை
மணாளன்வரு டக்காமம் வருமா போல
உண்டிமுதற் றொழிலொத்து மந்த ரங்கத்
துயர்ந்தோரு மிழிந்தோரு மொவ்வா ரொவ்வார். (321)

589. அருட்படையு மருட்படையும் பகுத்து நோக்க
அறிவுறுத்தி யறிவுடையோ னறிவொன் றில்லா
மருட்படையை யடுகெனத்தன் படையை யேவ
மாயவஞ்ஞன் படைமாய்ந்த வண்ணங் கேண்மின். (322)

## ஞானவிநோதன் படைவீரர் அஞ்ஞன் படையை அழித்தல்

### வேறு

590. போர்புரி மதனனை நிருபகன்
பொருதடல் புரிதலும் விருதுடன்
வார்பொரு வனமுலை மடநலார்
வஞ்சமு மாலு மடிந்தவே. (323)

591. வெவ்விய கோபனை மறனொடு
மேவிய வின்சொல் விளைத்தெழு
செவ்விய பொறைய னழித்தனன்
சீறிய கொலைநிலை சிந்தவே. (324)

592. கெடாதுறு கின்றசந் தோடனும்
கேள்வி யெனுஞ்சுடர் வாளினால்
விடாதுறு கின்றவு லோபனை
வீட்டின னாசையும் வீய்ந்ததே. (325)

---

588. "மக்களே போல்வர் கயவ ரவரன்ன, ஒப்பாரி யாங்கண்ட தில்" (குறள்); "மகவருடப் பால்பயக்குங் கொங்கை யின்ப மயக்கமுயக் குறுங் கணவன் வரும் போது, மிகவுணர்ந்தோர்க் கும்பிறர்க்குஞ் செயல்கள் பார்க்கின் வேறறினும் பாவகந்தான் வேறு வேறு" அஞ்ஞ.

590. நிருபகன் மதனனை அழிக்கும் ஆற்றலுடையவனென்பதை 475-ஆம் தாழிசை முதலியவற்றாலறியலாகும். "உருபக மகளிர் திறத்தினை மறமொ டிழிப்பொடு, நிருபகன் மதனை யழித்தன னிலவிய ரதியு மிறப்பவே" அஞ்ஞ.

591. கோபனை மறனொடும் அழித்தனன் என்க. கோபனை அடக்கும் ஆற்றல் பொறையனுக்குண்மை 500 - 505—ஆம் தாழிசைகளாற் புலப்படும். "பாவனு மிகலு மிரங்கலில் பாடுறு கொலையு மெரிந்தெழு, கோவனு மடைய நலம்பல கூறிய பொறையி னழிந்ததே" அஞ்ஞ.

592. 507 - 575 - ஆம் தாழிசைகளைப் பார்க்க.

593. ஆர்தரு சோக மகிழ்ச்சியும்
ஆற்றிட மோகனை யுற்றுவாழ்
சீர்விவ கார பராமுகன்
சீறினன் மயலு மழுங்கவே. (326)

594. கூர்தரு மாங்கரிப் பாவியைக்
குலைகுலை யும்படி கூடியே
ஏர்தரு சாந்த னழித்தனன்
யானென தென்ப திறப்பவே. (327)

595. அன்னையை யொப்ப வுயிர்த்தொகைக்
கன்புசெ யும்மவி ரோதனல்
மன்னிய வன்மை மடிந்துக
மாய்ந்தது மாற்சரன் வாகையே. (328)

596. ஞானப் பெரும்படை காண்டலும்
ஞாட்பிடை யேனைய பாசனர்
ஊனப் பெரும்படை யோடின
ஒன்றொழி யாம லுடைந்தரோ. (329)

## ஞானவினோதன் படைவீரர் அஞ்ஞனிடங் கூறல்

வேறு

597. தன்னையங் கொழிய வெல்லாஞ்
சமர்க்களத் திழந்து தோற்ற
மன்னையங் கொழிவி லானை
வணங்கென வகுத்த போதே. (330)

## அஞ்ஞன் விடை கூறல்

598. நந்துறு தஞ்ஞ னென்னும்
நாமமொன் றிருக்க ஞானம்
உந்துறு தெனது சேனை
உடன்றெழு மென்ன லோடும். (331)

---

593. 587 - 23 - ஆம் தாழிசைகளைப் பார்க்க.

594. ஆங்கரி - அகங்காரன்; "ஆங்கரிப் பரிய சாந்தியினழிந்தது" (அஞ்ஞ.) 525 - 34 - ஆம் தாழிசைகளைப் பார்க்க.

595. 535 - 40 - ஆம் தாழிசைகளைப் பார்க்க. "உயிர்கட் கன்னை போலுமவி ரோதமெழ வாருயிரையும், தீங்கருத்தியிடு மச்ச ரனழிந்தயாவே" அஞ்ஞ.

596. ஞாட்பு - போர்க்களம்.

## ஞானவினோதன் படைவீரர் கூறல்

வேறு

599. கதிரெழ நிற்பது திமிரமோ வெங்கனல்
கதுவுழி நிற்பது தூலமோ கலுழனுற்
றெதிரெழ நிற்பது நாகமோ மெய்யுணர்
வெய்துழி நிற்பது தொல்வினை யேகொலோ. (332)

600. மாயுமிக் காயமும் வீயுமுன் னிளமையும்
மன்னிய கிளைஞருந் துன்னிய போகமும்
சாயுமிச் செல்வமொன் றாகநீ யெண்ணியோ
தம்பிரா னடிதனைச் சார்வுறா தகல்வதே. (333)

வேறு

601. தானவரென் றிருந்தனையோ
தபோதனரென் றிகழ்ந்தனையோ
வானவரென் றிருந்தனையோ
மறைமுதலென் றறிந்திலையோ. (334)

602. வையமதில் வந்தவொரு மானிடனென் றிருந்தனையோ
உய்யுநெறி யெழுந்தருளு மொருமுதலென் றுணர்ந்திலையோ. (335)

603. இடராழி யெடுத்தருளு மேந்தலென வெண்ணிலையோ
சுடராழி செலுத்துமொரு தோன்றலெனத் துணிந்திலையோ. (336)

604. புறத்திமிர மிரித்தொளிரும் புன்கதிரென் றிருந்தனையோ
மறத்திமிர மிரித்தொளிரும் வளர்கதிரென் றறிந்திலையோ. (337)

605. பிறப்பினையு மிறப்பினையும் பெற்றவனென் றுற்றனையோ
இறப்பினையும் பிறப்பினையு மெறிந்தவனென் றறிந்திலையோ. (338)

---

599. திமிரம் - இருள். "இருணின் றிரவிமுன் னிற்குமோ பஞ்சதா னெரியின்முன் னிற்குமோ வெங்கனே யரவமுங், கருடன்முன் னிற்குமோ ஞானமே வந்துறுங் கண்ணின்முன் னிற்குமோ வெண்ணுறுங் கன்மமே" அஞ்ஞ.

600. "அழியுமிக் காயமுங் கழியுமுன் னிளமையும் அன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமும், ஒழியுமிச் செல்வமொன் றாகநீ யுன்னியோ உடையநா யகனைநெஞ் சுணர்வுறா தொழிவதே" அஞ்ஞ.

602. "இந்தவுல கத்தினிடர் கெடும்பரிசிங் கெழுந்தருளி, வந்தவனென் றறிந்திலையோ மானிடனென் றறிந்தனையோ" அஞ்ஞ.

603. இடராழி - துன்பக்கடல்.

606. சிவஞான தேசிகன்பொற் றிருவடித்தா மரைவணங்கா
தவஞான தேசிகனென் றவமதிபா தயர்த்தனையோ. (339)

607. பவக்குறும்பு தனையெறியும் பரம்பரனென் றறிந்திலையோ
அவக்குறும்பு தனைமேவி யடிக்கமல மயர்த்தனையோ. (344)

608. முப்பொழுது முன்னுனேன் முன்னேநின் றனையாகில்
இப்பொழுதே நினைந்தாவி யிழந்தனையே யிழந்தனையே. (341)

## அஞ்ஞன் கூற்று

### வேறு

609. துய்ய நாயனார் தொண்டர் சொலுந்தொறும்
வெய்ய பாசனு மிக்கெதிர் சீறியே. (342)

610. ஏவு ஞான விறைவ ரெனதெதிர்
மேவு போழ்தினிற் காண்டிரென் வீரமே. (343)

## அஞ்ஞன் ஞானரூபியாதல்

611. என்னச் சொன்னசொ லெங்கோன் றிருச்செவி
துன்ன வின்னகை செய்து துனைவனே. (344)

612. வான நாடு மகிதல முந்தொழும்
ஞான வாற்ற னலத்தினைக் காட்டுவான். (345)

### வேறு

613. ஆடியும் பாடியுந் தேவரும்
அருமறை தாமுமின் றளவுமே
தேடியுங் காணருஞ் சேவடி
தீயவன் சென்னி சிறப்பவே. (346)

614. இம்பர் மனிதர்க் கெளியவோ
இருந்தவர் நான்முக னாதியாம்
உம்ப ருருவடி யறிவிலான்
உச்சியின் மீது முதைத்தனன். (347)

---

606. அயர்த்தனையோ - மறந்தனையோ.

611. பி - ம். 'செய்து துணைவனே'

614. "வெருவரு நான்முக னாதியாம் விண்ணவர் மண்ணவர் வேறுளோர், ஒருவர் பெருவடி யுணர்விலா னுச்சியின் மீது முதைத்ததே" அஞ்ஞவதைப்.

615. துன்பமோர் மூவகை தீர்த்தருள்
சோதி சுகோதய வாரிதி
இன்பமோர் மூவுல கேத்தவே
ஈந்தருள் வண்ண மிசைப்பதோ. (348)

616. பிறிவரு மேலவர் தஞ்செயல்
பிறரறி வாலறி வோமென
அறியும தன்றஃ தறிவதும்
அற்று முடிந்த திசையிலே. (349)

வேறு

617. எந்தைபிரான் றிருக்கடைக்கண் சாத்தி மாய
இருட்டறுத்து ஞானவிளக் கேற்றுங் காலை
அந்தமிலா வறிஞரென்று மறியா ரென்றும்
ஆய்வதுண்டோ சுதந்தரம தடைவ ரன்றே. (350)

618. தண்ணருள்சேர் குரவர்பத கமலஞ் சூடத்
தவமுடைய தகவுடையான் றனைவி டாது
நண்ணிவரு சிமிழ்ப்பெவையு மாற்றி மாற்றான்
நலம்பெற்ற திறமினிநா நவிற்று மன்றே. (351)

619. விருப்பு வெறுப் பவையிரண்டும் விட்டு வீடா
வினையூச லாடுமகத் தெழுந்த சோகப்
பரப்புமறுத் தெவற்றினையுந் திரிய நோக்கிப்
பகைநொதும னட்பெவையும் பரிந்திட் டாங்கே. (352)

620. நோக்கரிய விடத்ததனை நோக்குந் தன்மை
நோன்மையரைத் தொடுத்தெவர்க்கு நுவலொ ணாத
நீக்கரிய விருட்டதனைக் கதுவ நோக்கி
நினைப்பரிய கரியிட்டு நீக்கி யன்றே. (353)

---

616 "பெரியவர் தஞ்செய லாவதும் பிறரறி வாலறி வோமெனத், தெரியும தன்றது தெரிவதுஞ் செய்து முடிந்திடு திசையிலே" அஞ்ஞ வதைப்.

617. "செறிதரும்பிறவி முறியவந்திறைவர் திருவிளங்குகழ லருளுநாள், அறிஞரென்றுமில ரவலரென்றுமில ரவர்சுதந்தரம தடையவே" அஞ்ஞவதைப்.

618. சிமிழ்ப்பு - கட்டு.

620. கரி - சாட்சி.

621. நோக்குதனைக் கிறத்தலென நோக்கா வண்ணம்
நோக்கழியச் சிதைத்திட்டு நோக்க வுந்தித்
தாக்குமதைத் தவிர்த்தொழியா திறகி யாங்குத்
தகுவதுதாம் புரிந்துலவாத் தன்மைத் தாயே. (354)

622. குவித்துவிரித் ததிற்றெருமந் துழற்றும் பொல்லாக்
கொடியவிருட் படலமது குலைகுலைய விரைவாற்
பவித்துமிட லுறாத்ததனிற் பொலியுஞ் சோதிப்
பரிசுபெறும் பிரபையிட்டுப் பரிந்திட் டாங்கே. (355)

623. உவகையுடன் கலுழ்ச்சியகத் தெளிவு மற்றை
உளக்கலக்க நிறைந்திகத்தே யுலவா தாகி
இவகைதனிற் செலுத்தலுடன் றிரித்த ரூனும்
இழந்தடையச் சிறச்சுடர்விட் டெறித்துப் போந்தே. (356)

624. மாசகலுந் தண்கருணை வாரி யாகி
மற்றுவமை யற்றதனி வளரொளியாய் நிறைந்த
பேசரிய தற்பதத்தே யினிப்பிறிதற் றினிதிற்
பிறங்குகவென் றிடுக்கணது பெயர்த்திட் டாங்கே. (357)

625. ஆற்றலினன் மாமாயா விசயந் தன்னில்
அங்கமுதலோரேழு மறுவின்கா ரணமும்
மாற்றுவகண் டானந்த பூரணமாஞ் சச்சின்
மயமேதன் வடிவாகி வந்ததுமற் றன்றே. (358)

626. உவட்டாத புத்தமுத வாரி யாகி
உணர்வாகி யைங்கோச வுணர்வு மாறித்
தெவிட்டாத தீம்பாகின் சேர்வை யாகித்
திசைமாறித் தெளிநவெனத் தெளித்த போழ்தே. (359)

வேறு

627. எண்ணுமெம்பி ரானைவந் தெதிர்ந்துளா னிருவகை
மண்ணும்விண்ணு மெய்துரூது மருவினனவ் வொளியொடே. (360)

---

623. "கலுழ்ச்சிகளிப் பகத்தெளிவுட் கலக்கமிகுத திகத்தே, செலுத்தல்திரித் தலற்றடையச் சிவச்சுடர்விட் டெறித்தே" அஞ்ஞ.

625. "காயாதிக ளேழு மாயாவிட யத்தே கையற்றறி வின்கா ரண மாதிகளேழும், மாயாவிட யத்தே மாயச்சுக சற்சின் மயபூரண மேதன் வடிவானது வந்தே" அஞ்ஞ.

626. "கோதற் றமிர்தாகிக் கூறற் றுணர்வாகிக் கூறற் கரிதாகிக் கோசப் புலன்மாறித், தீதற் றவர்காணத் தேனைத் தினிதாகிச் தேசத் திசைமாறித் தேறித் தெளிவாயே" அஞ்ஞ.

## அஞ்ஞன் படைகள் ஞானம் பெறுதல்

628. உழந்தமன்ம தாதிசேனை யொன்றுமில்ல வாகியே
இழந்துஞான ரூபமாகி யேகமா யிலங்குமே. (361)

வேறு

629. பிறப்பி றப்பொடு பிணங்கினரே
பிறப்பி றப்பொடு பிணங்கினரே. (362)

630. வரவொடு போக்கிடை மாண்டனரே
வரவொடு போக்கிடை மாண்டனரே. (363)

631. ஒளிக்கு முளத்தவ ராயினரே
ஒளிக்கு முளத்தவ ராயினரே. (364)

632. அருவினை யீட்ட மகன்றனரே
அருவினை யீட்ட மகன்றனரே. (365)

633. உணர்வுண ராமை யொழிந்தனரே
உணர்வுண ராமை யொழிந்தனரே. (366)

634. ஒன்றறி யாமை யுதித்தனரே
ஒன்றறி யாமை யுதித்தனரே. (367)

635. நினைப்பு மறப்பொடு நின்றவரே
நினைப்பு மறப்பொடு நின்றவரே. (368)

636. பொறிவழி யேமனம் போனவரே
பொறிவழி யேமனம் போனவரே. (369)

637. வெய்ய பவப்பகை வென்றவரே
வெய்ய பவப்பகை வென்றவரே. (370)

---

629. பிறப்பினூலும் இறப்பினூலும் துன்புற்றவர், பிறப்போடும் இறப்போடும் பகைத்தனர்; பிறப்பிறப் பிலராயினு ரென்றபடி.

630. மாண்டனர் - மாட்சிமையுற்றவர், இறந்தனர்.

631. தம்மை ஒளித்த உள்ளத்தையுடையவர் தானே ஒளிந்த உள்ளத்த ரானுர்; மனம் அற்ற தென்றபடி. "காக்கு முளத்தவ ராயினரே, காக்கு முளத்தவ ராயினரே" அஞ்ஞ.

632. அகன்றனர் - அகற்சியையுடையராயினவர், நீங்கினுர்.

635. நினைப்பு மறப்பு என்பவற்ரேடு இருந்தவர் நினைப்பையே மறந்தனர்.

636. பொறிகளின் வழியே மனம் போனவர்கள், பொறிகளும் அவற்ரேடு மனமும் ஒருங்கே போகப் பெற்றனர்.

637. வென்றவர் - வெல்லப்பட்டவர், வெற்றிபெற்றவர்.

வேறு

638. கல்லிய தும்மக மாயையே
காதரந் தீர்த்தருள் காதலார்
சொல்லிய தும்மொரு வார்த்தையே
தொல்லுல கும்மொரு வார்த்தையே. (371)

639. உய்த்தரு ளுந்தினப் போதிலே
உணர்வுரு வாகநம் முச்சிமேல்
வைத்தரு ளும்மிரு போதுமே
வாழத்துவ தும்மிரு போதுமே. (372)

## ஞானவினோதன் படை மீளுதல்

வேறு

640. உளவி லானுயிர்க் குறுதி செய்தபின்
உணர்வி னுதனை யுற்று வாழ்தரும்
அளவி லாவரும் படையை மீள்கென
அரிய சேனையுந் திரிய மீளுமே. (373)

## கண்டோர் ஞானவினோதனைப் புகழ்தல்

641. அங்க மாதிசேர் வஞ்ச மாபுரத்
தாண டங்கலு மடுதல் கண்டுளோர்
எங்கள் தம்பிரா னிசைகள் பாடிநின்
றினைய வண்ணமங் கேத்தி நிற்பரே. (374)

வேறு

642. மனக்கமலங் கறுப்பதுவும் புனற்கமலஞ் சிவப்பதுநீ
வையத் தெய்தி
எனக்கமலம் புரிந்தருளு மிருசரணங் காட்டாம
லிருப்பி னன்றோ. (375)

---

638. காதரம் அச்சம். வார்த்தை - உபதேசம், புகழ். "அழிந்தற மாயை யிருட்டெலா மறிவுரு வாகநம் மண்ணலார், மொழிந்தது மிங்கொரு வார்த்தையே மூவுல கும்மொரு வார்த்தையே" அஞ்ஞ.

640. உளவிலான் - அன்பர்களுடைய உள்ளமாகிய இல்லத்தை உடையவன்.

642. "அடியே முள்ளங் கறுப்பதுநல் லம்போ ருகங்கள் சிவப் பதுமிப், படியே வந்த பானேநின் பாதங் காட்டாப் பண்டன்றோ" அஞ்ஞ.